சென்னை இறையாட்சியாளர் பதிப்பு—எண் 3


# குணபாடம் (மூலிகை வகுப்பு)

# MATERIA MEDICA

## (Vegetable Section)

முதற் பாகம்




சென்னை இறையாட்சி இந்திய மருத்துவக் கலாசாலை சித்தமருத்துவத்
தலைமை ஆசிரியர் திருவாளர் - வைத்திய இரத்தினம்
**க. ச. முருகேச முதலியார் அவர்கள்**
இயற்றியது

முதற் பதிப்பு

சென்னபட்டணம்
கவர்ன்மெண்ட் பிரஸ் சூபரின்டெண்டெண்ட் அவர்களால் அச்சிடப்பெற்றது.
1936

# முகவுரை.

பாவலர் நிறைந்த இந்நாவலந்தீவில் முச்சங்க முன்னுளினும், பிற்றை நாளினும் நல்லறிவின் முற்றுப்பேறுடையராய், ஞானமுதிர்ச்சியுடையோராய் விளங்கிய சித்தர் பல்லாயிரவராவர். அன்னவரியற்றிய ஆயுள்மறைச் சார்பான நூல்கள் எண்ணிலவாகும். அவைகளுள் மருத்துவத்திற்கின்றியமையாததாய **தாது, தாவர, சீவப்** பொருள்களின் குணம் முதலாய எழுவகை நுட்பங்களைச் சிறப்புறச் செதுக்கினர்.

> " பொருள் குணம் கருமம் பொதுச்சிறப் பொற்றுமை
> இன்மையு டன்பொரு ளேழென மொழிப "

(அகத்தியர் தருக்க சூத்திரம்.)

இத்தகைய குணபாட நூல்கள் பல பொறிக்கப்பெற்றிருந்தும் அவற்றுட் சில காலவயத்தானே மறைந்தொழிந்தமையின், நாம் அறியக்கிடப்பன சிலவே. கிடைப்பவற்றுள்ளும் பொருட்குண மொன்றையே காண்கின்றோமன்றி மற்ற விளக்கம் முற்றும் காண்கின்றோமில்லை. அவையும் தக்காங்கு விரித்தெழுதப்பட்டில. உலகத்துள எல்லாப் பொருள்களின் குணங் கரும முதலியவைபற்றி விரிவுபடக்காணல் இக்காலத்தில் அரிதாயின. இன்னணமிருப்ப சித்தர் நூல்கள் சிலவற்றை மருத்துவ மாணவர்க் குதவுமாறு விரித்தெழுதவேண்டுமென்னும் ஆசையாற் றூண்டப்பட்டு, **குணபாடம்** என்னும் இந்நூலை வரைதற்குச் சிறிதும் ஆற்றலில்லாத யானும், என் சிற்றறிவிற்கேற்ப எழுதிவெளியிடத்துணிந்தேன். இதில் தாவர வகுப்பிற் சேர்ந்த மரம், செடி, கொடி, புல் ஆகிய பொருள்களைப்பற்றியே எழுதப் பெற்றுள. இது நீங்க தாது, சீவ வகுப்புகளின் குணபாடம் தனித்தனிப் பிரதியாக வெளிவரும்.

பொருள்தத்துவம், மருந்துமுறையில் பொருள் நாமபேதம், முகத்தல், எடுத்தலாதி யளவை விளக்கம், முதலியன **மருத்துவாங்கச் சுருக்கத்தில்** கூறியிருப்பதால் ஈண்டு எழுதா தொழிந்தன.

இந்நூலில் பிழைகள் பலவிருக்கக்கூடும். இருப்பினும் என் பல தொல்லைகளுக் கிடையில் சித்தர் நூல்களை வெளிப்படுத்தவேண்டுமென்னும் என் நோக்கத்தை மதித்து அறிவுடையோர் ஆதரிப்பர் என்னும் துணிபுடையேன்.

இதனைப் பதிப்பிக்க உதவிபுரிந்த சென்னை இறையாட்சியாளர் அவர்களுக்கும், சென்னை கவர்ன்மெண்ட் பிரஸ் சூபரின்டெண்டெண்ட் அவர்களுக்கும் நான் நன்றி செலுத்தக் கடப்பாடுடையேனுவன்.

**க. ச. முருகேச முதலியார்.**

## INTRODUCTION.

M.R.Ry. Vaidyaratna Pandit C. S. Murugesa Mudaliyar has done me the honour of asking me to write a few words by way of introducing his very valuable treatise on Siddha Materia Medica to the public interested in Siddha Medicine. I know fully well that he is far better known to the Siddha public than I am; and as such, this introduction will serve more to introduce the introducer and less, the introduced. Nevertheless, if it is his pleasure to call upon me to write this introduction, I consider it my duty to respond to the call; for, it is not only a very great pleasure to me to accede to his wishes, but I also feel it is the least I can do to show my gratitude to one who has laboured in the cause of Indian Medicine devotedly and incessantly for the whole of this generation. It is also my duty to point out in this connexion a fact that it is not generally known and it is this: although this work now forms one of the series of Siddha Text-books for the preparation of which a Siddha Text-Book Committee was appointed by the Government of Madras, yet the authorship of this treatise belongs solely to M.R.Ry. Vaidyaratna C. S. Murugesa Mudaliyar Avargal. The need for writing now Siddha Text-books suitable to modern needs was felt by him many years before the same idea was taken up by Government; he had planned and completed the present work some time before the Siddha Text-Book Committee was appointed by Government; but, as soon as the Committee was appointed, he gave up the idea of publishing the work as a private publication of his own and made an offer placing his valuable manuscripts which had cost him years of patient and devoted labour freely and unreservedly at the disposal of the Committee and the Government; the offer was gratefully accepted and it was decided to publish the work along with the series of Siddha Text-books prepared by the Text-Book Committee and published by the authorities of the Government Indian Medical School. This volume covers only the vegetable section and the animal and mineral sections will be published separately.

The efficient and devoted services of M.R.Ry. Vaidyaratna C. S. Murugesa Mudaliyar Avargal, as Secretary of the Siddha Text-Book Committee as well as the head of the Siddha Department of the Government Indian Medical School, is beyond all praise

and beyond the reach of words I could command. I therefore content myself by tendering him my most grateful thanks for the very valuable and varied services he has rendered and is still rendering to the cause of Tamil learning in general and Siddha learning in particular.

May he live long to continue to serve efficiently and devotedly the many good causes he loves, is my earnest prayer.

G. SRINIVASA MURTI,
*Principal, Government Indian Medical School, Madras.*

ADYAR, MADRAS, S.,
15*th May* 1936.

# சொல்லகராதி

## பொருட்செயல் தொகுப்பு—எண் 1.
## THERAPEUTIC AGENTS, WITH THEIR DEFINITIONS.

---

**அகட்டுவாய்வகற்றி** (உதரவாதஹரகாரி - **Carminative**).—அகட்டில் வெப்பத்தை உண்டாக்கி வேதனையைச் சாந்தப்படுத்தி வாயுவைக் கண்டிக்கின்ற பொருள். **(A calming or soothing drug chiefly for children, that act by relieving pain and flatulence.)**

அவரை, அறுவதா, ஆளிவிரை, இஞ்சி, இரட்டைப்பேய்மருட்டி, இலவங்கம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, உருத்திரசடை, எட்டி, எலுமிச்சை, எலுமிச்சன்துளசி, ஏலம் (சிறு), ஏலம் (பெரு), ஏலம் (மலை) ஓமம், ஓமம் (அசமதா), கண்டங்கத்தரி, கத்தூரிமஞ்சள், கருஞ்சீரகம், கர்ப்பூரப்புல், காட்டுஎலுமிச்சை, காட்டுக்கடுகு, காட்டுக்கருவாப்பட்டை, காட்டுக்கஸ்தூரி, காட்டுக்கிராம்பு, காவட்டம்புல், கிச்சிலிக்கிழங்கு, குடசப்பாலை, துன்மக்குடோரி, கேக்குவிதை, கொத்துமல்லி, கொறுக்காய்ப்புளி, சண்பகம், சதகுப்பை, சாதிக்காய், சாதிபத்திரி, சாமந்திப்பூ, சிறுநாகப்பூ, சிறுபுள்ளடி, சீரகம், சுக்கான்காய், சுக்கு, தாளிசபத்திரி, திப்பிலி, தேவதாரு, நல்வேளைவிதை, நிலக்கடம்பு, நிலப்பனை, நீரலரி, பன்னீர்ப்பூ, பிளப்புச்சீரகம், புதினா, புளியம்பழவோடு, பெருங்களர்வா, பெருங்காயம், பெருஞ்சீரகம், பேராமுட்டி, மஞ்சள், மரக்காரைவேர், மலைப்பாலை, மிளகரணை, மிளகு, முன்னை, வங்காரவள்ளைக்கீரை, வசம்பு, வாய்விடங்கம், வாலேந்திரபோளம், வால்மிளகு, விளாயிலை, வெந்தயம், வெள்ளுள்ளி, வெள்ளைமிளகு, வெற்றிலை.

**அழுகலகற்றி** (தாதுக்ஷீணரோதி - **Anti-septic**).—தேக தாதுக்களையும், இன்னும் இதர பதார்த்தங்களையும் அழுகவொட்டாமல் தடுக்கின்ற பொருள் **(A remedy that prevents putrefaction and inhibits the growth of micro-organisms.)**

இலவங்கம், எட்டி, ஓமம், கரும்பு, காட்டுக்கடுகு, சந்தனம், சரளதேவதாரு, சாம்பிராணி, பற்பாடகம், புகையிலை, புங்கு, மாசிப்பத்திரி, வெற்றிலை, வேப்பநெய்.

**அற்பச்சிறுநீர்ப்பெருக்கி** (லகுமூத்ரவர்த்தநி - **Mild - Diuretic**).—மூத்திரத்தை அற்ப அளவில் அதிகப்படுத்துகின்ற பொருள். **(A drug (medicine) that slightly increases the flow or secretion of the urine.)**

தெங்கு.

**இசிவகற்றி** (அங்காகர்ஷணநாசநி - **Anti-spasmodic**).—இசிவுகளைத் தணிக்கின்ற அல்லது போக்குகின்ற பொருள். **(An agent allaying or relieving convulsions or spasmodic pains.)**

அபினி, அறுவதா, ஆடாதோடை, இலவங்கம், ஊமத்தை, ஓமம், கஞ்சா, கர்ப்பூரப்புல், கழற்சிக்கொடி, காட்டுக்கஸ்தூரி, காட்டுமுள்ளங்கி, காவட்டம்புல், கிச்சிலிப்பழம், குங்குமப்பூ, குருவேர், குரோசானிஓமம், கோவை, சடாமாஞ்சி, சதகுப்பை, சிவகரந்தை, தண்ணீர்விட்டான், தாழை, நல்வேளைவிதை, புகையிலை, புதினா, பெருங்காயம், மரக்காரைப்பழம், மரு, முருங்கை, மூங்கில்.

**இருதயச்சோர்வுண்டாக்கி** (அபகர்ஷணகாரி - **Cardiac Depressant**).—இரத்தாசயத்தின் செயலுக்குச் சோர்வை தரும் பொருள். **(Drug that retards or depresses the physiologic action of the heart.)**

பச்சைக்கடுகுரோகணி.

**இருதயவெப்பமுண்டாக்கி** (*ஹிருத் உஷ்ணகாரி* - **Cardiac Stimulant**).—*இருதயத்திற்கு பலம் அல்லது வெப்பமுண்டாக்கும் பொருள்.* (**An agent that stimulates the heart.**)

*மருது, மிளகாய்.*

**இளைப்பாற்றி** (**Restorative**).—*உடலைப் பலப்படுத்தி நன்னிலையில் வைக்கும் பொருள்.* (**Drug, cordial, or food that is efficacious in restoring one to health and vigour.**)

*கடற்பாசி, குருக்கத்தி.*

**ஈரல்தேற்றி** (*யக்ருத பலகாரி* - **Hepatic-tonic**).—*கல்லீரலின் செயலுக்கு உதவிபுரியும் பொருள்.* (**Drug that tones the action of the liver.**)

*கரிசலாங்கண்ணி.*

**உடலுரமாக்கி** (*போஷணகாரி* - **Nutrient**).—*உடலுக்கு வலுவைக் கொடுத்து காப்பாற்றுகின்ற பொருள்.* (**Drug that nourishes the body as a whole.**)

*அந்திமல்லி, இலவங்கம், உழுந்து, எள்ளு, ஓரிதழ்த்தாமரை, கக்
கரிக்காய், கசகசா, கரும்பு, கருவேல்பிசின, கர்க்கடகசிங்கி, கலியாணப்
பூசினிக்காய், காட்டுஇலுப்பை, காருக்கருணை, கூந்தற்பனை, கூவைக்கிழங்கு,
கேழ்வரகு,கொள்ளுக்காய்வேளை, கோதுமை, சருக்கரைவள்ளி, சீமையகத்தி,
சுரை, சூரை, சோளம், தக்கோலம், தண்ணீர்விட்டான்கிழங்கி, தாமரை,
தாளிப்பனை, திராட்சி, தினை, துரிஞ்சிபீன், துவரை, தெங்கு, நெய்தற்
கிழங்கு, நெல் (அரிசி), பச்சைப்பயறு, பண்ணிமோந்தான்கிழங்கு, பயற்றங்
காய், பலா, பனை, பார்லி, பீர்க்கு, பேரீச்சு, பொன்முசுட்டை, மாங்கொட்
டைப்பருப்பு, முசுமுசுக்கை, முலாம்பழம், வாதுமை (இனிப்பு), வாழைப்
பழம், வெட்பாலை, வேர்க்கடலை.*

**உடற்றேற்றி** (*வ்யதாபேதகாரி* - **Alterative**).—*உடல் முற்றும் பற்றியாவது ஒரு உறுப்பைப் பற்றியாவது உண்டாகுகிற நோயை முறைமையோடு போக்கி உடலை நன்னிலைக்குக கொண்டுவருகிற பொருள்.* (**Drug that alters the morbid processes of nutrition and excretion, restoring in some unknown way, the normal functions of an organ or of the system without producing any obvious impression, on any of the organs of the body.**)

*அக்காரப்பட்டை, அக்ரோட்டு, அத்திமது, அமுக்கிராக்கிழங்கு அம்
மையரார்கூந்தல், அழுவணம் (வேர்பபட்டை), அழிஞ்சில், ஆகாசகருடன்
ஆடுதீண்டாப்பாளை, ஆவாரை, ஆளிவிரை, ஆற்றுத்துமட்டி, ஆனைக்கற்
றாழை, இசங்கு, இலுப்பை, ஊமத்தை, எருக்கு, கடற்பாலை, கட்டுக்
கொடி, கரிசலாங்கண்ணி, கல்பபகக்கிழங்கு, கலியாணப்பூசினிக்காய், கறிப்
பாலை, கற்றுமரை, கற்றாழை, காட்டுச்சீரகம், கார்போகரிசி, காருக்கருணை,
கிச்சிலிக்கிழங்கு, கிட்டிக்கிழங்கு, குடியோட்டுப்பூண்டு, கொட்டைக்கரந்தை,
கொத்தான், சண்பகம், சந்தனம், சருக்கரைவேம்பு, சிரியாநங்கை,
சின்னி, சீந்தில், சேராங்கொட்டை, தக்காளி, தழுதாழை, தில்லை, தேற்
றான், தொட்டாற்சுணுங்கி, நத்தைச்சூரி, நன்னாரி, நாகமல்லி, நாயுருவி,
நிலக்குமிழ், நிலவேம்பு, நீரடிமுத்து, நீர்ப்பூலா, நெய்ச்சட்டி, நொச்சி,
பறங்கிப்பட்டை, பாகல், பால்வெள்ளி, பிரண்டை, பீக்கருவேல், பீதரோகணி,
பங்கு, புள்ளடி, பெருங்களர்வா, பொன்முசுட்டை, பொன்னாங்காணி, மணத்
தக்காளி. மந்தாரைப்பட்டை, முன்னை, வல்லாரை, வாலுழுவை, விஷ்ணு
கிராந்தி, வெள்ளறுகு, வெள்ளுள்ளி.*

**உணர்ச்சிப்போக்கி** (*ஸ்மருதிரோதகாரி* - Local anæsthetic).—*உடலில் எந்த பாகத்தில் தடவப்படுகிறதோ அப்பாகத்தின் உணர்ச்சியை நீக்கும் பொருள்.* (A substance that produces loss of sensation locally.)

*இலவங்கத்தைலம்.*

**உமிழ்நீர்ச்சுருக்கி** (Anti - sialagogue).—*வாயிலூறும் உமிழ் நீரைச் சுருக்கும் பொருள்.* (A drug that reduces the flow of saliva.)

*கிலுகிலுப்பை.*

**உமிழ்நீர்ப்பெருக்கி** (*த்ரவகாரி* - Sialagogue).—*உமிழ் நீரை அதிகப்படுத்தி நாவில் ஈரத்தை உண்டாக்கும் பொருள்.* (Drug that increases the flow of saliva.)

*அக்கராகாரம், அக்காரப்பட்டை, இஞ்சி, ஓமம், புகையிலே, வெற்றிலே.*

**உரமாக்கி** (*பலகாரி* - Tonic).—*உடலேப் பலப்படுத்தும் பொருள்.* (Drug that restores the normal tone of the body.)

*அக்ரோட்டு, அதிவிடயம், அமுக்கிராக்கிழங்கு, அறுவதா, அன்னுசிப்பூ, ஆகாசகருடன், ஆடுதீண்டாப்பாளே, ஆலம்விதை, ஆவாரை, ஆள்வள்ளிக் கிழங்கு, இசங்கு, இரேவல்சின்னி, இலுப்பை, ஈச்சுரமூலி, உழுந்து, ஊசிப்பாலே, எட்டி, எருக்கு, எள்ளு, எழிலேப்பாலே, ஒதிமரம், ஓமம், கஞ்சாங்கோரை, கடம்பு, கடற்கொஞ்சி, கடற்பாலே, கடற்றேங்காய், கடுகுரோகணி, கத்தூரிமஞ்சள், கம்பு, கரிசலாங்கண்ணி, கரியபோளம், கருங்கொடிவேலி, கர்க்கடகசிங்கி, கலப்பைக்கிழங்கு, கலியாணப்பூசினிக்காய், கழற்சிக்கொடி, கள்ளிமுளேயான், கறிவேம்பு, கற்றுமரை, கற்றுழை, காட்டாத்தி, காட்டுஇலுப்பை, காட்டுச்சீரகம், காட்டுப்பேய்ப்புடல், காறுக்கருணே, கிச்சிலிப்பழம், கீரிப்பூண்டு, குடசப்பாலே, குருவேர், குன்றி, கொட்டிக்கிழங்கு, கொட்டைக்கரந்தை, கொத்தான், கொய்யா, கொள்ளு, கொன்றை (சரக்கொன்றை - சிறுகொன்றை), கோட்டம், கோரை, சங்கன், சண்பகம், சருக்கரைவேம்பு, சவ்வரிசிமரம், சவுக்குமரம், சாதிக்காய், சாமந்திப்பூ, சாயமரம், சாலாமிசிரி, சிறியாநங்கை, சிறுகுறிஞ்சான், சிறுபுள்ளடி, சீத்தா, சீந்தில், சீமைமிளகாய், சீமையத்தி, சீமைத்தக்காளி, தாமரை, தாளிசபத்திரி, தான்றி, துத்தி, தூதுளே, தேற்றுன், தொட்டாற்சுணுங்கி, நத்தைச்சூரி, நறுவிலி, நன்னுரி, நிலப்பனே, நிலப்பூசனி, நிலவேம்பு, நீர்முள்ளி, நுணு, நெட்டிலிங்கம், நெருஞ்சில், பண்ணிமோந்தான்கிழங்கு, பப்பாய், பருத்தி, பலாசு, பாகல், பால்வள்ளி, பாவட்டை, பீதரோகணி, புளியம்பட்டை, புள்ளடி, பூவரசுவேர், பேரீச்சு, பொடுதலே, மகிழ், மந்தாரைப்பட்டை, மயிர்மாணிக்கம், மரமஞ்சள், மரு, மருதம்பட்டை, மருள், மா, மாசிக்காய், மாசிப்பத்திரி, மாவிலிங்கு, மிளகரணே, மிளகாய், முந்திரிவிதை, முருங்கைப்பூ, முள்இலவு, முன்னே, மூங்கில், வசம்பு, வல்லாரை, வாலேந்திரபோளம், விடத்தேர்ப்பட்டை, விராலி, விஷ்ணுகிராந்தி, வெட்சி, வெட்பாலே, வெந்தயம், வெள்ளறுகு, வெள்ளுள்ளி, வேம்பு.*

**உள்ளழலாற்றி** (*அந்தர்ஸ்நிக்தகாரி* - Demulcent).—*தாதுக்களின் எரிச்சலேச் சாந்தப்படுத்தி, அவற்றைத் துவள வைக்கின்ற பொருள்.* (The drug that soothes or protects the mucous membranes )

*அதிமதுரம், அந்தரத்தாமரை, ஆடையொட்டி, ஆளிவிரை, ஆனேப்புளி, இசப்புகோல்விதை, இலுப்பை, உருத்திரச்சடை, உழுந்து, எலிமிச்சன்துளசி, எள்ளு, கக்கரிக்காய், கசகசா, கடலழிஞ்சில், கடற்பாசி, கட்டுக்கொடி, கரும்பு, கருவேலம்பிசின், கற்பாசி, காட்டுஇலுப்பை,*

காட்டுக்கஸ்தூரி, கூவைக்கிழங்கு, கொடிப்பசளைக்கீரை, கொட்டைக்கரந்தை, கோதுமை, கோரை, சண்பகம், சாமை, சிவனார்வேம்பு, சீந்தில், சீமை அத்தி, செம்பரத்தை, தண்ணீர்விட்டான்கிழங்கு, தாமரை, திராட்சி, துத்தி, துளசி, தெங்கு, தேற்றான், நத்தைசூரி, நறுவிலி, நன்னாரி, நிலக்குமிழ், நீர்முள்ளி, நெய்தற்கிழங்கு, நெருஞ்சில், நெல்லரிசிக்கஞ்சி, பண்ணைக்கீரை, பருத்தி, பருப்புக்கீரை, பலா, பனை, பாதம்பிசின், பார்லி, பிசின்பட்டை, பீக்கருவேல், பீர்க்கு, பேரீச்சு, பொடுதலை, மயிர்மாணிக்கம், மா, மூலாம்பழம், முள்இலவு, முள்ளிக்கீரை, வலம்புரிக்காய், வன்னி, வாதுமை (கைப்பு - இனிப்பு), வாழைப்பழம், விடத்தேர்ப்பிசின், விளாம் பிசின், வெங்காயம், வெண்டைக்காய், வெந்தயம், வெள்ளரிக்காய்.

**உறக்கமுண்டாக்கி** (*நித்ராகாரி* - Hypnotic or soporific).—*தூக்கத்தை உண்டாக்குகிற பொருள்.* (Drug that causes sleep.)

*அபினி, அமுக்கிராக்கிழங்கு, கஞ்சா, கத்தரி, சாதிபத்திரி, குரோசாணிஓமம், குடியோட்டிப்பூண்டு.*

**உறக்கமெழுப்பி** (Hypnotic or soporific).—*உறக்கத்தைத் தூண்டும் பொருள்.* (Drug that causes sleep.)

*அபினி, அழவணப்பூ, கஞ்சா, கீரிப்பூண்டு.*

**கருப்பாசயஉரமாக்கி** (Uterine Tonic).—*கருப்பாசயத்தை வலுக்கச்செய்யும் பொருள்.* (Drug that tones the uterus.)

*அசோகு.*

**கருப்பாசயவெப்பகற்றி** (Uterine Sedative).—*கருப்பாசயத்திலுண்டாகும் அழலையை நீக்கும் பொருள்.* (An agent that exerts a soothing effec by lowering functional activity of the uterus.)

*அசோகு.*

**கற்கரைச்சி** (*பாஷாணபேதிநி* - Lithontriptic).—*பித்தப்பையிலும் மூத்திரப்பையிலும் உண்டாகும் கற்களைக்கரைத்து வெளிப்படுத்தும் ஆற்றலுடைய பொருள்கள்.* (Drug having the power of dissolving various concretions in the body, as benzoates for phosphatic and the alkalies for uric acid calculi in the urinary tract.)

*எலுமிச்சன்துளசி, கமேலா, குடசப்பாலை, பீளை, பெருங்களர்வா, மாவிலிங்கு.*

**கற்றுகளாக்கி** (*பாஷாணபேதி* - Antilithic).—*பித்தப்பையிலும் மூத்திரப்பையிலும் கற்கள் உண்டாகாமற்படி தடுக்கும் பொருள்.* (Drug preventing the deposit of urinary and biliary calculi or sediment.)

*காப்பிக்கொட்டை, சாம்பிராணி, மலைவேப்பிலை, முருங்கைவேர்.*

**காமம்பெருக்கி** (*காமவர்த்தநி* - aphrodisiac).—*காமத்தை அதிகப்படுத்துகிற பொருள்.* (Drug that stimulates the sexual passion.)

*அக்ரோட்டு, அதிவிடயம், அமுக்கிராக்கிழங்கு, அலிசிவிரை, அவரைக்காய், அறுகீரை, ஆல்வித்து, ஆளிவிரை, இலவங்கப்பட்டை, உழுந்து, ஓரிதழ்த்தாமரை, கஞ்சா, கமேலா, கருவேலம்பிசின், கறி (பப்ர) முள்ளி, காட்டாத்தி, காட்டுஉழுந்து, காட்டுஏலம், காட்டுச்சதகுப்பை, கார்போகரிசி, காஞ்ம்வாழை, குடசப்பாலை, குன்றி, கூந்தற்பனை, கோட்டம், சாதிக்காய்,*

சாதிபத்திரி, சாரப்பருப்பு, சாலாமிசிரி, சீந்தில், சீமைமிளகாய், சூரை, செம்பரத்தை, தட்டைப்பயறு, தண்ணீர்விட்டான், தொட்டாற்சுணுங்கி, நாகமல்லி, நிலப்பூசினி, நீர்முள்ளி, நெருஞ்சில், பருத்தி, பலாசு, பறங்கிப்பட்டை, பனை, பிசின்பட்டை, பிரமியவழுக்கை, புடல், புளிச்சிறுகீரை, பூனைக்காலிவிதை, பெருங்காயம், பேரீச்சு, மதனகாமப்பூ, மரிமா, முக்குளிக்கீரை, முந்திரிப்பருப்பு, முள்ளாங்கி, முள்ளிலவு, மூங்கில், வாதுமைப்பிசின், வாலுழுவை, வில்வம், வெட்பாலை, வெண்டைக்காய், வெந்தயம், வெற்றிலை.

**காறலுண்டாக்கி** (Acrid).—கார்ப்பும் காறலுமுண்டாக்கும் பொருள். (Drug that gives an acrid taste.)

காறுகருணை, சிறுநாகப்பு, நரளை, மிளகு, பச்சைமுருங்கைவேர்.

**குடலழுகலகற்றி** (Intestinal Antiseptic).—குடலில் மாசுபற்றி அழுகலுண்டாகாதபடி அகற்றும் பொருள். (Drug that prevents putrefaction in the intestines.)

வெட்சி.

**குடற்புரட்டி** (Gastro - Intestinal irritant).—மலத்தை வெளிப்படுத்துமுன் குடலில் புரட்டலையுண்டாக்கும் பொருள். (That which induces irritation or inflammation in the intestines before evacuation.)

ஆற்றுத்துமட்டி.

**குடற்புழுவகற்றி** (Vermifuge).—குடலிலுள்ள புழுக்களை வெளிப்படுத்தும் பொருள். (Drug that expels intestinal worms.)

அக்ரோட்டுக்காய், காட்டாமணக்கு, காட்டெலுமிச்சை, காட்டுக்கிராம்பு, கொடிக்காக்கட்டான், கோரை, சரக்கொன்றை, நொச்சி, முலாம்பழம்.

**குமட்டலெழுப்பி** (வமநவ்யதாகாரி - Nauseant).—வாயில் அருவருப்பையுண்டாக்கும் பொருள். (Any agent that produces nausea.)

அழிஞ்சில், குடியோட்டிப்பூண்டு, மணிப்புங்கு, வசம்பு.

**குருதிப்பெருக்கி** [ரக்தவர்த்தநி - Cordial (improves blood)].—செந்நீரை விருத்தி செய்யும் பொருள். (Drug that improves the quality of blood.)

அத்திப்பழம், கறி (பப்ர) முள்ளி.

**குருதிப்போக்கடக்கி** (ரக்தஸ்தம்பநகாரி - Haemostatic).—குருதிப்போக்கை தடுக்கின்ற அல்லது உள் மரிக்கின்ற பொருள். (Drug that arrests or restrains bleeding.)

அபினி, அரிவாள்மூக்குப்பச்சிலை, அறுகம்புல், அன்ஞசிப்பழம், இம்பூறல், எலியாமணக்கு, ஒதிமரம், கலியாணப்பூசினிக்காய், காட்டாமணக்கு, சேம்பு, மாசிக்காயுப்பு, மாதளை, முள்இலவு, வாழைநீர், வேங்கைப்பிசின்.

**குளிர்ச்சியுண்டாக்கி** (சீதளகாரி - Refrigerant).—உடம்பிலுள்ள அதிக வெப்பத்தைக் குறைத்துத் தாகத்தைத் தணிக்கின்ற பொருள். (Drug having cooling properties or lowering the bodily temperature.)

அகத்தி, அக்ரோட்டு, அந்தரத்தாமரை, அம்மான்பச்சரிசி, அழவணப்பூ, ஆரைக்கீரை, ஆல்பொகாடாப்பழம், ஆவாரைவிதை, இலுப்பை,

உழுந்து, ஊசிப்பாலை, எலுமிச்சை, கடம்பு, கடலை, கடற்கொஞ்சி, கடற்பாலை கடாரநாரத்தை, கட்டுக்கொடி, கம்பளிப்பூச்சிச்செடி, கரும்பு, கலுமிச்சங் காய், கழுநீர், காசா, காசிரத்னம், காட்டுஇருப்பை, காட்டுஎலுமிச்சை, காட்டுக்கஸ்தூரி, காட்டுத்துமட்டி, காட்டுவாகை, கிளியூறல், கீரைத்தண்டு, கீழ்க்காய்நெல்லி, குந்திரிக்கம், குமிழமரம், குருக்கத்தி, கூவைக்கிழங்கு, கொட்டிக்கிழங்கு, கொட்டைக்கரந்தை, கொடிப்பசளைக்கீரை, கொத்தான், கொறுக்காய்ப்புளி, சணப்பு, சந்தனம், சருக்கரைவள்ளி, சவ்வரிசிமரம், சிவனார்வேம்பு, சிறுகுறிஞ்சான், சீத்தா, சீமைத்தக்காளி, சுரை, செம் பரத்தை, செம்பருத்தி, தமர்த்தம், தாமரை, திராட்சி, தீம்பாலை, தெங்கு, தேக்கு, நத்தைச்சூரி, நரிப்பயறு, நாகதாளி, நாணல், நிலவிளா, நீர்ப்பூலா, நீர்முள்ளி, நெய்தற்கிழங்கு, நெருஞ்சில், நெல்லரிசிக்கஞ்சி, நெல்லி, நொச்சி, பச்சைப்பயறு, பண்ணிமோந்தான்கிழங்கு, பருப்புக்கீரை, பறங்கிக்காய், பனை, பன்னீர்ப்பூ, பாற்சொரிக்கீரை, பிராய், பிலிம்பி, புடல், புதினா, புத்திரசீவிவிதை, புளியாரை, புளியிலை, பேராமுட்டி, பேரீச்சு, பொன்னாங்காணி, மணத்தக்காளி, மயிர்மாணிக்கம், மாதளைப்பழம், மாவ லிக்கிழங்கு, முலாம்பழம், முள்ளிலவு, மூக்கிரட்டை, மொச்சை, வள்ளைக் கொடி, வாகை, வாழை (இலை-பட்டை), விலாமிச்சுவேர், விளாம்பழம், வெண்டைக்காய், வெந்தயக்கீரை, வெள்ளரிக்காய், வெள்ளிலோத்திரம்.

**கொப்புளமெழுப்பி** (த்வக்ஸ்போடகாரி - Vesicant).—உடல் தோலின்மேல் வைத்தாலும் பூசினாலும், பற்றிட்டாலும் நீர்க்கொப்புளம் உண்டாக்கும் பொருள். (An agent that causes vesicles and blisters when applied to the skin.)

கடற்பாலை, கல்லுருவி, காட்டுக்கடுகு, செங்கொடிவேலி, நீர்மேல் நெருப்பு, பெருங்களர்வா, பச்சைமுருங்கை வேர்ப்பட்டை, வெண்கடுகு.

**கோழையகற்றி** (கபஹரகாரி - Expectorant).—கபத்தைப் புறப்படுத்தி இரும லைச் சாந்தப்படுத்துகின்ற பொருள். (Drug that promotes expectoration.)

அதிமதுரம், அபினி, அரத்தை, ஆடாதோடை, ஆற்றுத்துமட்டி, இண்டு, இம்பூறல், இலைக்கள்ளி, உத்தாமணி, உருத்திராக்கம், எருக்கு, கண்டில்வெண்ணெய், கண்டங்கத்திரி, கத்தரி, கருப்பூரவள்ளி, கருவாகை, கர்க்கடகசிங்கி, கலியாணமுருக்கு, கறிப்பாலை, கறிமுள்ளி, காட்டுச்சதகுப்பை, காட்டுபாகல், காட்டுவெங்காயம், கிச்சிலிக்கிழங்கு, குங்கிலியம், குந்திரிக்கம், குப்பைமேனி, குன்மக்குடோரி, குன்றி, கொள்ளுக்காய்வேளை, கோட்டம், கோவை, சங்கன், சடாமாஞ்சில், சத்திச்சாரணை, சாணக்கிக்கீரை, சாம்பி ராணி, சிறுகுறிஞ்சான், சீக்காய், சுக்கான்காய், சுண்டை, செங்கொன்றை, தட்டைப்பயறு, தவசுமுருங்கை, தாமரை, தாளிசபத்திரி, தான்றி, திராட்சி, தும்பை, துளசி, தூதுளை, நரிப்பயறு, நெய்தற்கிழங்கு, நொச்சி, பச்சிலை, பருத்தி, பவளமல்லி, பிரப்பங்கிழங்கு, பிரமியவழுக்கை, பெருங்களர்வா, பெருங்காயம், பேரீச்சு, பொடுதலை, பொன்முசுட்டை, மணத்தக்காளி, மணிப்புங்கு, மணலிக்கீரை, மரக்காரைப்பழமும்வேரும், முசுமுசுக்கை, முருங்கை, மூக்கிரட்டை, வாலேந்திரபோளம், வால்மிளகு, விராலி, விஷ்ணு கிராந்தி, வெங்காயம், வெள்ளுள்ளி.

**சருமவெப்புண்டாக்கி** (Local stimulant).—தோலின்மீது பட்டவுடன் வெப் பத்தைத்தரும் பொருள். [An agent that irritates the skin (locally).]

பூனைக்காலிச்சுணை.

**சாயமேற்றி** (Muscular tonic).—உடலுக்கு துவர்ப்பைத்தரும் பொருள் (An agent that tones the muscular tissues.)

கழுகு, களிப்பாக்கு, மாதளைவிதை.

**சிரநீர்ப்போக்கி** (சிரோவிரேசநி - Errhine).—மூக்கிலிட நீரை அதிகமாக மூக்கினின்றும் வடிக்கும் பொருள். (Drug when applied to the mucous membrane of the nose, increases nasal secretion.)

புகையிலை.

**சிறுகோழையகற்றி** (லகுகபஹரகாரி - Mild expectorant).—கோழையை அற்பமாக வெளிப்படுத்தும் பொருள். (Drug that mildly promotes expectoration.)

தேற்றான்.

**சிறுதுவர்ப்பி** (லகுஸங்கோசநகாரி - Mild astringent).—நரம்புகளையும் உடற்றுதுக்களையும் எளிதாகச்சுருக்கி செந்நீர் சீழ் முதலியவற்றை நிறுத்துகிற பொருள். (An agent producing a mild contraction of organic tissues or arresting hæmorrhage, diarrhœas.)

பருப்புக்கீரை, பிசின்பட்டை, புளியங்கொட்டைமேற்றோல், வெந்தய விதை, வெள்ளிலோத்திரம்.

**சிறுநீர்குறைபடப்பெருக்கி** (அற்பமூத்ரவர்த்தநி - Mild Anti-diuretic). அதி மூத்திரத்தைக் கொஞ்சமாகக் குறைக்கும் பொருள். (Drug that slightly decreases the flow or secretion of urine.)

குரோசாணிஓமம்.

**சிறுநீர்ப்பெருக்கி** (மூத்ரவர்த்தநி - Diuretic).—மூத்திரத்தை அதிகப்படுத்துகிற பொருள். (Drug that increases the flow or secretion of urine.)

அபினி, அமுக்கிராக்கிழங்கு (காய்-கிழங்கு), அழிஞ்சில், அறுகம்புல், அன்னாசிக்காய் - பழம், ஆடாதோடை, ஆளிவிரை, ஆற்றுத்தும்மட்டி, ஆனைக் கற்றாழை, ஆனைப்புளி, இசப்புக்கோல்விதை, ஈச்சு, உருத்திரச்சடை, உருளைக் கிழங்கு, எட்டி, எள்ளு, கக்கரிக்காய், கஞ்சா, கடலை, கண்டங்கத்தரி, கருஞ்சீரகம், கரும்பு, கலியாணப்பூசினிக்காய், கலியாணமுருக்கு, கறி (பப்ர) முள்ளி, கற்கோவை, காட்டாத்தி, காட்டுக்கருவாப்பட்டை, காட்டுக் கிராம்பு, காட்டுக்கொள்ளு, காட்டுச்சீரகம், காட்டுமுள்ளங்கி, காட்டுவெங்கா யம், காப்பிக்கொட்டை, காராமணி, கிச்சிலிக்கிழங்கு, கீழ்க்காய்நெல்லி, குந்திரிக்கம், குப்பைமேனி, குருவேர், கொடிப்பசளைக்கீரை, கொத்தவரை, கொத்துமல்லி, கொள்ளு, கொள்ளுக்காய்வேளை, கோரை, சங்கன், சடா மாஞ்சி, சண்பகம், சதகுப்பை, சத்திச்சாரணை, சந்தனம், சாணக்கிக்கீரை, சாம்பிராணி, சிவகரந்தை, சிறுபுள்ளடி, சிற்றேலம், சீந்தில், சுரை, செப்புநெருஞ்சில், செம்பருத்தி, செம்பை, தக்காளி, தரா, தருப்பை, திராட்சி, தினை, துத்தி, தெங்கு, தேட்கொடுக்கு, நன்னாரி, நாணல், நாபி, நாயுருவி, நாவல், நிலக்கடம்பு, நிலப்பனை, நீர்பிரமி, நீர்ப்பூலா, நீர் முள்ளி, நெய்தற்கிழங்கு, நெருஞ்சில், நெல்லி, நொச்சி, பசறைக்கீரை, பப்பாய், பருத்தி, பருப்புக்கீரை, பலாசு, பவளமல்லி, பறங்கிக்காய், பனை, பாதிரி, பார்லி, பால்வள்ளி, பிண்ணாக்குக்கீரை, பிரமியவழுக்கை, பிளப்புச் சீரகம், பீநாறிமரம், பீர்க்கு, பீளை, புகையிலை, புதினாக்கீரை, பூனைக்காலி வேர், பெருங்களர்வா, பெருங்காயம், பேராமுட்டி, பேரீச்சு, மலையேலம், மலை வேப்பிலை, மல்லி, மா - பழம், முடக்கற்றான், முந்திரிப்பழம், முருங்கை, மூலாம்பழம், முள்ளங்கி, முள்ளிலவு, மூக்கிரட்டை, வல்லாரை, வால் மிளகு, வாழை - கட்டை - தண்டு, வெங்காரவள்ளைக்கீரை, வெங்காயம், வெண்கடுகு, வெண்டைக்காய், வெந்தயவிதை, வெள்ளரிக்காய், வெள் ளருள்ளி.

**சீதபேதிபோக்கி** (Antidysenteric).—சீத பேதியை நிருத்தும் பொருள். (Drug that cures dysentery.)

காட்டாத்தி, தேற்ருன்.

**செந்நீரிளக்கி** (Attenuant).—செந்நீரை இளக்கும் தன்மையுள்ள பொருள். (An agent increasing the fluidity or thinness of the blood or other secretion.)

ஆவாரை, காட்டுக்கொள்ளு, கிட்டிக்கிழங்கு, கைப்புவாதுமை, சின்னி.

**செரிப்புண்டாக்கி** (பாசநகாரி - Digestive).—உண்ட உணவை செரிப்பிக்கும் பொருள். (An agent that promotes digestion.)

அகத்தி, அன்னுசிக்காய், இஞ்சி, உப்பிலாங்கொடி, எருக்கு, கடாரநாரத்தை, கர்க்கடகசிங்கி, கார்போகரிசி, கொறுக்காய்புளி, புள்ளடி, வில்வம் - பூ - பிஞ்சு - காய், வெண்கடுகு.

**தடிப்புண்டாக்கி** (ஷோணகாரி - Rubefacient).—பட்ட இடத்தில் சிவப்புண்டாக்கி எரிச்சலேயும் சூட்டையும் உண்டு பண்ணுகிற பொருள். (A remedy, that, by the irritation of the ends of the nerves of the skin, causes distension of the capillaries and reddening of the skin.)

அக்கரகாரம், அக்காரப்பட்டை, அறுவதா, இஞ்சி, இலவங்கம், இலேக்கள்ளி, ஈழத்தலரி, எலுமிச்சை, கடற்பாலே, கர்பூரப்புல், கள்ளி, காட்டுக்கடுகு, காட்டுக்கருணே, சீமைமிளகாய், செங்கொடிவேலி, சேம்பு, நல்வேளேயிலே, நேர்வாளம், மாவிலிங்குமரப்பட்டை—வேர்ப்பட்டை, மருதம்பழம், மிளகு, முசுமுசுக்கை, வெங்காயம், வெண்கடுகு.

**தாதுவெப்பகற்றி** (சமநகாரி - Sedative).—இரத்ததாது முதலிய தாதுக்களின் கொதிப்பை சாந்தப்படுத்துகிற பொருள். (An agent that exerts a soothing effect by lowering functional activity.)

அபினி, அமுக்கிராக்கிழங்கு, அவரைப்பிஞ்சு, அழவணவேர்ப்பட்டை, ஆதண்டம், கஞ்சா, கடாரநாரத்தை, கண்டுபாரங்கி, கிரந்திதகரம், குடியோட்டிப்பூண்டு, குரோசாணியோமம், சுக்காங்கீரை, தாமரை, துத்தி, தேக்குநாபி, பச்சைக்கடுகுரோகணி, புகையிலே, விழலரிசி, வெட்சி.

**தாபமகற்றி** (உக்ரரோகசமநகாரி - Antiphlogistic).—தாபம் முதலிய குரூரரோகங்களேச் சாந்தப்படுத்துகிற பொருள். (An agent that subdues or reduces inflammations.)

அபினி, குன்றி, நாபி, பனே, விஷ்ணுகிராந்தி.

**துயரடக்கி** (வேதநாசாந்தநி - Anodyne).—உபத்திரவத்தைக் குறைக்கிற பொருள். (A medicine that gives relief from pain.)

அபினி, ஊமத்தை, கஞ்சா, கிச்சிலிப்பழம், குங்குமப்பூ, குடியோட்டிப்பூணடு, குப்பைமேனி, குரோசாணியோமம், நாபி, பிசின்பட்டை, மரு.

**துயிலாக்கி** (நித்ராகாரி - Narcotic).—தூக்கத்தை யுண்டாக்குகிற பொருள். (A drug that produces narcosis or stupor.)

மதனகாமப்பூ.

**துவர்ப்பி** (ஸங்கோசநகாரி - Astringent).—நரம்புகளேயும் சரீர தாதுக்களேயுஞ் சுருக்கி உதிரம், சீழ் முதலியவற்றை நிறுத்துகிற பொருள்கள். (An agent that produces contractions of organic tissues or arrests hæmorrhage, diarrhœas, etc.)

அக்ரோட்டு, அசோகு, அதிவிடயம், அத்திப்பிஞ்சு, அத்திக்காய், அத்திப்பால், அத்திப்பட்டை, அம்மாம்பச்சரிசி, அம்மையார்க்கூந்தல், அரசு-

இலை - வேர் - பட்டை, அலசிவிரை, அவரை, அழவணம் - இலை - வேர்ப் பட்டை, அறுகம்புல், ஆடையொட்டி, ஆலம்பட்டை, ஆவாரை, ஆனைப்புளி, இசப்புக்கோல்விதை, இண்டு, இரட்டைப்பேய்மருட்டி, இரேவல்சின்னி, இலந்தை, இலுப்பை, ஈழத்தலரி, உகா, உசிலமரம், எழிலைப்பாலை, ஒதி மரம், ஓமம், கசகசா, கடலழிஞ்சில், கடலை, கடாரநாரத்தை, கத்தக்காம்பு, கமுகு, கருங்காலி, கருணைத்தண்டு, கருவேல் - இலை - பட்டை - வேர் - வித்து, கர்கடகசிங்கி, களிப்பாக்கு, கறி (பப்ர) முள்ளி, கற்பாசி, காசா, காட்டுக்கிராம்பு, காட்டுக்கொள்ளு, காட்டுப்பாகல், காட்டுமுள்ளங்கி, காட்டு வாகை, காட்டேலம், காய்வள்ளிக்கொடி, காளான், காளும்வாழை, இச் சிலிப்பழம், கீழ்க்காய்நெல்லி, குந்திருக்கம், குருவிச்சி, கேழ்வரகு, கொஞ்சி, கொய்யா, கொள்ளு, கோரை, சங்கன், சணப்பு, சண்பகம், சந்தனம், சரக் கொன்றை, சவுக்குமரம், சிவகரந்தை, சிறுகுறிஞ்சா, சிறுநாகப்பூ, சீக்காய், சீத்தா, சீரகம் , சுக்காங்கீரை, செம்பருத்தி, செம்பை, தக்கோலம், தருப்பை, தழுதாழை, தாமரை, தாளிசபத்திரி, தாளிப்பனை, தான்றி, திராட்சி, திரிபலை, தினை, தீம்பாலை, தும்பிலிக்காய், தேவதாரு, நரளை, நறுவிலி, நாயுருவி, நாவல், நிலப்பனை, நீரலரி, நெட்டிலிங்கம், நெருஞ்சில், நெல்லி, நொச்சி, பண்ணைக்கீரை, பருத்தி, பலா, பலாசு, பனை, பன்னீர்ப்பூ, பாற் சொரிக்கீரை, பிலிம்பி, பீக்கருவேல் - இலை - பட்டை - பூ, புங்கு, புதினக் கீரை, புளியம்பட்டை, புளியாரைக்கீரை, புன்னைப்பட்டை, பூனைக்காலிவிதை, பொடுதலை, மகிழ், மங்குஸ்தான், மந்தாரைப்பட்டை, மரக்காரைப்பழம், மருதம்பழம் - விதை, மல்லியிலை, மா - காய் - கொட்டைப்பருப்பு - பட்டை - பிஞ்சு - வேர்ப்பட்டை, மாசிக்காயுப்பு, மாதளை - பழத்தோல் - பிஞ்சு - பூ - விதை, முசுமுசுக்கை, முந்திரிப்பட்டை, முள்ளிலவு, மூங்கில், மோதகவல்லி, வலம்புரிக்காய், வாகை, வாழை - காய் - பிஞ்சு - பூ, விடத்தேர், விராலி, வில்வம் - காய் - பழம் - பிஞ்சு - பூ, விழலரிசி, விளா - இலை - காய், வெட்சி, வெட்பாலைப்பட்டை, வெண்கருங்காலி, வெந் தயவிதை, வெற்றிலை, வேங்கை - பட்டை - பிசின், வேம்பு - பட்டை.

**தூக்கமகற்றி** (Antisoporific).—தூக்கமுண்டாகாமற்படி தடுக்கும் பொருள். **(An agent that prevents sleep and keeps one awake.)**

*காப்பிக்கொட்டை.*

**தூக்குணிப்புழுக்கொல்லி**-(க்ருமிக்நி-**Parasiticide**).—தூக்குணிப் புழுக்களைக் கொல்லும் பொருள். **(Destructive of parasites.)**

*கருஞ்சீரகம், காக்கைகொல்லி, நீரடிமுத்து, புங்கு, மான்செவிக் கள்ளி, வண்டுக்கொல்லி.*

**தூய்மையாக்கி** (மலினநிவர்த்தநி - **Depurative**).—உடலிலுள்ள நுண்ணிய அணுக்களைத் தூய்மை செய்யும் பொருள். **(Drug that purifies or cleanses the animal economy.)**

*கொட்டைக்கரந்தை, சருக்கரைவேம்பு, பலாசு, பறங்கிப்பட்டை, பூவரசு - இலை - காய் - பட்டை - பூ - விதை.*

**தொற்றுப்புழுவகற்றி** - (ஆகந்துகரோகநாசநி - **Disinfectant**).—புழு, பூச்சி களையும் அவற்றால் நேரிட்ட அழுக்கிலிருந்து உண்டாகிற துர்க்கந்தங் களையும் போக்குகிற பொருள். இதனால் இதற்கே " பூதிநாசநி " என்ற பெயரும் வழங்கும். **(An agent that destroys micro-organisms and prevents fermentation and putrefaction.)**

*இலுப்பை, ஒதியமரம், வசம்பு.*

**தோற்றுயரடக்கி** (சர்மவேதநாசாந்தநி - **Local Anodyne**).—தோலிலுண் டாகும் வேதனையைத் தணிக்கும் பொருள். **[That which gives relief from pain confined to the skin (locally)].**

*நந்தியாவட்டம்.*

**நச்சரி** (விஷநாசநி - Antidote).—பல வகையாகிய நஞ்சின் கொடு மையை முறித்துச் சாந்தப்படுத்துகிற பொருள். (Drug counteracting the action of a poison.)

*அகத்தி, கடற்றேங்காய், காட்டுத்தும்மட்டி, சின்னி, நஞ்சறுப்பான், நிலம்புறண்டி, நின்ருற்சிணுங்கி, பேயாவாரை, நெய்ச்சட்டி, பல்லிப்பூண்டு, வெள்ளிலோத்திரம்.*

**நமைச்சலுண்டாக்கி** (Irritant).—நமைச்சல் அல்லது தாபிதத்தை யுண் டாக்கும் பொருள். (That which induces irritation or inflammation.)

*கல்லுருவி, நீர்மேல்நெருப்பு, மிளகாய்.*

**நரம்புஉரமாக்கி** (Nervine Tonic).—நரம்புகளின் இயற்கைச் செயலுக்கு பலத்தையளிக்கும் பொருள். (A remedy that calms nervous excitement or gives tone to the nervous system.)

*காயப்பங்கொட்டை, நீர்ப்பிரமி, பூனைக்காலி - விதை - வேர்.*

**நரம்புவெப்பகற்றி** (நாடிசமநகாரி - Nervous sedative).—நாடி நரம்பு களின் துடிப்பைச் சாந்தப்படுத்தும் பொருள். (An agent that exerts a soothing effect by lowering the functional activity of the nervous system.)

*உருளைக்கிழங்கு.*

**நாடிஉரமாக்கி** - (Nervine Tonic).—நாடி நரம்புகளைப் பலப்படுத்தி அவை களின் தொழிலுக்கு உரமுண்டாக்கும் பொருள்.

*(நரம்புஉரமாக்கி யென்பதையும் பார்க்க) வாலுளுவை.*

**நாற்றமகற்றி** (பூதிகந்தநாசநி - Deodorants).—கெட்ட மணத்தை அழிக் கின்ற அல்லது நீக்குகின்ற அல்லது ஒழுங்குபடுத்துகின்ற பொருள். (That which destroys, removes or corrects offensive odours.)

*அழவணம் - இலை - வித்து, சரளதேவாரு, மான்செவிக்கள்ளி.*

**நீர்மலம்போக்கி** (வ்ரேசநி - Purgative).—வயிற்றில் வேதனையுண் டாக்கி நீராகப் பேதியாகச் செய்கிற பொருள். (Drug that produces copious watery evacuations of the bowels.)

*அலரி, அன்னுசியிலை, ஆடுதீண்டாப்பாளை, இலைக்கள்ளி, எட்டி, காிச லாங்கண்ணி, கலப்பைக்கிழங்கு, கள்ளி, கற்ருழை, காட்டுத்தும்மட்டி, காட் டுப்பேய்ப்புடல், குன்றி, சணப்பு, சண்பகம், சரக்கொன்றை, சிறுநாகப்பூ, சிறுபேயத்தி, சீத்தா, சுக்கான்காய், சுரை, தில்லை, தூரிஞ்சிபீன், நிலவா மணக்கு, நிலாவாரை, நேர்வாளம், பீர்க்கு, புளிச்சிறுகீரை, பெருங்களர்வா, பேயாவாரை, மருள், வண்டுகொல்லி, விழுதி.*

**நுட்புழுக்கொல்லி** (க்ருமிநாசநி - Germicide).—நுண்ணிய புழுக்களைக் கொல்லுகின்றபொருள். (That which destroys the germs.)

*அன்னுசியிலை - பழம், ஆடாதோடை, ஊசித்தகரை, கள்ளி, காட்டு இருப்பை, கிரந்திநாயகம், கிலுகிலுப்பை, சாணுக்கிக்கீரை, சண்டை, நாக மல்லி, முசுட்டை, வசம்பு, பேயத்திப்பால்.*

**நுரையீரல்நோயகற்றி** (Pectoral).—சுவாச நாளங்களிலுண்டாகும் நோய்களை அகற்றும் பொருள். (Drug that is useful in diseases of the respiratory tract.)

*கருவேலம்பிசின்.*

**பசித்தீத்தூண்டி** (ஜடராக்நிவர்த்தநி - Stomachic).—பசியை அதிகரிக்கச் செய்கிற பொருள். (A stimulant exciting the functional activity of the stomach.)

அக்காரப்பட்டை, அசமதாஜமம், அதிவிடயம், அம்மையார்கூந்தல் அரத்தை, அன்னுசிப்பூ, ஆதண்டம், இஞ்சி, இரட்டைப்பேய்மருட்டி, இரேவல்சின்னி, இலவங்கம், இலவங்கபத்திரி, இலுப்பை, எருக்கு, ஓமம், கடலை, கடாரநாரத்தை, கடுகுரோகணி, கருஞ்சீரகம், களா, கள்ளிமுளையான், கறிவேம்பு, கரியபோளம், காட்டுஎலிமிச்சை, காட்டுஎலம், காட்டுக்கருணை, காட்டுக்கஸ்தூரி, காட்டுச்சீரகம், காட்டுமுள்ளங்கி, கிச்சிலிப்பழம், கிட்டிக்கிழங்கு, கீரிப்பூண்டு, குங்குமப்பூ, குடசப்பாலை, கடற்கொஞ்சி, கருங்கொடிவேலி, கேக்குவிதை, கொட்டைக்கரந்தை, கொத்துமல்லி, கோட்டம், சண்பகம், சதகுப்பை, சிவகரந்தை, சிறுகுறிஞ்சான், சிறுநாகப்பூ, சின்னி, சீந்தில், சீமைமிளகாய், சீரகம், சுக்கான்கீரை, சுக்கு, சுண்டை, தாளிசபத்திரி, திப்பிலிமூலம், தெங்கு, தேற்ருன், நாவல், நிலவேம்பு, பசறைக்கீரை, பற்பாடகம், பாகல், பிடங்குநாறி, பிரண்டை, பிலிம்பி, புதினுக்கீரை, புளியாரைக்கீரை, பெரியஎலம், பெருஞ்சீரகம், பேரீச்சு, பொன்முசுட்டைவேர், மரமஞ்சள், மரிமா, மரு, மா - பிஞ்சு, மாசிப்பத்திரி, மலைப்பாலை, மலையேலம், மாதளை - பழத்தோல் - பூ, மாவலிக்கிழங்கு, மாவிலிங்கு, மிளகாய், முடக்கற்ருன், முளைக்கீரை, முள்ளங்கி, முள்ளிக்கீரை, முன்னை, யானைத்திப்பிலி, வசம்பு, வாய்விளங்கம், வாலேந்திரபோளம், வில்வம் - காய் - பழம் - பிஞ்சு - பூ, விழலரிசி, வெட்சி, வெட்பாலை, வெள்ளறுகு, வெள்ளுள்ளி, வெற்றிலை, வேப்பம்பூ.

**பாற்சுருக்கி** (க்ஷீரநாசநி - Lactifuge).—முலைப்பாலைக் குறைக்கிற அல்லது வரட்டுகிற பொருள். (A drug that causes a lessening in the secretion of milk.)

அக்ரோட்டுப்பட்டை, இருவாட்சி, காளான்.

**பாற்பெருக்கி** (க்ஷீரவர்த்தநி - Lactagogue).—முலைப்பாலைச் சுரப்பிக்கும் பொருள். (An agent that increases the secretion of milk.)

ஆளிவிரை, இலுப்பை, உருளைக்கிழங்கு, உழுந்து, எலியாமணக்கு, எள்ளு, ஓரிலைத்தாமரை, கருஞ்சீரகம், கலியாணமுருக்கு, காட்டாமணக்கு, காட்டுக்கருவாப்பட்டை, சிறுபுள்ளடி, சிற்றுமணக்கு, செவ்வாமணக்கு, நாணல், நிலப்பூசினி, பாகல், பேயத்திப்பழம், வெந்தயம், வெற்றிலை.

**பித்தமகற்றி** (பித்தசாந்தநி, பித்தமடக்கி - antibilious).— பித்தத்தை அதிகப்படுத்தாமல் தணிக்கும் பொருள். (Drugs that exert soothing effect over diseases caused by the excessive secretion of bile.)

அருநெல்லி, உருத்திராக்கம், கடலை, கலியாணமுருக்கு, கழுநீர், சுரை, பெரியாநங்கை, முக்குளிக்கீரை, நாணல், பவளமல்லி, பாகல், புளியம்-இலைக்கொழுந்து—பழஓடு, வாழை-கட்டை-தண்டு, விலாமிச்சுவேர்.

**பித்தநீர்ப்பெருக்கி** (பித்தகாரி - Cholagogue).—பித்த நீரை யதிகரிக்கச் செய்கிறபொருள். (A remedy promoting the secretion or excretion of bile.)

அகில், அக்ரோட்டுவிதை, இம்பூறல், கரிசலாங்கண்ணி, கர்க்கடகசிங்கி, நிலப்பூசினி, பவளமல்லி, வரகு, வெட்சி.

**புண்ணழுக்ககற்றி** (வ்ரணசுத்திகாரி - Detergent).—காயம் அல்லது புண்களின் மாசுக்களைப் போக்கி ஆற்றும் பொருள். (Drugs that purifies or cleanses wounds, ulcers, etc.,)

அக்ரோட்டுப்பட்டை, அழவணஇலை, இங்கிமரம், கைப்புவாதுமை, சீக்காய், சீத்தா, நீரடிமுத்து, மான்செவிக்கள்ளி, வேங்கையிலை.

**புண்ணாக்கி** (*வ்ரணகாரி* - caustic).—*சரீரத்தின் மேற்பட்டால் புண்ணாக்கச் செய்கிற பொருள்.* (A substance that destroys or disorganises living tissue).

*செங்கொடிவேலி, சேராங்கொட்டை, புன்னைவிதை, முள்ளிக்கீரை.*

**புழுக்கொல்லி** (*க்ருமிநாசநி* - anthelmintic).—*வயிற்றிலுள்ள புழுக்களைக் கொல்லுகிற பொருள்.* (An agent or medicine which either kills or renders powerless intestinal worms—a vermicide.)

*அக்ரோட்டுப்பட்டை, அலரி, அவுரி, அழிஞ்சில், அறுவதா, ஆடு தீண்டாப்பாளை, இலுப்பை, உத்தாமணி, உருத்திரச்சடை, எருக்கு, எலியா மணக்கு, எழிலைப்பாலை, கமேலா, கருஞ்சீரகம், கருவாகை, கலியாண முருக்கு, கழற்சிக்கொடி, காட்டாத்தி, காட்டுக்கடுகு, காட்டுச்சீரகம், காட்டுப் பேய்ப்புடல், குடசப்பாலை, குந்திரிக்கம், குப்பைமேனி, கொட்டைக்கரந்தை, கொள்ளுக்காய்வேளை, சீத்தா, செங்கொன்றை, செம்மை, செவ்வள்ளிக் கொடி, தரா, தெங்கு, நந்தியாவட்டம், நரிக்கொன்றை, நல்வேளைவிதை, நெய்ச்சட்டி, பப்பாய், பலாசு, பாகல், பிளவைக்கொல்லி, புன்னைவிதை, பூவரசு—இலை—காய்—பட்டை—பூ—விதை, பூனைக்காலிச்சுணை, பெருங்காயம், மணலிக்கீரை, மணிப்புங்கு, மலைவேம்பு—இலை—வேர்—பட்டை, மல்லி, மா—கொட்டைப்பருப்பு, மாசிப்பத்திரி, மாதளை—பட்டை—விதை—வேர்ப் பட்டை, மூக்கிரட்டை, மூங்கில், யானைத்திப்பிலி, வள்ளி, வாய் விளங்கம், விஷ்ணுகிராந்தி, வெள்ளுள்ளி, வேம்புஇலை—வித்து.*

**பூச்சிகொல்லி** (Insecticide).—*பூச்சிகளைக் கொல்லும் பொருள்.* (A substance destructive to insects.)

**பெருமலம்போக்கி** (*வ்ரேசனகாரி* - Cathartic).—*பேதியை யுண்டாக்குகிற பொருள்.* (A medicine producing evacuation from the bowels.)

*இரேவல்சின்னி, ஈழத்தலரி, கடுகுரோகணி, கமேலா, கரியபோளம், காட்டுக்கொள்ளு, குப்பைமேனி, குறட்டை, கொடிக்காக்கட்டான், சுரை, நாட்டுஅக்ரோட்டுநெய், நுணா, மலைவேம்பு—இலை—பட்டை.*

**பேறுவலியுண்டாக்கி** (*ப்ரசவகாரி* - Parturifacient).—*பிரசவவேதனையை அதிகப்படுத்திச் சிசுவைக் கருப்பையிலிருந்தும் வெளிப்படுத்துகிற பொருள்.* (That which induces the labour pain in order to hasten the delivery).

*கஞ்சா, களர்.*

**மணமூட்டி** (Aromatic).—*மணம் பொருந்தி உடலுக்கு வெப்பமுண்டாக்கும் பொருள்.* (A substance characterized by a fragrant spicy taste and odour and a stimulant to the gastrointestinal mucous membrane.)

*கடற்கொஞ்சி, கடாரநாரத்தை, காட்டுமுள்ளங்கி, கிச்சிலிக்கிழங்கு, கிச்சிலிப்பழம், சரளதேவதாரு, சாதிக்காய், சிவகரந்தை, சிறுநாகப்பூ, நிலக்குமிழ், விளா—இலை—பழம்.*

**மலநீராக்கி** (*ஜலவ்ரேசநி* - Hydragogue).—*மலத்தை நீராக உடைத்துத்தள்ளும் பொருள்.* (A drug which causes free secretion from the intestinal glands and removes much serum from the blood vessels by producing fluid or watery motions.)

*ஆற்றுத்தும்மட்டி, உகா, கண்டங்கத்தரி, கம்பளிப்பூச்சிசெடி, காளான், குறட்டை, சிற்றீச்சு, பேரீச்சு.*

**மலமிளக்கி** (*மலகாரி* - Laxative).—*மலத்தை இளக்கி வெளிப்படுத்தும் பொருள்.* (An agent that loosens the bowels, mild purgative.)

*அகத்தி, அக்ரோட்டுவிதை, அதிமதுரம், அத்திப்பழம், அந்தரத் தாமரையிலை, அந்திமல்லி, அம்மான்பச்சரிசி, அரசம்வித்து, அருநெல்லி*

விதை, அழிஞ்சில், அன்ஞசிக்காய், ஆமணக்குநெய், ஆலம்விதை, ஆல்பொகாடாப்பழம், ஆளிவிதை, இனிப்புவாதுமை, உருளைக்கிழங்கு, ஊசித்தகரை, எருக்கு, எழுத்தாணிப்பூண்டு, எள்ளு, ஐவிரலி, கடலை, கட்டுக்கொடி, கரும்பு, கலவைக்கீரை, கலியாணமுருக்கு, காட்டுச்சதகுப்பை, கார்போகரிசி, கீரிப்பூண்டு, கீரைத்தண்டு, குடியோட்டிப்பூண்டு, குன்றி, கூந்தற்பனை, கைப்புவாதுமை, கொடிப்பசளைக்கீரை, சரக்கொன்றை, சத்திச்சாரணை, சாமந்திப்பூ, சீக்காய், சீமையத்தி, செம்பரத்தை, சேம்பு, சோளம், தக்காளி, தமரத்தம், தரா, தான்றி, திராட்சி, துத்தி, தும்பை, தெங்கு, நிலப்பூசினி, நீர்ப்பிரமி, நெல்லி, பண்ணைக்கீரை, பப்பாய், பருத்தி, பலா, பலாசு, பவளமல்லி, பறட்டைக்கீரை, பற்பாடகம், பாகல், பாவட்டை, பாற்சொரிக்கீரை, பிண்ணாக்குக்கீரை, பிரமியவழுக்கை, பீதரோகணி, பீநாறிமரம், புகையிலை, புளியம்—ஓடு—பழம், பெரியாநங்கை, பெருங்களர்வா, பெருங்காயம், மணலிக்கீரை, மந்தாரைப்பூ - வேர், மன்ஞ, மா—காய்—பழம், மாவிலிங்கு—பட்டை—வேர்ப்பட்டை, முசுட்டை, முடக்கற்றான், முள்ளங்கி, முள்ளிலவு, மூக்கிரட்டை, வங்கார வள்ளைக்கீரை, வாழைப்பழம், வில்வப்பழம், வெந்தயக்கீரை, வெள்ளறுகு, வேங்கைப்பிசின், வேர்க்கடலை.

**முத்தோடமகற்றி** (*திரிதோஷஹரகாரி* - **Anti-tridosha**). — முத்தோடக் கொடுமையை அகற்றும் பொருள். (**Substances correcting all the three disturbed doshas.**)

ஆயில், உருத்திராட்சம்.

**முறைவெப்பகற்றி** (*முறைவ்யாதிரோதி* - **Antiperiodic**).—முறைக்காய்ச்சல் முதலியவைகளை வராமல் தடை செய்கிற பொருள். (**A remedy that antagonises the poison of periodic disorders like ague.**)

அதிவிடயம், அவுரி, ஆடுதீண்டாப்பாளை, எழிலைப்பாலை, கடுகுரோகணி, கலப்பைக்கிழங்கு, கழற்சிக்கொடி, காட்டாத்தி, காட்டுச்சீரகம், காட்டுப்பேய்ப் புடல், கோவை, சங்கன், சண்பகம், சிறுபேயத்தி, சீந்தில், நாபி, நாயுருவி, மாசிக்காய், மிளகரணைப்பட்டை, மிளகு, வசம்பு, பேயத்திப்பட்டை, வெண் கொடிவேலி, வேம்பு—காய்—பட்டை—பழம்.

**மூர்ச்சையுண்டாக்கி** (**Narcotic**).—மூர்ச்சையை உண்டாக்கும் பொருள். (**Drug that produces narcosis or stupor.**)

அபினி, ஊமத்தை, கஞ்சா, காக்கைகொல்லி, சாதிக்காய், நாபி, புகையிலை.

**நீர்ப்போக்கி** (**Anti-diabetic**).—மேகநீரைக் குறைக்கும் பொருள். (**Drug that is useful in diabetes.**)

நாபி.

**மேகப்பிணிவிலக்கி** (**Anti-syphilitic**).—மேகப்பிணியை விலக்கும் பொருள். (**Drug that is useful in syphilis**).

பறங்கிப்பட்டை.

**ருதுவுண்டாக்கி** (*ருதுவர்த்தநி* - **Emmenagogue**).—மாதர்கட்கு மாதந் தோறும் வெளிப்படுகிற உதிரத்தை கிரமப்படுத்துகிற பொருள். (**Drug that stimulates and regulates the menstrual flow.**)

அறுவதா, அன்ஞசிப்பழம், ஆடுதீண்டாப்பாளை, ஆளிவிரை, ஈசுர மூலி, எள்ளு, கடுகுரோகணி, கருஞ்சீரகம், கலியாணமுருக்கு, கழற்சிக் கொடி, கற்றாழை, கறியபோளம், காட்டுமுள்ளங்கி, காட்டுவெங்காயம், குங்குமப்பூ, குந்திரிக்கம், குப்பைமேனி, குருவேர், கோரை, சணப்பு, சண்பகம், சதகுப்பை, சிவகரந்தை, செம்பரத்தை, செம்பை, தும்பை, நுணா, பப்பாய், பருத்தி, பிரண்டை, பிளப்புச்சீரகம், பெருங்காயம், மஞ்சிட்டி, மலைவேப்பம்பூ, மல்லி, முருங்கைப்பட்டை, மூங்கில், வல்லாரை, வாலேந்திரபோளம், வெங்காயம், வெந்தயக்கீரை.

**வறட்சியகற்றி** (ஸ்நிக்தகாரி - Emollient).—வெளி அல்லது உட்பிர யோகத்தால் தோல் அல்லது மற்றத்தாதுக்களின் வறட்சியைச் சாந் தப்படுத்தி அவற்றைத் துவளப்பண்ணுகிற அல்லது ஆற்றுகிற பொருள் அல்லது வேதனை விப்புருதி கட்டிகள் இவைகளுக்கு மேலுக்கு உப யோகிக்கிற பொருள். (A substance which by external application softens the skin or which when taken internally, soothes an irritated or inflammed surface.)

அதிமதுரம், அந்தரத்தாமரைவேர், அலிசிவிரை, அல்லி, அறுகம்புல், ஆமணக்குநெய், ஆல்பொகடாப்பழம், இசப்புக்கோல்விதை, இலந்தை, இனிப்புவாதுமை, எள்ளு, கடற்பாசி, கருஞ்சீரகம், கருவேலம்பிசின், களா, கற்பாசி, குமிழமரம், கைப்புவாதுமை, சிற்றுமுட்டி, சீமைஅத்தி, செம்பரத்தை, தேட்கொடுக்கு, நிலப்பனை, பருப்புக்கீரை, பிசின்பட்டை, புத்திரசீவிவிதை, புளிச்சிறுகீரை, வெண்டைக்காய், வெந்தயவிதை, வேர்க்கடலை.

**வாதமடக்கி** (வாதஹரகாரி - Antivata).—வாயு உடலிற் சேர்ந்து பீடிக்க வொட்டாமற்றடுக்கும் பொருள். (Drug that prevents the vata diseases in the body.)

ஆனைப்புளி, எரிசாலை, சிற்றுமணக்கு, செவ்வாமணக்கு, தக்கோலம், பிரப்பங்கிழங்கு, மிளகு, முசுட்டை, மெருகு, மைக்கொன்றை, வாத நாராயணன், விழுதி.

**வாந்தியுண்டாக்கி** (வமநகாரி - Emetic).—அன்னாசயத்தை அக்கிரமமாக நடப்பித்து வாந்தியை யுண்டாக்குகிற பொருள். (An agent that has the power of inducing reverse peristalsis and producing emesis.)

அலரி, அழிஞ்சில், ஆத்துத்தும்மட்டி, இலுப்பை, உத்தாமணி, ஊமத் தை, எருக்கு, கரிசலாங்கண்ணி, கள்ளி, கறிப்பாலை, காக்கைகொல்லி, காட்டுஇருப்பை, குடியோட்டிப்பூண்டு, குப்பைமேனி, குன்றி, சணப்பு, சிறுகுறிஞ்சா, சிறுபேயத்தி, சீக்காய், சுரை, தேற்றான், பீர்க்கு, புகை யிலை, புன்னைப்பிசின், பேயத்தி, மருக்காரைப்பழம்—வேர், மூக்கிரட்டை, வசம்பு, விஷமூங்கில், மலைவேம்புப்பட்டை—வேர்ப்பட்டை, வெண்கடுகு, வெப்பகற்றி.

**வியர்வையுண்டாக்கி** (ஸ்வேதகாரி - Diaphoretic).—சரீரத்தில் வியர்வையை யுண்டாக்குகிற பொருள். (Drug that increases perspiration.)

அபினி, அருநெல்லி, அன்னாசிக்காய், இரட்டைப்பேய்மருட்டி, இல வங்கப்பத்திரி, உருத்திரச்சடை, எருக்கு, கஞ்சாங்கோரை, கர்ப்பூரப்புல், கர்ப்பூரவள்ளி, கறிப்பாலை, கறி (பப்ர) முள்ளி, காஞ்சொறி, காட்டுக் கருவாப்பட்டை, குந்திரிக்கம், குருவேர், கோட்டம், கோரை, கோவை, சந் தனம், சரளதேவதாரு, சிறுநாகப்பூ, சூரியகாந்தி, நரா, நாரை, துளசி, நல்வேளைவிதை, நன்னாரி, நாபி, நெய்ச்சட்டி, பவள மல்லி, பற்பாடகம், பால்வள்ளி, பீநாறிமரம், பேராமுட்டி, பொன்முசுட்டை, மணத்தக்காளி, மயிர்மாணிக்கவேர், மருக்காரைப்பழம், மாசிப் பத்திரி, மாம்பழம், மிளகரணை, யானைத்திப்பிலி, வாலுழுவை, வில்வ விலை, விஷமூங்கில், விஷ்ணுகிராந்தி, வெண்கொடிவேலி.

**வீக்கங்கரைச்சி** (Resolvent).—தாபிதம் அல்லது வீக்கத்தைக் கரைத்து வறட்டும்பொருள். (Drug that causes the absorption of inflammatory or other swelling.)

கறி (பப்ர) முள்ளி, கற்பாசி, சுளுக்குநாயகம், செம்பை, பொடுதலை, மலைவேப்பம்பூ, மிளகு.

**விக்கம்பரப்பி** - (Discutient).—*வீக்கத்தைப் பரப்புவதாகக் கருதப்படும் பொருள்.* **(Drug that causes a disappearence of a swelling.)**

*பண்ணிமோந்தான்கிழங்கு, வேப்பிலை.*

**விக்கமுருக்கி** (*சோபாநாசநி*-Deobstruent).—*வீக்கத்தைக்கரைக்கிற பொருள்.* **(Drug that removes functional obstructions in the body).**

*அகில், அமுக்கிராங்கிழங்கு, எலுமிச்சந்துளசி, ஒடுக்கன், கணப்பூண்டு, கரிசலாங்கண்ணி, கழற்சிக்கொடி, காட்டுக்கருவாப்பட்டை, காட்டுவெங் காயம், கீழ்க்காய்நெல்லி, குத்துக்காற்சம்மட்டி, கொள்ளுக்காய்வேளை, சண்பகம், சதகுப்பை, சளுக்குநாயகம், நுணா, பெருங்களர்வா, மல்லி, முசற்காதிலை, மெருகு, விழுதி, வேங்கையிலை.*

**வெப்பகற்றி** (*ஜ்வரஹரகாரி* - Febrifuge).—*சுரத்தை நீக்குகிற பொருள்.* **(Drug that lessens fever.)**

*அகத்தி, அதிவிடயம், அமுக்கிராவிலை, அரத்தை, அழிஞ்சில், ஆயில், ஆனைப்புளி, ஊசித்தகரை, இசங்கு, எருக்கு, கடம்பு, கணப்பூண்டு, கலியாணமுருக்கு, கழற்சிக்கொடி, கற்பாசி, காட்டுஎலுமிச்சை, காய் வள்ளிக்கொடி, காஞ்சம்வாழை, குடசப்பாலை, குருவேர், கொஞ்சி, கோடக சாலை, சரக்கொன்றை, காயமரம், செப்பு நெருஞ்சில், தக்கோலம், தேவ தாரு, நாவிளா, நிலவிளா, நுணா, நொச்சி, பற்பாடகம், பாதிரி, புள்ளடி, பேரீச்சு, மரமஞ்சள், மாசிப்பத்திரி, மாவிலிங்கு, முளைக்கீரை, மெருகு, வில் வவிலை, விஷ்ணுகிராந்தி, வெட்பாலை, வெள்ளறுகு, வெற்றிலை.*

**வெப்படக்கி** (Antipyretic).—*வெப்பைக்குறைக்கும் பொருள்.* **(An agent that reduces the temperature of fever).**

*நாபி, நிலவிளா.*

**வெப்பமுண்டாக்கி** (*உஷ்ணகாரி* - Stimulant).—*நாடி நடையை அதிகப் படுத்தி உடலில் வெப்பத்தை அதிகப்படுத்துகிற பொருள்.* **(An agent exciting the functions of an organ or some process of the body economy.)**

*அகில், அக்கராகரம், அக்காரப்பட்டை, அபினி, அவுரி, அறுகீரை, அறுவதா, அன்ஞசிப்பூ, ஆடுதீண்டாப்பாளை, ஆளிவிரை, இஞ்சி, ஈசுர மூலி, உருத்திரச்சடை, எட்டி, எருக்கு, எலுமிச்சந்துளசி, எள்ளு, ஓமம், கஞ்சா, கஞ்சாங்கோரை, கண்டில்வெண்ணெய், கண்டுபாரங்கி, கத்தரி, கஸ்தூரிமஞ்சள், கமுகு, கருணைத்தண்டு, கருப்பூரவள்ளி, கர்க்கட கசிங்கி, கர்ப்பூரப்புல், களிப்பாக்கு, கறிப்பாலை, கறி (பப்ர) முள்ளி, கரிய போளம், காட்டுஇருப்பை, காட்டுவெங்காயம், காப்பிக்கொட்டை, காயப்பங் கொட்டை, கார்போகரிசி, காவட்டம்புல், காறுகருணை, கிச்சிலிக்கிழங்கு, குங் கிலியம், குங்குமப்பூ, குத்துக்காற்சம்மட்டி, குந்திரிக்கம், குருவேர், குன்றி, செங்கொடிவேலி, கொத்துமல்லி, கோட்டம், கோரை, கோவை, சங்கன், சடாமாஞ்சி, சண்பகம், சதகுப்பை, சந்தனம், சரளதேவதாரு, சாதிக்காய், சாதிபத்திரி, சாமந்திப்பூ, சாம்பிராணி, சிறியஏலம், சிறுநாகப்பூ, சீந் தில், சீமைமிளகாய், சீரகம், கேக்குவிதை, சுக்கு, செம்பை, செருப் படை, சேம்பு, தாழை, திப்பிலி, தும்பை, துயிலிக்கீரை, துளசி, தூதுளை, தெங்கு, நாகணம், நாகமல்லி, நிலவேம்பு, நிலவாமணக்கு, நீரடிமுத்து, நுணா, நேர்வாளம், பச்சிலை, பனை, பாகல், புங்கு, புதிஞக்கீரை, புளியிலை - பிஞ்சு-பூ, பெரியஏலம், பெருங்களர்வா, மஞ்சள், மதனகாமப்பூ, மருள், மலையேலம், மிளகரணை, மிளகாய், மிளகு, முள்ளிலவு, முந்திரிப்பழம், முருங்கை, முள்ளங்கி, மூங்கில், யானைத்திப்பிலி, வசம்பு, வல்லாரை, வள்ளி, வாய்விடங்கம், வாலுழுவை, வாலேந்திரபோளம், வால்மிளகு, விடத்தேர்ப்பட்டை, வெங்காயம், வெண்கடுகு, வெள்ளுள்ளி, வெள்ளை மிளகு, வெற்றிலை, வேம்பு இலை—நெய்—புண்ணாக்கு—பூ.*

---

# குணபாடம்

## மூலிகை வகுப்பு.

# Materia Medica

## Vegetable.

---

### 1-ம் பாகம்.

---

### 1. அகத்தி—Agatti.

**வேறு பெயர்.**—அச்சம், முனி, கரீரம்.

Agati grandiflora, Sesbania grandiflora.

| | |
|---|---|
| Tel. Avise అవిసె. | Pers. Agti *اگتی |
| Mal. Agatti അകത്തി. | Urd. Agti *اگتی |
| Kan. Agaṣhi ಅಗಸೆ. | Duk. Agti *اگتی |
| Sans. Agastya अगस्त्य: | Duk. Agti-Ka-Jhar اگتی کا جھاڑ* |

இது, இந்தியாவில் எங்கும் ஏராளமாய்ப் பயிரிடக் கூடுவனவற்றுள் ஒன்று. இது, மரம்போல 20 முதல் 30 அடி உயரம் வளரினும், செடி வகுப்பில் அடங்கும். பெரும்பான்மையாக, இச்செடிகள் வெற்றிலைக்கொடிக் கால்களிலும், நீர்தங்கிய பூமிகளிலும் பயிர் செய்யப்படுகிறது. தைத் திங்கள் முதல் மாசித்திங்கள் வரையில் பூவெடுக்கும்.

(1) **சாழை அகத்தி**, (2) **சிற்றகத்தி** (3) **சீமை அகத்தி** என அகத்தியின் பெயரால் வழங்கப்படுவன இருப்பினும், இங்கு எடுத்துரைக்கப்படுவது சாதாரண அகத்தியேயாம்.

அகத்தியில் இருவகையுண்டு, அவை (1) **அகத்தி** (2) **செவ்வகத்தியாம்.** வெள்ளைப்பூவுடையது அகத்தி என்றும், செந்நிறப்பூவுடையது செவ்வகத்தி என்றும் வழங்கப்படும்.

**பயன்படும் உறுப்புகள்.**—இலை, பூ, பட்டை, வேர்களாகும்.

**சுவை.**—இலை முதலிய யாவும் கைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

### இலை.

**செய்கை.**
- நச்சரி - விஷநாசநி **Antidote.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி **Refrigerant.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி **Febrifuge.**
- மலமிளக்கி - மலகாரி **Laxative.**
- செரிப்புண்டாக்கி - பாசனகாரி **Digestive.**

### அகத்தியிலையின் குணம்.

இடுமருந்தின் தோடத்தை நீக்குதல், உடலிலெழும் பித்தத்தைத் தணித்தல், உணவைச் செரிப்பித்தல், கடுவனையும் வாயுவையு முண்டாக்கல்.

மருந்திடுதல் போகுங்காண் வன்கிரந்தி வாய்வாந்
திருந்த அசனம் செரிக்கும்—வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளும்
அகத்தியிலை தின்னு மவர்க்கு.

அகத்தியர்—குணபாடம்.

**வழக்கு**—இக்கீரை இடுமருந்தின் தோடத்தை முறிப்பது போல, மற்ற மருந்துகளின் செய்கையையும் கெடுக்குமாதலால், நோயாளிகளுக்கு மருந்தூட்டுங்காலத்தில் இது நீக்கப்படுகிறது. மற்றைய காலங்களில் நாடோறுமின்றி வேண்டும்பொழுது கறியாகச் சமைத்துண்ண, மேற்கூறிய நற்குணங்களைக் கொடுக்கும். தினந்தோறுமுண்டால், கடுவனையும், வாயுவையுமுண்டாக்குவதுடன் இரத்தத்தையும்முறித்து, சோகை, பாண்டு முதலிய பிணிகளை விளைவிக்கும்.

இக்கீரையின் சாற்றைப் பிழிந்து மூக்கில் இரண்டொரு துளிவிட, நான்காம் முறைச் சுரம் விலகும். சாதாரண சுரங்களில் உடம்பின் மேல் பூசி வர, வெப்பந்தணியும், சிரசிற்பூசித் தலைமுழுக, பைத்தியம் நீங்கும். சாறு ஒரு பங்கு, தேன் ஐந்து பங்கு கூட்டி நன்றுயுறவுபடக்கலந்து, உச்சியில் விரலாற்றடவ, பாலர்கட்குக் காணும் நீர்க்கோவை போம், இதையே மூக்கிலிட, நீர்க்கோவை, தலைவலி, இவைகள் தீரும்.

இலையை அரைத்துப் புற்கை செய்து காயங்களுக்குக் கட்டலாம்.

## செவ்வகத்தியிலையின் குணம்.

இது கபதோடத்தை யுண்டாக்கும். நிற்க பற்பல சிந்தூரம், நவநீத பஸ்பம், தாளகசுத்தி, இவைகளைச் செய்வதற்கு உதவும்.

செவ்வகத்திப் பன்னஞ் சிலேத்மமதை யுண்டாக்கும்
வவ்வுபல சிந்தூரம் வைப்பதற்காம்—கவ்வு
நவநீத பஸ்பமதை நாளுமுடிப் பிக்குஞ்
சிவமாக்குந் தாளகத்தைத் தேர்.

(அ.கு.)

இதைச் சமைத்துண்டால் கபத்தை விருத்தி செய்யும்.

இக்கீரையின் இரசத்தால் கலைக்கோடு சுத்தியாகும். (தேரையர் கரிசல்).

## அகத்திப் பூவின் குணம்.

இலையைச் சமைத்துண்பது போல, இதன் பூவையும் சமைத்துண்ண, வெயிலாதிகளாலும், புகையிலைச் சுருட்டு முதலியவைகளாலும், பிறந்த பித்ததோடத்தையும், உடலிற்றோன்றும் வெப்பையுந் தணிக்கும்.

புகைப்பித்த மும்அழலாற் பூரிக்கும் அந்த
வகைப்பித்த மும்அனலும் மாறும்—பகுத்துச்
சகத்தி லருந்தாத் தனியமிர்தே ! நாளும்
அகத்தி மலருக் கறி.

(அ.கு.)

## செவ்வகத்திப் பூக்குணம்.

பார்ப்பதற்குப் பயத்தை விளைவிக்கும், மூக்கின் வழியாய் விழுகிற இரத்தப் பெருக்கை, விரைவில் நிறுத்துவதுந் தவிர, உள் வெப்பத்தையும் போக்கும்.

நாடிற் பணிப்பீனும் நாசிக்கறைக் கதழ்வை
யோடித் துடைத்துள் ளொளியாற்றும்—பாடெத்
தவரகத்தி னுந்துணங்கைத் தண்டா மயிலே!
துவரகத்திப் பூக்காண் டுதி.

(அ.கு.)

பூவின் இரசத்தால் அப்பிரகம் சுத்தியாம். (தேரையர் கரிசல்).

### மரப்பட்டை.

அகத்தி மரப்பட்டையை விதிப்படிக் குடிநீர் செய்து அம்மை நோய்ச் சுரம் அல்லது அதற்குச் சமானமான இதர விஷசுரங்களுக்கு, ஆரம்பத்தில் கொடுக்கலாம்.

பூச்சாற்றைக் கண்களிலிட, கண் மறைவு நீங்கும்.

### வேர்ப் பட்டை.

**செய்கை.** { துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent.**
உரமாக்கி—பலகாரி—**Tonic.**

### வேர்ப்பட்டையின்குணம்.

மேகம், தாகம், மெய்யெரிவு, கையெரிவு, ஆண்குறியினுள்ளெரிவு, ஐம்பொறிகளைச் சேர்ந்த எரிவு ஆகிய இவைகளைப் போக்கும்.

நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மேகமெனும்
சொல்லகலுந் தாகமறும் தோகையே!—மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகனத்தி னுள்ளெரிவும்
ஐயெரிவும் போமென் றறி.

(அ.கு.)

அகத்தி வேர்ப்பட்டையை, விதிப்படி ஊறல் கஷாயமேனும், குடிநீரேனும் செய்து உட்கொள்ள, மேற்கண்ட பிணிகள் தணியும்.

செவ்வகத்தி வேர்ப்பட்டை, ஊமத்தன்வேர் இவ்விரண்டையும் சமபாக மெடுத்து அரைத்து வாதவீக்கம், கீல்வாதங்களுக்குப் பற்றிடலாம்.

---

## அகில்—Agil.

**வே - பெ—அகரு (அகருக்கட்டை), அகிற்கட்டை, பூழில், காகதுண்டம்.**

**Aquilaria Agallochi or A. Ovata.**

**Eng.—Aloe-wood, Eagle-wood, sweet scented-wood.**

| | |
|---|---|
| **Tel.** Agaru అగరు. | **Arab.** Ud-el-juj عودالجج * |
| **Mal.** Agaru അഗരു. | **Pers.** Belanjirj بیلن جرج * |
| **Kan.** Agaru (Krishna) ಅಗರು. | **Urd.** Agaru اگارو * |
| **Sans.** Agaru अगरुः. | |

இது மரவகுப்பிற் சேர்ந்தது. இமயத்தின் கீழ்ப்பிரதேசம், ஆசாம், பூத்தான் முதலிய இடங்களில் உற்பத்தியாகின்றது.

ப - உ.—கட்டை, பிசின்.

**சுவை.**—கார்ப்பு, கைப்பு, அற்ப இனிப்புள்ளது : **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.
வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent. }

**குணம்.**—அகருக்கட்டையினால் பீநசம், தலைக்குத்து (ஒற்றைத்தலைவலி), வாதம், நமைப்புடைகள், சிற்சில சுரம், வாந்தி, அருசி, அயர்வு ஆகிய இவைகள் நீங்கும். விருத்தர்களின் தளர்ந்த தேகத்தை இறுக்கும்.

நாசி யடைப்பு நவிரவிடி தாளுநோய்
வீசுநமைப் புடைகள் விட்டேகும்—பேசில்
சுகரு மயங்குந் துணைமுலையாய் ! நல்ல
அகரு மரத்தா லறி.

தளர்ந்தவி ருத்தருக்காந் தக்க மணத்தால்
உளைந்த சுரமனைத்து மோடும்—வளைந்திகழு
மானே ! அகிற்புகைக்கு வாந்திய ரோசகம்போம்
தானே தளர்ச்சியறுஞ் சாற்று.

(அ.கு.)

அகிற்கட்டையை நீர்விட்டு சந்தனம் போலரைத்து உடலிற்பூசிக்கொண்டு வர, விருத்தர்களின் தளர்ந்த தேகம் இறுகும்.

இதன் வாசனையால், வருத்துகின்ற சிற்சில சுரவெப்பம் நீங்கும்.

இக்கட்டையைப் புகைத்து ஆக்கிராணிக்க, அல்லது இக்கட்டையின் புகை மேல்படும்படிச் செய்விக்க, அயர்ச்சி, வாந்தி, அரோசகம் தீரும். விரணங்களுக்கும் புகைக்கலாம்.

இக்கட்டையின் சூரணம் தாதுவிர்த்திக்குச் செய்யப்படும் அநேக மருந்துகளில் சேரும்.

அகிற்கட்டைத் தைலத்தை முடித்தைலமாக வழங்க, நீர்க்கோவை, மேகம், பீநசம் முதலிய மேற்கண்ட ரோகங்கள் நீங்கும்.

**அகிற்கட்டைத்தைலம்** செய்முறை.—அகிற்கட்டைக்குடிநீர், நல்லெண்ணெய், பசுவின்பால், வகைக்குப்படி ஒன்று, ஒன்றுகூட்டி இதில் அதிமதுரம், தான்றிக்காய்த்தோல் வகைக்குப் பலம் ஒன்று எடுத்து பசுவின் பால்விட்டரைத்துக் கலந்து எரித்துப் பக்குவபாகத்தில் வடித்தெடுத்துக் கொள்ளவும்.

(சிகிச்சாசார சங்கிரகம்)

---

## அக்கரகாரம்—Akkara-kàram.

**வே - பெ.—அக்கராகாரம், அக்கிராகாரம்.**

Anacyclus Pyrethrum.

(Root of the Anthemis pyrethrum.)

Eng.—Pellitory of Spain ; Pellitory root ; Pyrethri radix.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Àkala-karra ఆకలకర్ర. Akkàra-kàram అక్కారకారం. | Arab. | Aàkharkharhà عاقر قرحا * Aùdul-garh عودالقرح * Aaqarqarà عقرقرحا * |
| Mal. | Akki-karukà അക്കികറുകം. Akkìlà-kàram അക്കിലാകാരം. | Pers. | Akalkara اكلكرا * |
| Kan. | Akkalà-karè ಅಕ್ಕಲಕರೆ. | Hind. | Akhalkhara اقللقورا * Akarkara اكركرا * |
| Sans. | Akarakarabaअकारकरभः | Duk. | Akhalkhòrà اقلقورا * |

இந்த வேர் சற்றேறக்குறைய விரலளவிருக்கும். நிறத்தில் வெண்கறுமை. இதை மென்றுச் சுவைக்க, நா, உதடு இவ்விடங்களில் விறுவிறுப்பையும், எரிச்சலேயு முண்டாக்கும். வாயில் நீர் ஊறும். வங்காளம், அரபியா இவ்விடங்களில் ஏராளமாய்ப் பயிராகும்.

**சுவை** - கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உமிழ்நீர்ப்பெருக்கி - திரவகாரி - Sialogogue.
தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—இதனுல் பயங்கரமான கால்தோடமும் (வாததோடமும்) தாகசுரமும் நீங்கும். இதை வாயிலடக்கிக்கொள்ள, நாவரட்சி நீங்கி, நாக்கில் நீர் ஊறும்.

அக்கர காரம் அதன்பேர் உரைத்தக்கால்
உக்கிரகால் அத்தோடம் ஓடுங்காண் - முக்கியமாய்க்
கொண்டால் சலம்ஊறும் கொம்பனேயே ! தாகசுரம்
கண்டால் பயந்தோடுங் காண். (அ. கு.)

அக்கராக் காரஞ் செய்யு மடவிது தன்னேக் கேளாய்
விக்கலுந் தடிப்பு மாற்றும் மிடறுகள் பாடி விக்குங்
கக்குமா ரோசிக கங்க ளடிநவ தோஷம் போகும்
இப்படிக் கொள்வ தற்கு யிதமுடன் சொன்னு ரீதே.

அக்கிரா காரத்தை ஆரறியப் போருர்காண்
உக்கிரகா லத்தோஷ மோடுமே—திக்குமொழி
கொண்டாற்கு நாத்திரும்பும் கொம்பனேயே ! கேளீர்
கண்டார்க்குத் தோடமிலே காண் (ஏடு)

அன்றியும், பல்வலி, உண்ணுக்கு வளர்ச்சி, தொண்டைக்கம்மல், நா அசைவற்றுப்போகுதல் (ஜிக்வாஸ்தம்பனம்), கீல்வாதம், சந்நிதோடம் இவைகளும் நீங்கும்.

**(வ - கு.).**—(1) பல்வலி, உண்ணுக்குவளர்ச்சி, தொண்டைக்கம்மல், நா அசைவற்றுப்போதல், சுரத்திஞல் உண்டாகும்வரட்சி ஆகிய இவைகள் ஒரு சிறிய அக்கரகாரத்துண்டை வாயிலிட்டு மென்றுவருவதாலும், அக்கிரகாரத்தை ஊறல் கஷாயஞ்செய்து வாய் கொப்பளித்து வருவதாலும், நீங்கும்.

(2) இதன் தனித்த சூரணத்தை மூக்கிலிட (நசியமிட), காக்கைவலி சாந்தமாகும்.

(3) அக்கரகாரம், சுக்கு, திப்பலி, செஞ்சந்தனம், கிராம்பு, சாதிக்காய், குங்குமப்பூ இவைகளின் பொடி வகைக்கு ஒருபங்கு, அபின் அரைப்பங்கு, இவைகள் யாவும் சேர்ந்த எடைக்கு, அரைப்பங்கு, சருக்கரை கூட்டி 2, 3 குன்றி எடை, காலே மாலேயுட்கொள்ள, வயிற்றுநோய் நரம்புத்தளர்ச்சி நீங்கும்.

**கண்டௌடதம்.**—அக்கரகாரம், அதிமதுரம், சிற்றரத்தை, சுக்கு இவைகளின் தனித்தனிச்சூரணம் சமவெடைதூக்கிப் பசுவின்பால்விட்டரைத்தெடுத்த விழுது ஒரு பங்கு, பாலில் வேகவிட்டெடுத்த பேரீச்சம்பழத்தை அரைத்தவிழுது நான்குபங்கு, இவ்விரண்டையும் ஒன்றுசேர்த்து, போதுமான அளவு தேன்விட்டுக் குழைய அரைத்தெடுத்து, விரலாலெடுத்து நாவிற்றடவ, சுரம், சந்நிபாதத்தில் காணும் நாவறட்சி நீங்கி, நாவில் நீர்சுரக்கும். வாந்தியிருந்தால் மயிலிறகைச்சுட்ட சாம்பலும், மலபந்தமிருந்தால் கடுக்காய்த் தோலேயும், மலப்போக்கிருந்தால் மாசிக்காயையும், நீர்க்கட்டிருந்தால் வெங்காரத்தையும் சேர்க்கலாம். மேற்படி யோகத்தில் பொன், வெள்ளி, நன்முத்து, நற்பவளம், கலேக்கோடு, அக்கமணி (உருத்திராக்கம்), கத்தூரி, குங்குமப்பூ இவைகளேயுஞ் சேர்த்து வழங்குவதுண்டு.

## (அக்காரப்பட்டை—Akkárappattai.)

**சுவை.**—*கார்ப்பு*, **வீரியம்** - *வெப்பம்*, **பிரிவு** - *கார்ப்பு*.

**செய்கை,**
- *பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி* - Stomachic.
- *வெப்பமுண்டாக்கி- உஷ்ணகாரி* - Stimulant.
- *உமிழ்நீர்ப்பெருக்கி - திரவகாரி* - Sialagogue.
- *தடிப்புண்டாக்கி - ஷோணகாரி* - Rubefacient.
- *உடற்றேற்றி - வியதாபேதகாரி* - Alterative.

**குணம்.**—*அக்காரப்பட்டைக்கு தாகம், நாவறட்சி, சுரம், சந்நிபாதம், திரிதோடத்தலைநோய், வாதகோபம், உதிரநாற்றம் நீங்கும்.*

*அக்காரப் பட்டைக் கறல்நா வறட்சிகளும்*
*எக்குசந்நி பாதசுரம் என்பவையும்—பக்கச்*
*சகலதலை நோய்வாய்வுந் தாழ்ந்தே யொழியும்*
*புகலிரத்த கந்தமது போம்.* (அ.கு.)

*அக்காரப்பட்டையைச் சூரணஞ்செய்து, நாளொன்றுக்கு இருவேளையும், வேளையொன்றுக்கு $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ வராகனெடை சூரணத்துடன் நாட்டுச் சருக்கரை சேர்த்துண்டுவர, மேற்கண்ட நோய்கள் நீங்கும். அல்லது $\frac{1}{4}$ பலம் தூக்கி குடிநீரிட்டுங் கொடுக்கலாம்.*

---

## அக்ரோட்டு--Akróṭṭu.

**Juglans Regia.**
**Eng.—Walnut.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Akrotu | అక్రోటు. | Pers. | Girdagāṇ | *گردگان |
| Mal. | Akrotu | അക്രോട്ട്. | | Chār-Maghz | *چار مغز |
| Kan. | Akroḍu | ಅಕ್ರೋಡು. | | Chahār-Maghz | *چهار مغز |
| San. | Akshotas | अक्षोटः | Hind. | Akhrot | *اخروٹ |
| Arab. | Jouz | *جوز | Duk. | Akroṭ | *اکروٹ |

*இது மரவகுப்பைச் சேர்ந்தது. இமயமலையில் தன்னிச்சையாகப் பயிராகிறது. காஸ்மீரம், திபேத், ஆப்கானிஸ்தானம் இவ்விடங்களில் பயிரிடப் பட்டும் வருகிறது.*

**(ப- உ.).**—*இலை, காய், பழம், பழத்தோல், பட்டை, விதை.*

**செய்கை இலை.**
- *உடற்றேற்றி - வியதாபேதகாரி* - Alterative.
- *துவர்ப்பி - ஸங்கோசனகாரி* - Astringent.
- *உரமாக்கி - பலகாரி* - Tonic.

### இலை.

**குணமும் வழக்கும்.**—*ஒருபங்கு இலைக்கு, பன்னிரண்டுபங்கு நீர்சேர்த்துக் காய்ச்சி, நாலில் ஒன்றாகக் குறுக்கிக் கொடுக்க, கண்டமாலை, எலும்புருக்கி ரோகம், குசுமரோகம், குணப்படும்.*

*புண், புரைகளைக் கழுவ இக்கஷாயம் பயன்படும், அவைகளும் ஆறும்.*

### காய்.

**செய்கை.** *புழுவகற்றி* - Vermifuge.

**வ - கு.**—*குழந்தைகளின் வயிற்றில்சேரும் பூச்சுகளைக்கொன்று வெளிப் படுத்த, காயைத் தின்னக்கொடுக்கலாம்.*

### பழமும் பருப்பும்.

**சுவை.**—பழம் - பருப்பு - இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—உடற்குப் பலந்தரும்.

**வ - கு.**—இதை உணவாகக் கொள்ளலாம்.

### பழத் தோல்.

**செய்கை.** { மேகப்பிணிவிலக்கி - Anti - Syphilitic.
புழுவகற்றி - Vermifuge.

தோலைக் கஷாயமிட்டு உபயோகித்துவர, மேக நோய்கள் சாந்தமாகும். வயிற்றிற் சேர்ந்துள்ள பூச்சிகளை வெளிப்படுத்தும்.

### பட்டை.

**செய்கை.** { துவர்ப்பி - லங்கோசனகாரி - Astringent.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
புண்ணழுக்ககற்றி - விரணசுத்திகாரி - Detergent.
பாற்சுருக்கி - க்ஷீரநாசநி - Lactifuge.

**குணம்.**—தொண்டைப்புண்ணை ஆற்றும், பால்சுரப்பதைத் தடுக்கும்.

**வ - கு.**—பால்சுரப்பைத்தடுக்க பட்டையைக் கஷாயஞ்செய்து கொடுத்துவரலாம். இதைக் கொப்புளித்துவர தொண்டைப்புண் ஆறும்.

### விதை.

இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் சிறிதுமஞ்சள் அல்லது செம்மஞ்சள் நிறமாயிருக்கும். அலசிவிதை எண்ணெயின்மணம்போல இதில் அற்பமணமிருக்கும்.

**செய்கை.** { பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Chologogue.
மலமிளக்கி - மலகாரி - Mild Laxative.

**குணமும் வழக்கும்.**—மலத்திலுள்ள பெரும்புழுவைப் (நாக்குப்பூச்சியைப்) போக்க இந்த எண்ணெயை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

கண்மறைப்புக்கு வெளிப்பிரயோகஞ் செய்யலாம்.

தீபம் எரிக்கவும் உபயோகிக்கலாம்.

இதன் பிண்ணாக்கை மாடுகளுக்குக் கொடுத்துவரலாம்.

---

## நாட்டு அக்ரோட்டுக்கொட்டை—Náṭṭu Akróṭṭukkoṭṭai.

**Aleuritis Triloba (Belgaum).**

**Eng.—Fruit of Bengal Walnut.**

Tel. Náṭu- akrotu - Viṭṭu. నాటు అక్రోటు విత్తు.

Mal. Náṭ - Akrotta Vithā. നാട്ട അക്രോട്ട വിത്തു.

Kan. Náṭ Akróḍu. ನಾಟ ಅಕ್ರೋಡು.

Sans. Akrota अक्षोटः (देशीयः).

Arab. { Khasife-hindi. خسف هندی *
Jouze - barri. جوز بری *

Pers. { Girdagáne-hindi گردگان هندی *
Chahár-Maghze-hindi. چهار مغزهندی *

Hind. Hindi - akrot. هندی اکروث *

Duk. Jangli akróṭ. جنگلی اکروث

இது மலேயா, ஆர்ச்சிபெலகோவிற் குரியது. ஆயினும் பொதுவாகத் தென் இந்தியாவிலும், சிறப்பாக வயநாடிலும் பயிராகிறது. மரவகுப்பைச் சேர்ந்தது.

ப - உ.—பழம், விதை, எண்ணெய்.

**செய்கை.** { பருப்பு—காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac. குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling. எண்ணெய்—பெருமலம்போக்கி - விரேசனகாரி - Cathartic.

**குணம்.**—பேதியாகும், பித்தநீரைப்போக்கும், மூலவேதனையைத் தணிக்கும். விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய்க்குக் குமட்டலில்லை, மணமுமில்லை. இவ்வெண்ணெய்க்கு, வயிற்று வேதனையின்றி சாந்தமாய்ப் பேதியாகுந் தன்மையிருப்பதால், ஆமணக்கெண்ணெயைப் பார்க்கிலும் சிறந்தது. ½ முதல் 2 பலம் வரையில் கொடுக்கலாம். மலத்துடன் பித்தநீரை ஏராளமாய் வெளிப்படுத்தும்.

விதையை அல்லது பழத்தை இந்த எண்ணெயிற்றேய்த்து ஆசனத்தில் செருக, மூலத்தின் வேதனை தணியும்.

பழரசம் பூச்சிகளைக்கொல்லும், மூலத்தைப்போக்கும்.

**The Vernacular names given to this plant in every book which treats of it, are those properly belonging to *Juglan regia* (Walnut) and to convert them into those of *Aleuritis triloba* (Belgaum Walnut), it is necessary the word *Country*, *wild*, *Indian* or Belgaum, should be added to them.**

---

## அசோகு—Asógu.

**வே.-பெ.—அசோகம், ஆயில், செயலே, பிண்டி காகோளி.**

Saraca Indica *Linn.*

**Eng.**—Asoka tree.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Asókamu అశోకము. | **Sans.** | Asoka अशोकः |
| **Mal.** | Asógam അശോകം. | | Gandapuspa गन्धपुष्पः. |
| **Kan.** | Asoka ಅಶೋಕಮರ. | **Hind.** | Asok اسوك |
| | Kenkali-Mara ಕೆಂಕಾಲಿಮರ. | | |

அசோகமரம், இந்தியாவில் மேற்குமலைத்தொடர்ச்சியிலும், கஞ்சம், விசாகப்பட்டணம் முதலிய இடங்களிலும் பயிராகிறது. மற்றவிடங்களில் தோட்டங்களில்வைத்துப் பயிரிடப்படுகிறது. இதன்பூ ஒரு பூங்கொத்து போலிருப்பதுடன், மனதைக்கவரும்படியான பட்டுப்பூச்சு நிறமொற்ற செம்மை நிறமுள்ளதாயிருக்கும். இது மாசி, பங்குனி மாதங்களில் புட்பிக்கும்.

ப - உ.—பூ, பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. கருப்பாசயவெப்பகற்றி-கர்ப்பாசயசமனகாரி - Uterine Sedative. கருப்பாசயவுரமாக்கி - கர்ப்பாசயபலகாரி - Uterine Tonic.

**குணம்.**—கருப்பையழற்சி, கருப்பாசயத்திலிருந்துண்டாகும் இரத்தப் பெருக்கு (பெரும்பாடு), இரத்தபித்தம், இரத்தபேதி, பித்தப்பிணிகள், நீரிழிவு ஆகிய இவைகள் நீங்கும்.

**குறிப்பு.**—உதிரவேங்கை, ஒடுவடக்கி, விடத்தலே, விளா, வேல் இவைகளின் குணம் அசோகுக்குமுண்டு.

**பூவின் உபயோகம்.**—புட்பத்தை நுண்ணிய பொடிசெய்து, கால்பல மெடுத்து ஆழாக்கு நீருடன் கலந்து கொடுக்க, இரத்தபேதி, இரத்தமும் சீதமுங்கலந்த பேதி நிற்கும்.

**பட்டையின் பலன்.**—பட்டையையிடித்துச் சாறுபிழிந்து கால் முதல் ஒரு உச்சிக்கரண்டியளவு கொடுத்துவர, பெரும்பாடு தணியும்.

பட்டை பலம் 3 எடுத்துச் சிதைத்து, இரண்டு ஆழாக்கு பசுவின்பால், எட்டு ஆழாக்கு நீரில் கலந்து, ஐந்தில் ஒரு கூறுகச் சிறுக்கி, நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்றுதரம் கொடுத்துவர, பெரும்பாடு முதலிய இரத்தப்பெருக்கு நிற்கும். கருப்பை தோடமுற்றுல், வீட்டுக்கு விலக்கமான மூன்றும்நாள் தொடங்கி இரத்தம் நிற்கும் நாள்வரை கொடுக்க, கருப்பை தோடம் நீங்கிப் பலப்படும்.

---

## அதிமதுரம்—Ati-Maduram.

**வே - பெ.—அதிங்கம், அட்டி (அஷ்டி), மதுாகம், குன்றிவேர்.**

**Abrus Precatorious.**

**Glycyrrhizæ Radix.**

**Eng.—Jequirity : Indian or Jamaica Liquorice.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ati-Madhuramu అతిమధురము. <br> Yasti-Madhukam యష్టిమధుకము. | Sans. | Yashti-Madhukam यष्टिमधुकम् |
| | | Arab. | Aslussùs * اصل السوس |
| Mal. | Ati-Madhuram അതിമധുരം. <br> Iratti-Madhuram ഇരട്ടിമധുരം. | Pers. | Bikhe-Mahak * بیخ مهك |
| | | Hind. | Jathi-Madh * جیٹهی مدھ <br> Mulatthi * ملاٹهی |
| Kan. | Ati-Madhurà ಅತಿಮಧುರ. | Duk. | Mitthi-Lakri * میٹهی لکڑی |

இது மலைகளில் பயிராகும் குன்றியின்வேர். இது சிறிதும் பெரிதுமாய், மஞ்சள் நிறமுள்ளதாய், வெளிப்புறத்தில் அழுக்குளதாயிருக்கும். பெரும் பாலும் வெண்குன்றியின் வேராகும். இதன் விதைகள் கருநிற - வெண் ணிற - செந்நிற பேதங்களுடையது. இதற்குப் பதிலாக மற்றக்குன்றிகளின் வேர்களையும் உபயோகிப்பதுண்டு.

**ப - உ.**—இலை, வேர், பால், விதை.

**இலை.—சுவை** - இனிப்பும் கைப்பும், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**வேர்—சுவை** - இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**விதை.—சுவை** - கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பால்.—சுவை** - இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பொதுச் செய்கை.**
- *வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி* Emollient.
- *உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி* Demulcent.
- *கோழையகற்றி - கபஹரகாரி* Expectorant.
- *மலமிளக்கி - லகுவிரேசநி*, Laxative.

**குணம்.**—வேருக்கும் பாலுக்கும் ஒரே குணம் உண்டு. இதனுல் திரி தோடப்புண், தாகம், கண்ணோய், உன்மாதம், விக்கல், வலி, வெண் குட்டம், பித்தம், எலும்புருக்கி, கிரிச்சரம், ஆவர்த்தபித்தம், மத மூர்ச்சை, விடபாகம், வெப்பு, வாதசோணிதம், காமாலை, சர்வவிடம், காமியநோய், தாதுநட்டம், சோபாரோகம், இதழ்நோய், ஆசியநோய், குத்திருமல், குய்யப்புண், சிரநோய், வாயுநோய், மூலைவித்திரதி, வெட்டுக் காயப்புண் முதலியன போம். ஆனுல் நீர்க்குண்டிக்காய்க்கும் (Kidney) மண்ணீரலுக்கும் (Liver) ஆகா.

அதிமதுரத்தின் குணம்.

கத்தியரி முப்பிணியால் வருபுண் தாகங்
கண்ணோய்உன் மாதம்விக்கல் வலிவெண் குட்டம்
பித்தம்எலும் புருக்கி கிரிச்சரம் ஆவர்த்த
பித்த மதமூர்ச்சை விடபாகம் வெப்பந்
தத்திவரு வாதசோ ணிதங்கா மாலை
சருவவிடங் காமியநோய் தாது நட்டங்
குத்திருமல் ஆசியங்கம் இதழ்நோய் இந்து
குயப்புணும்போம் மதூகமெனக் கூறுங் காலே. (தே-கு.)

தித்திக்கு மதிமதுரக் குணத்தையெடுத் துரைக்கில்
சிரமயக்கஞ் சுரதாகந் திரிதோடங்கள்
பித்தஞ்சத் திக்குமிது குணமா மதுரதீபனமாந்
தாதுவுட்டிணமுந் தவிர்க்கும் விழிக்கிதமாம்
புத்திக்கு வித்தாகுஞ் சந்தாபந் தீர்க்கும்
புகைந்தெடுக்குஞ் சேட்டுமத்தைப் பித்தரோகத்தை
அத்திப்பற் றினமேகந் தன்னைவா தத்தினை
யறுத்திடும்வச் சிரமென்பா ரதிமதுரந்தனையே. (ஏடு.)

அதிமதுரம் பேரீந்துக் கானகுணங் கேளீர்
கொதிமருவாப் பித்தங் குறுகுமே—துதிமருவாய்
நீரதுவு முண்டாகும் நிலையாத தாபம்போம்
பாரறியச் சொன்னோம் பகர்ந்து. (ஏடு.)

**அதிமதுரச்சத்து செய்யுமுறை.**—அதிமதுரம் பலம் 10, நீர் ஆழாக்கு 8, இதை 12 மணிநேரம் ஊறவைத்து இறுத்து வடிகட்டிய திப்பியை, மறு படியும் ஆழாக்கு வெந்நீரில் 6 மணிநேரம் ஊறவைத்து இறுத்து, முன் னெடுத்துள்ள நீருடன்கலந்து, மெழுகுபதமாய்ச் சுண்டவைத்துக்கொள்க.

**அளவு.**—$\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ வராகனெடை.

**வ - கு.**—இதன் சத்தை மூசாம்பரம், நிலவாகை இவைகளைக் கொண்டு செய்கின்ற மருந்துகளின் அருவருப்பை நீக்க, உபயோகிக்கலாம். அவைகளின் வீரியமும் குன்றுது.

**வேர்.**

**வ - கு.**—தேக அனல் தணிய, அதிமதுரம் பலம் $\frac{1}{2}$ எடுத்து வெந்நீரில் அரைத்துக் கலக்கி வடிக்கட்டிக் காலை மாலை கொடுக்கலாம்.

**சூட்டினுல் உண்டாகும் இருமலுக்கு.**—அதிமதுரம், கடுக்காய், மிளகு சமனெடை இள வறுப்பாய் வறுத்துச் சூரணம் செய்து, கலந்து 1 முதல் $1\frac{1}{2}$ வராகனெடை தேனில் கொடுக்கலாம்.

**மஞ்சட் காமாலைக்கு.**—அதிமதுரம், முட் சங்கன் வேர்ப்பட்டை இவ்விரண் டையும் சமனெடை எடுத்துப் பழச்சாற்றுல் மூன்று நாள் அரைத்து, தேத் தாங்கொட்டைப் பிரமாணம் மாத்திரை செய்துலர்த்தி வைத்துக்கொண்டு, இதைப் பாலிலாயினும் முலைப்பாலிலாயினும் ஒரு நாளைக்கு இருதடவை கொடுக்கலாம்.

**கர்ப்பவதிகளுக்குக் காணும் உதிரம் நிற்க.**—அதிமதுரம், சீரகம் வகைக்கு $3\frac{3}{4}$ வராகனெடை இவைகளை இடித்துக் கால்படி நீர் விட்டு, அரைக்கால் படியாகக் காய்ச்சி காலை மாலை 3 அல்லது 4 நாள் கொடுக்கலாம்.

**வயிற்றில் மரித்த பிள்ளை விழ.**—அதிமதுரம் பலம் 1, தேவதாருக் கட்டை பலம் 1 வெந்நீர் விட்டரைத்து, $\frac{1}{2}$ பலம் வீதம் தினத்திற்கு இரு வேளை, வெந்நீரிற் கலக்கிக் கொடுக்கலாம்.

**பேதியாக.**—அதிமதுரம் பலம் 3, திராக்ஷை உப்பு வராகனெடை 8 சிதைத்து 4 ஆழாக்கு நீரில் சேர்த்து, ஒரு ஆழாக்காகச் சுண்டவைத்துக் கொடுக்கலாம்.

**கண் ஒளிபெற.**—அதிமதுரத்தை முலைப்பால் விட்டரைத்துக் கண்ணி லிடலாம்.

**இலை.**

**வ - கு.**—இதன் இலையை அரைத்துப் பூசிவர, உடலிலும், அக்குளிலும் உண்டாகும் துர்வாசனை, அரையில் உண்டாகும்சொறி, சிரங்கு போம்.

**பிடிப்பு, சுளுக்கு** உண்டானால் அவ்விடங்களில், சிற்றாமணக்கு நெய்யை இலேசாகத்தடவி குன்றி இலையை ஒட்டவைக்கக் குணமாகும். அப்போது ஓர் வித விறுவிறுப்புண்டாகி வலி நீங்கும்.

**அதிமதுர லேகியம்.**—அதிமதுரம் வராகனெடை 18, பசும்பால் ஆழாக்கு 4, பசுவின் நெய் ஆழாக்கு 4, பழுப்புச்சருக்கரை ஆழாக்கு 4 இவைகளை முறைப்படிஇலேகியம் செய்து, கொட்டைப்பாக்குப் பிரமாணம் தினமிருவேளை கொடுத்துவர, மூத்திரக் கிரிச்சரம், பிரமியம் போம்.

**அதிமதுரச் சூரணம்.**—அதிமதுரம், சோம்பு, சருக்கரை வகைக்குப் பலம் 1, கொடிவேலி வேர்ப்பட்டை ½ பலம் இவைகளைச் சூரணம் செய்து, சித்திரை முதல் ஆடி மாதம் வரை சாப்பிட்டுவர, நோயணுகாது. தலைவலி, ஒற்றைத்தலைவலி, தீராத்தலைவலி, சுரம் தீரும். கண்கள் ஒளி பெறும்.

**வறட்சி, தோடம் ஏழுந்திர.**

அதிமதுரம் பலம் 1, ஈய பற்பம் வராகனெடை 1 தேன்விட்டரைத்துக் கொம்புச் சிமிளில் அடக்கஞ்செய்து வைத்துக்கொண்டு, சிறிது எடுத்து நாக்கில் தடவிவர, மேற்படி தோடமுதலியன தீரும்.

**இருமலுக்கு.**—அதிமதுரத் துண்டு ஒன்றை வாயிலிட்டுச் சுவைத்த இரசத்தை விழுங்க, இருமல் தணியும்.

---

## அதிவிடயம்—Ati-Vidayam.

**வே - பெ.—அதிவிடையம், அத்திரணம், பங்குரை, மாதிரி.**

Aconitum Heterophyllum.

Eng.—Indian Atees.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ati-Vasa అతివస. | Sans. | Ativisha अतिविषा. |
| Mal. | Athividayam അതിവിടയം. | Pers. | Vajje-turki * وج ترکی |
| Kan. | Bhangura ಭಂಗುರ. | Hind. | Atìs * اتیس |
| | Upavishanaka ಉಪವಿಷನಾಕ. | Duk. | Atvikà * اتویکا |
| | | | Vajje-turkì * وج ترکی |

இது செடிவகுப்பைச் சேர்ந்தது. இதன் வேர் குவிந்த வடிவம்; நிகளம் சற்றேறக்குறைய 1, 1½ அங்குலம், கனம் ⅛—¼ அங்குலம்; இது சாம்பல்பூத்த நிறமும், கருப்புப்புள்ளிகளையு முடையது; வாசனையற்றது; எளிதில் பொடிபடும். இதன் உட்பாகம் வெண்மை.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- முறைவெப்பகற்றி - முறைவியாதிரோதி - Anti - periodic.

**குணம்.**—சர்க்கராற்புத விரணம், முறைச்சுரம், விட்டுவிட்டு வருகிற சுரம், வேகமுள்ள அதிசாரம், கோழை, மேல் நோக்கிய வாந்தி முதலிய நோய்களைப் போக்கும்.

அதிவிடயம் சர்க்க ராற்புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை—எதிர்வாந்தி
என்றுரைக்கும் நோய்க்கூட்டம் இல்லாத கற்றிவிடும்
குன்றைநிகர் முலையாய்! கூறு. (அ.கு.)

**வ - கு.**—இதைச் சூரணஞ் செய்து 10 முதல் 15 குன்றியெடை தேனிற் குழைத்துக் கொடுத்துவர, முறைச்சுரம், விட்டுவிட்டு வருகிற சுரம் குணமாம். $2\frac{1}{2}$ முதல் 5 குன்றியெடையாக, நாள் ஒன்றில் மும்முறை கொடுக்க, சுரத்திற்குப்பின் நேரிடும் அசதியைப் போக்கும். அசீரணபேதி, சீதபேதிகளிலும், வாதம், மூலம், மூலக்கடுப்புகளிலும் உடற்கூறின்படி அளவுபடுத்திக் கொடுக்க, துரிதத்தில் நன்மை பயக்கும்.

**பேதியுடன் கூடிய சுரத்திற்குக் குடிநீர்**—அதிவிடயம், சுக்கு குடசப்பாலைப்பட்டை, முத்தக்காசு, சீந்திற்கொடி இவ்வைந்தும் வகைக்கு ஒன்றேகால் வராகனெடை தூக்கி, உழக்கு நீரில் சிதைத்துப்போட்டு, நாலில் ஒன்றாகச் சிறுக்கி, அதை இரண்டு அல்லது மூன்று பாகமாகப்பிரித்து, ஒரு நாளில் கொடுக்கலாம்.

அல்லது

அதிவிடயம், சிற்றாமுட்டி, கோரைக்கிழங்கு, கர்க்கடகசிங்கி, பிரமட்டை இவ்வைந்தும் சமவெடையெடுத்துச் சூரணஞ்செய்து, தக்க அளவெடுத்துத் தேனிற் கூட்டிக் கொடுக்கலாம். கோழையுமிருக்குமாகில், திப்பிலியுஞ் சேர்த்து வழங்கலாம்.

---

## அத்தி—Atti.

**வே - பெ.—அதம், அதவு, உதும்பரம், கோளி, சுப்பிரதஷ்டம்.**

**Ficus Glomerata, Roxb.**

**or**

**(Ficus Racemosa, wall).**

**Eng.—Country fig.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Atti** అత్తి. / **Mēḍi** మేడి. | **Arab** | **Jammaiz.** * جميض / **Tinul-Aḥmar.** * تين الاحمر |
| **Mal.** | **Atti** അത്തി. | **Pers** | **Ṣamare-Pash-Shah.** * ثمرباشاه / **Anjire-Aḥmar.** * انجير احمر |
| **Kan.** | **Atti** ಅತ್ತಿ. | | |
| **Sans.** | **Udumbara.** उदुम्बरः. | **Urd.** | **Gular.** * گلير |

இது மரவகுப்பைச் சேர்ந்தது. இந்தியாவில் எங்கும் பயிராகிறது. மரத்தின் மேற்பட்டை வெளுத்தும், பிளவுபட்டும், சுரசுரப்பாயுமிருக்கும். அடி மரமுதல் உச்சிக்கிளைகள்மட்டும் மரத்தையொட்டிக் காய்காய்க்கும். இதன் பூவைக் காண்பது மிக அரிது. இதனாலேயே நீண்ட காலஞ் சென்று காணப்பட்ட நேசனை நோக்கி "யான் உன்னை அத்திப்பூத்தது போலக் கண்டேன்" என்னும் வழக்கிருக்கிறது. இதன் காய் உருண்டையாயும், பச்சை நிறமாயும், வழுவழுப்பாயும், மேல்பாகம் மினுமினுப்புடன் பட்டுபோன்ற மெல்லிய சுணையுடனுமிருக்கும். மேலும் காயின் அடிப்புறத்தில் சிறிது குவிழ்ந்து, மத்தியில் ஒரு சிறு துவாரமும், அதைச் சுற்றி செந்நிறக்கோடுமிருக்கும். பழுத்தவுடன் செங்கல் நிறமாக மாறும்; அதனுள் சிறு விதைகளும், பூச்சிகளும் அடங்கியிருக்கும்.

தென் இந்தியாவில் இதன் பிஞ்சையும் காயையும், சமைத்து உண்பது வழக்கம். மருந்துண்ணுங்காலங்களில் இதைப் பத்திய பதார்த்தமாக உபயோகிப்பதுமுண்டு.

**ப - உ.**—பிஞ்சு, காய், பழம், பால், பட்டை, மது.

### பிஞ்சு.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—துவர்ப்புடைய அத்திப்பிஞ்சு மூலவாயு, மூலக்கிராணி, இரத்த மூலம், வயிற்றுக்கடுப்பு ஆகிய இவைகளைப் போக்கும்.

மூலக்கி ராணியறும் மூலவிரத் தந்தீரும்
சாலக் கடுப்புந் தரிக்குமோ!—மாலரவத்
துத்திப் படவல்குற் றேகாய்! துவர்ப்பையுறும்
அத்திச் சிறுபிஞ்சு ருந்து. (அ.கு.)

**(வ - கு.).**—சமைத்துண்ண மேற்கண்ட பிணிகளைப் போக்கும்.

அடியிற்கண்டபடி கஷாயஞ் செய்து உட்கொள்ள வயிற்றுக் கடுப்பு நீங்கும்.

[1] ஆனைக் கன்றி லொருபிடியு [2] மரையன் விரோதி யிளம்பிஞ்சும்
[3] கானக் குதிரைப் புறத்தோலுங் [4] காலிற் பொடியை மாற்றினதும்
[5] தானைக் கொன்றான் சாறிட்டுத் தயவா யரைத்து கொள்வீரேல்
மானைப் பொருதும் விழியாளே! [6] வடுகுந் தமிழுங் குணமாமே. (தே.)

### காய்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—பிரமேகம், வாதநோய், சூலை, சரீரவெப்பு, புண் (விரணம்) ஆகிய இவைகள் போம். மலங்கழியும்.

அத்திக்காய் தன்னை அருந்தினால் ஆரணங்கே!
எத்திக்கும் மேகம் இருப்பதுண்டோ?—சத்திக்கும்
வாதம் அகலும் மலங்கழியும் சூலையொடு
மீதனலும் புண்ணும்போம் விள். (அ.கு.)

**(வ - கு.).**—இதையும் பிஞ்சைப்போல சமைத்துண்ண மேற்கண்ட நோய்கள் தணியும். மலங்கழியும்.

### பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குருதிப்பெருக்கி - ரத்தவர்த்தநி - (Improves blood) Cordial.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணம்.**—இரத்தத்தை விருத்தி செய்யும், மலத்தைக் கழிக்கும்.

---

(1) அத்திப் பிஞ்சு (2) கோவைப் பிஞ்சு, (3) மாம்பட்டை, (4) சிறு செருப்படை, (5) வாழைப்பூச் சாறு, (6) வயிற்றுக் கடுப்பு.

**வ - கு.**—பழத்தை மணப்பாகு செய்து அல்லது உலர்த்திச் சூரணஞ் செய்து உட்கொள்ள, மலபந்தம், மது நீரிலுள்ள மது, நாவரட்சி, உடல் வெதும்பல் இவைகள் நீங்கும். இரத்தம் விருத்தியாகும்.

## பால்.

**சுவை.**—துவர்ப்பு, சிறு இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—பித்தகோபம், நீரிழிவு, சூலை, இரத்தமூத்திரக்கிரிச்சரம் ஆகிய இவைகளைப் போக்கும்.

காரமோ டட்டினமாங் காதுகின்ற பித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ் - சேருங்
கிரிச்சரத்தைப் போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சருமப் பாலதனை வாங்கு. (அ.கு.)

மேலும், இரத்தபேதி, பெரும்பாடு, வெள்ளை, மதுமேகம், தாதுக் குறைவு, இவைகட்கும் வழங்கப்படுகிறது.

**வ - கு.**—வெண்ணெய் அல்லது சீனியுடன் கூட்டிக்கொடுக்க, மேற் குறிப்பிட்ட பிணிகள் சாந்தமடையும்.

மதுமேகத்தாற் பிறந்த பிளவை, கீல்வாதம், மூட்டுவீக்கம், இவைகட்கு இப்பாலைப் பற்றிட்டுவர, நாளுக்குநாள் நன்மைதரும்.

## பட்டை.

**சுவை.**— துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—ஆசனக்கடுப்பு, உதிரப்போக்கு, சீதரத்தபேதி, நாற்றமுள்ள புண்கள், பிரமேகம் ஆகிய இவைகளைப் போக்கும்.

வீறு கடுப்பிரத்தம் வெண்சீத ரத்தமொடு
நாறுவிர ணங்களெலாம் நாடாவாம்—கூறுங்கால்
அத்திதரு மேகம்போம் ஆயிழையே ! எஞ்ஞான்றும்
அத்திப்பாற் பட்டைக் கறி. (அ.கு.)

**வ - கு.—அத்திப்பட்டைக்குடிநீர் :** - பட்டையை விதிப்படிக் குடிநீர் செய்து கொடுத்துக் கொண்டுவர, ஆசனக்கடுப்பு முதலிய மேற்கண்ட நோய்கள் விலகும். இதைக் கொண்டு கழுவிவர, நாற்றமுள்ள புண்கள் ஆறிப் போம்.

அத்திப்பட்டையைப் பசுவின் மோர்விட்டு இடித்துப் பிழிந்த இரசத்தில் தினம் ஒன்றுக்கு இரண்டு மூன்று முறை, அரை முதல் ஒரு ஆழாக்கு வீதம் கொடுக்க, பெரும்பாடு நிற்கும்.

## மது.

**சுவை.**—(அற்ப) இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.

**குணம்.**—மரவேரிலிருந்து இறங்கும் மதுவில் (கள்ளில்) சீனியேனும், பேயன் வாழைக்கனியேனுங் கூட்டி நாடோறும் சூரிய உதயத்திற் கொள்ள, அத்திமேகம், உட்சூடு, பித்தமயக்கம், தாகம் முதலியவைகள் தணியும்.

அத்திமே கஞ்சூ டதிமயக்கந் தாகமும்போம்
அத்திமர வேரிலுண் டாமதுவில்—நித்தியமுஞ்
சீனியே னும்பேயன் செங்கனியே னுங்கலந்தே
பானுவுத யங்குடித்துப் பார். (அ.கு.)

## அந்தரத்தாமரை—Antaratāmarai.

வே - பெ.—ஆகாசத்தாமரை.

Pistia Stratiotes—Linn.

Eng.—The Wester - lettuce (Tropical Duckweed).

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Anthar-tamara | అంతర్తామర. | Kan. | Anthar-gange | ಅಂತರಗಂಗೆ. |
| | Agasa-tamara | ఆకాశతామర. | Sans. | Kumbhika | कुम्भिकम्. |
| | | | | Vari-parni. | वारिपर्णी |
| Mal: | Kodda-pail | കൊട്ട പായൽ | Hind. | Jal-Kunthi | جل کنبھی * |
| | Akāsa-tāmra. | ആകാശത്താമര. | | | |

*இது நீர்ப் பாங்குள்ள குளம், குட்டை, ஓடை முதலிய நீர் பரப்பில் மிதக்குஞ் செடி.*

ப - உ.—*இலே, வேர்.*

**சுவை.**—*கைப்பு,* **வீரியம்** - *வெப்பம்,* **பிரிவு** - *கார்ப்பு*

**செய்கை.**
- *இலே :—குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி* - **Refrigerant.**
- *உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி* - **Demulcent.**
- *மலமிளக்கி - லகுவ்ரேசநி* - **Laxative.**
- *வேர் :—வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி* - **Emollient.**

**குணம்.**—*அழுகிரந்தி, குட்டம், கரப்பான், மார்புக்குள் கட்டுகின்ற கிருமிக்கூடு, ஆகிய இவைகள் போம்.*

*மேலும், நீர்சுருக்கு, மூலம், சீதபேதி, பொடி அல்லது வரட்டிருமல், தாபிதம் இவைகளும் இதனால் நீங்கும்.*

*அழுகிரந்தி குட்டம் அடர்ந்த கரப்பான்*
*புழுவுறுமக் கூடுமுதற் போகும்—அழகாரும்*
*இந்திரநீ லக்கருங்கண் ஏந்திழையே ! எப்போதும்*
*அந்தரத் தாமரையா லாய்.* (அ.கு.)

*இலேயைச் சாறுபிழிந்து சுரசஞ் செய்து தெளிவிறுத்து* ⅛ *முதல்* ¼ *ஆழாக்கு வீதம் (தேனும் சிறிது கலந்து) கொடுக்க, குணத்தின் கீழ்கண்ட பிணிகள் தீரும்.*

*இலேயையரைத்து, அடிதள்ளிப்போதல், மூலம், வித்திருதி, தாபிதம் இவைகளுக்குக் கட்டலாம்.*

*இலேயைக் காடிநீரில் வேகவைத்து நீரைப் பிழிந்துவிட்டு, திப்பியை, அழுகிரந்தி, குட்டம், கரப்பான், இவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.*

*அரிசி, தேங்காய்ப்பால், அந்தரத்தாமரையிலே இவைகளை ஒன்றுகூட்டிச் சமைத்துச் சீதபேதியில் கொடுக்கலாம்.*

*இலேயின் சுரசத்துடன் பந்நீரும், சருக்கரையுங்கூட்டி இருமல், சுவாசம், இவைகட்குக் கொடுக்கச் சாந்தமாகும்.*

*மூட்டுப்பூச்சுகள் நிரம்பிய இடங்களில் இப்பூண்டை வைக்க, இது வாடுந் தருவாயில் உண்டாகும் ஓர்வித வெகட்டல் மணத்தால் ஷெ பூச்சுகள் மயங்கி இறக்கும்.*

*இப்பூண்டின் சமூலத்தைச் சுட்டுச் சாம்பலாக்கி, எச்சிற்றழும்பு, மண்டை கரப்பான் இவைகளுக்குப் பூச அவைகள் நீங்கும்.*

## அந்திமல்லி—Andimalli.

வே-பெ. அந்திமந்தாரை, பத்திராக்ஷி.
Mirabilis Jalapa.
Eng. Four-o' clock flower.

Tel. Chandra Kanta చంద్ర కాంత.
Mal. Anti-malari. അന്തിമലരി. Anti-mantáram അന്തിമന്താരം.
Kan. Madhyana Mallige ಮಧ್ಯಾಹ್ನಮಲ್ಲಿಗೆ.
Sans. Sandhya-raga सन्ध्या रागः.
Pers. & Hind. Gulê-aabbás * گل عباس
Duk. Gulá-básh * گلاباش

இது, இந்தியாவில் தோட்டங்களில் அலங்காரமாயிருக்க பயிரிடப்படுகிறது. இது மாலை 3, 4 மணிக்குப் பிறகுதான் மலரும். இதன் பூ, வெண்மை, செம்மை, மஞ்சள், கலப்பு நிறமுள்ளதாயும் கண்களைக் கவரக்கூடியதாயுமிருக்கும்.

ப - உ.—இலை - கிழங்கு.

### இலை.

சுவை.—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை. வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.

### கிழங்கு.

சுவை.—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை. மலமிளக்கி - மலகாரி - Laxative.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

### இலை.

**குணம், வழக்கு.**—கட்டிகளைப் பழுக்கவைக்க இதன் இலையை வதக்கி ஆமணக்கு நெய் தடவி, கட்டிகள் மீது போடலாம்.

வெப்பத்தாலுண்டாகும் சொறி, சிரங்குகள் நீங்க, இதன் இலை ரசத்தைத் தடவலாம்.

காயங்களையாற்ற இலையை யரைத்துப் பூசலாம்.

### கிழங்கு.

மலத்தை இளக்கித்தள்ள, இதன் கிழங்கைத் தக்க அளவெடுத்துப் பால் விட்டரைத்துப் பாலிற் கலக்கிக் கொடுக்கலாம்.

பிளவைகள் குணப்பட, இதைப் புற்கை செய்து உபயோகிக்கலாம்.

நெய்விட்டு வறுத்துண்ண, உடல் பலக்கும்.

அடிப்பட்டுண்டான வீக்கங்களுக்குக் கிழங்கை நீர் விட்டரைத்துப் பற்றிடலாம்.

---

## அபினி—Abini.

கசகசாப்பால்.
Opium.
Eng. Poppy.

Tel. Abhini అభిని. Nalla-mandu నల్లమందు.
Mal. Kasha-Kasha-Karappa. കറുപ്പ്. Apini അപിനി.
Kan. Aphímu ಅಫೀಮು.
Sans. Ahípehnam अहिफेनम्.
Arab. Afyún * افیون
Pers. Mahánul * مهانل ; Tiryák * تریاك
Hind. Afyún * افیون
Duk. Afim * افیم

இது, கசகசாக்காயிலிருந்து எடுக்கும் உறைந்த பால்.

காய் பழுக்காததற்கு முன்பும், புட்ப இதழ்கள் உதிர்ந்து ஏழுநாள் சென்ற பின்பும், இரண்டு மூன்று நீண்ட வட்டமான கீற்றுகளை மேலோடு கீற, அதிலிருந்து பால் வடியும். ஆழமாய்க் கீறினால் பால் வடியாது. பகல் வெயிலிற் கீறினால், கீறின வாய்வழியில் பால் உறைந்து, கட்டிக் கொள்வதால் பால் ஏராளமாய் வடியாது. ஆகையால், மாலைப்பொழுதில் கீற, இரா முழுதும் பால் வடிந்து உறைந்திருக்கும். காலையில் இதைச் சுறண்டி எடுத்துக்கொள்ளக்கூடும். இவ்விதம் காயை இரண்டு மூன்று முறைக்கீறிப் பால் எடுக்கலாம். எடுத்தபின் காற்று, வெயிலாதிகளால் வறட்சியடையுமுன் இலைகளால் மூடிவைக்கவேண்டும்.

ஸ்மர்னு (**Smyrna**), துருக்கி (**Turkey**) இவ்விடங்களில் உற்பத்தியாவது தான் பெரும்பாலும் இங்கிலாந்தில் உபயோகிக்கப்படுகிறது.

இந்தியாவில் பாட்னு (**Patna**); மால்வா (**Malwa**)-வில் உற்பத்தியாவதை உபயோகிப்பதுடன், இதர தேசங்களிலிருந்து வருவதையும் உபயோகிக்கிறார்கள். அபினியின் குணம் தேசவளப்பத்தைப் பற்றியேயிருப்பதால் துருக்கி தேசத்தது மிகச் சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. இந்தியாவில் பயிராவதில் மால்வாவில் விளைவது பாட்னுவில் விளைவதைப் பார்க்கிலும் சிறந்தது.

புதுச் சரக்கு, பிசுபிசுப்பாயும், ஊதா நிறமாயும் ஓர்வித வாசனையோடிருக்கும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துயரடக்கி - வேதநாசாந்தநி - Analgesic or Anodyne.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- தாபமகற்றி - உக்ரரோகசமநகாரி - Anti-phologistic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- குருதிப்போக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - Hæmostatic (Styptic).
- உறக்கமுண்டாக்கி - நித்ராகாரி - Hypnotic, Narcotic - மூர்ச்சையுண்டாக்கி - Soporific - உறக்கமெழுப்பி.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—குன்மம், வாதப்பிணிகள், காது நோய், பல்வலி, பேதி (அதிசாரம்), மந்தம், எலும்பைப்பற்றிய நோய்கள், நாசி ரோகங்கள் ஆகிய இவைகள் போம். சாதிலிங்க நிறமுள்ள இரத்தச் சுத்தியும், உடலுக்கு வன்மையும் உண்டாகும்.

> நல்லஅபி னிக்குணத்தை நாடறியும் நாம்புகல்வ
> தல்லகுன்மம் வாதம் அருஞ்செவிநோய்—பல்லின்வலி
> பேதிமந்தம் அத்திநோய் பீநசம்போம் வன்மைஉண்டாம்
> சாதியுதி ரச்சுத்தி தான். (அ.கு.)

**குறிப்பு.**—குணத்தை விரித்துரைக்க அடியிற் குறிப்பிட்ட பிணிகளுக்கு இது, தற்காலம் உபயோகிக்கப்பட்டுவருகிறது.—அசீரணபேதி, அதிசார பேதி, சீதபேதி, வாந்திபேதி (ஊழி), அக்கினிமந்தம், வாந்தி, குன்மம், சூதகவயிற்றுவலி, உதரசூலை, இரத்தப்பெருக்கு, பெரும்பாடு, பாண்டு, அதிமூத்திரம், மதுமேகம், பல்வலி, காதுநோய், கண்ணோய், அண்டவாதம், கீல்வாதம், இடுப்புவலி (சகனுவர்த்தவாதம்), கால் குடைச்சல், எலும்பைப் பற்றிய நோய்க்கூட்டம், சந்நிபாத ரோகங்களில் காணும்வலி, இசிவு, முதலிய வாதப்பிணிகள், இருமல், இரைப்பு (சுவாசம்), மார்புச்சளி, சுரம், அம்மையில் காணும் கொப்புளப்புண், விரணம், இருதயத்தளர்ச்சி (இருதயபலஹீனம்), நித்திரைக்கெடுதி, அபஸ்மாரம், உன்மாதம், மனக்கலக்கம், சித்தவிப்பிரமை ஆகிய இவைகளாம்.

இதை நோயாளிக்கு வழங்குமுன் அடியிற்கண்டபடிச் சுத்தி செய்துகொள்ளுதல் அவசியமாகும்.

சுமார் 15 பலம் அபினிக்கு 15 ஆழாக்கு தீநீர் : தீநீரை மூன்று பங்கு செய்து, ஒரு பங்கு நீராகிய 5 ஆழாக்கு நீரில் அபினியை நன்ருய்க் கரைத்து, ஒரு நாள் முற்றும் (24 மணி நேரம்) ஊறிய பின் வடிக்கட்டி, திப்பியில் இரண்டாவது பங்குநீரைக் கொட்டிக் கரைத்து ஷை யாகவே செய்து, எஞ்சி நிற்கும் திப்பியை மூன்ருவது பங்குநீரீற் சேர்த்து, ஷை யாகச் செய்து வடித்த நீர் யாவற்றையும் ஒன்ருகக்கூட்டி, நீர்யந்திரத்தில் காய்ச்சி மெழுகுபதத்தில் எடுத்துக் கல்கார்க்குப் புட்டியில் சேமித்து வைத்துக்கொண்டு, நோயுக்கும், நோயாளிக்குந்தகுந்த அளவில் வழங்கவேண்டும்.

சுத்தி செய்யாமலும், அதிக அளவிலும் இதைச் செலுத்திஞல், உயிருக்குச் சேதமுண்டாக்கும் ; உடலே விடமிக்கும். இதஞலேயே இராஜாங்கத்தாரின் அதிகாரம் பெற்ற கடைக்காரர்கள் மாத்திரமே இதை விற்கக்கூடு மென்கிற விதியும் ஏற்பட்டிருக்கிறது.

அபினியை உபயோகிக்குமுன் கவனிக்கவேண்டியவையாவன;—

(1) சில நோயாளிகளுக்கு அபினி பொருந்தாமல் துர்க்குணத்தை விளைவிக்கும். இத்தகையார்க்குச் சிறிய அளவிற் கொடுத்தாலும் நாடிதீவரம், தலை பாரம் அல்லது வலி, வெப்பம், அடிக்கடி வாய்குமட்டலுடன் வாந்தி, குடற் சுருக்கம், வியர்வையின்மை, சருமவரட்சி, நித்திரை யாகியவை யுண்டாகும்.

(2) சிறுவர்கட்கும் பாலர்கட்கும் அபினியால் மரணம் நேரிடுகிறதென்பதை, பல வைத்தியர்கள் அநுபவத்தில் கண்டறிந்திருப்பதால், இதை முற்றுமே விலக்குவது அவசியமாகும்.

(3) கருப்பவதி, இதை மிகுகுறைந்த அளவில் நாளடைவில் உட்கொண்டால் சுகப்பிரசவமும், பிரசவ நோயில் அபினியைக் கொடுக்க, திரும்புகிற பிண்டத்தை வேதனையின்றி வெளிப்படுத்து மென்றும், கொள்ளுகிற கொள்கையில் நம்பிக்கைவைக்க இடமில்லாமையால், இதைக் கொடாமலிருத்தலே நன்மையாகும்.

(4) உள்ளுக்குக் கொள்ள விருப்பமில்லாதவர்கட்கு, வஸ்தி மார்க்கமாய்ச் செலுத்துவதால் பலனுண்டாகுமென்கிற நிச்சய மேற்பட்ட காலத்தில், தக்க அளவு செலுத்தலாம்.

(5) முதிர்ந்த வயதுடையவர்கட்கு, கொடுக்கவேண்டிய அளவிற்கு மிஞ்சிஞல், சுவாசம், இத்துடன் குறட்டை, கண்ணிருளல், மந்தபுத்தி, உணர்ச்சியின்மை, நாடிமெலிந்து துடிப்புடன் நடத்தல், கண்தாரை சுருங்கல் ஆகிய துர்க்குணங்கள் நேரிடுமாகையால், மிகவும் கவனித்து, அளவுபடுத்தி உபயோகிக்க வேண்டும்.

(6) அபினியால் தீங்குண்டாகு மென்று கணிக்கப்பட்ட நோயாளிகளுக்கு இதை அறவே நீக்கி, வேறு மருந்துகளை வழங்கவேண்டும்.

## சாதிக்காய் மாத்திரை.

**வ - கு.**—அசீரணபேதி, அதிசாரம், சீதபேதி, கிராணி, இவைகட்குச் சாதிக்காயைத் துளைத்து அதற்குள் ஒரு குன்றி அபினியை யடைத்து, துளைவாய்க்குச் சாதிக்காய்த் தூளையிட்டு அடைத்து, ஒரு நீண்ட கதிரில் காயைக் குத்திக்கொண்டு தேனிற்ருேய்த்து நெய்விளக்கில், காய் வேகும்வரையில் சுட்டு, கல்வத்திலிட்டு அரைத்து, மெழுகு பதம் வருஞ் சமயத்தில் சிறு பயறளவு மாத்திரை செய்துகொண்டு, ஒருநாளைக்கு, 2, 3 முறை கொடுக்கத் தீரும்.

## சாதிக்காய்ச் சூரணம்.

சாதிக்காயை, சோறு கொதிக்கும்போது அதிற் செருகி வேகவைத்தெடுத்து உலர்த்தியதும், அபினியும், சம வெடை யெடுத்துச் சூரணஞ் செய்து, அதில் 1, 2 குன்றியளவெடுத்து $\frac{1}{4}$ வராகனெடை கற்கண்டுப் பொடி அல்லது தேனுடன் கலந்து, நாள் ஒன்றுக்கு 2, 3 முறை கொடுக்க, கிராணி பேதி நிற்கும்.

### கபாட சூரணம்.

அபினி 1½, மிளகுப்பொடி 2, சுக்குத்தூள் 5, சீரகத்தூள் 6, பாதம் பிசின் ½ பங்காக ஒன்று கூட்டிக் கலக்க அரைத்து 1, 2, குன்றி கொடுக்க, பேதி, சூலை, நித்திரையின்மை, இசிவு தீரும்.

### கபாட லேகியம்.

மேற்கூறிய கபாடசூரணம் 3 வராகனெடை, வெல்லப்பாகு 10 வராகனெடை சேர்த்து இலேகியங்கிண்டி 2½ முதல் 10 குன்றிவரை ஒருநாளைக்கு 2, 3 முறை உபயோகிக்க, வயிறுபொருமி யுண்டாகும் பேதி, உடல்வலி நீங்கும்.

### கபாடவடகம்.

அபினி 1, சுக்கு 2, சாதிக்காய் 2, சீரகம் 2, அதிவிடயம் 1, பேரீந்து 2, பங்கு எடுத்து, எலுமிச்சம் பழரசம் விட்டு மைபோலரைத்துக் கடலையளவு மாத்திரை செய்துலர்த்தி 1, 2 மாத்திரை தேனில் கொடுக்க, பேதி கட்டும்.

### கட்டுவாதி குளிகை.

(சிறுவர்கட்கு)

சுத்தி செய்த சாதிக்காயைத் துளைத்து, அதில் அபினி 3 குன்றி எடை செலுத்தி, சாதிக்காய்த்தூளால் துளைத்த வாயையடைத்து, மஞ்சளையரைத்துக் காய்க்குக் கவசமிட்டு உலர்த்தி, அதற்கு மேல் சீலைமண் செய்துலர்த்தி, 1, 1½ வரட்டியிற் புடமிட்டெடுத்துக் கவசத்தை நீக்கி, காய்க்குச் சமவெடை சுத்தி செய்த பேரீச்சம்பழத்தைச் சேர்த்து முலைப்பால் விட்டரைத்து, பச்சைப் பயறு பிரமாணம் மாத்திரையுருட்டி யுலர்த்தி, ஒரு மாத்திரை தேனிலுரைத்துக் கொடுக்க, பேதி கட்டும்.

## அபினி எண்ணெய்.

ஒரு உச்சிக்கரண்டி நல்லெண்ணெயில், ஒரு பயறு அளவு அபினி கூட்டி எரித்து 2 துளி காதில்விட, காது நோய், சீவடிதல் நிற்கும்.

(வேறு)

ஒரு உச்சிக்கரண்டி நல்லெண்ணெயில், 1 குன்றியளவு அபினி, கத்தூரிப்பட்டை வேர்பட்டை ஒரு சிறியதுண்டு, சுக்கு ஒரு சிறியதுண்டு சேர்த்து, எரித்து வடித்து, காதில் 1, 2 துளி விட்டுவர, காதுநோய், காதுகுத்தல், சீவடிதல் நீங்கும்.

### ஓமத்துகள்.

ஓமம் 1 பலம், கற்பூரம் ½ வராகனெடை, சுட்டவாதுமைக் கொட்டையோட்டுக்கரி பலம் ½, அபினி குன்றி ஒன்று, சேர்த்துப் பொடிசெய்து பல் தேய்த்துவர, பல்வலி, ஈறுகட்டல், வாய் நாற்றம் போம்.

### கண்ணோயிற்கு வேது.

அபினியை வெந்நீர்விட்டரைத்து, வெந்நீரில் கலந்து, ஆவியெழும் படிக் காய்ச்சி, வேது பிடிக்கக் கண்ணோய் தீரும். அல்லது ஷை நீரைக் குளிர ஆறவிட்டு கண்களைக் கழுவிவந்தாலும், கண்ணோய் தீரும்.

### புற்கை.

வேதனையுடன்கூடிய வீக்கம், கட்டி, நீர்ப்பைதாபிதம் இவைகட்கு, ஊமத்தையிலை, தராயிலை, வகைக்கு ஒரு பலம், சடாமாஞ்சில், மஞ்சள், வகைக்குக் கால் பலம், அபினி 2, 3 குன்றி சேர்த்தரைத்துப் போதுமான அளவு நல்லெண்ணெய் விட்டுக் கிண்டி, புற்கை செய்து, நோயுள்ள யிடத்தில் பூசிவர, மிக்க நன்மையைத்தரக் கண்டுள்ளோம்.

### மேல்பூச்சு தைலம்.

ஒரு வராகனெடை அபினியைக் கல்வத்திலிட்டு, நல்லெண்ணெய் பலம் 15 விட்டரைத்து, ஒன்றுபடக் கலக்கி, கற்பூரம் ஒருவராகனெடை பொடித்துச் சேர்த்துத் தடவிவர, கீல்வாதம், இடுப்புவலி, கால் குடைச்சல், எலும்பைப் பற்றிய நோய்கள், சந்நிபாதத்தில் காணும் இசிவுவலி, சூதகவயிற்றுவலி, முதலிய நோய்கள் தணியும்.

### மூலத்திற்கு.

ஆத்தியிலை, அரிசிமா, அபினி தக்க அளவில் சேர்த்து நீர் விட்டரைத்துக் களி கிளறிக்கட்ட, மூலவலி வீக்கம் குணமாகும்.

**குறிப்பு.**—பற்பல யோகங்கள் அபினியைக்கொண்டு செய்வதுண்டு. இவைகளை இனி வெளிப்படும் சித்தர் உறை விளக்கத்தில் காண்க.

அபினி விடமித்துண்டாகும் துர்க்குணங்களைப் போக்க, நஞ்சு நூலில் கூறிய விதிப்படியநுசரிக்க, விடமித்த குணங்கள் நீங்கும்.

---

## அமுக்கிராக்கிழங்கு—Amukkurák–Kizhangu.

**வே - பெ.—அமுக்கிரி, அமுக்குரவு, அமுக்குரா, அமுக்கிருங்கிழங்கு, அசுவகந்தம், அசுவகந்தி, அசுவம், இருளிச்செவி, கிடிச்செவி, வராககற்ணி.**

Withania Somnifera.

Withania Somnifera, Dunal.

Eng.—Winter cherry.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Pennèru-gaḍḍa పెన్నేరుగడ్డ. | | Sans. | Aswagandha अश्वगन्धा. |
| Mal. | Amukkuram അമുക്കുരം. | | Arb. | Habbul Kàknaje-Hindi حب الكاكنج هندی * |
| Kan. | Sogade-beru ಸೋಗದೆ ಬೇರು. / ಅಶ್ವಗಂಧಿ. | | Pers. | Tukhma Kaknaje-Hindi تخم كاكنج هندی * |
| | | | Urdu. | Asgandh اسگند * |

இது, இந்தியாவில் மேட்டுப்பாங்கான இடங்களிலும், பெலுச்சிஸ்தானத்திலும் பயிராகும் சிறு செடி. கீழ் வங்காளத்தில் கிடைப்பது அரிது. இச்செடி சாம்பல் நிறமுள்ளது. காய் தக்காளிக் காயைப்போல் தோலால் மூடப்பட்டு உள்ளே காயிருக்கும். பழுத்தால் பழம் செந்நிறமாயிருக்கும்.

**ப - உ.**—இலை, விதை, வேர் (கிழங்கு).

**சுவை.**—(யாவும்) கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- இலை.—வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- காய்.—சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- கிழங்கு.—உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
  - காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
  - வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
  - சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
  - உரமாக்கி - பலகாரி - Tonic.
  - உறக்கமுண்டாக்கி - நித்ராகாரி - Hypnotic.
  - தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குணம்.**—கயம், வாததசூலை, வாதரோகம், கரப்பான், பாண்டு, சுரம், வீக்கம், ஆயாசம் இவைகளைப் போக்கும் ; தீபனத்தையுண்டாக்கும்.

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகயம் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு - விஞ்சி
முசுவுறு தோடமும்போ மோகம்அன லுண்டாம்
அசுவகந் திக்கென் றறி. (அ.கு.)

### மேல்பூச்சு.

அமுக்கிராங்கிழங்கை பச்சையாய்க் கொண்டுவந்து, பசுவின் நீர் விட்டரைத்துக் கொதிக்கவைத்து, கிரந்தி, கண்டமாலை, வாதவீக்கம், இடுப்புவலி இவைகளின்மீது பற்றிட, அவைகள் விலகும்.

சுக்குடன் சேர்த்து வெந்நீர்விட்டரைத்து வீக்கங்களுக்குப் போட, கரையும்.

கிழங்கு அல்லது இலையை அரைத்து மேகக்கட்டி, நோயுடன்கூடிய வீக்கம், புண் இவைகட்குப் பூசலாம்.

### கஷாயம்.

சற்றேறக்குறைய, கால் முதல் அரைபலம் எடையுள்ள இலையை விதிப்படிக் குடிநீர் செய்து கொடுக்கச் சுரந்தணியும். அல்லது ஊறல் கஷாயஞ் செய்துங் கொடுக்கலாம்.

### சூரணம்.

(1) கிழங்கைப் பாலில் வேகவைத்து, அலம்பியுலர்த்திச் சூரணஞ் செய்து, ஒருவேளைக்கு அரைமுதல் ஒரு வராகனெடை வரை, தேனிற் கலந்து கொடுக்க, கபம், வாதம் இவற்றால் பிறந்த நோய்கள் விலகும். (கயம், வாதசூலை, வீக்கம், பசிமந்தம், அதிதூலம் முதலியன).

நெய்யுடன் கலந்து கொடுக்க, ஆயாசத்தைப் போக்கும். உடற்குப்பலந் தரும், சுக்கிலத்தைப் பெருக்கும்.

(2) அமுக்கிராக் கிழங்குச் சூரணம் 1 பங்கு, கற்கண்டு 3 பங்கு சேர்த்து, வேளைக்கு ஒருவராகனெடை வீதம் காலை மாலை உட்கொண்டு, அரை, ஒரு ஆழாக்கு பசுவின் பால் சாப்பிட்டுவர, சுக்கிலநட்டம், நரம்புத் தளர்ச்சி ஆகிய இவைகள் நீங்கும் ; உடல் வன்மை பெறும் , வசீகரமுண்டாகும்.

அசுவகந்தியைக் கொண்டு செய்யப்படும் சூரணம், இலேகியம், தைலம் இவைகளைச் சித்தர் உரை விளக்கத்தில் காண்க.

---

## அம்மான்பச்சரிசி (சித்திரப்பாலாடை)—Ammán-pach-charisí.

**Euphorbia Pilulifera.**

**E. Hirta ; E. Parviflora.**

**Eng.—Australian asthma weed.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Reddivari Nanubalu | రెడ్డివారి నానుబాలు. | Kan. | Akki-gida | అక్కిగిడ. |
| Mal. | Cherucheera | ചെറുചീര. | Sans. | Kshirini | क्षीरिणी. |
| | Nilapala. | നിലപ്പാല | Hind. | Dudhi | * دودھی |

இது, சிறு கொடி வகுப்பைச் சேர்ந்தது எனினும், இச்சாதியில் சில, சிறு செடிவகையில் சேர்ந்துமிருக்கின்றன. இது வெளிகளில் ஏராளமாய்ப் பயிராகும் வருடாந்தரப் பயிர்களுள் ஒன்று ; வருடமுற்றும் பூக்கும்.

பூமியுடன் ஒட்டிப்படர்கின்ற வகுப்பில், **வெண்ணிறம்**, **செந்நிற**முள்ளதும், பூமிக்குமேல் சிறு பூண்டைப்போல் வளர்வதில், வெண்ணிறம் செந்நிறமுள்ளதும் உண்டு. இருப்பினும், சுவையிலும், செய்கையிலும், குணத்திலும் மிக்க ஒற்றுமையுண்டு.

**சுவை.**—துவர்ப்பும், இனிப்புமுள்ளது, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு

செய்கை.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

## அம்மான்பச்சரிசி.

**குணம்.**—எரிபுண், மலக்கட்டு, பிரமேகக் கசிவு, மேகத்தடிப்பு, நமைச்சல் இவைகளை நீக்கும்.

காந்தல் விரணமலக் கட்டுமே கந்தடிப்புச்
சேர்ந்த தினவிவைகள் தேசம்விட்டுப் - பேர்ந்தொன்றாய்
ஓடுமம்மான் பச்சரிசிக் குண்மை இனத்துடனே
கூடுமம்மா ஞைத்தகண்ணாய்! கூறு. (அ.கு.)

## சிவப்பு அம்மான்பச்சரிசி.

இது வாதப் பிரமேகத்தை நீக்கி சுக்கிலதாதுவை விருத்தி செய்யும். நிற்க, வெள்ளியை நீற்றும்.

அரத்தவம் மான்பச் சரியெனு மூலிக்
குரத்த வண்மேக மொழியும் - கரத்ததொரு
விந்துவு முண்டாகும் வெள்ளி பொடியாம்
இந்துவினும் வாண்முகத்தாய் ! எண். (அ.கு.)

சிவப்பு அம்மான்பச்சரிசியைச் சமூலம் உலர்த்திச் சூரணஞ்செய்து, கற்கண்டுப்பொடி, சமபாகம் சேர்த்து வேளைக்குக் கால் பலம் உட்கொண்டு, உடனே பசுவின்பாலைச் சாப்பிட, மேற்கண்ட நோய் நீங்கி, சுக்கிலவிருத்தியுண்டாகும்.

## சிறு அம்மான்பச்சரிசி.

இதனால் மேகவெப்பம் தீரும். இது பசுவின்பால் குணத்திற்கு ஒப்பாகக் கூறலாம்.

மேற்கூறிய அம்மான் பச்சரிசி இலைகளை, அரைக்காமற் தின்றாலும், அரைத்துப் பால் அல்லது தயிரில் கரைத்துக் காலையில் உண்டுவந்தாலும், மேற்குறித்த பிணிகள் தீரும்.

இவைகளின் காயைத் துவையல் செய்து சாப்பிட, மலபந்தம் ஒழியும்.

இதன் பாலை, விரணங்களுக்கும், உதடு, நா வெடிப்புகளுக்குந் தடவிவர, புண்ணாறும். நகச்சுற்றுக்குந் தடவிவரலாம்.

சிறு அம்மான்பச்சரிசிப் பாலை இலிங்கத்திற்குத் தடவித் தடவியுலர்த்தி, பிறகு பாலால் சுருக்கிட, இலிங்கம் வலியும், இது மேகப் பிணிக்கு இறைச்சரக்காகும்.

யாதுபுகல் வேனமுதா லங்கிகரு மெழுகாந்
தீதுபுரி மேகவெப்பந் தீருமினும் - ஓதுங்காற்
றேரம்மான் கீரமொக்குந் தின்னுதயஞ் செம்மைநிறச்
சீரம்மான் பச்சரிசிச் சீர். (அ.கு.)

---

## அம்மையார் கூந்தல்—Ammaiyárk-Kùndal.

**வே - பெ.—அவ்வை(ஔ)யார் கூந்தல், குதிரைவாலி, முதியார் கூந்தல், மிரியார் கூந்தல், சரண்.**

**Convolvulus Tridentatus.**

இது, தென் இந்தியாவில் சமவெளிகளில் தன்னிச்சையாய்ப் பயிராகிறது.

| | |
|---|---|
| Mal. Talanili. തലനിളി. | Hind. Gandhali. گندهالی * |
| Sans. Prasarini. प्रसारिणी. | |

ப - உ.—சமூலம்.

சுவை.—கைப்பு, வீரியம் - சீதம் - பிரிவு - கார்ப்பு.

செய்கை. { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

குணம்.—இதனுல் மூலக்கடுப்பு, அதிசாரம், சுரவேகத்தாலுண்டான நாவறட்சி, இடுப்புவாதம், பிரமேகம், இருமல், கட்டி, படுவன், நேத்திர மங்கல், கோழை, அக்கினிமந்தம், வாதகப தொந்தம், தினவு ஆகிய இவைகள் நீங்கும்.

கடுப்பு கழிச்சல் கனன்றசுர தாக
மிடுப்புவலி வாத மிவற்றோ—டடுப்ப
விதிரைவா வென்றழைக்கு மேகமும் போகும்
குதிரைவா லிக்குக் குலைந்து.

காசம் பருப்படுவன் கண்மயக்க மீளையொடு
வாசங் கமழ்குழலாய்! மாந்தமும்போம் - பேசத்
தரியாது வாதகபந் தானே சொறிபோம்
மிரியார்கூந் தற்கு விரைந்து. (அ.கு.)

முதியார்கூந்தலையரைத்து, இளநீரிற்கலக்கிக் குடிக்க, மாருச்சுரமும், திரிதோடமும் தீரும்.

பிரிந்த விளநீரிற் பின்முதியார்க் கூந்தல்
அறிந்ததனின் வேரை யரைத்துச் - சொரிந்துண்ண
மாருச் சுரமுடனே வாதபித்த சேத்துமமும்
கூருகப் போகுங் குளிர்ந்து. (தே.அந்.)

---

## அரசு—Arasu.

வே - பெ.—அஸ்வத்தம், அச்சுவத்தம், திருமரம், சுவலை, பேதி, பணை, கணவம், சராசனம், பிப்பிலம்.

**Ficus Religiosa, Linn.**

**Eng.—The Peepul tree ; Sacred fig.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ravichettu రావిచెట్టు. | Sans. | Aswatha अश्वत्थः. |
| Mal. | Areyal അരയാൽ. | Urd. | Peepul Paras پیپل پارس* |
| | Arasu അരശു. | Hind. | Pipol پیپل* |
| Kan. | Aswathamara ಅಶ್ವತ್ಥಮರ. / Pimpala ಪಿಂಪಲ. | Duk. | Anipeepul انی پیپل* |

இது, இந்தியாவில் எங்கும் சாதாரணமாய்ப் பயிராகிற பெருமரத்துள் ஒன்று. ஆனி முதல் ஆவணித்திங்கள் வரையில் புட்பிக்கும். இந்துக்களால், இம்மரம் தெய்வத்தன்மையுடையதென நம்பப்படுவதால், கோயில்களிலும் கோயில்களுக்கு அருகாமையிலும் வைத்துப் பயிராக்கப்படுகிறது.

ப - உ.—இலை, வித்து, பட்டை, வேர்.

சுவை.—துவர்ப்பும், கைப்புமுள்ளது, வீரியம் - சீதம், பிரிவு - மதுரம்.

செய்கை. { வித்து.—மலமிளக்கி - மலகாரி - Laxative (and cooling).
இலை, வேர், பட்டை,—துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

குணம்.—இலைக்கொழுந்து - தாதுவை விருத்தி செய்யும்; சுரத்தையும் முத்தோட கோபத்தையும் போக்கும்.

**வித்து.**—சுக்கில நோய், குரல்வறட்சி, விதாகம் இவற்றை நீக்கும்.
**மரப்பட்டை, வேர்ப்பட்டை** - புண்களை ஆற்றும்.

அரசம்வேர் மேல்விரணம் ஆற்றுமவ் வித்து
வெருவவரும் சுக்கிலநோய் வீட்டும்—குரல்வறள்வி
தாகமொழிக் குங்கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேகமுத்தோ டம்போக்கும் மெய். (அ.கு.)

இலைக் கொழுந்தைப் பாலில் அவித்து சருக்கரை சேர்த்துண்ண, சுரம், முப்பிணிக்கோபம் தணியும்; தாது விருத்தியடையும்.

வித்தைத் தக்க அளவில் சூரணஞ் செய்து உட்கொண்டுவர, மலச்சிக்கல், சுக்கில நோய், குரல் வறட்சி, விதாகம் தீரும். சீரணசக்தி அதிகரிக்கும்.

பட்டையை இடித்துப் பொடியாக்கிக் கருக்கிய சாம்பலில் கொஞ்ச மெடுத்து, நீரில் ஊறவைத்து வடிகட்டிக்கொடுக்க, விக்கல் சாந்தமாகும்.

பட்டைத் தூளில் கால் முதல் அரைப்பலமெடுத்துக் குடிநீர் செய்து கொடுக்கச் சொறி சிரங்குகள் குணமாகும் ; வெப்பகலும்.

பட்டையின் நுண்ணியதுகளை புண்ணின் மீது தூவிவர, புண் ஆறி வரும்.

ஐந்து துவர்ப்புப் பொருள்களில் அரசுமொன்று. ஆகையால் இவ் வைந்துப் பட்டைகளின் குடிநீர், வாய்ப்புண்ணுக்குக் கொப்புளிக்கும் நீராகவும், சீமேகத்தில் (வெள்ளையில்) நீர்த்தாரை வழியாய்ச் செலுத்திக் கழுவும் நீராகவும் உபயோகிக்கலாம்.

கீழ்க்கண்டத் தைலத்தைத் தடவிவர, சொறி, சிரங்குகள் குணமாகும்.

நன்னாரி வேர்ப்பட்டை, மஞ்சள், *பஞ்சவல்கம் (அத்தி, இத்தி, ஆல், அரசு, நாவல் இவைகளின் பட்டை) சமவெடையெடுத்துக் குடிநீர் விதிப்படி, சிறுக்கிய நீர் ஒருபடி, நல்லெண்ணெய் ஒருபடி, அதிமதுரம், சன்ன இலவங்கப்பட்டை, வெட்டிவேர், கோட்டம், சந்தனம் வகைக்கு, கால் பலம் எடுத்து, பசுவின்பால் விட்டரைத்து, மேற்படி குடிநீரிற் கலக்கி எரித்துப் பக்குவபாகத்தில் வடித்த தைலம்.

இம்மரத்தைக் குத்துவதினால் வடியும் பாலைப் பாதத்தில் காணும் பித்த வெடிப்புகளுக்குத் தடவிவரலாம்.

---

## அரத்தை—Arattai.

**Alpinia Chinensis.**

**Alpinia Galanga.**

**சிற்றரத்தை, Chittaratai, பேரரத்தை. Perarattai.**

**Eng. Galangal the lesser, Galangal the greater.**

| | |
|---|---|
| Tel- Sanna-rashtramu సన్న రాష్ట్రము. | Mal. Aratha അരത്ത. |
| Thumpa rashtramu దుంప రాష్ట్రము. | Kan. Rasmi ರಾಸ್ಮಿ. |
| | Sans. Rasna रास्ना. |
| | Urd. Khulanjan خولنجان * |

அரத்தையில் இருசாதியுண்டு. அவை (1) **சிற்றரத்தை,** (2) **பேரரத்தை.** இவைகள் இந்தியாவில் உஷ்ணபிரதேசங்களில் பயிராகும்.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.** வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.** பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**

இரு அரத்தையின் குணம்.

நெஞ்சுக்கோழை, ஈளை, இருமல், சீதளம், கரப்பான், மார்புநோய், மூலம், வீக்கம், தந்தநோய், தந்தமூலப்பிணி, வாத சோணிதம், தீச் சுரத்தாற் பிறந்த கபம் ஆகிய இவைகளைப் போக்கும். பசியைத்தரும்.

தொண்டையிற்கட் டுங்கபத்தைத் தூரத் துரத்திவிடும்
பண்டைச்சீ தத்தைப் பறக்கடிக்கும் - கெண்டைவிழி
மின்னே ! கரப்பனேவே ருக்கும் பசிகொடுக்கும்
சொன்னோம் அரத்தைச் சுகம். (அ.கு.)

மார்பை யடர்பிணிசு வாசகா சம்மூலம்
சோபைதட்டச் சூர்வாத சோணிதநோய் - தீபச்
சுரத்தை யடுபடர்பல் தூருறுகண் நேரின்
அரத்தை யெடுதுகள தாம் (தே.கு.)

அரத்தையின் குணத்தைக் கேளீர் அக்கரஞ் சந்நி போக்கும்
உரத்ததொரு இருமல் மாற்றும் ஓங்கிய உதிரம் போக்கும்
இரைத்திடுங் காச மெட்டும் மிஞ்சிய க்ஷயமுந் தீரும்
சுரத்தையும் நீக்கு மென்று சொன்னது வேத நூலே. (ஏடு).

**வழங்கும் அளவு.**—அரத்தைச் சூரணத்தில், அரை முதல் ஒரு வராக னெடை, தேனுடன் கலந்து கொடுத்துவந்தாலும்,

இரண்டு வராகனெடை அரத்தையைச் சிதைத்து, கால்படி வெந்நீரிற் போட்டு, மூன்று மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டி, $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்குவீத மெடுத்து, கொஞ்சம் தேன் விட்டுக்கலந்து கொடுத்துவந்தாலும், மேற் கண்ட ரோகங்கள் பரிகாரமாகும்.

**சிற்றரத்தையின் சிறப்புக்குணம்.**

வாந்தி, பித்தம், கரப்பான், வாயு, தலைநோய், கபதோடம், முத் தோடம், சீதளம், இருமல், பலசுரம் ஆகிய இவைகளைப் போக்கும்.

வாதபித் தங்கரப்பான் வாதஞ்சி ரோரோகஞ்
சேர்ந்தகப முத்தோடஞ் சீதமொடு—நேர்ந்தசுரம்
மற்றரத்தைக் காட்டி வருமிரும லுந்தீரும்
சிற்றரத்தை வன்மருந்தால் தேர். (தே.கு.)

ஒரு துண்டு சிற்றரத்தையை வாயிலிட்டுச் சுவைத்துவர சீதளம், கபம், வாந்தி, இருமல் தணியும்.

பித்ததேகிகட்கு உண்டாகும் கபக்கட்டுக்கு, இதை வழங்கும்போது, ஒரு துண்டு கற்கண்டையும் சேர்த்துக் கொள்ளவும்.

சிறு குழந்தைகளுக்குண்டாகும் முத்தோடப் பிணிகட்கு, இதைச் சுட்டுத் தேனில் உரைத்து, முலைப்பாலிற் கலந்துப் புகட்டுவது கிராம வழக்கம்.

அதிமதுரம், தாளீசம், திப்பிலி, சிற்றரத்தை வகைக்கு ஒரு வராக னெடை எடுத்து, அம்மியிலிட்டு நீர்விட்டரைத்து, கால் ஆழாக்கு நீரில் கலக்கிப் பொங்கவிட்டு வடித்து, தேன் சிறிது கூட்டிப் புகட்ட, கப இருமல் கபக்கட்டு, கபதோடம், குற்றிருமல், சுரம், தலைவலி, சீதளம் முதலிய வை நீங்கும்.

**பேரரத்தையின் சிறப்புக்குணம்.**

இது வாதநோய், வாதவலி, புறவலி (பின்னிசிவு), பித்தகபம், பித்த தோடம், சீதசுரம், சந்நிபாதம், கபம், ஊிளக்கின்ற புண், சிரசில் நீரேற்றம், பெண்களின் ருது தோடம், சர்வவிடம் ஆகிய இவைகளைப் போக்கும். உடன்வன்னமிகும்.

அரத்தை கபத்தை அறுக்குங்கால் ஒட்டுஞ்
சிரத்திலுறும் ஈளையைச்சி தைக்கும் - இரைத்துவரும்
பித்ததோ டத்தைப் பிறவலிப்பை மாற்றிவிடும்
உற்றசர்வ வல்விடம்போக் கும். (அ.கு.)

சந்நி யுபட்சிரணஞ் சார்ந்தசீ தச்சுரம்போம்
வன்ன மிகுந்து வளருங்காண் - கன்னியர்கள்
மாதவிடாய்க் காகும்வலி வாதக் கடுப்பகலும்
பேதமிலை பேர்அரத்தைப் பேணு. (அ.கு.)

வாத மிசிவு வலிசந்நி பித்தையஞ்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீ - ரோதுபல
வாங்கடுப் பூப்படறு மாறு மொளியாகு
மீங்கடரும் பேரரத்தை யால். (அ.கு.)

## அரிவாள் மூக்குப்பச்சிலை—Arival múkkup-pachchilai

**வே - பெ. அரிவாள் மனைப்பூண்டு.**

**Sida Rhomboidea-Linn-**

இது வெளிகளில் தன்னிச்சையாய்ப் பயிராகும் பூண்டினம். தென் இந்தியாவில் எங்கும் கிடைக்கும்.

**ப - உ.**—இலை.

**சுவை.**—துவர்ப்பும், சிறிது கைப்புமுள்ளது, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** குருதிப்பெருக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - Styptic.

**குணம்.**—ஆயுதங்களாலுண்டாகிற காயத்தை யாற்றும். கொடிய விடத்தையும், இரத்தக் கெடுதியால் பிறந்த தலை நோயையும் நீக்கும்.

வெட்டுக்கா யத்தை விரைவி லுலர்த்திவிடும்
துட்டக் கடுவோட்டுந் தோன்றிமிகக் - கெட்ட
பிரிவாற் றலையைப் பிளக்கும் வலிநீக்கும்
அரிவாள் மூக்குப்பச் சிலை. (அ.கு.)

வெட்டுக் காயமுள்ளவிடத்தில், இப்பச்சிலையை யரைத்துப் பூச, இரத்தம் நிற்கும்; காயம் வெகு சீக்கிரத்தில் ஆறிப்போம்.

இப்பச்சிலையுடன், மிளகு, பூண்டு சேர்த்துக் கற்கமாக்கிக் கொடுக்க, விடம் நீங்கும்; மேற்கூறிய தலைநோயும் விலகும்.

## அருநெல்லி—Aru Nelli.

**Avverrhoèa Acida.**

**Eng.—Country Goose-berry.**

| | | |
|---|---|---|
| **Tel.** | **Racha-Usherika** ఉసిరిక. | Sans. |
| **Mal.** | **Arinelli** അരിനെല്ലി. | **Hind.** **Chelmeri** * چل میری / **Haraphalvadi** * ہراپھلواڑی |
| **Kan.** | **Kirunelli** ಕಿರುನೆಲಿ | |

இது, சிறு மரக்கூட்டத்திற் சேர்ந்தது. மலேயா தேசத்துப் பயிராகக் கொள்ளப்படினும், இந்தியாவில் தோட்டங்களில் வைத்துப் பயிரிடப்படு கிறது.

ப - உ.—இலை, காய், விதை, வேர்.

**காய்.**

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- இலை. வியர்வைபெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**
- விதை. மலமிளக்கி - மலகாரி - **Laxative.**
- காய். பித்தசமனி - பித்தசாந்திநி - **Antibilious.**

**இலை.**

**வ - கு.**—இதையரைத்துப் புன்னைக்காயளவு, கால்படி மோரில் கலந்து, மூன்று, நான்கு நாள், காலை காலையில் மாத்திரம் சாப்பிட, காமாலை நீங்கும். இதைக் கொள்ளும்போது, உப்பை நீக்கி, சோற்றுடன் வெள்ளாட்டுப்பால் விட்டுக் கலந்து சாப்பிடவும்.

**காய்.**

**வ - கு**—இக்காயை, சீதபித்தம், காசம், தாகம், உட்சூடு இவைகட்கு வழங்கலாம்.

அருநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்பித்தம் போக்கும்
மருவுதுவர்ப் பால் * துரிசை மாற்றும்—விரியுலகில்
தாகத் துயர்நீக்குஞ் சாரிரும லைத்தொலைக்கும்
ஆகக் கொதிப்பகற்று மாங்கு. (அ.கு.)

துரிசு — துன்பம்.

**வ - கு.**—அருநெல்லிக்காய்ச்சாறு, பச்சை திராட்சரசம், வெள்வெங்காயச் சாறு வகைக்குச் சமபாகமெடுத்துக் கூட்டியதில் அரையாழாக்கெடுத்து, அதில் படிகாரபற்பம் 2 சிட்டிகை, சருக்கரை நான்கு சிட்டிகை சேர்த்து, மேக வெள்ளைக்குக் கொடுக்கலாம்.

அருநெல்லிக்காய்ச்சாறு ஒரு பங்குடன், இரண்டு முதல் மூன்று பங்கு சருக்கரை சேர்த்து மணப்பாகு செய்து, உட்சூடு, பித்தம், தாகம் இவைகளுக்கு $\frac{1}{2}$ முதல் 1 அவுன்ஸ் வீதம், தண்ணீருடன் கலந்து வழங்கலாம்.

அருநெல்லிவற்றல், சீரகம், நெற்பொறி, திப்பிலி, வகைக்கு ஒன்றே கால் வராகனெடை எடுத்துக் குடிநீர் செய்து, அதில் கொஞ்சம் சருக்கரை சேர்த்து, வாந்திநிற்கக் கொடுக்கலாம்.

அருநெல்லி வடகத்தைத் துவையலாக உபயோகிக்க, பித்தம் சாந்தியாம்; தேகம்குளிர்ச்சியடையும்; நேத்திரம் ஒளிபெறும்.

**வேர்.**

இதனால், தனிச்சுரம், அரோசகம், முத்தோடவாந்தி, பித்தசந்நிவாதம், ஆகிய இவை போம்.

சுத்த சுரம்அருசி * தோலாப் பெரும்வாந்தி
பித்தசந்நி பாதமிவை பேருங்காண்—மெத்தமணம்
நாறுமலர்க் கூந்தன்மின்னே ! நாவுக் கினிமையெனக்
கூறுமரு நெல்லியின் வேர்க்கு. (அ.கு.)

* தோலா — இளைக்காத.

**வ - கு.**—இதை அரைத்துக் கொடுக்க, அரோசகம், சுரம், வாந்தி நீங்கும். கொள்ளும் அளவு கால்பலமாகும்.

**வித்து.**

இதையுலர்த்திப் பொடி செய்து, கால் பலமெடுத்துச் சருக்கரை கலந்துண்ண, மலமிளகும்.

## அலரி—Alari.

**வே - பெ. கத்தூரிப்பட்டை, கணவீரம், கரவீரம், கவிரம்.**

**Nerium Odorum Soland.**

**Eng.—The Oleander.**

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Gannéru గన్నేరు. | Arab. | Difli | * دفلی |
| Mal. | Alari അലരി Araḷi അരളി. | Pers. | Khar-zahrah | * خرزهره |
| Kan. | Kaṇagale ಕಣಗಲೆ. | Hind. | Kanèr | * کنیر |
| | | | Kanèl | * کنیل |
| Sans. | Karaveera करवीरः. | | Karher | * کرهر |

இது செடி வகுப்பிற் சேர்ந்தது. வட இந்தியாவிற்குரியதாகக் கொள்ளப்படினும், தென்னிந்தியாவிலும், தோட்டங்களில் ஏராளமாய்க் காணலாம். இதில் வெண்மை, செம்மை, அழுக்கு மஞ்சள் நிறமுள்ள பூக்களைப் பூக்கும் சாதிகளுண்டு. வெண்ணிற புட்பமுள்ள செடி, **வெள்அலரி** என்றும், மஞ்சள்நிறப் புட்பமுள்ளது **மஞ்சளலரி** என்றும் வழங்கும், செந்நிறப் புட்பமுள்ளது தன்னுள் **செவ்வலரி, குங்கும அலரி** என இருவகுப்பையும் பெற்றிருக்கின்றது.

ஒவ்வொரு சாதியிலும், ஓரடுக்குமுதல் பல அடுக்கு இதழுள்ள புட்பங்களுண்டு. குணத்திலும், சுவையிலும், செய்கையிலும் சற்றேறக்குறைய ஒன்றாகவேயிருக்கும். வருடமுற்றும் பூக்கும்.

**ப - உ.**—பூ, வேர்ப்பட்டை.

**சுவை**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- நீர்மலம்போக்கி - விரேசனகாரி - Purgative.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

### பூ.

**குணம்**—சுரம், அரோசகம், குட்டம், விதாகம், புடை, கிரந்தி இரத்தக் கட்டி, பித்தநோய், தலையெரிவு இவைகளைப்போக்கும்.

வெப்பருசி குட்டம் விதாகம் சொறிசிரங்கு
செப்பிரத்தம் புண்பித்தஞ் சென்னியெரி—விப்படியில்
தங்குமோ கும்பத் தனத்தணங்கே ! வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு. (அ.கு.)

### வேர்ப்பட்டை.

**வ - கு.**—இதற்கு விடமிக்குங் குணமிருப்பதால், உயிரைப்போக்கும். இதை அரைத்து நல்லெண்ணெயிற் கலக்கிச் சாப்பிட, தோடங்கள் விகற்பப்பட்டு உயிரைப்போக்கும்.

வேர்ப்பட்டையை, நல்லெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி காதில் 2, 3 துளிவிட, காதில்வடியும் சீ, காதுவலி, காதுவிரணம் இவைகள் நீங்கும். காதிற்றங்கிய பூச்சிகள் சாகும்.

மேற்படி பட்டையுடன், அபினியும் கொஞ்சம் சேர்த்துக் காய்ச்சி ஷை நோய்களுக்கு உபயோகிக்க, மிக்க நன்மைதரும்.

வேர்ப்பட்டையின் சாறு தாம்பிரக்களங்கைச் செந்தூரிக்கும்.

## அலிசி விரை—Alishivirai.

**Linum Usitatissimum,**
**Eng. Linseed-Seeds of.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Atasi అతసీ. / Madana-ginjalu మదనగింజలు | Arab. | Bazrul Kattān * بزرالكتان |
| Mal. | Cheru-Chānattinē-Vitta ചെറുചാണത്തിന്റെ വിത്തു്. | Pers. | Tukhme zaghīr * تخم زغير / Tukhme katan * تخم كتان |
| Kan. | Alaṣhi ಅಲಶಿ. | Hind. | Alsī * السى / Tīsī * تيسى |
| Sans. | Atasi. अतसि. / Masrina मसृण:. | Duk. | Alsî-ke-binj * السى كى بينج |

குறிப்பு.—அலிசி விதையும் ஆளி விதையும் ஒன்றென்று சிலர் கருதியுள்ளார்கள்; இது தப்பான கருத்து.

இது இந்தியாவிலும், சிலோன், இமாலய மேற்குத்தொடர்ச்சி மலைகளிலும் பயிராகின்றது.

ப - உ.—பூ, விதை, எண்ணெய்.

**சுவை.**—இனிப்பு - துவர்ப்பு, **வீரியம்** சீதம், **பிரிவு** இனிப்பு.

**செய்கை.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emmollient.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

### பூ.

**குணம்**—இதன் பூ இருதயத்துக்கு வலுவைத்தரும்.

### அலிசிவிதை.

**வ - கு.**—இருமல், க்ஷயம், நீர்எரிச்சல், வெள்ளை, நீரடைப்பு, நீர்க்கோவை, சூதகசந்நி, தீப்புண், உள்தாபிதம், வாத வீக்கம், கட்டிகள், கண்நோய் ஆகிய இவைகளை நீக்கும்.

அலிசி விதையைப் பொடித்து, சுத்தமான நீரில் ஊறவைக்க, குழகுழப்பாகும்; அதை வடித்துப் பசையை எடுத்துக் கண்ணிலிட, கண் சிகப்பு, கண் அரிப்பு, கண் எரிச்சல் மாறும்.

இப்பசையுடன் தேன்கலந்துக்கொடுக்க, நீர்க்கோவை, இருமல் நீங்கும்.

இதன் ஊறல் கஷாயத்தால் (1 பங்கிற்கு - 32 பங்கு நீர்) ஈளை, இருமல், மூத்திர எரிச்சல், நீரடைப்பு, வெள்ளை இவைகள் உட்பிரயோகத்தால் தீரும். இதையே நீர்த்தாரை, ஆசனவாயின் மூலமாகச் செலுத்த அவைகளைச் சம்பந்தப்பட்டுக்கிளைக்கும் நோய்கள் தணியும்.

குடிக்கக்கூடிய அளவு நீரில் இவ்விதையைப் பொடித்துக்கூட்டி, இரவு முற்றும் வைத்திருந்து மறுநாள்காலையில், அதில் கொஞ்சம் எலுமிச்சம் பழச்சாறு சேர்த்துக் குடித்துவர, க்ஷயரோகிக்குண்டாகும் அழலை, வியர்வை தணியும்.

இதன் எண்ணெயை மேற்கூறிய நீருடன்கலந்து உட்கொண்டுவர, க்ஷய ரோகியின் சுவாசாசயத்தைப் பலப்படுத்தும்.

விதையை அரைத்துப் புற்கை செய்துகட்ட, வாதவீக்கம் குறையும். பழுக்காத கட்டிகள் பழுக்கும். உட்டாபிதங்களைப் போக்கும்.

### எண்ணெய்.

இதன் எண்ணெய் 1 பங்கு, சுண்ணாம்புத் தெளிநீர் ½ பங்கு கூட்டிக் குழைத்து இறகாலெடுத்துத் தடவிவர, நெருப்பாலுண்டான புண், வெந்நீர் விரணம் ஆறும்.

### சமூலம்.

இதன் சமூலத்தைப் புகைத்து மூகத்திற்படும்படிச் செய்ய, தலைபாரம், சூதகசந்நி சாந்தமாகும்.

# அல்லி—Alli

**வே-பெ. ஆம்பல், குமுதம், கைரவம்.**

**Nymphæa.**

**Eng. The water Lilly (White).**

Tel. Kalava కలువ.

Mal. Allit-tāmara അല്ലിത്താമര.

Kan. Nyadale huvu ನೈದಲೆ ಹೂವು.

Sans. Kumudam कुमुदम्.

Arab. and Pers. Nilu-far * نیلوفر

Urd. Challani * چلانی

Hind. { Kanval * کنول
Chhotta Kanval * چھوٹا کنول }

இது இந்தியாவில் குளங்களிலும், குட்டைகளிலும் பயிராகும் கொடி வகுப்பிற் சேர்ந்தது. வெண்மை, செம்மை, வெண்மையுஞ் செம்மையுங்கலந்த நிறமுள்ள புட்பங்களை புட்பிக்கும் சாதிகள், இதில் உண்டு. குளிர் காலத்திலும், மழைகாலத்திலும் இது ஏராளமாய்ப் புட்பிக்கும்.

**ப - உ.**—பூ, கொடி, இலே, கிழங்கு, காய்.

**சுவை.**—சிறு துவர்ப்பு, **வீரியம்**- சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—அல்லி, புட்பநிறத்தால் மூவகைப்படினும், குணத்தில் பெரும்பான்மை ஒன்ருகவேயிருக்கும்.

## வெள்ளல்லியின் பூக்குணம்.

இதனுல் மேகம், ஆண்குறித் துவாரவிரணம், நீரழிவு, நாகம், உட்சூடு ஆகிய இவைகள் விலகும்.

மேகம்அறும் புண்ஆறும் விட்டேகும் நீரிழிவு
தாகந் தணியும் தழல்அகலும் - வாகான
மெல்லியலே, ! ஆயுள்மறை வேதியரெல் லாம்உரைக்கும்
அல்லி மலரால் அறி. (அ.கு.)

## செவ்வல்லியின் பூக்குணம்.

இதனுல் மூத்திரம் சேர்ந்திறங்கும் நீர்ப்பிணி (மூத்திர ரோகசங்க வாதம்), மேகப்பிணி (நீரிழிவு), வெப்பத்தாலுண்டாகும் கண்ணேய்கள், இரத்தபித்தம், புண் முதலிய பல பிணிகள் தீரும்.

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்ப்பிணியோ
டொவ்வுமே கப்பிணியும் ஒய்வதன்றி—இவ்வுலகிற்
கண்ணின்நோய் தீரும் கனத்தபித்த ரத்தமொடு
புண்ணின்நோய் பன்னேயும் போம். (அ.கு.)

**வ - கு.**—மேற்கண்ட நோய்களுக்கு, பூவைக் கொண்டு மணப்பாகுசெய்தும், கிழங்கைச் சூரணஞ் செய்தும் தக்க அளவில் கொடுக்கலாம்.

கொடியும், கிழங்கும் வெப்பத்தைத் தணிக்கும் தைலங்களிற் சேரும்.

இலேயைக் கஷாயமிட்டுப் புண்களைக் கழுவலாம்.

கிழங்கை யுட்கொள்ள, மேக அனல், உட்டினம், தாகம் ஆகிய வெப்ப ரோகங்கள் தணியும்.

பூச்சாற்றுலும், கிழங்கின் சாற்றுலும் கற்பூர சிலாசத்தைப் பற்பமாக்கி வழங்க, மேகப்பிணிகள், மேக அழல், உட்சூடு, தாகம், இரத்தபித்தம் முதலியவை நீங்கும்.

## அவரை—Avarai.

**வே - பெ:— சிம்பை, சிக்கிடி, நிட்பாவம், நகுலி, நிஷ்பவம்.**

Dolichos Lablab, Linn.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chikkudu చిక్కుడు. | Sans. | Nishpava निष्पाव. |
| Mal. | Avara അവര. | Urd. | Samki-Phalli سیم کی پھلی * |
| Kan. | Avare ಅವರೆ. | | |

இது கொடிவகுப்பைச் சேர்ந்தது. தென் இந்தியாவில் சாதாரணமாய் வீடுகள்தோறும் பயிரிடப்படுவதிலொன்று ; ஆடி மாதத்தில் விதை நடப்படும் ; ஆறுமாதப் பயிர்.

இப்பெயரால் வழங்கப்படும் அவரை வகைகள் பலவுண்டு ; அவை :—

(1) சீனியவரை Dolichos Fabœformis.
(2) செவ்வவரை Dolichos lablab (with red flowers).
(3) நகரவரை Dolichos Rugosus Nob.
(4) வெள்ளவரை Dolichos lablab (with white flowers).

**ப - உ.**—இலை, பிஞ்சு, காய்.

### இலை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—அவரை இலைக்குத் தலைநோய், கிரகணி, ஊழி, புண் ஆகிய இவைபோம். தீபனத்தைத் தூண்டும்.

அவரையிலைக் குத்தலைநோய் ஆழ்ந்தகி ராணி
இவரும் விஷிசிமுதல் ஏகுந்—தவராமல்
கொண்டவர்க்குத் தீபனமாங் கோதாய் ! விரணமறுங்
கண்டவர்க்குத் தோற்றுமிது காண். (அ.கு.)

**வ - கு.**—அவரையிலைச்சாற்றுடன் கொஞ்சம் சுண்ணும்பு, சிற்றுமணக்கெண்ணெய் விட்டுக் குழைத்துப் புண்ணின்மேற் பூசப் புண்ணுறும்.

இச்சாற்றுடன் கற்கண்டுப் பொடிகூட்டிக் கிளறிக் கொட்டைப் பாக்களவு கொள்ள, கிராணி, சீதபேதி முதலிய வயிற்றுப்போக்கு நிற்கும்.

ஒரு துண்டுச் சீலையை, இச்சாற்றில் நனைத்து நெற்றிமேற் போட்டு வர, தலைநோய், தலைபாரம் நீங்கும்.

### பிஞ்சு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குணம்.**—விதை முதிராத வெள்ளவரைப்பிஞ்சு—திரிதோடம், புண், சுரம், கண்விழிக்குள் சிலேத்தும முதிர்ச்சியாலுண்டாகும் பில்லம் முதலிய ரோகிகட்கும், மருந்துண்போர்க்கும், இராவுணவிற்கும் ஆகும்.

கங்குலுண விற்குங் கறிக்கும் உறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர் புண்சுரத்தோர்—தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லநோய்க் காரருக்குங் காமுறையா
வெண்முதிரைப் பிஞ்சாம் விதி. (தே.கு.)

வெள்ளவரைப் பிஞ்சைச் சமைத்துண்ண, மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

## காய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—கொட்டை முதிர்ந்த அவரைக்காயைச் சமைத்துண்டால், அரோசகம் தீரும். ஆனால், மந்தம், பேதி, வாதநோய், கபநோய், சூலை ஆகிய இவைகளுண்டாகும்.

கொட்டைஅவ ரைக்காயால் கோரஅ ரோசகநோய்
கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடுந்—துட்டமந்தம்
பையஉண்டாம் பேதிஉண்டாம் பாரிப் பணிலம்உண்டாம்
ஐயம்உண்டாம் சூலையும்உண் டாம். (அ.கு.)

மேற்கண்ட அவரைகளன்றி :—

(1) காட்டவரை (பேயவரை) அல்லது (காட்டு மொச்சை). Dolichos Tetraspermus (a kind of beans growing wild).

(2) தீவாந்தர அவரை (a kind of beans brought from the Eastern islands).

(3) பேரவரை (a large kind of beans).

(4) கோழியவரை Dolichos gladiatis. என்பவைகளுமுண்டு.

குத்துச் செடிவகுப்பில்.

(5) கொத்தவரை என்று ஒரு ஜாதியுமுண்டு.

குறிப்பு.—(4), (5)-ல் கண்டவைகளின் குணத்தை அதனதன் தலைப் பின்கீழ் காண்க.

---

## அவுரி—Avuri.

**வே - பெ.—அவிரி, நீலி.**

**Indigofera Tinctoria**

**Eng—Indigo plant.**

| | | |
|---|---|---|
| Tel. | Nìli | నీలి. |
| | Aviri | అవిరి. |
| Mal. | Amari | അമരി. |
| | Nílam | നീലം. |
| Kan. | Nili-gida | ನೀಲಿ-ಗಿಡ. |
| Sans. | Nilini | नीलिनी. |
| Arab. | Nabatul-Nilaj | نبات النيلاج * |
| Pers. | Darakhte-Nil | درخت نيل * |
| Duk. | Nil-ka-jhar | نيل کا جهاڑ * |
| Hind. | Nil-ka-per | نيل کا پيڑ * |

இது, இந்தியாவில் உஷ்ணப்பிரதேசங்களில் பயிராகும் செடிவகுப்பு. இச்செடியினின்றும் நீலம் (நீலமருந்து) எடுக்கப்பட்டு ஏராளமாய் மேல் நாட்டுக்கு அனுப்பப்பட்டுவந்தது. இப்போது இந்த வியாபாரம் தடைபட்டு விட்டது.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.
- முறைவெப்பகற்றி - முறைவியாதிரோதி - Anti-periodic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

## இலை.

**குணம்.**—தாவரகந்த மூலவிடம் 18, வாதசுரம், காமாலை, மாந்தம், சீதளம், சந்நிபாதம், கீல்வாதம், பாம்புவிடம் இவைகளைப் போக்கும்; உடல் பொன்னிறம் பெறும்.

உரியஅவு ரித்தழைதான் ஓது பதினெண்
அரியநஞ்சைத் தின்றவர்க்கும் ஆகும்—தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர்க் குறுமாந்தஞ்
சீதம் அகற்றுந் தெரி. (அ.கு.)

சந்நி பதின்மூன்றுஞ் சந்தொடித்த வாதமுதல்
உன்னு விடக்கடியும் ஓடுங்காண்—மின்னுங்
கவுரிநிறம் உண்டாகுங் காசினியுள் நல்ல
அவுரியிலை தன்னால் அறி. (அ.கு.)

## வேர்.

**குணம்.**—எல்லாவிடங்களையும் முறிக்கும், சுரமூர்ச்சை, வெட்டை (வெள்ளை), குன்மநோய் முதலிய பல நோய்களைப் போக்கும்.

எல்லா விடங்களுக்கும் ஏற்ற முறிப்பாகும்
பொல்லாச் சுரமூர்ச்சை பொங்குவெட்டை—நில்லாப்
பவுரிதருங் குன்மமுதல் பண்ணோ யொழியும்
அவுரிதரும் வேருக் கறி. (அ.கு.)

**வ - கு.**—அவுரியிலையைக் குடிநீர் செய்துகொடுக்க, விடங்கள், வாதசுரம், சந்நிபாதம், காமாலை, மாந்தம், கீல்வாதம், சீதளம் நீங்கும்.

அவுரிவேரைக் குடிநீர் செய்து கொடுக்க, குன்மநோய், வெள்ளை, சுரமூர்ச்சை நீங்கும். எல்லாவிடங்களையும் முறிக்கும்.

அவுரியிலை, அவுரிவேர்ப்பட்டை, பொரித்த பெருங்காயம், மிளகு இவைகளைச் சமவெடை தூக்கி நன்றாய் அரைத்து, சுண்டையளவு மாத்திரை செய்து, நாள் ஒன்றுக்கு, காலை ஒன்று, மாலை ஒன்றாகக் கொடுத்து, உப்பில்லாப்பத்தியம் வைக்க, நரம்புச் சிலந்தி குணமாகும். மூன்று முதல் ஐந்து நாள்வரைக் கொடுக்கலாம். இதையே ஈரமாயிருக்கையில் நரம்புச் சிலந்தி தோன்றியவிடத்தில் வைத்துக்கட்டலாம்.

இம்மூலிகையின் உபயோகம் பலவற்றை நஞ்சு நூலில்காண்க.

---

## அழவணம்—Azhavanam.

**வே - பெ.—ஐவணம், மருதோன்றி, சரணம்.**

**Lawsonia Alba.**

**,, Spinosa.**

**,, Inermis.**

**Eng.—Henna plant.**

| | | |
|---|---|---|
| Tel. | Góranṭa | గోరంట. |
| Mal. | Mayilanchi | മയിലാഞ്ചി. |
| | Marutoni | മരുതോന്നി. |
| Kan. | Góranṭe | ಗೋರಂಟೆ. |
| Sans. | Kurantaka | कुरण्टकम्. |
| | Raktogarba | रक्तगर्भः. |
| Arab. | Ḥinná | * حنا |
| | Yoranná | * يرنا |
| Pers. | Ḥinà | * حنا |
| Duk. | Mhèndi | * مهيندى |
| | Mhenhdi | * مهينهدى |

இது இந்தியா முழுவதும் பயிராகும். (பெருஞ் செடி அல்லது சிறு மர வகுப்பில் சேர்ந்தது.)

**ப - உ.**—இலை, பூ, வித்து, பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

## இலை.

**செய்கை.** { *துவர்ப்பி* - *ஸங்கோசனகாரி* - Astringent. *புண்ணழுக்ககற்றி* - *வ்ரணசுத்திகாரி*- Detergent. *நாற்றமகற்றி* - *பூதிகந்தநாசநி* - Deodorant.

**குணம்.**—கீல்வாதம், வாதக்குடைச்சல், சிரோரோகம், கைகால்வலி, எரிச்சல் ஆகிய இவைகட்கு, அழவணயிலையை புளித்தகாடியேனும், எலுமிச்சம் சாறேனும் விட்டரைத்துப் பூசிவரலாம். இலையைப் பாதத்தில் தேய்த்தால் கால் எரிச்சல் போம்.

நசுங்குவதால் நேரிடும் விரணம், சுளுக்கு இவைகளுக்கு, இலையைச் சதைத்து வைத்துக்கட்டக் குணமுண்டாம்.

இலையை அரைத்து வைத்துக்கட்ட, கண்வேக்காடு குணப்படும். மூன்று நாளைக்குள் இதன் நற்குணம் விளங்கும்.

அம்மை போட்ட காலத்தில் கண்களுக்கு அம்மையால் யாதொரு தீங்கும் நேரிடாமற்படி பாதுகாக்க, இலையை அரைத்து இருபாதங்களடியில் வைத்துக் கட்டலாம்.

இலையை அரைத்து நகங்களுக்குத்தடவ, நகம் சிவக்கும். இப்படிச் செய்வது இந்து மாதர்களின் வழக்கம். இதனால் நகம் யாதொரு நோய்க்கும் உட்படாமற்படி பாதுகாக்கப்படும்.

அரைத்தோலா எடை இலையை எடுத்து, பூண்டுத்திரி ஒன்று, மிளகு 5 சேர்த்து, அரைத்துக் காலையில்மாத்திரம் 3 முதல் 5 நாள் வரை கொடுத்து உப்பில்லாப்பத்தியம்வைக்க, மேகத்தழும்புகள் நீங்கும்.

இலையை, நீராகாரத்தில் ஒரு இரவு ஊறவைத்து, மறுநாள் காலையில் இறுத்து, இருபதுநாள்வரை காலையில் மாத்திரம் கொடுத்துவர, மேகச்சொறி, புடைகள் நீங்கும்.

இதன் ஊறல் கஷாயம், சுளுக்கு, தாபனம், சிறு காயங்களுக்கு ஒற்றிடங்கொடுக்கவும், கழுவவும், வாய்ப்புண்ணுக்குக் கொப்புளிக்கவும், வெள்ளைக்கு வஸ்தியிற் செலுத்தவும் உதவும்.

இலைச்சாற்றில் அரை உச்சிக்கரண்டியளவெடுத்து, அரையாழாக்குப் பாலுடன் கலந்து கொடுக்க, கைகால்வலியும்; அரையாழாக்குநீரில், ஒருவராகனெடைச் சருக்கரை கலந்துகொடுக்க, சுக்கில நஷ்டமும் நீங்கும்.

## பூ.

**செய்கை.** { *குளிர்ச்சியுண்டாக்கி* - *சீதளகாரி* - Refrigerant. *உறக்கமெழுப்பி* - *நித்ராகாரி* Soporific.

**குணம்.**—இதன் பூவை, இராக்காலங்களில் தலையணையின் கீழ் வைத்துப் படுக்க, நித்திரையுண்டாகும். உடல் வெப்பம் மாறும்.

## வித்து.

**செய்கை.** *நாற்றமகற்றி* - *பூதிகந்தநாசநி* - Deodorant.

**குணம்.**—வித்துக்கு பில்லிசூனியம் பேய், பூதங்களின் செய்கைகெடும்.

" மருதோன்றி யின்விதைக்கு மாபில்லி சூனியம்
விருதாண்ட பேய்பூதம் மேவும்." (அ.கு.)

வித்தை நெருப்பிலிட்டுப் புகைக்க, மேற்கண்ட கிரியாச் செய்கைகள் நீங்கும்.

பூ அல்லது விதைகளின் ஊறல் கஷாயம், தலைவலிக்கும் தாபிதங்களுக்கும் ஒற்றிடமிட, நற்குணந்தரும்.

## வேர்ப்பட்டை.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - **Sedative.**
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - **Alterative.**

**குணம்.**—மாதர் ருதுகால சோணித தோடம், அசிர்க்கரா ரோகம், பித்தநோய், ஆகிய இவைகளைப் போக்கும்.

சோணித தோடமெலாஞ் சொல்லாம லேகிவிடும்
பேணுவர்க்கி ரத்தமொடு பித்தம்போம்—காணு
ஒருதோன்ற லென்னுமத ஞேதுமெழின் மாதே !
மருதோன்றி வேரால் மறைந்து. (அ.கு.)

வேர்ப்பட்டையை ஊறற் கஷாயஞ் செய்து கொடுத்துவர, மேற்கண்ட நோய்களும், காமாலை, இடப்பாடு - வலப்பாட்டீரல்வீக்கம், கல்லடைப்பு நீங்கும். இக்கஷாயத்தைக் குட்டத்திற்கும் கொடுப்பதுண்டு. மேலும், சரும வியாதி, சுட்டபுண், மேகப்புண் இவைகளைக்கழுவவும் உதவும்.

**குறிப்பு.**—இதன் இலை கெந்தகத்தைச் சுத்திசெய்யும். இதன் பட்டை தாம்பிரத்தைச் செந்தூரிக்கும்.

---

## அழிஞ்சில்—Azhinjil.

**வே. - பெ.—அங்கோலம், செம்மரம், சேம்.**

**Alangium Decapetalum.**

**Eng.—Sage leaved Alangium.**

| | | |
|---|---|---|
| **Tel.** | Uḍuga ఊడుగచెట్టు. | |
| | Amkòlam అంకోలచెట్టు. | |
| **Mal.** | Ankòlam അങ്കോലം. | |
| | Azhiṇṇá അഴിഞ്ഞ. | |
| **Kan.** | Amkòle ಅಂಕೋಲೆ. | |
| **Sans.** | Amkòlam अंकोलः. | |
| **Hind. & Duk.** | Akòlà | اکولا * |
| | Akòlah | اکولہ * |

இம்மரம் தென் இந்தியா, பர்மா இவ்விடங்களில் வெப்ப பாகங்களிலுள்ள காடுகளில் பயிராகின்றது.

**ப - உ.**—விதை, பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

| | அளவு. |
|---|---|
| உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative. | 1—3 குன்றி |
| புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic. | 1—3 ,, |
| சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic. | 3—5 ,, |
| வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic. | 24 ,, |
| வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge. | 5 ,, |
| மலமிளக்கி - லகுவிரேசநி - Laxative. | 10—12 ,, |
| குமட்டலெழுப்பி - வமனவியதாகாரி - Nauseant. | 5 ,, |

**விதையின் செய்கை.** உடலுரமாக்கி - போஷணகாரி - **Nutritive.**

**குணம்.**—வாதகோபம், கப்தோடம், சிலவிஷயும் பெருநோய் ஆகிய இவற்றை நீக்கும். ஆனால் பித்தத்தையுயர்த்தும்.

அழிஞ்சிலது மாருதத்தை யையத்தைத் தாழ்த்தும்
ஒழிஞ்சபித் தத்தை யுயர்த்தும்—விழுஞ்சீழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூறுமருந் தெய்திடல்
திட்ட மெனவறிந்து தேர். (அ.கு.)

**வ - கு.**—இதன் வேர்ப்பட்டை, கால் முதல் அரைபலமெடுத்துக் குடிநீராகிலும், ஊறல் கஷாயமாகிலும் செய்து, கொஞ்சம் நெய் சேர்த்து, கால்முதல் அரை ஆழாக்களவாக உட்கொள்ள, நாட்பட்டகடிவிடம், பாம்புக்கடிவிடம், விடக்கடியாலுண்டான தாபிதம் நீங்கும்; பெருங்குடலிற்றங்கிய பூச்சிகள் வெளிப்படும்.

அரைக்கால் முதல் கால்பலம் வேர்ப்பட்டையெடுத்து, கழுநீரில் அரைத்துச் சிறிது தேன்விட்டுக்கலந்து கொடுக்க, அசீரணபேதி நிற்கும்.

குட்டம் முதலிய சரும ரோகங்களிலும், மேகவிரணங்களிலும், சாதாரண சுரங்களிலும், இப்பட்டையை அளவுப்படுத்தி, சுத்தநீர்விட்டரைத்து உள்ளுக்குக் கொடுத்து நற்பலன் கண்டதுண்டு. சுரம் நீங்க, மற்றைய ரோகங்களில் உப்பில்லாப்பத்தியம் வைத்து, மோர் அல்லது பால் கூட்டிய சோற்றை உண்ணும்படிச் செய்யவேண்டும்.

கீல்வாதம் மிக்க கடுமை செய்யுந் தருணத்தில், வேர்ப்பட்டைக் குழித்தைலத்தை மேலுக்குத்தடவ, சாந்தமடையும்.

இத்தைலத்துடன் கொஞ்சம் வாலரசம் சேர்த்துக் குழப்பியதில், மூன்று முதல் ஐந்து துளிவரையில் சருக்கரையிற் கலந்து புகட்டி, கடும்பத்தியம் காக்கும்படி செய்ய, மேகப்பிடிப்பு, மேகப்புடைகள், மேகவெடிப்பு, சொறி சிரங்கு நீங்கும்.

இப்பட்டையை நுண்ணிய பொடிசெய்து மேகவிரணம், சீவடிகின்ற குட்டம், சொறிசிரங்கு இவைகளின்மீது தூவிவர, குணமாகும்.

இப்பட்டைக்கு மாந்தம், சுரம், சந்நிகளும் போம் என்பது தந்வந்தரி கருத்து (வைத்திய குருநூல்—200).

பட்டை பித்தத்தை உயர்த்துமெனினும், இதன்வித்து இரத்தபித்த ரோகம், இரத்தவாந்தி, பித்த எரிச்சல் இவைகளைப் போக்கும். இவைகளுக்கு, வித்தின்பருப்பு கால், அரை வராகனெடை பசுவின்பால்விட்டரைத்துப் பசுவின்பாலில் கலந்து, கொஞ்சம் சீனிகூட்டி உபயோகிக்கலாம்.

வித்திலிருந்து தைலமிறக்கி மறைப்புமையாக உபயோகிக்கிறார்கள். இதனை

நிலத்தில்.
தொழுஞ்சகமோ கக்கரப்பிற் சொல்அஞ் சனமாம்
அழிஞ்சில் விதையென் றறி என்னும் (அ.கு.) தால் அறிக.

மூன்று முதல் ஐந்து துளி சருக்கரையுடன் சேர்த்து, குட்டநோயில் உபயோகிக்கலாம்.

**குறிப்பு.**—அழிஞ்சிற்பட்டையினால் இலிங்கம் மிகச் சிறந்த சுத்தியாகும் (அகத்தியர் - 12,000).

---

## அறுகம்புல்—Arugu.

**வே. பெ.—அறுகு, பதம், மூதண்டம், தூர்வை, மேகாரி.**

**Cynodon Dactylon.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Garika** | గరిక. | **Sans.** | **Dúrva** | दूर्वा. |
| **Mal.** | **Karukappulla** | കറുകപ്പുല്ല. | **Arab.** | **Kali ghans** | کالی گھانس * |
| **Kan.** | **Garike** | ಗರಿಕೆ. | **Urd.** | **Duba** | دوبا * |

இது எங்கும் கிடைக்கும்.

**ப - உ.**—புல், வேர்.

**சுவை**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- குருதிப்போக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - Styptic.

**குணம்.**—திரிதோடம், ஈளை (கோழை), கண்ணோய், கண்புகைச்சல், தலைநோய், இரத்தபித்தம், மருந்துகளின் வெப்பம் ஆகிய இவைகளைப் போக்கும்.

அறுகம்புல் வாதபித்த ஐயமோ டீளை
சிறுக அறுக்கும் இன்னுஞ்செப்ப—அறிவுதரும்
கண்ணோ யோடுதலைநோய் கண்புகையி ரத்தபித்தம்
உண்ணோ யொழிக்கு முரை. (அ.கு.)

**வ - கு.**—அறுகம்புல்லின் சீத ஊறல் கியாழத்துடன் பாலுஞ்சேர்த்து உட்கொள்ள, மூலரத்தம், நீரடைப்பு, நீர்த்தாரை எரிச்சல் நீங்கும்.

அறுகம்புல்லை இடித்துப் பிழிந்த சாற்றைக் கண்ணுக்குப் பிழிய கண்ணோய், கண்புகைச்சலும், மூக்கிலிட இரத்த பீநசமும், காயப்பட்டவிடத்தில் பூச இரத்தம் வடிதலும், நிற்கும். புண்களின் மீது தடவ, புண் ஆறிவரும். வெள்ளிக்கிழமையில் குடித்துவர, பெருச்சாளிவிடம் நீங்கும் (புலி 500).

அறுகம்புல்லுடன், சிறிது மஞ்சள் சேர்த்தரைத்துத் தடவிவர, சொறி சிரங்கு, படர்தாமரை, கிருமிரோகம், சீதபித்தம் நீங்கும்.

அறுகம்புல், கடுக்காய்த்தோல், இந்துப்பு, கிரந்திதகரம், கஞ்சாங்கோரை இவை சமபாகமெடுத்து, மோர்விட்டரைத்துப் பூச சொறி சிரங்கு, படர் தாமரை ஒழியும். கிருமிசாகும்.

## அறுகம்வேர்.

**குணம்.**—அறுகின் கிழங்கால் தணியாத பற்பல வெப்பமும் திரிதோட ரோகங்களும் நீங்கும். உடல் மேனிபெறும்.

ஆறு அழலெல்லா மாறுமுத் தோடமது
வீறு திருக்குநல்ல மேனிதரும்—மாறுக்
கடியமர லங்கலணி காரளக மின்னே !
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு. (அ.கு.)

**வ - கு.**—இதைக்கணுபோக்கி, கால்பலமெடுத்து, அத்துடன் வெண் மிளகுபத்து சேர்த்துக் கஷாயமிட்டுவடித்து அதில் பாக்களவு பசுவின் வெண்ணெய் கூட்டி யுட்கொள்ள, மருந்தின்வேகம், இரசவேக்காடு, மூலக் கடுப்பு, நீர்க்கடுப்பு, நீரடைப்பு (கல்), வெட்டை, மூத்திரதாரை எரிச்சல் முதலானவைகள் நீங்கும்.

தயிரில் அரைத்துக் கலந்து கொடுக்க, தந்திப்பிரமேகம் நீங்கும்.

இவ்வேரைக்கொண்டு செய்யும் தூர்வைத்தைலத்தின் குணத்தை தேரையர் தைலவருக்கச் சுருக்கத்தில் காண்க.

---

## அறுகீரை—Arukirai

**வே - பெ.—அரைக்கீரை, அறைக்கீரை.**

**Amarantus Tristis.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Koiya-Kúrā కొయ్యకూర. | Kan. | Harive Sappu ಹರಿವೆ ಸಪ್ಪು. |
| Mal. | Arakírai അറക്കീര. | Urd. | Mat-Ki-Bhaji ماٹ کی بھاجی * |

இது தென் இந்தியாவில் சாதாரணமாகப் பயிரிடக்கூடிய ஓர் குத்துச் செடி.

**ப - உ.**—கீரை, விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—இக்கீரையை நற்கறியாக்கியுண்ண சுரம், நடுக்கல், சந்நி பாதம், கபரோகம், வாதநோய் ஆகிய இவை போம்; தாது விருத்தி யாம்.

காய்ச்சல் குளிர்சந்நி கபநோய் பலபிணிக்கும்
வாய்ச்ச கறியாய் வழங்குங்காண்—வீச்சாய்க்
கறுவுமோ வாயுவினங் காமமிக வுண்டாம்
அறுகீரை யைத்தின் றறி. (அ.கு.)

இது தென்னுட்டில் பல பிணிகளிலும் பத்தியபதார்த்தமாக வழங்கப் படும்.

**அறுகீரை விதை.**

**வ - கு.**—இதை நீர்போக்கிய தேங்காய்க்குட் செலுத்தித் தமரிட்டு, சதுப்பு நிலத்தில் புதைத்து 40, 50 நாள் சென்றபின் எடுத்து, ஓட்டை நீக்கி மற்ற வைகளை நல்லெண்ணெயுடன் கூட்டி எரித்துத் தைலம் வடித்துத் தலை முழுகிவர, சிரோரோகம் போம். தலைமயிர் கறுத்து வளரும்.

**குறிப்பு**—இவ்வாறுகவே புல்லாந்திப்பழம் அல்லது நற்சங்கன் பழத் தைக்கொண்டு தைலம் வடித்து தலைமுழ்க, அல்லது தலைக்குத் தடவிவர, மயிர்கறுக்கும், வளரும்.

---

## அறுவதா—Aruvadá

**வே - பெ.—அர்வதா—சதாப்பு.**

**Ruta Angustifolia, R. Graveolens.**

**Tel.** Sadápa సదాప. Arudu.

**Mal.** Sathappu സതാപ്പ്.

**Kan.** Nágadáḷi-Sappu ನಾಗದಳಿ ಸಪ್ಪು.

**Sans.** Sadápa सदापः.

**Arab.** { Fèjan * فيجن
Sadàb * سداب

**Pers. & Hind.** } Sadàf * سداف

இது 2, 3 அடி உயரமுள்ள செடி. அதிகவெப்பமும் அதிக குளிர்ச்சியு மில்லா இடங்களில் பயிராகும். இந்தியாவில் பயிராகிற இச்செடியின் குணம், தென் ஐரோப்பாவிலும் தென் அமெரிக்காவிலும் பயிராகிற தற்குத் தாழ்ந்ததல்ல. இதன் இலை பச்சையாயிருக்கும்பொழுது சாம் பற்பூத்த நிறமாயிருக்கும். இதில் எண்ணெய்ப்பசையுண்டு. ஒருவிதமண மும், சுவைத்தால் வெகுட்டலுடன் கைப்பும் விறுவிறுப்பு மிருக்கும். உலர்ந்தால் இதன் குணம் குறையும்.

**ப - உ.**—இலை.

**சுவை.**—கைப்புடன் கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
உரமாக்கி - பலகாரி - Tonic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி- Emmenagogue.

**குணம்.**—சூதகசந்நி, சூதகவாயு, பிரசவமாதர்களின் வேதனை, வயிற்றுப்பொருமல், (வாத) வயிற்றுவலி, அசீரணம், நாட்பட்ட மார்புச்சளி, கிருமிநோய், பால்மாந்தம், காக்கைவலி, மாந்தவலி, மாந்தசுரம், கணபேதி ஆகிய இவைகட்கு வழங்கலாம்.

**வ - கு.**—இலையைக் கசக்கிச் சாறெடுத்தேனும், உலர்ந்தயிலையைச் சூரணஞ்செய்தேனும், கஷாயஞ் செய்தேனும், மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம். வெளிப்பிரயோகமுஞ் செய்யலாம்.

இருமலினால் பீடிக்கப்பட்ட நோயாளியிருக்கும் அறையில் இலையைத் தூபமிட, இருமல் சாந்தமாகும்.

துர்ப்பலத்தாலுண்டாகின்ற மந்தாக்கினிக்கு இதை உபயோகப்படுத்தலாம்.

பிரசவகாலத்தில் பிண்டம் வெளிப்பட, இதைச் சிலர் உபயோகிக்கின்றனர்கள். மற்றவர்கள் இதனால் பிண்டம் சேதப்படுகிறதென்றும் அக்காலத்தில் இதைக் கொடுப்பது நன்மையல்லவென்றும் கருதுகின்றனர்கள்.

**பிரயோக அளவு.**

சிறுவர்கட்கு (இலைச்சாறு) 30 முதல் 60 துளி.

பெரியவர்கட்கு (இலை கற்கம்) $\frac{1}{4}$ முதல் $1\frac{1}{4}$ வராகனெடை.

பெரியவர்கட்கு (கஷாயம்) $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு.

**பீநசத்தைலம்.**

இந்தச் செடியில் ஓர்வித சிறுபூச்சுகள் தோன்றி, முடிவில் ஒரு தடித்தபுழுவுண்டாகும். ஒரு புட்டியில் சுமார் ஐந்து பலம் நல்லெண்ணெய் விட்டு, அதில் இப்புழுவைவிட்டு, சற்றேறக்குறைய கால்பலம் சுத்தமான ஓமத்தைப் பொடித்துச் சேர்த்து வெயிலில் வைத்துவர, புழு கரைந்து எண்ணெயுடன் கலந்துபோம். இதில் இரண்டொரு துளி மூக்கில்விட்டுவர, பீநசரோகங்கள் நீங்கும்.

---

## அனாசிப்பழம்—Anáṣhip-pazham.

**வே - பெ.—பூந்தாழம்பழம்.**

**Ananas Sativus, Schult.**

**Eng.—The Pine Apple.**

| | | | | |
|---|---|---|---|---|
| **Tel.** | **Anása-pandu** అనాసపండు. | **Arab. & Pers.** | **Aainunnás** | * عين الناس |
| **Mal.** | **Kaita-chakka** കൈതച്ചക്ക. | **Hind.** | **Anannas** | * اننس |
| | **Munthri-chakka** മുന്തിരിച്ചക്ക. | | **Ananas** | * اناناس |
| **Kan.** | **Anánasu-haṇṇu** ಅನಾನಸು ಹಣ್ಣು. | **Duk.** | **Anannas** | * اننس |

இது இந்தியாமுழுதும் பயிரிடப்படுகிறது.

**ப - உ.**—இலை, காய், பழம்.

**சுவை.—பழம்**—புளிப்பு, இனிப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

- இலை.—நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Germicide.**
  - நீர்மலம்போக்கி - வ்ரேசநி - **Purgative.**
- காய்.—வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**
  - செரிப்புண்டாக்கி - பாசனகாரி - **Digestive.**
  - மலமிளக்கி - மலகாரி - **Laxative.**
  - சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- பழம்.—நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Germicide.**
  - சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
  - குருதிப்பெருக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - **Styptic.**
  - ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி – **Emmenagogue.**

**பழத்தின் குணம்.**—மேகவெட்டை, வாந்தி, பித்தநோய், தாகம், தலை வலி ஆகிய இவைபோம். அழகுண்டாகும்.

> மேகவெட்டை வாந்திபித்த மீறுவாம் மேனியிடுந்
> தாகமுமட் டாகும் தலைவலிபோம்—பாகமுறு
> பூந்தாழை யின்பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
> லாந்தாழ்வும் இல்லை யறி. (அ.கு.)

இலைச்சாற்றை ஒரு உச்சிக்கரண்டி எடுத்து, சருக்கரை கூட்டிக் கொடுக்க, விக்கல்போம். இரண்டுகரண்டியளவு உட்கொள்ளப் பேதியாகும்.

இதன் காய் அல்லது பழத்தை அதிக அளவில் தின்றால், தொண்டை கட்டும், கரு அழியும்; ஆகையால் இதைக் கருப்பமாதர்கள் உபயோகிக்க லாகாது.

பழரசத்தை வெதுப்பிக் கொடுக்க, வாந்தி, வயிற்றுக்கடுப்பு, காமாலை முதலிய பித்த நோய் நீங்கும்.

பழரசத்தை மணப்பாகு செய்து உண்டுவர, வெட்டை, வாந்தி, தாகம், பித்தநோய் தணியும்; பித்தத்தாலுண்டாகும் சிரோரோகம் சாந்தமாகும்.

## அன்னசிப்பூ—Annasippu.

### Illicium Verum.

இதுவே அனுசிப்பூ; சைனா, கொச்சின்—சைனா முதலியவிடங்களி லிருந்து இந்தியாவிற்கு வருகிறது.

**சுவை.**—இனிப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—அசீரணம், மாந்தம், பலவீனம் முதலிய நோய்களைப் போக்கும்.

இப்பூவைச் சூரணஞ்செய்து, $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ வராகனெடை வீதம் நாள் ஒன்றுக்கு 2, 3 முறையுட்கொள்ள, மேற்கண்ட நோய்களும், புளி ஏப்பமும் நீங்கும்.

---

## ஆகாச கருடன்—Ākasha garudan.

**வே - பெ.—ஆகாச கெருடன், ஆகாயகருடன், கருடன், கொல்லன் கோவை, பேய்ச்சீந்தில்.**

**Bryonia Epigœa.**

**Corallo carpus epigaeus Hook.**

**Eng.—Bryoms.**

**Tel.**
- **Àkāṣha-garuḍa-gaddalu** ఆకాశగరుడ గడ్డలు.
- **Nàgadonḍa** నాగదొండ.
- **Murudonda** ముురుదొండ.

**Sans.**
- **Mahamulam** महामूलम्.
- **Nabho-garuda-kanda**
- नभो गरुड कन्दः.

**Mal.**
- **Kollam-kóva-kizhanna-** കൊല്ലം കോവക്കിഴങ്ങ്.

**Hind.**
- **Ākās-gaḍḍah** * آکاس گڈّھ
- **Rākas-gaḍḍah** * رکس گڈّھ

**Kan.**
- **Àkāsha-garuḍa-gaḍḍe** ಆಕಾಶ-ಗರುಡ-ಗಡ್ಡೆ.

**Duk.** **Garaj-phal** * گرج پھل

**இது,** கொடிவகுப்பிற் சேர்ந்தது; இந்தியாவில் எங்கும் பயிராகும்.

ப - உ.—சமூலம், சிறப்பாகக் கிழங்கு.

சுவை—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வியதாபேதகாரி Alterative; உரமாக்கி - பலகாரி - Tonic.

## சமூலம்.

**குணம்.**—சூலை, பாண்டு, முத்தோடம், அக்கிப்புண், உட்சூடு, கண்டமாலை, குடல்வலி, பெருநோய் (மாகுஷ்டம்), ஆலவிடம் (மகாவிஷம்), கரப்பான், நமைச்சல் ஆகிய இவைகள் கொல்லன் கோவைச் சமூலத்தால் நீங்கும்.

சூலைபாண் டுதைதிரி தோடமக்கி வெப்புகண்ட
மாலை குடலின்வலி மாகுட்டம்—ஆலவிடம்
உட்கரப்பான் மெய்யரிப்பும் உண்டோகொல் லங்கோவை
கைக்குளிருக்க வின்னுங் காண். (அ.கு.)

**வ - கு.**—கிழங்கை வழங்குவதுபோலச் சமூலத்தையும் வழங்க, மேற்படி நோய்கள் நீங்கும்.

## கிழங்கு.

**குணம்.**—இது, துட்டவிடம், பாண்டு, உட்சூடு, சூலை, கிரந்தி, குட்டம், நமைச்சல், அக்கிப்புண், குடல்நோய், கண்டமாலை, முத்தோடம் ஆகிய இவைகளைப் போக்கும்.

துட்டவிடம் பாண்டுவெப்பு சூலைவா தங்கிரந்தி
குட்டம் அரிப்பக்கி கோண்குடல்நோய்—கெட்டகண்ட
மாலைபோம் கொல்லன்கோ வைக்கிழங்கால் முத்தோட
வேலைபோம் பாரில் விளம்பு. (அ.கு.)

**வ - கு.**—கிழங்கை நிழலிலுலர்த்தி, மேற்றோலை நீக்கி நுண்ணிய பொடிசெய்து, அரைமுதல் ஒரு விராகனெடை எடுத்துச் சருக்கரையுடன் கலந்து காலை மாலை இருவேளையுமுட்கொண்டு, புளி, உப்பு நீக்கிப் பத்தியங்காக்க, மேற்கண்ட நோய்களன்றி, பாம்புக்கடிவிடம், கீல்பிடிப்பு, மேகரோகங்கள் தீரும்.

மேற்படிப் பொடியில் ஒரு வராகனெடை எடுத்துக்கஷாயஞ் செய்து கொடுக்க, சீதஞ் சீதமாய்க் கழிகின்ற பேதி குணமாம்.

வேண்டிய அளவு கிழங்கெடுத்து, அதற்குத்தக்கபடி வெங்காயம், சீரகம் சேர்த்து, சிற்றுமணக்கெண்ணெய் விட்டரைத்துப் பற்றிடக்கூடிய பக்குவத்திலெடுத்துக் கீல்வாதங்களுக்குப் பற்றிட மிக நன்மை பயக்கும்.

கொல்லன் கோவையைக் கொண்டு செய்யப்படும் தைலங்கள் வாதரோகத்திற்கும், விடங்களுக்குஞ் சிறந்தது.

---

## ஆடா தோடை. Àdàtòdai.

**வே பெ.—ஆடாதொடை, வாசை,**

**Adhatoda Vasica.**

**Eng.—Malabar-nut**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Aḍḍasaram అడ్డసరం. | Sans. | Vaidyamatru - vrikshaha वैद्यमातृवृक्ष.: / Vàsaka वासकः. |
| Mal. | Aṭa-lóṭakam ആടലോടകം. | Pers. | Bansa * بانسا |
| Kan. | Adusogae ಆಡುಸೋಗೆ / Áḍasóge Sappu / ಆಡುಸೋಗೆ (ಸಪ್ಪು). | Hind. | Arúsá * عروسه |
| | | Duk. | Aḍaraa * عدرسا |

இச்செடி தென் இந்தியாவிலும், வங்காள தேசமுற்றும் ஏராளமாயும், மற்றவிடங்களில் சாதாரணமாயும் பயிராகின்றது. இதன் இலை, மா, நுணாயிலைகளைப்போல 4 முதல் 9 அங்குல நீளமாயும், 2 முதல் 3 அங்குலம் அகலமாயும் இருக்கும். செடி நான்கு முதல் பத்து அடி உயரம் பயிராகும்.

**ப - உ.**—இலை, பூ, பட்டை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- *இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி* - Antispasmodic.
- *கோழையகற்றி - கபஹரகாரி* - Expectorant.
- *நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி* - Germicide.
- *சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி* - Diuretic.

### இலையின் குணம்.

கபாதிக்கம், வாததோடம், பற்பல சுரம், சந்நிபாதம் - 13, வயிற்றுநோய், மேலும் தாபசுரம், உட்சூடு, இரத்த பித்தம், காசம், க்ஷயம், மேலிளைப்பு, வாந்தி, விக்கல், சூலை, குட்டம், மூலரோகம், பித்த சேத்துமப்பிணிகள், அண்டவாயு ஆகிய இவைகளையும் போக்கும். குரலுக்கு சங்கீதம் பாடக்கூடிய தொனியைத்தரும்.

ஆடாதோ டையின் குணத்தை அடைவுட னுரைக்கக் கேளும்.
பாடாத நாவும் பாடும் பரிந்துமே தோடம் போகும்
வாடாத பித்தஞ் சேத்தும ரோகங்கள் விலகிப் போகும்
நாடாது வியாதி தானும் நல்விழிக் குழலி ளோ. (ஏடு.)

ஆடாதோ டைப்பன்ன மையறுக்கும் வாதமுதற்
கோடாகோ டிச்சுரத்தின் கோதொழிக்கும்—நாடின்
மிகுத்தெழுந்த சந்நிபதின் மூன்றும் விலக்கும்
அகத்துநோய் போக்கு மறி. (அ.கு.)

ஆடாதோ டைக்கிரத்த பித்தமறுங் காச
    மானந்த வாயுவுடன் மேலிளைப்பு மேகம்
சூடாகும் தாபசுரம் பித்தகப வாத
    சுரரோகஞ் சந்நிபா தஞ்சூலை குட்டம்
ஓடாவோ வாந்தி விக்கல் மூலரோக முட்கனல்கால்
    தோடமிவை யொன்று மண்டி டாதாம்
வாடாது மனக்கிளர்ச்சி யாகுமிதன் பெருமை
    வகுத்துரைத்தார் முன்னோர்கள் வாழ்ந்திடயா வருமே.
(ஏடு.)

### இலை.

**வ - கு.**—இலை ரசம் 10 முதல் 20 துளிவரை எடுத்து, தேனுடன் கலந்து கொடுக்க, மேற்கூறிய பிணிகள் நீங்கும். சிறப்பாக இரத்த பித்தம், இருமல், காசம், கயம், கபரோகங்கள், சுரம், காமாலை, பித்தாதிக்கம், தீரும்.

இலையைமட்டும் கஷாயஞ்செய்து, அதில் தேன் சேர்த்து உபயோகிக்க, இரத்தபித்தம், கபசுரம், இருமல், க்ஷயம் (கயம்) முதலியன தீரும்.

இரண்டு, மூன்று இலைகளை குறுகவரிந்து, இத்துடன் ஏலக்காய் ஒன்று சேர்த்து, இரண்டு ஆழாக்கு வெந்நீரில் இரண்டுமணி நேரம் ஊறவைத்து வடிகட்டி $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் நாள் ஒன்றுக்கு மூன்று வேளையாகக் கொடுக்க, கபசம்பந்தமான இருமல், சுரம், இரத்தபித்தம் நீங்கும்.

இரண்டு, மூன்று கொழுமையான இலைகளைப் பொடிப்பொடியாகக் கத்தரித்து, ஒரு புதுமண்சட்டியிலிட்டு, தேன் சிறிதுகூட்டி, தீபாக்கினியாக எரிக்க, ஒருவித நன்மணம் வீசும். அத்தருவாயில் அதுமதிரம் வராகனெடை ½, திப்பலி வராகனெடை ¼, தாளீசபத்திரி வராகனெடை ¼ (வேண்டுமானால் சிற்றரத்தை வராகனெடை ⅛) இவைகளை ஒன்றிரண்டாக நசுக்கிச் சேர்த்து, அரைப்படி சுத்தநீர் விட்டு அரைக்காற்படியாகக் குறுக்கிவடிகட்டி, காலை, மாலை இருவேளையும் கொடுத்துவர, கோழைக்கட்டறும்; கபம் வெளிப்படும்; கப இருமல், சுவாசகாசம், கபசுரம், போன்றவைகள் நீங்கும். (இது அநுபவம்.)

ஒருபங்கு இலைக்கு எட்டுபங்கு நீர் சேர்த்து, எட்டில் ஒன்றாகக் குறுக்கி வடிகட்டிய கஷாயத்தைச் சீலையிற்றோய்த்து ஒற்றிடமிட, வீக்கம், சூலை, கீல்பிடிப்பு, வாதவீக்கம், வாதப்பிடிப்பாலுண்டாகும் வேதனைதணியும்.

இலையின்தனிரசம், இரத்தபேதி, சீதமும் இரத்தமும் கலந்துண்டாகும் பேதிகளில் வெகு நன்மைதரும்.

இலையை யுலர்த்தி சுருட்டாகச் சுருட்டி புகைபிடிக்க, சுவாச காசந் தீரும்.

இலை, வேர் இவைகளைச் சமவெடையெடுத்து, அதற்குத்தக்கபடி மிளகுங்கூட்டி, ஊறல் கஷாயஞ்செய்து கொடுக்க, இரைப்பு, உப்பிசம், ஈளை, இருமல், க்ஷயம் (கயம்), சுரம் தணியும்.

### சுரச மெழுகு.

இலையை இடித்துப் பிழிந்த சாற்றை, ஒரு புதிய சுத்தமான மண்பாண்டத்தில்விட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி, இரண்டுமுதல் ஐந்து குன்றியளவு தனியாகவேனும், திப்பிலிச்சூரணம் கூட்டியேனும், நாள் ஒன்றுக்கு மூன்று அல்லது நான்கு முறை உட்கொள்ள, கபப்பிணிகள் குணப்படும்.

### வேறு.

இலை ரசம் ஒருபங்கு, தேன் அல்லது இஞ்சிச்சாறு அரைப் பங்கு, ஒன்று சேர்த்து மெழுகுபதமாய்க் காய்ச்சி, இரண்டு முதல் நான்கு குன்றியளவு நாள் ஒன்றுக்கு மும்முறைகொடுக்க, சுவாசகாசம், ஈளை, இருமல், இளைப்பு நோய் போன்றவைகள் தணியும்.

## பூ.

பூவை வதக்கி இருகண்களின்மீதும் வைத்துக்கட்ட, கண்களில் உண்டாகும் வியாதிகள் தீரும்.

## பட்டை.

இதைக் கஷாயஞ் செய்தாகிலும் சூரணஞ் செய்தாகிலும், சுரம், இருமல், சுவாசம், கயம் போன்ற நோய்களுக்குக் கொடுக்கலாம்.

## வேர்க்குணம்.

இதனால் இருமல், அக்கினிமந்தம், பித்தாதிக்கம் (சுவேதபித்தம்), கடினசுவாசம், கழுத்துவலி முதலியன தீரும்.

காசமொடு மந்தங் கதித்தபித் தங்கொடுஞ்சு
வாசங் கழுத்து வலிமுதலேய்—கூசியே
ஓடாதி ராதிங் கொருநாளு மொண்டொடியே!
ஆடாதோ டைத்தூருக் கஞ்சி. (அ.கு.)

**வ-கு.**—ஆடாதோடை வேரையும், கண்டங்கத்திரி வேரையுங் கஷாயமிட்டு, அதில் திப்பிலிப் பொடி சேர்த்துக் கொடுக்க, காசரோகம் நீங்கும்.

ஆடாதோடை வேர், கண்டங்கத்திரி வேர், சீந்திற்கொடி வகைக்கு பலம் கால் கூடிய எடைக்குப் பதினாறுபங்கு நீர்சேர்த்து, கமலாக்கினியி லெரித்து எட்டில் ஒன்றாகக் குறுக்கி, வடிகட்டி, அதில் தேன் கொஞ்சம் சேர்த்து, நாள் ஒன்றுக்கு இரண்டு, மூன்று முறை கொடுத்துவர, கப இருமல், கோழைக்கட்டு, கபசுரம், தணியும்.

ஆடாதோடை, திராட்சி, கடுக்காய் இவற்றின் கஷாயத்தில் தேனும் சருக்கரையுங் கூட்டி உட்கொள்ள, கொடுமையான இரத்தபித்தம், சுவாச காசம் தீரும்.

ஆடாதோடைவேர், கண்டங்கத்திரி வேர், சுக்கு, கொள்ளு இவைகள் சேர்ந்த கஷாயத்தில், அல்லிக்கிழங்கின் பொடியைக் கூட்டி உபயோகிக்க சுவாசகாசம் தீரும்.

---

## ஆடு தீண்டாப்பாளை—Ádu tíndá pálai.

### Aristolochia Bracteata.

**வே - பெ.—ஆடுதின்னாப்பாளை, ஆடுதொடாப்பாளை, பங்கம்பாளை, பாளை, புழுக்கொல்லி, மறியுண்ணூமூலி.**

**Eng.—Worm-Killer, Indian Birthwort.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Gádide-gaḍa-para-aku గాడిదగడపరాకు. Kaḍapara. కడపర. | Kan. | Sanajali-hullu ಸನ್ಜಾಲಿಹುಲ್ಲು. |
| Mal. | Áṭu-tinṭap-páḷa ആട്ടുതിന്താപ്പാല. | Sans. | Ajaspurisaha. अजास्पर्शः |
| | | Hind. | Gandàn * گندان |
| | | Duk. | Kirá-már * کیڑا مار |

இது, பூண்டு இனத்தைச் சேர்ந்தது. தென் இந்தியாவில் திருவாங் கூரிலும், கீழ்கரையைச்சேர்ந்த நாடுகளிலும், சிங்களத்திலுமுள்ள மணற் பாங்கு, அல்லது நஞ்சை நிலங்களிலும் ஏராளமாய்க் கிடைக்கும். இதன் இலை சாம்பல் நிறமாகவிருக்கும்.

**ப - உ.**—இலை, விதை, வேர், சமூலம்.

**சுவை.**—கைப்பு (குமட்டல்), **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தனகாரி - Emmenagogue.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
- முறைவெப்பகற்றி - முறைவியாதிரோதி - Antiperiodic.

**குணம்.**—மலாஸயக்கிருமி, வாதச்சிலந்தி, பூச்சிவிடம், கருங்குட்டம், கரப் பான், வாதரோகம்—80, பன்றிமாமிசத்தோல்போன்ற குட்டம் (கிடிப குட்டம்) ஆகிய இவைகள், ஆடுதீண்டாப்பாளையால் நீங்கும். பலமும், சுக் கிலமும் உண்டாகும்.

ஆடுதொடாப் பாளைக் ககக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குட்டம் நிறைகரப்பான்—ஆடிடச்செய்
எண்பது வாய்வும் இகல்குட்ட முந்தீரும்
திண்பெறுநற் றுதுவுமாஞ் செப்பு. (அ.கு.)

**வ - கு.**—மேற்கண்ட நோய்களுக்கு, கால் பலம் நிறையுள்ள இலையை, கால்படி வெந்நீரில் இரண்டுமணிநேரம் ஊறவைத்து, வடிகட்டி ⅛ முதல் ¼ ஆழாக்கு வீதம் கொடுக்கலாம்.

உலர்ந்த இலையை மேற்கண்டபடி ஊறல் கஷாயஞ்செய்து கொடுக்க, கிருமிகள் போம்.

**விதை.**

விதைகளைப் பொடித்து ஒரு வராகனெடை எடுத்து, அரை முதல் ஒரு பலம் சிற்றாமணக்கெண்ணெயில் கலந்து கொடுக்க, வயிற்றுவலி, சூதகத்தடை, சூதகக்கட்டு, முறைச்சுரம், பிரசவவேதனை இவைகளை நீக்கு வதுடன், மலாசயக்கிருமிகளையும் வெளிப்படுத்தும்.

**வேர்.**

வேரை அரைத்து அரை முதல் ஒரு வராகனெடை கொடுக்க, பாம்புவிடம் முறியும். இதர விடங்களும் நீங்கும்.

வேர்த்தூளை, ஒன்று முதல் ஒன்றரை வராகனெடை வீதம், தனியேயாவது, வெந்நீருடன் கலந்தாவது கொடுக்க, பிரசவவேதனையைத் தூண்டும்.

**சமூலம்.**

இப்பூண்டின் சமூல ரசத்துடன், நேர் பாகம் நல்லெண்ணெய் கூட்டி எரித்துப் பக்குவபாகத்தில் எடுத்து வடிகட்டி, கருங்குட்டம், கரப்பான் இவைகளுக்குப் பூசிவரலாம்.

சமூலமும் சேர்த்தரைத்து, சற்றேறக்குறைய தேங்காயளவெடுத்துருட்டி ஒருபடி நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிகட்டி கால், அரைபலம் வீதம் 5—5 நாள் வீதம் 40 நாள் கொடுத்துவர, ஆரம்பகுட்டம், தடிப் பேறிய குட்டம் நீங்கும். உப்பு, புளியாகா. (அநுபவம்.)

---

## ஆடை யொட்டி—Adaiyotti.

**Triumfetta - Rhomboidea.**

Sans. Jhinjharitá झिंझरित. | Hind. Chitki. * چٹکی

இது, இலங்கையிலும், தென் இந்தியாவிலும், சாதாரணமாய்ப்படரும் பூண்டு. இப்பூண்டுகளுள்ள இடங்களில் உட்கார்ந்தால், இதன் காய்கள் ஆடையில் ஒட்டிக் கொள்ளும். இதனால் இதற்கு, ஆடை யொட்டி என்று பெயருண்டாயிற்று.

**ப - உ.**—இலை, பூ, காய்.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent. }

**வழக்கும், குணமும்.**—இலையை அரைத்து, சருக்கரை சேர்த்து நீரிற் கலக்கிக் கொடுத்துவர, வெட்டை தணியும்.

இலையையும், காயையும் அரைத்து நீரிற்கலக்கி மூத்திர தாரையிற் பீச்ச, மேற்படி ரோகம் நீங்கும். இதன் இலையையும் பட்டையையும் அரைத்து, நீரிற் கலக்கி உள்ளுக்குக்கொடுக்க, அதிசாரம், அசீரணபேதி, சீதபேதி குணப்படும்.

---

## ஆதண்டம்—Âtaṇḍam.

**(வே - பெ.)—ஆதண்டன், ஆதண்டை, ஆதொண்டை, ஆதொண்டன், ஆதொண்டம், காற்றெட்டி, காத்தொட்டி, காத்தோட்ட, காகதுரத்தி**

**Cappòris Zeylanica (C. Horridà.)**

Tel. Árutonda ఆరుదొండ. | Mal. Àtanda ആതണ്ട.

இது கொடிவகுப்பிற் சேர்ந்தது. தென் இந்தியாவில் தோட்டங்களின் வேலிகளில் பயிராகும்.

**ப - உ.**—காய், வேர்.

**சுவை.**—சிறுகைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை. { தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic. }

**குணம்.**—இதனால், மண்டைக்குடைச்சல் (கபால நோய்), வாதபீநசம், தொண்டையிற் சேரும் கபம், வாதக் குடைச்சல் முதலியவை தீரும்.

மண்டைக்கு டைச்சலறும் வாதத்தின் பீநசம்போம்
தொண்டைக் கபமுந் தொலையுங்காண்—மிண்டுசெய்யும்
வாதக் கடுப்பகலு மாதே ! ஆ தொண்டைக்குப்
போதப்பல பிணிபோம் போம். (அ.கு.)

### காய்.

**வ - கு.**—காயைச் சமைத்தும், வற்றலிட்டும் வழங்குவது, தென்நாட்டு வழக்கு. இதனால் மேற்கண்ட நோய்கள் தணியும்.

### வேர்.

வேர்ப்பட்டை பலம் 3, இதை இடித்து அரைப்படி நீரிலிட்டுக், காய்ச்சி, மூன்றுழாக்காகக் குறுக்கி வடிகட்டி, மூன்றுபங்குசெய்து, நாள் ஒன்றுக்கு மூன்று முறையாக உட்கொள்ள, அக்கினிமந்தம், இரைப்பையின் தாபனம், வாந்தி, மார்புவலி, குணமாகும். (வேர் கிடைக்காவிட்டால் இலையை உபயோகிக்கலாம்).

இதன் வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி தலைமுழுகிவர, பீநசம், தொண்டைக்கட்டு, வாதக்குடைச்சல், மண்டைக்குடைச்சல் தீரும். இது கிராமவாசிகள் வழங்குஞ் சிறு தைலங்களில் ஒன்று.

---

## ஆமணக்கு—Āmaṇakku.

**வே - பெ.—ஏரண்டம், சித்திரம், தலரூபம்.**

**Ricinus Communis.**

**Eng.—Castor oil plant.**

ஆமணக்கு என்னும் பெயரால் வழங்கும் செடிகள் இருவகைப்படும். அவற்றுள் ஒன்று சிறுமரம் (பெருஞ்செடி), மற்றொன்று குத்துச் செடி வகுப்பில் சேரும்.

### சிறுமர வகுப்பு.

இச்சாதியில் சேர்ந்தவை (1) சிற்றாமணக்கு, (2) பேராமணக்கு, (3) செவ்வாமணக்காம். இம்மூன்றுக்கும் பொதுப்பெயர் ஆமணக்கு.

இது, முன்கூறிய சிற்றாமணக்கு, பேராமணக்குகளைச் சிறப்பாகவும் செவ்வாமணக்கைப் பொதுவாகவுங் குறிக்கும். இச்செடிகளின் பொது, சிறப்புப் பெயர்களும், அவைகளின் உறுப்புகளும், அடியிற்கண்ட பெயரால் வழங்கும்.

### குத்துச்செடி வகுப்பு.

இவ்வகுப்பிற்சேர்ந்தவை (1) காட்டாமணக்கு, (2) எலியாமணக்காம்.

**Eng.—Castor oil plant.**

| | | | | |
|---|---|---|---|---|
| **Tam.** | **Āmaṇakkan-cheḍi** ஆமணக்கஞ்செடி. | | **Arab.** | **Shajratul-khirvaa** شجرة الخروع * |
| **Tel.** | **Āmudapu-cheṭṭu** ఆముదపు చెట్టు. | | **Pers.** | **Darakhte-bèdanjir** درخت بید انجیر * |
| **Mal.** | **Āvaṇakku** ആവണക്ക. | | **Hind.** | **Arand-kà-pèr** ارنڈ کا پیڑ* ; **Àrandì-kà-pèr** ارنڈی کا پیڑ* |
| **Kan.** | **Harala-giḍa** ಹರಲ-ಗಿಡ. | | | |
| **Sans.** | **Yeranda-vrikshaha** एरण्ड वृक्षः. | | **Duk.** | **Yarandì-kà-jhàr** یرنڈی کا جھاڑ* |

Eng.—Castor oil-seeds.

Tam. Àmaṇakku-muttu ஆமணக்குமுத்து.

Tel. Àmudapu-vìṭṭulu ఆముదపు విత్తులు.

Mal. Àvaṇakkin-kuru ആവണക്കിൻ കുരു.

Kan. Haraḷu ಹರಳು

Sans. Yèraṇḍa-bìjam एरण्डबिजम्.

Arab. Ḳhirvaa * خروع
Bazrul-khirvaa * بزرالخروع

Pers. Bèdanjìr * بید انجیر
Tukhme-bèdanjìr تخم بید انجیر *

Hind. Arand * ارنڈ
Arand-kè-bìnj ارنڈی کا بینج *
Arandi * ارنڈی
Arandi-kè-bìnj ارنڈی کے بینج *

Duk. Yarandi * یرنڈی
Yarandi-kè-bìnj یرنڈی کے بینج *

---

## ஆமணக்கெண்ணெய்—Castor Oil.

Eng.—Castor Oil.

Tam. Àmaṇak-keṇṇey ஆமணக்கெண்ணெய்.

Tel. Àmudam ఆముదము.

Mal. Koṭṭeṇṇa കൊട്ടെണ്ണ.

Kan. Haraḷeṇṇe ಹರಳೆಣ್ಣೆ.

Sans. Yeranda-Tailam एरण्ड-तैलम्.

Arab. Dhonul-khirvaa * دهن الخروع

Hind. Arand-kà-tèl * ارنڈ کا تیل
Arandì-kà-tèl * ارنڈی کا تیل

Duk. Yarandì-kà-tèl * یرنڈی کا تیل

Eng.—The small seeded variety of castor-oil plant.

Tam. Chittà-maṇakkan chedi சிற்றாமணக்கஞ் செடி.

Tel. Chiṭṭàmudapu-cheṭṭu చిట్టాముదపు చెట్టు.

Mal. Chiṭṛàvaṇakkam-cheṭi ചിററാവണക്കം ചെടി.

Kan. Chiṭṭa-haraḷa-giḍà ಚಿಟ್ಟಹರಳಗಿಡ.

Sans. Kshudra Yèraṇḍa-vrikshaha क्षुद्र एरण्ड वृक्षः.

Arab. Shajratul-khirvaaaus-saghìr * شجرة الخروع الصغير

Pers. Darakhte-bèdanjìre-khurd * درخت بید انجیر خورد

Hind. Chhòṭi-araṇḍ-ka-pèr چھوٹی ارنڈی کا پیڑ *

Duk. Chitli-yarandì-kà-jhàṛ * چٹی یرنڈی کا جھاڑ
Chhoti-yarandi-kà-jhàṛ * چھوٹی یرنڈی کا جھاڑ

Eng.—Seeds of the small-seeded variety of castor-oil plant.

Tam. { Chirṭàmaṇakkaṉ-koṭṭai சிற்றுமணக்கங்கொட்டை. / Chirṭàmaṇakku-muttu சிற்றுமணக்குமுத்து.

Tel. Chiṭṭàmudapu-vittulu చిట్టాముదపు విత్తులు.

Mal. Chiṭravaṇakkin-kuru ചിററാവണക്കിൻ കുരു.

Kan. Chiṭṭa-haraḷu ಚಿಟ್ಟ ಹರಳು.

Sans. Kshudra Yèraṇḍa-bìjam क्षुद्रैरण्डबीजम्.

Arab. { Khirvaaaus-ṣaghìr خروع الصيغر* / Bazrul-khirvaaaus-ṣaghìr بزرالخروع الصيغر*

Pers. Tukmè-baidanjìre-khurd تخم بيد انجير خرد*

Hind. { Chhòṭi-aranḍ چهوٹی ارنڈ* / Chhòṭi-arand-kè-binj چهوٹی ارنڈی کے بینج* / Chhòṭi-aranḍi چهوٹی ارنڈی* / Chhoti-arnḍi-kè-binj چهوٹی ارنڈی کے بینج*

Duk. { Chiṭlì-yaranḍi چٹلی یرنڈی* / Chiṭlì-yaranḍi-kè-binj چٹلی یرنڈی کے بینج* / Chhòṭi-yarandi چهوٹی یرنڈی* / Chhòti-yarandi-kè-binj چهوٹی یرنڈی کے بینج*

---

## சிற்றுமணக்கு நெய் (எண்ணெய்)
## Chirṭàmaṇakku Nai (Eṇṇéy).

Eng.—Castor oil from the seeds of the small seeded variety.

Tel. { Chiṭṭámudam-nune చిట్టాముదమునూనె.

Mal. { Chitravanakkin-eṇṇa ചിററാവണക്കിൻ എണ്ണ.

Kan. { Chiṭṭa haraḻeṇṇe ಚಿಟ್ಟಹರಳೆಣ್ಣೆ.

Arab. { Dhonul-Ḵhirvaaaus Ṣaghir دهن الخروع الصيغر*

Pers. { Roghane-Tukme-Baid anjir Khurd. روغن تخم بيد انجير خورد*

Duk. { Chhoti-Yarandi-Ka-tèl چهوٹی یرنڈی کا تیل*

Hind. { Chhóti Yaranḍi-Ka-tèl چهوٹی ارنڈی کا تیل*

Sans. { Lahu-Yèranda-tailam क्षुद्रैरण्डतैलम्.

## பேராமணக்கு—Péràmaṇakku.

**Recinus Inermis.**

இது படுகையாமணக்கென்றும் வழங்கும் (ஆற்றங்கரை யோரத்தில் பயிரிடப்படுவதால்).

ஆமணக்கு என்னும் மொழியின் முன் 'பெரிய' என்கிற சொல்லைக் கூட்டி பேராமணக்கு என்று வழங்குவதுபோல இதன் இலைக்கும், வித்துக்கும், வேருக்கும், நெய்க்குமுன் 'பெரிய' என்கிற சொல்லை அமைத்துக் கொள்க. அவ்வாறே இதர மொழிக்குமாம்.

## செவ்வாமணக்கு—Chevvámáṇakku.

**Ricinus Tanarius.**

இதற்குறிய இதர மொழிகளின் பெயர்களை, மேற்படியாகவே அமைத்துக் கொள்க.

இது இந்தியா முற்றும் எளிதில் கிடைக்கும்.

ப - உ.—இலை, வேர், வித்து.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - **Galactagogue.**
வாதமடக்கி - வாதஹரகாரி - **Anti - vata.**

## சிற்றாமணக்கு.

இது இந்தியா முற்றிலும் எளிதில் கிடைக்கக்கூடிய செடி.

ப - உ.—இலை, வேர், வித்து.

### இலை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - **Lactagogue.**
வாதமடக்கி - வாதஹரகாரி - **Anti - vata.**

**வ - கு.**—இலையைக் கஷாயஞ்செய்தாவது, இலையின் சுரசமெடுத்தாவது உள்ளுக்குக் கொடுத்து, இவ்விலையிட்டுக் காய்ச்சிய வெந்நீரால் ஒற்றிடமிட்டு, இவ்விலையை யரைத்துப் புற்கை செய்தாவது, இலையை வதக்கியாவது, மார்பிற்கட்டிவரப் பெண்களுக்குப் பால் சுரக்கும்.

இலைகளைச்சிறுக அரிந்து, சிற்றாமணக்கு நெய்விட்டு வதக்கிச் சூடுடன், வேதனையுடன்கூடிய கீல்வாதங்களுக்கும், வாத ரத்த, வீக்கங்களுக்கும் ஒற்றிடமிடலாம். இதனால் வேதனைதணியும்.

சிற்றாமணக்கிலையும், கீழாநெல்லியிலையும் சமபாகமெடுத்து அரைத்துச் சிறு எலுமிச்சங்காயளவு, மூன்று நாளைக்கு காலை காலையில் மாத்திரம் கொடுத்து, நாலாம்நாள் 3, 4 முறை வயிறுபோவதற்குரிய அளவு சிவதைச்சூரணம் கொடுக்க, காமாலை தீரும்.

மலக்கட்டும், வயிற்றுவலியுமுள்ள காலத்திலேனும், சூதகக்கட்டு அல்லது சூதகத்தடையுடன் அடிவயற்றில் வலிகாணும்போதேனும், அடிவயிற்றின்மீது சிற்றாமணக்கெண்ணெய் இலேசாகத்தடவி, அதன்மேல் சிற்றாமணக்கிலைகளைவதக்கிப் போட்டுவர, அவைகள் குணப்படும்.

### வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வாதமடக்கி - வாதஹரகாரி - **Anti - vata.**

**வ - கு.**—வாதத்தைத் தன்னிலைப்படுத்தச் செய்யும் கஷாயங்களிலும், தைலங்களிலும், ஆமணக்கின் வேரைச் சேர்ப்பது வழக்கம்.

தேரையர் தைலவருக்கச் சுருக்கத்தில் உள்ள (1) வாதாந்தத்தைலம், (2) மூலயோக நிற்குண்டித்தைலம், (3) பூதிகாதைலம், (4) சிறியவிடமுட்டித்தைலம், (5) சுக்குத்தைலம் இவைகளில் மேற்படி வேர் சேருவதைக் கவனிக்க.

வேரைக் குடிநீர்செய்து அதில் கொஞ்சம் பூநீர் சேர்த்து, காலை மாலை இருவேளையாக 3, 5 நாள் கொள்ள, பக்கசூலை குணமாகும்.

## வித்து.

சிற்றுமணக்கு வித்தின் ஓட்டை நீக்கி, பருப்பைப் பச்சையாய் அரைத்தாவது அல்லது ஒன்றிரண்டாய் நசுக்கி அனலில் வதக்கியாவது, கட்டிகளின்மீது வைத்துக்கட்டிவர, கட்டிகள் எளிதில் பக்குவமடைந்து உடையும்.

இவ்வித்தின் பருப்பை ஒன்றிரண்டாகப் பொடித்து, சட்டியிலிட்டு வதக்கிச் சீலையில் முடிந்து ஒற்றிடமிட, வயிற்றுவலி, மூத்திரப்பைதாபிதம், கல்லடைப்பு, சதையடைப்பு, நீரடைப்பு, பக்கவலி, புறவுறுப்புகளிற் காணும் வீக்கந் தணியும்.

## நெய்.

ஆமணக்கு வித்திலிருந்து எடுக்கும் நெய்—" ஆமணக்கு நெய் " அல்லது " ஆமணக்கெண்ணெய் " என வழங்கும்.

ஆமணக்கு வித்திலிருந்து நெய் இருவகையாக எடுக்கப்படும். அவை (1) பச்சை எண்ணெய், (2) ஊற்றின எண்ணெய் என்று வழங்கும்.

### (1) பச்சை எண்ணெய்.

வித்துகளை உலர்த்தி, ஓடுகளைநீக்கி, இயந்திரத்தின் மூலமாய்ப் பருப்புகளை அழுத்தி வடியும் எண்ணெய், பச்சை எண்ணெய்.

### (2) ஊற்றின எண்ணெய்.

ஒரு அகண்டசாலில் நான்குபங்கு நீர்விட்டு, அதில் ஷை பருப்புகளை இடித்து ஒரு பங்கு சேர்த்து, தீயிட்டு எரிக்க, நெய் கக்கி நீர்மீது மிதக்கும். இதை, அகப்பையால் முகந்து எடுத்து வேறு பாத்திரத்திற் சேர்த்து, அதிற் கலந்துள்ள அற்ப நீரை அனலில்வைத்துப் போக்கினதே, ஊற்றின எண்ணெய்.

**குறிப்பு.**—நீருக்குப்பதிலாக, இளநீர் சேர்த்துக் காய்ச்சி எடுக்கும் நெய், குற்றமற்றதும், தேகத்திற்கு மிகு நன்மை பயப்பதாகவு மிருக்கும்.

ஷை பருப்புகளைச் சுத்தமான நீரில் ஊறவைத்துக் கழுவி எளிதாக வறுத்து இடித்து மேற்கூறியபடி காய்ச்சியும் எடுப்பார்கள்.

சிறு முத்துக்களிலிருந்து எடுக்கப்படும் நெய்க்குச் சிற்றுமணக்கு நெய், சிற்றுமணக்கெண்ணெய், சிறு முத்துக்கொட்டை எண்ணெய், கொட்டைமுத்து எண்ணெய், ஏரண்டத்தெண்ணெய் என்றும் ;

பெருமுத்துக்களிலிருந்து எடுப்பதற்குப் பெருமுத்துக்கொட்டை எண்ணெய், விளக்கெண்ணெய் என்றும் பெயர்கள் வழக்கத்தில் வந்திருக்கின்றன.

மேற்கண்ட இருவகை முத்துக்களினெண்ணெயில், எது மலினமற்றுத் தூய் மையாயும், வைக்கோல் நிறமாயும், நன் மணத்துடனுமிருக்கின்றதோ, அதுவே மேலானது. எது அதிக மஞ்சள் நிறமாயும், மிகு கனமாயும் தெவிட்டலாகவுமிருக்கிறதோ, அது தாழ்ந்தது.

**செய்கை.** { மலமிளக்கி - லகுவிரேசநி - **Laxative.**
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - **Emollient.** }

**பொதுக் குணம்.**—ஆமணக்கெண்ணெய்—மலத்தைக்கழிக்கும். கோவாதம், குன்மம், குடலேற்றம், தேகம் - கண் - மூக்கு - செவி - வாய் இவைகளிலுண்டாகின்ற எரிச்சலை நீக்கும். தாதுவிருத்தியையுண்டாக்கும். உடலைப் பொன்னிறமாக்கும்.

ஆமணக்கு நெய்யால் ஊலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே!—வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறும்
உள்ளில்வரு குன்மம்போ மோது. (அ.கு.)

அம்பொ னிறமும்விந்து மாங்குடலி னேற்றமறும்
ஐம்பொறிச் சூடெரிவு மாறுங்காண்—அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் ! நலஞ்செறிந்த
ஆமணக்கி நெய்யை யருந்து.

ஆமணக் கெண்ணெய் தன்னை யணிநில மறியக் கேண்மின்
பூமணச் சந்து தோறும் பொருந்திய வாதம் போக்கும்
சீமந்தந் தானும் போக்குந் திகழ்வுடன் விரைவு முண்டாம்
நீமனக் குடலில் வாதஞ் சேர்குட லேற்றம் போமே. (ஏடு.)

**சிறப்புக்குணம்.**—சிற்றுமணக் கெண்ணெய்—இதனால் மருந்தின் வேகம், வாயுவினால் மூலத்திலுண்டாகும் அழலை (நீர்ச்சுருக்கு, பிரமேகம்), ஆகிய வைகளை நீக்கும்.

குழந்தைகளைத் தாய்போல் வளர்க்கும்.

இதைப் பேதியாவதற்குக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கும் பிரசவித்த பெண்களுக்கும் பேதிக்குக் கொடுக்க, இது ஓர் சிறந்த மருந்தாகும். இது குடலைத்தூண்டி, மலத்தைச் சுகமாகக் கழிக்கும்; வயிற்றுவலி, ஆசனக்கடுப்பு முதலிய துர்க்குணங்களைப் பிறப்பிக்காது. ஆகையால், கைக் குழந்தை முதல் கிழவயதுடையவர் வரையிலும், கருப்பிணி, பிரசவித்த பெண், பித்ததேகி, மூலரோகி, சீத இரத்த பேதியால் வருந்துவோர், பிரமேக ரோகிகளுக்குப் பயமின்றிக் கொடுக்கலாம்.

அக்கினிமந்தம், வயிற்றுவலி இவற்றால் துன்புறுவோருக்கு இதைக் கொடுக்க, சாந்தமாய்ப் பேதியாகும்.

கபத்தின் காரணமாகக் கோழைக்கட்டு, சுவாசம், சுவாசகாசம், இவை களால் பாதிக்கப்படுபவர்களுக்குச சிற்றுமணக்கு இரண்டு பங்கு, தேன் அரைப்பங்கு சேர்த்து, நன்றாய் உறவுபடக் கலந்து கொடுக்க, இலேசாக மலம் போதலுடன், அவர்கள் சுகத்தையுமடைகிறார்கள்.

**கொடுக்கக்கூடிய அளவு**—குழந்தைகட்கு அரை உச்சிக்கரண்டி முதல் ஒரு உச்சிக்கரண்டி.

**பெரியவர்களுக்கு.**—அரைப்பலம் முதல் ஒன்றரைப் பலம்.

**கொள்ளும்விதம்.**—எண்ணெயைத் தனித்தேனும், அல்லது உப்புச் சேர்ந்த நீராகாரம் (நிசித்தண்ணீர்), சுக்குக்கஷாயம், சோம்புத்தீநீர், ஓமத் தீநீர், எலுமிச்சம்பழரசமும் சருக்கரையுஞ் சேர்ந்த பானம், பால், காப்பித் தண்ணீர் போன்ற திரவத்துடன் கூட்டிக் கொடுக்க, கடினமின்றிச் சுக பேதியாகும்.

மூல ரோகங்களுக்கு, எண்ணெயை மேலுக்கு உபயோகிக்கலாம்.

மூலைக்காம்புவிரணம், மூலை வெடிப்பு இவைகளுக்குச் சீலையில் நனைத் துப் போட்டுவர, குணப்படும்.

வாதநோய்களைப் போக்க, வாதநாசத்தைலம், கழற்சித்தைலம், மெரு குள்ளித்தைலம் முதலிய தைலங்களிலும்; மாந்தத்தைப் போக்க, மாந்த எண்ணெய்களிலும்; மேக ரோகங்களைப்போக்க, இரசத்தைலங்களிலும் சேரும்.

கண்கள், மருந்துகளின் வேகத்தாலும், தூசுகள்விழுந்து அருகிச் சிவந் தாலும், சிற்றுமணக்கெண்ணெயும், மூலைப்பாலும் கூட்டிக் குழைத்துக் கண்ணிலிட, சிவப்புமாறும், அருகலுங்குணமாகும்.

மலக்கட்டுள்ளவர்கள், சிற்றுமணக்கெண்ணெயை ஆசனவாயின் உட் புறத்தில் தடவிவர, மலமிளகி வெளிப்படும்.

உடம்பில் மேல்தோல் உராய்ந்து இரத்தங்குழம்பக்கண்டால், சிற்று மணக் கெண்ணெயைத் தடவ, எரிச்சல் நீங்கி, இரத்தமும் நின்று, அவ்விடம் முன்னிருந்த நிலையையடையும்.

முக்கூட்டு நெய்யில் இதுவுமொன்று ; அதாவது எள் நெய், முத்து நெய், பசுவின் நெய்.

ஆமணக்கு நெய் மூன்று பங்கு, எண்ணெய் இரண்டு பங்கு, பசுவின் நெய் ஒரு பங்கு கூட்டி மூழ்கிவர, வாததேகிகளுக்குண்டாகும் பிணிகளும் ;

ஆமணக்கு நெய் இரண்டு பங்கு, எண்ணெய் ஒரு பங்கு, பசுவின் நெய் மூன்று பங்கு சேர்த்து மூழ்கிவர, பித்ததேகிகளுக் குண்டாகும் நோய்களும் ;

ஆமணக்கு நெய் ஒரு பங்கு, பசுவின் நெய் இரண்டு பங்கு, எண்ணெய் மூன்று பங்கு கூட்டி மூழ்கிவர, கபதேகிகளுக்குண்டாகும் துன்பங்களும் நீங்கும்.

## சிற்றுமணக்கு—பேராமணக்கு.

இவ்விரண்டிற்குமுள்ள வேற்றுமை, கொட்டையின் அளவைப் பொருந்தியதாகும். சிற்றுமணக்கின் கொட்டைச் சிறிதாகும்; பேராமணக்கின் கொட்டை, சிற்றுமணக்கின் வித்தைவிடப் பெரிதாயுமிருக்கும். இதனால், இவ்விருவகைக் கொட்டையினின்றும் வடிக்கும் நெய்யிலும் வேற்றுமையுண்டு என்று சிலர் கருதுகிறார்கள். மற்றுஞ்சிலர் நெய் எடுக்கவேண்டிய முறைமையிற் செய்ய, இவ்விரண்டு வகை முத்துக்களின் நெய்யில் யாதொரு பேதமுமில்லை என்கிறார்கள். அநுபவத்தில், இவ்விரு கொள்கைகளும் உண்மையே. எங்ஙனமெனில், கடைகளில் வியாபாரத்தின்பொருட்டு விற்கப்படும் நெய்க்கும், மருந்தாக வழங்குவதற்கு எடுக்கப்படும் நெய்க்கும், இருக்கும் வித்தியாசமேயாம்.

The above are the general names of castor oil, whether obtained from the seeds of the large-seeded variety or from the small-seed. But there is a great difference between these two articles as found in the bazaars of Southern India ; so much so, the one is used by Indians only for lamp, and the other for medicinal purposes. The latter is viscid, nearly colourless or of pale yellow colour, and has a peculiar bland oily taste with a slight nauseous smell. The former is much thicker, more or less of brown colour and has an acid and very disagreeable nauseous taste and odour. Its action as a purgative is much stronger, and generally accompanied with much griping. It is often used in Hospital practice with Purgative Enemata, for which purpose it is more suited, in my opinion, than the other article. * These oils are distinguished in the bazaar by the following names :—Chiṭṭàmanak-keṇṇey and Viḷak-keṇṇey.

---

* The above remarks are applicable only to the varieties of castor oil, sold in the bazaars ; but I believe that there is no difference between the oil of small and large seeds, if they are prepared in a proper manner or by cold-drawn process. Dr. Bidie has kindly furnished the following note on the subject, when the proof of this form was submitted to his examination :—

I have prepared oil from both varieties of the seeds by cold-drawn process and there was not the least difference as regards quality or action between them. Several dozen bottles of each were prepared, so there could be no chance of error—Vide pages 187 and 188, Supplement to the Pharmacopœia of India by Moideen Sheriff. G.M.M.C.—1869.

## ஆயில்—Āyil.

**இது பூதிகம் என்றும் வழங்கும்.**

தென் இந்தியாவில் பயிராகிற மரவகுப்பில் ஒன்று.

**ப - உ.**—பட்டை.

**செய்கை.** { முத்தோடமகற்றி - திரிதோஷஹரகாரி - **Anti - tridosha.**
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**

**குணம்.**—வாதாதி முத்தோடங்களையும், பழைய சுரத்தையும் போக்கும்.

ஆயி லுரியை யடுநீரு ணித்தியமெய்
யாயிலு ரியையெனி ல ரவிமிசை—யாயில்
வரிசையாக் கற்குநிகர் (வல்லியட்டுண் மெய்க்கு
வரிசையாக் கத்தையுறு வை). (தே.ய.)

**வ - கு.**—இதன் பட்டையை, நிழலிலுலர்த்தியிடித்துத் தூள் செய்து, அதில் ஒருபலமெடுத்து, ஒருபடி நீர்விட்டு, ஒரு நாள் முற்றும் சூரியபுடம் வைத்து, பிறகு திரிகடுகுத்தூள் வகைக்கு அரைக்கால் பலம் சேர்த்து, கமலாக்கினியாக வெரித்து, முக்காலாழாக்காகச் சுண்டினபின் இறக்கி, வடிகட்டிக் குடித்துவர, வாதாதி முத்தோடங்கள் கோபிக்காமல் தத்தம் நிலைமையில் நிற்கும். சுரத்தையும் போக்கி உடலைத் தாயைப்போல பாது காக்கும்.

“ ஆயிலகுபுனலணலையடுநெறி ”—என்கிற வாக்கியத்தாலுமறிக. (தே.க.)

முத்தோடத்தைப் போக்கக்கூடிய தைலங்களிலும், வாத கோபத்தைத் தணிக்கக் கூடிய தைலங்களிலும் இப்பட்டை சேரும்.

---

## ஆரைக்கீரை—Āraikkirai.

**வே - பெ.—சதுப்பன்னி, நீர் ஆவாரை.**

**Marsilea Quadrifolia.**

இது நீர்தங்கிய இடங்களில் பயிராகும், நான்கு இதழ்கள் கூடியது.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி , சீதளகாரி - **Refrigerant.**

**குணம்.**—இது பித்தநோய், அதிமூத்திரம், இரத்தபிரமேகம் ஆகியவைகளைப் போக்கும்.

தின்று லுரிசைதருந் தீராப் பயித்தியத்தைப்
பொன்றுத நீரிழிவைப் புண்ணீரை—யென்றுமிந்த
வூராரைச் சாராம லோட்டிவிடு நாலிதழார்
நீராரைக் கீரையது நீ. (அ.கு.)

**வ - கு.**—இதைச் சமைத்துண்ண மேற்கண்ட ரோகங்களைத் தீர்க்கும்; நாவிற்கு உருசியைத்தரும்.

இதை நிழலிலுலர்த்திக் கஷாயஞ்செய்து, அதில் பால், சருக்கரை சேர்த்து உட்கொண்டு வரலாம்.

# ஆலமரம்—Âl (Alamaram).

(வே - பெ.)—இயக்குரோதம், காமரம், கோளி, தொல்மரம், பழுமரம், பூதம், வடம், வானோங்கி.

Ficus Bengalensis.

Eng.—The Banyan tree.

| | | |
|---|---|---|
| Tel. | Marri | మర్రి. |
| Mal. | Pêral | പേരാല് |
| | Pêralinmaram | പേരാലിൻ മരം. |
| Kan. | Allada | ಆಲದ. |
| Sans. | Vata | वटः |
| Hind. | Bargad | * برگد |
| Urd. | Boru | * بڑ |

இம்மரமானது இந்தியாவின் எப்பாகங்களிலும் சர்வ சாதாரணமாயுள்ளது.

**ப - உ.**—இலை, பழம், விழுது, பால், பூ.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்**—சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

## சமூலம்.

**குணம்**—இதன் சமூலத்துக்கு, மேகம், வயிற்றுக்கடுப்பு, நீரிழிவு இவைகளைப் போக்கும் சக்தியுண்டு.

சொல்லுகின்ற மேகத்தைத் துட்ட அகக்கடுப்பைக்
கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்காண்—நல்லாலின்
பாலும் விழுதும் பழமும்விதை யும்பூவும்
மேலும் இலையுமெண வின். (அ.கு.)

## ஆலம்பால்.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**சுவை**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**குணம்.**—மேகத்தைப்போக்கும், அசைகின்ற பல்லை இறுக்கும், தலைக்குக் குளிர்ச்சியைத் தரும், சுக்கிலத்தை விருத்திசெய்யும்.

ஆலம்பால் மேக மறுத்தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குக் குளிர்ச்சிதரும்—ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்த மதிமுகத்தாய் ! சொல். (அ.கு.)

**வ - கு.**—நாக்குவெடிப்பு, பிரமேகம், தாதுநட்டம் இவைகளுக்கு உள்ளுக்கும் ; பல் ஆட்டம், கால்வெடிப்பு இவைகளுக்கு மேலுக்கும், உபயோகிக்கலாம். விழுதைக்கொண்டு பல்துலக்கப் பல்லிறுகும். வயிற்றுளைச்சலைப் போக்கும்.

"ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலு மிரண்டும் சொல்லுக் குறுதி." (ப - மொ.)

## ஆலம் பழுப்பு

இதைச்சுட்டுச் சாம்பலாக்கி, நல்லெண்ணெயில் கலந்து கரப்பானுக்குப் பூசக் குணமாகும். ஆலம்பழுப்பிலையை அரிசிப்பொரியோடு சேர்த்துக் கஷாயமிட்டுக்கொடுக்க, அதிவேர்வையை உண்டாக்கும்.

## ஆலம்விதை.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணம்.**—வயிற்றைக் கழிக்கும். தேகபலத்தை உண்டுபண்ணும்.

**வ - கு.**—மலச்சிக்கலைப் போக்கவேண்டிச் செய்யும் லேகியங்களுடன், இதைச்சேர்த்துக் கொள்ளலாம். தேகபலத்தைத்தரக்கூடிய இதர லேகியங்களோடும், இதைச் சேர்த்து உபயோகிக்கலாம். இரத்த காசத்துக்கு, அகத்தியர் கும்மி 47, 48-வது பாடலில் சொல்லியிருக்கும் மருந்து முறையில் இந்த விதையும் சேர்ந்திருக்கிறது.

## ஆலம்பட்டை.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**வ - கு.**—இதைக் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவர, வாய்ப்புண், வாய்நாற்றம், நாவெடிப்பு, ஈறுப்புண் இவை போம். விரணங்களைக் கழுவவும் இதை உபயோகப்படுத்தலாம்.

பட்டையை இடித்து 10 மடங்கு ஜலம்விட்டு, நன்றாக ஊறவைத்து எடுத்துக் கஷாயத்தை உள்ளுக்குக் கொடுத்துவர, மதுமேகம் நீங்கும்.

## ஆல் வேர்ப்பட்டை.

**வ - கு.**—இதை முறைப்படிக் கஷாயமிட்டுப் பாலுடன் சேர்த்துக்கொடுக்க, மேகவெள்ளை நீங்கும்.

மேற்படிக் கஷாயத்தைத் தனியாக வெளிப்பிரயோகமாகவும் உபயோகிக்கலாம்.

## ஆலிலை.

**வ - கு.**—இலையை வதக்கி, மேகக்கட்டிகளுக்குவைத்துக் கட்டலாம். இதனால் கட்டி உடைந்து சீழ் நீங்கும்.

## ஆலமொட்டு.

**வ - கு.**—இதைப் பால், சர்க்கரை முதலியவற்றோடு சேர்த்து, வயிற்றுளைவுக்குக் கொடுக்க, நீங்கும்.

## ஆலம்பழமும், வேர்க்கொழுந்தும்.

**வ - கு.**—இவை சுக்கிலத்தைப் பலப்படுத்தும்.

## ஆலங்குச்சி.

**வ - கு.**—இதனால் தினமும் பல்துலக்கிவர, பல்நோய், ஈறுநோய் முதலியவை நீங்கி, பல் உறுதிப்படும். ஈறுகட்டு, இரத்தம்வரல் முதலியவை நின்றுபோகும்.

இதன் குச்சியைக் கஷாயமிட்டு உள்ளுக்குக் கொடுத்துவர, இருமலில் இரத்தங்காணல் நீங்கும்.

## ஆல்பொகாடாபழம்—Álpogàḍàpazham.

**ஆல்பகோராப்பழம், ஆல்பகோடாப்பழம்.**

**Prumus Communis Var : Insititia.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Álpogáḍá-Panḍlu ఆల్పోగడా పండ్లు. | Hind. & Duk. | Álu-bokhárá * آلوبخارا |
| Arab. | Ijás * اجاص | | |
| Pers. | Álu * آلو | | |

இது இமயமலையின் மேற்குத்தொடர்ச்சி மலைகளில் (கார்வால் முதல் காஸ்மீரம் வரையில்) பயிராகிறது. இது சிறு மரவகுப்பிற் சேர்ந்தது. ஆப்கான் தேசத்து வர்த்தகர்களால் இந்திய வியாபாரிகளுக்கு விற்கப் படுகிறது. இப்பழம் புளியம்பழம்போல் கறுத்து, மேலே சதையும் உள்ளே கொட்டையுமாகவிருக்கும்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—இப்பழம், மலச்சிக்கல், அசீரணம், பித்தாதிக்கம், பித்தத் தலைவலி, தாகம், பித்தசுரம், தினவு, சொறிசிரங்கு இவைகளைப்போக்கும்.

**வ - கு.**—கொள்ளவேண்டிய அளவிற்குமேல் கொஞ்சம் அதிகப்படுத்திச் சாப்பிட, மலச்சிக்கலைப்போக்குவதுடன் பேதியின் மூலமாய்ப் பித்தநீரைக் கழிக்கும்.

இப்பழத்தைச் சுவைத்துத்தின்ன, பித்தத்தாலுண்டான சுரம், தாகம், தலைவலி, தினவு, சொறி, சிரங்கு நீங்கும். அரோசகத்தையும் போக்கும்.

மேற்கண்ட குணங்களைப்பெற, சருக்கரைப்பாகில் இப்பழங்களைப் பதப் படுத்திவைத்துக்கொண்டு, அப்போதைக்கப்போது உபயோகித்துவரலாம்.

ஒரு பங்கு பழத்திற்கு, எட்டுபங்கு நீர்விட்டு நாலிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டி, அதில் சிறிது வெள்ளைச்சருக்கரை சேர்த்துச் சாப்பிட, சுகமாய் பேதியாகும்.

---

## ஆவாரை—Ávárai.

**வே - பெ.**—ஆவரை, ஆவிரை, ஏமபுட்பி, மேகாரி, ஆகுலி, தலபோடம்.

**Cassia auriculata.**

**Eng.—The tanners-cassia.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Thangèḍu తంగేడు. | Sans. | Talapötakam तलपोटकम्. |
| Mal. | Ávāra ആവാര. | Hind. & Duk. | Taṛvaṛ * ترور |
| Kan. | Tangáḍi-gidá ತಂಗೇಡಿ ಗಿಡ. | | |
| | Ávara-giḍá ಆವರೇಗಿಡ. | | |
| | Taravaḍa-giḍá ತರವಡಗಿಡ. | | |

இது இலங்கை, மத்தியமாகாணம், தென்னிந்தியா, மேற்கரைநாடு இவ்விடங்களில் ஏராளமாய்ப் பயிராகும்.

**ப - உ.**—இலை, பூ, பட்டை, விதை, வேர், பிசின்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

## இலை, பூ, பட்டை.

செய்கை.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**விதை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- செந்நீரிளக்கி - - Attenuant.

**வேர்.**
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.

### பொதுக் குணம்.

**ஆவாரைச்சமூலம்.**—சர்வ பிரமேக மூத்திர ரோகங்களையும், ஆண்குறி எரிச்சலையும் போக்கும்.

> சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீர்
> எல்லா மொழிக்கு மெரிவகற்று—மெல்லவச
> மாவாரைப் பம்பரம்போ லாட்டுந் தொழிலணங்கே!
> யாவாரை மூலி யது. (தே.கு.)

### ஆவாரைப்பஞ்சாங்கத்தின் குணம்.

ஆவாரையின் இலை, பூ, காய், பட்டை, வேர் என்னும் ஐந்து உறுப்புகளால் பிரமேக மூத்திரம், வெள்ளை, உட்சூடு, விரணம், வாதகிரகணி, அஸ்திதாதுகதசுரம், தாகம் இவைபோம்.

> மோகத்தி னாலே விளைந்தசலம் வெட்டையனல்
> ஆகத்தின் புண்ணோ டருங்கிரணி—போகத்தான்
> ஆவாரைப் பஞ்சகங்கொள் அத்திசுரம் தாகமும்போம்
> ஏவாரைக் கண்மடமா தே! (அ.கு.)

### ஆவாரம்பூவின் குணம்.

பிரமேகநீர், வறட்சி, உடம்பிற்பூத்தவுப்பு, கற்றாழை நாற்றம் இவைகளை நீக்கும். உடம்பிற்குப் பொற்சாயலைத்தரும்.

> தங்கம் எனவே சடத்திற்குக் காந்திதரும்
> மங்காத நீரை வறட்சிகளை—அங்கத்தாம்
> மாவைக் கற்றாழை மணத்தை அகற்றிவிடும்
> பூவைச்சேர் ஆவாரம் பூ. (அ.கு.)

### ஆவாரைப்பிசின் குணம்.

ஆவாரைப்பிசின் வெகுமூத்திரத்தையும், பிரமேக ரோகத்தையும் வாதகிரிச்சரத்தையும் போக்கும்.

> பெருநீர் மறிக்கும் பிரமேகம் போக்கும்
> வருநீர்ச் சுருக்குதனை மாற்றுந்—தருநீர்மை
> பூணுமே னிக்கமலப் பொன்னே! பிடகரெலாம்
> பேணுமே காரிப்பி சின். (அ.கு.)

### இலை.

வ—கு.— குளிர்ச்சியுடைமையால், வெயிலில் வெகுதூரம் நடப்போர்கள் இவ்விலைகளைக் கையிலேபிடித்துக்கொண்டும், தலையின்மீதுப் பரப்பி அதன்மீது தலைப்பாகையிட்டும் நடக்க, வெயிலின் வெப்பந் தோன்றாது; நடையும் பரியும்.

### பூ.

பூவைச் சமைத்துச் சாப்பிட, கற்றாழைமணம், பிரமேகநீர், உடம்பில் உப்புப் பூத்தல், வறட்சி (தாகம்) சமனப்படும்.

வதக்கி கண்ணோய்க்கு, ஒற்றிடமிடலாம்.

கஷாயமிட்டுப் பால்சேர்த்துச் சாப்பிட, உட்சூடு தணியும்.

பூவுடன் பச்சைப்பயறு சேர்த்தரைத்து நமைச்சலுக்குத் தேய்த்துக் குளிக்கலாம்.

மணப்பாகு செய்து சாப்பிட, பிரமேகம், மூத்திரரோகம், ஆண்குறி எரிச்சல் நீங்கும். சொப்பன ஸ்கலிதமும் போம்.

பெரும்பாட்டை நிறுத்த, வடஇந்தியப் பெண்கள் பூவை யோனிக்குட் செலுத்திக் குணம் பெறுகிறார்கள்.

### பட்டை.

கஷாயமிட்டு வாய் கொப்புளிக்கவும், ஆசனவழியாய்ப் பீச்சவும், உபயோகிக்கலாம்.

### விதை.

இதை நன்றாய்ப் பொடித்து, நீர்விட்டரைத்துக்குழப்பிக் கண்சிகப்பு நீங்க, இமைப்பைமீதுப் பற்றிடலாம்.

விதையின் தோலைப்போக்கி, நுண்பொடிசெய்து கண்ணில் தூவியாவது அல்லது தேங்காயெண்ணெய், எண்ணெய் இவற்றில் ஒன்றில் குழைத்துக் கண்ணோய்களுக்கு உள்ளிலிட்டாவது, சுகம்பெறலாம்.

இதை உரைத்துக் கண்களிலிட, சீபிடிக்கும் கண்ணோய்தீரும்.

### பிசின்.

இதில் 1 முதல் $2\frac{1}{2}$ விராகனெடை நீரிற்கலந்து, குடித்துவர, வெகுமூத்திரம், பிரமேகம், வாதகிரிச்சரம் சாந்தமாகும்.

### பஞ்சாங்கம்.

இவைகளைக் கஷாயமிட்டுச் சாப்பிட்டுவர, மேகநீர், ஆண்குறி எரிச்சல், வெகுமூத்திரம் தணியும். வேண்டுமானால் கஷாயத்துடன் கற்கண்டு, பசுவின்பால் சேர்த்துக்கொள்ளலாம்.

மேற்கண்ட பஞ்சாங்கத்தைக் கஷாயஞ் செய்தெடுத்து, அதற்கு நேர் பனங்கற்கண்டு, தக்க அளவில் வால்மிளகு, ஏலக்காய்கூட்டி மணப்பாகு செய்து, இதை, பால், நீர் இவைகளில் ஒரு உச்சிக்கரண்டியளவு கூட்டிச் சாப்பிட, தேகபுஷ்டி, தாதுவிருத்தியுண்டாகும். மூத்திரத்தில் மதுகுறையும்.

பஞ்சாங்கத்தைச் சூரணஞ்செய்து, வேளைக்குக் கால்பலம் வீதம் தேனிற் குழைத்துண்ண, மேகநீர் குறையும்.

### வேர்.

வேர்ப்பட்டையைக் கஷாயஞ்செய்து, அதற்குநேர் வெள்ளாட்டுப்பால் அல்லது பசுவின்பால், எண்ணெய் கூட்டித் தைலஞ்செய்து தலைமுழுகிவர, மேகநீரால் வேதனைப்படுபவர்களின் வெப்பந்தணியும், கண்குளிரும்.

---

## ஆளிவிரை—Áli-verai.

**வே—பெ.—ஆழிவிரை, ஆளிவிதை.**

**Lepidium sativum.**

Tel. { Ádèli ఆడేలి. / Ádìyálu ఆడియాలు. / Ádituyalu ఆడితుయాలు. }
Mal. Alivitta ആളിവിത്ത്.
Kan. Állibija ಆಳ್ಳಿಬೀಜ.
Sans. Chandrasura चन्द्रशूरः.
Arab. { Ḥabbur-rashád * حب الرشاد / Ḥurf * حرف }
Pers. Tukhme-turrah tézak * تخم تره تيزك
Hind. { Hálim * هاليم / Chansar * چنسر }
Duk. Halìm * هليم

இது இந்தியாவில் பயிரிடப்படுகிறது.

**ப - உ.—இலை, பூ, விதை, வேர்.**

## இலை.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—உடலுக்கு வன்மை தரும். நீர்க்கட்டை உடைத்து நீரை வெளிப்படுத்தும்.

**வ - கு.**—இலையைப் பச்சடி செய்துண்ண, மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

## பூ.

**செய்கை** உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இளைத்த உடலுக்குப் பலத்தை யுண்டாக்கும்.

**வ - கு.**—இனிப்புள்ள பச்சடிகளில் பூவைத்தூவித் தின்னலாம்.

## விதை.

**செய்கை.** { உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
மலமிளக்கி - லகுவிரேசநி - Aperient.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative
உள்ளழலாற்றி - ஸ்நிக்தகாரி - Demulcent.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தனகாரி - Emmenagogue.
பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.

**குணம்.**—அசீரணம், சீதபேதி, அசீரணபேதி, இடப்பாட்டீரல் வீக்கம், வயிற்றுப்பொருமல், விக்கல், சருமரோகம், கபநோய், குசுமரோகம், மூலம் ஆகிய இவைகளை நீக்கும். பாலைச்சுரப்பிக்கவும், கருவைக்கரைக்கவும், நீரை வெளிப்படுத்தவும், சுக்கில விருத்திக்கும், தாராளமாய் மலத்தைத் தள்ளவும், உட்சூட்டைத்தணிக்கவும் உபயோகமாகும்.

வீக்கம் அதிவாந்தி மேனி வலிவாய்வுந்
தூக்குநரம் பின்குத்தல் தொல்லழலை—ஒக்காளம்
மீளி யருசி விதைவாத் மும்போகும்
ஆளிவிதை தன்னால் அறி.

(அ.கு.)

**வ - கு.**—மேற்கண்ட குணங்களைப் பெற, (1) ஒருபங்கு விதைப் பொடிக்கு 20 பங்கு நீர் சேர்த்து, குடிநீராக்கியாகிலும் அல்லது ஒரு பங்கு பொடிசெய்த விதையை, 10 பங்கு குளிர்ந்தநீரில் நன்றாய் ஊறவைத்தாகிலும் எடுத்த நீரை, கால் முதல் அரையாழாக்குவீதம் நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்றுமுறை கொடுத்துவரலாம்.

ஒருபங்கு பொடிசெய்த விதையை 8 பங்கு நீரில் ஊறவைத்தாகிலும், கொதிக்கவைத்தாகிலும் சுமார் ½ முதல் 1 பலம் வீதம் அடிக்கடிக்குக் கொடுத்துவர, விக்கல் நீங்கும்.

விதையைப் பாலிலிட்டுக் காய்ச்சிக்கொடுக்கப் பாலைச் சுரப்பிக்கும். ஆனால் இளங்கருவைக் கரைத்துவிடும்.

விதையின் சூரணத்தைச் சருக்கரையுடன் கலந்துகொடுக்க, அசீரணம், அசீரணபேதி, சீதபேதி இவைகள் குணப்படும்.

விதைச் சூரணத்துடன் சருக்கரையும் நெய்யும் சேர்த்து உட்கொண்டுவர, இளைத்த உடல் தேறும்.

விதையைப் பாலில் வேகவைத்து, போதுமான அளவு சருக்கரை அல்லது வெல்லம் சேர்த்து, இலேகியம் போலக்கிண்டி, கழற்சிப் பிரமாணம் காலைமாலை கொள்ள, வயிற்றுப் பொருமலை நீக்கும், பாலைச்சுரப்பிக்கும், சுக்கிலத்தைப் பெருக்கும், குசுமரோகத்தைத் தணிக்கும், இடுப்புவலியை நீக்கும்.

கடுகிற்குப் பதிலாக, இவ்விதையை நீர்விட்டரைத்து இரத்தக் கெடுதியினால் வந்த சருமரோகங்களுக்கு வெளிப்பிரயோகஞ் செய்யலாம்.

வாதவலிக்கும், உஷ்ணாதிதங்களுக்கும், விதையைப் பழரசம் விட்டரைத்துச் சீலையிற்றடவிப் போடலாம்.

மருத்துவன் தன் அனுபவத்தில் இவ்விதைக் குணத்திற்குப்பொருந்திய இதர பதார்த்தங்களையும் சேர்த்து, நோயாளிக்குத் தகுந்தபடி எவ்வித ரூபமாகவேனும் செய்து கொடுத்துவரலாம்.

### வேர்.

மேகப்புடைகளுக்கும், ஆசனக்கடுப்பிற்கும் இதன் வேரை உபயோகிக்கலாம்.

### எண்ணெய்.

இதையும் மேற்கண்ட நோய்களில் உபயோகிக்கலாம். பெரும்பாலும் வாதநோய்களிலும், உஷ்ணாபணங்களிலும் மிகப்பயன்படும்.

---

## ஆள்வள்ளிக்கிழங்கு—Āḷ-vaḷḷik-kizhangu.

**வே - பெ.—மரவள்ளிக்கிழங்கு; மரச்சீனிக்கிழங்கு.**

**Jatropa Janipa Manihol—Monihot Utilissima.**

Tel. { Manu-penḍalam మాను పెండలము. ; Karra-penḍalam కర్ర పెండలము.

Mal. { Mara-kizhaṉṉa. മരകിഴങ്ങ് ; Mara-vaḷḷikizhaṉṉa മരവള്ളിക്കിഴങ്ങ്

Duk. { Pinḍälú. پنڈالو * ; Pinḍalam. پنڈالم *

இது தென்னிந்தியாவில் மலையாளம், திருவிதாங்கூரிலும், வடஇந்தியாவில் ஆசாமிலும் பயிராகும்; தென்பிரேசிலி(Brazil) லும் கிடைக்கும்.

**ப - உ.**—கிழங்கு. இதில் கைப்பு சுவையுள்ளதுமுண்டு, ஆனால் இந்தியாவில் கிடைப்பது இனிப்புடையதேயாகும்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இக்கிழங்கை யுண்பதால் பித்தவாத தொந்தத்தையும், அக்கினி மாந்தத்தையும் உண்டாக்கும்.

பித்தங் கலந்த பெருவாய்வை யுண்டாக்கும்
மெத்தஅனல் மந்தத்தை மேலெழுப்புஞ்—சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ லேந்திழையே ! இந்த
மரவள்ளிக் கந்தமெனை வை. (அ.கு.)

ஆயினும், மிகவுழைப்புடைய ஏழைமக்கட்கு இது முக்கிய ஆகாரமாயிருக்கிறது. உடலைப்போஷிக்கும் தன்மை இதில் இருப்பதால், தீபனமதிகரித்துள்ள சனங்கள், இதைப் பச்சையாகவே தின்பார்கள். தீபன சக்தி குன்றியவர்கள், இதை வேகவைத்துத் தனித்தேனும், வெல்லம், சருக்கரைச் சேர்த்தேனும் தின்பார்கள்.

இதைப் பச்சையாகவேனும், வேகவைத்துத் தோலையுரித்தேனும் நன்ருய் வெயிலில் உலர்த்தி மாவாக்கிக் கஞ்சிசெய்து, (சிலர் சருக்கரை, பால் சேர்த்தும்) குடிப்பார்கள். இக்கஞ்சியை, பால் இல்லாக் குழந்தைகளுக்கும் கொடுத்து, குழந்தைகளை வளர்ப்பது ஏழைமக்களின் வழக்கம்.

இம்மாவிலிருந்தே டாபியாகோ (Tapiocä) செய்யப்படுகிறது.

---

## ஆற்றுத்துமட்டி—Aṛtu-tumaṭṭi.

**வே - பெ.—பேய்க்கொமட்டி, பேய்த்துமட்டி, துமட்டி; வரித்துமட்டி கலிங்கம், பிச்சிக்காய்.**

Citrullus Colocynthis.

Eng—Colocynth—fruit of.

Tel. { Verri-puch-cha వెర్రిపుచ్చ. / Èṭṭi-puch-cha ఎట్టిపుచ్చ. / Chitti-pápara చిట్టిపాపర.

Mal. Pèi-kumatti പേയ് കുമട്ടി.

Kan: Háva-mekke-kàyi ಹಾವ ಮೆಕ್ಕೆ ಕಾಯಿ.

Sans: Indra varuni इन्द्रवारुणी.

Arb. { Hanzal * حنظل / Alqam * علقم

Pers: { Hindavánahe-talkh * هندوانه تلخ / Kharbuzahe-talkh * خربوزه تلخ / Kabiste-talkh * کبست تلخ / Khar-bruzaha-rubah. * خربوزه روباه

Hind. Indarjow * اندر جو

Duk. Indaràvan * اندراون

இது, இந்தியாவில் மணற்பாங்கான இடங்களிலும், நீர்வற்றிய காலத்தில் ஆற்றுப்படுகைகளிலும், தானுகவே முளைத்துப் பயிராகுமெனினும், வடமேற்கு மாகாணத்திலும், பஞ்சாப், சிந்து, மத்தியமாகாணம், தென் இந்தியாவிலும் ஏராளமாய்ப் பயிராகும். கொடி வகுப்பைச் சேர்ந்தது.

**ப - உ.**—காய், பழம், வேர், வித்து.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- குறைந்த அளவில்— கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant. உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
- மத்திய அளவில்— மலநீராக்கி - ஜலவிரேசநி - Hydrogogue
- அதிக அளவில்— சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic. வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic. குடற்புரட்டி - Gastro - Intestinal irritant.

### காய், பழம்.

இதன் காய் அல்லது பழத்தை வழங்குமுன், வரகுவைக்கோலாற் சுட்டு, பழத்திற்குள்ளிருக்கும் சோறு, விதைகளேயும், மேலிலுள்ள தோலையும் நீக்கி, தோலுக்கு நெருங்கியுள்ள சதைப்பற்றுயுள்ளதை மாத்திரம் எடுத்து உபயோகிக்கவேண்டும். இன்றேல், கொடிய வாந்தியும் வயிற்றுப் புரட்டலும் உண்டாகும்.

**குணம்.**—இதனால் கீல்பிடிப்பால் நடையின்றிக் கிடத்தல், சோர்தல், முதலிய வாதரோகங்கள், கருப்பைப்பற்றி அடைகின்ற ஆமம், இரத்தக் குன்மக்கட்டி, அகாலருது ஆகிய இவைகள் தடையின்றி நீங்கும்.

கிடையெங்கே சோம்பலெங்கே கேடுறச்செய் வாதக்
கடையெங்கே யாற்றுக் கலிங்க—மடைதிறக்கின்
அண்டை யடைசலெங்கே யாயிழையார் சூதகத்தின்
உண்டை யுடைசலெங்கே யோது. (தே.கு.)

**வ - கு.**—இச்சதையை உலர்த்திச் சூரணஞ்செய்து, ஒன்றுமுதல் நான்கு குன்றியளவு உபயோகிக்க, மலக்கட்டு, சோபை, ஆவர்த்த வாதங்கள்போம்.

பழத்தைப் பிழிந்த சாற்றில் அரைப்படி எடுத்துக் குழம்பாய்க் காய்ச்சி, அதனுடன் பொரித்த பெருங்காயம் பலம் அரை, ஏலரிசி, வால்மிளகு, கடகரோகணி, குரோசானி ஓமம், வெங்காரம், இந்துப்பு இவைகளின் சூரணம் வகைக்கு வராகனெடை அரை, சேர்த்தரைத்து, இரண்டுமுதல் நான்கு குன்றியளவு கொடுக்க, மலபந்தம், சூதகக்கட்டு, சூதகசந்நி, இரத்தகுன்மம் முதலியன நீங்கும்.

பழத்தின்சாறு அநேக மெழுகுகளிலும், தைலங்களிலும் சேரும். **உதாரணம்.**—கலிங்காதி மெழுகு, கலிங்கத்தைலம்.

இதன் வேரைச் சூரணஞ்செய்து சிறிய அளவில் கொடுக்க, வயிற்றுப் பொருமல், இருமல், குழந்தைகளுக்குண்டாகும் இரைப்பு, உப்பிசம், மலக்கிருமி போம்.

வேரை அரைத்து வயிற்றுப் பொருமலுக்குப் பற்றிடலாம்.

வேரையாகிலும், பழத்தையாகிலும் எட்டிக்கொட்டையைச் சேர்த்தும் சேர்க்காமலும் நீர்விட்டு அரைத்து, கட்டிகள்மீதும், குருவின்மீதும் பற்றிடலாம்.

வேரையரைத்துப் புற்கைசெய்து மூலவீக்கத்திற்குக் கட்டலாம்.

வேரும் திப்பிலியும் சமபாகமெடுத்து நீர்விட்டரைத்து, குன்றியளவு மாத்திரை செய்துகொடுக்க, கீல்வாதம் சாந்தமாகும்.

விதையினின்றும் எடுத்த தைலத்தால், பாம்பு, தேள்கடி விஷம், வயிற்றுவலி, காக்கைவலி குணமாகும்; மயிரும் கறுக்கும்.

**குறிப்பு.**—அதிக அளவில் இதன் சம்பந்தமான மருந்துகளைக்கொண்டால் வாந்தி, குடல்புரட்டல், இரத்தபேதி உண்டாகலாம். குடற்புண்பட்டவர்களுக்கும், கருப்பவதிகளுக்கும் இதனால் செய்யப்பட்ட மருந்தை உபயோகிக்கலாகாது.

---

## ஆற்று நெட்டி—Atru Netti.

**வே—பெ.—கொடி நெட்டி, நீர்ச்சுண்டி**

**Mimosa Natans.**

**Aeschynomene Aspera.**

இது, தென் இந்தியாவிலெங்கும் ஏரிக்கரை, குளக்கரை யோரங்களில் பயிராகும். இதன் இலையைச் சமைத்துண்பார்கள். தொட்டாற்சுணங்கியைத் தொட்டவுடன் எப்படி சுணங்குமோ அவ்வாறே இதன் இலையைத் தீண்டினவுடன் சுணங்கும்.

இதன் இலையை வதக்கி ஒற்றிடமிட்டாலும், கட்டினாலும் வாதவீக்கம் போகும்.

## ஆனைக் கற்றாழை—Ānaik-kartazhai.

வே - பெ.—ஆனைக்கற்றாழை, இராகாசி மடல், ரெயில்வே கற்றாழை.

Agave Americana.

Tel- Rákáṣhi - Mattalu రాకాసి మట్టలు.

Mal. Panam - Katṛázha പനം കററാഴ.

Kan. Bhuttáḷe ಭೂತಾಳೇ.

Sans. Kanatla. कन्तला.

Hind. { Rákās - Pattah راکس پتہ * ; Háthí - Sèṅgár هاتهی سینگار * ; Baṛá - Kaṅvár بڑا کنوار * ; Janglí - Kaṅvàr جنگلی کنوار * }

Duk. Rakkas - Paṭṭah رکس پتہ *

இது, அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்குக் கொண்டுவந்ததாகக் கூறப் படுகிறது. தற்காலம் இது குறிஞ்சி, முல்லைத்திணைகளில் ஏராளமாய்ப் பயிராகின்றது. இது மடல் மடலாக விரிந்து அகலத்தில் 4 முதல் 6 அங் குலமும், நிகளத்தில் 2 அடி முதல் 5—6 அடியும், மடலின் இருபுறத்தி லும் முட்களும், உயரத்தில் 12 அடிக்கு மேலும் வளர்கின்றபடியால், இராகாசிமடல் என்றும், இருப்புப்பாதையின் இருபுறமும் வைத்து வளர்க் கப்படுவதால், ரெயில்வே கற்றாழை என்றும் பெயர் வழங்கினபோலும்.

ப - உ.—மடல், வேர்.

சுவை.—கைப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை. { உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative. ; சிறுநீர்ப்பெருக்கி - மூத்திரவர்த்தநி - Diuretic. }

குணம்.—நீர்க்கட்டை யுடைத்தல், வீக்கத்தைக் கரைத்தல்.

வ - கு.—இதன் மடலை, அனலில்வாட்டிச் சாறுபிழிந்து, அதில் போது மான அளவு கேழ்வரகு மாவைச்சேர்த்து, குழம்புபதம் வரும்வரையில் காய்ச்சி, வீக்கமுள்ள இடத்தில் பற்றிட, வீக்கம் கரையும்.

மேற்கண்டபடி பிழிந்த சாற்றில், மூசாம்பரத்தைச் சேர்த்துக்கொதிக்க வைத்து, குழம்புப் பதத்தில் எடுத்து வீக்கங்களுக்குப் பூச, வீக்கங் கரையும்.

மடல்களைக் கத்தைக்கத்தையாகக் கட்டி சேறுள்ளவிடத்தில் புதைத்து வைத்து 20—25 நாள் சென்றபின் எடுத்து, நீரில் தோய்த்துத் துவைக்க அதிலுள்ள சுத்தநார்கள் மட்டும் நிற்கும். இதைக்கொண்டுக் கயிறுகத் திரிக்கலாம்.

இதன் வேர், முக்கால் அல்லது ஒருபலமெடுத்து 4 ஆழாக்கு நீர்விட்டு ஒரு ஆழாக்காகக் குறுக்கி வடிகட்டி, நாள் ஒன்றுக்கு இருவேளையும், அரை ஆழாக்கு வீதம் உட்கொண்டுவர, நீர்கட்டை உடைத்து நீரைத் தாராளமாய் வெளிப்படுத்தும்.

---

## ஆனைக்குன்றிமணி—Ānaik-kunri.

வே - பெ.—மஞ்சாடி.

Adananthera Pavonina Linn.

Tel. { Bandigurvinda బండిగురివింద. ; Manseni kotta మంజెని కొట్టు. }

Mal. Mànjàdi മഞ്ചാടി.

Kan. Manjadi ಮಂಜಾಡಿ.

Sans. { Gunja गुञ्जा. ; Kàmbhoji काम्भोजी. }

Duk. Bari-Gumchi بڑی گنچی *

இது இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிராகிறது. மரவகுப்பைச் சேர்ந்தது.

**குணம்.**—இதன் இலையைக் கஷாயம்செய்து, நாட்பட்ட வாதரோகங்களுக்கும், கீல்பிடிப்புகளுக்கும் கொடுக்கலாம். மேலும், இதனால் வயிற்றிலிருந்தாவது, ஆண்குறியிலிருந்தாவது வெளிப்படும் இரத்தம் நிற்கும். சிறிய அளவில் நாட்பட உபயோகிக்க, வீரிய விர்த்தியை உண்டுபண்ணும்.

இதன் வேர் வாந்தியை உண்டுசெய்யும் மருந்துகளில் ஒன்றாகும்.

இதன் விதையை அரைத்துக் கட்டிகளுக்குப் பற்றிட, அவைகள் சீக்கிரத்தில் கரையும்.

---

## ஆனைப்புளிய மரம்—Ānaippuliyamaram.

**வே - பெ.—ஆனைப்புளி, சீமைப்புளி, பப்பாப்புளி, பூரிமரம்.**

Adansonia Digitata.

Malvaceāe.

Eng.—Baodab.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Shima-chintā | సీమచింత. | Arab. | Hujēd | * حجود |
| Mal. | Ana-puli | ആനപ്പുളി. | Hind. | Gorakh-amlí | * گورکہ املی |
| Kân. | Brahmamlika | ಬ್ರಹ್ಮಾಮ್ಲಿಕಾ. | Duk. | Bará-khat-yàn | * بڑا کھٹیان |
| Sans. | Gorakh-chinch | गोरक्ष चिंचा. | | Háthí-khat-yàn | * ہاتھی کھٹیان |

இது ஆப்பிரிக்கா தேசத்திற்குரியது. இப்போது இந்தியாவிலும் பயிராகிறது. இதன்புளி அழுக்குப்படிந்த நிறமாயிருக்கும். இலங்கை போன்ற இடங்களில் பயிராகின்றவை 60, 70 அடி உயரமுடையவை. இம்மரப் பழத்தின் ஓடு, சன்னியாசிகள் சலத்தை முகந்து உபயோகிக்கக்கூடிய அளவில் இருப்பதாகவும் கூறப்படுகிறது. இம்மரத்தின்கீழ், பண்டைகாலத்தில் "கோராக்" (Gorakh) என்ற ஒரு சந்நியாசி, தனது சீடர்களுக்கு உபதேசஞ் செய்தாரென்றும், அதனால் இதற்கு "கோரக்" என்ற ஒரு பெயருமுண்டென்பாருமுளர்.

**ப - உ.**—இலை, பட்டை, பழச்சதை, வித்து.

**சுவை.**—இனிப்பும் புளிப்பும், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வாதமடக்கி - வாதஹரகாரி - Anti-vata.

### இலை.

**வ—கு**—இலைச்சாற்றில் சுக்கையரைத்துக் கீல்வாதம், பறங்கிப்புண் முதலிய புண்களுக்குப் பூசலாம்.

இலையை அவித்துக் கைகால் வீக்கம், வலிகளுக்குச் சூடுடன் ஒற்றிடமிட்டுப் பிறகு அதையே கட்டலாம்.

இலையை உலர்த்திப் பொடிசெய்து உள்ளுக்குக்கொடுக்க, அதிவியர்வையுண்டாவது குறையும்.

### பட்டை.

**செய்கை.** வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**வ—கு**—பட்டையை இடித்து எடுத்த ஒரு பங்கிற்கு, 20 பங்கு நீர்சேர்த்து விதிப்படிக் குடிநீர் செய்து, கால், அரை ஆழாக்குவீதம் கொடுத்துவர, முறைக்காய்ச்சல் நீங்கும்.

**குறிப்பு.**—இப்பட்டையின் சத்தை (Adansonin) குவைனுவிற்குப் பதிலாக உபயோகிக்கின்றார்கள்.

## பழச்சதை.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.

இப்புளிக்குச் சீதபேதியைப் போக்கும் குணமுண்டு.

இத்துடன் அத்திப்பழம் சேர்த்து, மணப்பாகுசெய்து உபயோகித்துவர, உடம்பிற்கு உற்சாகத்தைத்தரும்; உடலில் காணும் வெப்பத்தைத் தணிக்கும்; சுரத்திற்காணும் தாகத்தைப் போக்கும்; கயரோகத்தில் இரவில் உண்டாகும் வியர்வையைத் தடுக்கும்; வாய்க்கசப்பு, புளித்தேப்பம் முதலியவற்றை நீக்கும்.

## விதைப்பருப்பு.

இதன் பருப்பை அரைத்து மோருடன்கலந்து குடிக்க, அதிசாரம், சீதபேதி குணப்படும்.

---

## இங்கிமரம் —Inki-maram.

**Caesalpinia Coriaria.**

**Eng.—The Divi-divi.**

**Tel. Divi Divi** డివి డివి.

இது, சிறு மரவகுப்பிற் சேர்ந்தது. தென் அமெரிக்காவிற்குரியதாயினும், இந்தியாவில் கடற்கரையோரங்களில்வைத்துப் பயிராக்கப்படுகிறது.

**ப - உ.**—காய்.

**சுவை**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** புண்ணழுக்ககற்றி - விரணசுத்திகாரி - Detergent.

**குணம்.**—புண்களை ஆற்றும்.

**வ - கு.**—இதன் காயைக் கஷாயஞ்செய்து புண்களைக் கழுவலாம்.

**குறிப்பு.**—இக்காய் உயர்ந்த "இங்கி" செய்வதற்கு உபயோகப்படும்.

---

## இசங்கு —Isangu.

**வே - பெ.—குண்டலி, கோல், சங்கங்குப்பி, முத்தாபலம், பீச்செங்கன், பீனுசெங்கம்குப்பி.**

**Clerodendron Inerme, Gäertn.**

**Tel.** { **Píshinika** పీశినిక.
**Ūtti-Chettu** ఊటిచెట్టు.
**Piśangi** పిశంగి.

**Mal. Shangam-kuppi** ശംഖം കുപ്പി.

**Sān. Kundalí** कुण्डली.

**Hind.** { **Sang-kuppí** * سانگ کوپی
**Sang-kúpí** * سانگ کپی

**Duk. Isamdhárí** * اسم دھاری

இது, இந்தியாவிலும், இலங்கையிலும் சமுத்திரக்கரையோரங்களில் பயிராகும்.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—சங்கங்குப்பிக்கு: அரைக்கடுவன், கிரந்தி, கருங்குட்டம் (விசர்ச்சிகாகுஷ்டம்), வாதப்பிரமேகம், கருப்பத்திலுண்டாகிய கருங்கிரந்தி, செவ்வாப்புக்கட்டி, வெள்ளை (வெட்டை), சொறி, சிரங்கு, சூலை, மகா வாதம், சிலேத்தும தோடம், வறட்டிருமல், சர்ப்பவிடம், இரத்தக்கிருமி, ஆகிய இவைகள் போம்.

கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோகம்
உரப்பான மேகம் ஒழியும்—கருவாம்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளு மேகும்
அருஞ்சங்கங் குப்பிக் கறி.

வெட்டை சொறிசிரங்கு வீறிவ ருஞ்சூலை
துட்டவா தங்கபந்து ணுக்கிருமல்—கெட்டவிடம்
அங்கங்கொள் பூச்சியிவை யாவும்போம் பித்தமுறுஞ்
சங்கங்குப் பிக்கெனவே சாற்று. (அ.கு.)

**வ - கு.**—இலையைக்கசக்கிப் பிழிந்த ரசம், அல்லது பச்சை வேரை யிடித்துப் பிழிந்த ரசத்தில், காலை, மாலை இருவேளையும் அரைக்கால் முதல் கால் ஆழாக்கு வீதம் கொடுத்துவர, மேகரோகம், கண்டமாலை குணப்படுவதுடன், இதையே சிலநாள்வரை உட்கொண்டுவர, இரத்தம் சுத்தப்பட்டு உடல்வலுக்கும்.

ஒரு பங்கு இலைக்குப் பத்துப்பங்கு நீர் சேர்த்துக் குடிநீரிட்டு, கால் முதல் அரை ஆழாக்குக் கொடுத்துவர, விடாச்சுரங்களும், விட்டுவிட்டுவருஞ் சுரங் களும் நீங்கும்.

இலையை நீரிலிட்டுக்காய்ச்சி, அந்நீரைக்கொண்டு முழுகிவர, சொறி, சிரங்கு, பயித்தியம் குணமாகும்.

இலையை ஆமணக்குநெய்விட்டு வதக்கிக்கட்ட, அரையாப்புக் கரையும்.

இலைச்சாறும், சிற்றாமணக்கெண்ணெயும் சமபாகமாகக் கலந்து காய்ச்சிப் பக்குவ பாகத்திலெடுத்து, காலைகாலை அரை முதல் ஒரு பலம் வீதம் கொடுக்க, வெட்டை, கிரந்தி, கரப்பான், சொறி, சிரங்கு, பிரமேகம், கிருமிகள் நீங்கும். உப்பு, புளி நீக்கவும்.

### வேர்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, வாதப்பிடிப்பு முதலிய வாத நோய்களுக்கு வெளிப்பிரயோகஞ் செய்யலாம்.

வேரை உலர்த்திப் பொடிசெய்து, அரைக்கால் முதல் கால் வராகனெடை வீதம் கொடுக்க, விடங்கள், சொறி, சிரங்கு, சுரம் முதலியன நீங்கும்.

**குறிப்பு.**—இது " குவைனுவு " க்கு ஒப்பானது.

---

## இசப்பு கோல்விதை—Ishappu-kol-vitai.

**வே - பெ.**—**இஸ்கோல்விதை, இஸபகூல்வித்து, இஸ்பகோல், இசுபொங்கிவிதை, ஈசயுகோல்விதை.**

Plantago Ispaghula.

Eng.—Spogel - Seeds of—

Tel. Isapagóla - Vittulu ఇసపగోల విత్తులు.

Kan. Isapakólu ಇಸಪಕೋಲು.

Arab. Bazre-qaṭúná * بزر قطونا

Pers. Shikam darídah * شکم دریده

Hind. Isbaghól * اسبغول

Duk. Isapghól * اسپگهول

இது பாரசீக இராஜ்ஜியத்தில் முதல் முதல் உற்பத்தி செய்யப்பட்டு, இப்போது இந்தியாவில் பலபாகங்களிலும், முக்கியமாய்ப் பஞ்சாப், சிந்து, வங்காளத்திலும் பயிராகின்றது. இந்த விதை மிகச்சிறியது ; நீரில்போட்டு வைத்தால் குழகுழத்து உப்பும்.

**ப - உ.**—விதை.

**செய்கை.** { உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
துவர்ப்பி (சிறு) - ஸங்கோசனகாரி (லகு) - Mild Astringent.
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Dieuretic.

**குணம்.**—அசீரணபேதி, சீதபேதி, சுரம், இருமல், வித்திருதி, மூத்திரத் தாரை எரிச்சல், தாதுக்களில் காணும் தாபம் ஆகிய இவைகளைப்போக்கும்.

**வ - கு.**—இவ்விதையைச் சுத்தப்படுத்தி நீரில் ஊறப்போட, நீர் குழகுழத்திருக்கும்; இந்நீரை ஆசனவழியாய்ச் செலுத்த, சீதபேதி குணப்படும்.

ஒன்றிரண்டாய்ப் பொடித்து, ஒன்றுக்கு 40, 60 பங்கு நீர் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிய நீரை உட்கொள்ள, தாதுக்களிலுண்டாகும் எரிச்சலைத் தணிக்கும். மூத்திர சம்பந்தமான வியாதிகளிலும், ஒன்றுக்கு 80 பங்குநீர் சேர்த்து ஷியாகச் செய்து, நாள் ஒன்றுக்கு இரண்டு, மூன்று முறையாக, அரை முதல் ஒரு ஆழாக்களவாகக் கொடுத்துவரலாம்.

இவ்விதையைப் பொடித்து, சமனெடை கற்கண்டு சேர்த்து, இளகிய பதம் வருவதற்கு வேண்டிய நீர்விட்டு ஊறவைத்து, வேண்டியநாள்வரை உண்டுவர, தாதுவிருத்தி யுண்டாகும். உடல் தணியும்.

இவ்விதையைக் கொண்டு மதுபானம், மணப்பாகு செய்து வேனிற காலத்தில் சாப்பிட உடல் வெப்பம் தணியும்.

---

## இஞ்சி—Inji.

**வே - பெ.—அல்லம், ஆர்த்ரகம், ஆத்திரம், இலாக்கொட்டை, நறும்மருப்பு, மதில்.**

**Zingiber Officinalis.**

**Eng.—Green ginger - fresh root of - dry ginger.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Allamu. అల్లము. | | Arab. | Zanjabíle | * زنجبيل |
| Mal. | Inji ഇഞ്ചി. | | Pers. | Zanjabíletar | * زنجبيل تار |
| | Chukka ചുക്ക. | | Hind. | Adrakh | * ادرکھ |
| Kan. | Hashi-Shunti ಹಸಿ-ಶುಂಠಿ. | | | Sonth | * سونٹ |
| | Vona-Sunthi ಒಣ-ಶುಂಠಿ. | | Duk. | Adrak | * ادرك |
| Sans. | Ardrakam आर्द्रकम्. | | | Sonth | * سونٹ |

இந்தியாவில் அநேக இடங்களில் பயிரிடப்படுகின்றது. நீர் செழிப்புள்ள இடங்களில் முக்கியமாய் உண்டாகிறது. ஆயினும் செம்பாடுகளிலும், மணற் பூமிகளிலும், சிறப்பாகப் பயிரிடப்படுகிறது. சென்னை, கொச்சி, திருவாங்கூர் முதலிய இடங்களிலும், பஞ்சாப், வங்காளம் முதலிய இராஜ்ஜியங்களிலும் ஏராளமாய் பயிரிடப்படுகின்றது.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.
- உமிழ்நீர்ப்பெருக்கி - திரவகாரி - Sialagogue.
- செரிப்புண்டாக்கி - தீபனகாரி - Digestive.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—இஞ்சியை உபயோகித்தால் காசம், கபம், வெள்ளோக்காளம், பித்ததோடம், சந்நிபாதசுரம், வாதாதிசுரம், வாதசூலை, வாதகோபம் இவைபோம். பசியுண்டாகும்.

இஞ்சிக் கிழங்குக் கிருமல்ஐயம் ஓக்காளம்
வஞ்சிக்குஞ் சந்நிசுரம் வன்பேதி—விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் தூண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் ! விளம்பு. (அ. கு.)

இஞ்சியின் குணமே தென்றி யல்புட னுரைக்கக் கேளீர்
அஞ்சிடுஞ் சன்னி யெல்லா மகன்றிடும் பித்த தோடம்
நெஞ்சினி லிருமற் கோழை நெகிழ்ந்திடும் கபங்கள் தன்னை
மிஞ்சினி வருமோ வென்று விளம்பிடும் வேத நூலே. (ஏடு.)

**வ - கு.**—இஞ்சிக்கிழங்கு சதாரணமாய், ஊறுகாய், தேன்ஊறல், தித்திப்பு பானகம் முதலியன செய்வதற்கு உபயோகப்படுத்தப்படுகிறது.

மேலும், வயிறு சம்பந்தமான வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், வாந்தி, குடல்நோய் முதலியவற்றிற்கும் ; ஜலதோஷம், இரைப்புநோய் முதலிய நோய்கட்கும், மதுவூறல் (முறைப்பா) ஆகச் செய்துகொடுக்கலாம்.

**முறை.**—இஞ்சிச்சாறு, ஜலம், சர்க்கரை சேர்த்து தேன்பருவத்தில் பாகுசெய்து, குங்குமப்பூ, ஏலம், ஜாதிக்காய், கிராம்பு இவற்றைப் பொடி செய்து தூவிக் கிளறி எடுத்து, நன்றாகச் சுத்தம் செய்த கண்ணாடி அல்லது பீங்கான் பாத்திரத்தில் வைத்துப் பத்திரப்படுத்திக்கொள்ளவும். ஒன்று முதல் இரண்டு சுண்டையளவு கொடுக்கலாம்.

**பித்தமயக்கத்திற்கு**—இஞ்சிச்சாறு 10 பங்கு, பால் 7 பங்கு, இத்துடன் கற்கண்டு சேர்த்து மணப்பாகு செய்து, படுக்கைக்குப் போகும்போது, அரை முதல் இரண்டு வராகனெடை, குளிர்ந்த நீருடன் சேர்த்துச் சாப்பிடலாம்.

இஞ்சியை வாயில் மென்று உமிழ்நீரைத்துப்ப, தொண்டைப் புண் குரற் கம்மல் இவைகள் குணப்படும்.

அஜீரணபேதிக்கு, இஞ்சிச்சாற்றை, தொப்புளைச் சுற்றித் தடவலாம்.

**வாந்தி, ஓக்காளம் இவைகட்கு.**—இஞ்சிச்சாறும் வெங்காயச்சாறும் வகைக்கு ஒரு தோலா வீதம் எடுத்துக்கலந்து கொடுக்கலாம்.

**நீரிழிவு நோய்க்கு**—இஞ்சிச்சாறும் கற்கண்டும் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

### இஞ்சி—கற்பம்.

இஞ்சியைத் தோல்போக்கிப் பக்குவப்படுத்தித் தேனில் ஊறவைத்துத் தினந்தோறுங் கற்பமுறைப்படி உட்கொண்டால், நரை - திரை - மூப்பு இன்றி நீண்டநாள் இருப்பதுடன் தேகமும் அழகு பெறும். மனோபலமுமுண்டாகும்.

**பத்திய உணவு.**—நெற்பொரிமாவுடன், பசுவின்நெய் சமன்கலந்து, ஆகாரத்திற்குப் பதிலாக உண்ணவேண்டும்.

இஞ்சிச்சாறு, மாதுளம்பூச்சாறு, தேன் சமனெடைகலந்து, வேளைக்கு $\frac{1}{4}$ படி வீதம் சாப்பிட்டு வர, ஈளைஇருமல் சாந்தியாம்.

இஞ்சி, திரிகடுகு, ஏலம், அதிமதுரம், சீரகம், சந்தனத்தூள், வகைக்கு வராகனெடை 1, சிதைத்து 1 படி நீரிலிட்டு $\frac{1}{8}$ படி கஷாயஞ்செய்து, 5, 6 வேளை சாப்பிட, பித்தஞ்சாந்தியாகும்.

இஞ்சிச்சாறும், கழுதைப்பாலும் வகைக்கு $\frac{1}{16}$ படி கலந்து உள்ளுக்குக் கொடுத்து, மேலுக்கு ஆதளையிலையும், முத்தெருக்கன் செவியும், ஓர் அளவாய் எடுத்துக் காடியிலரைத்து, உச்சிமுதல் பாதம்வரையில், காலையில் பூசி, மாலையில் நீராட்டி வரவும். 10 நாள் செய்ய அசாத்தியமான உடம் பெரிவு நீங்கும்.

இஞ்சிச்சாறு, ஈரவெங்காயச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு இம்மூன்றும் சமபாகங்கலந்து, வேளை 1-க்கு 1 பலம் வீதம் 2 வேளை, 3 நாள் சாப்பிட, இரைப்பு, இருமல் சாந்தியாகும்.

இஞ்சி, சிவதை, சீந்தில், நிலவாகை, கொடுவேலி, கழற்சிக்கொடி, முடக்கறுத்தான், திரிகடுகு, பூண்டு, வகைக்குப் பலம் 1, எடுத்து சிற்று மணக்கு எண்ணெய் படி அரையில் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்து, வேளைக்கு உச்சிக்கரண்டி வீதம் கொடுத்துவர, வாதகுன்மம் தீரும்.

இஞ்சியைப் பாலிலரைத்துக் கழற்சிப்பிரமாணம் $\frac{1}{8}$ படி பாலில் கலந்து காலை மாலை கொடுத்துவர, இருமல், இளைப்பு, குன்மம், தாபசோபம், மயக்கம், பித்தம், வாய்வு தீரும். பசியுண்டாம்.

---

## இண்டு—Iṇḍu.

**வே - பெ. இங்கை, ஈகை, ஈயக்கொழுந்து, புலித்துடக்கி.**

**Mimosa Paniculata** (செவ்விண்டு.)

,, **Spinosiliqua** (வெள்ளிண்டு.)

இது தென் இந்தியாவில் சமவெளிகளில் பயிராகும் முட்கொடி வகுப்பிற் சேர்ந்தது ; வெள்ளிண்டு, செவ்விண்டு என இருவகைப்படும்.

**ப - உ.**—சமூலம் எனினும், பெரும்பாலும் கொடியாகும்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இக்கொடியினால் பீநசம், நீரேற்றம் (சலதோஷம்), மண்டைக் குடைச்சல், முகசந்நி, வாதத்தடிப்பு, பிரமேகம், சூதகவாயு, ஈளை, சூலை, தீச் சுட்ட விரணம் ஆகியவைகள் போம்.

பீநசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றம்
தானசிக்கச் செய்யுமிது சத்தியங்காண்—வானசைக்கும்
மண்டைக்கு டைச்சல் மருவுமுக சந்நியும்போம்
பண்டையுற்ற இண்டினுக்குப் பார்.

கட்டுவா தங்களுங் காரிகையே! மேகம்போம்
முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங்—கிட்டும்
புனலினறுந் தண்டுக்குப் போரீளை சூலை
அனலிலெழு புண்ணு மறும். (அ.கு.)

**வ - கு.**—கொடியைத் துண்டித்தூத, ஒருவித இரசம் வெளிப்படும். இதில், ஒன்று இரண்டுதுளி மூக்கிலிட, மேற்குறிப்பிட்ட நோய்கள் விலகும். அன்றியும் குழந்தைகளுக்குண்டாகும் மாந்தத்தைப் போக்குவதில் மிகச் சிறப்புடையது. தேரையர் இயற்றிய தைலவருக்கச் சுருக்கத்தில் எழுதியுள்ள மாந்தத்தைலம், சிறுமாந்தத்தைலம் இவைகளைக் கவனிக்க.

---

## இத்தி—Itti.

**வே - பெ.—இந்திரி, இறலி, சுவி.**

**Eng.—Ficus.**

**Tel. Juvvi** జువ్వి. | **Mal. Itti** ഇത്തി.
**Kan. Itti** ಇತ್ತಿ: | **Sans. Plaksham** प्लक्षः.

இது, தென்னிந்தியாவில் ஏராளமாய்ப் பயிராகும். ஆல் வகுப்பிற் சேர்ந்தது.

**ப - உ.**—பிஞ்சு, காய், பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**—துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பிஞ்சு.**

**குணம்.**— அதிசாரம், பெரும்பாடு, உட்சூட்டினுற் பிறக்கின்ற பிணி யினங்களைப் போக்கும்.

வாயு மலக்கட்டு மலக்கழிச்சல் கால்வழியே
சாயு மசிர்க்குள் ளேதங்குவெப்பி—ஞேயினங்கள்
எத்திக்கா தாரமுற் றிருப்பன விராவேநல்
இத்திக்காய் பிஞ்சுகளை யெண். (அ. கு.)

இப்பிஞ்சுகளை அரைத்துக்கொடுத்தாலும், இதன்பட்டையைக் கஷாயஞ் செய்து குடித்துவந்தாலும், மேற்கண்ட பிணிகள் நீங்கும்.

இதன் காயை நெய்விட்டு வெதுப்பித்தின்றால் வாதமலபந்தம் போம்.

---

## இம்பூறல்—Impural.

**வே - பெ.—இம்பூராவேர், இன்புருவேர், சிறுவேர், சாயவேர்.**

**Oldenlandia Umbellata.**

**(Hedyotis Umbellata.)**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chiru Véru చిరువేరు. | Sans. | Rajana राजान: |
| Mal. | Chay Ver ചെയിവേര്. | Hind. & Duk. | Chirval or Chirval-kí-Lakrí. چرول یا چرول کی لکڑی * |
| Kan. | Chaya Beru ಚಾಯಬೇರು. | | |

சர்வ சாதாரணமாகத் தோட்டங்களிலும், மேட்டு நிலங்களிலும் பயிரா கும். துணிகளுக்குச் சிவப்புச் சாயம் ஏற்ற, இதன் வேர் உபயோகப்படுவதி ஞல், இராமேஸ்வரம் முதலிய தென்தேசக் கடற்கரையோரங்களில் பயி ரிடப்படுகின்றது. இது தரையில் படரும் ஓர்வகைச் செடி.

**ப - உ.**—இலை, வேர், வேர்ப்பட்டை, சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- குருதிப்பெருக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - Styptic.
- பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.

**குணம்.**—கபாதிக்கம், பித்தகோபம், பித்தசுரம், இரத்தவாந்தி, இரு மல், ஈளை, சுவாசகாசம், வயிற்றிரைச்சல், விக்கல் முதலிய ரோகங்களுக்கு உபயோகிக்கலாம்.

வேர்க்குணம்.

இன்புரு வேரை இதமாய் அருந்தினர்க்குப்
பின்புரு தையமொடு பித்தமுமே —துன்பாம்
இருமல் சுவாசம் எரிசுரம்வ யிற்றுப்
பொருமலுப்பி சம்பறந்து போம். (அ.கு.)

**வ - கு.**—(1) இலையின் சூரணத்தை, இரண்டுபங்கு அரிசிமாவுடன் கலந்து அடையாகச் செய்து, சுவாசகாசம், க்ஷயம் உள்ளவர்கள் சாப்பிட்டு வரலாம்.

(2) சமூலம், விராகனெடை $2\frac{1}{2}$, அதிமதுரம், விராகனெடை 1, முறைப் படிக் கஷாயஞ்செய்து, $\frac{1}{2}$ முதல் 1 பலம்வரை, தினம் இரண்டு அல்லது மூன்றுவேளை, சாப்பிட்டுவர, இருமல், சுவாசகாசம், காசம், க்ஷயம் முதலி யன சாந்தமாகும்.

(3) இலையின் சாற்றைப் பாலுடன் கலந்து, சருக்கரையிட்டுச் சாப்பிட்டு வர மார்பு எரிச்சல் நீங்கும்.

(4) இதன் இலையையும் வேரையும் சேர்த்து 1-க்கு 20 வீதம் ஜலம் சேர்த்துக் கஷாயமிட்டு, விஷகடிகளினுலுண்டான விரணங்களைக் கழுவலாம்; ½ முதல் 1 பலம் வரை, இருமல், இரைப்பு, க்ஷயம் முதலிய ரோகங்களுக்கு, உள்ளுக்குக் கொடுத்து உதவலாம்.

(5) ஷை கஷாயத்தையே வெளிப்பிரயோகமாக, சுரசம்பந்தமான கை கால் எரிச்சலுக்கு உபயோகப்படுத்தலாம்.

இதன் வேரைக்கொண்டு செய்யப்படும் லேகியம், இரத்த பித்தரோகத்தில் வாயின்வழியாய் வெளிப்படும் இரத்தத்தை, வெகு ஆச்சரியப்படும்படி இரண்டொரு வேளையில் நிறுத்தும்.

"இம்பூறலைக் காணுது இரத்தங்கக்கிச் செத்தானே" என்று சட்டமுனி வண்ணத்தில் குறிப்பிட்டதையும் நோக்குக.

---

## இரட்டைப்பேய்மருட்டி—Raṭṭaip-pái-marutti (Pái-marutti.).

**வே - பெ.—வெதுப்படக்கி, பேய்மருட்டி, பேய்வருட்டி, பேய்வெருட்டி, பைசாசம், பெருந்தும்பை.**

**Anisomeles Malabarica.**

**Eng.—Malabar Cat-mint.**

Tel. { Moga-bíra. మొగబీర. Mábhéri; మాభేరి. China-raná-bhéri; చిన రణబేరి.

Mal. { Pey-Meraṭṭi. പേയിമെരട്ടി Peruntumba. പെരുന്തുമ്പ

Sans. Alamoola. आलमूलः.

Duk. Mogbíré-ká-pattá. موگبیرے کاپتا *

இது, தென் இந்தியாவிலும், இலங்கை, திருவாங்கூரிலும் பயிராகும்.

**ப - உ.**—இலை, சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** {
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனுல் கணமாந்தம், பேதி, வயிற்றுநோய், கரப்பான், கோரசுரம் நீங்கும்.

மாந்தக ணங்கழிச்சல் மாரு வயிற்றுவலி
சேர்ந்து வருகரப்பான் தீச்சுரமும்—போர்ந்துவிடும்
வேய்மிரட்டுந் தோளுடைய மெல்லியலே! ராசியமாய்ப்
பேய்மிரட்டி யென்றொருக்காற் பேசு. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையைக் கஷாயமிட்டுக் கொடுக்க, வாந்திபேதி, சீதசுரம், கோரசுரம், முறைக்காய்ச்சல், இருமல் குணப்படும். இக்கஷாயத்தை, குழந்தைகளுக்குப் பல்முளைக்கும் போதுண்டாகும் பேதியில் உள்ளுக்கும், கீல்வாதங்களில் மேலுக்கு ஒற்றிடமாகவும் உபயோகிக்கலாம்.

இக்கஷாயத்தின் ஆவியை முகர்ந்தும், உள்ளுக்குங்கொடுக்க, உடம்பில் வியர்வையுண்டாம். விடாச்சுரம் நீங்கும்.

இலைச்சாற்றைப் பல்முளைக்குங் காலத்தி லுண்டாகும் பேதிக்கு, உபயோகிக்கலாம்.

## இரத்தபோளம்—Rattabólam.

(சோற்றுக்கற்றாழைப்பால்—Shóttu-kaṭṛazhaippal.)

வே - பெ.—கரியபோளம், மூசாம்பரம்.

Aloe Indica.

Tel. Mushambaram. ముసాంబరం
Mal. Chenna - Náyakam ചെന്ന നായകം.
Kan. Lála - sára. ಲಾಲಸಾರ.
Sans. Rakthabolam. रक्तबोलम्.
Arab. Nabátussibr. نبات الصبر *
Pers. { siber. صبر * ; Bole-siyeh. بول سیاه * }
Hind. { Musambar. مسمبر * ; Ilva. الوا * }
Duk. Muṣanbar. موسا مبر *

இது தென்னிந்தியாவின் சமுத்திரக்கரையோரங்களில் ஏராளமாய்ப் பயிராகிறது.. சிறுகற்றாழையின் குணமே இதற்குமுண்டு. அதற்குப் பதிலாக இதையும், இதற்குப் பதிலாக அதையும் உபயோகிக்கலாம்.

இரத்தபோளம்

சோற்றுக்கற்றாழைமடலை குறுக்கிலரிய, பால் மஞ்சள் நிறமாக வடியும். இது உறைந்தவுடன் கெட்டிப்பட்டு கறுத்த நிறத்தோடு இருக்கும். சூரிய வெப்பத்தில் இது சிவக்கும். அதனால் இதற்கு இரத்தபோள மெனப் பெயர் வழங்கும்.

**சுவை, செய்கை, குணம்.**—கரிய போளத்துக்குரியதேயாகும். ஆனால், வீக்கங்களை மிகச் சீக்கிரத்தில் கரைக்கும் குணம், விசேஷமா யிதற்குண்டு.

**இதன் சிறப்புக்குணம்.**—விழுந்து இரத்தம் கட்டி, அதன்மேல் அதி கரித்த நோவுடன் வீங்குகின்ற வீக்கமும், எழுந்து நிமிர்ந்து நிற்க வொட்டாத பக்கநோயும், மார்பின் உபத்திரவமும் நீங்கும்.

விழுந்திறந் தங்கிமிக வீங்கு முறுவிக்க
மெழுந்து நிற்கவொட்டா விசுவோ—டழுந்தி
யுரைத்த தமரும்வலி யோடு மெதிற்நிற்கா
திரத்த போளத்தை யெடு. (அ. கு.)

**வ - கு.**—இதை நீரிற் கரைத்துக் கொதிக்கவைத்து மேற்கண்ட வீக்கங் களுக்கும் உபத்திரவங்களுக்கும் பற்றிட, மிகத்துரிதத்தில் குணமுண்டாகும்.

---

## இருவாட்சி—Iruvatshi.

வே - பெ.—அநங்கம், நவமல்லிகை, மயிலை, வசந்தி.

Flore Multiplicata.

Eng.—Arabian jasmin.

Tel. Malle. మల్లె.
Mal. { Cherupitchakam ചെറുവിച്ചകം. ; Mulláchchapu. മുല്ലച്ചപ്പു. ; Mullapu. മുല്ലപ്പു. }
Kan. Mallige - Hoovu. ಮಲ್ಲಿಗೆ ಹೂವು.
Arab. Sumana-Yesmana. سمانا – یس مانا *
Hindi. { Bailphul. بیل پھل * ; Mogre-ke-phúl. موگری کا پھل * }
Duk. { Bailphul. بیل پھل * ; Mogre-ke-phul. موگری کا پھل * }

இந்தியா, பர்மா, இலங்கை இவ்விடங்களில் அபரிமிதமாய் பயிரிடப்படு கின்றது.

**ப - உ.**—இலை, பூ, வேர், எண்ணெய்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** பாற்சுருக்கி - க்ஷீரநாசநி - **Lactifuge.**

**குணம்.**—நேத்திரப்பிரகாசம், தேகத்தில் நன்மணம், வனப்பு இவைகளை உண்டுபண்ணும். தேககுத்தலும், மூர்ச்சா ரோகமும் நீங்கும்.

கண்ணொளிவும் மெய்யிற் கமழ்மணமும் நீடழகும்
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம்—பண்ணளியும்
கங்குலும்வாழ் வார்குழலே! காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால். (அ.கு.)

**வ - கு.**—இப்புஷ்பங்களினின்றும், ஓர்வித எண்ணெய் எடுக்கின்றனர். இவ்வெண்ணெயை, காது, மூக்கு இவ்விடங்களிலுண்டாகும் சீழ் நாற்றங்களுக்கு உபயோகிக்கலாம்.

இதன் இலை, பூ, வேர் இவைகளை வெளிப்பிரயோகமாக உபயோகிக்க, பால் சுரப்பைக் கண்டிக்கும்.

கண் வியாதிகளுக்கு, இதன் இலையை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, தலையில் தேய்க்கலாம்.

இரத்த வாந்தியில், இதன் பூவைக் கஷாயமிட்டு உள்ளுக்குக் கொடுத்தும், கண்ணில் இரத்தம்வரின், இப்பூவின் சாற்றைக் கண்ணில் விட்டும் வருவது வழக்கம்.

சீன தேசத்தில், தேயிலைப்பானம், நறுமணம்பெற இதன்பூவை உபயோகிக்கின்றனர் எனத் தெரிகிறது.

---

## இரேவல் சின்னி—Iraval Chinni.

**வே - பெ.—பேதிக்கிழங்கு, மஞ்சட் சீனக்கிழங்கு, வரியாத்துக்கிழங்கு, நாட்டு ரேவல்சின்னி.**

**(Rheum Emodi R. Acuminatum, R. Australe, R. Moorcroftianum, R. Speciforme).**

**R. Webbianum of the germs of Polygonaceae.**

**Eng.—Himalayan.—Rhubarb.**

**Tel.** Náṭṭu - reval - chinni. నాట్టు రేవల్ చిన్ని.
Náṭṭu - pasupu - china gadda. నాట్టు పసుపు చిన గడ్డ.

**Kan.** Náṭ - revá - chinni. ನಾಟ್ಟು ರೇವಲ್ ಚಿನ್ನಿ.

**Sans.** Reval - chinni. रेवल्चीनी.

**Arab.** Ravande-hindi. ريوند هندى *

**Pers.** Ravande - hindí. ريوندى هندى *

**Hind.** Hindí-revand-chini. هندى ريوندچينى *

**Duk.** Nat-kí-revanchini. ناٹ كى ريوند چينى *

இது, திபேத்து, தார்த்தாரி பிரதேசங்களிலும், இந்தியாவில் இமயமலைப் பிரதேசங்களிலும் பயிராகிறது. இமயமலையில் விளைவதற்கு, நாட்டு ரேவற் சின்னி என்று பெயர். இது சீனதேசத்துச் சரக்குக்குத் தாழ்ந்ததென்று கருதப்

படுகிறது. சிறுவிலிருந்து ஏற்றுமதியாகும் சரக்கு, வட்டமாகவாவது தட்டையாகவாவது இருக்கும். இதில் ஒரு துவாரம் இருப்பதுண்டு. வெளிப்புறம் மஞ்சட்சாயலாகவும், உட்புறம் வரிவரியாகவும், மென்றால் மணலைப்போல் நரநரவென்றும் இருக்கும். இதில் ஒருவித வாசனையுமுண்டு. சொத்தை விழுந்திராது.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**
- பெருமலம்போக்கி - விரேசனகாரி - **Cathartic.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - **Stomachic.**

**குணம்.**—மலபந்தம், அக்கினிமந்தம், பாண்டு இவற்றைப்போக்கும். தீபனத்தை விருத்தி செய்யும்.

**வ - கு.**—வேதனையின்றி பேதியாக்குகிற குணம் இதற்கிருப்பதால், மலபந்தமுடைய பாலர்களுக்கும், பாண்டு ரோகமுடைய பெண்களுக்கும், கெர்ப்பவதிகளுக்குமே இதைக் கொடுக்கலாம்.

இதைக் குறைந்த அளவில் தனித்தேனும், வேறு மருந்துகளுடன் சேர்த்தேனும் கொடுக்க, அக்கினிமந்தம் நீங்கித் தீபனமுண்டாகும்.

அதிசாரபேதியில் கெட்டமலத்தை வெளிப்படுத்த, இதை வழங்கலாம்.

ஒன்றரை முதல் நாலுகுன்றி யளவில் கொடுக்க, ஜீரணசக்தியுண்டாகும்.

பத்து முதல் இருபது குன்றியளவு தேனுடன் கலந்துகொடுக்க, பேதியாகும்.

இரேவற்சின்னியுடன், சரக்கொன்றைப்புளி, வெடியுப்பு, சுக்கு, தேவதாரு, சந்தனம், சடாமஞ்சில், இவைகளைச் சேர்த்து, சிறிது நீர்விட்டு அரைத்து, வயிற்றின்மீது பற்றிட, மலக்கட்டு, ஜலக்கட்டு நீங்கும். கல்லீரல் மண்ணீரல் வீக்கத்துக்கு இதைப் பற்றிட, அவைகள் நாளுக்குநாள் சுருங்குவதைக் கண்டுளோம்.

---

## Ilandai Maram—இலந்தை.

**வே - பெ.—இரந்தை, குல்லரி, குல்வலி, கோல், கோற்கொடி, வதரி.**

**Zizyphus Jujuba.**

**Eng.—The Jujuba Tree.**

| | |
|---|---|
| **Tel.** Regu రేగు. | **San.** Badari ; Kōla. बदरी ;कोलः |
| **Mal.** Ilanda ഇലന്ത. | |
| **Kan.** Bogari ಬೋಗರಿ. | **Hind.** Bær بیر |

இது இந்தியாவின் எப்பாகத்திலும் கிடைக்கும். முக்கியமாய்த் தென்னிந்தியாவில் சர்வ சாதாரணமாகக் கிடைக்கக்கூடியது. இதில் இரு வகையுண்டு: காட்டு இலந்தை, நாட்டு இலந்தை ; நாட்டு இலந்தையில் சீமை இலந்தை என்று வேறொரு பிரிவும் உண்டு.

**ப - உ.**—கொழுந்து, இலை, பழம், பட்டை, வேர், வேர்ப்பட்டை, கட்டை, சமூலம்.

**காட்டு இலந்தை.**

**சுவை.**—பழம் : புளிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**நாட்டு இலந்தை.**

**சுவை**— பட்டை - இலை.—துவர்ப்பு, இனிப்பு, பழம்.—இனிப்பு, புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- பட்டை—துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- துளிர்—ஸ்நிக்தகாரி - வர்ட்சியகற்றி - **Emollient.**

**குணம்.**

**வேர்.**—அயர்ச்சியை விலக்கும், பசியை உண்டாக்கும்.

**இலை.**—மூலம், இரத்த அதிசாரம், தேக எரிச்சல், வயிற்றுக்கடுப்பு, பித்தமேகம் இவைகளைப் போக்கும்.

**பழம்.**—பித்தமூர்ச்சை, அரோசகம், வாந்தி, வலி, வாதம் இவைகளைப் போக்கும்.

**சமூல குணம்.**

வேருக்கா யாசம் விலகும் பசியுண்டாம்
சீரொத் திடுஇலைக்குச் சீழ்மூலம்—சோரிவிழல்
மேவெரிச்ச லுங்கடுப்பு மேகபித்த மும்போகும்
தாவமதில் வாழுமிலந் தை.

**பழம்.**

பித்த மயக்கருசி பேராப் பெருவாந்தி
மொத்தனில மெல்லா முடிந்திடுங்காண்—மெத்த
உலர்ந்த வெறும்வயிற்றி லுண்டால் எரிவாம்
இலந்தை நறுங்கனியை யெண். (அ. கு.)

**இலை.**

**வ - கு.**—(1) பச்சை இலையை அரைத்து சிறு எலுமிச்சங்கா யளவு புளித்த மோரில் கொடுக்க, மூலம் குணமாகும்; (2) இந்த இலையை பவள பற்பம் செய்ய உபயோகிக்கலாம்.

இலையும் பட்டையும் சேர்த்துக் குடிநீர் செய்து, இரத்தஅதிசாரம், வயிற்றுக்கடுப்பு இவைகளுக்குக் கொடுக்கலாம்.

**துளிரும் கட்டையும்.**

இவற்றை நன்றாய் அரைத்துக் கொப்புளங்கள் முதலியவற்றிற்கு வைத்துக்கட்டிவர, பழுத்து உடையும்.

**பழம்.**

பழத்தை உலர்த்திக் கொட்டை நீக்கிக் கொடுக்கக் கபத்தைத்தள்ளும், இலகு விரேசனியாகவும் இருக்கும்.

கொட்டையை நீக்கிவிட்டுத் தசையுடன் மிளகாயும் உப்புஞ் சேர்த்தரைத்து உலர்த்திவைத்துக்கொண்டு, ஓர் கடுக்காயளவு, காலையில் கொடுத்துவர பித்தவாந்தி, அரோசகம் நீங்கி தீபனமுண்டாகும்.

பட்டையும் இலையும் சேர்த்துத் தண்ணீரில் கொதிக்கவைத்து, வாதரோகிகளைக் குளிக்கச்செய்யலாம்.

பட்டையை உலரவைத்து இடித்துத் தூளாக்கி, பழைய புண்களுக்கும், விரணங்களுக்கும் தூவிக்கட்டலாம்.

பட்டையைக் கஷாயமிட்டு, சுரத்துக்கும் சந்நிக்கும் கொடுத்துதவலாம்.

**வேர்ப்பட்டை.**

இதன் ரசத்தை உட்கொள்ள, மலத்தைக் கழிக்கும், வெளிப் பிரயோகத்தால் கீல் வாதத்தைப் போக்கும்.

---

## இலவங்கம்—Lavangam.

**வே - பெ.—அஞ்சுகம், உற்கடம், கருவாய், கிராம்பு, சோசம், திரளி, வராங்கம்,**

**Caryophyllum.**

**Eng.—Cloves.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Lavangálu లవంగాలు. / Lavanga-pú లవంగ పువ్వు | Sans. | Lavangam लवङ्गम्. |
| | | Arab. | Qaranful * قرنفل |
| | | Per. | Mekhak * میخک |
| Mal. | Karámpu കരാംമ്പു. | Hind. | Long * لونگ |
| Kan. | Lavangá ಲವಂಗ. | Duk. | Lavang * لونگ |

இது, இந்தியாவினும் இலங்கையினும் பயிராகிறது. எல்லாக்கடைகளி லும் விற்கப்படும்.

கிராம்பு, நல்லமணம், காரம், விறுவிறுப்புள்ளதாயும், இள்ளிறுல் தைலப்பசையுள்ளதாயுமிருக்கும்.

**சுவை.**—காரமும் விறுவிறுப்புமுள்ளது, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - - Antispasmodic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—கிராம்பு பித்தமயக்கம், பேதி, வாந்தி, இரத்தக்கடுப்பு, கிராணி, ஆசனப்பிடுங்கல், சுக்கிலநட்டம், செவிநோய், சிவந்தமச்சம், கறுத்தமச்சம், விவுர்தம், சம்விவுர்தம் என்கிற வாதங்கள், கண்ணில் பூ, படை இவைகளை நீக்கும், மலத்தைக் கட்டும். கறிமசாலையிலும் சேரும்.

பித்த மயக்கமறும் பேதியொடு வாந்தியும்போம்
சுத்தவிரத் தக்கடுப்புந் தோன்றுமோ—மெத்த
இலவங்கங் கொண்டவருக் கேற்றசுக மாகும்
மலமங்கே கட்டுமென வாழ்த்து.

சுக்கிலநட் டங்கர்ன்னச் சூர்வியங்க லாஞ்சனந்தாட்
சிக்கல்விடாச் சர்வா சியப்பிணியு—மக்கிக்குட்
டங்கப்பூ வோடு தரிபடருந் தோன்றிலில
வங்கப்பூ வோடுரைத்து வா. (அ.கு.)

**வ - கு.**—கிராம்பை நீர்விட்டு மைபோலரைத்து, நெற்றியிலும் மூக்குத்தண்டின்மீதும் பற்றிட தலைபாரம், நீரேற்றம் குணமாகும்.

தணலில் வதக்கி வாயிலிட்டுச் சுவைக்க, தொண்டைப் புண் ஆறும், பற்களின் ஈறு கெட்டிப்படும்.

இரண்டு ஆழாக்கு வெந்நீரில், கிராம்புத்தூள் பலம் கால் சேர்த்து, அரை மணி நேரம்வரையில் மூடிவைத்து வடிகட்டி, $\frac{1}{8}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் உட்கொள்ள, மந்தாக்கினி, கருப்பிணிகளின் வாந்தி, இரத்தக்கடுப்பு, கிராணி நீங்கும்.

கிராம்பு, சிறுநாகப்பூ, விலாமிச்சம் வேர், திரிகடுகு இவைகளின் சூரணம் சமவெடையெடுத்து, வடகஞ்செய்து கொடுக்க, பித்தமயக்கம், பேதி, வாந்தி, ஆசனப்பிடுங்கல், தீரும். (10 முதல் 20 உழுந்தெடையுள்ள மாத்திரையாகச் செய்து கொள்ளவும்).

கிராம்பு, சுக்கு வகைக்கு 5 பங்கு, ஓமம், இந்துப்பு வகைக்கு 6 பங்கு சேர்ந்த சூரணத்தில், 2 முதல் 3 குன்றியெடை வீதம் கொடுக்க, மந்தாக்கினி நீங்கும், உணவு நன்றுய்ச் சீரணமாகும்.

கிராம்பும் நிலவேம்பும் சமமெடுத்துக் குடிநீர் செய்து கொடுக்க, பசியுண்டாகும், அயர்ச்சி நீங்கும். சுரத்திற்குப்பின் னுண்டாகும் களைப்பைப் போக்கும்.

நிலாவாரைக் கஷாயத்தில் ஒன்று அல்லது ஒன்றறைக் குன்றியெடை கிராம்புத்தூளும், சுக்குப் பொடியும் சேர்த்துச் சாப்பிட, சுகமாய்ப் பேதியாகும்.

பித்தசாந்தி, சுக்கிலநட்டம், வயிற்றுப்போக்கு இவைகளின் பொருட்டு செய்யப்படுகிற மருந்துகளிற் கிராம்பு அநேகமாகச் சேரும்.

இலவங்கத்தைலம்.

**புறச்செய்கை.**

**செய்கை.**
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி—Antiseptic.
- உணர்ச்சிப்போக்கி - Local anaesthetic.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி- Rubefacient.

**அகச்செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

இலவங்கத்தை வாலையிலிட்டு வடித்தத்தைலம் துல்லியமாயும், காரமாயும், நல்ல மணமுள்ளதாயுமிருக்கும். நாவில் பட்டால் சிவக்கும். 2 முதல் 3 துளி சருக்கரையுடன் சேர்த்துண்ண முன்கண்டுள்ள பல நோய்கள் சாந்தமாகும். பல்நோயுக்கு பஞ்சில் நனைத்துவைக்கலாம்.

---

## இலவங்கப்பட்டை—Lavangap-paṭṭai.

**வே - பெ.—கருவாப்பட்டை.**

**Cinnamomum Zeylanicum.**

**Eng. Cinnamon—Bark of.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Lavanga-paṭṭa లవంగపట్ట. Sanna-lavangapaṭṭa సన్న లవంగపట్ట. | Arab. | Qirfahe-sailáníyah قرفه سيلانيه * Dár-chíní دارچینی * |
| Mal. | Lavanga-paṭṭa ലവംഗപ്പട്ട. Cheriya-ela-vanna-toli ചെറിയെലവംഗത്തൊലി. | Pers. | Salíkhahe-sáiláníyah سليخه سيلانيه * Dár-chíní دارچینی * |
| Kan. | Lavanga-paṭṭa ಲವಂಗ ಪಟ್ಟೆ. Dáḷa-Chinni ದಾಲಚಿನ್ನಿ. | Hin. | Qalamí-dar-Chini کلامی دارچینی * Dár-Chini دارچینی * |
| Sans. | Twak त्वक् | Duk. | Qalamí-dal-Chini کلامی دال چینی * Dál-Chíní دال چینی * |

கருவாப் பட்டைச் செடி இலங்கைக்கும் இந்தியாவுக்கும் உரியபயிர். ஆயினும் இலங்கையில் தான் விசேஷமாக உற்பத்திசெய்யப்படுகிறது. இது மற்ற தேசத்திய உற்பத்தியிலும் மேம்பட்டது. கறிமசாலையில் சேரும். வாய்நாற்றத்தைப் போக்கும்.

**சுவை.**—காரமும் இனிப்புமுடையது, **வீரியம்** - சீதம், (வெப்ப வீரியமென்றும் கூறுவர்), **பிரிவு** - இனிப்பு, (கார்ப்பென்றுங் கூறுவர்.)

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**

**குணம்.**—தாதுநஷ்டம், ஆசியநோய், சர்ப்பவிஷம், பேதி (அதிசாரம்) பூதகிரகம், இரைப்பு, சகலவிஷம், சிலந்திவிஷம், இருமல், இரத்தக் கடுப்பு, வயிற்றுக்கடுப்பு, உள்மூலப்புண், இவைகளைப்போக்கும். தேகத்துக்குக் குளிர்ச்சி யுண்டுபண்ணும்.

தாதுநட்டம் பேதி சருவவிஷம் ஆசியநோய்
பூதகிர கஞ்சிலந்திப் பூச்சிவிடஞ்—சாதிவிடம்
ஆட்டுமிரைப் போடிருமல் ஆதியநோயக் கூட்டமற
ஓட்டும்இல வங்கத் துரி.

சன்னலவங் கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கும்
இன்னுமிரத் தக்கடுப்பை யீர்க்குங்காண்—முன்னம்உறும்
உந்திக் கடுப்பகற்றும் உண்மூலப் புண்போக்கும்
கந்தமிகு பூங்குழலே! காண். (அ.கு.)

**வ - கு.**—கருப்பையைச் சுருங்கச்செய்கிற குணமுண்டென்று, பெரும்பாடு, மந்தப்பிரசவவேதனை இவைகளுக்குக் கொடுப்பதுண்டு.

**அளவு.**—இப்பட்டையின்தூளை 5 முதல் 20 உழுந்தெடை கொடுக்கலாம். பெரும்பாலும் தனியாய்க் கொடுப்பது அரிது.

சீதபேதியில் 10 குன்றியளவுப்பொடி, பலனைத்தரும். இதன் செடியிலிருந்து 3 வகைத் தைலம் எடுக்கப்படும்.

(1) பட்டையிலிருந்து எடுப்பது.—பொன் நிறச்சாயலாயிருக்கும், வாசனையாகவும் உபயோகப்படும்.

(2) இலையிலிருந்து எடுப்பது.—கிராம்பு மணம் பெறும்; இதனைக் கிராம்புத்தைலமென்றுங் கூறுவர்.

(3) வேர்ப்பட்டையிலிருந்து எடுப்பது.—மஞ்சள் நிறம்; தண்ணீரைப்பார்க்கிலும் இலேசு.

இலையிலிருந்து எடுக்குந்தைலம்; வாதரோகங்களிலும், தலைவலி, பல்வலி முதலிய ரோகங்களிலும் உபயோகப்படும்.

அருவருப்புள்ள மருந்துகளுடனும் சேர்ப்பதுண்டு.

மாத்திரை—2—5 துளி.

**இலவங்கப்பட்டைச் சூரணம்.**

இலவங்கப்பட்டை, ஏலரிசி, சுக்கு இவைகளின் சூரணம் சமனெடை கலந்து 3 முதல் 10 உழுந்தெடை கொடுக்க, வாந்தி, வயிற்றுப்பொருமல்—வலி, இரத்தக்கடுப்பு, பேதி சாந்தப்படும்.

இலவங்கப்பட்டை, சோம்பு, சுக்கு, வாய்விடங்கம், கிராம்பு வகைக்கு வராகனெடை 1 ஆகச் சேர்த்து முறைப்படிக் கஷாயமிட்டு 4-ல் ஒன்றாகக் குறுக்கி வேளைக்கு ½ முதல் 1 பலம் வரையிலும் தினம் இருவேளை கொடுத்துவர, வயிற்றுவலி, குன்மம், கிருமிக்கடி முதலிய நோய்கள் தீரும்.

இலவங்கப்பட்டை 1 பங்கு, காசுக்கட்டி 3 பங்கு இவைகளைக் கொதிக்கிற வெந்நீர் 80 பங்கில் நன்றாய்க் கலக்கி வடிகட்டி, ½ பலம் வீதம் தினம் 3 வேளை கொடுத்துவர, அதிசாரநோய் தீரும்.

---

## இலவங்கப்பத்திரி—Lavangappattri.

**Cinnamum Tamala.**

**Cassia Lignea.**

**Eng. Chinnamum Leaves.**

| | |
|---|---|
| **Tel. Lavangapatri** లవంగపత్రి. | **San.** Lavangapatram. **लवङ्गपत्रम्** |
| **Mal. Elavanna patri** എലവംഗപത്രി. | |
| **Kan. Lavangapatri** ಲವಂಗಪತ್ರೆ. | **Hind. Tájpat** * تیز پات |

இது, இந்தியாவில் இமயமலை, கீழ்வங்காளம் முதலிய இடங்களிலும், பர்மா முதலிய பிரதேசங்களிலும் விளைகிற ஒருவகை இலவங்கப்பட்டைச் செடியின் இலைக்கு இலவங்கப்பத்திரி என்று பெயர். கருவாப்பட்டையின் குணமும் வாசனையும் இதற்கு உண்டு. இதன் பட்டை விலையுயர்ந்த இலங்கைக் கருவாப்பட்டைக்குப்பதில் உபயோகிக்கப்படுகிறது.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—மேகசுரம், சீதசுரம், வெட்டை, சுவாசம், காசம், தாகம், பித்தம், வாந்தி, வாய்ப்புண், மேகக்கட்டி, தாதுநட்டம், கைப்பு அருசி இவைகளைப் போக்கும்.

மேகசுரம் சீதசுரம் வெட்டைசுவா சங்காசம்
தாகபித்தம் வாந்திசர் வாசியநோய்—மேகத்தி
கட்டியொடு தாதுநட்டங் கைப்பருசி போக்கிவிடும்
இட்டஇல வங்கத் திலே.

(அ.கு.)

வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி இவைக்கும் உபயோகிக்கலாம்.

கருவாப்பட்டைச் செடியின் பட்டை, இலைகளிலிருந்து தைலமெடுத்து, இவைகளையும் இலவங்கப்பட்டைத்தைலங்களைப் போலவே உபயோகிக்கலாம்.

இது விசேஷமாய் இலேகியமுறைகளிலும், சூரணமுறைகளிலும் சேருகிறது.

---

## இலவுமரம்—Ilavu Maram.

**Eriodendron Anfractuosum D. C.**

**or Bombax Pendandrum.**

**Eng:—Capok tree or white silk cotton tree.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Búruga - Cheṭṭu** | బూరుగ చెట్టు. | **Sans.** | **Shalmali Vrikshaha.** | शाल्मली वृक्षः. |
| **Mal.** | **Paṇṇi - Maram** | പഞ്ഞിമരം. | **Hind.** | **Sufèd-Sèmal** | * سفید سیمل |
| | **Muḷḷillá - Púla** | മുള്ളില്ലാ പൂളമരം. | | **Túlá - Pèr** | * طولہ پیڑ |
| **Kan.** | **Búra - Mára** | ಬೂರ ಮರ. | **Duk.** | **Ḳhatyán** | * ختیان |
| | | | | **Ḳhatyán - Ká - jhár** | * ختیان کاجھڑ |

இது இந்தியாவில் உஷ்ணப்பிரதேசங்களில் வளரும் மரவகையைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பூ, வித்து, பட்டை, பிசின், பஞ்சு, வேர்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**குணம்.**—இலவுமரத்தினால் நீர்க்கடுப்பு, நீரெரிவு, தந்துமேகம் இவைகள் விலகும்; சுக்கிலமும் இரசதாதுவும் பலப்படும்.

நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகு மேகமும்போம்
ஆர்க்கும்விந்து வோடைக்கு மாண்மையுறும்—பார்க்குள்
நிலவு மதிவதன நேரிழையே ! வெப்பாம்
இலவு மரத்தா லியம்பு.

(அ.கு.)

இலவம்பட்டையை அரைத்து எலுமிச்சங்காயளவெடுத்து புளித்த நீரில் கலக்கிக் கொடுக்க இடுமருந்து முறியும்.

## முள் - இலவு—Mul - ilavu.

**வே - பெ.—முள் இலவம், சான்மலி, பூரணி, பொங்கர், மோசம்.**
**Bombax Malabaricum or B. Heptaphylla.**
**Eng.—The Red Silk - Cotton Tree.**

**Tel.** Mundla - búraga - Chettu ముండ్ల బూరుగ చెట్టు.

**Mal.** Púḷa - Maram പൂളമരം. Muḷ - Ilava മുള്ളിലവ.

**Kan.** Muḷḷu - búraga - Mara ಮುಳ್ಳುಬೂರಗ ಮರ.

**Sans.** Kantaka - Shalmali कंटक शाल्मली.

**Hind.** Ragai - Sènbal رگی سینبال * Ragai - Sèmal رگی سیمل *

**Duk.** Kánṭóṅ - Ka - Khatyan کانٹوں کا ختیان * Kánṭóṅ - Ká - Sèmal کانٹوں کا سیمل *

இது இந்தியாவில் உஷ்ணப்பிரதேசங்களில் வளரும் மர வகுப்பைச் சேர்ந்தது. இதன் புஷ்பம் குங்குமம்போல் சிவப்பாயிருக்கும்.

**ப - உ.**—இலவமரத்தின் உறுப்புகளேயாம்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

இலை.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

பூ.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

வித்து.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குருதிப்பெருக்கடக்கி - ரத்தஸ்தம்கனகாரி - Styptic.

பட்டை.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent mild.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

பிசின்.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- குருதிப்பெருக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - Styptic.

வேர்.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—முள்ளிலவுமரத்தினால் தந்துமேகம், நீர்த்தாரை வெப்பம், வாதாதிசாரம் போம்.

தந்துமேகஞ் சிறுநீர்த் தாரைவெப் பம்வாய்
வுந்தவரு பேதியிவை யோட்டுங்காண்—முந்திக்
கிளர்வள்ளை பாயும் வரிக்கெண்டை விழியாய் !
வளர்முள்ளிலவ மரம்.

(அ.கு.)

இலவமரம், முள்ளிலவமரம் இவைகளின் குணம் பெரும்பாலும் ஒத்திருப்பதால் இவைகளின் உறுப்புகளைக்கொண்டு வழங்கும் விதங்களை ஒன்றுசேர்த்து எழுதப்பட்டுளது.

**வ - கு.**—இலையை அரைத்துப் பசுவின்பாலிற் கலக்கிக் கொடுக்க வாத கிரிச்சரம் நீங்கும்.

பூவைக் கஷாயமிட்டுக் கொடுக்க மலக்கட்டையும் சலக்கட்டையும் நீக்கும்.

இதன் உலர்ந்த பூவுடன் கசகசா சேர்த்து அரைத்து வெள்ளாட்டுப் பாலிற் கலக்கிச் சர்க்கரைசேர்த்துக் காய்ச்சிக் கால் பலம் வீதம் நாளொன்றுக்கு மும்முறை கொடுக்க, இரத்தபித்தத்தைச் சாந்தப்படுத்தும்.

இதன் வித்து ஒருபங்கு, சீரகம் அரைப்பங்கு, வால்மிளகு கால்பங்கு சேர்த்தரைத்து 1 வராகனெடை முதல் 2½ வராகனெடை வரையில் கொடுக்க, தந்துமேகம், நீர்க்கிரிச்சரம், நீர்ச்சுருக்கு, வாயின்வழியாம் இரத்தப்போக்கு, சீழ்ப்பிரமியம் இவைகள் போம்.

பட்டை பலம் கால், நீர் 2 ஆழாக்கு விட்டு, ஒரு ஆழாக்காகக் காய்ச்சி வடிகட்டி கால் முதல் அரை ஆழாக்கு வீதம் தினம் மூன்று அல்லது நான்கு முறை கொடுக்க, நாட்பட்ட மூத்திர எரிச்சல், நீர்ச்சுருக்கு, நீரடைப்பு, பிரமேகம், மூத்திரப்பை, மூத்திரத்தாரை இவைகளின் விரணம் தணியும்.

இலவம் பிசினைப் பொடித்துக் கால் முதல் அரை வராகனெடை இள நீரில் கலந்து தினத்திற்கு இரண்டு மூன்று முறை கொடுக்க, தந்து மேகம், நாட்பட்ட மூத்திரக்கொதிப்பு, அசீரணபேதி, சீதபேதி, பேதி முதலிய வியாதிகள் குணமாகும்.

இதன் பஞ்சை விரணங்களில் வைத்துக் கட்ட சீழை வரட்டும். தலையணை, மெத்தை முதலியவைகளுக்கு உபயோகிக்கலாம்.

இதன் வேரைக்கொண்டு செய்யும் கஷாயத்தைச் சீப்பிரமியம், சீதபேதி இவைகளுக்குக் கொடுக்கலாம்.

---

## இலுப்பை.—Iluppai.

**வே - பெ.—இருப்பை, குலிகம், மதூகம்-**

Bassia Longifolia.

Eng. The narrow-leaved Mohua.
The Mahwah or Mowa Tree.

Tel. { Ippe-chettu ఇప్పచెట్టు.
Pinna-ippa పిన్నఇప్ప.

Mal. Irippa ഇരുപ്പ.

Kan. Ippe-gida ಇಪ್ಪೇ ಗಿಡ.

Sans. Madhúka-Vrikshaha मधूक-वृक्षः.

Pers. Darakhte-gulchikań درخت گلچیکن *

Hind. { Móhà موها *
Mohva موهوا *

Duk. Móhà موها *

இது இந்தியாவிலும், இலங்கையிலும் பயிராகும் மரம்.

**ப - உ.**—இலை, பூ, காய், பழம், வித்து, நெய், **பிண்ணாக்கு**, மரப் பட்டை. **வேர்ப்பட்டை.**

**சுவை.**—(பொது) - துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**இலை**
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.

**குணமும் வழக்கும்.**—இலையை மார்பில் வைத்துக்கட்ட முலைப்பால் சுரக்கும்.

### பூ.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

பூவினால் பித்தசுரம், தாகரோகம் நீங்கும். பித்தமும், பிரமையு முண்டாகும்.

குன்று விலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனையாந்
தின்றாற் பயித்தியமுஞ் சேருங்காண்—மன்றலுறுந்
தார்குழலே ! பித்தசுரம் தாகந் தணிந்துவிடும்
வார்தயக்க மெய்தும் வழுத்து. (அ.கு.)

பூவைக் கஷாயஞ் செய்துகொடுக்க இருமல், பித்தசுரம், தாகம் போம்.

கொஞ்சமெடுத்துப் பால்விட்டரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்க, தேக இளைப்பு வாங்கும்.

காய்ந்த பூவை வதக்கி, பீஜவீக்கம் முதலிய வீக்கங்களுக்கு ஒற்றிடமிட அவ்விடத்தில் வேர்வை தோன்றி வீக்கங் குறைந்துகொண்டே வரும்.

இதைக்கொண்டு சாராயஞ் செய்வதுண்டு. மேலும் இப்பூவிலிருந்து ஒருவகைச் சருக்கரை யெடுக்கலாம், இதைச் சருக்கரைக்குப் பதிலாக உபயோகிக்கலாம். இதைச்சுத்தப்படுத்திச் சீனகற்கண்டுக்குச் சமமான குண முடைய கற்கண்டாகச் செய்து மருந்துகளில் உபயோகிக்கலாம். இக்கா ரணம்பற்றியே "ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூச் சருக்கரை" என்கிற பழமொழியும் வழங்குகிறது.

சருக்கரை அல்லது வெல்லப்பாகில் பூவைச்சேர்த்து உருண்டை செய்து ஏழைமக்கள் உணவாகக் கொள்ளுவார்கள்.

இப்பூவின் சாற்றில் இரும்பு சுத்தியாகும் (குணபாடம் 2-வது பாகத் திற் காண்க).

### காய்.

காயைக் கீறினால் வெளிப்படும் பாலை வெண்பாடாணத்திற்கு நாள்தோ றும் பூசிப்பூசி வெயிலில்வைத்து உலர்த்திக்கொண்டேவந்து கால் அங் குலமட்டும் பாலேறியபின், கொம்புக்கள்ளிச் சாம்பற்குள்வைத்து எரிக்கக் கட்டும்.

### பட்டை.

**செய்கை.**
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

பட்டைக்கஷாயம் வாத ரோகங்களில் பலன் கொடுப்பதுடன் புண், சொறிகளைக் கழுவவும் உபயோகப்படும்.

இதன் தைலம் கால் கடுவலைப் போக்கும் ; கபாலச்சூட்டைத்தணிக் கும் ; வாத நோய்களைச் சாந்தமாக்கும் ; (சித்தர் உறை விளக்கம் பார்க்க).

### வித்து.

**குணம்.**—இலுப்பைவிதை அந்தரவாயுவையும், விடத்தையும் போக்கும்.

"இலுப்பைவிதை யந்தரவாய் விற்கும்விடத் திற்கும்
அலுப்பையுண் டாக்கி யகற்றும்". (அ.கு.)

**வ-கு.**—வித்தின்மீதுள்ள ஓட்டைநீக்கி, உட்பருப்பை நசுக்கி வதக்கி ஒற்றிடமிட மேற்கண்டவை விலகும்.

## நெய்-பிண்ணுக்கு.

வித்தின் ஓட்டைப் போக்கி இடித்துப் பிட்டவியலாய் அவித்துச் சூட்டுடன் ஆலேயிலிட்டு ஆட்டி எடுக்க 100-க்கு 30 பங்கு நெய் தேறும். இதற்கு "இலுப்பை நெய்" என்றும், திப்பிக்கு "இலுப்பைப்புண்ணுக்கு" என்றும் பெயர்.

## இலுப்பை நெய்.

இதனுல் கரப்பான், சிரங்கு, புண் உண்டாகும். ஆனுல் இடுப்பு வாதம், துர்ப்பலம் நீங்கும்.

கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணும்
உரப்பா மிடுப்புவலி யோடுங்—கரப்பான
பாகுமொழி மாதே ! பலமுண்டாந் துற்பலம
தேகு மிலுப்பையினெய்க் கே. (அ.கு.)

நெய்யை வெதுப்பி இடுப்புவாதத்திற்குத் தேய்த்துவர, அவ்வாதம் விலகும் ; உடல்பலக்கும்.

இது வெகு துரிதத்தில் காரலெடுத்துப்போவதால், உட்புகட்டும் தைலங்களில் சேர்ப்பதில்லே ; ஏழைகள் இதில் சிற்றுண்டி செய்து உண்பார்கள். சேற்றுப்புண்ணிற்குப்பூசவும், விளக்கு எரிக்கவும் பயன்படும்.

இதில் நாகம் சுத்தியாகும். (குணபாடம் 2-வது பாகத்திற் காண்க).

## இலுப்பைப்பிண்ணுக்கு

**சுவை.**—கைப்பும் துவர்ப்பும், **வீரியம்**- வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- தொற்றுப்புழுவகற்றி - ஆகந்துகரோகநாசநி - Disinfectant.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.

இலுப்பைப் பிண்ணுக்கு கடுவன், புண், கரப்பான், பீஜவீக்கம், திரிதோடம், எண்ணெய்ச்சிக்கு ஆகியவற்றைப் போக்கும்.

பொத்திக் கடுவனெடு புண்ணுங் கரப்பனும்போம்
வித்தனைப்பு தோடமிவை வீருவாம்—மெத்தெனவே
எண்ணெய்க் கசிவுகளு மேகு மிலுப்பைவிதைப்
பிண்ணுக்குக் கென்றறியப் பேசு. (அ.கு.)

**வ-கு.**—இதைச் சுட்டு தேங்காயெண்ணெயுடன் கலந்துபூசக் கடுவன், புண், கரப்பான் போகும்.

இதைப் புகைக்க வீட்டிலுள்ள புழு, பூச்சு, எலிகள் வீட்டைவிட்டகலும்.

இப்பிண்ணுக்குடன், மாட்டுக்குளம்புச்சீவல், குதிரைக் குளம்புச்சீவல், பன்றிப்புட்டை சேர்த்துப் புகைக்க வுண்டாகும் புகையை மூலத்திற்குக் காட்ட மூலரோகம் குணப்படும்.

பிண்ணுக்கைப் பொடித்து மூக்கிலிட, நாசியில் நீர்ப்பாய்ந்து, தும்மலுண்டாகும், திரிதோடம் நீங்கும். இப்பொடியை வறுத்துப் போதுமான சூடுடன் ஒற்றிடமிட பீஜவீக்கம் குறையும். மற்ற வாதவீக்கங்களுக்கும் இவ்வாறே செய்யலாம்.

தலேமயிரிலுள்ள எண்ணெய்ச் சிக்கைப் போக்க இதை உபயோகிக்கலாம்.

அரைத்துத் தண்ணீரில் கலக்கிக் கொடுக்க வாந்தியுண்டாகி ஊமத்தங்காயைத் தின்பதனுலுண்டாகும் விடத்தை முரிக்கும்.

### வேர்க்குணம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.** வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—புண், புரை, வயிற்றுக்கடுப்பு, இரத்தக்கிராணி, அதிமூத்திரம் அக்கினிமந்தம், அருசி, வாதசூலை, சகலசுரம், க்ஷீணசுக்கிலம், தாகம், சரீரஅயர்வு இவைகளைநீக்கும். தலைமயிருக்காகாது.—

புண்ணும் புரையுமறும் போதத் துவர்ப்பாகும்
எண்ணு மகக்கடுப்பி ருக்குமோ—பெண்ணேகேள் !
நீரிழிவு மேகும் நெடுமோமை மூலத்தாற்
போரடர்க டுப்பிரத்தம் போம்.

மந்த மரோசிம காசூலை சர்வசுரம்
விந்துநட்டந் தாகமொடு மெய்யிளைப்பும்—முந்த
அலுப்பைப்பெற் றேகு மளகத்திற் காகா
இலுப்பைக்குச் சூடதிக மெண். (அ.கு.)

**வ-கு.**—வேர்ப்பட்டைக் குடிநீர் புண், புரைகளைக்கழுவவும், உட்கொண்டு மேற்கூறிய இதர ரோகங்களைப் போக்கவும் உதவும்.

---

## இலைக்கள்ளி—Ilaik-kalli.

**Euphorbia Nivulia or E. Nerifolia**

**Eng.—Common Milk Hedge.**

**Tel.** Àku-jemedu ఆకుజెముడు.

**Mal.** Elakkaḷḷi എലക്കള്ളി.

**Kan.** Yalekaḷḷi ಎಲೆಕಳ್ಳಿ.

**Sans.** Snuhī (patra) स्नुहीपत्रम्.

**Hind.** Pattón-ki-śend پتّاں کی سینڈ * ; Thóhar توهر *

**Duk.** Kuttē-kì-jìbh-kí-sēnd کتی کی جیب کی سینڈ * ; Kuttē-kì-jíbh-kā-patta کتی کی جیب کا پتا *

இது, தென்னிந்தியாவில் சாதாரணமாய்ப் பயிராகும். சிறுமர வகுப்பிற் சேர்ந்தது. இச்சாதிக்கள்ளிக்குப் பாலுண்டு. இலை நாயின் நாக்கு அல்லது முயலின் செவிபோலிருக்கும், மரத்தில் முள்ளுண்டு.

**ப-உ.**—இலை, பால், வேர்.

### இலை.

இலையை வரகு வைக்கோற்றீயில் வதக்கிச் சாறு பிழிந்தே உபயோகிப்பது வழக்கம்.

**செய்கை.**
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி—Purgative.

**குணம்.**—இச்சாறினால் செங்கரப்பான், கருங்கரப்பான், கிரந்தி, காது குத்தல் நீங்கும்.

**வ-கு.**—சிறு குழந்தைகளுக்குண்டாகும் கரப்பான் ரோகத்திற்கு இச்சாற்றில் சிறிதளவு (ஒரு உச்சிக்கரண்டியளவு) புகட்டலாம்.

சாற்றைச் சுடவைத்து காதில்விட்டுவரக் காது குத்தல் நீங்கும்.

கபத்தை விலக்கக்கூடிய மணப்பாகுகளில் ஒன்றில் சமபாகம் இச் சாற்றைக் கலந்து 10 முதல் 20 துளிவீதம் நாள் ஒன்றுக்கு 2 முதல் 3 தரம் கொடுக்க, இரைப்பு உப்பிசம் தணியும்.

இச்சாறுடன் உப்பு சிறிது சேர்த்துக் காய்ச்சி கக்குவான், சோபை, குன்மம், காமாலே, சூலே ஆகிய நோய்களுக்கு வழங்கலாம். நெய் சேர்த்துக் கொடுக்க, மேக ரோகங்களும் நீண்ட நாள் சுரக்காய்ச்சலாலுண் டான பிலீகவீக்கமும் குணப்படும். வேப்பெண்ணெய் சேர்த்துக் காய்ச்சி வாத நோய்களுக்குத் தேய்த்துவரலாம்.

இலேயை வதக்கி அடிவயிற்றின்மீது போட, நீர்த்தடையை விலக்கி, நீரை வெளிப்படுத்தும்.

### பால்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—இலேச்சாற்றுக்குள்ள குணங்களே இதற்குமுண்டு.

செய்ய கரப்பான் செவிநோய்வா தம்போக்கும்
பையவருஞ் சூலேதனேப் பாழாக்கு—வெய்யின்மிக
ஊது கிரந்தியோ டுட்புண்ணே யாற்றிவிடும்
ஓதுமிலேக் கள்ளிப்பா லோரு.

(அ.கு.)

**வ-கு.**—இதன் பாலே எண்ணெயுடன் சேர்த்துப் பாகப்படுத்தி வாத நோய்களுக்கு உபயோகிக்கலாம்; தனிப்பாலே தோல்மீது கிளேக்கும் மரு ளுக்கும் வாத வீக்கங்களுக்குந் தடவலாம்.

### வேர், வேர்ப்பட்டை.

**செய்கை.** { நீர்மலம் போக்கி - வ்ரேசநி - Purgative.
நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.

**வ-கு.**—இதன் வேருடன் பெருங்காயம் சேர்த்து நீர்விட்டரைத்து, சிறு பிள்ளேகளின் வயிற்றின்மீது பற்றிட பூச்சிகள் மலத்துடன் வெளிப்படும்.

#### மரச்சக்கை.

இம்மரத்தின் சக்கையைச் சுட்டுச் சாம்பலாக்கி, நாட்பட்ட புண்களின் மீது தூவ, விரணம் துரிதத்தில் ஆறும். இதை வதக்கிக்கட்ட நகச்சுற்று நீங்கும்.

---

## ஈச்சு—Ěch-chū.

இது இந்தியாவில் (பலபாகங்களிலும் பயிராகும்; மரவகுப்பைச் சேர்ந் தது: இரண்டுவகைப்படும். 1) சிற்றீச்சு. (2) பேரீச்சு.

### சிற்றீச்சு.

Phœnix Farinifera.

Eng.—Small Date.

| | |
|---|---|
| Tel. Eethakaya ఈతకాయ. | Kan. Esala - mara ಈಚಲಮರ. |
| Mal. Chitteenthal ചിററീന്തൽ. | Hind. Sandola * صندولا |

**ப-உ.**—பழம், பிசின், கொட்டை, கள், குருத்து, வெல்லம், கற்கண்டு.

#### பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - அற்பவெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
மலமிளக்கி - லகுவிரேசநி - **Laxative.**

**குணமும் வழக்கும்.**—வாயிலிட்டுச் சுவைத்தால் சீதபேதி, உழலை நோய், விரணம், சுவாசம், சுரம், பிரமேகம், வாய் நாற்றம் இவைகளை உண்டாக்கும். மந்தப்படும்.

சிற்றீந் தெனுங்கனிக்குச் சீத முழலையொடு
உற்ற சிரங்குகளு முண்டாகுஞ் - சுற்றிச்
செறியும் பலபிணியுந் தேமொழியே! நாளும்
அறிவு மழுங்கும் அறி. (அ.கு.)

## பிசின்.

சிறிய அளவில் நீரிற் கலந்து உட்கொள்ள அஜீரண பேதி, மூத்திர சம்பந்தமான நோய்களைப்போக்கும்.

## கொட்டை.

கண்ணில் விழும் பூவிற்கு, இதன் கொட்டையைப் பால் அல்லது தண்ணீரில் தேய்த்துச் சிறிது கண்ணில் இட்டலாம்.

## கள்.

இதன் கள்ளை புளிக்காததற்கு முன்பு, அதிகாலையில் அரை முதல் ஒரு ஆழாக்கு வரையில் உட்கொண்டுவர உள்ளழலை, பிரமேகம், மூத்திரக்கிரிச்சரம், அரோசகம் தீரும். ஆனால் பித்தமதிகப்படும். வீக்கம், திமிர்வாயு உண்டாகும். அதிக அளவில் வயிற்றைப் போக்கும்.

வெப்பகனு மெய்குளிரு மேகங் கிரிச்சரம்போஞ்
செப்பருசி போம்பித்தஞ் சேருங்கா—ணைப்படியும்
பூச்சு திமிருண்டாம் பொங்கறிவுங் கெட்டிடுமே
ஈச்ச மதுவதற் கே.

(அ.கு.)

## குருத்து.

குருத்தைத் தின்பதால் பெண்களுக்குண்டாகும் உதிரச்சிக்கல் போம்.

"சிறியயீச் சுக்குருத்தைத் தின்றால் வயிற்றின்
மறியுதிர வாயுவறும் வாழ்த்து." (அ.கு.)

## கற்கண்டு.

ஈச்சங்கற்கண்டு அவிழ்தங்களையும் அறிவையும் கெடுக்கும். வாதபித்த கப க்ஷயங்களையும், காணுதற்கரிய பல பிணிகளையும் தரும்.

அரிய மருந்தையெலா மன்றே முறிக்குந்
திரிவித கபத்தைவரச் செய்யுந்—தெரிவரிய
பன்னோய் விளைக்கும் பகரறிவை மங்குவிக்கு
மன்னோய் வீச்சங்கண் டிசை. (அ.கு.)

## பாய்

சிற்றீச்சுப் பாயில் துயில்பவருக்கு உஷ்ணமும் தேகவுலரலுமுண்டாகும்; ஆவிருதவாதம் விர்த்தியாகும், பித்தம் ஒழியும், கபச்சினம் நீங்கும்.

சிற்றீச்சுப் பாயிற் றினமும் படுப்பவருக்
குற்றிடுமே காந்த வுடம்புலருஞ்—சுற்றியதோர்
வாயுவுறும் பித்தமறு மற்றுங் கபந்திருந்
தாயகமா மிக்குணத்தைச் சாற்று. (அ.கு.)

---

## பேரீச்சு—Pērīchchu.

### Phœnix Dactylifera.

Tel. Karjúramu ఖర్జూరము. | Kan. Kharjura ಖರ್ಜೂರ.

Mal. { Teních-cha തെന്നിച്ച. Peréch-cha പേരിച്ച | Sans. Kharjjuram खर्जूरम्.

Hind. Kajúr کهجور

இது வட ஆபிரிக்கா, எகிப்து, அரேபியா முதலிய இடங்களில் சாதாரணமாய் வளரும் மரம். தற்காலம் இராஜபுதனம் முதலிய இடங்களில் இதைப் பயிரிட்டுவருகிறார்கள். இதன் காய்க்கு கர்ச்சூரக்காய் எனப் பெயர் வழங்குகின்றது.

**ப - உ.**—பழம், பிசின், கொட்டை, கள், குருத்து, வெல்லம், கற்கண்டு

**பழம்—சுவை.**—இனிப்பு, **வீரியம்** - அற்ப வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பொது.**

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- மலமிளக்கி - லகுவிரேசநி - Laxative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**காய்.**

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னி வர்த்தநி - Stomachic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**பழம்.**

**செய்கை.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- மலமிளக்கி - லகுவரேசநி - Laxative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னி வர்த்தநி - Stomachic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**காய்.**

**குணம்.**—உமிழ்நீர்ப் பெருக்கையும், மது மூத்திரத்தையும் போக்கும். பேதி, சீதபேதி, இரத்தபேதி முதலியவை போம். தீபனமுண்டாகும்.

வாயிலுண்டா மூற்றலை மாற்றும் பசியில்லை
யாயிலுண்டா லுண்டா மதுமேக—நோயுள்
பெருநீர் மறுக்குமினும் பெண்களைக் கூடுங்காற்
றருநீர்மை தருஞ்சூரக் காய்தான். (அ.கு.)

**காய் வடகம்.**

**வ - கு.**—காய்களைப்பிளந்து விதையை நீக்கி அதற்குள் சுக்கு, மாம் பருப்பு, சிறுநாகப்பூ, கசகசா வகைக்கு ஒரு பலம் எடுத்துத் தூள் செய்து அடைத்துச் சீலைமண்செய்து, புடம் போட்டுக் கவசத்தை நீக்கி அரைத்து, சுண்டைப் பிரமாணம் உருட்டி பேதி, சீதபேதி, இரத்தபேதி முதலியவைகளுக்கு, தினம் 2 முதல் 3 உருண்டை வீதம் நாளொன்றுக்கு 3 முதல் 4 வேளை உபயோகிக்கலாம்.

அநேகர் இக்காயை ஆகாரமாக உட்கொள்கின்றனர்.

### பழம்.

**குணம்.**—நீரைச்சுரப்பிக்கின்ற பித்தம், மதரோகம், மூர்ச்சைசுரம், சிலேத்துமநீர்க்கோவை, தாகம், இரத்தபித்தம், மதுமேகம், வாயிலேப்பு, அரோசகம், மலபந்தம் ஆகியவைகளைக் கண்டிக்கும். இதை யூனானி வைத்தியர்கள் அதிகமாய் வழங்குகின்றனர்.

> பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைசுரம்
> நீரார்ந்த ஐயம் நெடுந்தாகம்—பேரா
> இரத்தபித்த நீரிழிவி லேப்பறும் அரோசி
> உரத்தமலக் கட்டுமறும் ஓது. (அ.கு.)

### குருத்து.

**குணம்.**—இதன் குருத்தால் சிலேத்ம குன்மம் போம்.

> " பேரீச்சுத் தன்குருத்தைப் பேணியே தின்பவருக்
> கீரீச்ச குன்மவலி யேகுங்காண்." (அ.கு.)

**பாய்.**

பேரீச்சு ஓலைப்பாயில் துயில்பவருக்கு வாதகுன்மம், சோபை நீங்கும். பசி, பாண்டு, வெப்பம் இவைகளை உண்டாக்கும்.

> பேரீச்சுப் பாயினிதம் பேரா துறங்குவர்க்குப்
> பாரித்த குன்மம் பறக்குமென்பார்—பூரித்த
> வீக்கமறுந் தீபனமா மெய்யைவெளுப் போடுஷ்ணம்
> ஆக்கிவிடு மென்றே யறி. (அ.கு.)

---

## ஈச்சுரமூலி—Ēch-chura-muli.

**வே - பெ.—ஈசுரமூலி, பெருமருந்து, பெருங்கிழங்கு, தலைச்சுருளி, தராசுக்கொடி.**

**Aristolochia Indica.**

**Eng.—Indian birthwort.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Īṣhvara-véru ఈశ్వరవేరు. | Kan: | Ishverí ಈಶ್ವರೀ. |
| | Dúla-Góvela దూలగోవెల. | Sans: | Ishwari ईश्वरी. |
| | Góvila గోవిల. | | |
| Mal. | Iṣhvaràmùri ഈശ്വരമൂരി. | Hind. | Isharmul ایشر مول * |
| | Karukap-pulla കരുകപ്പുല്ല. | | Isharmul-ki-jaṛ ایشر مول کی جڑ * |
| | Karalekam കറളേകം. | | |

இது இந்தியாவில் எங்குங் காணக்கூடிய கொடி.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—இதன் இலை, விஷசோபை முதலிய பல வீக்கங்களையும், சந்நிபாதம், பல விஷங்கள், குளிர்சுரம், உடல் வெளுப்பு, படர் குட்டம், இருதயநோய், ஆகந்துகசோகை, திரிதோடம், சொறி, சிரங்கு, விடத்தி னவு, தேமல் ஆகிய இவைகளையும் போக்கும். இதன் வேர் குட்டத்தையும் சர்ப்பவிஷத்தையும், அற்பவிஷக்கடிகள், பித்தகோபம், சுவாசம், இருமல், சுரம், சரீரகுத்தல், வாததோடம் இவைகளையும் போக்கும்.

பலபலவீக் கஞ்சந்நி பாதங்க ளோடு
நலமகல்வி ஷங்கள் நடுங்கும்—கலகலெனப்
பேச்சுரமுண் டாகுமலர்ப் பெண்ணனமே நீகேளாய் !
ஈச்சுர மூலிதனக் கின்று. (அ.கு.)

பாண்டகற்று மெய்யிற் படர்குட்ட நோய்விலக்கும்
நீண்ட விருதயநோய் நீங்குங்காண்—தாண்டதப்பை
முன்னே யொழித்துவிடு மூவாத் தலைச்சுருளி
யென்னே யுலகி லிசை. (அ.கு.)

திரிதோடம் வெப்பு சிரங்குசொறி நஞ்சோ
டரிதேமல் வன்புடையு மண்டா—தொருவான்
அருமருந்தை யொத்த வணங்கே ! யுலகிற்
பெருமருந்தை நீயெடுத்த பின்பு. (அ.கு.)

**வ - கு.**—இதனிலைக்குக் கைப்புச் சுவையிருப்பதால் இலையை உலர்த்திச் சூரணஞ்செய்து கால் வராகனெடை வீதம், காலை மாலை, உபயோகிக்க, அக்கினிமாந்தம், பேதி, சுரம், படர்குட்டம், இருதயநோய், பாண்டு, சோபை, சொறி, சிரங்கு முதலியன சாந்தமடையும். இதைச் சர்ப்ப விஷங்களுக்கும் கொடுப்பதுண்டு.

இதன் இலை ரசம், அல்லது இலை, யாவற்று விஷத்தையும் போக்குங் குணமுடையது.

உரமாகப் பேசுவதற்குப் பலத்தைத்தரும்.

இதனால் தாம்பரம் பற்பமாகும்.

### ஈச்சுரமூலிவேர்.

**குணம்.**—இதனால் பித்தம், இரைப்பு, இருமல், சுரம், உடம்புவலி, வாதநோய், விடக்கடிதோடம் ஆகியவைகள் போம்.

பெருமருந்தின் வேர்பித்தம் பீறிரைப்பு காசம்
வருசுரம் உடம்புவலி வாதம்—உருவுவிஷம்
ஒன்றிய மாகடிகள் ஓட்டும் உலகிலிது
அன்றியது கோச்சிகிச்சைக் காம். (அ.கு.)

**வ – கு.**—இதன் வேரைச் சூரணித்து அரைக்கால் முதல் அரை வராகனெடை வரையில் கொடுத்துவரப் படர்குஷ்டம், அற்பவிஷங்கள் ,வாதபித்த கோபம், சுவாசம், இருமல், சுரம் போன்றவைகளைப் போக்கும். அன்றியும் மாட்டு நோய்களுக்கும் பயன்படும்.

---

## ஈழத்தலரி : (ஈழம் - Gold) Ezhattalari.

**வே - பெ.—பெருங்கள்ளி.**

**Plumeria Alba ; P. Acuminata.**

| | |
|---|---|
| Tel. Vàda - Ganneru వాడగన్నేరు. | Sans. Kshira - Champaka क्षीरचंपक. |
| Mal. Veluthārali വെളുത്തരളി. | |
| Kan. Kadusampige ಕಾಡು ಸಂಪಗೆ. | Hind. Gulchin * گلچین |

இது தென்னிந்தியாவின் கடற்கரை யோர தேசங்களில் பயிராகும் ஒருவித செடிவகுப்பைச் சேர்ந்தது. இதில் பால் சுரக்கும்.

**ப–உ.**—இலை, பூ, மரப்பட்டை, வேர், வேர்ப்பட்டை, பால், குச்சிகள்.

**சுவை.**—கார்ப்பு. **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
பெருமலம்போக்கி - விரேசனகாரி - Cathartic.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. }

**குணம்.**—புரைவிரணம், தொடைவாழைப்புற்று இவற்றை நீக்கும். மேகம், வாதநோய், பேதி, சுரம் இவைகளுக்குங் குணந்தரும்.

"ஈழத் தலரிப்பா லேறுபுரைப் புண்தொடையின்
வாழைப்புற் றும்போக்கு மால்." (அ.கு.)

**வ - கு.**—ஒரு பூ மொக்கு எடுத்து வெற்றிலேயோடு சேர்த்துச் சாப்பிட்டுவர, சுர நோய் நீங்கும்.

பட்டையைச் சதைத்து கட்டிகளுக்கு வைத்துக் கட்டிவரச் சுகமாகும்.

மேக நோய்க்கு இதன்பட்டை மிகுந்த பிரயோசனமாகும்.

இலையை வேகவைத்துப் பழுத்த கட்டிகளுக்கு வைத்துக் கட்டிவர அவைகள் உடையும்.

வேரும் வேர்ப்பட்டையும் விரேசனகாரிகளாக உபயோகிக்கப்படுகின்றன.

பாலை எடுத்து வாத வீக்கங்களுக்குப் போட, கொப்புளித்து நோயைச் சாந்திபண்ணும்.

வெளிப்பிரயோகமாக இதன் பால், சந்தனத்தைலம், கர்ப்பூரம் இவை மூன்றையும் சேர்த்துச் சிரங்கு முதலிய சரும நோய்களுக்குப்போடச் சுகமாகும்.

இதன் கொம்புக்குச்சிகளைக் கருவை யழித்தலுக்காகத் துர்ப்பிரயோகஞ் செய்வதுண்டு.

---

## உகா—Ukà.

### Dillenia—Indica (D. Speciosa).

| | | | |
|---|---|---|---|
| Tel. | Uva ఉవ. Pedda kalinga పెద్ద కలింగము. | Kan. | Bètta Kanagala బెట్ట కనగాల. Kadda kanagala కడ్డ కనగాల. |
| Mal. | | Sans. | Bhavya भाव्य. |
| | | Hind. | Chalta چلتا |

இது இந்தியாவிலும், இலங்கையிலும் பயிராகும். மர வகுப்பிற் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பட்டை, பழம், விதை.

**இலை - பட்டை.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பழம்.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**வ - கு.**—இதன் சாற்றைப்பிழிந்து சிறிது சருக்கரையும் தண்ணீரும் சேர்த்துச் சாப்பிட இருமலையும், சுரத்தையும் தணிக்கும், குளிர்ச்சிதரும்; இச்சாற்றை அதிக அளவில் உபயோகித்தால் பேதியையுண்டாக்கும்.

**வித்து.**

**குணம்.**—முத்தோட நோய்களைச் சாந்தமாக்கும்.

வாதமுதல் முப்பிணியால் வந்த பிணியையெலாம்
கோதில் சமனமிகக் கொண்டொழிக்கும்—சீத
மகாவனசந் தன்னில் வளர்ந்திருக்கு மாதே !
உகாவிதையை நன்று யுரை. (அ.கு.)

**வ - கு.**—விதையைச் சூரணஞ் செய்து திரிதோட நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## உசிலமரம்—Ūsilamaram.

**வே – பெ.—கலிகை, சீக்கிரான்.**

**Mimosa Amara.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nallarenga నల్లరెంగ. <br> Shikareni శికరేణిచెట్టు. | Sans. | Krishna Sirisha कृष्ण शिरीष. |
| Mal. | Dosulay ദോശലെ. <br> Nenmeni-vaka നേന്മേനി വാക. | | |

இது நம் நாடுகளில் வளருகின்ற ஒரு மரம்.

**ப – உ.**—இலை, பூ, விதை, எண்ணெய்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—உசிலமர வேர்ப்பட்டை அள்ளுமாந்தத்தையும், இலையின் தூள் எண்ணெய்ச்சிக்கையும், பிசின் பித்தமேகத்தையும் நீக்கும்.

குடிக்கின்ற எண்ணெய் காய்ச்சுதற்கு இதன் கட்டை மிகப் பயன்படும்.

அளுமந்த நெய்ச்சிக் கழன்மேக நீங்குநிதங்
கொள்ளுதைலக் கறைக்கு கொள்விறகாம்—விள்ளுமதி
லோதியடை வானினமென் றென்றுகுழலே ! கலிகை
யாதி யடைபிசின் கட்டை. (அ.கு.)

**வ – கு.**—இலையை அரைத்து அல்லது உலர்த்தித் தூள் செய்து தேய்த்து வரத் தலைமயிரிலுள்ள எண்ணெய்ச் சிக்கைப் போக்கும்.

கண் வியாதிகளுக்கு இதன் இலைச்சாற்றை உபயோகித்துச் சுகம் பெற லாம்.

**பூ.**

மிகவும் குளிர்ச்சியை உடையது. இதை அரைத்துச் சரும நோய்களுக்கும் வீக்கங்களுக்கும் பூசுவதுண்டு.

**விதை.**

மேகவியாதி, அஜீரணபேதி, மூலவியாதி இவைகளுக்கு உதவும்.

**எண்ணெய்.**

குஷ்ட நோயை நீக்குவதற்கு மிகவும் பிரயோசனமுள்ளது.

## உத்தாமணி—Uttàmani

வே – பெ.—வேலிப்பருத்தி உத்தமமாகாணி, உத்தமகன்னிகை.
Daemia Extensa (R. Pr.)

Tel. { Juttu-pàku జుట్టుపాకు. Dushtupu-Chettu దుష్టపు చెట్టు.

Mal. Velip-parithi വേലിപ്പരിത്തി.

Kan. Hala-Koràtige ಹಾಲಕೊರಟಿಗೆ.

Sans, Phala-antaka फलान्तका.

Hind. Utran * اترن

இது கொடி வருக்கத்தைச் சேர்ந்தது. இது தென்னிந்தியாவில் விசேஷமாகக் கிடைக்கும். இதில் பால் உண்டு.

ப – உ.—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant. புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic. வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic..

**குணம்.**—பலவித நோய்களின் கோபம், வாதநோய், சந்நி, திரிதோடம், வாதகுன்மம், சரீரக்குடைச்சல், குத்தல், நடுக்கல், தனுர்வாதம், சுவாசம், பலவிதத் தடிப்புகள், அக்னிமந்தம் இவை நீங்கித் தீபனமுண்டாகும்.

### இலையின் குணம்.

ஆலித் தெழுந்தநோய் அத்தனையுந் தீருமே
வேலிப் பருத்தியதின் மெல்இலையால்—வேலொத்துக்
கண்டிக்கும் வாதங் கடுஞ்சந்நி தோடமும்போம்
உண்டிக்கும் வாசனையாம் ஓது. (அ.கு.)

உத்தா மணியிலையால் உள்வயிற்றுக் குன்மமொடு
குத்தாம் வலியுங் குளிரும்போம்—பற்றி
இசிக்கும் வலியிரைப்பும் எத்தடிப்பும் ஏகும்
பசிக்கும்அதி மாந்தமும்போம் பார். (அ.கு.)

### இலை.

**வ - கு.**—இலையின் குடிநீரை மூன்று உச்சிக்கரண்டி அல்லது ஒரு சங்களவு குழந்தைகட்குப் புகட்ட வயிற்றிலுள்ள புழு வெளிப்படும்.

இதன் சாற்றை ஒரு உச்சிக்கரண்டி வீதம் சுவாசகாசத்துக்குக் கொடுக்கலாம்.

இதன் சாற்றையுஞ் சுண்ணும்பையுங் கலந்து கால் வீக்கங்கட்குப் போடலாம்.

இலையின் விழுதை பிளவைகட்கு வைத்துக் கட்டலாம்.

பெண்களுக்குக் கருப்பையின் குற்றத்தாலுண்டாகும் இடுப்புவலிக்கு இலையின் சாற்றைத் தேனுடன் கலந்து மருந்தாகவாவது அல்லது வேறு மருந்துகட்குத் துணை மருந்தாகவாவது உபயோகிக்கலாம்.

இதன் இரசம் 5 துளி, தேன் 5 துளி சேர்த்து, அதில் தாம்பரச் செந்தூரம் $\frac{1}{4}$ அரிசி பிரமாணம், கஸ்தூரி $\frac{1}{4}$ அரிசி பிரமாணம் சேர்த்துக் கொடுக்க சுவாசகாசம் நீங்கும்.

இம்மூலிகையினுல் செய்யும் எண்ணெய் சூதக ரோகங்களுக்கும், சீல் வாதங்களுக்கும் உட்பிரயோகமாக உபயோகப்படும்.

இம்மூலிகை சுன்னமூலிகை, அதாவது இதன் சாற்றினுல் செய்யப்படும் பவழ பற்பம், ஆமையோடு பற்பம் முதலியன மிகக் காரமாயிருக்கும்.

**உத்தாமணிக்கருக்கு.**

உத்தாமணிச்சாற்றில் சிறிதளவு உப்பும், வசம்பு சுட்டகரியுஞ் சேர்த்து ஓர் புதுச்சட்டியிலிட்டுக் காய்ச்ச, உப்பு சுண்டி வெளுத்துப் பொடியாகும். இப்பொடியை குழவிகட்கு வரும் மாந்தம், அள்ளுமாந்தம், அசீரண பேதி முதலிய ரோகங்கட்கு வெந்நீரில் 2, 3 குன்றி எடை கலந்துப் புகட்ட நோய் நீங்கி மிகவும் நன்மைதரும்.

**வேரின் சூரணம்.**

அளவு 5 முதல் 10 குன்றி எடை. இச்சூரணத்தையே அதிக அளவாக அதாவது ஒன்றுமுதல் இரண்டு வராகனெடை வரை பாலில் கலந்து கொடுக்கப் பேதியாகும்.

வாத ரோகங்கட்கு முக்கியமானது.

---

## உப்பிலாங்கொடி—Uppilàng-kodi.

**San. Vàlukà वालुका. Dhidaparni धिडपर्णी.**

இது கொடி வகுப்பைச்சேர்ந்தது; இதன் தண்டு மெல்லியதாகவும் இலே ½ அங்குல நீளமாகவும், முட்டை வடிவமாகவும் கொஞ்சம் தடிப் பாகவும் உடைத்தால் உடைபடுவதாகவும் இருக்கும்; உஷ்ணப்பிரதேசங் களில் எங்கும் பயிராகும்.

**ப – உ.**—சமூலம்.

**சுவை.**—சிறுகார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { செரிப்புண்டாக்கி - பாசனகாரி - Digestive.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதனுல் குழந்தைகட்கு உண்டாகும் மாந்தம், பால் பாலாகக் கழியும் அதிசாரம், நீங்காத சுரம் இவைகள் போம்.

பிள்ளைமந்த பேதி பேராத ரூட்சையும்போம்
வெள்ளைசெய்யுந் தங்கத்தை மென்மலராற்—றெள்ளைபுரி
வேளு நடுங்குவடி வேலைநிகர் கூர்விழியாய் !
நாளுமுப்பி லாங்கொடியி னுல். (அ.கு.)

**வ – கு.**—மாந்தத்தினுல் வயிறு உப்பிசமாகக் காணின், இந்தக் கொடியை அரையில் கட்டத்தீரும்.

இலையை வதக்கிச் சாறுபிழிந்து காசளவு வீதம் முலைப்பாலுடன் கலந்து ஊட்டிவர மந்தம், அதிசாரம் போம். இலையை அரைத்துச் சுண்டையளவெடுத்துத் தாய்ப் பாலில் கலக்கியும் புகட்டலாம்.

இதனுல் தங்கமும், வெள்ளியும் பற்பமாகும்.

---

## உருத்திரச்சடை—Rudra-jadai.

**வே – பெ.—திருநீற்றுப்பச்சை, பச்சை, சப்ஜா.**

**Ocimum, Basilicum.**

**Eng.—Sweet Basil.**

**Tel.** { **Vibùdi-patri** విభూది పత్రి.
**Rudrajeḍa** రుద్రజడ.

**Mal.** { **Tirunìtru-pach-cha** തിരുനീററു പച്ച.
**Pach-cha-pushpam** പച്ച പുഷ്പം.

**Kan.** **Kàma-kastùri** ಕಾಮ ಕಸ್ತೂರಿ.

**Sans.** **Vishva-tulaśì** विश्वतुलसी.

**Hind. and Duk.** } **Sabzah** * سبزه

இது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகின்ற ஒருவகைச் செடி. முக்கியமாய்ப் பராசீக ராஜ்ஜியத்தில் அபரிமிதமாய்ப் பயிராகிறது.

**ப – உ.**—சமூலம்.

**சமூலம்.**

**சுவை.**—கார்ப்பு (விறுவிறுப்பு), **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**விதை.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**சமூலம்.**

- வியர்வையுண்டாக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**விதை.**

- வழுவழுப்பு Mucilaginous.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**சாறு.**

- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**குணம்.**—சிலேத்துமம், வாந்தி முதலியவற்றையும், சுரத்தால் பிறக்கின்ற இரத்த வாந்தி, அருசி முதலியவற்றையும் போக்கும்.

திருநீற்றுப் பச்சைசி லேஷ்மசர்த்தி தன்னை
விரிநீற்றைப் போலாக்கு மெய்யே—பெரிய
சுரத்திரத்த வாந்தி சுரம்அருசி நில்லா
வுருத்திரச்ச டைக்கே யுரை. (அ.கு.)

விதை மயங்குகின்ற கபத்தைப் போக்கும்.

**வ - கு.**—இதனால் வயிற்றுச் சம்பந்தமான நோய்கள், சீதபேதி, மேகம், மூத்திர சம்பந்த வியாதிகள், மூலவியாதிகள் தீரும்.

இது பிரசவ சம்பந்த வேதனை முதலியவைகளைக் குறைக்கும்.

மேற்கண்ட வியாதிகளுக்கு விதையை ஜலத்தில் ஊறவைத்தால் ஒருவித குழகுழப்புண்டாகும். இதையும் சருக்கரையும் சேர்த்துச் சாப்பிடலாம்.

கொள்ளவேண்டிய அளவு ஒன்று முதல் இரண்டரை வராகனெடையாகும்.

இலையைப் பிழிந்து சாறு எடுத்து காதுநோய்களுக்கு விடலாம்.

இதன் இலையை உலர்த்தி நன்றாய்ப் பொடித்து மூக்கில் உறிய, அதற்குள் இருக்கும் புழுக்கள் வெளிப்படும்.

சமூலத்தின் சாறு நாசிநோய், கர்ணநோய் இவைகளுக்கு மிகுந்த பிரயோஜனமுண்டு.

---

## உருத்திராட்சம்—Rudraksham.

**வே - பெ.—அக்கமணி, கண்மணி, சிவநேத்திரம், உத்திராட்சம்.**

**Elaeocarpus Lanceolatus.**

| | |
|---|---|
| **Tel.** Rudraksham రుద్రాక్షము. | **Kan.** Rudratsham ರುದ್ರಾಕ್ಷವು. |
| **Mal.** Rudraksham രുദ്രാക്ഷം. | **Sans.** Rudraksham रुद्राक्ष. |

இது இமயமலைச்சாரலில், நேபாளம் போன்ற இடங்களில் பயிராகும்.

**ப - உ.**—இலை, வித்து.

**சுவை.**—கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- முத்தோடமகற்றி - திரிதோஷஹரகாரி Anti - Tridosha.
- பித்தமகற்றி - பித்தஹரகாரி Anti - bilious.

**குணம்.**—அதிக நாவறட்சியோடுள்ள தாகம், முத்தோடகோபம், விக்கல், பித்தவிருத்தி இவைகளைப் போக்கும். கபத்தாலுண்டாகும் மரணத்தைத் தடுக்கும்.

நீளும்அதி தாகத்தை நீங்காமுத் தோடத்தை
ஆளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்காண்—நாளும்
மிருத்திரா மற்கபத்தை வீட்டுமே நல்ல
உருத்திராக் கத்தின்வலி ஓது. (அ.கு.)

**வ – கு.**—இலையின் சாறு, முத்தோட விருத்தி, கப விருத்தியைத் தணிக்க உபயோகப்படுவதுடன் பற்ப செந்தூரங்களுக்கு அனுபானமாகவும் உபயோகப்படும்.

கொட்டையைத் தேன்விட்டு உரைத்து நாக்கில் தடவ சந்நிபாத தோடம், விக்கல், பித்த மயக்கம், மரணத்தைத் தருகின்ற கபம் ஆகிய இவைகளைப் போக்கும்.

---

## உருளைக்கிழங்கு—Uruḷaik-kizhangu.

**வே – பெ.—அபிசித மூலம்.**

**Solanum Tuberosum.**

**Eng.—Potato.**

**Tel.** Urla-gadda ఉర్లగడ్డ.
**Mal.** Urula-kilanna ഉരുളക്കിഴങ്ങ്.
**Kan.** Batatâ ಬಟಾಟೆ. Alugaḍḍai ಆಲೂಗೆಡ್ಡೆ.
**Hind.** Alu * آلو

இதற்கு அபிசிதமூலம் என்று ஒரு பெயர் உண்டு.

இது இந்தியா முழுமையும் கிடைக்கும். குளிர்ப் பிரதேசங்களில் நன்ருய் விளையும். பூமியின் கீழ் விளையக்கூடிய ஒரு கிழங்கு வகையைச் சேர்ந்தது.

**ப – உ.**—இலை, கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

### இலை.

**செய்கை.** இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.

### கிழங்கு.

**செய்கை.**
- மலமிளக்கி - மலகாரி - Aperient.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.
- நரம்புவெப்பகற்றி - நாடிசமனகாரி - Nervous Sedative.

**குணம்.**—இது மலபந்தம் நீக்கும். மூத்திரத்தை அதிகரிக்கப் பண்ணும். பாலேச்சுரப்பிக்கும், நரம்புகளுக்கு சிற்றயர்வை உண்டாக்கி, மேக வியாதியாளருக்கு உற்சாகத்தை யுண்டுசெய்யும்.

**வ – கு.**—ஆகாரத்துக்கு மிகவும் உசிதமானது. இதை வேகவைத்துத் தோல் நீக்கி நெய்யில் வறுத்துப் புசித்துவரின், தேகத்தை நன்ருய் உறுதிப்படுத்தும்.

நாட்பட்ட இருமல் நோயால் வருந்தி, நித்திரை யில்லா திருப்பவர்கள் இதன் இலைச்சாற்றையுண்டுவர நித்திரா பங்கமொழிந்து சுக நித்திரை கொள்வார்கள்.

கிழங்கைப் பசையாகச் செய்து தீயினுற் சுட்ட புண்ணுக்கு வைத்துக்கட்டலாம்.

சிறு குழந்தைகட்கு, அவித்த உருளைக்கிழங்குடன் பாலாடை சேர்த்து ஆகாரமாக ஊட்டலாம்.

சில இடங்களில் இக்கிழங்குகளிலிருந்து ஓர்வித சாராயம் எடுக்கிறார்கள்.

**குறிப்பு.**—முற்காலத்தில் உருளைக்கிழங்கைப்பற்றி மிகவும் சிரேஷ்டமாக கூறியிருக்கின்றார்கள். கீர்வாண வாகட சாஸ்திரத்தில் பஞ்சமாத்தியாயத்தில், முற்கூறிய உருளைக்கிழங்கை தேவர்களெல்லாரும் புசித்துத் தேக உறுதிபெற்று, மாமிசபட்சிணிகளான இராக்கதர்களை எதிர்க்கத்தக்க வல்லமைப் பெற்று வாழ்ந்திருந்தனர் என்று கூறப்பட்டிருக்கின்றது. உருளைக்கிழங்கானது மாமிசமல்லாததாயிருந்தபோதிலும் மாமிசத்துக்குள்ள பலம் பெற்றிருக்கின்றது. ஆகையால்தான் இது " **அபிசிதமூலம்** " என்று முன்னோர்களால் கூறப்பட்டிருக்கின்றது.

---

## உழுந்து—Uzhundu.

**வே - பெ.—உளுந்து, மாடம், மாஷம்.**

**Phaseoius Radiatus.**

**Eng.—Black gram.**

**Tel.** Minumu మినుములు.

**Mal.** Ulunnu ഉഴുന്ന്.

**Kan.** Uddu ಉದ್ದು.

**Sans.** Masha माष:.

**Hind.** Mash * ماش

இது இந்தியாவிலெங்கும் பயிராகும் ஒருவகைக் கொடியின் வித்து.

**ப - உ.**—விதை, வேர்

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant (cooling).
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.
- உரமாக்கி (நாடி) - பலகாரி - (Nervine) tonic.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**குணம்.**—வயிற்றுவலி, பேதி, சீதபேதி, அஜீரணபேதி, மூத்திரசம்பந்தமான வியாதிகள், மூலவியாதி, ஈரல் நோய்கள் முதலிய நோய்களைக் கண்டித்து, தாதுவைப் புஷ்டியாக்கும். பெண்களுக்குண்டாகும் கருப்பாசய உறுப்புகளின் நோய்களைக் குணமாக்கும். ஆனால், கபத்தை விருத்திபண்ணும். பித்தத்தைக் குறைக்கும். மந்தத்தை உண்டுசெய்யும். வாயு அதிகரிக்கும்.

செய்யஉழுந் திற்குச் சிலேத்மஅனி லம்பிறக்கும்
வெய்யபித்தம் போம்மந்தம் வீறுங்காண்—மெய்அநனில்
என்புருக்கி தீரும் இடுப்புக் கதிபலமாம்
முன்பு விருத்திஉண்டாம் முன். (அ.கு.)

**வ - கு.**—உழுந்தை மாவாக்கிப் பலகாரமாகச் செய்து அருந்த, தாதுக்களுக்குப் பலமுண்டாகும்.

பச்சை உழுந்துமாவைத் தேன்சேர்த்து அருந்தலாம்.

உழுந்தை ஜலத்தில் ஊறவைத்து எடுத்த ஜலத்தை மறுநாள் அதிகாலையில் அருந்த மூத்திரசம்பந்தமான வியாதிகள் போகும்.

உழுந்தைக் கஷாயமிட்டுச் சாப்பிட குன்ம வியாதிகள் சாந்தமாகும்.

இதனால் செய்த பலகாரங்கள் பலவீனருக்கும் மெலிந்த தேகிகளுக்கும் மிகவும் உசிதமானது.

இதைக் கொண்டு செய்கிற எண்ணெய், வாதநோய், முடக்குநோய்கள் முதலியவற்றிற்கு நோயுள்ள விடத்தில் பூசிவர அவை குணமாகும்.

வேரை அரைத்துச் சூடாக்கி வீக்கங்களுக்கு வைத்துக்கட்டச் சுகமாகும்.

சாதாரணமாக உழுந்தை வடையாகச் செய்தும், கஞ்சியாகக் காய்ச்சியும் அருந்துகிறார்கள்.

### உழுந்து வடை.

இதைச் சாப்பிடுவதனுல் வாதம் அதிகரிக்கும். பித்தம் சிறிது அடங்கும். தீபனத்தைக் கெடுக்கும்.

வெறும்உழுந்திற் செய்வடைக்கு மேன்மேலும் வாதம்
உறும்பித்தம் சற்றே யொடுங்கும்—நறுந்தீ
பனம்போம் புசிப்பிற் பருகநன்ரும் வாவி
யனம்போ னடையா! யறி. (அ.கு.)

### உழுந்தோதனம்.

கபவாதம் அதிகரிக்கும், மந்தம் உண்டாகும், பித்தம் சமனப்படும், உடம்பு வலுக்கும்.

எஞ்சுகப வாதமிக ஏறும்அதி மந்தம்உறும்
விஞ்சுபித் தந்தாழு மெய்யுரக்கும்—அஞ்சம்
எழுந்தோதம் புக்கு மினியநடை மாதே!
உழுந்தோ தனத்திற் குரை. (அ.கு.)

---

## ஊமத்தை—Umattai.

### Datura Alba.

### Eng.—Dhatura (white flowering) Thorn-apple.

| | | |
|---|---|---|
| **Tel.** | **Ummeth-tha** | ఉమ్మెత్త. |
| **Mal.** | **Ummath-tham** | ഉമ്മത്തം. |
| **Kan.** | **Ummatte-gidā** | ಉಮ್ಮತ್ತೆ. |
| **Sans.** | **Datura** | तदुरा. |
| | **Unmattha** | उन्मत्त. |
| **Hind.** | **Dhatúra** | * دهتورہ |

வெள்ளைப்பூ பூக்கும் ஊமத்தை சாதாரணமாய் எங்கும் கிடைக்கும். இது தவிர (1) கருவூமத்தை, (2) பொன்னூமத்தை, (3) அடுக்கூமத்தை, (4) மருளூமத்தை எனப் பல சாதிகளுமுண்டு. மருளூமத்தை நீங்கலாக அடுக்கூமத்தை, மற்ற சாதிகளிலுமுண்டு. அடுக்கு என்ருல் பூவுக்குள்பூ அடுக்கினுற்போலிருப்பது.

வெள்ளூமத்தை (காட்டூமத்தை.)

இது எங்கும் பயிராகக்கூடிய ஒரு செடி. இதன் காய் உருண்டையாகவும் அதன் மீது முள்ளுகள் அடர்ந்ததாகவும் இருக்கும். இதன் விதை சுரசுரப்பு - இது கருவூமத்தையைப்பார்க்கிலும் வீரியத்தில் குறைவு.

**ப - உ.**—இலை, பூ, காய், விதை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - **Emetic.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - **Antispasmodic.**
- துயரடக்கி - வேதனுசாந்தநி - **Anodyne.**
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - **Narcotic.**

இச்செய்கைகள் இலைக்கும் வித்துக்கு முண்டு.

**சமூலம்.**

**குணம்.**—நாய்க்கடிப்புண், குழிவிரணம், வித்திருதிக் கட்டிகள், நஞ்சு, திரிதோடம் ஆகிய இவைகளை நீக்கும்.

நாய்க்கடியால் வந்து நலிசெய் விரணமும்போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்காண்—தீக்குணத்தைச்
சேமத்தில் வைத்தவிடந் தீருமுத்தோ டங்களறும்
ஊமத்தை யின்குணத்தை யுன்னு. (அ.கு.)

### இலை.

**வ - கு.**—இதன் இலையை உலர்த்திப் பொடிசெய்து ½, 1½ குன்றியளவு உள்ளுக்குக்கொடுக்க சுவாசகாசம் நீங்கும்.

*அல்லது.*

5 முதல் 15 குன்றி எடையுள்ள உலர்ந்த இலையைச் சுருட்டிப் புகை பிடிக்க மேற்படி நோய் தீரும். ஆனால் குறைந்த அளவிலிருந்து படிப்படியாய் அதிகப்படுத்தி உபயோகிக்கவேண்டும். மாத்திரை அதிக மானால் கொடிய நஞ்சாகும்.

இப்புகையால் கஷ்டசுவாசம் சமனப்படும், கபம் வெளிப்படும். சிறிது பொட்டிலுப்புச் சேர்த்து உபயோகிக்க மிகவும் நன்மைதரும்.

இலையை வதக்கி ஒற்றிடமிட, கீல்வாதம், எலும்பு வீக்கம், வித்திருதிக் கட்டிகளினாலுண்டாகும் வேதனையும் பால் கட்டிக்கொள்வதாலுண்டாகும் வேதனையும் தணியும்.

### களி.

இலை அரிசிமா இவ்விரண்டையும் சமபாகமெடுத்து கொஞ்சம் நீர்விட் டரைத்து களிபதமாய் வேகவைத்து, எலும்பு மூட்டு இவ்விடங்களிலுண் டாகும் வீக்கம், வேதனையைத் தருகின்ற கட்டிகள், வெளி மூலம் இவை களுக்குப் போடலாம். ஆனால், புண், காயம் இவைகளுக்குப் போட லாகாது. துர்க்குணமுண்டாகும். நரம்புச்சிலந்திக்கும் இது மிக நன்று.

இலை, அல்லது பூ பலம் 2½ எடுத்திடித்து 1 படி நீருடன் சேர்த்துக் காய்ச்சி மேற்கண்ட நோய்களுக்கு ஒற்றிடம்போடலாம்.

கரும்பு வெல்லத்தில் இதன் இரசம் 1 முதல் 3 துளி விட்டுக் கொடுத்து பாலன்னம் மோர்சாதம் ஆகாரமாகக் கொள்ள பேய்நாய்க்கடி விடம் தீரும். 3 நாளைக்கு மேல் கொடுக்கவேண்டியதில்லை. உப்பு, புளி முற்றும் நீக்கவேண்டும்.

தயிரில் இதன் இரசம் 5 முதல் 10 துளி சேர்த்துக் கொடுக்க, பிரமே கம் தணியும்.

இலை இரசத்தை 1 முதல் 2 துளி காதில் விடக் காதுவலி தீரும். வீக்க முள்ள இடங்களிலும் தடவலாம்.

### சத்து.

தளிர்களையும் இலைகளையும் கிளைகளையும் 4 மணங்கு (112 பவுண்டு) எடுத் திடித்துச் சாறு பிழிந்து வடிகட்டி, சிறு தீயிட்டு எரிக்க பச்சை நிற எடுகட்டும். அச்சமயத்தில் வடிகட்டி எட்டை எடுத்துப் பத்திரப்படுத்தி, வடி கட்டிய சாற்றை மறுபடியும் எரித்து உறையுந் தருவாயில் வடிகட்டி எட்டை முன் போலெடுத்துவைத்து, நின்ற ரசத்தை ஜலேந்திரத்தில் பாகுபதமாய்க் காய்ச்சி, முன் எடுத்துவைத்த எடுகளையுஞ் சேர்த்து மெழுகுபதமாய்க் காய்ச்சி உபயோகிக்க பெல்டோனாவுக்குச் சமமான குணந்தருமென்று பரீட் சித்திருக்கிறார்கள்.

ஊமத்தைக்கு கண்தாரையைப் பெருக்குகின்ற சக்தியுண்டு.

### காய்.

**குணம்.**—இதனால் வாதநோய், கரப்பான், கிரந்தி, சொறி இவை நீங்கும். பித்தமயக்கமும், உன்மாதரோகமும் உண்டாகும்.

> வாதமறும் பித்த மயக்கமுறு மாநிலத்திற்
> றீது கரப்பான் சிரங்ககலுங்—கோதாய்கேள் !
> மாமத்த மாகும் வறட்சியெல் லாம்போகும்
> ஊமத்தங் காய்க்கென் றுரை. (அ.கு.)

இளங்காயைக் குடைந்து அதற்குள் கெந்தகத்துண்டைவைத்து அக்கா யினாலேயே குடைபட்ட வாயை மூடி, பசுவின் சாணத்திற்குள் வைத்து, காய் வேகும்படி புடமிட்டெடுத்து, சாணத்தைப் போக்கி வெந்தகாயுடன்

துளசியிலை சேர்த்து அரைத்து உருண்டை செய்து நிழலினுலர்த்திவைத்துக் கொண்டு, உபயோகிக்கும்போது பொடித்து, சிரங்கின்மீது தூவ, சிரங் காறும்; எண்ணெயுடன் குழைத்துப்பூச கிரந்தி, கரப்பான் போகும்.

## தைலம்.

இதன் இலைச் சாற்றைக்கொண்டு செய்யப்படும் மத்தன் எண்ணெய் (பச்சை எண்ணெய்) புண், புரை, ஆருப்புண், பிளவை, துர்ச்சதை இவைகளைப் போக்கும்.

இதன் முறையை சித்தர் உறை விளக்கத்திற் காண்க.

## வித்து.

**குணம்.**—சுரம், தாவர சங்கமவிஷம், சந்நிபாத தோடம், அதி சாரம் இவைகள் நீங்கும். உன்மாத ரோகம் உண்டாகும்.

சுரம்போம் விஷம்போந் தொலையாத சந்நி
யுரம்போ மதிசார மோடும்—நிரம்பவே
மாமத்த முண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே!
யூமத்தந் தன்விதையை யுன். (அ.கு.)

**வ - கு.**—பசுவின் நெய்யில் விதையை யரைத்து மூலமுளையி னடியிற்பூச மூலமுளை அற்றுவிழும்.

காடி அல்லது தேனில் அரைத்துக் கொதிக்கவைத்துக் கட்டிகண்மேற் பூசக் கட்டிகள் கரையும். வீக்கத்தின்மீது பூச வீக்கம் குறையும்; வலி, குத்தலுள்ளவிடங்களில் பூச வலியையும் குத்தலையும் நிறுத்தும்; உரோ மங்கள் உதிர்வதையும் நிறுத்தும்.

இதனுல் மயக்கம் உண்டானுல் மிளகு, சோம்பு, தேன் இவைகளில் ஒன்று அல்லது இரண்டைக் கஷாயரூபமாக உபயோகிக்க அக்குற்றம் வில கும்.

இலைச்சுருட்டின் புகை கடினசுவாசகாசத்தைச் சமனப்படுத்துவதில் பெரும்பாலும் பின்னடைகிறதில்லை. ஒருகால் பின்னடைந்தால் இலைக்குப் பதிலாக, பூ, அல்லது விதையை உபயோகிக்கலாம்.

சிதைத்த விதை பலம் $1\frac{1}{4}$க்கு, எண்ணெய் $2\frac{1}{2}$ ஆழாக்கு, சேர்த்து ஏழு நாள் வரையில் அரைத்தரைத்து வெயிலில் வைத்து 8-வது நாள் வடித்து அடிவயற்றில் தடவ சூதக வயிற்றுவலி, நீர்தாரை எரிவு நீங்கும். கன்னம், முகம், காது இவ்விடங்களில் காணும் குடைச்சலுக்கும் சந்நிபாதத்தாலுண்டாகும் வலிகளுக்கும் தடவ மிக்க குணமுண்டு.

நம் நாட்டு ஊமத்தைக்கும் *சீமை ஊமத்தைக்கும் குணத்தில் யாதொரு வித்தியாசமுமில்லை. ஆகையால் மேற்கண்டவிதமாய் இரண்டையும் உபயோகிக்கலாம்.

## கருவூமத்தை—Karu-ūmattai.

இது சாதாரண ஊமத்தையைவிட அதிவீரியமுள்ளது. அதனுலுண்டா கும் நன்மைகளை இது கொடுப்பதுந்தவிர, சுக்கிலத்தையும், பாதரசத்தையுங் கட்டுகின்ற சிறப்பு குணமிதற்குண்டு, உடலுக்கு அழகைத்தரும். பெரு வியாதி, வியர்வை, தினவு, பித்தசுரம் இவைகளைப் போக்கும்.

விந்திரதங் கட்டுமெழின் மேனிதருங் குட்டமொடு
வந்த வியர்ப்பரிப்பு மாற்றுங்காண்—முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்குங் கயப்பாங்
கருமத்தம் நல்மூலி காண். (அ. கு.)

**வ-கு.**கரிவூமத்தன் இலைரசம் பலம் 12,தேங்காயெண்ணெய் பலம் 24 இவ் விரண்டும் சேர்த்துக்காய்ச்சி, இரசம் சுண்டுந்தருவாயில் ஓமச்சூரணம்

---

* **Datura stramonium (Thorn apple).**

பலம் 1, கூட்டி மெழுகுபதத்தில் வடிக்கட்டி அதில் கர்ப்பூரம் பலம் 1 பொடித்துக் கரைத்துப், பூசி வெந்நீர்விட்டு உருவ, வாதநோய் குணப்படும்.

## பொன்னூமத்தை—Pon-ūmattai.

இதற்கு—புண், இரந்தி, நாள்பட்ட கிராணி, கருப்பாதிசாரம், பித்தசுரம், நீங்காவிடசுரம், அதிசாரம் போம்.

பொன்மத்த முண்டாகிற் பூவையரே! புண்கிரந்தி
தொன்மைக் கிராணிவரு சூசிகா—வன்பேதி
பித்த சுரத்துடனே பேரா விடசுரமும்
சுத்தவதி சாரமும்போஞ் சொல். (அ. கு.)

## மருளூமத்தை—Marul-ūmattai.

இதற்கு, குளிர்சுரம், சலக்கோவை, அற்பவீரியமுள்ள விடங்கள், அக்கினிமாந்தம், வாததோடம் இவை நீங்கும்.

சீதசுரம் நீரேற்றஞ் சில்விஷங்கள் மந்தத்தோ
டுதையிவை யெல்லா மொழியுங்காண்—போத
இருளூருங் கூந்த லெழின்மாதே! கான
மருளூமத் தைக்கறிந்து வை. (அ.கு.)

**குறிப்பு**.—மருளூமத்தைக்காய் மற்றவூமத்தைக்காய்களைவிட உருவத்தில் சிறியதாயும் நீண்டுமிருக்கும். உருண்டிராது. விதைகளும் சிறியவை. நீண்டு கறுத்து கனத்திருக்கும்.

---

## ஊழலாற்றி—Uzhalarti.

**வே-பெ.—ஊழலத்தி.**

இது ஒரு மரவகுப்பைச் சேர்ந்தது.

**சுவை**.—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** உடற்றேற்றி • வியதாபேதகாரி - Alterative.

**குணம்**.—இதனால் மேகவிரணம், ஒட்டுப்புண், கொறுக்கை (ஆண்குறி விரணம்) சிரங்கு, போகத்தாலுண்டான அரையாப்பு, வெள்ளை, கீல் வாதம், பெருநோய் ஆகிய இவைகள் நீங்கும்.

அடவி வதிருழ லாற்றி யெனுமூலி
படவிரணம் புண்கொறுக்கை பாமை—கடிதடத்தால்
வந்தவரை யாப்புவெள்ளை வாதப் பிடிப்புகுட்ட
மிந்தவகை நோயகலு மெண். (அ.கு.)

**வ - கு**.—இதன் பட்டையைக் குடிநீர் செய்து காலை மாலை இருவேளையாகக் கொடுத்துவர மேற்கண்ட ரோகங்கள் தணியும்.

இப்பட்டை ஆதியாகவுடைய ஊழலாற்றித்தைலத்தை ஸ்நானஞ்செய்துவர சமஸ்த தாதுக்களிலும் வியாபித்த பித்தவிரணங்களும் வெட்டை முதலிய மேகமும் புண்களும் தினவுகளும் குட்டரோகங்களும் அகலும். (சித்தர் உறை விளக்கத்திற் காண்க.)

## எட்டி—Etti (Yetti).

வே-பெ—.காஞ்சிரம், விடமுட்டி (விஷமுஷ்டி).
Strychnos Nux-Vomica.
Eng. Nux-Vomica, Strychnine Tree.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Mushti | ముష్టి. | Cing. | Goda-Kaduru | |
| Mal. | Kanjiram | കാഞ്ഞിരം. | Arab. | Izäraqî | * اذاراقی |
| Kan. | Mushti | ಮುಷ್ಟಿ. | Per. | Kochôlah | * کچولا |
| Sans. | Visha-Mushti | विषमुष्टिः | Hind. | Kuchla | * کچلا |
| | | | Guz. | Kuchlā | * کچلا |

இம்மரம் இந்தியாவின் வெப்ப பாகங்களிலும், சிங்களம், கொச்சி, சைனு, தென்ஆஸ்ட்ரேலியா, கிழ் இந்தியா தீவுகள் ஆகிய இவ்விடங்களிலும், தன்னிச்சையாய்க் காடுகளிலும், நாடுகளில் சிலபாகங்களிலும் பயிராகும். இது சுமார் 40 முதல் 50 அடிவரையில் வளர்ந்து பயிராகும்.

இதன்பழம் பார்வைக்கு மிக அழகாகவும், செம்மை கலந்த மஞ்சள் நிறமாயும் உள்பாகம் வெண்மையாகவும், பசைபசைப்பாயும் விதைகள் நெடுக்குவாட்டத்தில் அமைக்கப்பெற்றதாயும், 2 முதல் 5 விதைகள் உள்ளனவாயும் இருக்கும்.

ப - உ.—இலை, பழம், பழரசம், வித்து, மரப்பட்டை, வேர்ப்பட்டை.

**சுவை.**—இலை - கைப்பு, பழம் - கைப்பு மதுரம், வித்து - கைப்பு, பட்டை (மரம், வேர்) - கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- அகட்டுவாயுவகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
- உரமாக்கி- பலகாரி - Tonic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

### இலை.

**குணம்.**—வாதத்தைச் சமப்படுத்தும்.

**வ - கு.**—(i) நீரில் இலைகளைச் சேர்த்துக் காய்ச்சி வாதரோகிகளுக்கு நீராட்டலாக உபயோகிக்கலாம்.

(ii) இளந்தளிரை சீலையில் முடிந்து அடுப்புக்கும்பியில் செருகி வெந்தபின் எடுத்து அம்மியிலிட்டு அரைத்து, அதற்குச் சமன் வெண்ணெய் கூட்டிக் குழைத்துக் கட்டிகளின்மீது தடவிவர கட்டிகள் நாளுக்குநாள் உள்ளே அழுந்திவிடும்.

### பழரசம்.

பழங்களை வரகுவைக்கோலில் வதக்கி, ஓட்டையும், கொட்டைகளையும் நீக்கி, உட்சதைகளைமாத்திரம் ஒரு துல்லிய சீலையிட்டுப் பிழிந்துஎடுத்த ரசத்துடன் சமபாகம் எண்ணெய் கலந்து காய்ச்சி வடிகட்டி, கீல்வீக்கங்கட்குப் போடலாம்.

குஷ்டரோகம், பெருவியாதி யுள்ளோர்கட்குக் கொடுக்கப்படும், சில பற்பம், செந்தூரம், மாத்திரை போன்றவைகட்கு இதன் பழச்சாறு அநுபானமாகக் கொள்ளப்படும். இதைக்கொண்டு செய்யுந் தயிலம்.

மகாவிஷமுட்டித்தைலம், சிறியவிஷமுட்டித்தைலம் முதலியன.
(தேரையர் தைலவருக்கச் சுருக்கம்).

## வித்து.

இது வட்டமாயும், நடுவில் ஒருகுழிப்பும், குழிப்பிலிருந்து மேல்பக்கமாக வரவரக்கனத்தும் கொட்டையின் மேற்புறம் பற்றியிருக்கும் தோலில் பட்டுப்போன்றும், மினுமினுத்துமுள்ள சுணையோடுமிருக்கும். உட் பாகம் மிகக்கடினமாகவிருக்கும். எளிதில் உடையாது. கொட்டையின் மைய அளவு ஒரு அங்குலம்வரையிலும், கனம் கால் அங்குலம் மட்டும் இருக்கக் காணலாம்.

**குணம்.**—கைக்கறுப்பு, சந்நி, கடிவிடம், குட்டம், வாதவலி*, தாது நட்டம், கட்டி, கரப்பான், மயக்கம் (மூர்ச்சை), பித்தம், சுரம், சீதசுரம், பேதி, சீதபேதி, பாண்டு, துத்திரோகம், சொட்டுமூத்திரம், நீர்க்கோவை, மலபந்தம், அடிதள்ளுதல் (மூலம் வெளிப்படல்) முதலியன குணப்படும்.

> கைக்கறுப்பு சந்நி கடிவிடங்குட் டுதைவலி
> எய்க்கவரு தாதுநட்டம் என்பதும்போம்—மைக்கண்ணாய் !
> கட்டி கரப்பான் கனமயக்கு பித்தமுமில்
> எட்டிமரக் கொட்டையினா லே. (அ.கு.)

**வ - கு.**—கொட்டையைப் பொடித்துத் தனிப்பட கொடுப்பது ஆயுள்வேத முறையில் வெகு அரிது. ஆயினும் மேனாட்டுச் சிகிச்சையில் உபயோகிப்ப துண்டு. அவ்விதங்களை பின்குறிப்பிட்ட இடத்தில் கண்டுகொள்க. இந் நாட்டு மருத்துவத்தில் இக்கொட்டை, பலசரக்குகளைக்கூட்டிச் செய்யப்படு கின்ற மருந்துகளில் இதுவும் வோர் சரக்காகவே சேர்த்து உபயோகிக்கப் படும். அவ்வித மருந்துகளால் மேற்கண்ட நோய்களும் இதர நோய்களும் நிவர்த்தியாவது ஒவ்வொரு சிறந்த நாட்டுவைத்தியர்களின் அநுபவம். உதாரணமாக இக்கொட்டை சேர்ந்துள்ள சில அரிய மருந்துகளின் பெயர்கள் அடியிற் கூறியவாறாகும் :—

(1) குடித்தைலம், முடித்தைலம், பிடித்தைலம், துளசிகிச்சைத் தைலமாக உபயோகப்படும்—“ மகாவிடமுட்டித்தைலம்.”

(2), (3) பிடித்தைலமாக உபயோகப்படும். சிறுவிடமுட்டித்தைலம், இலகுவிடமுட்டித்தைலம் (தேரையர் தைலவர்க்கச் சுருக்கம்).

(4) இரசகெந்தி மெழுகு புலிப்பாணி 500.

(5) நந்திமை (சித்தர் உறை விளக்கம்).

(6) மூசாம்பரப்பத்து (கீல்வாதம், மூட்டுவீக்கம் இவைகளுக்கு உப யோகிக்கப்படும்) (ஷை நூலைப்பார்க்க).

### மேனாட்டு ஆலோபதி முறைப்படி

**வ - கு.—எட்டிக்கொட்டைச் சூரணம்.**—இதில் 1 கிரெயின் முதல் 10 கிரெயின்வரையில் படிப்படியாய் உயர்த்தி நாள் ஒன்றுக்கு 2, 3 தரம் கொடுக்கப்படுகிறது.

இதனால் பக்கவாதம், உதறுவாதம், காக்கைவலி, நரம்புகளைப்பற்றிய நோய்கள், பேதி, சீதபேதி, மலபந்தம், அடிதள்ளல், சொட்டுமூத்திரம், சுக்கிலநட்டம், சுரம், நீர்க்கோவை, பாண்டு, முள்ளந்தண்டு துர்ப்பலத்தை யொட்டி வருகின்ற ரோகங்களும் தீரும் என்பர்.

### எட்டிக்கொட்டை ஊறல் கஷாயம்.

எட்டிக்கொட்டைத்தூள் டிராம் 2, வெந்நீர் அவுன்ஸ் 12, ஒரு பாத் திரத்தில் விட்டு மறுபாத்திரம் கொண்டு மூடி ஒரு மணிநேரம் ஊறவைத்து இதில் ½ அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு 3 தரங்கொடுக்க துர்ப்பலம், நீரேற்றம், நரம்புகளைப்பற்றியுண்டாகும் வாதரோகங்கள் போம் என்பர். ஆனால் இதன் செய்கையை வெகு சாக்கிரதையுடன் கவனிக்கப்பாலது.

---

* வாதவலி என்பது - முள்ளந்தண்டு, நரம்பு இவைகளின் துர்ப்பலத்தை அநுசரித்து வருகின்ற நோய்கள்,—பக்ஷவாதம், உதறுவாதம், காக்காய்வலி, தநுஸ்தம்பவாதம், அமர கண்டம், குமரகண்டம், பிரமகண்டம் முதலியனவாம்.

### எட்டிக்கொட்டை பாவனத்திரவம்.

ரெக்டிபைட் சாராயம் அவுன்ஸ் 20-ல் எட்டிக்கொட்டை அவுன்ஸ் 2, சேர்த்து அவித்து மிருதுவாக்கி உடனே உலர்த்தி நுண்ணிய பொடி செய்து சாராயத்திலிட்டு 48 மணி காலம் ஊறவைத்து, பெர்க்லேஷன் முறைப்படி வடிகட்டி இதில் 10–20 துளி வீதம் கொடுத்தால் நரம்பு களுக்கு வன்மையுண்டாகுமென்றும், 5–10 துளி கொடுத்தால் பலகாரி யாகும் மென்றும் கூறப்படுகிறது.

### எட்டிக்கொட்டைச் சத்து.

எட்டிக்கொட்டையை ரெக்டிபைட் சாராயத்தில் பிட்டுபோல் வேகவைத்து உலர்த்திப் பொடியாக்கி கைப்பு நீங்குமட்டும் கொஞ்சங் கொஞ்சமாய் ஷெ சாராயத்தை விட்டுக்கொண்டேவந்து பிறகு, அதைக்காய்ச்சி வாலையில் இட்டு வடித்து, அடியில் தங்கியுள்ளதைக் சலயந்திரத்திலிட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி இதில் $\frac{1}{4}$–1 கிரெயின் கொடுக்க அக்னி மந்தத்தை நீக்குவதில் சிறப்புடையதெனக் கொள்ளப்படுகிறது.

### எட்டிக்கொட்டை உப்பு.

எட்டிக்கொட்டையிலிருந்து எடுக்கும் உப்புக்கு ‘எட்டிக்கொட்டை உப்பு’ என்று பெயர். இது சிறுமணலைப்போலும், பழுப்புநிறமாய், வாசனை யற்றதாய், மிகக் கைப்பாயுமிருக்கும். நீரில் கரையாது. இது கொடிய நஞ் சாதலால் வெகு சாக்கிரதையோடு உபயோகிக்கவேண்டியது.

இது பக்கவாதம், கண்புகைச்சல், அந்திமாலை, பயித்தியம், கூத்தாடும் சந்நி, சீதசுரம், துத்திரோகம், காக்கைவலி, சாராயக்குடியால் நேரிடும் விடம், குளோரபாரவிடம், பாம்புகடி, சூதகக்கட்டி முதலியவைகளை நீக்கும்.

அளவு (Dose).—$\frac{1}{50}$ கிரெயின். நாள் ஒன்றுக்கு 3 தரம் கொடுக்க, பல காரி. $\frac{1}{30}$—$\frac{1}{12}$ கிறெயின் கொடுக்க வெப்பமுண்டாக்கியாகும்.

இதைக் கொடுத்துவரும்போது தசைகளுக்கு இசிவுகண்டால் உடனே நிறுத்திவிடவேண்டும்.

## மரப்பட்டை.

இதன் மேல்புறணிகளைச் சீவி, சுத்தப்படுத்தி வெயிலில் உலர்த்தி நுண்ணிய பொடிசெய்து 1–2 குன்றியளவாக சுரங்கட்கும், வாத சம்பந்த மான ரோகங்களுக்கும் சிலரால் கையாளப்பட்டுவருகிறது.

1–2 குன்றி எடை பட்டையுடன் உப்புக்கல் 1 சேர்த்து மென்று தின்னும்படிக் கொடுக்க தேள்விடம் நீங்கக் கண்டிருக்கிறோம்.

இப்பட்டை சேர்ந்து செய்யப்படும் தைலங்கள் யாவும், சருமரோகங்களி லும், பெருவியாதியிலும் பூச்சுத்தைலமாக மிக்கப்பலனைத் தருகின்றன.

## வேர்பட்டை.

**குணம்.**—இது விசேடமாக (விடபேதி) ஊழி, சந்நி, காதடைப்பு, சூதகசந்நி, வாதரோகத்தாலுண்டாகும் வலி, விடக்கடி, பித்தம் இவையாதிகட்கு உபயோகம்.

### விடபேதி-காதடைப்பு-சந்நி-வேர்வைதீர.

### எட்டிவேர்ப்பட்டைச் சூரணம்.

**வ – கு.**—எட்டியின் வடவேர் மேற்றோலை எலுமிச்சம்பழரசம்விட்டு அரைத்துச் சூரணமாக்கி இதில் கடலைப் பிரமாணமெடுத்து, சிவனார்வேம்பு,

தும்பை இவ்விரண்டும் சேர்ந்த குடிநீரில் கூட்டிக்கொடுக்க மேற்கண்ட ரோகங்கள் தீரும். பத்தியம்—வறுத்த அரிசிக்கஞ்சியைக் கொடுக்க வேண்டும். (அகத்தியர் பரிபூரணம்—400).

### சூதக சந்நிக்குக் குடிநீர்.

சுமார் ஒரு வராகனெடை வடவேர்ப்பட்டையைச் சிதைத்து, கொதிக்கின்ற ஆழாக்கு வெந்நீரில் ஒருமணி நேரம் ஊறவைத்து வடிகட்டி நாள் ஒன்றுக்கு ஒருதரம் ½ ஆழாக்கு ஊறல் கஷாயத்தைக் கொடுக்க சூதக சந்நியில் காணும் சேட்டைகள் அதிகரித்துக் காணினும், மூன்ருந்தரத்தோடு சூதகசந்நி வசப்படுவதை அநுபவமாகக் கண்டவிடயம்.

### எட்டிவேர்ச் சூரணம்.

**குணம்.**—இதன் நுண்ணிய பொடியை நசியமிட விடக்கடிகள் தீருமென்பது பலநூலாசிரியர்களின் கருத்து (சத்தி - ஆரூடம்).

ஆலவிடம் ஒக்கும் அருந்தக் கடிதீரும்
ஞாலமதில் பித்தகுணம் நாசமாம்—ஆலைக்கோல்
அட்டியபா காமொழியே! யானவிட மூட்டிஎனும்
எட்டி மரவே ரிது. (அ.கு.)

## எட்டி வித்து.

**குறிப்பு.**—இதற்கு காமவிச்சையை எழுப்புதல், பலத்தைத்தரல், தீபனத்தை உண்டாக்கல் ஆகிய செய்கைகளும் இருப்பதனுல், சிலர் காம இச்சையை விர்த்தி செய்யும்பொருட்டே சிறு அளவாக உட்கொள்ளத் தொடங்கி நாளடைவில் சிறு அளவை கொஞ்சங்கொஞ்சமாக உயர்த்திக்கொண்டே வருகின்றனர். இதனுல் அவர்கள் கொண்ட கருத்து முற்றும் நிறைவேருமற்படி, பெண் இச்சையே அடியோடு நீங்கக்கண்டிருப்பதுடன், இந்திரியம் (சுக்கிலம்) நீர்த்து அடிக்கடி வெளிப்படுவதையும் காண்கிருேம்.

அளவிற்கு மிஞ்சி உபயோகிப்பதனுல் முதல்முதல் ஒருவித அசௌகரியத்திற்கு உட்பட்டு மூச்சு அடைபடுவதுபோலிருக்கும். பிறகு முன்னிசிவு பின்னிசிவு போன்ற நோய்களின் முழுக் குறிகுணங்களும் காணும். நாடி படபடத்து நடக்கும். தேகம் வெப்பமடையும். காது கேட்கும் தன்மையும், கண்பார்க்கும் தன்மையும் அதிக கூர்மையாயிருக்கும். இவ்வலி 1 அல்லது 2 நிமிடநேரம் இருந்து விட்டுவிடும். பிறகு ஆயாசத்தையும், வியர்வையையும் கொடுக்கும். மறுபடியும் இவ்வலி வரும், விடும். இப்படி விட்டுவிட்டு வந்து அடிக்கடி ஆளை பாதித்துக் கடையில் உயிரைப் போக்கும். ஆயினும், கடைசிவரையில் தன்சுயபுத்தி மாத்திரம் மாறுவதில்லை.

**இதை உபயோகிக்கத் தகாதவர்கள்.**—பாரிசவாதம் நேரிட்ட உடனேயும், இவ்வாதம் காலைப்பற்ற நேரிட்ட காலத்தும் உபயோகிக்கக்கூடாது.

**இதற்குச் சத்துருப் பொருள்கள்.**—(1) இரசம், (2) பூரம், (3) வீரம், (4) துவர்ப்பு வஸ்துக்கள்.

---

## எரிசாலை—Erisàlai.

**செய்கை.** வாதமடக்கி - வாதஹரகாரி - Anti - Vata.

**குணம்.**—இதற்கு தனுஸ்தம்பவாதம், கீல்குத்தல், வாதகோபம் நீங்கும்.

“ பூவில் எரிசாலைப் பூண்டுக் கிழுப்புவலி
கூவியழுஞ் சூலையனி லங்குறையும்.” (அ.கு.)

## எருக்கு—Erukku.

**வே. - பெ.—அருக்கன்.**

**Calotropis Gigantea.**

**( ,, Perocera.)**

**Eng.—Mudar.**

| | | | | |
|---|---|---|---|---|
| **Tel.** | **Jillédu Chettu** జిల్లేడు చెట్టు. | **Arab.** | **Usher** | * عشر |
| **Mal:** | **Erukka** എരുക്ക. | **Hind.** | **Àk** | * اك |
| **Kan:** | **Yakkedà-gida** ಎಕ್ಕಡೇ ಗಿಡ. | | **Akan** | * اكان |
| **Sans.** | **Arka** अर्कः. | | **Akond** | * اكوند |

இது இந்தியாவில் வெளிகளில் தன்னிச்சையாய்ப் பயிராகும் செடி வகுப்பைச் சேர்ந்த தெனினும், இருவகைப்படும். ஒன்று சிறுசாதி, மற்றொன்று பெருசாதி (இதனையே எருக்குமரம் என்பர்).

சிறுசாதியின் பூ கொஞ்சம் நீலநிறமுடையது. இதை எருக்கென்பர். பெருஞ்சாதியின் பூ வெண்ணிறமாயிருக்கும். இதை வெள்ளெருக்கன் என்பர். எருக்கைப்போல, வெள்ளெருக்கு எளிதில் கிடைப்பதில்லை.

**ப - உ.**—இலை, பூ, பால், பட்டை, வேர்.

*சுவை.*—கைப்பு, காரம், மதுரம், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

### இலை.

**செய்கை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmentic.**
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - **Alterative.**
- மலமிளக்கி - மலகாரி - **Laxative.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**

**குணம்.**—எருக்கிலையினுல், எலிவிடம், பெருவியாதி, கபநோய், கிருமிரோகம், ஐவகைவலி, கீல்வீக்கம், வாதகோபம், பாம்புவிடம், அக்கினி மந்தம், மலக்கட்டு இவைபோம்.

எலிவிடங் குட்டமைய மேறு கிருமி
வலிசூலை வாயுவிட மந்தம்—மல பந்தம்
எல்லா மகலு மெருக்கிலை யைக்கண்டால்
வில்லார் நுதலே! விளம்பு. (அ.கு.)

**வ - கு.**—இலையை வதக்கிக் கட்டிகளுக்குக் கட்ட அவை பழுத்துடையும். செங்கல்லைப் பழுக்கக்காய்ச்சி அதன்மீது எருக்கன் இலைப்பழுப்பை அடுக்கி குதிக்கள்ளான் எழும்பியுள்ள காலை அதன்மீது வைத்துச் சூடுதாங்கும்படி அழுத்திவர அது மறையும்.

இலைச்சாறுடன் சிற்றுமணக்கெண்ணெய்கூட்டிச் சீதபேதிக்கும், தேன் சேர்த்து வயிற்றுக்கிருமிகளுக்கும் கொடுக்கலாம்.

இலைகளை ஒன்றுமீது ஒன்று இருக்கும்படி அடுக்கிச் சுருட்டி ஒருபுறத்தை ஒழுங்குபட அறுத்துத்தள்ளி, வேப்பெண்ணெயைக் காயவைத்துத் துவைத்து சிலேத்துமநோய், வாதநோய், சந்நிபாதசுரம், ஐவகைவலி, கீல்வீக்கம் இவைகளில் ஒற்றிடமிடலாம்.

இதன் சாற்றில் 2 முதல் 5 துளி, தேள், பாம்பு விடக்கடிகளின் வேதனையுள்ளோருக்கு உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இலையை உலர்த்திப் பொடிசெய்து ஆறுத புண்களுக்குப்போட, சீக்கிரத்தில் புண்கள் உலரும்.

உலர்ந்த பழுப்பை பாறையுப்புடன் சேர்த்து வறுத்து முறித்தபாலுடன் கொடுக்க—கல்லீரல், மண்ணீரல் வளர்ச்சி, மகோதரம் தீரும்.

## பூ.

செய்கை. { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
பசித்தீயுண்டாக்கி - ஜடார்க்னிவர்த்தநி - Stomachic.
செரிப்புண்டாக்கி - பாசனகாரி - Digestive.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—பூவினால் சுவாசகாசம், இருமல் தீரும். வீரியமுண்டாகும். பூச்சாறு அப்பிரகத்தைச் சுத்திசெய்ய உதவும்.

**வ - கு.**—பூ ஒன்று அல்லது இரண்டுபங்கு, மிளகு ஒருபங்கு, கிராம்பு அரைபங்கு, சேர்த்து அரைத்து மிளகு அளவு மாத்திரை செய்துகொடுக்க கடின சுவாசகாசம் உடனே தணியும்.

உலர்ந்த பூ 125, கிராம்பு, சாதிக்காய், சாதிரத்திரி வகைக்கு, தோலா ஒன்று பந்நீர்விட்டரைத்து மிளகளவு மாத்திரை செய்து உட்கொண்டு, உடனே கொஞ்சம் பாலைக்குடித்துவர வீரிய விர்த்தியுண்டாகும்.

## பால்.

செய்கை. { தடிப்புண்டாக்கி - க்ஷோணககாரி - Rubefacient.
நாற்றமகற்றி - பூதிகந்தநாசநி - Deodorant.

**குணம்.**—வெள்ளெருக்கம் பாலால் ஐவகை வலிகளும், மகாவாதம், சந்நிபாதம், எலிவிடம், குளிர்சுரம் இவை போம். வாதக்கட்டிகளைக் கரைக்கும். உபரசங்களைச் செந்தூரிக்கும்.

### வெள்ளெருக்கம்பால்.

வலியின் வலிசுளுக்கு மாவாத சந்நி
எலியின் விடஞ்சுரங்க ளெல்லாம்—வலியற்றுக்
காலைத் தொழுதே கடற்சேரும் வெள்ளெருக்கம்
பாலைத் தொடுவார்க்குப் பார்.

### எருக்கம்பால்.

எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராச்—செருக்கான
சந்நி வலிதீர்க்குஞ் சார்ந்தபல சிந்தூர
முன்ன முடிக்குமென வோது. (அ.கு.)

**வ. - கு.**—பாலை எலிவிடம், சுளுக்கு, வாதக்கட்டி, வெட்டையாலுண்டான கீல்வாதம், நரித்தலைவாதம் இவைகளுக்குப் பற்றிடலாம். பல்நோய், பற்சொற்றை, பல்ஈறுகட்டு இவைகளுக்குப் பாலை அவ்விடத்தில் தொட்டுவைக்கலாம்.

பாலையுலர்த்தி 1, 2 குன்றியெடை பனைவெல்லத்தில் வைத்துக் கொடுத்து, உப்பில்லாப் பத்தியம்வைக்க எலிக்கடிவிடம் நீங்கும்.

பாலை முதன்மையாகக் கொண்டு செய்யப்படுகின்ற அர்க்கக்ஷீரத்தைலம் மகாவாத ரோகங்களைக் கண்டிக்கும்.

இப் பால் " அண்ட அருக்கன் செயநீர் " செய்ய உதவும்.

## பட்டை.

பட்டையிலிருந்து நார் உரித்தெடுத்து உபயோகிக்கலாம்.

## வேர்ப்பட்டை.

செய்கை. { வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உரமாக்கி - பலகாரி - Tonic.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.

**குணம்.**—நாட்பட்ட கீல்வாதம், குட்டம், மேகவிரணம், மேகப்புடை, இரசவேக்காடு, நீர்க்கோவை, பேதி, சீதபேதி, சந்நிபாதம், வாதநோய், பலவிடங்களைப் போக்கும்.

மேலும் இலை, பால், இவைகளால் நீங்கும் நோய்களேயும் விலக்கும்.

வ – கு.—வேர்ப்பட்டையைச் சூரணஞ்செய்து நாள் ஒன்றுக்கு 2, 3 முறை 2, 3 குன்றி அளவில் கொடுக்க பேதி, சீதபேதி, இதனுடன் காணும் ஆசனக்கடுப்பு, வயிற்றுப்பிடுங்கல் குணமாகும்.

வேர்ப்பட்டையைக் கஷாயஞ் செய்து கொடுக்க வேர்வை தோன்றி சுரந்தணியும்.

மணற்பாங்கில் பயிராய் முதிர்ந்த வெள்ளெருக்கன் வேரை சித்திரை, வைகாசி மாதங்களில் சேகரித்து சுத்திசெய்து மேற்புறணியை நீக்கி நிழலிலுலர்த்திச் சூரணஞ்செய்து 2, 5 குன்றிவீதம் தினமொன்றுக்கு 2 தரம்கொடுத்துவர குட்டம், மேகவிரணம் முதலிய மேற்குறிப்பிட்ட பிணிகள் சாந்தமாகும்.

இதை மேனாட்டு வைத்தியர் **Ipecac** வேருக்குப் பதிலாகவுபயோகிக்கின்றார்கள்.

**சமூலம்.**

எருக்கன் சமூலத்தைப் பொடித்து நெல்லெடை எடுத்து, அவ்வெடைக்குச் சமம் சுக்கு, திப்பிலி அல்லது மிளகு சூரணத்துடன் தனித்தனி 40 நாள் உட்கொள்ள முறையே வாத பித்த கபநோய்க் கூட்டங்கள் ஒழியும்.

கற்பமுறை பெண்போற் கணவனெனும் பண்டிதன்சொல்
கற்பமுறை முக்கடு குண்வி—கற்பமுறை
மூவருக்கங் கட்டை முதலொடுநென் மாத்திரமன்
மூவருக்கங் கட்டையது மூன். (தே. ய.)

---

## எலிக்காதிலை—Elikkàdilai.

**Evolvulus Emarginatus (L.)**

Sans. { Virkshakarni वृक्षकर्णी. / Akhukarni आखुकर्णी.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**குணம்.**—மலபந்தஞ் செய்யும், நாவறட்சி, திரிதோஷம், கிரந்தி, உதரரோகம், பாண்டு, சூலை, சுரம், பகந்தரம், இருதயரோகம், கிருமி, பிரமேகம் இவைகளைப் போக்கும்.

**வ – கு.**—இதைச் சமைத்துண்ண மேற்கண்ட நோய்கள் தீரும்.

---

## எலியாமணக்கு—Eliyámaṇakku.

**வே. பெ.—ஏரிக்கரைக்காட்டாமணக்கு.**

**சீமைக் காட்டாமணி, உரலாமணக்கு.**

**Jatropha Curcas.**

**Eng.—Physic Nut.**

Tel. Pèpálamu పేపాళము.

Mal. Káṭṭávaṇakka. കാട്ടാവണക്ക്

Kan. Beṭṭada-haraḷú ಬೆಟ್ಟದ ಹರಳು.

Sans. Parvata-yeranda पर्वत एरण्ड:.

Arab. Dande-nahri دندهری *

Hind. Janglí-araṇḍi جنلگی ارنڈی *

Duk. Janglí-yarandi جنلگی یرنڈی *

இச்செடி இந்தியாவின் தட்சணபாகத்திலும், கொங்கணத்தின் தென் பாகத்திலும் விசேஷமாயுண்டு. பெரும்பாலும் ஏரி, குளக்கரையில் பயிராகக்கூடியது. ஆகையால், இதற்கு ஏரிக்கரைக்காட்டாமணக்கு என்ற பெயர் உண்டு.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**
பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - **Galactagogue.**
குருதிப்போக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - **Styptic.**

**குணம்.**—எலியாமணக்குச் செடிக்குச் சரீரநோவு, சூலை, குன்மம், முளைமூலம், இரத்தமூலம், கழல்வாதவிரணம், மேகம், எலிவிடம், சில்விடம், பிலீகம், வயிற்றுவலி ஆகிய இவைகள் நீங்கும். பேதியை உண்டு செய்யும். காட்டாமணக்கின் செய்கைகளும் இதற்கு உண்டு.

உரலா மணக்குக் குரத்தவலி சூலை
விரைவான குன்மமும்போம் விள்ளப்—பிரிவாம்
முளைமூல மோடிரத்தம் முன்கால் விரணங்
கொளுமேக மெல்லாம்போங் கூறு. (அ. கு.)

இதன் விதையிலிருந்து எடுக்கப்படும் நெய்க்கு பேதியாகுங் குணமுண்டு. நிறம் வைக்கோலின் நிறத்திற்கு சிறிது குறைவு.

**வ-கு.**—இதைக்கொண்டு பூச, கீல்பிடிப்பு, பட்சவாதம், நீங்கும். விரணம், புரையோடிய விரணம், ஊன்சதை வளர்கின்ற விரணம், காயப்புண், புடை இவைகளுக்குப் பூசலாம்.

இதன் வேரை ஊறல் கஷாயமிட்டுக்கொடுக்க குழந்தைகட்குக் காணும் வயிற்றுப்பொருமல் நீங்கும். இதற்குப் பேதியாக்குகின்ற குணமிருப்பதால், கண்டு கண்டாயுண்டாகின்ற வீக்கங்களைக் கரைக்கும்.

இதன் பாலுக்கு, எலிவிடம், விதைவீக்கம், பலவித விடங்கள் முதலியவை நீங்கும். பேதியை மிகுதியாய் உண்டாக்கும். பீலிகம் குன்மம் முதலியவற்றைப் போகச் செய்யும்.

எலியா மணக்கோ எலிவிடம் வித்துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில்—வலுபேதி
யுண்டாகச் செய்யு முயர்பிலீ கங்குன்மம்
அண்டாம லோட்டுமிதை யாய். (அ. கு.)

இதன் இலையைக் கசக்கிய சாற்றை 1, 2 துளி கண்ணிலிட படலத்தை மாற்றும்.

இதன் குச்சியைக்கொண்டு பல்துலக்கிவர பல்லீறு சம்பந்தமான நோய்களைப்போக்கும். பல்வலியை சாந்தப்படுத்தும்.

இதனிலையை வதக்கி பிளவை முதலிய கட்டிகளுக்கு வைத்துக்கட்ட, சுகந்தரும்.

---

## எலுமிச்சை—Elumich-chai.

**Citrus Bergamia or Citrus acida.**

**Eng:—Acid Lime.**

**Tel.** Nimma నిమ్మ.

**Mal.** Cheru - Naranga ചെറു നാരംഗ.

**Kan.** Nimb ê ನಿಂಬೆ.

**Sans.** Jambira जम्बीरः.

**Hind.** Nínbú-Límú * نیمبو - لیمو

இது, செடி எலுமிச்சை என்றும், கொடி எலுமிச்சை என்றும் இரு வகைப்படும். இது இந்தியா முழுமையும் தோட்டக்கால் பயிராகச் செய்யப் படுகிறது. சுமார் 8 முதல் 10 அடி உயரம் வளரும். இலை மேற்புறம் பசுமையுடன் சிறுபுள்ளிகளை உடைத்தாயும் இருக்கும். இப்புள்ளிகளில் பரிணமித்துப் போகக்கூடிய எண்ணெய் நிறைந்திருக்கிறது. இச்செடி முழு மையும் நீண்டு பசுமையுள்ளதான முட்கள் நிறைந்திருக்கும். இதன் பழத்தின்தோல் இலேசான மஞ்சள் நிறமாயும், எண்ணெய்கலந்த புள்ளி களையுடையதாயும் இருக்கும். ஒருவித வாசனையுடையதாகவும் இருக்கும். உட்பாகம் சுளைச்சுளையாகவும் அதன் இரசம் அதிக புளிப்புடையதாகவும் இருக்கும். காயாய் இருக்கும்போது பச்சை நிறமாக இருக்கும்.

**ப – உ.**—இலை, காய், பழம், பழரசம், எண்ணெய்.

## இலை.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Refrigerant.**

## காய், பழம்.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Refrigerant.**

## தோல்.

**சுவை.**—புளிப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { தடிப்புண்டாக்கி - ஷோணகாரி. **Rubefacient.**
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**

### காய்.

**குணம்.**—திரிதோஷம், வாதகப, சூலை, சர்த்தி, குன்மம், இடுமருந்து, பித்த உஷ்ணம் இவைகளைப் போக்கும்.

தீதில்எலு மிச்சங்காய் சேர்முத்தோ டத்தையும்உள்
வாதகப சூலையையும் மாகொடிய—சாதியெனுஞ்
சர்த்திகுன் மத்தையும்உள் தங்கமருந் திட்டதையும்
பித்தவெப்பை யுந்தணிக்கும் பேசு. (அ. கு.)

### பழம்.

**குணம்.**—பித்தமயக்கம், வாந்தி, அரோசகம், தாகம், யானைக்கால், உன்மாதம், கண்ணோய், காதுவலி, இவைகளைப்போக்கும். நகச்சுற்றுக்கு நன்மைதரும். மலங்கட்டும்.

தாகம் குநகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்கொள் உன்மாதம் வீறுபித்தம்—மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும்போங் கட்டுவாதித் தொழிலில்
மன்னெலுமிச் சங்கனியை வாழ்த்து. (அ.கு.)

**வ – கு.**—பித்த சுரத்தில் உண்டாகும் வாந்திகட்கும், அரோசகங்கட் கும், இப்பழரசத்தினால் செய்யப்படும் ஜாதி ஜம்பீரக்குழம்பு நற்பயனைத் தரும்.

இப்பழரசத்தோடு சருக்கரைகூட்டி நீர்சேர்த்துப் பெருக்கி தாகவிடாய்க்கு அருந்தலாம்.

எலுமிச்சம்பழரசமும் ஊறுகாயுமாக கற்பமுறையாகப் பத்தியத்துடனே ஆறுமாதங்கொள்ள நரை, திரை மாறும். பிடிப்பு, மகோதரம், பக்கசூலை, முடம், பயித்தியம், பிரமை, உன்மத்தம் என்பவைகளும் அடியோடு நீங்கும்.

கோணத் துளையுங் குறியுளையுங் கொக்காகிக்
கோணத் துளையுங் குருளைபோற்—கோணச்
சடமதியுண் மாறுமற் சம்பீரக் கற்பஞ்
சடமதியுண் மாறுமற் சண். (தே.ய.)

பவளப் பற்பத்தை இப்பழச்சாறுடன் சேர்த்துச் சீதபேதி, அதிசார பேதிகட்குக் கொடுத்துவரலாம்.

பேதி மருந்துகள் கொடுத்து, அடங்காத பேதியும் வாந்தியும் நேரிட்டால், சீரகத்தைத் தேன்விட்டு பொன்வறுவலாக வறுத்து இதன் பழரசத்தைச் சேர்த்து நீர்விட்டுக் காய்ச்சிக்கொடுக்க உடனே பேதியும் வாந்தியும் நிற்கும்.

இதனிலையைக் காடியிலிட்டு நீராகாரமாகக் கொள்ளுவது நமது கிராமப் பழக்கம்.

---

## எலுமிச்சன் துளசி—Elumichan tulasi.

**Ocimum–Gratissimum.**

**Eng.—Shrubby Basil.**

| | |
|---|---|
| **Tel.** Nimma-tulasi నిమ్మతుళసి. | **Arab.** Faranjmish. * فرنجمشك |
| **Mal.** Kattu-tulluva കാട്ടുതുളവ ; Kattu-tuttava. കാട്ടുതുത്തവാ | **Pers.** Raihana Qaranful. * ريحان قرنفل |
| **Kan.** Rāma-tulasi. ರಾಮತುಳಸೀ. | **Hind.** Banjari * بنجارى ; Rām-tulsi. * رام تلسى |
| **Sans.** Ajaka अजक. ; Vanatulasi वनतुलसी. | |

இது இந்தியாவில் சாதாரணமாய்க் கிடைக்கும்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
- கற்கரைச்சி - பாஷாணபேதநி - Lithontriptic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—வீக்கம், நாட்பட்ட இருமல், கருப்பை ஸ்தம்பன ரோகம், கீல்வாதம் முதலிய ரோகங்களைப் போக்கும்.

**வ - கு.**—இதை அரைத்து வீக்கம், கட்டி இவைகளுக்கு வைத்துகட்டிறல் வீக்கத்தைக் கரைக்கும். அங்கு தங்கியுள்ள துர்நீர்களை உறுஞ்சிக்கொள்ளும். இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க நாட்பட்ட இருமல், முதலியன போம். நீர்ப்பையிலுள்ள கற்களை உடைத்து வெளிப்படுத்தும், அதைச் சார்ந்த நரம்புகளின் வீக்கத்தைக் கரைக்கும்.

இதன் குடிநீரை உள்ளுக்கும், இதன் சாற்றை மேலுக்கும், பூசிவர கீல்வாதரோகம் முதலிய வாத ரோகங்கள் தணியும்.

## எழுத்தாணிப்பூண்டு—Ezhuttaṇippúndu.

**Prenanthes Sarmentosa.**

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** – வெப்பம், **பிரிவு** – கார்ப்பு.

**செய்கை.** மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணம்.**—பழமலக்கட்டு, குடலின் சீதளம், சீதக்கடுப்பு, கரப்பான், சொறி, சிறங்கு இவை நீங்கும்.

பழமலங்கள் சாறும்ப ருங்குடற்சீ தம்போம்
எழுமலச்சீ தக்கடுப்பு மேகும்—ஒழியாக்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகலும்
உரப்பாம் எழுத்தாணிக் கோது. (அ. கு.)

**வ - கு.**—இப்பூண்டைக் கால்பலமெடுத்து ஒன்றிரண்டாய்ச்சிதைத்துக் கஷாயமிட்டுக் கொடுத்துவர மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

---

## எள்ளு—Eḷḷu.

**வே - பெ.—திலம்.**

**Sesamúm Indicum.**

**Eng.—Gingeli oil plant.**

| | |
|---|---|
| **Tel.** Nuvulu నువ్వులు. | Sans. **Tilam** तिलम्. |
| Mal. **Karuella** കരുഎള്ള. | Hind. **Thil** تل |
| **Kan.** **Eḷḷu.** ಎಳ್ಳು. | |

இது இந்தியாவில் ஏராளமாய்ப் பயிரிடப்படுகின்ற ஒரு சிறிய செடி. இதன் காயிலிருக்கின்ற ஏராளமான விதைகளைச் சேகரித்து உலர்த்தி ஒருவித எண்ணெய் எடுக்கிறார்கள். இதற்கு நல்லெண்ணெய் எனப் பெயர். எள்ளின் நெய் எனப்பெயருமுண்டு. இது தென்னிந்தியாவில் தாராளமாய் உபயோகப்படுத்தப்பட்டுவருகின்றது. இதில் வெள்ளை, கருமை, செம்மை என மூன்று சாதிகளுண்டு. இதுவன்றி காட்டெள்ளு, சிற்றெள்ளு, பேரெள்ளு எனவும் பலவகுப்புகளுண்டு.

**ப – உ.**—இலை, பூ, காய், விதை, சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

### இலை.

**செய்கை.** { உள்ளழலகற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent. / வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient. }

**வ – கு.**—ஒன்றிரண்டு பச்சையிலையை எடுத்து குளிர்ந்த சலத்தில் அலசினால் பசை இறங்கும். இது புண்பட்ட கண்களைக் கழுவ உதவும்.

ஒன்றிரண்டு இலைகளை ஒரு உழக்கு குளிர்ந்த சலத்திலிட்டு ஊறல் கஷாயமிட்டு, தினம் இருவேளையாக 6 அல்லது 7 நாள் கொடுத்துவரச் சீதபேதி குணமாகும்.

இலையைப் பதவாடையாகச்செய்து கட்டிகளுக்குக்கட்ட அவைசீக்கிரம் பக்குவமடைந்து உடையும்.

### பூ.

இதன் பூவைக் கண்ணோய்க்கு உபயோகப்படுத்தலாம்.

### காயும் சமூலமும்.

காயையும், சமூலத்தையும் உலர்த்திச் சுட்டு சாம்பலாக்கி விரணங்களுக்குத்தூவ அவை குணமாகும்.

## விதை.

**செய்கை.**
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தனகாரி - Emmenagogue.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணம்.**—மருந்தை முறிக்கும். வெம்மை, காசம், கபம், பித்தத்தை அதிகரிக்கப்பண்ணும். கண்ணுக்கு ஒளியையும், தேகபலத்தையும் கொடுக்கும். உதிரத்தைத் தள்ளும். கீதம்பாடக்கூடிய தொனியைக் கெடுக்கும்.

எள்ளுமருந் தைக்கெடுக்கும் ஏறனலாந் திண்மைதரும்
உள்ளில்ஐயைச் சேர்க்கும் உதிரத்தைத்—தள்ளும்இரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காசமுண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார். (அ.கு.)

**வ - கு.**—இதை ஊறவைத்த சலத்தை உதிரச்சிக்கலுக்குக் கொடுக்கலாம்.

அதிகமாய்ச் சாப்பிட்டால் கரு அழிவு உண்டாகுமென்று கருதப்படுகின்றது.

சூதகக்கட்டுக்கு ஒரு பிடி எள்ளை எடுத்து இடித்து வெந்நீரிலிட்டு ஸ்நானம் செய்தால் சுகம் உண்டாகும்.

விதையின் விழுது ஒரு சுண்டையளவு வெண்ணெயில் சாப்பிட இரத்த மூலம் சாந்தியாகும், மலச்சிக்கலைப் போக்கும்.

ஒருபிடி எள்ளை இடித்து வெந்நீரிலிட்டு அதில் உட்கார சூதகக்கட்டு நீங்கும். விதையின் சூரணம் ஐந்து குன்றி எடை உள்ளுக்கும் கொடுக்கலாம்.

விதையை அரைத்துக் கொதிக்கவைத்துக் கட்டிகளுக்குக் கட்ட அவை பக்குவமடையும்.

### எள்ளோதனம்.

எள்ளைச்சேர்த்துப் பக்குவப்பட்ட அன்னத்தை உட்கொண்டால் வாத பித்ததொந்தம் விலகும். கப விருத்தியும், தேக வலுவும் உண்டாகும்.

செப்பரிய வாதபித்தத் தீமையக லுங்கபம
துப்பி வளரும் உடலிறுகு—முப்பழத்தின்
கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே! நீகேளாய்
எள்ளோ தனத்திறு லே. (அ. கு.)

### எள்ளின் நெய்.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—புத்திக்குத் தெளிவு, விழிகளுக்குக் குளிர்ச்சி, உடம்பு பூரித்தல், தேகபுஷ்டி, பலம், தேஜஸ் இவைகளைத் தருவதோடு கண்ணோய், காதுநோய், தலைக்கொதிப்பு, காசநோய், சொறி, சிரங்கு, விரணம் முதலியவைகளைப்போக்கும். இருமலைத் தணிக்கும், மனமகிழ்ச்சி, வாலிபத் தன்மை இவைகளைத் தரும்.

புத்திநய னக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்
சத்துவங் காந்தி தனியிளமை—மெத்தவுண்டாங்
கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று. (அ.கு.)

வ - கு.—கூறல் எண்ணெயில் இரண்டு அல்லது நாலு உச்சிக் கரண்டி யளவு தினந்தினம் கொடுத்துக்கொண்டுவர தேகம் பூரிக்கும். தினவு, புடை, சொறி, சிரங்கு நீங்கித் தோல் மிருதுப்படும். இருமல் தணி யும்.

கோழிமுட்டை வெண்கருவுடன் கலந்து பருக்களின்மீது பூசிக்கொண்டு வர கட்டிகளின் பாதை (வலி) நீங்கிக் குணமுண்டாம்.

இதையே அதிகாலையில் இருகண்களினு மிட்டுக்கட்டித் தலையிலும் தடவித் தேய்த்துக் காய்ந்தாறிய வெந்நீரில் அடுத்தடுத்து மூன்றுநாள் தலைமுழுகி வர கண்சிவப்பு, கண்வலி, கண்ணில் நீர்வடிதல், கண்கூச்சம், இவை களுடன் சேர்ந்த மண்டைக்குத்தல் முதலியன நீங்கும்.

மஞ்சட்கருவுடன் சேர்த்துக் கலக்கிப்பூச தீப்புண், சுண்ணும்புவேக் காட்டுப்புண், தினவு, சொறி நீங்கும்.

### எள்ளுப்பிண்ணுக்கு.

இது, எள்ளை ஆட்டி எண்ணெய் எடுத்ததின்பின் உள்ள திப்பிபோன்ற வஸ்து.

**குணம்.**—இதனால் கிரந்தி, தினவு, கரப்பான், விரணம், நீர்மேகம் இவைகள் உண்டாகும்.

உள்ளிற்புண் ணுங்கிரந்தி யூரலுமி கக்கிளைத்தே
எள்ளின் பிண்ணுக்குக் கெழும்புங்காண்—விள்ளுங்
கரப்பான் விரணங் கதித்தநீர் மேகம்
உரப்பாகும் நாளும் உரை. (அ.கு.)

---

## (பெரிய) ஏலம்—(Peria) Èlam (Élarisi).

### வே - பெ. ஆஞ்சி, கோரங்கம், துடி.

### Elletaria Cardamomum.

### Malabar Cardamoms.

### Eng.—Cardamom Seeds.

| | |
|---|---|
| Tel. Elakulu (Elakaya) ఏలకులు. | Kan. Elakki ಏಲಕ್ಕಿ. |
| | Sans. Ela एलः |
| Mal. Elattari ഏലത്തരി. | Hind. Elachi * الائچی |

இச்செடி ஏலக்காயின் பொருட்டு தென்னிந்தியாவிலும், இலங்கையி லும் பயிரிடப்படுகின்றது. இக்காய் மூன்று பிரிவுள்ளது. உள்ளிலும் மும்மூலையுடையது. விதை கறுப்பு. வாசனையுள்ளது. மருந்துகளுக்கு வாசனைதரும். இதில் வேறு சாதிகளுமுண்டு. அவை பின்வருமாறு-

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—சுரக்கினம், பித்தமுகபாகம், தாளுபாகம், பித்தசிக்வாகண்ட கம், சருமகீலம், பேதி, அரையாப்புக்கட்டி, கிரிச்சரம், வாயில்உமூலை, சர்த்தி, சிலந்திவிஷம், ரூட்சை, உஷ்ணபேதி, விதாகம், இருமல், சோமரோகம், சுக்கிலநாசம், வயிற்றில் கபநிறைவு, நெஞ்சிற் கோழை, உரத்தபித்தம் இவைகளை நீக்கும்.

தொண்டைவாய்கவுள் தாலுகுதங்களில்
தோன்றும்நோய்அதி சாரம்பன்மேகத்தால்
உண்டைபோல்எழுங் கட்டிகிரிச்சரம்
உழலைவாந்தி சிலந்திவிஷஞ்சுரம்
பண்டைவெக்கை விதாகநோய்காசமும்
பாழுஞ்சோமப் பிணிவிந்துநட்டம்உள்
அண்டையீளைவன் பித்தம்இவைக்கெலாம்
ஆலமாங்கமழ் ஏலமருந்ததே." (தே.கு.)

அளவு.—ஏலாதிச்சூரணம்.—5–10 குன்றியெடை.

### ஏலாதிச்சூரணம்.

**வ - கு.**—ஏலம், அதிமதுரம், நெல்லி, சந்தனம், வால்மிளகு இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் 1, சருக்கரை பலம் $2\frac{1}{2}$ சேர்த்துக் கலந்து $\frac{1}{2}$ முதல் 1 வராகனெடை கொடுக்க, இருமல், வரட்சி, தாகம், வயிற்று வலி முதலியன நீங்கும்.

### ஏலாதி வடகம்.

ஏலரிசி, இலவங்கப்பட்டை, முந்திரிகை, திப்பிலி, வகைக்குப் பலம் 6; அதிமதுரம், சருக்கரை, பேரீந்து வகைக்குப் பலம் 3 இவைகளை ஒன்றுபட இடித்துச் சூட்டுடன் இருக்கும்போதே கழற்சிக்காய் அளவு மாத்திரைசெய்து 1, 2 கொடுக்க அக்கினிமாந்தம், வயிற்றுவலி, பொருமல், பேதி, பித்தாதிக்கம் போம்.

### ஏலாதி நெய்.

ஏலப்பொடி பலம் 8, பசுவின்பால் படி 1, பசுவின்நெய் படி 1, இளநீர் படி $\frac{1}{2}$, இவைகளைக்கூட்டிக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்து அதில் வால்மிளகுத்தூள் பலம் 1, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சுக்கு, கொத்துமல்லி, கொப்பரை, திராட்சை வகைக்குப் பலம் $\frac{1}{4}$; கற்கண்டு பலம் 24 சேர்த்துக்கொண்டு உபயோகிக்கத் தாகம், வறட்சி, கபம், வயிற்றுச் சம்பந்தமான பிணிகள் விலகும். தேகம் குளிர்ச்சியடையும். பித்தஞ் சாந்தியாகும். இரத்தம் பெருகும்.

---

## சிற்றேலம்—Chirttèlam.

**Elettaria Cardamomum.**

**Eng.—Lesser Cardamom.**

| | | |
|---|---|---|
| Tel. | Èlakàya ఏలకాయ. Èlakàya-vittulu ఏలకాయ విత్తులు. | |
| Mal. | Elattari ഏലത്തരി. | |
| Kan. | Yàlakki ಯಾಲಕ್ಕಿ. | |
| Sans. | Upakunchikà उपकुंजिका. | |
| Arab. | Qaqilah * قاقلہ ; Hèl * هيل ; Hèl-bavà * هيل بوا ; Kh-air-bavà * خير بوا | |
| Pers. | Qaqilhe-khurd * قاقلہ خورد | |
| Hind. | Ilachi * الائچی ; Chhòtí - ilàyechì چھوٹی الائچی * | |
| Duk. | Chhoti-ilachi * چھوٹی الائچی | |

தென் இந்தியாவில் அநேகவிடங்களில் இதைப் பயிரிட்டு, வளர்த்து வருகிறார்கள்.

ப - உ.—விதை.

சுவை.—கார்ப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant and also Aromatic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—மலாவர்த்தவாதம், வயிற்றுக்கொதிப்பு (அக்கினிமந்தம், பொருமல், வலி) வாயில் நீரூறல், வாயினிப்பு, தாகம், சலபேதி, வேர்வை யுடன் கூடிய தலைவலி, மிகுந்த வறட்சி, கபம் இவைகளைப் போக்கும்.

மலவாத மோடு வயிற்றுக் கொதிப்பு
சலமூறல் வாயினிப்பு தாகம்—சலபேதி
வேர்க்குந் தலைநோய் மிகுருட்சை ஐயமிவை
போக்குஞ்சிற் றேலம் புகல். (அ.கு.)

**வ - கு**—ஏலக்காய் 2 வராகனெடை, பனை வெல்லம் 5 வராகனெடை சேர்த்துக் கால்படி நீர்விட்டுக் காய்ச்சிக் கொடுக்கப் பித்தத்திறலுண்டாகும் தலைமயக்கம் நீங்கும்.

ஏலரிசி, சுக்கு, இலவங்கம், சீரகம் இவை சமனெடை எடுத்துப் பொடித் துத் தூளாக்கி ½ வராகனெடை வீதம் கொடுத்துவர, வயிற்றுவலி, குன்மம் இவை நீங்கும்.

ஏலரிசி, ஓமம், சீரகம் இவை சமனெடை எடுத்து இளவறுப்பாய் வறுத் துப் பொடித்து அதில், ஒரு தேக்கரண்டி (ஒரு வராகனெடை) எடுத்து உட் கொள்ள அசீரணம் நீங்கும்.

---

## காட்டு ஏலம்—Kàttu-yelak-kay.

Amomum Subulatum.

Eng.—Cardamom (wild).

Tel. { Pedda-yèla-kàyalu పెద్ద యేలకాయలు. / Aḍavi-yèla-kàya అడవి కాయలు. }

Mal. Pèrèlam പേരേലം.

Kan. Doḍḍa-yàlakki ದೊಡ್ಡಯಾಲಕ್ಕಿ

Sans. Brahata-upakunchikà. ब्रहुत उपकुंजिका.

Arab. Hèl-zeekh-ahar هيل صغار *

Pers. Qàqilahe-zeekh-akar قاقلة صغار *

Hind. Bari-ilàchí بڑی الائچی *

Duk. Barí-ilàyechì بڑی الائچی *

இது பண்படுத்தப்படாத பூமிகளில் சுயேச்சையாய் வளரும் செடி.

ப - உ.—விதை.

சுவை.—கார்ப்பு, துவர்ப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—நீங்காச்சர்த்தி, கபம், பேதி, அரோசகம், பயித்தியம் இவைகள் போகும்.

தீராத வாந்தி சிலேத்ம மதிசாரம்
பேரா அருசிபித்தம் பேருங்காண்—சோராமல்
காட்டேல வார்குழலே ! காரம் பரிமளஞ்சேர்
காட்டேல மென்றுரைக்குங் கால். (அ.கு.)

**வ - கு.**—காட்டு ஏலக்காயைக் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவர, வாய் நாற்றம், பல்அரணை, ஈறுபுண் முதலியன மாறும்.

காட்டு ஏலக்காய் ஒரு பங்கு, வெள்ளரிவிதை 2 பங்கு சேர்த்துக் கஷாய மிட்டு, கால் ஆழாக்கு வீதங்கொள்ளச் சிறுநீரைப் பெருக்கி நீரடைப்பைப் போக்கும். பித்தத்தை அதிகரிக்கும். வலப்பாட்டீரல் நோயைக் குணமாக்கும்.

**அளவு 5** குன்றி.

**10** முதல் **15** குன்றியளவு உட்கொள்ள, தலைவலி மாறும்.

---

## மலையேலம்—Malayèlam.

### Eng.—Cardamom (Hilly).

இது காடுகளிலும், மலைகளிலும் ஏராளமாய் வளர்ந்து கிடக்கும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—ஏலத்துக்குரியதே.

**குணம்.**—நாவறளல், வரட்சுரம், பித்தச்சொரி, நீர்ச்சுருக்கு, திரிதோஷ வறட்சியால் பிறந்த அருசி இவைகள்போம்.

நாவறட்சி தாகசுரம் நாடா தகற்றிவிடுந்
தீவறட்சி நீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண்—மூவறட்சி
கூடும் அரோசகத்தைக் கூடாமல் ஓட்டிவிடும்
நாடுமலை யேலம் நவில். (அ.கு.)

---

## ஏழிலைப்பாலை—Ázhilaip-palai.

### வே - பெ.—சப்தபர்ணி.

### Eng.—Dita-bark.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Palagaruda పాలగరుడ. | Sans. | Sapthaparna सप्तपर्णः. |
| Mal. | Ezilampala ഏഴിലംപാല. | Hind. | Datyuri * دهتی یوری |
| Kan. | Hala ಹಾಲ. | | |

இது இந்தியாவில் பயிராகின்ற மரம். இதன்பட்டை 6, 7 அங்குல கனமுடையது. இப்பட்டையின் மேற்புறம் தோல்நிறமாயும், உட்புறம் மஞ்சள் நிறமாயும் யாதொரு மணமின்றியும் இருக்கும். மேலும் இது பஞ்சைப்போல் மிருதுவாயிருக்கும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.

**குணம்.**—சூலை, கிருமி, விரணம், குட்டம், குன்மம், தாபம், சீத பேதி, அண்டவிருத்தி, திரிதோடம், அதிசீதளம் முதலியன ஏழிலைப் பாலையால் நீங்கும்.

**ப - உ.**—பட்டை, வேர்.

**வ - கு.**—இதன் பட்டையை இடித்து, $\frac{1}{4}$, $\frac{1}{2}$ பலம் எடுத்து உழக்கு வெந்நீரில் ஒருமணி நேரம் மூடி ஊறவைத்து, $\frac{1}{4}$, $\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் நாள் ஒன்றுக்கு இரண்டுமூன்றுதரம், நாட்பட்ட சீதபேதி, பேதி, சுரத்திற்குப்பின் காணும் துர்ப்பலம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இதன் வேரை உலர்த்திச் சூரணம் செய்து இரண்டுமுதல் ஐந்து குன்றி எடைவீதம் கொடுக்க, அதிசீதளம், கிருமி, சூலை, குன்மம், அண்ட வாதம், குட்டம், புண், தாபம் தீரும்.

வாதபித்த கபங்களினால் உண்டாகும் கோளாறுகளும் போம்.

---

## ஐவிரலி—Iyvirali.

**வே - பெ.—ஐவேலி.**

**Broyonia Laciniosa.**

**Tel.—Linga-donda** లింగ దొండ.

இது இந்தியாவில் வேலிகளில் பயிராகிற கொடிவருக்கங்களில் ஒன்று. இதன் இலை கையினின்று ஐந்துவிரல்களும் பிரிவதுபோல, ஐந்து விரிந்த பாகங்களையுடையது. இலையின் பின்புறம் முன்புறங்களில் முசுமுசென மயிர்போல் தோன்றிய குறிகளிருக்கும். இதன் விதை இலிங்கத்தை யொத்திருக்கும்.

**ப - உ.**—முற்றும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—மலமிளக்கி - லகுவ்ரேசனி Aperient

**குணம்.**—உடலுக்கு வலுவைத்தரும்.

**வ - கு.**—காய்முதிர்ந்த பருவத்தில் சேகரித்துலர்த்திப் பொடித்து ஒன்று முதல் இரண்டு விராகனெடை தூக்கிக் கஷாயமிட்டேனும் அல்லது கால் முதல் ஒரு வராகனெடைச் சூரணத்தை உட்கொண்டேனும்வர, மலச்சிக்கலில்லாதபடி மலத்தைக் கழிக்கும்; உடலைப் பலப்படுத்தும். இம்மூலிகையால் வங்கஞ் சுத்தியாகும்.

---

## ஒடுக்கன்—Odukkan.

**வே - பெ.—ஒடுக்கு.**

இது தென்னிந்தியாவில் சாதாரணமாய் வெளிகளில் பயிராகின்ற கொடி வருக்கங்களில் ஒன்று. இதன் கொடி வளரவளரத் துவளத் தொடங்கும். இதன்பூ மணி (Bell) உருவமாகவும் நீலநிறமுடையதாகவு மிருக்கும். இலையைக் கிள்ளினாலும், கொடியை உடைத்தாலும் பால் வெளிப்படும். இதில் பால்வடியுந் தன்மை யிருப்பதால் இக்கொடி யை இரப்பர் (Rubber) கொடி என்றும் சொல்லுவார்கள்.

**ப - உ**—இலை, பால்.

**சுவை.**—கைப்பு கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வீக்கமுருக்கி - சோபாநாசனி - Deobstruent.

**குணம்.**—கட்டிகளையும், அரையாப்புக் கட்டிகளையும் கரைக்கும்.

**வ - கு.**—இதன்பாலை கட்டியின்மீது தடவிவர, கட்டி நாளுக்குநாள் கரைந்து மறையும்; பழுத்திருந்தால் உடையும்.

இதன் இலையையரைத்துப் புற்கை செய்து கட்டிகளுக்குவைத்துக் கட்டலாம். இம்மூலிகை கெந்தகத்தைப் பற்பிக்கும்.

# ஒதிமரம் அல்லது உதிமரம்—Odi or Udimaram.

**வே - பெ.—மோதகம்.**

**Odina Wodier.**

**Eng.—Rhus Odina.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Oddimanu ఒడ్డిమాను | Sans. | Jingini जिङ्गिणी. / Ajasringi अजाशृङ्गी. |
| Mal. | Odimaram ഒദിമരം. | Hind | Jingam * جنگم / Kashmala * کشمالا |
| Kan. | Shimtee ಶಿಂಟೇ. | | |

இம்மரம் சாதாரணமாக இந்தியா முழுமையும் வளரும். தென்னிந்தியாவில் சாலைகளின் ஓரங்களில் அமைக்கப்பெற்றுள்ளது. இதனால் யாதொரு பலனும் பிரயாணிகளுக்குண்டாகாது. இது கோடைகாலத்தில் இலைகள் முற்றும் உதிர்ந்து நிழல்தர இடமின்றி நிற்கும். மழைகாலத்தில் தளிர்க்கும். இலை உதிர்ந்தகாலத்தில் புஷ்பிக்கும்.

**ப - உ.**—இலை, மரப்பட்டை, பிசின், வேர்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- தொற்றுப்புழுவகற்றி - ஆகந்துகரோகநாசநி - Disinfectant.
- குருதிப்பெருக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - Styptic.

## வேர்.

**குணம்.**—புண், புரை, கிரகணி, இரத்தபேதி, அதிசாரம், சீதபேதி, சீதக்கடுப்பு, தாகம், மூர்ச்சை, பித்தசீதளம் இவைகள் இதனால் விலகும்.

புண்புரைகி ராணிரத்தப் போக்கதிசா ரங்கடுப்புந்
திண்பெறுதா கஞ்சோபஞ் சீதளமும்—நண்பில்
அதிவிரைவாய்த் தாண்டு மணங்கே ! பருத்த
ஒதிமரத்தின் வேருக் கொதுங்கி. (அ.கு.)

## இலை.

**வ - கு.**—இதன் இலையை, மிளகுடன் சேர்த்து அரைத்து வாத வீக்கங்களுக்கு வைத்துக்கட்டிவர, வீக்கம் குணமாகும்.

## பட்டை.

**வ - கு.**—இதன் வேர்ப்பட்டைக் கஷாயத்தால் சாதாரண விரணங்களையும், துஷ்ட விரணங்களையும், புரையோடிய விரணங்களையும் கழுவலாம். மேலும்,

இதன் கஷாயத்தை மாதர்கட்குண்டாகும் பெரும்பாட்டிற்கும், வெள்ளைக்கும் வெளிப்பிரயோகமாக உபயோகிக்க நன்மைதரும். பெரும்பாடு, கிராணி, இரத்தபேதி, அதிசாரம், வயிற்றுக்கடுப்பு இவைகளுக்கு உள்ளுக்குக்கொடுப்பது வழக்கம்.

இதன் கஷாயத்தைப் பல்வலி, வாய்ப்புண், நாப்புண் முதலியவற்றிற்கு வாய்கொப்பளிக்க உபயோகிக்கலாம்.

### கஷாய முறை.

பட்டை 5 பலம், நீர் $1\frac{1}{4}$ படி, இதைக்காய்ச்சி $\frac{1}{2}$ படியாகக் குறைத்து தினம் 3 அல்லது 4 வேளை, $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு வரை கொடுத்துவர, வயிற்றுப்போக்கு, வயிற்றுவிரணம் இவைகள் மாறும். உடம்பிற்குத் தெளிவுண்டாகும்.

இதன் ஈரமுள்ள பட்டையை இடித்து வாதவீக்கங்களுக்குக் கட்டலாம். பட்டைரசம் கண்வியாதிகளுக்குச் சுகத்தைத் தரும்.

**பிசின்.**

இதன் பிசினைப் பொடிசெய்து 5 முதல் 7 குன்றிஎடைவரை கொடுக்கக் காசநோய் குணப்படும். பால்கொடுக்கும் தாய்மாருக்கு மிகவும் நன்மை பயக்கும்.

---

## ஓமம்—Omam.

**வே - பெ.—அசமோதம், தீப்பியம்.**

Carum. Copticum. (Ptychotis). Ajowan.

Eng.—The Bishops weed.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ōmamu ఓమము. | Kan. | Vóma ఓవా. |
| Mal. | Ōmam ഓമം. / Ayamódakam അയമോദകം. | Sans. | Yavani यवानी. |
| | | Hind. | Ajvāyan * اجوائن |

இது ஒரு செடி வகை. இந்தியாவில் அபரிமிதமாய்ப் பயிரிடப்படுகின்றது. இதை வாயில்போட்டால் உரப்பாயும், காரமாயும் இருக்கும். வாசனையுமுண்டு.

**ப - உ.**—வித்து.

**அளவு.**—$\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ வராகனெடை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உமிழ்நீர்ப்பெருக்கி - திரவகாரி - Sialogogue.

**குணம்.**—சீதசுரம், காசம், செரியாமாந்தம், பொருமல், பேதி (அதிசாரம், ஊழி) குடலிரைச்சல், ஆசனக்கடுப்பு, சீதபேதி, சுவாசகாசம், தந்தரோகம், தந்தமூலரோகம், பகம் (குய்யரோகம்) இவைபோம்.

சீதசுரங் காசஞ் செரியாமந் தம்பொருமல்
பேதியிரைச் சல்கடுப்பு பேராமம்—ஓதிருமல்
பல்லொடுபல் மூலம் பகமிவைநோ யென்செயுமோர்
சொல்லொடுபோம் ஓமமெனச் சொல். (அ.கு.)

**வ - கு.**—ஓமம், சுக்கு, சித்திரமூலவேர்ப்பட்டை, இம்மூன்றும் சமவெடை சூரணஞ்செய்து ஒன்றுகலந்து, கலந்த எடைக்கு நேர் கடுக்காய்ச் சூரணங்கூட்டி, வேளைக்கு, திரிகடிப்பிரமாணம் மோரில் கொடுக்க, அக்கினிமந்தம் நீங்கி, தீபன சக்தி யுண்டாகும்.

ஓமம், கடுக்காய்த்தோல், திரிகடுகு, சிற்றரத்தை, அக்கராகாரம், திப்பிலிமூலம் இவைகளின் சூரணம் சமபாகங்கூட்டி, கூட்டிய எடைக்கு நேர்பாதி சருக்கரை சேர்த்து, காலைமாலை திரிகடிப் பிரமாணம் கொள்ள, புகையிருமல் தீரும்.

ஓமம், மிளகு வகைக்குப் பலம் 1, வெதுப்பி, வெல்லம் பலம் 1 சேர்த்தரைத்துத் திரிகடிப் பிரமாணம் காலை, மாலை 10 நாள் சாப்பிட, வயிற்றுக்கடுப்பு, பொருமல், கழிச்சல் தீரும்.

ஓமம் பலம் 100, தூணிநீரிற் சேர்த்து, எட்டி லொன்றாக வடித்து அதில் சருக்கரை பலம் 10 கரைத்துப் பாகு செய்து, அமுக்கிராக்கிழங்கு, குக்கில், பறங்கிப்பட்டை, கார்போகவரிசி வகைக்குப் பலம் 1 பொடித்துத் தூவி நறுநெய் நாழிவிட்டுக் கிண்டி இலேகியஞ்செய்து வேளை ஒன்றுக்கு $1\frac{1}{4}$ வராகனெடை வீதம் கொள்ள பறங்கிச்சூலை, சிரங்கு, புண், குட்டம், கரப்பான், சில்விடம், வாயு தீரும்.

ஓமம் பலம் 8, ஆடாதோடைச்சாறு, இஞ்சிரசம், பழரசம், புதீனாச்சாறு வகைக்குப் பலம் 4, சயிந்தவலவணம் பலம் 1 சேர்த்துப் பாவனை செய்து உபயோகிக்க இருமல், சுவாசகாசம், அசீரணம் முதலியன நீங்கும்.

**அளவு.**—10–30 மாஷம்.

ஓமத்திலிருந்து ஓமத்திநீர், ஓமத்தைலம் எடுத்து உபயோகிக்கலாம்.

### ஓமத்திநீர்.

ஓமம் வீசை 1-க்கு 6 படி நீர்விட்டு வாலையில்வடிக்க உண்டாவது ஓமத் திநீர்.

**அளவு.**—$\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு.

**தீரும்நோய்.**—ஊழி, வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, அஜீரணபேதி, மந்தம் இவைகட்கு மிக்க உபயோகமானது. இதை எண்ணெயுடன் சேர்த்துக் கொடுத்தால் வெகுட்டல் இராது. அகட்டுவாய்வகற்றுஞ் செய்கை இதற்குண்டு.

### ஓமத்தைலம்.

தீநீரின்மீது மிதந்துபடியும் எண்ணெய் ஓமத்தைல மெனப்படும்.

**அளவு.**—1 முதல் 3 துளி வரை.

மேற்கூறிய வியாதிகளுக்குச் சிறிய அளவாகக் கொடுக்க, சுகந்தரும்.

---

## குரோசானி ஓமம்—Kurosani Omam.

**வே. - பெ.—திப்பியம், காரஸவை, காரபி, கார்சவை.**

**Hyoscyamus Nigrum.**

**Eng.—Henbana seeds.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kurasani oamamu కురసాని ఓమము. | Sans. | Parasikayavani. पारसीकयवानी. |
| Mal. | Kurasani (Omum) കുരാസാനി (ഓമം). | Hind. | Khorasani-Ajowan خراسانی اجوائن ॥ |
| Kan. | Kurasani voma ಕುರಸಾನಿ ಓಮಂ. | | |
| | ,, vadakki ವಾಢಕ್ಕೀ. | | |

இது, ஒரு சிறு செடி வகையைச் சேர்ந்தது. இதன் இலை பச்சையாயும், மஞ்சள் நிறங்கலந்த வருணமாயுமிருக்கும். கைக்கும். இதற்கு ஓர்வித வாசனையுமுண்டு. புஷ்பங்கள் இளமஞ்சள் நிறமாயிருக்கும். ஔஷதங் களில் சிறந்தவைகளில் ஒன்று.

இது சீமையில் பயிராகும் பூண்டு. இந்தியாவிலும் இமயமலைத்தொடரில் 8,000 முதல் 11,000 அடி உயரமுள்ள பாகங்களில் தன்னிச்சையாய்ப் பயிராகின்றது.

ப – உ.—இலை, வேர், விதை.

**சுவை**.—கார்ப்பு, சிறுகைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உறக்கமுண்டாக்கி - நித்ராகாரி - Hypnotic.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.
- துயரடக்கி - வேதனுசாந்தநி - Anodyne.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- சிறுநீர்குறைபடப்பெருக்கி - அற்பமூத்ரவர்த்தநி - Mild diuretic.

**குணம்**.—மஜ்ஜதந்துவேதனை, சூதகசந்நி, சூதகவயிற்றுவலி, அலசரோகம், சுவாசகாசம், யகுர்தகண்டரோகம், ஆரம்ப உன்மாதரோகம், இரசவேகத்தால் காண்கின்ற நடுக்கம், நினைவுதடுமாற்றம், நித்திரையின்மை, இருதயத்துடிப்பு ஆகிய வியாதிகட்குக் கொடுக்கலாம்.

மேலும், வெகுமூத்திரம், வாதம், வீரியநஷ்டம், புண், பேதி, கடுப்பு, கரப்பான், கபரோகம் இவைகளும் போகும்.

வெகுமூத் திரம்வாதம் வீரியநட் டம்புண்
உகுபேதி யுட்கடுப்பி னோடே—மிகுகரப்பான்
தீராக் கபம்இவைபோம் செய்யகுரோ சாணியென்றால்
வாரா மயக்கம்உறு மால். (அ.கு.)

**வ – கு.**—இச்செடியின் இலை, பூ, வித்துக்களிலிருந்து ஒருவித சத்து எடுக்கின்றார்கள். **Extract-Hyoscyamus.** என அதற்குப் பெயர்.

பிரமாணம் 1 முதல் 5 கிரேயின். இதை விசேஷமாய் நினைவு தடுமாற்றம், நித்திராபங்கம், பலவீனத்தினாலும், சூதக சந்நியாலுங் காணும் இருதயத்துடிப்பு இவைகட்கு உபயோகப்படுத்தலாம்.

இதில் தாது வெப்பகற்றுஞ் செய்கை விசேஷமா யமைந்திருப்பதனால், ஜனனேந்திரியங்கள், குடல், நுரைசுரல் (சுவாசகாசம்) இவ்விடங்களில் காண்கின்ற எரிச்சலை மிகநன்றாய்ச் சாந்தப்படுத்தும்.

இச்சத்திலிருந்து எண்ணெய், திராவகமாக இருவகை பிரிவு எடுக்கப்படும். எண்ணெய்க்கு **Hyoseine.** திராவகத்திற்கு **Hyoscinic-acid** எனப் பெயர்.

இதன் விதைகளிலிருந்து 100-க்கு 25 பங்கு, கனமும் மஞ்சள்நிறமும் பொருந்திய எண்ணெய் எடுக்கலாம்.

இப்பூண்டு, பச்சையாயிருக்கும்போது அதினின்று சத்தும், இரசமும், உலர்ந்தபின் பாவனத்திரவமும் எடுக்கப்படும்.

நேத்திர ரோகங்களில் கண்தாரைவிரிய மேலுக்குப் போடலாம். குழந்தைகட்கு உபயோகிக்க நல்ல மருந்தாகும். ஆனால், பெரியவர்கட்கு அப்படி ஆகாது.

**அளவு**.—இலைத்தூள் (சூரணம்) 1 முதல் 2 வராகனெடை. இரசம் ½ முதல் 1 வராகனெடை. பாவனத்திரவம் ¼ முதல் 1 வராகனெடை. அதிக அளவாகக் கொடுத்தால் மயக்கம், மூர்ச்சை, பிரமையும், சிலசந்தர்ப்பங்களில் மரணமும் நேரிடும்.

## ஓமம் (அசமதா)—Omam (asamada).

**வே - பெ.**—அசம்தாகம், அசம்தாஓமம்.

Carum. Roxburghianum.

Eng.—Aprum Involucreatum.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Ajamodagam | అజమోదకము. | Kan. | Ajamodu-Omum | ಅಜಮೋದವು |
| Mal. | Ajamothā Omum | അജമോദ ഓമം. | Sans. | Ajamoda | अजमोदः. |
| | | | Hind. | Ajwan | * اجوان |

இது, ஓமத்தில் ஒருவகை. சாதாரண ஓமத்தைப் பார்க்கிலும் காரம் அதிகமாக இருக்கும்.

**ப - உ.**—வித்து.

**செய்கை.** { பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—இது விசேஷமாய் ஊழி, அஜீரணபேதி, வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, குன்மம் இவைகளைப் போக்குவதுடன் வறட்டிருமல், மேல் மூச்சுடன்கூடிய இருமல், உள் அவயவத்தின் குளிர்ச்சி ஆகியவைகட்கு உபயோகமாகும். ஈரல், மண்ணீரல் இவைகளின் பந்தங்களை நீக்கும். நீரைப் பிரிக்கும். கல்லடைப்பை நீக்கும். பசி தீபனத்தையும், போக சக்தியையுமுண்டாக்கும்.

**வ - ம்.**—மேற்கூறிய வியாதிகளுக்கெல்லாம் இதை ஓமத்தைப்போலவே கொடுத்துதவலாம். இது சாதாரண ஓமத்தால் போகும் நோயை நீக்கும் வல்லமையுடையது.

---

## ஓரிதழ்த்தாமரை—Oritazhttamarai.

**வே - பெ.**—சூரியகாந்தி, இரத்தனபுருஷ்.

Viola Suffruticosa.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Ratnapurusha | రత్నపురుష. | Hind. | Ratan-purs | * رتن پرس |
| Kan. | Sooryakanty | ಸೂರ್ಯಕಾಂತಿ. | Duk. | Ratan-purus | * رتن پرس |
| Sans. | Sooryakanthi | सूर्यकान्ति. | | | |

இது, இந்தியாவில் உஷ்ண பிரதேசங்களில் பூமியை யொட்டிப் பயிராகும் வெகு சிறு (செடி) பூண்டு. இதைச் சுவைக்க வாயில் குழகுழப்புத்தட்டும்.

**ப.—உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—மேகரோகத்தையும், சீதத்தையும் போக்கும். சுக்கிலத்தைக் கட்டும், உடலுக்கு அழகுதரும்.

தாதுவையுண் டாக்குந் தனிமேகத் தைத்தொலைக்கும்
ஆதரவா மேனிக் கழகுதருஞ்—சீதம்போம்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்ய மடவனமே!
ஓரிதழ்த் தாமரையை யுண். (அ.கு.)

வ - கு.—இதன் சமூலத்தை அதிகாலையில் சாப்பிட்டுவர வாதத்தையும், மேக ரோகத்தையும், சீதத்தையும் போக்கும். வீரிய விருத்தியை யுண்டாக்கும். மூல வியாதிக்கும், மூத்திர அக்கிரமத்திற்கும் இதைக் கொடுப்பது வழக்கம்.

இதனால் கரட்டுகெந்தி பற்பமாகும்.

---

## ஓரிலைத்தாமரை—Orilai-tamarai.

**வே - பெ.—அவ்வியதம்.**

Viola Suffruti Cosa.

இது நீர்பாங்குள்ள குளம், மடு, ஏரிகளில் பயிராகும்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**—பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue

**குணம்.**—பாலைச்சுரப்பிக்கும், வாதமேக ரோகங்களைப் போக்கும்.

ஓரிலைத் தாமரையின் உற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பால் இல்லாத மங்கையர்க்கு—மோரில்
குடிக்கப்பால் உண்டாகும் கோரமே கத்தைப்
படிக்குளிருக் காதொழிக்கும் பார். (அ.கு.)

**வ. - கு.**—இதை அரைத்து எலுமிச்சங்காயளவு பசுவின்மோரில் கலக்கி இரண்டு வேளையும் 40 நாள் கொடுத்துவர பால் இல்லாதவர்களுக்குப் பால் சுரக்கும். உப்பைக் கட்டும்.

---

## கக்கரிக்காய்—Kakkarikkay.

**வே - பெ.—முள்வெள்ளரிக்காய், முள்ளன்வெள்ளரி.**

Cucumis Muricatus.

Cucumis Sativus.

Eng.—Cucumber, common.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Mullu - dosakkaya ముల్లు దోసకాయ. | | Kan. | Mullu-savate ಮುಳ್ಳು ಸವುತೆ. |
| Mal. | Kakkarikkay കക്കരിക്കായ്. | | Pers. | Tukhme * تخمی |
| | Mul-vellarikkay മുൾ വെള്ളരിക്കായ്. | | Hind. | Kakri * ککڑی |
| | Mullen-vellari മുള്ളൻ വെള്ളരി. | | Duk. | Kankri * کنکڑی |

இது இந்தியா முழுவதும் பயிராகிற ஒருவகை "**வெள்ளரி**" இனத்தைச் சேர்ந்த கொடி.

இதில் **ஆகாய கக்கரிக்காய்** என்று வேறொரு விதமுண்டு.

**ப - உ.**—இலை, விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**குணம்.**—இது பித்த தோடம், மூலச்சூடு, இரத்தபித்தம் இவைகளை நீக்கும்; ஆனால் கபத்தையும் குளிர்ச்சியையும் உண்டாக்கும்.

கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்த்தும்
மெய்க்குக் குளிர்ச்சிதரும் மென்னுதலே !—முக்குகின்ற
மூல வழறணிக்கும் மூடிரத்த பித்தத்தைச்
சால வகற்றிவிடுஞ் சாற்று. (அ.கு.)

**வ - கு.**—இதைப் பச்சையாகவும், துவையல், பச்சடி, குழம்பாகவுஞ் செய்து உண்ணலாம். கபத்தையும், குளிர்ச்சியையு முண்டாக்காம லிருக்கும் படி மிளகுத்தூள், உப்பு சேர்த்து உண்ணலாம்.

**ஆகாய கக்கரிக்காயின் குணம்.**

பந்தலில் காய்க்கின்ற கக்கரிக்காய்க்கு ஆகாய கக்கரிக்காய் என்று வழங்கும். இதனால், தேகச்சூடு, கரப்பான், பயித்திய தோடம், மருந்தின் வீரியம், பித்த வாந்தி ஆகிய இவைகள் போம். ஆனால், கபாதிக்கமும் புணர்ச்சியி லிச்சையு முண்டாகும்.

ஐயம் விளையு மழல்கரப்பான் பித்தமும்போ
மெய்யு ளதிபோகம் விளையுங்காண்—செய்மருந்தின்
காந்தியும்போ மாகாயக் கக்கரிக்காய் தின்றவர்க்கு
வாந்தியும்போ மாதே ! வழுத்து. (அ.கு.)

**வ - கு.**—இலையை வேகவைத்துச் சீரகம் சேர்த்து வறுத்துப் பொடித்து வேளைக்கு ½ வராகனெடை வீதம் கொடுக்கத் தொண்டை சம்பந்தமான வியாதிகளைப் போக்கும்.

மேற்கண்டபடி செய்ததுடன் சருக்கரை சேர்த்துக் கொடுக்கச் சிறு நீர்ப்பெருக் குண்டாகும்.

வெயிலினாலுண்டாகும் தலைவலிக்கு, இந்தக் காயை வெட்டித் தலை யில் வைத்துக் கட்டினால் தலைவலி குறைந்துவிடும்.

விதையை நீரைப் பெருக்கவும், உடற்கு வலுவைத்தரவும் செய்யப்படும் இலேகியங்களிலும், சூரணங்களிலும் சேர்க்கலாம்.

---

## கசகசா—Kasa-kasà.

**வே - பெ.—போஸ்தக்காய்.**

**Postakkài.**

**Papaveris capsiclatœ.**

**Eng.—Opium poppy, Poppy capsules.**

| | | |
|---|---|---|
| **Tel.** | **Gasagasalu** | గసగసాలు |
| **Mal.** | **Kasha-kasha** | കശകശാ. |
| **Kan.** | **Kasa-kasa** | ಕಸಕಸ. |
| **Sans.** | **Khas-khas** | खसखस बीजानि |
| **Hind.** | **Kash-kash** | * خشخاش |

**போஸ்த்தக்காய்க்குள்ளிருக்கும்** விதை **கசகசா** எனப்படும். இது வெண்மை நிறம். அதிகம் முற்றுததற்கு முன்பு எடுப்பதே சிறந்தது.

காயின் தோலுக்குப் போஸ்த்தக்காய்த் தோல் என்று பெயர் - கீறப் பட்ட காயினின்றும் வடிந்து உறையும் பாலுக்கு அபினி எனப் பெயர்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent - (Mild).

**குணம்.**—கசகசாவினால், கிருமி, தினவு, சீதரத்தக் கழிச்சல், மல பேதி, சலதோடம், நித்திரைபங்கம் ஆகிய இவைகள்போம். தேகவன்மை, அழகு, சுக்கிலம் இவை விருத்தியாகும்.

கிருமி நமைச்சல் கிராணியதி சாரஞ்
சிரநீர் அநித்திரைபோஞ் செப்பில்—உருவழகுங்
காந்தியுமுண் டாகுங் கசகசா வின்குணத்தைத்
தேர்ந்தவர்க்கு விந்துவுமாந் தேர். (அ.கு.)

**போஸ்தக்காய் கஷாயம்.**

**வ - கு.**—போஸ்த்தக்காய் பலம் 2, துத்தியிலை பலம் 1, தண்ணீர் படி 1 இவற்றைச் சேர்த்து ½ நாழிகை நேரம் காய்ச்சி எடுத்து வடிகட்டிக் கொண்டு கண்ணோய், வயிற்றுவலி, கீல் பிடிப்பு முதலிய நோயுள்ள விடங்களில் ஒற்றிடமிடலாம்.

**இதன் செய்கை.**—தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குறிப்பு.**—நீருக்குப் பதிலாக பால், அல்லது பாலும் நீருஞ் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ளலாம்.

போஸ்த்தக்காய், அதிவிடயம், கடுக்காய்ப்பூ, சிறுநாகப்பூ இவைகளைச் சம அளவாக எடுத்து 1-க்கு 16 நீர் சேர்த்துக் காய்ச்சி நாலில் ஒன்றாகக் குறுக்கி, அஜீரணபேதி, சீதபேதி, அதிசாரபேதி போன்றவைகளுக்கு ¼ முதல் ½ ஆழாக்குவரையில் நோயின் பலாபலமறிந்து கொடுக்கலாம்.

**கசகசா லேகியம்.**

கசகசா, வால்மிளகு, வாதுமைப்பருப்பு, கற்கண்டு சமனெடை எடுத்து இடித்துத் தேன், நெய் போதுமான அளவு விட்டு இலேகிய பதமாகக் கிளறி அதில் 1 முதல் 2 வராகனெடை, அல்லது

கசகசாவைப் பசுவின் பால் விட்டரைத்துப் பிழிந்து பனங்கற்கண்டு சமபாகம் சேர்த்து இலேகியம் போல் கிளறி அதில் 1 முதல் 2 வராகனெடை உபயோகித்துவரச் சுக்கில விருத்தியும், உடல்வன்மையு முண்டாகும்.

---

## சிவந்த போஸ்த்தக்காய்.

**Rhœdas Petala.**

**Eng.—Red poppy petals.**

கசகசாவினத்தில் இதுவும் ஒன்று. இதற்குத் துயிலையுண்டுபண்ணுஞ் செய்கையுண்டு. மருந்துகளுக்குச் சாயமேற்ற உபயோகப்படுவதன்றி மற்றப்படி அதிக உபயோகத்தில் இது வரவில்லை.

---

## கஞ்சா—Ganjah.

**வே - பெ.—ஆநந்தமூலி, கற்பமூலி, கோரக்கர்மூலி, சிவமூலி, பங்கி, மதமத்தகம், மூதண்டம்.**

**Cannabis Sativa.**

**Eng.—Indian Hemp.**

**Tel.** { Ganjah గంజా. / Ganjayi గంజాయి.

**Mal.** Kanjah ഗഞ്ചാ (കഞ്ചാവ്).

**Kan.** { Bhangi ಭಂಗೀ. / Ganja ಗಾಂಜಾ.

**Sans.** { Vijaya विजया. / Siddhapatri सिद्धपत्री.

**Arab.** Kinnab * خناب

**Pers.** Daarakte-bhang * درخت بهنگ

**Hind.** Ganja * گنجه

இது ஒரு செடி வகையைச் சேர்ந்தது. ஆசியாவின் மேற்கு—மத்திய பாகத்துக்கே இது உரியதாயினும், தற்காலம் இந்தியா முழுவதுமே பயிரிடப்படுகின்றது. இமயமலை மேற்சார்பிலும், காஸ்மீரத்திலும் விசேஷமாக விளைகிறது.

இந்தியா தேசத்தில் விளைகின்ற கஞ்சாவுக்கு "Cannabis Indica" என்றும், இங்கிலாந்தில் விளைகிறதற்கு "Cannabis Sativa" என்றும் மேனுட்டார் பெயரிட்டிருக்கிறார்கள்.

இவ்விரண்டிற்கும் பேதமில்லை என்று சிலரும், பேதமுண்டென்று சிலரும் கூறுகின்றனர்.

**ப் - உ.**—இலை, பூ, சமூலம், நார்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.
- துயரடக்கி - வேதனசாந்தநி - Anodyne.
- உறக்கமுண்டாக்கி - நித்ராகாரி - Hypnotic.
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - Narcotic.
- உறக்கமெழுப்பி - Soporific.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- பேறுவலியுண்டாக்கி - ப்ரசவகாரி - Parturifacient.

**குணம்.**—இதனால், விரண சந்நி, மதுபானவெறி, பால இசிவு, பலவித சூலைகள், நானாவித நரம்பு வேதனை, வாந்திபேதி, பெரும்பாடு, கீல்வாதம், சுவாசகாசம், மந்தப்பிரசவம், மந்தாக்கினி, அதிசாரம், பேய்நாய்க்கடி, ஒற்றைத்தலைவலி, மஜ்ஜதந்துவேதனை, பயித்தியம், கக்கிருமல், வயிற்றுவலி, அதிதூலரோகம் ஆகிய இவைபோம்.

மூலவாய்வு, கிராணி, நீடித்த அதிசாரம், அதிதூலம், கபாதிக்கம், கரப்பான் இவைகளும் குணமாகும். அதிதீபனமும் மிகு மயக்கமும் உண்டாகும்.

மூலக் கிராணியறு முன்புள்ள பேதிகட்டும்
சாலமயக் கும்பசியுஞ் சாருங்காண்—தூலஞ்செய்
வாதமொடு ஐயமும்போம் வன்கரப்ப னுந்தொலையும்
கோதறுகஞ் சாச்சண்டைக் கு. (அ.கு.)

மேலும், இது சந்தோஷத்தையும், நித்திரையையும், பசியையும், கண்களுக்குத் தோற்றுதவைகளைத் தோற்றும்படியான நினைப்பையும் உண்டுசெய்யும். ஆண் தன்மையை விருத்தி பண்ணும்.

இதை வழக்கமாய் உபயோகிப்பவருள் சிலருக்கு உன்மாதம் உண்டானதென்று சிலர் அனுபவத்தில் கண்டிருக்கிறார்கள்.

அளவு கடந்து சாப்பிட்டால் நரம்பைப் பற்றிவரும் சந்நி "Catalepsy" உண்டாகும். இந்நோயில் கைகாலைத் தூக்கி எவ்விதம் வைப்பினும் அது விழாமல், வைத்தது வைத்தபடியே நிற்கும். கண்தாரை பெருகும். மலச்சிக்கலை அதிகமாய் உண்டுபண்ணும்.

**இதன் அளவு.**—இலைத்தூள் $\frac{1}{2}$—1 குன்றி நிறை.
சத்து $\frac{1}{4}$—$\frac{3}{4}$ குன்றி நிறை.

அபினி விஷமித்தலுக்கு.—இதன் சத்து $\frac{1}{8}$—$\frac{1}{4}$ குன்றி விகிதம், தினம் மூன்று வேளையும்,

நாட்பட்டதலைநோய்க்கு—சத்து $\frac{1}{4}$ குன்றி விகிதம், தினம் 2 வேளையும் கொடுக்கத் தீரும்.

கஞ்சாவை அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுவதாலுண்டாகும் தோடத்தை முறிக்க :—

### இலேக்கள்ளியாதி குடிநீர்.

1. இலேக்கள்ளி வேர் ¼ பலம், கோரைக்கிழங்கு ¼ பலம், வசம்பு ¼ பலம், சுக்கு ¼ பலம், இதைக் குடிநீர் செய்து இரண்டு வாரம் சாப்பிட்டுவர கஞ்சா, அபினி இவைகளினுலுண்டாகும் தோடம் நீங்கும்.

2. (a) சுக்கின் குடிநீர், (b) வாழைப்பட்டையை இடித்துப் பிழிந்த நீர், (c) எலுமிச்சம் பழச்சாறு இவைகளில் ஏதாகிலும் ஒன்றைக் கொடுக்கத் தீரும்.

குறித்திடுவாய் கோரக்கர் மூலிக்குச் சுக்கி
னெரித்திடுநீ ருண்டால் விலகும்—நறைகுழலாய்!
சம்பீரச் சாறுகுந் தனிக்கதலிப் பட்டையினீர்
உம்பரமுந் தொக்குமதை யுண். (வி.பி.வி.)

3. காடி நீரும் கொடுக்கலாம்.

4. வமன சிகிச்சையும் செய்யலாம்.

### கஞ்சா சுத்தி.

கஞ்சாவை ஒளஷத உருவாக்குமுன், அதிலுள்ள துர்க்குணம் நீங்கும் பொருட்டு, சுத்திசெய்தே உபயோகிக்க வேண்டும். சுத்தி முறை பின் வருமாறு.—

சடைக் கஞ்சாவிலுள்ள விதை, காம்பு இவைகளை ஆய்ந்து நீக்கி, சுத்த நீரில் நன்ருய் ஊறவைத்துக் கைகளால் நன்ருய்ப் பிசைந்து பிசைந்து நீரை வடிகட்டி, மறுபடியும் வேறு புதிய நீரில் ஊறப் போட்டு முன் செய்த முறைப்படியே பிசைந்து எடுக்கவேண்டும். இப்படி 7 முதல் 10 முறைக்குக் குறையாமல் செய்து வெயிலில் நன்ருய் உலர்த்தி பசுவின் நெய்விட்டு இளவறுப்பாய் வறுத்து எடுத்துக்கொள்ளச் சுத்தி யாகும்.

**வ - கு.**—

“ முக்கடி லவங்கமுரி புச்சமுறு காய்குன்றி
மூலமொடு காரந்திரி
சிக்குவை நவத்தொடி வடிப்பொடி துவாதசத்
தேன்றெடி பாணிதத்திட்
டொக்கவைந் தொடியவிசு பெய்தட் டளாவல்புரி
யுண்ணிட்கமரை யசனமே
மிக்குறு மிதப்பவுண் வீறுமிவ் விலேகமோ
வீறுமத மூதண்டமே.” (தே. சே.)

மூதண்ட மும்மிளகால் மூத்தவதி சாரமறும்
தீதண்டச் செய்யிரத்தச் சீதமுமில்—வேதண்ட
மெய்யா மனவலியும் விந்துஞ்ச மாக்கினியு
நையா வமுதனமு நல்கு. (அ.கு.)

சுக்கு, மிளகு, திப்பிலி, இலவங்கம், இலவங்கப்பட்டை, வால்மிளகு, அதிமதுரம், அக்கராகாரம், வகைக்குப் பலம் மூன்று, கஞ்சா பலம் ஒன் பது எடுத்துப் பொடித்து வடித்துக் கொள்ளவும். இதைத் தேன் பலம் பன்னிரண்டு, பால் பலம் ஒன்று, நெய் பலம் ஐந்து சேர்த்து விதி ப்படி இலேகியமாகக்கிண்டி ½ வராகனெடை வீதம் காலை மாலை தக்க அளவு உட்கொள்ள பசி எழும் ; இதனுல், மூலவாய்வு, கிராணி, நீடித்த அதிசாரம் முதலியவை போம்.

மைசூர் அரண்மனை வைத்தியர் ஜெகநாத நாயுடு அவர்களின் அநுபவ முறைகள்.

நீரடைப்பு, சதையடைப்பு, சொட்டுமூத்திரம், நீரருகல், நீர்க்கட்டுக்கு :— கஞ்சாயிலே 5 பலம், துருசு 1 பலம் இவ்விரண்டையும் வெண்ணெய் போல்

அரைத்து அதற்குள் பலகறை (சோகி) 10 வைத்து 2, 3 மண்சீலை செய்து 30 வரட்டியில் புடமிட்டு எடுத்துப் பொடித்து 2 வராகனெடை எடுத்து, எலுமிச்சம்பழரசம் அரை ஆழாக்கு, சீனி பலம் ஒன்று சேர்த்துக்கலக்கி, பொடியை அதில் போட்டு ஒரு பாத்திரத்திலிட்டு வாழைக்குருத்து இலையினால் மூடி ஒரு இரவு பனியில் வைத்து, மறுநாள் எடுத்துக் கொடுக்க மேற்படி நோய்கள் விலகும்.

பூரணதிலேகியத்தில் கஞ்சாசேரும்.

---

## கஞ்சாங்கோரை—Kanjankòrai.

### Ocimum Album.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tella - Tulasi | తెల్లతులసి. | Sans. Surasam सुरसम्. |
| Mal. | Katurama-tulasi | കട്ടുരാമതുളസി. | Ajaka अजकम्. |
| Kan. | Rama Thulase | ರಾಮತುಲಸಿ. | Gambheeram गम्भीरम् |

**குறிப்பு.**—**கஞ்சாங்கோரை, நாய்த்துளசி** இவ்விரண்டும் வேறெனப் பதார்த்தகுண சிந்தாமணியில் கூறப்படுகின்றது.

இது செடி வகுப்பைச் சேர்ந்தது.

**சுவை.**—காரம், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—மாந்த பேதி, அக்கினிமந்தம், கணச்சூடு, குதாங்குர நமைச்சல், பிரமேகம், காசம் இவைபோம், மூச்சடைப்பு, விக்கல், பைத்தியம் இவைகளும் சாந்தமாகும்.

மாந்தக் கழிச்சலறும் மாந்தஞ்சு ரங்கணம்போம்
சேர்ந்தமூ லத்தின் தினவடங்கும்—பூந்தடக்கை
யன்னமே ! மேக மறுங்கஞ்சாங் கோரையினை
யுன்ன இருமலிலை யோது. (அ.கு.)

**வ - கு.**—இதன் இரசத்தைக் குழந்தைகளுக்குண்டாகும் மாந்தம் இருமல், சுரம் இவைகளுக்குக் கொடுப்பது வீட்டு வழக்கம். இலையைத் தேயிலைக்குப் பதிலாய் உபயோகப்படுத்துவதுண்டு. இது இராஜ உறுப்புகளுக்கும், இரைப்பைக்கும் வலுவைக் கொடுக்கும். கபசம்பந்த வியாதிகளுக்கும், வாத சம்பந்தமான வியாதிகளுக்கும் இப்பானத்தை உபயோகிக்கலாம்.

---

## கடம்பு—Kadambu.

### Anthocephalus Cadamba.
### Eng.—Wild Cinchona.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Rudrakshkamba | రుద్రాక్షకంబ. | Sans. Kadamba कदम्ब: |
| Mal. | Kadamba | കദംബ. | Halipriya हलिप्रिया |
| Kan. | Kadvala | ಕಡ್ವಲ. | Sisupala शिशुपाल: |
| | | | Hind. Kadamba * کدمب |

இது இந்தியா முழுவதும் பயிராகும் மரவருக்கத்தைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பழம், வித்து, மரப்பட்டை.

**சுவை** - துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
**பட்டை.**
உரமாக்கி - பலகாரி - Tonic.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
**பழம்.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**பட்டை.**

**குணம்.**—அத்திசுரம், குளிர்சுரம், வாதப்பிடிப்பு, கண்ணோய் முதலிய வைகளைத் தீர்க்கும்.

**இலை.**

வாய்ப்புண், தொண்டைப்புண், இவைகளுக்கு உதவும்.

**பழம்.**

வயிற்றுநோய், தாகசுரம் இவைகளைப் போக்கும்.

**விதை.**

விடக்கடி, சிரஸ்தாபரோகம், வாதரோகம், அக்கினிமாந்தம் இவை களை நீக்கும்.

கடப்பம் விதைக்குக் கடிவிடமு முண்டோ ?
தொடுப்புமண்டை நீருந் தொலையும்—இடக்கான்
வாத வகையொழியும் மந்தங்கள் ஏகிவிடுங்
கீதமொழி மாதே ! கிளத்து. (அ.கு.)

**இலை.**

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டு வாய்ப்புண், தொண்டைப்புண் முத லியவைகளுக்கு வாய் கொப்புளிக்கக் கொடுத்துதவலாம்.

**பழம்.**

பழச்சாற்ருேடு சிறிது சர்க்கரை சேர்த்து வயிற்று நோய்க்கும், தாகத் தோடு கூடிய சுரங்களுக்கும் கொடுக்கலாம்.

**பட்டை.**

பட்டையைப் பிழிந்து எடுத்த சாற்றைக் குழந்தைகளுக்கு உச்சிக்குழி தாழ்ந்திருந்தால், தலைக்குத் தேய்க்கலாம். அதோடு சிறிது, சருக்கரை சேர்த்து மேற்படி சாற்றை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

பட்டையைக் குடிநீராக்கி, அத்திசுரம், குளிர்சுரம் முதலியவைகட்குக் கொடுப்பதுண்டு. வாதத்தாலுண்டாகும் பிடிப்புகட்கு பட்டையை இடித்துத் தெள்ளி வறுத்து ஒற்றிடமிட்டுப் பின்பு அப்பட்டையையே கட்டிவைத்தலு முண்டு.

குழந்தைகட்குண்டாகும் கண்ணோய்க்குப் பட்டையின் சாறும், எலு மிச்சம்பழச்சாறும் சமன்கூட்டி அத்துடன் சிறிது பொரித்த படிகாரமும் அபினியும் கூட்டிக் குழைத்துக் கண்ணைச்சுற்றிப் பூசிவைக்கக் குணந்தரும்.

**விதை.**

விதையை அரைத்து நீரில் கலக்கிக் கொடுக்க விடக்கடியின் நஞ்சு முறியும். கொட்டையை யுரைத்துத் தலைக்குப்பற்றிட நீர்க்கோவையும், கைகால் மூட்டிலிட முடக்கும் போம்.

---

## கடலழிஞ்சில்—Kadalazhinjil.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனால் மதுமேகநீர், வாதாதி முத்தோட மேகநீர், தாகத்தைத்தராநின்ற தொந்த மூத்திரம், படர்தாமரை, சொட்டு மூத்திரம், சுரம், அதிசாரம் ஆகிய இவைகள் நீங்கும்.

தீதில் கடலழிஞ்சில் செய்யுங் குணங்கேளாய் !
ஓதுமது மேகமொ ழிப்பதல்லால்—வாதத்தில்
வந்தசலம் பித்தசல மாகபச்ச லந்தாகத்
தொந்தசல மும்போக்குஞ் சொல்.

கமல விரணங் கசிநீ ரகற்றும்
நிமல சுரம்விலக்கு நேரே—கமலமுக
மாதே ! கடலழிஞ்சில் வன்பட்டை பேதிகட்டுஞ்
*சீதாமே கம்போக்குந் தேர். (அ.கு.)

**வ - கு.**—இதன் பட்டையைச் சிதைத்து வேளைக்கு காற்பல மெடுத்து ஊறல் கஷாயமேனும், குடிநீரேனுஞ் செய்து கொடுத்துவர, வெகுமூத்திர முதலாகிய மேகநீர் வகைகள், அதிசாரம் சாந்தமாகும்.

மேலும் மேகநீர் முதலிய நோய்களுக்குரிய மூலிகைகளுடன் இப் பட்டையையும் சேர்த்துக் குடிநீர் செய்து கொடுக்கலாம்.

* "சீதமேகம்" என்பது எதுகை நோக்கி "சீதாவென"—திரிந்தது.

---

## கடலை—Kadalai.

### Cicer Arientum.

### Eng.—Bengal gram, Chicken Pea.

| | |
|---|---|
| Tel. Senagalu శనగలు, Chana-kamulu చనకములు. | Sans. Chanaka चणक: |
| Mal. Katala കടല. | Arab. Humug * حماق |
| Kan. Kadalai ಕಡಲೆ. | Pers. Chola * چولا |

இது சாதாரணமாய் இந்தியா முழுவதும் கிடைக்கக்கூடியது. செடி வகுப்பைச் சேர்ந்தது.

**குறிப்பு.**—இச்செடியிலிருந்து "**கடலைப்புளிப்பு**" என்றொருவகைப் புளிப்புத் திரவம் எடுக்கிறார்கள்.

**ப - உ.**—இலை, விதை, சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**சமூலம்.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**விதை.**
பித்தசமனி - பித்தசாந்தநி - Anti - bilious.

**இளவிதை.**
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**வறுத்தவிதை.**
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**இலைச்சாறு.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**கடலைப்புளிப்பு.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

### கடலை.

**குணம்.**—வயிறுப்பிசம், பித்ததாகம், குடல்நோயுடன் கூடிய கிரகணி, மயக்கம், மூலவாயு இவைகளையுண்டாக்கும்; நன் மருந்தை முறிக்கும்.

கடலைவயி றூதல் கனல்தாகஞ் செய்யுங்
குடலைவலிப் பித்துமலங் கொட்டுந்—திருமருந்தைச்
சேதமுறப் பண்ணுந் தியக்கமொடு வாயுவையும்
போத அழைக்கும் புகல். (அ.கு.)

### பச்சைக்கடலை.

தேகந்தழைக்கும், தாதுவிளையும், நுரையீரலுக்குப் பலந்தரும்.

### கடலைப்புளிப்பு அல்லது கடலைக்காடி.

கடலைச் செடிகளின்மீது படியும் பனி நீரைத் துல்லிய வெண்சீலையால் துவட்டிப் பிழிந்தெடுத்ததே கடலைப்புளிப்பாம்.

### இலை.

**வ - கு.**—இலையை வேகவைத்து, அடிபட்ட வீக்கம், மூட்டுப் பிசகல் முதலியவைகளுக்குச் சூட்டோடே வைத்துக் கட்டக் குணந்தரும்.

### சமூலம்.

பச்சையான சமூலத்தைக் கொதிக்கக் காய்ந்த தண்ணீரில் போட்டு ஆவியை இடுப்புக்குக்கீழ் பிடிக்க சூதகவலி, அதனாலுண்டாகும் இடுப்பு வலி முதலியவை தீரும்.

இதைக் கஷாயமிட்டு சுரரோகிகளுக்குக் கொடுக்கலாம்.

### கடலை.

முதிராத பச்சைக்கடலையைச் செடியிலிருந்து எடுத்து, உடனே அரைத்து அருந்த சீதபேதி தீரும்.

கடலையைக் காப்பியைப்போல் வறுத்துப் பொடித்து உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுப் பொருமல், மூத்திரத்தடை இவைகள் தீரும்.

கடலையைத் தண்ணீர் விட்டு அரைத்து நீரில் கலக்கி வடிகட்டி அரை ஆழாக்கு வீதம் குடித்துவரத் தேகம் பலப்படும். இதுவே வாந்தியையும் போக்கும்.

கடலையை இலேசாக வெதுப்பி, மென்றுச் சாப்பிட்டு, ஆழாக்குப் பால் குடித்துவர, நீர்க்கோவை, இருமல் தீரும்.

### கடலைப்புளிப்பு.

இதில் இயற்கையான புளிப்புத் தன்மை யடங்கியுள்ளதாகையால், இது விசேஷமெனக் கருதப்படுகின்றது. இதை நீரில் தக்க அளவு சேர்த்துக் கொடுத்துவர, தேக அழலை, சுரம், அஜீரணம், அஜீரணபேதி, சீதபேதி இவைகள் தணியும்; வாந்தி நிற்கும்; சூதக வயிற்றுவலி நீங்கும். அதிகப்பட்டால் துர்க்குணஞ் செய்யும்.

---

## கடற்பாசி—Kadarpasi.

### Gracilaris Confervoides.

**Eng.—Ceylon moss, Edible moss, Sea weeds.**

**Tel.** Samudurapu-pachi సముద్రపు పాచి.

**Mal.** Kadal-pausi കടൽ പായൽ.

**Duk.** Daryà - kì - pàchì دریا کی پاچی *

**Cing.** Agar-agar.

கடற்பாசி, இலங்கையைச் சேர்ந்த சமுத்திரத்திலும், பொதுவாக இந்து சமுத்திரத்திலும் தண்ணீரில் விளைகிற ஒருவகைப் பூண்டு. இதைக் காய வைத்து எடுத்து மருந்துக்கு உபயோகப்படுத்துகிறார்கள்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்**—சீதம், **பிரிவு** - இனிப்பு.

**குணம்.**—இதனால் சீதபேதி, வயிற்றுக்கடுப்பு முதலிய ரோகங்கள் சாந்தப்படும். குழந்தைகளுக்கும் நோயுற்று இளைத்தோர்களுக்கும் மிகவும் நன்மைபயக்கும். எளிதில் செரிப்பிக்கும். போஷண சக்தியை உண்டாக்கும். மூத்திர வியாதிகள், பிரமேகம், பெரும்பாடு முதலியன குணமாகும்.

**செய்கை.**
- இளைப்பாற்றி - Restorative.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**வ - கு.**—கடற்பாசியை நன்றாய்க் காயவைத்து உலர்த்திப் பொடிசெய்து 100 பங்கு நீர்விட்டு சிறிது கருவாப்பட்டை சேர்த்துக் காய்ச்சி, கூழ்ப்பதமாக எடுத்து ஆறவைத்துச் சிறிது சருக்கரையும், திராட்சரசமும் சேர்த்துக் கொடுத்துவர நோயுற்றிளைத்தோர்களுக்கு மிகவும் ஆரோக்கிய உணவாகும். தேகவன்மையையும் பலத்தையும், உற்சாகத்தையுந் தரும்.

1-க்கு 40 பங்கு நீர்விட்டுக் கஷாயமிட்டு இறக்கி $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு வரை சீதபேதி, அஜீரணபேதியுடையவர்களுக்குக் கொடுக்க நோய் தணியும்.

---

## கடற்பாலை—Kaḍarpàlai.

**வே - பெ.—கடல்பாலை, சமுத்திரசோகி, சமுத்திரசோவி, சமுத்திரப்பச்சை.**

Convolvulus Specioses, Argyreia Speciosa.

Eng.—Elephant creeper.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Samudra - pàla సముద్రపాల.<br>Kokkita కొక్కిట.<br>Pàla-samudra పాలసముద్ర.<br>Chandra-poda చంద్రపొడ. | Kan. | Chandra-pada ಚಂದ್ರಪೊದ. | |
| | | Sans. | Vriddha-daraka वृद्धदारक:<br>Samudra - palaka समुद्रपलकम्. | |
| Mal. | Samudra-pach-cha സമുദ്രപച്ച.<br>Samudra - yogam സമുദ്രയോഗം. | Hind. | Samudra - shoka سمودرا شوکا *<br>Samandar-ka-pattā سمندر کا پتا * | |
| | | Duk. | Samandar-ka-patta سمندر کا پتا * | |

இச்செடி இந்தியா முழுவதும் பயிராகின்றது.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலையின் கீழ்ப்புறம்.**
- தடிப்புண்டாக்கி - க்ஷோணகாரி Rubefacient.
- கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி - Vesicant.

**இலையின் மேற்புறம்.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**வேர்.**
- உடற்றேற்றி - வியதாபேத்காரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—கபதோடம், சோணிதவாதம், அருசி, அதிமூத்திரம், வாதாதிக்கம் இவைகளைப் போக்கும்.

ஐய மகற்று மரோசகத்தை மாற்றிவிடும்
பையுதிர வாயுவையும் பற்றறுக்கும்—மெய்யை
அமிழ்த்துகின்ற நீரை யனிலத்தைப் போக்குஞ்
சமுத்திரநற் சோஷிவிதை தான். (அ.கு.)

**வ - கு.**—இலையை அடிப்புறமாகக் கட்டிகள் மீது வைத்துக்கட்டினால் கட்டிகள் பழுத்து உடையும். மேற்புறமாக வைத்துக் கட்டினால் கட்டி கரையும்.

இதன் வேரை முறைப்படிக் கஷாயமிட்டு வாதவலிகளுக்குக் கொடுத்து வரலாம்.

இதன் வேரைப் பொடித்து சதாவேரிக் கிழங்குச் சாற்றில் ஏழு நாள் (புது புதுச்சாற்றில்) ஊறவைத்து எடுத்து உலர்த்தி, வேளை யொன்றுக்கு $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ தோலா வீதம் பசுவின் வெண்ணெயில் 40 நாள் சாப்பிட்டு வர, தேக பலத்தைக் கொடுத்துப் புத்தியை விசாலமாக்கும். இதையே நெடுநாள் சாப்பிட நரை திரை மூப்பின்றி வாழ இடந்தருமென்றும் கூறுவர் பெரியார்.

---

## கடற்றேங்காய்—Kaḍarṭèṉgày.

**Lodoicea Sechellarum.**

**Eng.—Sea cocoanut.**

| | |
|---|---|
| Tel. Samudrapu-ṭenkàya సముద్రపు టెంకాయ. | Sans. Sāmudra-nalikeram सामुद्र नारिकेलः. |
| Mal. Kaṭal-tèṉṉà കടൽ തേങ്ങാ. | Arab. Nàrjìle-baḥrì نارجیل بحری * |
| Kan. Samudra-tengina-kai ಸಮುದ್ರ ತೆಂಗಿನಕಾಯಿ. | Pers. Nargìle-baḥrì نارجیل بحری * |
| | Hind. Darya-ka-narìyal دریا کا نارجیل * |

இது செயிக்கல்லீஸ் (Seychelles) என்னுமிடத்தில் வளரும் மரத்தின் காய். இக்காயானது சமுத்திரத்தின் வழியாய் தண்ணீரில் மிதந்து மேற்சமுத்திரக் கரையோரங்களிலும் இலங்கைத்தீவின் கரையோரங்களிலும் வந்து சேருகிறது. சராசரி 40, 50 இராத்தல் கனமுடையது.

**ப - உ.**—உட்சதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - சீதம்.

**செய்கை.** { நச்சரி - விஷநாசநி - Alexipharmic.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—மதுமேகம், நெறிக்கட்டி இவைகளைக் குணமாக்கும்.

**வ - கு.**—கடல் தேங்காய் 2 பங்கு, மான் கொம்புத்தூள் 1 பங்கு, எட்டிவிதை $\frac{1}{2}$ பங்கு இவைகளை நீர்விட்டு ஒன்றுயரைத்து அரையாப்பு, கண்டமாலை முதலிய வீக்கங்களுக்கு வைத்துக்கட்டிவரச் சுகமாகும்.

இத்தேங்காயைத் தண்ணீரில் வேகவைத்துக் கஷாயமிட்டு $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுத்துவர மதுமேக நீரின் சர்க்கரையைக் குறைக்குமென அனுபவத்தில் கண்டறியப்பட்டிருக்கிறது.

இதைத் தேன் விட்டரைத்து நாக்கில் தடவிவர வாந்தி நிற்கும்.

## கடாரநாரத்தை—Kadàra Nàraththai.

**வே - பெ.—கொடிநாரத்தை, கொம்மட்டிமாதுளை.**

**Citrus Media.**

**Eng.—Citron.**

Tel. { Lungamu లుంగము. Pulla-dabha పుల్లదబ్బ. Bija-pura బిజపుర. }

Mal. Ganapathi-Nâranna ഗണപതി നാരങ്ങ.

Kan. Mada-lada-hannu ಮಾದಲದ ಹಣ್ಣು.

Sans. Bíjapùram बीजपूरम्.

Hind. Maphal * ماپھل

Duk. Turanj * ترنج

இது இந்தியாவின் தெற்கு, மேற்குக்கரைநாடுகளிலுள்ள தோட்டங்களில் பயிராகும் ஒருவகை மரம்.

**ப - உ.**—பழம், இரசம்.

**சுவை.**—கைப்பு, புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மணமூட்டி - Aromatic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- செரிப்புண்டாக்கி - பாசநகாரி - Digestive.

**குணம்.**—பித்தநோய், வாய்நீரூறல், அருசி இவைபோம்.

பத்தியவஸ்து—நோயாளர்க்கு ஏற்றது.

பித்தமொடு வாயிற் பெருகறல ரோசகம்போம்
பத்தியமா நோயிற் பருகலாங்—குத்துங்
கடாரி யனையவிழிக் கன்னி மடமாதே !
கடாரநாரத் தங்காயைக் கண்டு. (அ.கு.)

**வ - கு.**—இதன் பழரசம் உஷ்ணத்தையும், தேக அனலையும் தணிக்கும். தாகத்தையடக்கும். பித்தவாந்தியை நிறுத்தும்.

பழத்தின் மேல்தோலை சருக்கரைப் பாகிலேனும், தேனிலேனும் ஊறவைத்து நன்றாய் ஊறியபின் எடுத்துச் சீதபேதியுடையவர்க்குக் கொடுக்கலாம்.

மரத்தின் இலை, பூ, தோல் இவைகளிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிகுந்த பிரயோஜனமுடையது.

காய்—ஊறுகாய்க்கு உதவுகின்றது.

பழ ரசத்தை மணப்பாகு செய்து சுரம், வாந்தி, அரோசகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

---

## கடுகு—Kadugu.

**வே - பெ.—ஐயவி.**

கடுகில் இரண்டு இனமுண்டு.—(1) **கருங்கடுகு.** (2) **வெண்கடுகு.** இவைகளன்றி **நாய்க்கடுகு, மலைக்கடுகு, சிறுகடுகு** என வேறு மூன்று சாதிகளுமுண்டு.

## கருங்கடுகு இதுவே செங்கடுகு—Chengkadugu.

Sinapis Nigræ Semina.

Eng.—Black mustard seed.

Tel. Nalla-avalu నల్ల ఆవాలు.
Mal. Karuththa-kaduga കറുത്ത കടുക്.
Kan. Sasive ಬಿಳಿ ಸಾಸಿವೆ.
Sans. Rajika राजिका, Sarshapa सर्षप:
Duk. Rayan * رایان

இது சிறு செடிவருக்கம். இந்தியாவில் பல பாகங்களிலும் பயிரா கின்றது. வெண்கடுகைவிட இதற்குக் காரம் அதிகம். இதன் தோல் கறுப்பாக இருக்கும். ஆரம்பத்தில் கைப்பும் பிறகு காரமுமாக இருக்கும்.

---

## வெண்கடுகு—Venkadugu.

Sinapis Alba Semina.

Eng.—White mustard.

Tel. Thella-avalu. తెల్ల ఆవాలు.
Mal. Vella-kaduga. വെള്ളക്കടുക്.
Kan. Sasivè. ಸಾಸಿವೆ.
Pers. Sipandane-sufaid. اسفندان سفيد *
Hind. Sufedrai. سفیدرائی *
सिद्धार्थः

இவ்விரண்டுவிதக் கடுகுகளுக்கும் :—

**சுவை.**—காரம், **வீரியம்** - வெப்பம், **பிரிவு**- கார்ப்பு.

**செய்கை.**
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient
- கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி - Vesicant.
- செரிப்புண்டாக்கி - பாசநகாரி - Digestive
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic

### கருங்கடுகு.

**குணம்.**—தலையிடிப்பைத்தரக்கூடிய இருமல், பீநசம், கோழைக்கபம், பயித்தியம், காணுவிடக்கடி, வாதகபம், குடைச்சல், முடம், அக்கினி மந்தம், வாத தோடம், குழம்பிய உமிழ் நீர், கிரகணி, வயிற்றுவலி, திரிதோடம் இவைகளை விலக்கும். சுகப்பிரசவத்தைத்தரும். மேலும் வாத சீதக்கடுப்பு, சந்துவாதம், கீல்வாதம், அஜீரணம், தலை சுழற்றல், விக்கல் இவைகளையும் போக்கும்.

நீரைப்பெருக்கும் - வாந்தியை யுண்டுபண்ணும்.

இடிகாச நாசிச்சூ ரீளைகபம் பித்தங்
கடிவாத சீதங் கடுப்போ—டுடலிற்
படுகோட்டு நோயென்னும் பங்கிவைக ளேப்புன்
கடுகோட்டு மேன்மருந்து காண்.

மந்தமயக் கம்வாதம் வாய்நீர்ச் சுழற்றலறு
முந்துசுகப் பிரசவங்க ளுண்டா—மிந்துநுதன்
மானே! கி ராணிகுன்ம மாறுமுத் தோடமும்போம்
தானே கடுகிற்குத் தான். (அ.கு.)

## வெண்கடுகு.

**குணம்.**—குழந்தைகளுக்குண்டாகும் தோடங்கள், பூதபைசாச தோடம், கடிவிடங்களின்குற்றம், முடக்குவாத ரோகங்கள் இவை நீங்கும்.

பாலக்கிர கம்பூத பைசாச மோட்டிவிடும்
ஆல விஷங்கடிக ளாற்றுங்காண்—கோலமிகு
வள்ளைச் செவிமாதே! மாபங்க நோய்விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி. (அ.கு.)

**அளவு.**—10 முதல் 20 உழுந்து நிறை.

**வ - கு.**—இதை அளவாகக் கொடுக்க மந்தம் நீங்கி, ஜீரண சக்தியுண்டாகும். வாயுவைக் கண்டிக்கும், சூட்டையுண்டாக்கும்.

அதிக அளவாக அல்லது 1 முதல் 4 வராகனெடை அரைத்துத் தண்ணீரில் கலந்துகொடுக்க ஆயாசம் வாய்க்குமட்டலிவையின்றி வாந்தியாகும். இதனுல் உட்சென்ற நஞ்சுப் பதார்த்தம் வெளியாகும்.

கடுகை அரைத்துக் கெண்டைச் சதைகளில் துணியிற்றடவிப் போட, சுரவேகத்தினுலுண்டாம் மயக்க தோடங்கணீங்கும். கால் கைகளிற்றடவிச் சீலையைச் சுற்றிவைக்க, அவைகளிற்றங்கிய சீதகுணம் நீங்கி வெப்பமுண்டாகும்.

தொண்டை, மார்பு முதலிய இடங்களில் தடவ, அவ்விடங்களிலுண்டாகும் நோய்களைத் தணிக்கும்.

மார்ப்புக்குழியில் சீலையில் தடவிப்போட, விக்கல் தணியும்.

சந்துவாதம், கீல்வாதம், இரத்தங்கட்டிக்கொண்ட இடம் இவைகளுக்கு மேலுக்கு உபயோகிக்க நன்மைதரும்.

தேனில் அரைத்துக் கொடுத்தால் விரைவாதத்தாலுண்டான சுவாசம் இருமல் இவை தீரும்.

அடுத்தடுத்துக் கொடுத்தால் மூத்திரத்தை அதிகப்படுத்தும். தலையிலும் மூளையிலுமுள்ள தோடங்களைப் போக்கும்.

### கடுகு உக்களி.

கடுகுத்தூள், அரிசிமா இவைகளைச் சமவெடையெடுத்துப் போதுமான நீரிலிட்டுக் களிபோற் கிளறித்துணியிற்றடவி வயிற்றுவலி, குடைச்சல், வாத ரோகம் இவைகட்கு அந்தந்த நோயுள்ள இடங்களிலும்; இருமல், இரைப்பு, இவைகட்கு மார்பின் மீதும்; தலைவலி, உன்மாதம் இவைகட்கு பிரியின்மேலும்; சீதம், சந்நிபாதம், வாந்திபேதியிற் காணும் கெண்டைச் சதைப்புறழ்ச்சி இவைகட்குக் கால் கெண்டைச் சதையின்மேலும் போடக் குணமுண்டாகும்.

### கடுகுத் தைலம்.

இது அற்ப மஞ்சள் நிறமும், நெடியும் விறுவிறுப்பும், சுவைக்கில் எரிச்சலைத்தருதலும், சருமத்திற் படக் கொப்புளிக்குந் தன்மையும் பொருந்தியிருக்கும்.

இதை வாத நோய்களுக்கும், கிரந்திகளுக்கும் மேலுக்குப் பூசலாம்.

செய்முறை.—கடுகை இடித்துச் சிறிது கற்கண்டு சேர்த்து வெந்நீர் கூட்டி நெருக்கிப்பிழிந்தாவது, நீரிற் சேர்த்துக் காய்ச்சி நீரின்மீது எண்ணெய் படிந்துவரும்போதாவது, எண்ணெய் எடுப்பது நாட்டு வழக்கம்.

### கடுகுக் கஷாயம்.

கடுகுத்தூள் வராகனெடை 2, வெந்நீர் 1 ஆழாக்கு எடுத்து அதில் கடுகை ஊறவைத்து வடித்துக் கொடுக்க விக்கல் நீங்கும். இது விக்கலைப் போக்குவதிற் சிறந்தது.

## கடுகுரோகணி—Katukurohani.

வே - பெ.—கடுரோகிணி, கடகரோகிணி.

Picrorrhiza Kurroa.

| | |
|---|---|
| Tel. Katuku - rohini కటుకరోహిని. | Kan. Katurohini ಕಟುರೋಹಿಣೀ. |
| Mal. Katuka-rohani കടുകരോഹണി. | Sans. Katurohani कटुरोहिणी |

இது, இமயமலையைச் சார்ந்த காஸ்மீரம் முதல் சிக்கிம் வரையிலுள்ள பிரதேசங்களில் விளையும் ஓர்விதச் செடி. இதன் வேர் மேலே மங்கல் வெண்மையாயும் உள்ளே கறுப்பாகவுமிருக்கும். இதற்கு **நாட்டுக்கடுகு ரோகணி** என்று பெயர். கிழக்குத் தொடர்ச்சி மலைகளிலும் பயிராவ தாகச் சொல்லப்படுகிறது. மேல் நாடுகளில் **பச்சை, கறுப்பாக** இரண்டு இனம் பயிராகின்றது.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic
- பெருமலம்போக்கி - வ்ரேசனகாரி - Cathartic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**அளவு.**—பேதியாக 5—10 குன்றி; பசித்தீத்தூண்டியாக 5—7½ குன்றி; முறை வெப்பகற்றியாக 10—20 குன்றி; மற்ற ரோகங்கட்கு 1½—4 குன்றி. இதிலிருந்து எடுக்கும் மூலப்பொருளுக்கு "Picrorhizin" எனப் பெயர்.

**குணம்.**—மாந்தம், சுரம், கபாதிக்கம், வாதரோகம், கரப்பான், சீத பேதி, பழைய மலபந்தம், திரிதோடம், கிருமிவிரணம், வயிற்றுவலி இவைகள் போம். விரேசனமுண்டாம்.

மாந்தஞ் சுரமையம் வாயுகரப் பான்ஆமஞ்
சேர்ந்தமலக் கட்டு திரிதோடம்—பேர்ந்தபொட்டுப்
புண்வயிறு நோயிவைபோம் பொற்கொடியே! பேதியுண்டாம்
திண்கடு ரோகணிக்குத் தேர். (அ.கு.)

**வ - கு.**—இதன் வேரை முறைப்படிக் கஷாயமிட்டு தினம் 3 அல்லது 4 வேளையாக 3 அல்லது 4 நாள் கொடுக்க வீக்கம் (Dropsy) நீங்கும். சில சந்தர்ப்பங்களில் ஒருவாரம்வரையில் கொடுக்கலாம்.

சற்றேறக்குறைய 2 வராகனெடைத் தூளை நீரில் கலந்து சர்க்கரை சேர்த்துக் கொடுக்க இலகு பேதியாகும்.

---

## கடுகுரோகணி—Katukurohani.

கறுப்பு இனம்.

Black Variety of western market.

Helleborus Niger.

Eng.—Black Hellebore.

| | |
|---|---|
| Tel. Katukarohini కటుకరోహిణి. | Arab. Khartu, Kuerbeck. - خرطو I |
| Mal. Katukarohani കടുകരോഹണി. | خربیخ II * |
| Kan. Katukarohini ಕಟುಕರೋಹಿಣೀ. | Pers. Kharbekahindi * خربیخ هندی |
| Sans. Vakragra, Katurohini कटुरोहिणी; Krishna Bhedi कृष्णभेदी. | Hind. Kalikutkai * کالی کتکی |

இது (Black Hellebore) என்னும் செடியின் உலர்த்தப்பட்ட வேர். மேல் கறுத்தும், உள் வெளுத்தும் கெட்ட வாசனையுடன் கூடியுமிருக்கும். அதிகமாய் உலர்ந்தாலும், நாட்பட்டாலும் இரசமற்றுக் குணங்கெடும்.

(நாக்கைத் திமிர்க்கக்கூடியது.)

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { பெருமலம்போக்கி - விரேசனகாரி - Cathartic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—சூதகக்கட்டு, நீர்க்கோவை, காக்கைவலி, உன்மாதம் இவைகள் குணமாகும்.

**அளவு.**—9 முதல் 40 குன்றி பேதியாக.

**வ - கு.**—வேரைக் கஷாயமிட்டு பேதியாகக் கொடுக்கலாம்.

---

## கடுகுரோகணி—Katukurohani.

**பச்சையினம்.**

### Veratri Viridi Rhizome.

### Eng.—Green Hellebore Rhizome.

இது, அமெரிக்காவில் விளைகிற செடி. சுமார் 2–6 அடி உயரமிருக்கும் இதிலிருந்து ஸிவாடைன் (Cevadine), ஜர்வைன் (Jervine), ரூபி ஜர்வைன் (Ruby jervine), ஸியூடோ ஜர்வைன் (Pseudo jervine) ஸிரடைன் (Ceradine) வெராட்ரால்பைன் (Veratralbine) வெராடைன் (Veratine) என்கிற உப்புகள் எடுக்கப்படும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { சோர்வுண்டாக்கி (இருதய) - அபகர்ஷணகாரி - Depressant.
தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குணம்.**—தாபசுரம், பிரசவசந்நி (Puerperal Eclampsia), நுரையீரல் தாபனரோகம் இவைகளைக் குணமாக்கும். நாடி தீவிரத்தை யடக்கும். ஆனால், இது ஒரு கொடிய நஞ்சு.

**வ - கு.**—கடுகுரோகணிப் பாவனத் திராவகம் :—

சாராயம் 20 - இதன் தூள் 4, இதை 2 நாள் ஊறவைத்துப் பிற்பாடு வடிகட்டி எடுத்து, 5 முதல் 20 துளி வரை தினம் 2 அல்லது 3 வேளை கொடுத்துவர, மேற் கூறிய நோய்கள் சாந்தமாகும்.

**குறிப்பு.**—இதை விடமிக்கும்படிச் சாப்பிட்டால், முதல் வெந்நீரைக் கொடுத்து வாந்தியாகும்படி செய்து, பிறகு அபினி, பிராந்தி முதலிய உஷ்ணகாரிகளைக் கொடுக்கவேண்டியது.

---

## கடுக்காய்—Kadukkai.

**வே - பெ.—அக்கோடகம், அங்கணம், அந்தன், அபரனம், அபையன், அமரிதம், அமலை, அமுதம், அம்மை, அம்ருதா, அரபி, அரிதகி, அலியன், அவ்வியதா, இரேசகி, ஏமவதி, ஐயவி, ஹைமவதி, கடு, காயஸ்த்தா, சியிருதம், சிரயஸி, சிரோட்டம், சிவா, சேதகி, சேதநிகா, சேயா, திவ்யா, தேவி, நந்திரி, நெச்சி, பத்தியம், பாரியம், பிஷக்வரா, பூதனு, பூதன், ப்ரபத்யா, ப்ராணதா, மேகம், வயதரம், வயஸ்த்தா, வரிக்காய், வனதுர்க்கி, விஜயவேதன், ரோகணி, ஜீவநிகா, ஜீவந்தி, ஜீவப்ரியா, ஜீவ்யா, ஜெயா.**

## Terminalia chebula.

**Eng.—Chebulic Myrobalam, Ink nut.**

Tel. Karak-kaya కరక్కాయ.

Mal. Katukkai കടുക്കായ്.

Kan. { Anile-Kayi ಅಣಿಲೆಕಾಯಿ.
Alale-Kayi ಅಲಲೆಕಾಯಿ.

Sans. { Pathya पथ्या
Sudha सुधा
Bhishak Priya भिषक् प्रिया
Haritaki हरीतकी

Arab. Halila * هليلہ

Pers. Halilahe Zard * هليلہ زرد

Hind. Pile Hara * پيلا ہڑہ

Duk. Harda. * ہڑہ

கடுக்காய் மர வகுப்பைச்சேர்ந்தது. சில இடங்களில் உயர்ந்தும், சில இடங்களில் அதிக உயரமின்றித் தாழ்ந்தும் பயிராகின்றது. வட இந்தியாவில் உண்டாகும் மரங்கள் அதிக உயரத்தை யடைகிறதில்லை. நருமதைக்குத் தென்பாரிசத்தில் உண்டாகுபவை சற்றேறக்குறைய 100 அடி உயரமுள்ளவையாகவே இருக்கின்றன. இலங்கைத் தீவிலும் இந்தியாமுற்றிலும் இம்மரம் பயிராகின்றது. விசேஷமாய் தட்சணத்தின் மேட்டுப்பாங்கான இடங்களிலும், குமாயூன், பங்காளத்தின் மத்திய பாகங்களிலும் விளைகின்றது.

ப - உ.—பிஞ்சு, பழம், சமூலம்.

---

## கடுக்காய்ப் பிஞ்சு—Kadukkai pinchu.

Tel. Chitti karakkaya చిట్టి కరక్కాయ.

Mal. Katukkaipinja കടുക്കായ് പിഞ്ച്.

Kan. { Alale pinda ಅಲಲೆಪಿಂಡೆ.
Anile kai ಅಣಿಲೆಕಾಯಿ.

Sans. Bala-Harithaki बालहरीतकी.

Pers. Haleelai Siah * هليلہ سياه

Hind. { Bal Har * بال ہڑ
Zangi-har * زنگی ہڑہ
Kale-har * کالی ہڑہ

இப்பிஞ்சை உலர்த்தியபின், முட்டை வடிவமாயிருப்பினும் இருபக்கத்திலும் பெரும்பாலும் சப்பையாயும், சுருங்கியுமிருக்கும். ஆயுள் வேதியர்கள் இதன் கொட்டை விடமுடையதென்று நீக்கியிருக்கிறார்கள். எனினும், சில விட சிகிச்சை மருந்துகளில் இதன் பருப்பை உபயோகிப்பதுண்டு. யூநாநிகள் இதன் விதையைக் கண்ரோகங்களில் உபயோகித்து வருகிறார்கள்.

**சாதிபேதம்.**—ஆயுள் வேதக்கிரந்தங்கள், கடுக்காயை அடியிற்கண்டபடி பிரித்துக்கூறும் :—

**கடுக்காயின் பேதம்.**

ஆதி விசயன் அரோகிணியோ டேபிருதிவி
தீதில் அமிர்தை சிவந்திமலை—மீதார்
திரிவிரு ததீஅபயன் செப்பிலிவை யேழாம்
அரிதகியின் பேதம் அறி. (அ.கு.)

**1. விசயன் கடுக்காய்.**

விசயன் எனுங்கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்
நிசமதுதான் வாதத்தை நீக்கும்—மிசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய் போலிருக்கும் பேர்அவந்தி யாதேசம்
வாய்ச்சிருக்கு மக்காயை வாழ்த்து. (அ.கு.)

**2. அரோகிணிக் கடுக்காய்.**

ஓதும் அரோகிணிக்கா யொன்றுண்டா ஹற்சந்நி
பாதமொடு சீதம் பறக்குங்காண்—மீதுகுறி
நான்குவரி யாய்த்தோற்று நங்கா ! அதன்றேசம்
ஆங்குகன்னி யாகுமரி யாம். (அ.கு.)

**3. பிருதிவிக் கடுக்காய்.**

தோற்றும் பிருதிவிதான் தோலாப் பயித்தியத்தை
மாற்றும் வயதை வளர்க்குமதன்—மேற்றோலோ
மெல்லியதாம் அக்காய் விளைதேசம் எதென்னில்
வல்லசவு ராட்டிகமாம் வாழ்த்து. (அ.கு.)

**4. அமிர்தக் கடுக்காய்.**

அமிர்தமெனுங் கடுக்காய் அம்புவியி லுள்ள
திமிர்தசி லேட்டுமத்தைத் தீர்க்கும்—விமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றிலதன் றேசங்
கதிக்கொத்த காசியென்பர் காண். (அ.கு.)

**5. சிவந்திக் கடுக்காய்.**

சிவந்தி எனுங்கடுக்காய் செய்குணத்தைக் கேள்வா
யுவந்தமூ லத்தையெலாம் ஓட்டுஞ்—சிவந்ததிகப்
பொன்னிறம தாயிருக்கும் பூங்குழலே ! அந்தக்காய்
துன்னுவனந் தோறுமுண்டாஞ் சொல். (அ.கு.)

**6. திருவிருத்திக் கடுக்காய்.**

திருவிருததிக் கடுக்காய் தேகத்தில் நாளும்
வருவிரணம் போக்குமதன் வன்னம்—ஒருவிதமோ
பஞ்சவன்னம் மூவரம்பு பற்றி யிருக்குமது
விஞ்சுமலை தோறுமுண்டாம் விள். (அ.கு.)

**7. அபயன் கடுக்காய்.**

அபயன் எனுங்கடுக்காய் அங்கநோ யெல்லாம்
அபயமிட் டோட அடிக்கும்—அபயற்
கதிக நிறங்கறுப்ப தாகும்விளை பூமி
பொதிய மலையாம் புகல். (அ.கு.)

**1. விசயன்.**

**(a)** உற்பத்தி - அவந்தியில். **(b)** பேய்ச்சுரை போன்றது. **(c)** வாதத்தைப் போக்கும். சர்வ ரோகமும் போம்.

### 2. அரோகிணி.

(a) உற்பத்தி - கன்னியாகுமரியில். (b) வட்டமும் நான்கு வரியுமு டையது. காய் சிறியது ; ஆனால் கொட்டை பெரியது. (c) சந்நிபாதம், சீத தோடங்களைப் போக்கும்.

விரண ரோகத்துக்குப் பற்றிட உதவும்.

### 3. பிருதிவி.

(a) உற்பத்தி - சௌராஷ்டிர தேசத்தில். (b) மெல்லிய தோலுடையது. (c) பித்தத்தைப் போக்கும், ஆயுளை விருத்தி செய்யும்.

### 4. அமிர்தம் (சேதகி).

(a) உற்பத்தி - காசியில். (b) சதைப்பற்றுள்ளது. (c) சிலேஷ்மத்தைப் போக்கும். விரேசனத்துக்கு மிகவும் உபயோகமானது. இளைத்த தேகி கட்கும், மருந்துகளை யிட்டு இளைத்தவர்கட்கும் இது விசேஷம்.

**குறிப்பு**.—மனிதன், மிருகம், பட்சிசாதிகள் முதலியவை சேதகி மரத்தின் கீழ் உட்கார்ந்தாலும் நிற்பினும் அவைகட்கு பேதியாகும். இதன் காய் கையிலிருந்தாலும் பேதியாகும்.

சேதகி மூன்று வரம்புகளையுடையது. இதில் இருவகையுண்டு—(1) வெள்ளை. (2) கறுப்பு.

வெள்ளை 6 அங்குலம், கறுப்பு 1 அங்குல நீளமுள்ளது.

### 5. சீவந்தி (அரிதகி).

(a) உற்பத்தி - காடுகளில். (b) பொன்னிறமுடையது. (c) வாயுவி னாலுண்டான மூலத்தைப் போக்கும். மற்ற நோய்களுக்கும் உபயோகப் படும்.

### 6. திருவிருத்தி (மொந்தன்).

(a) உற்பத்தி - மலைகள்தோறும். (b) மூன்றுவரம்புடையது. ஐந்து வருணமுடையது. (c) விரணத்தைப் போக்கும்.

### 7. அபயன்.

(a) உற்பத்தி - பொதிகைமலையில். (b) ஐந்து இரேகையுடையது, கறுப்பு நிறமுடையது. உருண்டு இரண்டு அங்குலம் நீளம் இருக்கும் ; வறட்சி யுடையது. (c) அங்கநோயையும் கண் நோயையும் போக்கும். கோழை யகற்றி, மலம் போக்கி செய்கைகளும் இதற்குச் சிறப்பாகும்.

**குறிப்பு**.—மேற்கூறிய சாதிகளில்—ஒரு சாதி சாப்பிட்டால் பேதியாகும்.
,, வாசனையால் பேதியாகும்.
,, தொடுவதால் பேதியாகும்.
,, பார்த்தால் பேதியாகும்.

மேலே கூறிய எழு ஜாதிகளுமன்றி வேறு 4 சாதிகளும் கூறப்படுகின் றன. இவற்றிற்கு சங்கரசாதி எனப் பெயர்.

#### கருங்கடுக்காய்.

பழமலத்தைப் போக்கும் பகரி லுடலுக்
கழகுதரும் புத்தி யளிக்கும்—பழகி
மருங்கடுத்த வாதபித்த வன்கபத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்கா யென்றுளத்திற் காண். (அ.கு.)

#### செங்கடுக்காய்.

சுத்தியொடு புத்தி சுகமும் புகழுமுண்டாம்
மெத்தவொளிர் பொன்னிறமாம் மேனியெல்லாஞ்—சுத்தகப
வங்கடுத்த லீளைபல வன்காச மும்மலமுஞ்
செங்கடுக்காய்க் கில்லையெனத் தேர். (அ.கு.)

**வரிக்கடுக்காய்.**

மிடுக்காக்குந் தேகத்தை விந்துவையுண் டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந்—துடுக்கான
வாதபித்த ஐயகற்றும் வன்னியொடு நவ்விதருஞ்
சாதி வரிக்கடுக்காய் தான். (அ.கு.)

**பால்கடுக்காய்.**

ஆமங் கெடுங்கா ணழகும் பொலிவுமிகுஞ்
சேமம் பெறுபலமுஞ் சேருமே—தாமநெடும்
வேற்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே! எப்போதும்
பாற்கடுக்கா யுண்பவரைப் பார். (அ.கு.)

**1. கருங்கடுக்காய்.**

இது பழ மலத்தைப் போக்கும். உடலுக்கு அழகும், புத்திக்குத் தெளிவையு முண்டாக்கும். வாதபித்தகபத்தை நீக்கும்.

**2. செங்கடுக்காய்.**

இது சல நரம்பின் துவாரங்களிலுண்டாகிய ஈளை, காசங்களையும் திரி தோடங்களையும் போக்கும். தேகம் பொன்னிறம் பெறும், ஒளிரும், புத்தி பெருகும், சுகமுண்டுபண்ணும்.

**3. வரிக்கடுக்காய்.**

இது தேகத்தை வலுக்கப்பண்ணும். விந்துவை விருத்திபண்ணும். தேகத்துக்கு அழகைத் தரும்; திரிதோடத்தைப் போக்கும்; தீபனம், பாசனம் இவைகளையுண்டுபண்ணும்.

**4. பால்கடுக்காய்.**

இது தேகத்துக்கு அழகையும் காந்தியையும் பலத்தையும் தரும். ஆம தோடத்தைப்போக்கும்.

**குறிப்பு.**—மேற்கூறிய நான்கும் மேற்படி எழு ஜாதிகளில் அடங்கின வையே.

இது தவிர, காபூல் கடுக்காய் என வேறொரு சாதியுமுண்டு. இது யூநாநி வைத்தியர்களால் அதிகமாக உபயோகிக்கப்பட்டுவருகிறது.

*தற்கால அநுபவத்தில் வரும் பிரிவுகள் 4.*

மேற்கண்ட வகுப்புகள் யாவும் தற்காலம் கிடைப்பது மிக அரிதா யிருப்பதுபற்றி எந்த சாதியிலேனும் கிடைக்கக்கூடிய அடியிற்கண்ட நாலு பிரிவுகளே ஔடத ரூபங்களில் உபயோகப்படுகின்றது.

**1. இளம்பிஞ்சு (Tender or very young fruit).**

இது பச்சையாயும், உலர்ந்தபின் சுருக்கமும் சப்பையுமடைந்து கறுத்துச் சிறுத்திருக்கும்.

**2. முதிர்பிஞ்சு (Young fruit).**

இது உலர்ந்தபின் கருநிறம் அல்லது கரும்பழுப்பு நிறத்தை அடை யாளமாகப் பெற்றிருக்கும்.

**3. செங்காய்.**

இது முற்றும் பருவத்திற்கு சிறிது முந்திய பருவமுடையது. இப்பரு வத்தில் இதற்குள்ள அடையாளம் மஞ்சள் நிறமேயாம்.

**4. பழம்.**

இது பசுமை நிறமும், சதைப் பற்றுமுள்ளது.

**அளவு.**—1 முதல் 2 வராகனெடை.

**சுவை.**—முக்கிய சுவை - துவர்ப்பு, உப சுவைகள் - இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு.

**கொட்டை** - துவர்ப்பு, **பருப்பு** - இனிப்பு, **நரம்பு** - புளிப்பு, **காம்பு** - கைப்பு, **தோல்** - கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

குறிப்பு.—அறுசுவைகளுள் உப்புச்சுவை நீங்கலாக மற்ற ஐந்து சுவைகளும் இதில் அடங்கியிருக்கின்றன, ஆகையால் முத்தோட அளவாகிய முப்பிணிகளைப் போக்கும் வல்லப முடையதாயிருக்கின்றது. இது

புளிப்புச்சுவையால் - வாதத்தாலும்
இனிப்புச்சுவையால் - பித்தத்தாலும்
கார்ப்பு, கைப்பு, துவர்ப்புச் சுவைகளால் - கபத்தாலும் உண்டாகும் பிணிகளைப் போக்கும் என்பதேயாம்.

தோடங்களில் ஒன்றை மிகப்படுத்தியும், மற்றொன்றைக் குறைத்தும் செய்யுந்தன்மை, இதற்கின்மையே, இதன் ஒப்பற்ற மகிமையாகும்.

மேலும் கடுக்காயில் அமைந்துள்ள ஐம்பூத விசித்திரச் சேர்க்கையே, இது இனிப்புப் பிரிவையடைய ஆதாரமாகின்றது.

**குணம்.**—வெம்மை, நொய்மை, வறட்சி, இயக்கம், என்னுமிக்குணங் களையுடையது. மேலும்,

தீபனம், பாசனம், லேகனம், அனுலோமனம், ரசாயனம், (யௌவன ஸ்தாபனம்) புத்திபலம் (மேத்யம்), ஆயுள்விருத்தி, (ஆயுஷ்யம்), சரீர புஷ்டி, (ப்ரஹ்மணியம்), மாமிச வளர்ச்சி, இந்திரியபலம், ஞாபக சக்தி முதலிய குணங்களைத் தரும் என்பது வடநூல் கொள்கை.

மேலும் :—

வாதாதி தோஷங்களைக் கீழ் நோக்கச் செய்யவும், பசியை உத்தீபனஞ் செய்யவுங்கூடியது.

அபக்குவ உணவைச் செரிப்பிக்கக்கூடியது.

தோடங்கள் தங்கியவிடங்களிலிருந்து அவைகளை வெளிப்படுத்துதல், குடலிலுள்ள இயற்கை சக்தியைத் தூண்டி மலத்தை வெளிப் படுத்துதல்.

கிழத்தன்மையைத் தடுக்குதல்.

இதுவுமன்றி :—

கடுக்காயினால், கன்னம், கழுத்து, நா, ஆண்குறி இவ்விடத்து நோய்கள், பாதவன்மீகம், அதிசாரம், பங்குவாதம், அதிதூலம், இடிப்புண், வாதசோணிதவாதம், காமிலம், தாவரசங்கமவிடங்கள் இவைபோம்.

தாடை கழுத்தக்கி தாலுகுறி யிவிடப்
பீடைசி லிபதமுற் பேதிமுடம்—ஆடையெட்டாத்
தூலமிடி புண்வாத சோணிகா மாலையிரண்
டாலமிடி போம்வரிக்கா யால்.

கடுக்காய்ப் பிஞ்சுக்கு மலச்சிக்கலும், எலும்பைப்போல வெளுத்து வரா நின்ற சீதமும் நீங்கும். மூலவாயுவினால் பிறந்த முக்கலும், ஆசனக் கடுப்பும் இராது.

வனதுர்க்கிச் சேய்க்கு மணித்தயிலம் பூசி
அனலிற் பொரித்தாங் கருந்தத்—தினமுமலச்
சிக்கலக்க டுப்பநின்ற சீதமறுங் காற்றுகைத்த
முக்கலக்க டுப்பிருக்கு மோ. (அ.கு.)

**பொதுக்குணம்.**

அபஸ்மாரம், அதிமூத்திரம், அரோசகம், இருதயநோய், இரத்தபித்தம், இடிபட்டபுண், உதாவர்த்தவாதம், உதட்டுரோகம், கிரகணி, ஊருஸ்தம்பம், கண்நோய்கள், காசம், காமாலை, கிருமிநோய்கள், குன்மம், குட்டம், கைகால்எரிச்சல், கோழைஉமிழ்தல், சலக்கட்டு, சித்தப்ரமை, சிரோரோகங்கள், சுவாசம், சோணிதவாதம், சோபை, தமகசுவாசம், தந்தரோகம், தொண்டைக்கம்மல், துர்மாமிசம், நபும்ஸகம், நாவறட்சி, நாவிநோய்கள், நிறம்மாறுபடுதல், பங்குவாதம், பாண்டு, பிலீகம், பிரமேகம், மலபந்தம், ஆரம்பமகோதரம், மதயரோகம், மார்புநோய், மூத்திரகாதம், மூத்திரகிரிச்சரம், மூர்ச்சாரோகம், மூலரோகம், மேகரோகம், மேதோரோகம், வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, வாதரத்தம், வாதானுலோபனம், வாய்நீர்சுரத்தல், வாந்தி, விக்கல், விரணம், விரைவாதம், வெண்குட்டம், விடசுரம், புராணசுரம், க்ஷயம், சூலைவியாதி, இந்திரிய மார்க்கங்களிலும், மலம் முதலியவைகள் வெளிப்படவேண்டிய மார்க்கங்களிலும் அடைபடுதல் முதலிய நோய்களன்றி,

அசீரணம், அழலை, அஸ்மரி, இருமல், இளைப்பு, உள்ளங்கால்எரிவு, உட்சூடு, உன்மத்தம், உஷ்ணவாயு, கபவாதரோகம், கிரந்தி, சூலை எரிவு, குடல்புரட்டல், கைஎரிவு, தோஷம், பவுத்திரம், புகைச்சல், மண்டைப்புற்று, மண்டைக்கிரந்தி, வயிற்றுக்கட்டி, வாதரத்தம், வாய்ப்புண், முதலிய நோய்களும் தீரும்.

**கடுக்காயின் சிறப்பு.**

கடுக்காயுந் தாயுங் கருதிலொன்றென் றாலும்
கடுக்காயத் தாய்க்கதிகங் காண்நீ—கடுக்காய்நோய்
ஓட்டி யுடற்றேற்றும் உற்றஅன்னை யோசுவைகள்
ஊட்டியுடற் றேற்று முவந்து. (அ.கு.)

தாயானவள் அறுசுவை உணவையூட்டி உடலைத் தேற்றுவாள். கடுக்காயோ உடற்பிணிகளை யோட்டி உடலைத் தேற்றும். ஆகவே பிணிகளை நீக்குலல்லவோ உணவு பயன்பட்டு உடல்தேறும் என்றும் வகையறியாமல், உணவை மாத்திரம் ஊட்டுந்தன்மை யுடையவளாதலால், தாயினும் கடுக்காய் சிறந்த தெனக்கொள்க.

**கடுக்காயை உபயோகிக்கக் கூடாதவர்கள்.—**

அசீரணமுடையவர்கள், வறட்சியான ஆகாரங் கொண்டவர்கள், ஸ்திரீ போகம், மதுபானம், விஷபாதை, பசி அல்லது தாகம், உஷ்ண ரோகம் முதலியவையுடையவர்கள், அதிவழி நடந்தோர், மெலிந்தவன், இலங்கனத்தில் கஷ்டப்பட்டவன், பித்தம் அதிகரிக்கப்பட்டவன், கர்ப்பிணி, இரத்தம் வாங்கப் பெற்றவன், தாள் கட்டப்பட்டவன், ஆமசுரமுடையவன், வாய்ப்பூட்டுத் தளர்ந்தவன், தொண்டை இறுகலுள்ளவன் முதலியவர்களுக்குக் கடுக்காயை உபயோகப்படுத்தலாகா.

**வ-கு.—காயசிகிச்சையில் உபயோகப்படுத்தும்போது அனுசரிக்கவேண்டிய பொது விதி:—**

(1) அசனத்துக்குப்பின் கொள்ள அன்னத்துவேஷம் நீங்கும்.

உப்புடன் சேர்த்துண்ண—கபமும்,
சர்க்கரையுடன் ,, பித்தமும்,
நெய்யுடன் ,, வாதமும்,
வெல்லத்துடன் ,, திரிதோடமும்,
போம்.

**(2) இரசாயன சிகிச்சையில் உபயோகப்படுத்தும்போது அநுசரிக்கவேண்டிய பொது விதி—**

கார், ஊதை, முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் பருவங்களில் இதை இரசாயனமாக உபயோகப்படுத்தும்போது—

இந்துப்பு, சர்க்கரை, சுக்கு, திப்பிலி, தேன், வெல்லம் இவைகளை முறையே சேர்த்து உபயோகிக்க, அவ்வப் பருவத்தால் நேரிடும் தோடங்கள் நீங்கும்.

**வேறு வழக்கு.**

(3) கடுக்காய்த் துவையல். அரோசகத்தைப் போக்கும், மலத்தைக் கட்டும்.

(4) வெந்நீர்க் கஷாயமிட்டுக் கொடுக்க, அதி மூத்திரம், கண்ணோய் குணப்படும்.

(5) பொடி செய்து பல்துலக்க, ஈறுவலி, ஈறிலிருந்து வடியும் இரத்தம் நிற்கும். விரணம் ஆறும், பல்லிறுகும்.

(6) கடுக்காயும் காசுக்கட்டியும் சமபாகமெடுத்து அரைத்து நாக்கு விரணத்துக்குத் தடவ நன்மைதரும்.

(7) கடுக்காயின் நுண்ணிய பொடியைக் கொண்டாகிலும், கஷாயத்தைக் கொண்டாகிலும் மூலத்தின் மீது தூவ அல்லது கழுவ இரத்தம் நிற்கும்.

(8) கடுக்காய்ப் பொடியை நசியமிட இரத்தபீநசம் தீரும்.

(9) கடுக்காய்த்தோல், கிராம்பு அல்லது இலவங்கப்பட்டை வராகனெடை 1 எடுத்து $\frac{3}{4}$ ஆழாக்கு நீர்விட்டு 10 நிமிஷம் காய்ச்சி வடிகட்டி உபயோகிக்க, வயிற்றுக்கடுப்பு நீங்கும் ; வாந்தியின்றி நாலைந்து முறை பேதியாகும்.

(10) மேற்படியே நீருக்குப்பதில் பால் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்க சீதபேதி நிற்கும்.

(11) பிரதிதினமும் காலைதோறும் கடுக்காயை ஓராண்டு சாப்பிட்டுவர நரைதிரை மாறும்.

(12) பாவனைக்கடுக்காயால், அரோசகம், ஆமலபித்தம், இரத்தபித்தம், இருமல், குன்மம், சுவாசகாசம், சூலை, வயிற்றுநோய், வாந்தி, வாதநோய், மூலம், ஊழி, மந்தம், பாண்டு முதலிய நோய்கள் நீங்கும்.

(13) பச்சைக்கடுக்காயைப் பாலிலரைத்துச் சாப்பிட, இருமல், ஈளை, சீதக்கடுப்பு, புகையிருமல் நீங்கும்.

(14) கடுக்காய்ச் சமூலத்தைப் பாலிலரைத்து உட்கொள்ள, கரப்பான் குட்டம், கிரந்தி, வங்கு, சில்விடம் நீங்கும்.

(15) கடுக்காய், சுக்கு, கரியபோளம், நாபிக்கிழங்கு, அபின், கொடிவேலி, எருக்கன்வேர், வாளம், இவைகளைச் சமபாகம் எடுத்து, எருக்கன் பாலிலரைத்து அல்லது எருக்கன் பழுப்புச் சாற்றில் அரைத்துத் தடவ, பிளவை, கட்டி, பரு, அரையாப்பு, இவைகள் நீங்கும்.

(16) கடுக்காயைத் தட்டித் துணியில் முடிந்து ஆமணக்கெண்ணெயிலிட்டுச் சூரியபுடம் வைத்து, கண்ணில் பிழிய கண் அமரம் நீங்கும்.

(17) **கடுக்காய் நெய்.**—2 கழஞ்சு வீதம் தினம் இருவேளையாகக் கொடுத்துவர, வீக்கம், பித்தம், சோகை, எரியக்கினி, மந்தம் போம். மலக்கட்டு, இளைப்பு நீங்கும். பித்தவெப்புத் தீரும்.

(18) **கடுக்காய் லேகியம்.**—கடுக்காய் 100 பலம் இடித்து 2 மரக்கால் நீரிற்போட்டு $\frac{1}{8}$- ஆக வற்றவைத்து வடித்த கஷாயத்தில் 10 பலம் சர்க்கரையைக் கரைத்துப் பாகுசெய்து அதில் சிவதை, இஞ்சி, மிளகு, ஓமம்,

வாய்விளங்கம், திப்பிலி வகைக்குப் பலம் 1 எடுத்து அரைத்துப்போட்டு ஆவினெய் ஒரு படி விட்டுக்கிண்டி இலேகியஞ்செய்து வேளையொன்றுக்குப் புன்னைக்காயளவு உட்கொள்ள, அக்கினிமந்தம், சூலை, மலசலக்கட்டு, வாயு, மூலந்தீரும். கரப்பான் பதார்த்தம் தள்ளவும்.

(19) **கடுக்காய் வடகம்.**—ஒன்றிரண்டு உட்கொண்டுவர, வாந்தி, குன்மம், சுவாசகாசம், மூலம், கிராணி, அரோசகம், பாண்டு, வீக்கம், வயிற்றுவலி, சூலை, வயிற்றுளைவு, சோகை முதலியன நீங்கும்.

(20) **கடுக்காய்ச்சத்து.**—பருமனுள்ள மஞ்சட் கடுக்காயைப் பிளந்து கொட்டையை எடுத்துவிட்டு, ஒரு பெரிய வாயகன்ற ஜாடியிலிட்டு ஜலம் விட்டு ஊறவைத்து எடுக்க, ஜலமானது கடுக்காயின் நிறம் பெற்றிருக்கும். பிறகு, ஜலத்தை வடிகட்டி எடுத்து வெயிலில் நாடோறும் வைத்துச்சுண்ட வைக்கக் குழம்பாகி கரியபோளத்தையொத்து நிற்கும். 2 முதல் $2\frac{1}{2}$ வராகனெடை தேக பலத்துக்குத் தக்கபடி கொடுத்துவரப் பேதியாகி பழமலங்களும் வெளிப்படும், இரைப்பையும் பலப்படும். பாண்டு ரோகந் தீரும். இத்துடன் காந்தச்செந்தூரத்தைச் சேர்த்துக் கொடுத்துவரலாம். இச்சத்தை ஒரு நாள் விட்டு ஒரு நாள்கொடுத்துவருவது உத்தமம்.

(21) **செங்கடுக்காய் லேகியம்.**—இதில், செங்கடுக்காயைக் கொட்டை போக்கி, 10 முறை நீரில் ஊறவைத்துப் பிசைந்தெடுத்து வெயிலில் உலர்த்தி யெடுத்துக்கொண்டு, பிற்பாடு பழங்காடியில் முன்போல் பிசைந்தெடுத்து நீர் வற்றக் காயப்போட்டு, பிறகு எலுமிச்சம் பழச்சாற்றில் பிசைந்துருட்டி வெயிலில் காயப்போட்டுப்பொடித்து பீங்கானிலிட்டு, பழச்சாறுவிட்டு நிதானமாய் உப்புச்சேர்த்து உலர்த்தியிடித்து மேலும், பழச்சாறு விட்டுப் பதப்படுத்தி நிழலிலுலர்த்தி பரணியிலடக்கம் பண்ணி, பணவெடை வீதம் ஒரு மண்டலம் கொள்ள :—

சீதம் போம், மலம் தங்கா, வாதநீர், பித்தநீர், கபநீர் நீங்கும், நரைதிரைமாறும், காயசித்தியுண்டாகும்.

முற்கூறிய பிரயோகங்களன்றி, கடுக்காய்க் கஷாயம், கடுக்காய்த் தித்திப்பு, பாவனைக்கடுக்காய், கடுக்காய் நெய் முதலிய செய்முறைகளுமுள.

---

## கட்டுக்கொடி. Kattukodi.

### Cocculus Villosus.

| | | | |
|---|---|---|---|
| Te. | Dusari - tiga. దూసరి తీగ | Sans. | Jaljamni. जलजाम्नी<br>Vasanavalli. वसनवल्ली<br>Vanatik-tika. वनतिक्तिका |
| Mal. | Kattukodi. കട്ടുക്കൊടി. | | |
| Kan. | Dagada. ದಗಡ.<br>Katte-tige. ಕಟ್ಟೆ ತೀಗೆ. | Hind. | Faridbale. * فرید بیل<br>Jamtiki - bel. جامتیکی بیل *<br>Jamtika - patta. جامتیکا پتا * |



இது இந்தியாவில் உஷ்ணப் பிரதேசங்களில் வளரும் ஒருவிதக் கொடியினத்தைச் சேர்ந்தது. இதில் **சிறுகட்டுக்கொடி பெருங்கட்டுக்கொடி** என இரு பிரிவு உண்டு.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—சிறுகட்டுக் கொடியால், சீதரத்தமும், மேகநீர்ப்பெருக்கும், நீங்கும்.

பெருங்கட்டுக் கொடியால் பெரும்பாடும் மலக்கழிச்சலும் நீங்கும். மேலும், நீர் எரிச்சலும் நாட்பட்ட வாதரோகம், பித்த குன்மம் முதலியனவும் சாந்தமாம்.

பெரியகட் டுக்கொடிக்குப் பேசுபெரும் பாடும்
அரியமல பேதியும்போ மப்பால்—உரிய
சிறுத்தகட் டுக்கொடிதான் சீதரத்தம் நீக்கும்
இறுத்தபுன லைக்கட்டு மெண். (அ.கு.)

**வ - கு.**—இதன் இலைச்சாற்றைப் பிழிந்து நீரில் விட்டால் நீர் வெண்ணெய் போல் கட்டுப்படும். அதைச் சரும சம்பந்தமான நீர்க் கசிவுக்ும் கரப்பான் முதலிய நோய்களுக்குமிட சுகந்தரும்.

இலைச்சாற்ரேடு சருக்கரை கலந்து பிரமேகத்துக்குக் கொடுக்க, நீர் எரிச்சல், நீர் பாயும்போது குத்தல் முதலியவை தீரும்.

வேர் 1 பங்கு, நீர் 10 பங்கு எடுத்துக் கஷாயமிட்டு ¼ முதல் ½ ஆழாக்கு வீதம் நாட்பட்ட வாதரோகத்துக்குக் கொடுத்துவரலாம்.

இத்துடன் சிறிது இஞ்சிச்சாறும் சருக்கரையும் சேர்த்துப் பித்த குன்மத்துக்குக் கொடுத்துவரலாம்.

---

## கணப்பூண்டு—Kaṇap-púṇdu.

### Exacum Pedunculatum.

இது இந்தியா முற்றிலும் பயிராகும். பூ உதிர்ந்தவுடனே இதைச் சேகரிப்பது உத்தமம்.

**ப - உ.**—இலை

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதனுல் மேகக்கட்டிகரையும், வாத பித்தகணங்களும் கபசுரமும் போம்.

கணப்பூண் டிலைமேகக் கட்டியைக்க ரைக்கும்
மணக்குமிக வாய்க்கு மதுரஞ்—சிணுக்கான
வாதகணம் பித்தகணம் மாற்றுங் கபசுரத்தின்
பேதமறப் போக்குமெனப் பேசு. (அ.கு.)

**வ - கு.**—பச்சையிலையை அரைத்துக் கட்டிகளின்மீதுவைத்துக் கட்ட, கட்டி கரையும்.

உலர்ந்த இலையில் வேளைக்குக் கால்பலமெடுத்துக் குடிநீர் செய்து கொடுக்கக் கபசுரம், வாத—பித்த கணம் தீரும்.

## கண்டங்கத்தரி—Kandangkattari.

**Solanum Jacquini.**

**Eng.** Wild eggs plant; Bitter-sweet woody nightshade.

**Tel.** Nela Mulaka - Vakudu.
నేలములక వాకుడు.

**Māl.** Vellottuvālutina.
വെള്ളോട്ടുവഴുതിന.
Kantānkāth- thiri.
കണ്ടങ്കത്തിരി.

**Kan.** Nela - gulla. ನೆಲಗುಳ್ಳ.

**Sans.** Kanta - karika.
कण्टकारिका
Nidegdhika निदिग्धिका

**Arab.** Hadaka. هدَكا *

**Pers.** Badinjan - i - bari.
بدنجان بحری *

**Hind.** Kateli. كتالی *
Bhat katai.* بهٹ كٹائی

இது செடி வருக்கத்தைச் சேர்ந்தது. எல்லாவிடங்களிலும் கிடைக்கும். முக்கியமாய்க் கிழக்கு, மேற்குக் கரையோரங்களில் ஏராளமாய் வளரும்.

**ப - உ.**—இலை, பூ, காய், பழம், விதை, வேர், சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminativo.
**விதை.**
மலநீராக்கி - ஜலவ்ரேசநி - Hydragogue.

**குணம்.**—காசம், சுவாசம், க்ஷயம், அக்கினிமந்தம், தீச்சுரம், சந்நி வாதம், 7 வகைத் தோடங்கள், வாதரோகம் ஆகியவை போம்.

காசசு வாசங்க தித்தக்ஷய மந்தமலல்
வீசுசுரஞ் சந்நி விளைதோடம்—ஆசுறுங்கால்
இத்தரையு ணிற்கா எரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரியுண் டாமாகிற் காண். (அ.கு.)

**காய்.**

இதனால், ஐயப்பிணி தீரும்; மேலும் சீதங்கலந்த மலத்தை வெளிப் படுத்தி, பசியைத் தூண்டும்.

ஐயமறுந் தீபனமாம் ஆமமலக் கட்டுகளும்
பையவெளி யாகிவிடும் பார்மீதிற்—செய்யமலர்த்
தொத்திருக்கும் வார்குழலே! தூமணலா ருங்கண்டங்
கத்தரிக்கா யைப்புசிக்குங் கால். (அ.கு.)

**பழம்.**

இது, இருமல், சுவாசம், க்ஷயம், கபம், பல்லரணை, புடை, நமை, இவைகளைப் போக்கும். பலத்தையும் பசியையுமுண்டாக்கும்.

காசஞ் சுவாசங் கயஞ்சீதம் பல்லரணை
வீசு சொறிதினவை விட்டோட்டும்—பேசுடலை
உத்தரிக்குந் தீபனத்தை யுண்டாக்கி டுங்கண்டங்
கத்தரிப்ப மூக்குணத்தைக் காண்.

**சமூலம்.**

நீரேற்றம், சலப்பீநசம், ஈளை (கயம்), சுவாசம் இவை போம்.

வேரிலைபூ காய்பழமவ் வித்துமதன் பட்டையுமிவ்
வூரி லிருக்க உடற்கனப்பும்—நீராய்
வரும்பீந சங்கயஞ்சு வாசமுந்தங் காதே
அருங்கண்டங் கத்தரியு ளார். (அ.கு.)

**இலை.**

**வ - கு.**—இதன் இலைச்சாற்றில் அல்லது கஷாயத்தில் எண்ணெய் கலந்து காய்ச்சிப் பூசிவர, தலைவலி, கீல்வாதம், அக்குள் நாற்றம் முதலியவை நீங்கும்.

இதன் இலைரசத்தில், ஆளிவிதைநெய் சேர்த்துக் காய்ச்சி, வெடிப்புகளிற்பூச, அவை வெகு சீக்கிரத்தில் மாறும்.

**பூ.**

**வ - கு.**—இதன் பூவை வாதுமை நெய்யில் சேர்த்துக் காய்ச்சிப் பூச மூலரோகங்களைப் போக்கும்.

**பழம்.**

**வ - கு.**—இதன் பழத்தைக் குழைய வேகவைத்துக் கடைந்து வடிகட்டி எடுத்த அளவு 4-க்கு ஒன்று செய்த்தூன் எண்ணெய் சேர்த்துக்காய்ச்சிக் கடுகு திரள வடித்து வைத்துக்கொண்டு, வெண்குட்டத்தின்மீது பூசிவர, வெண்மை மறைந்து தேகநிற முண்டாகும்.

மேற்படி அளவாகவே சுரைவித்தெண்ணெயில் சேர்த்துக்காய்ச்சிக் காதுக்குள்விட, காதுவலி தீரும்.

**விதை.**

**வ - கு.**—இதன் விதைகளை எரித்து, அதனின்று எழுகின்ற புகையைப் பிடிக்க, பல்வலி நீங்கும். புழுக்கள் சாகும்.

**வேர்.**

**வ - கு.**—இதன் வேரை முறைப்படிக் கஷாயமிட்டு, அதில் திப்பிலிச்சூரணமும் தேனும் சேர்த்துக்கொடுக்க இருமல், நீர்தோஷம் முதலியன சுகமாகும்.

---

## கண்டில் வெண்ணெய்—Kaṉdil Veṉṉei.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant. / கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant. }

**குணம்.**—கண்டில் வெண்ணெய்க்கு, நெஞ்சிற் கபக்கட்டு, காசம், மூத்திரக்கிரிச்சரம், சூதகச்சூலை நீங்கும். தேகங் காந்தி பெறும்.

கண்டில்வெண்ணெய் மாதே ! கேள் காந்திப்பிர தாபமுமாந்
தொண்டையினுள் நீர்க்கட்டு தூரிருமல்—மிண்டிவரும்
நீர்க்கடுப்பு மூலத்துள் நீர்க்குத்த லும்போக்கும்
பார்க்கு ளறியப் பகர். (அ.கு.)

**வ - கு.**—இதில் ஒன்று அல்லது இரண்டு குன்றியெடை, நாள் ஒன்றுக்கு இருவேளையுமாகக் கொள்ள, மேற்குறித்த நோய்கள் தீரும்.

## கண்டுபாரங்கி—Kaṇḍupàrangi.

வெ - பெ.—சிறுதேக்கு.

Clerodendon Serratifolium.

Tel. Gantu Bharangi గంటు భారంగి.
Mal. Cherutekka ചെറുതേക്ക്.
Kan. Bharangi. ಭಾರಂಗೀ.
Sans. Bharngi. भार्ङ्गी / Barbara बर्बर:
Hind. Gant - Bharangi. گانٹ بھرنجی *

இது இந்தியாவில் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகும்.

ப - உ.—இலே, வேர்.

**சுவை**.—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை**. { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
தாதுவெப்பகற்றி - சமநகாரி - Sedative.

**குணம்**.—இதனுல் முத்தோடக் குற்றம், சுவாசகாசம், ருட்சை, பயித்தியம், சுரசாதம், நாசிநோய், சலதோடம், முன்நீர்க்கோவை, பின்நீர்க்கோவை, புச்சாவர்த்தவாதம், குளிர்சுரம், உடல்வலி, உட்காந்தல், மனச்சங்கடம் தீரும்.

கண்டுபா ரங்கியெனுஞ் சிறுதேக் குண்டேல்
காலெங்கே பித்தமெங்கே கபந்தா னெங்கே
தொண்டுதொட்டுத் தொடர்சுவாச காச மெங்கே
சுரமெங்கே வெறியெங்கே தொனிநோ யெங்கே
மிண்டுபுரி பீநசநீர்க் கோவை யெங்கே
வெளிநீருண் ணீரெங்கே விறற்கா லெங்கே
அண்டுபடாச் சீதசுரங் கடுப்பு மெங்கே
யழலேயக நோயெங்கே யறைகு வீரே ! (தே.கு.)

**அளவு**.—½ முதல் 1 வராகனெடை.

### இலை.

**வ - கு**.—இலையை அரைத்து வீக்கம், கட்டி முதலியவைகளுக்குப் பற்றிட, அவை பழுத்து உடையும்.

இலையைத் திரிபலைக் கஷாயத்தில் அரைத்து மேற்படி நோய்களுக்குப் பற்றிடலாம்.

### வேர்.

இதன் வேர்ச்சூரணம், சுக்குத்தூள் இவைகளைச் சமஎடை எடுத்துத் தேனிற் கலந்து கொடுக்கச் சுவாசகாசம் தீரும்.

இதைக் கால்பலமெடுத்துச் சிதைத்துக் குடிநீரிட்டு வடிகட்டி அதில் சிறிது கோரோசனம் சேர்த்துக் கொடுத்துவர, குணத்தின்கீழ்கண்ட நோய்களைப் போக்கும்.

## கத்தக்காம்பு—Kath-thak-kàmbu.

வே. - பெ.—ஒதலைமரம், ஒதளைமரம், கத்தக்காம்பு.

Nauclea aculeata ; Uncaria Gambier.

Eng.—Gambier.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kanchu | కాంచు. | Hind. | Katthá | * کتھا |
| Mal. | Kátta | കാത്ത. | | Kath | * کاث |
| | Gambier | ഗാമ്പിയർ. | | Kát | کاٹ |
| Kan. | Káchu | ಕಾಚು. | Duk. | Katthah | * کتھا |
| Sans. | Khadira-saram | खदिरसारम् | | | |

இது, ஒதலைமரத்தின் இலைகளிலிருந்து எடுக்கப்படுகிற ஓர்விதச் சத்து. இம்மரம் கீழ்த்தீவுகளில் ஏராளமாயுண்டு. இது **காசுக்கட்டி** இனத்தைச் சேர்ந்ததே. இவ்வினத்தில் **கறுப்பு, சிவப்பு, வெளுப்பு** என மூன்று சாதிகளுண்டு. அதில் வெளுப்பு என்பதே **கத்தக்காம்பு** எனப் பெயர் பெற்றுளது (White catechu).

**சுவை.**—சிறுகைப்பு - துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—அசீரணபேதி, சீதபேதி, ஈறுவீக்கம், பல்லரணை, பல்வலி, இரசவேகம், தொண்டைப்புண், தொண்டைக்கம்மல், நாள்பட்டவிரணம் முதலியன தீரும்.

**வ - கு.**—கத்தக்காம்புத்தூள், கருவாப்பட்டைத்தூள் வகைக்கு 2 வராகனெடை, சாதிக்காய்த்தூள் ½ வராகனெடை கலந்து வேளைக்கு 10–15 குன்றி வீதம் 3, 4 மணிக்கொருதரம், தேனில் கலந்து உட்கொள்ள அசீரணபேதி குணமாகும்.

கத்தக்காம்புத்தூள் 1 குன்றி, கருவாப்பட்டைத்தூள் 1½ குன்றி சேர்த்துக் கலந்து 6 மணிக்கு ஒரு தடவை கொடுத்துவர, குழந்தைகட் குண்டாகும் சுரத்தோடுகூடிய அசீரணபேதி குணமாகும்.

கத்தக்காம்பு 3 வராகனெடை, கருவாப்பட்டைத்தூள் 1 வராகனெடை, வெந்நீர் ½ படி விட்டு ஊறவைத்து வடிகட்டி, ¼ ஆழாக்கு வீதம் தினம் 3 வேளை அசீரண பேதிக்குக் கொடுக்கலாம்.

இதை வாயிலிட்டு மென்றுவர ஈறுவீக்கம், தந்தரோகம், தந்த வேதனை, இரசவேகம் முதலியன நீங்கும்.

இதை மெழுகு அல்லது களிம்பாகச் செய்து, துருசுத்தூள் சேர்த்து விரணங்களின்மீது துணியில் தடவிப் போட்டுவர விரணம் ஆறும்.

## கத்தரி—Kath-thari.

**வே. - பெ.—வழுதலை, வழுதுணை.**

Solanum, Melongena.

**Eng.—Egg plant, Brinjal.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Vankaya వంకాయ. | **Sans.** | Vartakam वार्ताकम् / Peetaphalam पीतफलम् |
| **Mal.** | Valutina വഴുതിന. / Mulakutakali മുളകുതക്കാളി. | **Pers.** | Badangan * بدنگن |
| | | **Urdu.** | Baigan * بیگن |
| **Kan.** | Badanekayi ಬದನೆಕಾಯಿ. | **Hind** | Bhanta * بھنٹا |
| | | **Duk.** | Bhanta * بھنٹا |

இந்தியா முழுவதும் பயிரிடப்படுகின்ற ஒருவகைச்செடி. இதில் அநேக சாதிகளுண்டு.

**பப்பறமுள்ளி** { **ஆகாசக்கத்திரி** (Hibiscus Longifolius) 2 வகை அவை :—
சிறு ஆகாசக் கத்தரி
பெரு ஆகாசக் கத்தரி

**கண்டங்கத்தரி** (Solanum Jacquini) நிற்க,
**காறல்கத்தரி** - (Solanum Insanum)
**கத்தரிநாயகம்** - (Veronia) [யானைச்சீரகம்].
**கொத்துக்கத்தரி** - (Solanum Stramoni folium).
**சிறுவழுதலை** (முள்ளி) [Solanum Ind].

வழுதுணையில் மூன்றுவகை :—(1) கருப்புவழுதுணை, (2) பருவழுதுணை, (3) சிறுவழுதுணை. இது தச அல்லது சிறு பஞ்சமூலத்தொன்று.

**ப - உ.**—இலை, பிஞ்சு, காய், பழம், வித்து, வேர்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உறக்கமுண்டாக்கி - நித்ராகாரி - Hypnotic.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**பிஞ்சு.**

**குணம்.**—பிஞ்சு திரிதோடத்தை விலக்கும். ஆனால் புடையையும் கிரந்தியையும் அதிகப்படுத்தும். பத்தியத்துக்கு உதவும்.

**காய்.**

பித்தத்தால் வந்த கபத்தைப் போக்கும். ஆறிய கரப்பான், புடை, சொறி, சிரங்கு இவைகளை விளைவிக்கும். மேகஊரலை அதிகப்படுத்தும்.

பண்டுமாண்ட கிரந்தியைப் பாலிக்கும்
உண்டகைக்குந் தினவை யுண்டாக்கிடும்
நண்டுகட்டுங் குரங்கென நாளுமாங்
கண்டுவிட்டது கத்தரிக் காயதே. (தே.கு.)

கத்தரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடும்
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடும்—மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுத்தோ டம்போக்கும்
மஞ்சார் குழலே! வழுத்து. (அ.கு.)

**பழம்.**

இரைப்பு, கோழை, வாததோடம் இவைகள் நீங்கும். கரப்பான், பித்தரோகம், குட்டம், பெருவிரணம், சுக்கிலநட்டம், தேக அனல் இவைகளையுண்டாக்கும்.

பித்தங் கரப்பான் பெருங்கிரந்தி குட்டமிவை
மெத்தவுமா மெய்யிலழல் வீறுங்காண்—சத்தான
தாதுநட்ட மாங்கபங்காற் சார்ந்தசு வாசமும்போம்
ஓதுகத்த ரிப்பழத்தா லுன். (அ.கு.)

**வேர்.**

கபம், வாதம் இவை சம்பந்தமான ரோகங்களை நிவர்த்திக்கும்.

**வ - கு.**—இலையை மூத்திரபேதிக்குடிநீரிற் சேர்த்துக்கொள்ளலாம். இலைக்கு நித்திராகாரிச் செய்கையுண்டு.

**பிஞ்சு, காய்.**

**வ - கு.**—இவைகளைச் சமைத்தும் வற்றலிட்டு வறுத்தும் உண்ணலாம்.

**பழம்.**

**வ - கு.**—கும்பியில் வெதுப்பியாகிலும், சுட்டாகிலும் மாடுகளின் வயிற்று வலிக்கும், மலப்பூச்சிகள் வெளிப்படவும் கொடுப்பது வழக்கம்.

இலிங்கத்தைப் பழத்துக்குள் வைத்து மூன்று சீலைமண் செய்து காடைப் புடமிடவும். இப்படி 100 புடமிட இலிங்கம் கட்டுப்படும்.

சுட்டபழம், சீரணசக்தியை யுண்டாக்கும். மலபேதியாகும். பித்தத் தைத் தணிக்கும். வாயுவைக் குறைக்கும்.

ஊசியினால் பழத்தைப் பல இடங்களில் குத்தி நல்லெண்ணெயில் வறுத்துப் பல்வலி ரோகத்துக்குக் கொடுக்கத் தீரும்.

வலப்பாட்டைரல் வியாதிகளுக்கு இது ஒரு முக்கிய ஔஷதமாகும்.

**விதை.**

உஷ்ணகாரிச்செய்கை யுடையது. மலக்கட்டு, குன்மம் முதலிய வியாதி களை உண்டுசெய்யும்.

**வேர்.**

கபம், வாதம் இவைகளின் சம்பந்தமான ரோகங்களை நிவர்த்தி செய்யுந் தைலங்களில் சேரும்.

---

## கத்தூரிமஞ்சள்—Kat-túri Manjal.

**வே - பெ.—கத்தூரிமஞ்சள், கஸ்தூரிமஞ்சள்.**

Curcuma Aromatica, Curcuma Zedoaria.

Eng.—The Round Zeodary

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kastúri-pasupu కస్తూరి పసుపు. | Sans. | Kastoori Nisa कस्तूरीनेशा |
| Mal. | Kastúri-Mannal കസ്തൂരി മഞ്ഞൾ; Anakuva ആനക്കുവ. Kattu-Manjal കാട്ടുമഞ്ഞൾ. | Hind. | Gandamasti * گندہ مستی; Kachur * کچور; Jangli-haldi * جنگلی ہلدی |
| Kan. | Kastūri-arishiná ಕಸ್ತೂರಿ ಅರಿಸಿನ. | Duk. | Katchoor * کچور |
| | | Urdu. | Amba - Huldi * آنبہ ہلدی |

இந்தியாவின் பல இடங்களிலும் பயிராகிற ஓர்விதச் செடியின் கிழங்கு.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—பெருவிரணம், கரப்பான், கிருமிரோகம், அக்கினிமந்தம் இவைபோம் ; வீரியமும், அறிவும் விருத்தியாகும்.

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமந் தாக்கினியு நாசமாம்—வண்ணமலர்த்
தொத்தே றளகமின்னே ! சுக்கிலமும் புந்தியுமாங்
கஸ்தூரி மஞ்சளுக்குக் காண். (அ.கு.)

**வ - கு.**—இதை அரைத்துத் தேய்த்துக்குளிக்கக் கரப்பான், கிருமி ரோகம், பெருவிரணம், மாந்தக்கினி இவை போம்.

எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தேகவலி முதலிய நோய்களுக்கும் அடி பட்ட நோய்களுக்கும் மேலுக்குத் தேய்க்கலாம்.

இதன் தூள் 5, 8 குன்றி வரை உள்ளுக்குக் கொடுத்துவர, வயிற்று நோய், குன்மம் முதலிய நோய்கள் சாந்தியாகும்.

வாசனைத்திரவியங்களோடும், தைலவர்க்கங்களோடும் இதைச் சேர்ப்பது வழக்கம்.

---

## கமுகு—Kamuku.

**வே.—பெ.—பாக்கு மரம்.**

Areca, Catechu.

Eng.—Betel-nut-palm or areca-nut-palm.

**Tel.** Poka-Vakka పోకవక్క.

**Mal.** Kazhunga കഴുങ്ങ്.

**Kan.** Adike ಅಡಿಕೆ.

Sans. { Kramuka क्रमुकम्
Pooga पूगम्

**Hind.** Dharrakhthāi-Supari
درخت سپاری *

இது இந்தியாவின் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகும் ஒரு மரம். மைசூர், கன்னடம், மலையாளம் முதலிய இடங்களில் ஏராளமாயுண்டு. இதன் விதைக்குப் **பாக்கு** என்று பெயர்.

**ப - உ.**—இளங்குருத்து, விதை, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
சாயமேற்றி - Taenifuge.

**குணம்.**—அசீரணபேதி, மூத்திரசம்பந்தமான வியாதிகள், மலக்கிருமி ரோகம், தந்தநோய், ஈறுநோய், ஸ்திரீகளுக்குண்டாகும் மேகவெள்ளை முதலியன தீரும்.

### இளங்குருத்து.

வ - கு.—இளங்குருத்தை எண்ணெயிலிட்டு வதக்கி, வாதவலிக்கு வைத்துக் கட்டலாம்.

### இளம்பிஞ்சு.

இளம்பிஞ்சுப்பாக்கு வயிற்றுநோய்களுக்கு ஏற்றது.

### பாக்கு.

வெற்றிலை தின்பவர்களுக்கு இன்றியமையாதது.

பாக்கை உலர்த்திப் பொடித்து அதில் 3 முதல் 6 வராகனெடை எடுத்துச் சருக்கரை சேர்த்துச் சாப்பிட அசீரணபேதி, மூத்திரசம்பந்த வியாதிகள் முதலியன தீரும்.

மேற்படி தூளையே ¼ தோலா எடுத்து 2 தோலா பழச்சாறுவிட்டு மத்தித்து உள்ளுக்குக் கொடுக்க, மலக்கிருமிகள் வெளியாகும்.

½ முதல் ¾ பலம் பொடியை அரையாழாக்கு ஆவின்பாலில் கலக்கிக் கொடுக்க, ஒருமணி நேரம் கழித்துத் தட்டைப்புழு (Tape worm) வெளியாகும்.

பாக்கை முறைப்படிக் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவர, பல்லீறலிலுண்டாகும் வியாதிகள் தீரும்.

இதையே ஸ்திரீகளுக்குப் பீச்சாங்குழலால் யோனிக்குள் பீச்சிவர, வெள்ளை முதலிய வியாதிகள் தீரும்.

கொட்டையைச் சுட்டுச் சாம்பலாக்கிச் சமவெடை காசுக்கட்டியும், இலவங்கமும் பொடிசெய்து பல் துலக்கி வரலாம்.

### வேர்.

வேரைக் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவர, உதடு சம்பந்தமான புண்களும், ஈறு சம்பந்தவியாதிகளும் தீரும்.

---

## கமேலா—Kamela.

**வே. - பெ.—கபிலா, கமலா, கம்பில்லம்.**

Mallotus, Phillippiensis.

Eng. —Monkey face tree.

Tel. Kamela. కమెల.

Mal. Kampillam കമ്പില്ലം.

Kan. { Vasare ವಸರೆ. / Chandrahittu ಚಂದ್ರಹಿಟ್ಟು.

Sans. { Kampilla कम्पिल्ल / Kambha कम्भा

Hind. Kamala * كميلا

Duk. Kameela * كميلا

இது ஒரு வகைமரத்தின் பழங்களின்மீது படிந்திருக்கும் சிவந்த பொடி. இந்தப் பொடியைக் **கமேலாப்பொடி, கபிலப்பொடி** அல்லது **கம்பில்லம்** எனக் கூறுவார்கள்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பெருமலம்போக்கி - விரேசனகாரி - Cathartic.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- கற்கரைச்சி - பாஷாணபேதநி - Lithontriptic.

**குணம்.**—சர்மரோகங்கள், மலக்கிருமிகள் இவைகளைப் போக்கும்.

வ - கு.—6 குன்றி கமேலாப்பொடியைத் தேனிலேனும் சருக்கரைப் பாகிலேனும் கலந்து இரவில் படுக்கைக்குப் போகும்போது சாப்பிட்டு, மறு நாட் காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட வயிற்றுக்கிருமிகள் விழும்.

கமேலாப் பொடி 1 பங்கு, எண்ணெய் 8 பங்கு சேர்த்துக் காய்ச்சி மேலுக்குத்தடவிவர, சிரங்கு, படை முதலிய சருமநோய்கள் தீரும்.

---

## கம்பளிப் பூச்சிச்செடி—Kambalip-pútchi-chedi.

**வே - பெ.—முசுக்கட்டைச்செடி.**

Morus Nigra or M. Indica

Eng.—Mulberry.

Tel. { Kambali - chettu కంబాలి చెట్టు, Kambali-ghutthi-chettu కంబాలి గుత్తి చెట్టు.

Kan. Hippal-Nerali-gida ಹಿಪ್ಪಲ್ ನೇರಳೆಗಿಡ.

Sans. { Toola तूल. Tooda तूड.

Hind. { Tut * توت Shetuta * شہتوت

Duk. Tutri *توتری

இச்செடி இந்தியாவில் குளிர்ச்சியுள்ள பிரதேசங்களில் சாதாரண மாயும், மற்ற இடங்களில் அபூர்வமாயும் வளருகின்றது. பட்டுப்புழு இதனிலையைத் தின்று வளருகின்றது.

**ப - உ.**—இலை, பழம்.

**சுவை.**—புளிப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு, கார்ப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant. மலநீராக்கி - ஜலவ்ரேசநி - Hydrogogue.

**குணம்.**—மலத்தை வெளிப்படுத்தும், சுரத்தைத் தணிக்கும், தாகத் தைப்போக்கும், தொண்டை வறட்சியை நீக்கும், இருமலைத் தடுக்கும்.

**வ - கு.**—இதன் பழத்தைப் பாகுசெய்து சுரரோகிகளுக்குப் புளிப்பான பானமாகக் கொடுக்கலாம்.

மருந்துகளுக்கு இதன் பழச்சாற்றைச் சாயமேற்ற உபயோகிக்கலாம்.

இம்மரத்தின் இலையையும், வேப்பிலையையும், ஒன்றிரண்டு சிறு வெங்காயத்தையும் சேர்த்து அரைத்துப் படுக்கைவிரணங்களுக்குப் போட அவை சுகமாகும்.

இதைத் தீம்பானமாகச் செய்து இருமல் முதலிய தொண்டை வியாதி களைப் போக்க உபயோகப்படுத்தலாம்.

---

## கம்பு—Kambu.

Holcus spicatus, Feleuscine Stricta.

Eng.—A kind of grain.

Tel. Sajjalu సజ్జలు. | Mal. Kambu കമ്പ്.

இது தானிய வகையைச் சேர்ந்தது.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** உரமாக்கி - பலகாரி - Tonic.

**கம்பு அரிசி.**

**குணம்.**—சொறிசிரங்கு இவற்றை யுண்டாக்கும். உடற் கொதிப்பை யகற்றிக் குளிர்ச்சியைத் தரும், தேகத்துக்குப் பலத்தை யூட்டும்.

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவர்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்—வெம்பும்
உடலின் கொதிப்பகற்றும் உட்பலமுண் டாக்கும்
அடலயிற்கண் மாதே! யறி. (அ.கு.)

**கம்பஞ்சாதம்.**

இதனால் காசம், சுவாசம், சிரங்கு முதலியவை அதிகரிக்கும். உடல் பாரிக்கும். தேகத்திலுள்ள இரத்தம் வற்றி அதன் நிறம் மாறும்.

கம்பினது சாதத்தாற் காசசுவா சஞ்சிரங்கும்
பம்பும் உடலமிகப் பாரிக்குஞ்—செம்பாலோ
வற்றுவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்றுமுலை மாதே! மொழி. (அ.கு.)

**வ - கு.**—கம்பரிசிக்கூழில் சிறிது ஆவின் தயிராவது, மோராவது கூட்டிக் காலைதோறும் பருகிவரின் குலையெரிவு சாந்தமாகும்.

கம்பைச் சமைத்து எருமைத்தயிர் விட்டுப்பிசைந்து முளைமூலத்துக்குக் கட்டிவரக் குணமுண்டாகும்.

---

## கரந்தை—Karanthai.

இது இந்தியாவில் எங்கும் பயிராகும். கரந்தையில் பலவிதமுண்டு. அவையாவன :—

1 குத்துக்கரந்தை - Erigeron obliquum.
2 கொட்டைக்கரந்தை (விஷ்ணுகரந்தை) } Sphœranthus Indicus or Hirtus.
3 சிறுகொட்டைக் கரந்தை - Ethulia Divaricata.
4 சிவகரந்தை (நறுங்கரந்தை) } Sphœranthus Zeylanicus Nob.
5 சுணைக்கரந்தை - Ocimum Pilosum.
6 சுரைக்கரந்தை - Sphœranthus Zeylanicus Nob.
7 சூரியக்கரந்தை

கொட்டைக் கரந்தை ஏகதேசம் சிவகரந்தைக்கு ஒப்பெனினும், வாசனையில் சிவகரந்தை சிறப்புடையது.

இவைகளில் கொட்டைக்கரந்தை, சிவகரந்தை இவ்விரண்டும் மருந்து வகைகளிற் சிறந்தது. இவைகளே சாதாரணமாய் மருந்துகளில் உபயோகப்படும்.

---

## கொட்டைக்கரந்தை—Kottaik-karanthai.

**Sphœranthus Hirtus.**

**Eng.—East Indian Globe Thistle.**

**Tel.** Bòda-taramu బోడతరము.

**Mal.** { Mìnàngannì മീനാങ്ങണ്ണി. Atakka-maniyan അടക്കാ മണിയൻ. }

**Kan.** Karandagida ಕರಂಡಗಿಡ.

**Sans.** Mundi मुण्डि

**Arab.** Kamàriyùn * كماذر يعون

**Pers.** Kamàdàrithùs * كمادر ذطوس

**Hind.** Mundi * منڈی

சாதாரணமாக வயல் நிலங்களிலும் தோட்டங்களிலும் வளர்ந்து இடக்கும். இம்மூலிகை தென்னிந்தியாவிற்கே உரியது. இதிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கின்றார்கள். இதில் **வெண்மை, செம்மை** என இரண்டு பிரிவுகளுண்டு.

**ப - உ.**—இலை, பூ, விதை, வேர், வேர்ப்பட்டை.

**சுவை.**—கைப்பு, **விரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை, பூ.**
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**விதை, வேர்.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**விசேஷ செய்கை.**
தூய்மையாக்கி - Depurative.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனால் ஒழுக்குப் பிரமேகம், வெள்ளை, கரப்பான், சொறி, சிரங்கு இவை தீருவதன்றி மறிபட்ட மலமும் இறங்கும். மேலும் வாதம், பயித்தியம், சிலேப்பு முதலியவையும் ஒழியும், சர்மரோகமும் போம்.

கொட்டைக்க ரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியுமதி மேகம்போந்—துட்டச்
சொறிசிரங்கு வன்கரப்பான் றேற்றுது நாளும்
மறிமலமுந் தானிறங்கு மால். (அ.கு.)

**சமூலம்.**

**வ - கு.**—மேற்கூறிய நோய்களுக்கு இதன் சமூலத்தை உலர்த்திச் சூரணஞ்செய்து வேளைக்கு 1 வராகனெடை சாப்பிட்டு வரலாம். அல்லது இதன் கிழங்கைக் கஷாயமிட்டு சாப்பிட்டுவரலாம்.

**இலை.**

இலையை நிழலிலுலர்த்திச் சூரணஞ்செய்து வேளைக்கு $\frac{1}{4}$ வராகனெடை வீதம், தினம் இருவேளை கொடுத்துவர, சரும நோய்கள் தீரும். தாது பலப்படும்.

**பூ.**

மேற்கூறியபடி சூரணித்துக்கொடுக்க உரமாக்கியாக உபயோகப்படுவதன்றி தேகத்துக்குக் குளிர்ச்சியையும் உண்டுபண்ணும்.

**விதை.**

விதையைச் சூரணித்துத் தேனிற்கலந்து கொடுக்க, அஜீரணம், இருமல், தீருவதுமன்றி மலக்கிருமிகளும் வெளிப்படும்.

**வேர்.**

வேர்ச்சூரணத்தை $\frac{1}{2}$ வராகனெடை கொடுக்க, மலக்கிருமிகளைக் கொல்லும்.

**வேர்ப்பட்டை.**

இதை அரைத்து வெண்ணெயிற் கலந்துகொடுக்க இரத்தமூலம் சுகப்படும். இதையே அரைத்து வெளிப்பிரயோகமாக உபயோகிக்கலாம்.

நல்லெண்ணெயுடன் சமபாகம் கலந்து $\frac{1}{2}$ முதல் 1 உச்சிக்கரண்டி வீதம் ஒருமண்டலம் சாப்பிட்டுவர, தேகம் பலக்கும், தாது பெருகும்.

## சிவகரந்தை—Siva - karanthai.

**வே - பெ.**—நறுங்கரந்தை.

Sphœranthus Zeylanicus.

Tel. Bodatharamu బోడతరము.

Sans. Hapushā हपुषा

Arab. Kamaphilusa * كمافيلوسا ; Kamafitùs * كمافيتوس

Duk. Jangli-Mùli * جنگلی ملی ; Janglì-kasmi جنگلی كاسمی *

Hind. Kakrònda * ككروندہ

இது எல்லாவிடங்களிலும் பயிராகும் ஒருவகைக் குத்துச்செடி. இதிலும் கொட்டைக் கரந்தையைப்போல இரண்டு பிரிவுகளுண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, சிறுகார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மணமூட்டி - Aromatic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—வாந்தி, அரோசகம், விந்துநட்டம், கரப்பான், க்ஷீணவாதம், வாதாதிதொந்தம், காசம், அக்கினிமாந்தம் இவைகளை நீக்கும். சடராக் இனியையும் வனப்பையும் உண்டாக்கும்.

வாந்தி யரோசகத்தை மாற்றும் பசிகொடுக்கும்
சாய்ந்தவிந் துவைக்கட்டுந் தப்பாதே—எந்தழைகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சாந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான். (அ.கு.)

கந்தநாறு கரந்தை யதின்குணம்
மந்தவாதங் கரப்பனை மாற்றிடுந்
தொந்தரோகந் துடைக்கு மிருமலா
மந்தநோயுந் தணிக்குநம் மானேயே. (தே.கு.)

**வ - கு.**—இலையைச் சூரணித்து 1 முதல் 2 வராகனெடை வெண்ணெய் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க, மேற்கண்ட நோய்கள் விலகும். இதை தாதுபுஷ்டியாகவும் உபயோகிக்கலாம்.

இதன் இலைச்சாறு பாதரசத்தைச் சுத்தி செய்யவும் நீற்றவும் உதவும்.

---

## கரிசலாங்கண்ணி—Karisalankanni.

**வே - பெ.—கரசனுங்கண்ணி, கரிசாலை, கரியசாலை, கைகேசி, கைவீசி இலை, கையாந்தகரை, பிருங்கராஜம், கரிப்பான், கையான், தேகராஜம்.**

Eclipta Prostata.

Tel. Guntagalijaeru గుంటగలిజేరు.

Mal. Kanjunni കഞ്ഞുണ്ണി.

Kan. Kadige-garage ಕಡಿಗೆ ಗರಗೆ.

San. Bhriǹgaraj भृङ्गराजः ; Kesaranja केशरञ्जः

Arab. Radim-el-bint * راديم البنت

Hind. Bungrah * بھنگرہ

Duk. Bhangra * بھنگرہ

பேதம்.—**நீலம்**, **மஞ்சள்** (பொற்றலைக்கையான்), **சிகப்பு**, **வெள்ளை**; மேற்கூறிய நாலு சாதிகளுள் முதல் மூன்று சாதிகளும் அநேகமாய் அகப்படமாட்டா. அம்மூலிகையானது அதிகமாய் மலைச்சாரல்களிற்றான் உண்டு. நான்காவது கூறிய வெள்ளைக் கரிசலாங்கண்ணியானது எங்கும் அகப்படக்கூடியது.

**ப - உ.**—இலை, வேர், சமூலம்.

**சுவை.**—கைப்பு, **விரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
- ஈரல்தேற்றி - யகிருதபலகாரி - Hepatic tonic.

**குணம்.**—இதனால் சுரசாதரோகம், காமாலை, குட்டம், வீக்கம், பாண்டு, தந்தரோகம் ஆகியவைபோம். தேகத்திற் பொற்சாயலும் யாளிக்குள்ள பலமும் உண்டாகும்.

குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை
யுரற்பாண்டு பன்னோ யொழியு—நிரற்சொன்ன
மெய்யாந் தகரையொத்த மீளியண்ணு நற்புலத்துக்
கையாந்த கரையொத்தக் கால். (அ.கு.)

## மஞ்சள் (பொற்றலைக்) கையாந்தகரை.

தேகத்திற் பொற்சாயலையும், விழிக்கு ஒளியையும், புத்திக்குத் தெளிவையும் உண்டாக்கும். குன்மக் கட்டியைப் போக்கும். இது பலவிதச் சிந்தூரஞ்செய்ய உதவும்.

பொற்றலைக்கை யாந்தகரை பொன்னிறமாக் கும்முடலை
சுத்தமுறக் கட்குச்சு கங்கொடுக்குஞ்—சிற்றிடையாய் !
சிந்தூரங் கட்காகுஞ் சிந்தை தனைத்துலக்கும்
உந்திவளர் குன்மமொழிக் கும். (அ.கு.)

**வ - கு.**—இலைச்சாறு ½ படி, நல்லெண்ணெய் ½ படி., தைலபாத்திரத்திலிட்டு தீபாக்கினியாக எரித்துப் பக்குவமாக வடித்து ஒருதுட்டெடை காலை மாலை இருவேளை சாப்பிட்டுவரக் காசரோகந் தீரும்.

கையாந்தகரைச்சாறு 4 படி, நெல்லிக்காய்ச்சாறு 4 படி, நல்லெண்ணெய் 1¼ படி இவற்றைக் கலந்து அதிமதுரம் 2 பலம் சேர்த்து அரைத்துக் குழப்பி, எரித்துப் பதமாய் வடித்துத்தலைமுழுக, கண்காசம், செவிநோய் இவைகள் தீரும்.

கரிசலாங்கண்ணிச்சாறு 1 பங்கு, ஆமணக்கு நெய் 1 பங்கு சேர்த்து அதிற் கொஞ்சம் வெள்ளைப்பூண்டு சேர்த்து எரித்துப் பதத்தில்வடித்துக் கொண்டு வேளை ஒன்றுக்கு 1½ முதல் 3 ரூபாய் எடை வரையிற் கொடுக்க, காய்ச்சற்கட்டி, வீக்கம், காமாலை, குட்டம் இவை நீங்கும்.

கரிசாலைச் சூரணத்தை அயச்செந்தூரத்திற்கு அனுபானமாகக்கொள்ள, பாண்டு, சோபை, காமாலை முதலிய நோய்கள் தீரும்.

இலைச்சாறு 90 துளி எடுத்து அதோடு நீர் அல்லது மோர் சேர்த்துச் சாப்பிட, பாம்புகடிவிடம் போம்.

மேல்படிச் சாறு 2 துளி எடுத்து 8 துளி தேனிற் கலந்து கொடுக்க, கைக்குழந்தைகட்கு உண்டாகும் ஜலதோஷம் நீங்கும்.

இலைச்சாற்றைக் காதுவலிக்குக் காதுகளில்விடத் தீரும்.

சமூலத்தை நல்லெண்ணெயில் அரைத்து யானைக்கால் ரோகத்துக்கு மேலுக்குப் பூசலாம். மூத்திரத்தில் இரத்தம் கண்டால், இலைச்சாறு கால் முதல் அரை ஆழாக்கு வீதம் தினம் இருவேளை கொடுக்கத் தீரும்.

இலையை அரைத்துக் கற்கம்பண்ணித் தேள்கடிக்கு, கடித்த இடத்தில் நன்றாய்த் தேய்த்து அதையே அவ்விடத்தில் வைத்துக்கட்டினால் விடம் நீங்கும். இலையை வேகவைப்பதாலுண்டான ஆவியை மூலவியாதிகளுக்குப் பிடிக்கத்தீரும்.

இலைச்சாற்றை நல்லெண்ணெய் அல்லது தேங்காய் எண்ணெயில் காய்ச்சித் தலைக்குத் தேய்த்துவர, முடிகறுத்துத் தழைத்துவளரும்.

வேர்ச்சூரணத்தைக் கல்லீரல், மண்ணீரல் நோய்களுக்கும் சருமவியாதிகளுக்கும் கொடுக்கலாம்.

---

## கருங்காலி—Karungali.

**Diospyros Melanoxylon.**
**Eng.—Black Catechu.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Chandra. | చంద్ర. | Sans. | Khadira | खदिर |
| Mal. | Karingali | കരിങ്ങാലി. | Hind. | Katha | * کتھا |
| Kan. | Kaggali | ಕಗ್ಗಲಿ. | Duk. | Kher | * کھیر |
| | Khadira | ಖದಿರ. | | | |

இது இந்தியாவிலும், பர்மாவிலுமுள்ள காடுகளில் பயிராகும் ஒரு வகை மரம்.

**ப - உ.**— பட்டை, பிசின், வேர்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

### வேரூறிய நீர்.

**குணம்.**—குட்டம், பித்தகயம், பித்தகுன்மம், மகோதரம், பெருவயிறு, பூநாகக்கிருமி, இரத்தப்பசையற்ற திமிர்வாதம், நீரிழிவு இவைகள் போம்.

குட்டங் கயரோகங் குன்மம் பெருவயிறு
நெட்டைப் புழுதிமிரு நீரிழிவும்—விட்டே
யருங்கான கத்தேகு மஞ்சுகமே! நல்ல
கருங்காலி நீரதனைக் கண்டு. (அ.கு.)

**வ - கு.** வேரூறிய நீரை அருந்த மேற்கண்ட நோய்கள் தணியும்.

### மரப்பட்டை.

பிரமேக மூத்திரம், தந்தமூலரோகம், இருமல், ஈளை இவைகளை நீக்கும்.

மேகநீ ரைக்கெடுக்கும் வீறுதந்த மூலத்துள்
ஆகிய வேதனையை யாற்றுங்காண்—சோகந்
தருங்காச மீளையிவை சாரா தகற்றுங்
கருங்காலிப் பட்டையது காண். (அ.கு.)

**வ - கு.**—பட்டையைக் க்ஷாயமிட்டு அக்கஷாயத்தில் நீரடிமுத்தை வேக வைத்து அதினின்றும் பிறக்கும் எண்ணெயை 5–15 துளிவரை குட்டத்துக்கு உள்ளுக்கும் கொடுத்து மேலிலும் பூசிவரலாம்.

இதன் கஷாயம், மதுமேகரோகத்தைப் போக்குவதிலும், இரத்தத்தைச் சுத்தி செய்வதிலும், உடற்குப் பலத்தை உண்டாக்குவதிலும் மிகப் பெருமையுடையது.

**கஷாயம்.**—மரப்பட்டை அல்லது மரக்கட்டை 1 பங்கு, நீர் 8 பங்கு, 8-ல் ஒன்றாகக் காய்ச்சி எடுத்துக்கொள்ளவும். அல்லது,

கருங்காலிக்கட்டை அல்லது பட்டை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் சமனெடை எடுத்து மேற்கூறிய பிரகாரம் கஷாயஞ்செய்துகொள்ளவும்.

ஷை கஷாயத்துடன், எருமைநெய், வாய்விடங்கப்பொடி கூட்டிக் கொடுக்கப் பகந்தரம் தீரும்.

இக்கஷாயமே வாய்ப்புண்களை யாற்றுவதற்கும், சயித்தியக்கட்டியைக் குறைப்பதற்கும் பாவிக்கப்படும்.

கருங்காலிப்பட்டை, வேப்பமரப்பட்டை, நாவற்பட்டை இம்மூன்றும் சமவெடை எடுத்து, பசுமூத்திரத்திலரைத்து விரணங்கள்மீது பூச, விரணம் தீரும்.

**கருங்காலி அரிஷ்டம்.**—இதனால் சருமநோய், மகாகுட்டம், கிருமி, காசம், இருதயரோகம், பாண்டு, இடப்பாட்டீரல் வீக்கம் இவை நீங்கும்.

**பிசின்.**

**குணம்.**—கருங்கரப்பான், மேகநீரழிவு, அசிர்க்கரம் ஆகிய இவைகளை நீக்கும். விந்துவை வளர்ப்பிக்கும்.

கருங்காலி யின்பிசின்றான் காரார் கரப்பான்
வருமேக நீரிழிவை மாற்றும்—விரைவாய்ப்
பெரும்பாட்டை நீக்கும் பெருந்தாது விர்த்தி
அரும்பு மெனக்கண் டறி. (அ.கு.)

**வ - கு.**—$\frac{1}{4}$ - $\frac{1}{2}$ வராகனெடைப் பிசினை நீரில் கரைத்துக்கொடுக்க மேற்படி நோய்கள் தணியும்.

**மரவேர்.**

**குணம்.**—மலாசயக் கருங்கிருமி, பாகுபடுமதுநீர், ருசியசிம்மக்குட்டம், இரத்தபேதி இவை விலகும்.

கைப்புற் றிருக்குங் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகாம் மதுநீரும்—மெய்க்குளெழு
குஷ்டமுதி ரப்போக்குங் கூவி யழுதகனும்
மட்டுறுபூங் கோதாய்! வழுத்து. (அ.கு.)

**வ - கு.**—மரப்பட்டைக்குப் பதிலாக இதை உபயோகிக்கலாம்.

**கருங்காலிச்சத்து.**

மரத்துண்டை வெட்டி நீரில் நன்றாய் வேகவைத்து கஷாய மிறக்கி, நிழலில் காயவைத்து எடுத்தால் ஒருவகைச் சத்து Catechu (extract from the wood) இறங்கும். அதை உலர்த்தி எடுத்து வைத்துக்கொள்ளவேண்டும்.

**அளவு.**—$2\frac{1}{2}$–$7\frac{1}{2}$ குன்றியெடை.

இதற்குத் துவர்ப்புச் செய்கை அதிகமாயுண்டு. இது அசீரணபேதி, இரத்தப்போக்கு, ஈறுகட்டு, ஈறுகரைவு, அதில் இரத்தம் ஒழுகல் முதலிய வியாதிகளுக்குப் பயன் தரும்.

## வெண்கருங்காலி—Veṇ - karungali.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதின் வேருக்குப் பெருவயிறு, எறுபித்தம், கிருஷ்ணசிம்மக தோஷம், சுரமேகம் இவை நீங்கும்.

**வ - கு.**—இதை, கருங்காலியை உபயோகிப்பது போலவே உபயோகிக்கலாம்.

---

## கருணைத்தண்டு—Karunai - thandu.

**வே - பெ.**—சூரணத்தண்டு, கருணைக்கிழங்குத்தண்டு.

Typhonium, Trilobatum,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kanda-Gaddha కంద-గడ్డ. | Hind. | Jangli Suran or Alu جنگلی سورن یا آلو* |
| Mal. | Chenath-thanda ചേനത്തണ്ട്. | | Madana-Masta مدنا - مستا* |
| Kan. | Survana-Guddah ಸುವರ್ಣ ಗಡ್ಡೆ. | | |
| Sans. | Arsoghna-Kunda अर्शोघ्नकन्दम्. | | |

இது சாதாரணமாய்ச் சதுப்பு நிலங்களில் வளருகின்றது. இந்தியாவின் கீழ், தென், மேல் பாகங்களிலும் இலங்கையிலும் ஏராளமாய் உண்டு. இது **காட்டுக்கருணை, நாட்டுக்கருணை** என இருவகைப்படும். இதில்நாட்டுக் கருணை உணவுக்கு விசேஷமானது. காட்டுக்கருணை உணவுக்கு ஏற்றதல்லவெனினும் சில மருந்துகளில் சேரும். இவைகளின் குணங்களை **காட்டுக்கருணை, காறுகருணை, காருக்கருணையின்** கீழ்க்காண்க.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனுல் மூலரோகம் (குதாங்குரம்), கபகோபம், மேதோ தாதுவிர்த்தி நீங்கும். பசியும் தீபனமும் சீரணமும் உண்டாம்.

> சுத்தகு தாங்குரத்தைத் துட்டகபம் மேதையதி
> கத்தை விலக்குங் கறியமைக்கிற்—பத்தியமாஞ்
> சீரணத்தை யுங்கொடிய தீபனத்தை யுங்கொடுக்குஞ்
> சூரணத்தின் தண்டெனவே சொல். (அ.கு.)

**வ - கு.**—இதன் தண்டைக் கறியாகச் சமைத்துண்ண மேற்கண்ட நோய்களைத் தணிக்கும்.

## கருப்பூரவள்ளி—Karuppura-valli.

Anisochilus Carnosus.

Eng.—Thick-leaved Lavander.

| | | |
|---|---|---|
| Tel. | Karpura-valli | కర్పూర-వల్లి |
| Mal. | Chomara | ചൊമരം; |
| | Kattu-Kurkka | കാട്ടുകുറുക്ക. |
| | Kurkka | കുറുക്ക്, |
| Kan. | Dodda-patri | ದೊಡ್ಡ ಪತ್ರೀ. |
| Sans. | Ajapada | अजपादः. |
| | Induparni | इन्दुपर्णी. |
| Hind. | Panjiri-kapat | پنجیری کا پات * |
| | Sita-ki-panjiri | سیتا کی پنجیری * |
| Duk. | Panjirika-patta | پنجیری کا پتا * |
| | Ajvanka-patta | اجوائن کا پتا * |

இது மலையாளம், மைசூர் முதலிய இடங்களில் வளரும் செடி.

**ப - உ.**—இலை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வியர்வைபெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—கர்ப்பூரவள்ளியினால் காசம் என்கிற பொடியிருமல், அம்மைக் கொப்புளம், சிலேத்மதோடம், புறநீர்க்கோவை, மூட்சை, மார்பிற் கபக் கட்டு, வாதக்கடுப்பு ஆகியவைபோம்.

காசம் இருமல், கதித்தம சுரிஜயம்
பேசுபுற நீர்க்கோவை பேருங்காண்—வீசுசுரங்
கற்பாறை யொத்துநெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்
கர்ப்பூர வள்ளிதனைக் கண்டு. (அ.கு.)

**வ – கு.**—இதன் இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்துக் குழந்தைகளுக் குண்டாகும் இருமலுக்குக் கொடுக்கலாம்.

இதன் சாற்றைச் சருக்கரை, நல்லெண்ணெய் இவற்றுடன் சேர்த்துத் தலைக்குத் தடவிவர, உடல்குளிரும்.

மேற்கூறிய வியாதிகளுக்கு இவ்விலைரசத்தை நீர் சுண்டக் காய்ச்சி 1 முதல் 2 வராகனெடை வரையில் கொடுக்கலாம். குழந்தைகளுக்குச் சிறிய அளவில் கொடுக்கவும்.

முக்கியமாக கோரோசனை மாத்திரைக்கு இவ்விலைச்சாற்றை அனுபான மாகக்கூட்டி குழந்தைகளுக்குக் கொடுக்க, கபதோஷத்தாலுண்டாகும் பிணிகள் நீங்கும்.

இதைப் பச்சையாகப் பிழிந்தும், பிட்டவியல் செய்து பிழிந்தும் உப யோகிக்கலாம்.

**குறிப்பு.**—இதன் இலையால் வாழைப்பழம் பற்பமாகும்.

## கரும்பு—Karumbu.

வே - பெ.—புனற்பூசம்.

Saccharum Officinarum.

Eng.—Sugarcane.

Tel. { Cheruku చెరుకు
Kanupula-Cheruku కణుపుల-చెరుకు.

Mal. Karinpa കരിമ്പ

Kan. Khabbu ಕಬ್ಬು.

Sans. { Ikshu इक्षु.
Rasalah रसाला

Arab. { Qasabus-sakar قسابس السكر*
Qasabe-sakar قسابس السكر*

Pers. Nai-Shakar نيشكر*

Hind. Ukh-Ganna اك گنا*

Duk. Ganda گندا*

இது இந்தியா முழுவதிலும் ஏராளமாய்ப் பயிரிடப்படும் செடி. இதில் அநேகவிதமுண்டு.

**ப - உ.**—கரும்பஞ்சாறு, சருக்கரை, வேர்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
மலமிளக்கி - ஸருவ்ரேசநி - Laxative.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

**வேர்.**

உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**சருக்கரை.**

அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

### குணம்.

**கரும்பஞ் சாறு.**

கரும்பின்சாற்றை அதிகமாய் உட்கொள்ளின் சிலேத்தும நோயுண்டாகும். மிதமாக உட்கொள்ளின் பிரமேகம், பித்தசோபம் இவை மீறுமல் அடங்கும்.

கரும்பிரத மெத்தவுண்டாற் காணுங் கபநோய்
விரும்பிவெல்ல மெத்தவுண்டால் மேகம்—தருமதுநீர்
உண்டா மதைமிதமா யுண்டால்மே கம்பித்தம்
மிண்டாமற் சாந்தமுறும் விள். (அ.கு.)

**செங்கரும்பின் சாறு.**

இதன் சாறு பித்தத்தைச் சாந்தம் பண்ணும்.

"செங்கரும் பதனற்சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்." (அ.கு.)

### நல்ல வெல்லம்.

பித்தகுன்மத்தைப் போக்கும்; ஆனால், கபத்தையும், மலாசயக்கிருமிகளை யும், மதுமேகத்தையு முண்டாக்கும்.

குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கீடத்தைத் தோன்றுவிக்கும்—நன்மைபோல்
மெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு. (அ.கு.)

### பழுப்புச் சருக்கரை.

கரும்பின் சாற்றைக் காய்ச்சி சருக்கரை செய்யப்படும்.

இது மருந்துகளுக்கு அநுபானமாயுள்ளது. வாந்தி, பித்தம், அரோசகம் இவற்றைப் போக்கும். கெட்டிப்பட்ட கபத்தை யிளக்கி மகிழ்ச்சியைத் தரும்.

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம் போக்கும்—வருந்தருசி
நீக்கு மதிகபத்தை நீற்று மகிழ்ச்சியையுண்
டாக்கு நறுஞ்சர்க்க ரை. (அ.கு.)

### சீனிச்சருக்கரை.

வாதசுரம், வாதநோய், வாந்தி, கிருமி, விக்கல் இவைகளைப் போக்கும்.

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவும்—ஏனிற்கும்
வாந்தி யொடுகிருமி மாருத விக்கலுமே
போந்திசையை விட்டுப் புரண்டு. (அ.கு.)

### கற்கண்டு.

இதனால் பல்லரணை (ஈறு தடிப்பு), இருமல், வாந்தி, கபம், உட்டினம் தீரும்.

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சேராதே—தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழு மடவனமே!
கற்கண் டெனவுரைக்குங் கால். (அ.கு.)

### சாறு.

**வ-கு.**—இது மிக்க இனிப்புள்ளது; இதன் பானம் விக்கலை நிறுத்தும்; உடம்பிலுண்டாகும் எரிச்சலைத் தணிக்க, இச்சாற்றினோடு தயிர் சேர்த்து அருந்தலாம்.

### சருக்கரை.

சருக்கரையைப் பாகு செய்து உண்பதார்த்தங்கள் கெடாமல் அவைகளைச் சேமித்துவைப்பதற்காகவும், ஜலதோஷம், நீர்ப்பீநச நோய் இவைகளைப் போக்கவும் கொடுத்துதவலாம்.

தாம்பிரம், வெள்ளைப்பாஷாணம், வீரம் முதலிய நச்சுப்பதார்த்தங்களை அருந்துவதனாலுண்டாகுங் கேட்டிற்குச் சருக்கரையை மிக சிலாக்கியமான விடமுறிப்பாகக் கொள்ளலாம்.

சருக்கரையை ஆறுவிரணங்களுக்கு உபயோகிக்கலாம்.

மஞ்சள் மெழுகும், சருக்கரையையும் சேர்த்துக் குழப்பி பருக்களுக்குப் போடலாம்.

கண்களில் படிந்த மாசு, கண்வலி, கண்விரணம், கண்ணோய் முதலிய நேத்திர நோய்களுக்குச் சருக்கரை ஒரு பங்கு, சுத்தநீர் மூன்றுபங்கு சேர்த்துக் கரைத்து ஒருமணிக்கொருதரம் இரண்டொருதுளி கண்ணில் விட்டு வர மேற்படி ஆரம்ப நோய்கள் பலப்படாமல் அடங்கும். இவ்வியாதிகளுக்கு இராக்காலங்களில், கண்ணிமைகளுக்குச் சிற்றுமணக்கு நெய்போன்ற ஓரெண்ணெயை இலகுவாகத் தேய்த்துக் கண்இமை ஒட்டாதபடி பார்த்துக்கொள்வதுடன் காலையில் சூடான பாலும் நீரும் சேர்ந்த திரவத்தால் கண்ணைக் கழுவவும் வேண்டும்.

சருக்கரையை நாட்பட்ட நோயாளிகளின் படுக்கை அறையில் புகைக்க, சுத்த காற்று உண்டாகி அறை சுத்தப்படும்.

### கற்கண்டு.

சருக்கரையைக் கொண்டு கற்கண்டு செய்யப்படும். இதில் ஒரு தோலா எடுத்து அத்துடன் ஒரு வராகனெடை பொரிகாரம் சேர்த்து ஏழுநாள் சாப்பிட விந்து நீத்தல் நீங்கும்.

கற்கண்டுடன் நீர்சேர்த்துண்ணப் பேதி கட்டுப்படும்.

### காடி.

கருப்பஞ்சாற்றைப் புளிக்கவைத்து ஒருவகைக் காடி செய்யலாம். இதற்குக் கருப்பங்காடி என்று பெயர். இது பசியை யுண்டுபண்ணுவதோடு சீரணத்தை அதிகப்படுத்தித் தாகத்தையும் அடக்கும்.

காடி ஒருபங்கு, சுத்தநீர் 5 பங்கு கலந்து, ஈயம் விடமித்ததாலுண்டாகும் நோய்களுக்குக் கொடுத்துதவலாம். முதலில் பேதியாகக் கொடுத்து பிறகு மேற்படி மருந்தைக் கையாள்வதே உத்தமம்.

தலைவலி, மயக்கம், தொண்டைப்புண், ஆரம்பஜலதோஷம் முதலிய வியாதிகளுக்கு இக்காடியின் ஆவியை நாசிவழியாய் ஏற்ற மிகுந்த குணமுண்டாகும்.

இரத்தமூத்திர ரோகத்துக்கு மேற்படிக் காடியை கடிதடம், தொடை இடுக்கு முதலிய இடங்களில் பூச இரத்தமூத்திரம் நீங்கும்.

மேலும், தேள், குளவி, தேனீ முதலியன கொட்டினதாலுண்டாகும் வேதனை, சில மூலிகைகளின் சுணையினாலுண்டாம் நமைச்சல் முதலிய நோய்களுக்குக் காடியைப்பூசச் சுகமுண்டாகும். இவ்வாறுகவே மூலை வீக்கத்தையும் கரைக்கும்.

கயநோயில் இரவிலுண்டாகும் அதிவியர்வைக்குக் கருப்பங்காடி 1 பங்கு, நீர் 2 பங்கு, யு-டி-கொலோன் (Eau-de-cologne) 1 பங்கு சேர்த்துக் கலந்து மார்பில் பூசிவர வியர்வை குறையும்.

### வேர்.

கரும்பின் வேரை முறைப்படிக் கஷாயமிட்டு உள்ளுக்குக் கொடுக்க, மூத்திரத்தை விருத்திபண்ணி மூத்திர எரிச்சலைக் குறைக்கும்.

### கரும்பு.

கரும்பை இரண்டாகப் பிளந்து திப்பிலிச்சூரணம், ஏலக்காய்ச்சூரணம் இவைகளை நடுவில்வைத்துச் செம்மண்சீலைசெய்து கும்பியில் வைத்துப் பதமாய்ச் சுட்டு எடுத்து, சீலையைநீக்கி சுத்தப்படுத்தி அதைப் பிழிந்து எடுத்த சாற்றை விக்கலுக்குக் கொடுக்க உடனே தீரும்.

கரும்பைத் துண்டுதுண்டுகளாக வெட்டி, சுத்திசெய்த செம்புத்தூளைச் சட்டியிலிட்டு வறுத்து, வெட்டிய துண்டுகளால் கடைய செம்பு ஓர்வகைப் பற்பமாகும். இது செய்வதற்குக் குறைந்தது 1 பலம் செம்புத்தூளுக்கு மூன்று நான்கு முழுக்கரும்பு தேவையாகும். இதைக்கொண்டு பலநோய்களைத் தக்க துணைமருந்துகளால் சுகப்படுத்தலாம்.

## கர்க்கடகசிங்கி—Karkadaga Shingi.

**வே - பெ.—கர்க்கடசிங்கி, கற்காடகசிங்கி.**

Rhus Succedenea.

Eng. The galls.

**Tel.** Karkataka-sringi కర్కాటక శృంగి

**Mal.** Kárkada-srungi. കർക്കട ശൃംഗി.

**Kan.** Karkatakashringi. ಕರ್ಕಟಕಶೃಂಗಿ.

Sans. Karkatashringi. कर्कटकशृङ्गी.

Hind. Kákṛásiṅgí. * کاکڑاسنگی

இது வாழைமரத்தைப்போன்ற ஒருசாதி மரத்தின் காய் அல்லது பூவாகக் கருதப்படுகிறது. ஆட்டுக்கொம்பின் உருவத்தை ஒத்து கனமின்றி, மெல்லிய தோலுடையது. அடி கனத்தும், நுனி சுருங்கியுமிருக்கும். இதற்குள் சிலந்திக்கூடுகள் போன்ற வெண்ணிறக் கூடுகளுமுண்டு. நிறக, பூச்சிகளால் கடுக்காய் மரத்தைத்துளைக்க அதினின்று வழிகின்ற பால் கட்டுவதாலுண்டாவதற்கு * **கடுக்காய்ப்பூவென்று** பெயர். முதற்கூறிய கர்க்கடக சிருங்கியை உபயோகப்படுத்துமுன் அதிலுள்ள பூச்சுக்கூடுகளை நீக்கல்வேண்டும். பின் கூறியதில் பூச்சிகள் இரா. இது தட்டையாயும் ஓரங்களில் மலர்போன்றுமிருக்கும். இவ்விரண்டிற்குங் குணமொன்றே.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
- செரிப்புண்டாக்கி - பாசநகாரி - Digestive.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Chologogue.

**குணம்.**—சீதளத்தாலுண்டாம் இருமல், இரத்தசீதமலம், ஈளை, முக்கல், கிராணி, வயிற்றிரைச்சல், பேதி, இரத்தமூலம், கடுப்பு, இரத்தபித்தம், மேகவிரணம், அதிஉஷ்ணம் இவைகளும் நீங்கும்.

கர்க்கடக சிங்கி கபங்காசம் ஈளையொடு
முக்கல் கிராணி முதிர்இரைச்சல்—பொக்கெனவே
சாடுகின்ற பேதியையுஞ் சாடும் அரிவையரைக்
கூடு திறங்கொடுக்குங் கூறு.
மூலவிரத் தங்கடுப்பு மோதிரத்த பித்தங்காய்
மேல்அடரும் மேக விரணவெப்போ—டாலத்
துடுக்காங் கொதிப்புமறுந் தோகையட மாதே!
கடுக்காயின் பூவைக் கருது. (அ.கு.)

பிரமாணம்.—4—10 குன்றி.

இது, முக்கியமாய்க் குழந்தைகளுக்குண்டாகும் பேதி, இருமலைப் போக்குவதில் சிறந்தது.

**வ - கு.**—இதை வாயிலடக்கிக்கொண்டு இதன் சாரத்தை விழுங்க, இருமலடங்கும்.

இதைக் காடிவிட்டரைத்துப்பூச வெண்குட்டம் நீங்கும்.

புரையோடிய விரணத்தையும், இரத்தமூலத்தையும் இதன் புகை குணப்படுத்தும்.

---

* இதற்கும் கர்க்கடக சிங்கி எனப் பெயர் வழங்கும்.

தேனுடன் கலந்து சாப்பிடத் தேகபுஷ்டி யுண்டாகும்.

இதைச் சருக்கரையுடன் கலந்து உட்கொண்டு பால் அல்லது நீர் அருந்த ஸ்திரீகளுக்குண்டாகும் வெள்ளையை நிறுத்தும். ஆனால் இதை உட்கொண்டவுடனே கோதுமை அப்பம், நெய் இவைகளை உபயோகிக்க வேண்டும்.

பத்தியம்.—ஆட்டிறைச்சி, வாயுபதார்த்தங்கள் ஆகா.

கர்க்கடகசிங்கி, மருதம்பட்டை, திப்பிலி இவைகளின் சூரணம் சமவெடை, இதில் ½ முதல் 1 வராகனெடை தேனிற்கொடுக்க, சீதளசுரத்தாலுண்டாம் இருமல் தீரும்.

கற்கடகசிங்கி, சுக்கு, திப்பிலி, கஸ்தூரிமஞ்சள், முருக்கம்பிசின் இவைகளைச் சமவெடை எடுத்துப் பொடிசெய்து ½ வராகனெடை வீதம் தேனுடன் சேர்த்துக் கொடுக்க, வறட்டிருமல் தீரும்.

---

## கர்ப்பூரப்புல்.—Karpúrap-pul.

**வே - பெ.—வாசனைப்புல், சுக்குநாறிப்புல், தைலப்புல், சம்பாரப்புல்.**

Andropogon Citratis.

Eng. Lemon grass ; Sweet rush ; Ginger grass.

Tel. Nimma-gaddi. నిమ్మ-గడ్డి.

Mal. Vasanap - pul̤l̤a. വാസനപ്പുല്. Sambhàrap - pul̤l̤a. സംഭാരപ്പുല്.

Kan. Purvali - hullú. ಪೂರ್ವಲಿಹುಲ್ಲು. Vasane - hullú. ವಾಸನೆಹುಲ್ಲು.

Sans. Bhustrana. भूस्तृणम्. Devajagdhaka. देवजग्धका.

Hind. Gandhatrana or Hare - chahe. گند ها ترانا یا هری چاه *

Duk. Hazar - masaleh - ka. هزار مصالح کا *

இது, இந்தியா முழுமையும் மலைப்பிரதேசங்களில் அபரிமிதமாய் வளர்ந்து கிடக்கும் புல்லினம். அநேக இடங்களில் இதைத் தோட்டங்களில் வைத்துப் பயிரிடுகிறார்கள். இதற்கு ஒருவித நறுமணம் உளது. ஆகையால், இதற்கு **வாசனைப்புல்** என்றொரு பெயருமுண்டு.

**ப - உ.**—இலை, புல்லிலிருந்தெடுக்கும் எண்ணெய்.

**சுவை.**—காரம், விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—வாதபித்தரோகம், சுரம், கோழை, அருசி இவைகளை நீக்கும். பசிதீபனத்தை யுண்டாக்கும். மேலுக்குப் போட்டால் உஷ்ணத்தை உண்டு பண்ணும்.

வாசனைப்புல் வாதபித்த மாற்றுவது மல்லாமற்
சூசனையாய் வந்த சுரம்போக்கும்—பேசரிய
ஐயம றுக்கும ரோசகத்தை விண்ணேற்றுந்
துய்யபசி யைக்கொடுக்குஞ் சொல். (அ.கு.)

**வ - கு.**—இலையை முறைப்படிக் கஷாயமிட்டு 1—2 உச்சிக்கரண்டி வரையில் கொடுக்கக் குழந்தைகளின் வயிற்றுவலி நீங்கிச் சுகமுண்டாகும். பசியை யுண்டுசெய்யும்.

**குறிப்பு.**—பச்சைப்புல்லை வாலையிலிட்டு வடித்தெடுக்கும்போது ஒருவகை எண்ணெய் இறங்கும். இதற்கு வாசனைப்புல் எண்ணெய், அல்லது புல் தைலம் எனப் பெயர். இது மிக்கத் தெளிவாயும் சிறு மஞ்சள் கலந்த சிவப்பு வருணமாயும் காரமுடையதாயும் இருக்கும். எலுமிச்சம்பழ வாசனையையும் தரும்.

**எண்ணெய்.**

இதில் 3 முதல் 6 துளி வீதம் சருக்கரையுடன் கலந்து உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, வாந்தி இவை குணமாகும்.

வாந்திபேதிக்கு மேற்கூறிய அளவுப்படி தண்ணீரில் ஒருமணிக்கொரு தரம் கொடுத்துவர, வாந்தியை நிறுத்தி உஷ்ணத்தை யுண்டுபண்ணும்.

வெளிப்பிரயோகமாக இந்த எண்ணெயைச் சரிபாகம் தேங்கா யெண்ணெயுடன் கலந்து வாதப்பிடிப்பு, கீல்வாதம், நரம்புக்குடைச்சல் முதலிய நோய்களுக்குத் தேய்த்துவரலாம்.

---

## கலப்பைக் கிழங்கு—Kalaippai kizhangu.

**வே - பெ.—கார்த்திகைக்கிழங்கு, வெண்தோன்றிக்கிழங்கு, காந்தட்கிழங்கு, இலாங்கலிக்கிழங்கு.**

Gloriosa Superba (Root of)

Eng.—Superb lily.

Tel. { Adavi-Nábhi అడవి నాభి. Potti-dumpa పొట్టి దుంప. Agni-Shikka అగ్ని శిఖ.

Mal. { Ventóni വെൻതോണി. Manthoni-kizhangu മാന്തോണിക്കിഴങ്ങു. Méthoni മേത്തോണി.

Kan. Nangulika ನಂಗುಲಿಕ.

Sans. { Sukra pushpika शुक्रपुष्पिका. Garbhagatini गर्भघातिनी. Langalika लाङ्गलिका. Agni Sikka. Kalikari

Hind. Carihari * کریہری

Duk. Natka-bachnag * ناٹکا بچھناگ

இது பெரும்பான்மையாய் வங்காளத்திலும், இந்தியாவின் மலையடிவாரக் காடுகளிலும் வளர்ந்துகிடக்கும் ஒருவகைக் குத்துச்செடி வகையைச் சேர்ந்தது.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative. முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic. நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative. உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்**.—இதனால் சருமநோய், பாம்பு, தேள்கடிவிடம், பிரமேகம், மூலவியாதி, வயிற்றுவலி, குட்டம், மலக்கிருமி இவைகள் நீங்கும்.

பித்தத்தை அதிகரிக்கச் செய்யும். அதிக அளவில் கொள்ள விஷமிக்கும்.

**வ - கு.**—இதன் கிழங்கு, கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், கார்போகஅரிசி இவைகளைச் சேர்த்தரைத்துச் சருமரோகங்களுக்கு மேலுக்குத்தடவக் குணமாகும்.

சிறு சிறு துண்டுகளாக வெட்டி இக்கிழங்கை உப்புச்சேர்ந்த மோரில் 7 நாள் இரவுதோறும் ஊறவைத்து, பகலில் உலர்த்திவரச் சுத்தமாகும். இப்படிச் சுத்தம் செய்த கிழங்குத்துண்டுகளில் ஒன்று அல்லது இரண்டு பொடித்து உள்ளுக்குக்கொடுக்க பாம்புகடி விடம் நீங்கும்.

இக்கிழங்கின் மா, 2 முதல் 4 குன்றியெடை உள்ளுக்குக் கொடுக்கலாம். சாதாரணமாய் கன்றுகாலிகளின் மலக்கிருமிகளைப் போக்க உதவும்.

கிழங்கைப் பொடித்து நீர்விட்டு அரைத்துத் தொப்புள், உள்ளங்கை, உள்ளங்கால் இவ்விடங்களில் பூச, பிள்ளைப்பேற்றை தீவிரிக்கச் செய்யும் எனக் கருதப்படுகின்றது.

அளவுக்கு மீறாமல் உள்ளுக்குக் கொடுத்துவர, குட்டம், மூலம், தீரா வயிற்றுவலி, வயிற்றிலுள்ள மலக்கிருமிகள் நீங்கும்.

---

## கலியாணப்பூசினிக்காய்—Kàliyana-pùshinik-kày.

**வே - பெ.—சாம்பல்பூசனி, தடியன்காய், பெரும்பூசனி, வெண்பூசுணை.**

Cucurbita Pepo.

Eng.—White pumpkin.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Búdidapu-Gummadi బూడిద గుమ్మడి. | Hind. | Kudimah * کوڑی ماہ<br>Pèthá * پیٹھا<br>Kóndhà * کونده |
| Mal. | Kumpalaṉṉa കുമ്പളങ്ങ<br>Kumpalam കുമ്പളം. | Arab. | Majdabah * مجدوبه |
| Kan. | Bude-kumbal-káyi ಬೂದಿಕುಂಬಳಕಾಯಿ. | Pers. | Do. ,, |
| Sans. | Kúshmándam कूष्माण्डम्. | Duk. | Péṭhah * پیٹھا |

இது கொடிவருக்கத்தைச் சேர்ந்தது. இந்தியா முழுவதும் பயிரிடப் படுகின்றது. காய் சாம்பல்வன்னமாக இருக்கும்.

**ப. - உ.**—காய், விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- குருதிப்பெருக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - Styptic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

**குணம்.**—இதனால் உட்காய்ச்சல், சாரமேக மூத்திரக் கிரிச்சரம், இடுமருந்து, பித்தசுரம், அஸ்திதாதுகதசுரம், பேய்ச்சொறி, பிரமேகம், சித்தப்பிரமை, பித்தம் ஆகியவை போம்.

பெரும்பூ சினிக்காய்க்குப் பித்தமோடுட் காய்ச்சல்
அருஞ்சார நீர்க்கட் டருகல்—மருந்திடுதல்
பித்தசுரம் அஸ்திசுரம் பேய்வறட்சி மேகமும்போம்
மெத்த அனிலமுறும் விள். (அ.கு.)

**காய்.**

**வ - கு.**—பூசனிக்காயைக்குடைந்து அதனுள் செம்பருத்திப் பூவைப் போட்டு, ஊறவைத்து ரசமெடுத்து அதனுடன் சர்க்கரை கூட்டிக்கொடுக்கப் பிரமேகம், நீரெரிச்சல் இவை தீரும்.

பூசனிப்பழத்தை வேகவைத்துப் பிசைந்து அழுகிப்போன விரணங் கட்கு வைத்துக்கட்டலாம்.

இதன் சாற்றை இரத்தவாந்தி, மற்றும் உள்ளவயவங்களில் உண்டாகும் இரத்தப் பெருக்குக்குக் கொடுக்கச் சாந்தியாகும்.

இடுமருந்து, இரசவேக்காடு, தாவரவிடங்கள் இவைகளுக்கு, இதைச் சமைத்தாவது அல்லது இதன் சாற்றைப் பிழிந்தெடுத்தாவது கொடுக்கலாம்.

**குறிப்பு.**—இடுமருந்தின் குற்றம் உண்டோ இல்லையோவென அறிய, இக்காயுடன் பச்சைப்பயறு சேர்த்துச் சமைத்துச் சோற்றிற் கலந்து உண்ண, இடுமருந்திருந்தால் உணவு செரியாது கழியும், இல்லையேல் உணவு செரித்து மலத்தைக் கழிக்கும்.

இதனால் இரசாயனம், இலேகியம், நெய் இவைகள் செய்து, முக்கியமாய் இரச தாதுவைப்பற்றிவரும் ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

இது சாதாரணமாக அனுபானங்களுக்கு உபயோகப்படுகிறது.

இதன் விதையை ஒருபலமெடுத்து அரைத்து வெறும் வயிற்றில் கொடுத்து விட்டுப் பிறகு இரண்டல்லது மூன்று மணிநேரங்கழித்து ஆமணக்கெண்ணெய் கொடுக்க, தட்டைக்கிருமிகள் வெளிப்படும் (Tape worm).

கூஷ்மாண்டகிருதம் பலத்தையுண்டாக்கும். உடலைப் பருக்கச் செய்யும். கயரோகிகளுக்கு இது சிறந்தது.

---

## கலியாணமுருக்கு—Kaliyâna Murukku.

**வே - பெ.—முள் முருக்கு.**

Erythrina Indica.

**Eng.—Indian Coral tree.**

Tel. { Bádidapu-chettu బాడిదపు చెట్టు. / Báḍisapu-cheṭṭu బడిశపు చెట్టు.

Mal. { Karu-Murukkin-Maram. കരുമുരുക്കിൻ മരം. / Murukka മുരുക്ക. / Kalyana-Murukku-Marram കല്യാണമുരുക്കു മരം.

Kan. Páravá̤ḷada-Mara ಪರವಲದ ಮರ.

Sans. { Parijataka पारिजातकम् / Kimsukam किंशुकः / Mandalya माण्डल्या

Hind. { Pángrá پانگرا * / Ferrud فيرود * / Mandár مندار *

Duk. Pángrá پانگرا *

இம்மரம் வங்காளத்திலும், இந்தியாவில் பல்வேறிடங்களில்; வேலியாக வும், தோட்டங்களில், வெற்றிலை, நல்லமிளகு முதலிய கொடிகளுக்கு ஆதரவாகவும் பயிரிடப்படுகின்றது.

**ப - உ.**—இலை, பூ, விதை, பட்டை.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

- பித்தமகற்றி - பித்தஹரகாரி - Anti - bilious.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**இலை.**

- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.

**குணம்.**—வாந்தி, வயிற்றுவலி, பித்தசுரம், அக்கரம், அனல், வாய் வேக்காடு இவைகளை நீக்கி தேகத்திற்கு வன்மையை யுண்டாக்கும்.

முள்ளு முருக்கதுதான் மோதுகின்ற சர்த்திகுன்மங்
கள்ளமறத் தீர்க்குங் கனற்சுரமும்—விள்ளரிய
அக்கரமும் போக்கு மனல்வாய்வேக் காடகற்றும்
மிக்க வலிகொடுக்கும் விள். (அ.கு.)

## பூ.

இது கருப்பப்பையில் கட்டிய இரத்தகுன்மத்தை விலக்கும்.

கருப்பா சயத்திற் கறுத்துத் தடித்தே
பருத்தவுதி ரத்திரளைப் பஞ்சாய்த்—துரத்திவிடும்
பண்முருக்கு மின்பமொழிப் பாவாய்! உலகறிய
முண்முருக்கம் பூவை மொழி. (அ.கு.)

## இலை.

**வ - கு.**—இலைச்சாறு ஒரு தேக்கரண்டி எடுத்து அத்துடன் ஒரு மேசைக் கரண்டி விளக்கெண்ணெய் சேர்த்துக் காலை மாலை மூன்றுநாள் சாப்பிட சீதபேதி விலகும்.

இலைச்சாறு $\frac{1}{4}$ ஆழாக்கு எடுத்து சிறிதுதேன் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க மலக்கிருமிகள் வெளிப்படும். இது நீர்மலப்போக்கியாகக் கொள் ளப்படுகின்றது.

இலையை ஒன்றிரண்டாய் நறுக்கிச் சுடுதண்ணீரிலிட்டு, நல்ல சூட்டுடனே கீல் வாதத்துக்கு வைத்துக்கட்டினால் வலி நீங்கி சுகந்தரும்.

இலையைப் புற்கைசெய்து அரையாப்புக்கு வைத்துக்கட்ட மிகுந்த குண முண்டு.

இதன் இலையைத் தேங்காய் எண்ணெயில் சமைத்துப் புசித்தால் மாதர்களுக்குப் பால் சுரக்கும். ருதுவர்த்தினியாகவும் பயன்படும்.

இதனிலை ரசத்தைத் தொடர்ச்சியாக 2 அல்லது 3 மாதங்கள் வரையில் காலைமாலை யுட்கொண்டுவரின், மாதாந்தர ருதுகாலத்தின் தீராவயிற்று வலியைப்போக்கிச் சுகந்தருவதன்றி, மிகப் பருத்த உடலை சுட்கச்செய்து, மலட்டு நோயையும் நீக்கும்.

மூத்திர எரிச்சல், மூத்திரத்தடை முதலிய நோய்களுக்கு இதன் இலைச் சாறு 1 முதல் 2 தேக்கரண்டி காலைமாலை இருவேளையும் கொடுத்துவர, மேற்படி வியாதிகளைக் கண்டிக்கும்.

**பூ.**

பூவைக் கஷாயமிட்டுக் குடித்தாலும் அல்லது கருப்பைக்கு நேராக அடிவயிற்றில்வைத்துக் கட்டினாலும் இரத்த குன்மத்தைப் போக்கும்.

கஷாயமிட்டுக் கொடுக்க, குன்மநோயை விலக்கும்.

**விதை.**

விதையை மேல்தோல் நீக்கி நன்றாய்க் காயவைத்து இடித்துப்பொடித்து வஸ்திரகாயம்செய்த தூளில் 1 முதல் 2 குன்றியெடை இரவு படுக்கைக்குப் போகும்போது சருக்கரை சேர்த்துச் சாப்பிட்டு, மறுநாள் காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட, மலவிருத்தியாகி மலக்கிருமிகள் விழுந்துவிடும்.

**பட்டை.**

இதன் உட்பாகத்தில் நெய்தடவி தீயில் வைக்க அதில் ஒருவகை புகை படியும். அதை எடுத்து கண்ணில் கீழிமையின் உட்புறத்திலும், ஓரத்திலும் தடவிவர, கண்ணோய் முதலிய நேத்திர ரோகங்கள் நீங்கும்.

பட்டைரசத்தைப் புண்கிருமிகளைக்கொல்ல உபயோகப்படுத்தலாம்.

வெண்முருக்கன் இளம்வேர்ச் சூரணத்துடன், காய்ந்தாறிய பால் சேர்த்தருந்த தாது புஷ்டியுண்டாகும்.

வேர்ப்பட்டை 2 தோலா, சுத்தநீர் $\frac{1}{4}$ படி இதை நாலிலொன்றாகக் கஷாயமிட்டு, வசந்தகுசுமாகரரசம் சேர்த்து ஒவ்வொரு தினமும் காலைதோறும் அருந்திவர நீரிழிவுநோய் சுகப்படும்.

---

## கலுமிச்சங்காய்—Kalumich-changkai.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - உஷ்ணம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதைத் தின்றால் பல்விழும். பற்கூச்சமுண்டாகும். தாது நஷ்டமுண்டாகும். சீதளத்தை உண்டுசெய்யும்.

> தந்தம்விழப் பண்ணுஞ் சலவை தனைக்கொடுக்கும்
> வெந்துமிக விந்துவைவி ழச்செய்யும்—அந்த
> எலுமிச்சங் காய்போல் இருக்குங் கொடிய
> கலுமிச்சங் காய்க்குணத்தைக் காண். (அ.கு.)

**வ - கு.**—ஊறுகாய் செய்தேனும், இதன் சாற்றுடன் சருக்கரை கலந்தேனும் உண்ணலாம்.

---

## கல்லுருவி—Kallurivi.

### Ammania Vesicatoria.

| | |
|---|---|
| **Tel.** Agni-Vendra-pàku అగ్ని వేండ్రపాకు. | Sans. Agni-Garba **अग्निगर्भा.** |
| | **Hind.** Dàd-Màrí داد میری * |
| **Mal.** Kallúrvanchi കല്ലൂർവഞ്ചി. | **Duk.** Agin-búti اگن بوٹی * |

சாதாரணமாய் இந்தியா முழுவதும் சதுப்பு நிலங்களில் கிடைக்கக்கூடிய பூண்டு.

**ப - உ.**—இலை, சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { நமைச்சலுண்டாக்கி - Irritant.
கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி - Vesicant.

**குணம்.**—பலகட்டிகள், இரத்தக்கடுப்பு, கிரந்தி, பிரமேகம், சர்ப்ப விடம் இவைகளை நீக்கும். இரும்பைச் சுத்தி செய்யும்.

கல்லுருவிப் பூண்டுபல கட்டிகளை யுங்கரைக்கும்
வல்லுதிரக் கட்டறுக்கும் வந்தபுண்ணை—வெல்லரிய
மேகத்தை வல்விடத்தை மீருத கற்றிடும்உ
லோகத்தைச் சுத்திசெய்யு மோது. (அ.கு.)

வ - கு.—இலையை அரைத்துத் தோலில் தடவிக்கொப்பளிக்கச் செய்ய லாம்.

முறைச்சுரத்துக்குச் சமூலத்தை உலர்த்திச் சூரணித்து இஞ்சி சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்கலாம்.

இலையை வீக்கம், கட்டி முதலியவைகளுக்கு அரைத்துக்கட்ட வீக்கத்தை குறைத்துக் கட்டியைக் கரைக்கும்.

விடகடிகளுக்கு இதன் இலையைக் கசக்கி கடிவாயில்வைத்துக் கட்ட விடம் முறியும்.

---

## கவிழ்துும்பை—Kavizh-tumbai.

**வே - பெ.—கழுதைத்தும்பை.**

**குணம்.**—இதனுல் அரையாப்புக்கட்டி, வாதநோய், இரத்தமுஞ்சீதமுங் கலந்து விழலால்வருங் கடுப்பு ஆகிய இவை போம்.

அரையாப்புக் கட்டி யனில முதிரம்
பிரியாச்சீ தக்கடுப்பும் பேருந்—தரையிற்
பழுதைக்கொள் ளாச்செய்ய பங்கயப்பெண் ணே ! கேள்
கழுதைத்தும் பைச்செடியைக் கண்டு. (அ.கு.)

**வ - கு.** கவிழ்தும்பைச் சமூலத்தில் ஒருபிடி எடுத்து ஒன்று இரண்டாக நசித்து 4 ஆழாக்கு நீர்விட்டுக் குடிநீர் செய்து காலைமாலை ½ ஆழாக்கு வீதங் கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் தணியும். இதன் இலையை அரைத்து சிறிது சிற்றுமணக்கெண்ணெய் விட்டுக் கிண்டிக்கிளறி அரையாப் புக்கு வைத்துக்கட்டலாம்.

இலையைத் தேன்விட்டு வதக்கி நீர்விட்டுக்கஷாயஞ் செய்து கொடுக்கப் பெரும்பாடு நீங்கும்.

இலையை யரைத்துத் துருசுக்குக்கவசித்துக் காடைபுடமிட,துருசு செந்தூர மாகும்.

---

## கழற்சிக்கொடி—Kazharchi kodi.

**வே - பெ.—(காய்) வஜ்ஜிரபீஜம், கழற்காய், கச்சக்காய், குபேராட்சி.**

**Caesalpinia Bonducella.**

**Eng.—Bonduc-Nut, Molucca Bean, Physic nut.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | Gach-chakaya | గచ్చకాయ | **Arab.** | Akitmakit | * اکت ما کت |
| **Mal.** | Kazhanchikkuru | കഴഞ്ചിക്കുരു. | **Pers.** | Khayahe-iblis | * خیۂ الابلیس |
| | Kalanchi-kkuru | കളഞ്ചിക്കുരു. | **Hind.** | Sagar-Ghota | * سقرگہوٹہ |
| | | | | Kalkaranj | * کلکرنج |
| | | | | Katkaliji | * کات کلیجی |
| **Kan.** | Gajjaga-kay | ಗಜ್ಜುಗಕಾಯಿ. | | | |
| **Sans.** | Kuberakshi | कुबेराक्षी. | **Duk.** | Gutchha | * گٹچہا |

இது இந்தியாவிலும் இலங்கையிலும், வேலிகளிலும், தோட்டங்களிலும் பயிராகிற ஓர்விதக்கொடி. இலகுவாய்க் கிடைக்கக்கூடியது. இதில் கருமை, வெண்மை என்கிற இரண்டினமுண்டு.

**ப - உ.**—இலை, கொட்டை, பட்டை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**விதை, வேர்ப்பட்டை.**

முறைவெப்பகற்றி - முறைஜ்வராதிரோதி - Antiperiodic
இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic
உரமாக்கி - பலகாரி - Tonic.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**இலை.**

வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—**கருங்கழற்சி**யிலையால் பீசவாதம், சூலைக்கட்டு, பிரமேகம், பலவித குன்மம், உள்ளழலை ஆகியவை ஒழியும்.

விரைவாதஞ் சூலையறும் வெட்டையனல் வேகும்
நிரைசேர்ந்த குன்மம் நிலையா—துறைசேர்
அழற்சி விலகும் அருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால். (அ.கு.)

**இலை.**

**வெண்கழற்சி** இலையால் ஏறண்டரோகம், இறங்கண்டரோகம், தசையண்ட ரோகம் இவைபோம்.

ஏறண்டத் தோடே யிறங்கண்ட மெத்தவுமே
வீறண்ட மெல்லாம் விலக்குங்காண்—நாரண்ட
வள்ளைக் குழையடிபோம் வாழ்விழிமா தே ! நல்ல
வெள்ளைக் கழற்சியிலை விள். (அ.கு.)

**விதை.**

விதையினால் அண்டவாதம், குட்டினால் பிறந்த பக்கச்சூலை, வயிற்று வலி (குன்மம்) இவைபோம்.

"கழற்காய் விதைக்குக் கனஅண்ட வாதம்
தழற்பக்கச் சூலைகுன்மம் சாந்தி." (அ.கு.)

**வ - கு.**—இலையுடன் தேங்காய்ப்பூச் சேர்த்து, விளக்கெண்ணெய் விட்டு வதக்கி வீக்கங்களில் வைத்துக்கட்ட, வீக்கங்கள் கரையும். பீசவீக்கம் மறையும்.

**விதை - வேர்ப்பட்டை.**

விதைகளும், வேர்ப்பட்டையும், சுர வியாதிக்கு ஏற்றது.

வேர்ப்பட்டைத்தூள் 5 முதல் 7½ குன்றி வரையில் கொடுக்கலாம்.

விதையைப் பொடித்து சமனெடை மிளகுத்தூள் சேர்த்து அதில் 5 முதல் 15 குன்றி கொடுக்கலாம்.

விதையைப் பொடித்து பெருங்காயம் சிறிது சேர்த்து மோரில் கலக்கிச் சாப்பிட, குன்மநோய் சாந்தியாகி தேகத்திற்குப் பலத்தைக் கொடுக்கும்.

விதையைச் சுட்டுப் பொடித்து அதோடு வறுத்த பாக்குத்தூள் சமனெடை சேர்த்து, சிறிது வெங்காரம் சேர்த்துப் பல் துலக்கிவர பல் இறுகும், பல் நோய் தீரும்.

விதையை வெண்கருவில் அரைத்துப் பற்றிட பீசவீக்கம் நீங்கும்.

விதையைத் தூளாக்கி முட்டையுடன் கலந்து விளக்கெண்ணெய் அல்லது நெய் விட்டு, அட்டு செய்து சாப்பிட பீசவீக்கம் நீங்கும்.

இதன் சமூலம் கழற்சி எண்ணெயில் சேரும்.

---

## கழுநீர்—Kazhunìr.

**வே - பெ.—உற்பலம், குவளை, குவலயம், செங்கழுநீர்.**

**Pontederia Vaginalis.**

**Eng.—Water lily.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Nirucancha | నీరుకంచ. | Mal. | Chenkazhuneer | ചെങ്കഴുനീർ. |

இது நீரில் வளரும் கொடி.

முக்கியமாய்த் தென்னிந்தியாவில் ஏராளமாய் வளரும்.

**ப. உ.**—சமூலம், கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { பித்தமடக்கி - பித்தசாந்தநி - Anti-pitta.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant. }

**குணம்.**—தாகரோகத்தையும், சிலேத்தும அரோசகத்தையும் நீக்கும், உடலுக்குக் குளிர்ச்சியை யுண்டாக்கும்.

உடற்குக் குளிர்ச்சியதா முள்ளுழலை மாற்றும்
அடற்கபவ ரோசகத்தை யாற்றுங்—கடற்குள்
எழுநீர்க் குமிழி யிகழு முலையாய் !
கழுநீர் மலரெனவே காண். (அ.கு.)

**பூ.**

**வ - கு.**—இதன் பூ செந்நிறமுடையது. இதில் ஒருவித சுகமணமுண்டு. இதைச் சுத்த குளிர்ந்த நீரில் ஊறப்போட்டு 30 நாழிகைசென்றபின் அந்நீரை அருந்தத் தாகம் நீங்கும். உடல் குளிரும்.

**கிழங்கு.**

இதை யுலர்த்திச் சூரணஞ் செய்து ஒன்று முதல் ஒன்றரை வராகனெடை எடுத்து அத்துடன் சீனி கலந்து உட்கொள்ள, அரோசகம்,பித்தாதிக்கம் முதலியன நீங்கி, உடல் தழைக்கும்.

உடற்குக் குளிர்ச்சியைத் தரும். முடித் தைலங்கள் பலவற்றிலும் இது சேரும்.

---

## களர்வா—Kalarvà.

**வே - பெ.—கார்கொள்மரம்.**

**Salvadora Wightiana.**

**Eng.—Tooth brush tree.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Varagògu | వరగోగు. | Pers. | Darakhte - misvak | درخت مسواك * |
| Kan. | Goni-mara | ಗೋಣಿಮರ. | Hind. | Pílu | پیلو * |
| Sans. | Pilu | पीलु: | Duk. | Píiú-Ka-jhàṛ | پیلو کا جھڑ * |
| Arab. | Aràk | عراك * | | | |

வட இந்தியாவில் வளரும் ஒருவகைமரம். **சிறுகளர்வா, பெருங் களர்வா** என இருவகையுண்டு. எனினும் செய்கை, குணம் முதலிய வற்றில் வித்தியாசமிரா.

---

## சிறுகளர்வா—Chiru-kaḷarvà.

**Salvadora Persica.**

**Eng.—Tooth-brush tree (Short).**

| | | |
|---|---|---|
| Tel. | Pinna-vara-gógu పిన్నవర గోగు. | Hind. Chhóta-pílú چهوٹا پیلو * |
| | Chinna-vara-gógu చిన్నవర గోగు. | Duk. Chhótà-pílú چهوٹا پیلو * |
| | | Arab. Aràk. عرك * |

---

## பெருங்களர்வா—Perung-kaḷarvà.

**Palvadora-Indica.**

**Eng.—Tooth-brush tree (Tall).**

| | |
|---|---|
| Tel. Pedda-vara-gógu పెద్దవర గోగు. | Pers. Darakhte - misvàk درخت مسواك * |
| Arab. Aràk عراك * | Hind. Barà-pílu بڑا پیلو * |

ப - உ.—இலை, பூ, பழம், பட்டை, வேர்ப்பட்டை.

**செய்கை.**

**இலை.**
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**பூ.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
மலமிளக்கி - ஸுவ்ரேசநி - Laxative.

**பழம்.**
வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative
கற்கரைச்சி - பாஷாணபேதநி - Lithontriptic
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
நீர் மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**வேர்.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி - Vesicant.

**பட்டை.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—குடற்காற்று, கோழை, மலக்கிருமி, பிரமேகம், சிராத்தலை வலி, குட்டம் இவைகளைப்போக்கும்; சூதகத்தடை, வாதரோகம், விடக்கடி இவைகளையும் குணமாக்கும்.

### இலை.

**வ - கு.**—இலையை முறைப்படிக் கஷாயமிட்டு ¼ முதல் ½ ஆழாக்கு வரையில் உண்டுவரச் சுவாசம், காசநோய் குணமாகும்.

இலைச்சாறு ½, 1 தேக்கரண்டி வீதம் சருக்கரை சேர்த்துத் தினம் இரு வேளைகொடுத்துவரப் பாலருக்கு தேகமெலிவு நீங்கி, கணைச்சுரம் சுகமாகும்.

இலையை விடசிகிச்சைக்கு உபயோகப்படுத்தலாம்.

இலையைப் புற்கை செய்து வேதனைதருகின்ற வீக்கங்கள், மூலம் முதலிய வைகளுக்கு வைத்துக்கட்டலாம்.

**பூ.**

பூவிலிருந்து ஒருவித எண்ணெய் எடுப்பதுண்டு. இது வாதநோய், கபம், குட்டம், வெள்ளை, தலைவலி, மலக்கிருமி இவைகளைப் போக்கும்.

**பழம்.**

இதை இடப்பாட்டூரல்வீக்கம், வாத நோய், கட்டிகள் முதலிய நோய் களுக்கு உபயோகப்படுத்தலாம்.

பாம்புக்கடிக்கு வெங்காரத்தோடு சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க விடந் தீருமென்று கொள்ளப்படுகின்றது.

இதை அரைத்து மிகுந்த பாதையைத் தருகின்ற வாத வீக்கங்களுக்குப் பூசலாம்.

**பட்டை.**

இதை முறைப்படிக் கஷாயமிட்டு அரை ஆழாக்கு வீதம் கொடுத்துவர, தேகபலத்தையுண்டாக்கும். மாதாந்தர ருதுவைக் கிரமப்படுத்தும், சுரத்தைப் போக்கும்.

**வேர்ப்பட்டை.**

இதைச் சிதைத்து வீக்கங்களில் வைத்துக் கட்ட வீக்கம் அடங்கும். சிலசமயம் இது கட்டியவிடத்தில் கொப்புளிக்கும்.

---

## களா—Kaḷà.

**வே - பெ.—கிளா, கிளாய்.**

**Capparis Diffusa. (Carissa)**

**Eng.—Bengal currants.**

| | |
|---|---|
| Tel. Kalivi కలివి. | Sans. Karamarda करमर्द: |
| Mal. Kiḷa കിളാ. | Hind. Karando. کروندا |

இது குத்துக்காடுகளிலும், வேலியோரங்களிலும், கிராம வேலிகளிலும் பயிராகும் செடி வருக்கம். முள்ளுள்ளது, கிள்ளினால் பால்வரும், காயில் செந்நிறமும், பச்சை நிறமும் கலந்திருக்கும். பழுத்தபின் கருமை நிறத் தையடையும். இதன் காயைப் பதார்த்தமாக உபயோகித்தல் வழக்கம். இதில் இருவிதமுண்டு. அவை **சிறுகளா, பெருங்களா.**

சிறுகளா (Carissa Spinarum).
பெருங்களா (Carissa Caranders).

**ப - உ.**—பூ, காய், பழம், வேர்.

**சுவை.**—இனிப்பு, புளிப்பு, **வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.**

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - stomachic.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- பேறுவலியுண்டாக்கி - பிரசவகாரி - Parturifacient.

**பூ.**

**குணம்.**—நேத்திரத்திலுண்டான கரும்படலம், வெண்படலம், இரத்தப் படலம், சதைப்படலம் இவைகளை நீக்கும்.

கண்ணிற் படருங் கரும்படலம் வெண்படலம்
வண்ணவுதி ரப்படலம் வன்சதைகள்—எண்ணற்
களாவிநோய் போக்கும் அணங்கே ! சிறிய
களவினது பூவொன்றுங் காண். (அ.கு.)

**காய்.**

காதடைப்பு, தாகம், பித்ததோடம், வாந்தி, அருசி, இரத்தபித்தம் இவைகளை நீக்கும். மிகுபசி யுண்டாக்கும்.

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே ! அரோசகமும் மாறுங்காண்—தீதாம்
இரத்தபித்தம் போகும் இனிய களாக்காய்க்
குரத்த பசியும்உண்டாம் ஓது. (அ.கு.)

**பழம்.**

இதை மிகுபசியில் உண்டால் சீதரத்தமும், அதிமந்தத்திலுண்டால் நற்பசியுமுண்டாம். தொண்டை வலியும், தலைகனப்பும் நீங்கும்.

நல்ல பசியிலுண்டால் நண்ணுமே சீதரத்தம்
வல்லமந் தத்திலுண்டால் மாபசியாம்—மெல்லப்
புரையார் களநோய்போம் போற்றுசிர நீர்போந்
தரையார் களாப்பழத்தைத் தான். (அ.கு.)

**வேர்.**

விடரோகம், பித்தம், கபாதிக்கம், கபவியர்வை, அதிதாகம், பிரசவ அழுக்குச்சிக்கல், மந்தாக்கினி இவை நீங்கும்.

விடத்துறுநோய் பித்தமையம் வேர்வையதி தாகந்
திடத்தவுதி ரத்தினது சிக்கல்—சடத்துளெழும்
அக்கினி மந்தமிவை யண்டா தொருநாளும்
சிக்கெனக்க ளாவேரைச் சேர். (அ.கு.)

**பூ.**

**வ - கு.**—கண்களிலுண்டாகும் ரோகங்கள் யாவற்றும் முதிராததற்கு முன், இப்பூவைக் கசக்கிக் கண்களில் சூரியவுதயத்திற்குமுன் இரண்டு மூன்று துளி விட்டுவர அவைகள் சாந்தமாகும். கண்களில் பூ விழுந்திருந்தால் அதைப் போக்கும்.

“ நாரி கேளாஞ்சனம் ” என்கிற தைலத்தில் இது ஓர் முக்கியமான சரக்கு.

**காய்.**

மிளகாய்த்தூள், கறிமஞ்சள்தூள், உப்பு, பூண்டு, வெந்தயம் இவை களைக்கலந்து காயோடு பிசறி, புளித்த மோரிலிட்டு வெயிலில்வைத்து நீர் சுண்டியபின் கடுகிட்டுப்பொரித்த நல்லெண்ணெய் விட்டுப் பாகப்படுத்தி உணவுடன் கொள்ளப் பசியைத் தூண்டும். எளிதில் சீரணமாகும். பித்தத்தாலுண்டாகும் பிணிகள் சாந்தமாகும்.

புளித்த மோரில் காய்க்குத்தகுந்தபடி உப்புச் சேர்த்து ஊறவைத்தும், தயிருடன் சேர்த்துப் பச்சடி செய்தும் உண்ணலாம்.

**பழம்.**

இதைத் தக்க அளவிலுட்கொண்டால் இரைப்பைக்கு வலிவுண்டாகும். தீபனத்தைத்தரும். உடல் வெப்பம் நீங்கும். அதிகமாய்க் கொண்டால் வயிற்றில் காற்றுப் பெருகும்.

## களிப்பாக்கு—Kaḻip-pàkku.

**Eng.—Areca-nut boiled tender.**

Tel. Pokachekka పోకచెక్క.
Mal. Kalippakka കളിപ്പാക്ക്.
Sans. Kramukam क्रमुकम्.
Kan. Adikai ಅಡಿಕೆ.
Urdu. Chickni-supari * چکنی سپاری

இது, பச்சைப் பாக்கைத் துண்டு துண்டாக வெட்டி வேகவைத்து இலேசாக உலர்த்தி எடுத்துக்கொள்வதனாலுண்டாவது.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- சாயமேற்றி - Tœnifuge.

**குணம்.**—நெஞ்சிற் கோழையும், அதிசாரமும், மனமகிழ்ச்சியும் உண்டாகும். பித்த அருசி ஒழியும்.

களிப்பாக்குத் தின்றக்காற் கண்டத்துட் கோழை
யொளிப்பாகக் கட்டுமிஃ துண்மை—தளிர்ப்பான
பித்த அரோசகம்போம் பேதிமிக உண்டாகுஞ்
சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு. (அ.கு.)

மேலும் உமிழ் நீரைப் பெருக்கி வியர்வையைக் குறைத்துப் பல்லீற்றுக்கு உறுதியை உண்டுபண்ணும்.

**வ - கு.**—களிப்பாக்கை, மருந்து உண்டவரும், சுர நோயாளரும் வாயிற் போட்டுக்கொள்ளுவர்.

அதிகமாய்ச் சாப்பிட்டால் சோபநோயுண்டாகும்.

வெற்றிலை, சுண்ணும்போடு சேர்த்து மென்றுவரின் வாய்க்கு நறுமணமுண்டாகி மகிழ்ச்சியைத் தரும். உணவு செரிக்கும்.

பாக்கை வறுத்துப் பொடித்து, இதற்குச்சமன் காசுகட்டி, இந்துப்பு, ஓமம், படிகாரம் சேர்த்துப் பொடித்துப் பல் தேய்த்துவரப் பல்லரணை, ஈறுவீக்கம், வாய்நாற்றம் முதலியவை நீங்கும்.

---

## கள்ளி—Kaḻḻi.

**Euphorbia Tirucalli.**

**Eng.—Milk Hedge plant.**

Tel. { Jemudu జెముడు. / Kada-jemudu కాడ జెముడు. }
Mal. { Kòl-kaḻḻi കോൽകള്ളി. / Tiruk-kaḻḻi തിരുക്കള്ളി. / Kaḻḻi കള്ളി. }
Kan. Bonta-kaḻḻi ಬೊಂಟೆ ಕಳ್ಳಿ.
Sans. { Dugdhika दुग्धिका. / Snuhi स्नुही. }
Hind. { Barki-sehund * بڑکی سہنڈ / Barki-thohar * بڑکی تھوہر }
Duk. { Bàṛkì-sènd * بڑکی سہنڈ / Kàṛìkì-sènd * کاری کی سہنڈ }

இந்தியாவில் எப்பாகங்களிலும் சாதாரணமாய்க் கிடைக்கக்கூடியது. இது பலவகைப்படும். முக்கியமானவை— **திருகுகள்ளி, சதுரக்கள்ளி, இலைக்கள்ளி, கொம்புக்கள்ளியாம்.**

**சுவை.**—கைப்பு - கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**திருகுகள்ளி.**

**குணம்.**—திருகுகள்ளிப் பாலினால் கஞ்சவாதம், கிரந்தி, பெருவியாதி, சீதக்கட்டு, கிருமிரோகம், பக்கசூலை, கரப்பான் இவை போம்.

வாத முடக்ககலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேருமோ ?—மாதே !
பருகுபக்க நோயுடனே பாழ்ங்கரப்பான் நீருந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி. (அ.கு.)

**அளவு.**—உறைந்தபால் ஒன்று முதல் இரண்டு குன்றி.

**பட்டை.**

கள்ளி மரப்பட்டையினால் நரம்புச் சிலந்தி, கபவாத தொந்தம், சந்நிபாதம், வாதப்பிரகோபம் நீங்கும்.

நரம்புச் சிலந்தி நளிர்வாத சந்நி
யுரம்பெரிய வாதமிவை யோடும்—பெரும்புவியிற்
கள்ளிமரப் பட்டையினால்
. . . . . . . . . . . . . . . . (அ.கு.)

**வ - கு.**—கள்ளிப்பாலை தேள்கொட்டிய வாயிலிட வேதனையடங்கும்.

வெண்ணெயில் இரண்டொரு துளிவிட்டு உள்ளுக்குக் கொடுக்க இப்பாட்டூரல் வியாதியைக் கண்டிப்பதுமன்றி, விரேசனகாரியாகவும் உதவும்.

குருத்தைக் கஷாயமிட்டு குன்மங்களுக்கும் ஆமாசய நோய்களுக்கும் கொடுக்கத் தீரும்.

---

## கொடிக்கள்ளி—Kodik-kalli.

**வே - பெ.—திருஷ்டிக்கள்ளி.**

**Cynanchum Viminale.**

இது இந்தியாவில் எங்கும் பயிராகும். ஆனால் விசேஷமாக மலைக் காடுகளில் காணலாம்.

**ப - உ.**—பால், முற்றின இலை (பழுத்த கொம்பு).

**சுவையும், செய்கையும்** பெரும்பாலும் இதரகள்ளிகளுக்குள்ளனவேயாகும்.

**குணம்.**—அசீரணத்தையும், மந்தத்தையும், வாத தோடத்தையும் போக்கும். மலத்தைக் கழிக்கும். சிறு குழந்தைகளுக்குண்டாகும் கரப்பான், தொண்டைக்கட்டு, சொறி, சிரங்கு இவைகளையும், பெருவிரணம், அக்கினிகீடக்கடி, குன்மம் இவைகளையும் போக்கும்.

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும்போம்
செய்யகடி குட்டநோய் சேருமோ—மெய்யில்
அடிக்கடிசேர் குன்மவலி யத்தனையுந் தீரும்
கொடிக்கள்ளிப் பாலுக்குக் கூறு. (அ.கு.)

**வ - கு.**—இதை வைக்கோற்றீயில் வாட்டிப் பிழிய, தெள்ளிய இரசம் வரும். இதில் $\frac{1}{4}$, $\frac{1}{2}$ உச்சிக்கரண்டி வீதம் முலைப்பாலுடன் கலக்கிக் குழவிகட்குப் புகட்ட மேற்கண்ட சிறுவர்கட்குண்டாகும் பிணிகள் நீங்கும். அரை, ஒரு பலம் வீதம் முதியோர்களுக்குக் கொடுக்க மலபந்தம், அஜீரணம், வாததோடம் விலகும்.

---

## சதுரக்கள்ளி—Ṣhadurak-kaḻḻi.

**Euphorpia Antiquorum.**

**Eng.—Quadrangular Spurge.**

Tel. { Bonta - jemudu బొంత జెముడు. ; Bedda-jemudu పెద్ద జెముడు. }

Mal. Chaturak-kalli ചതുരക്കള്ളി.

Kan. Katak-kalli ಕಟಕ್‌ಕಳ್ಳಿ.

Sans. { Vajratundi वज्रतुण्ड. ; Vajradantaka वज्रदन्तका. ; Mahasnuhi महास्नुहा }

Hind. { Tidhara تی دھارا * ; Sehund سہنڈ * }

Duk. { Tiṅ-dhàrì-sènd تین دھاری سہنڈ * ; Tidhàrì - sènd تی دھاری سینڈ * }

இந்தியாவில் வளருகின்ற ஒருவகை சிறு மரம்.

**ப - உ.**—பால், தண்டு, வேர்ப்பட்டை.

**சுவை.**—கைப்பு - கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—கள்ளியின் கீழ்க் காண்க,

**குணம்.**—கரப்பான், சொறி, கபநோய் குன்மம், சீதம் இவைகளைப் போக்கும். பேதியுண்டாக்கும்.

கரப்பான் சொறியுங் கடியுங் கபமும்
உரப்பான குன்மம் ஒழிக்கும்—நிரைப்பான
பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகிற்
ரதுசது ரக்கள்ளி தான். (அ.கு.)

**பால்.**

குட்டம், காணுக்கடி, சூலை, வாதகுன்மம், வாதநோய், வாதப்பிரமேகம், கிருமிநெளிகின்ற துட்டவிரணம், கரப்பான் இவைகளைப்போக்கும்

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாயு
துட்டக் கிருமியொடு தூறுபுண்ணு—முட்ட
முதிரக் கரப்பனும்போ மொய்குழலே ! நாளுஞ்
சதுரக்கள் ளிப்பாற்குத் தான். (அ.கு.)

**வ - கு.**—கள்ளிப்பால், பாலுண்ணி முதலிய சருமத்திலுண்டாம் வியாதிகளுக்கும், வாத சம்பந்தமான வீக்கங்கள், பல்வலி முதலிய நோய்களுக்கும் உதவும்.

இதன் பாலையுலர்த்தி 2 குன்றியெடை கொடுக்கப் பேதியாகும். இப் பாலை, புளியுடனும் சீரகத்துடனும் உறவுபடவரைத்து 1, 2 குன்றியளவில் கொடுக்கப் பேதியாகும் ; ஆனால் கொடூரமாயிராது. மூட்டு வீக்கங் கரையும். கரப்பான், சொறி, கபநோய், குட்டம், காணுக்கடி, சூலை, குன்மம். முதலியன நீங்கும்.

மூட்டு வீக்கத்திற்கு இதன்பாலைத்தடவி, வேர் மண்ணை அதன்மீது தூவுவது கிராமப் பழக்கம்.

இப்பாலின் செயனீர், உபரசங்களைச் செந்தூரிக்க வுதவும்.

**தண்டு.**

தண்டைச் சுட்டுச் சாம்பலாக்கி துஷ்டவிரணங்களின் மீது தூவிவரச் சுகமுண்டாகும்.

**பட்டை.**

வேர்ப்பட்டையை நரம்புச் சிலந்தியின்மீது வைத்துக் கட்டலாம்.

---

## கள்ளிமுளையான்—Kal̤l̤i-mulayàn.

Stapelia Virgata.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic

**குணம்.**—தீபனத்தையுண்டாக்கும். வாதபித்த தோடத்தை மாற்றும்.

வாய்க்குப் புளித்திருக்கு மன்பசியை யுண்டாக்கும்
எய்க்குமுடற் வாதத்தை யேறுபித்தஞ்—சாய்க்குந்
தெள்ளிய வின்பமொழித் தெய்வ மடவனமே!
கள்ளிமுளை யானருந்திக் காண். (அ.கு.)

**வ - கு.**—இதைப் பச்சையாகவேனும், துவையல் (சட்டினி)செய்தேனு முண்டுவர மேற்கண்ட குணமுண்டாகும்.

---

## கறிப்பாலை—Karip-pàlai.

Asclepias Asthmatica.

Eng.—Vomitting swallow-wort.

Tel. { Kukka-pala కుక్క-పాల.
Verri-pala వెర్రిపాల.

Mal. Vallipal വള്ളിപ്പാൽ.

Kan. Adumuttoda, Kirumanji ಕಿರುಮಂಜಿ.

Sans. Moolinee, Pandhana मूलिनी-पन्धाना.

Hind. Jangli-pikwan * جنگلی پکوان

இந்தியா முழுவதும் வளருகின்றது.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

**குணம்.**—பிரமேகவெப்பம், சீழ்மேகசுரம், பித்தகோபம் இவை போம். சுக்கிலவிருத்தியுண்டாகும். ஔஷதத்தை முறிக்கும்.

மேகமனல் வெட்டைசுரம் வீறுபித்த முந்தொலையும்
போகமுறு மெய்ம்மருந்தும் பொய்மருந்தாம்—பாகுமொழி
மானே ! கறிப்பாலை மன்னுமிலை யைத்தினமுந்
தானே யருந்துவர்க்குத் தான். (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையைச் சமைத்தாவது, இலையை யுலர்த்திச் சூரணஞ் செய்தாவது தக்க அளவில் ($\frac{1}{8}$—$\frac{1}{4}$ வராகனெடை) சாப்பிட்டுவர மேற் கண்ட நோய்கள் தணியும்.

இலையை உலர்த்திச் சூரணித்து நன்முய் வஸ்திரகாயம் செய்து $\frac{1}{2}$ வராகனெடை கொடுக்க, வாந்தியை யுண்டுபண்ணும்.

சிறிய அளவில் அதாவது 1 முதல் 2 குன்றியெடை கொடுக்க, கோழை யகற்றியாகவும், வேர்வையுண்டாக்கியாகவுமிருக்கும்.

இச்சூரணம் 5 குன்றி, வேலம் பிசின் 2 குன்றி, அபின் 1 அரிசி யெடை சேர்த்துக் கொடுக்கச் சீதபேதி நிற்கும்.

இதன் வேரை முலைப்பால்விட்டு அரைத்து நெற்றியிலிடத் தலைவலி நீங்கும்.

---

## கறிவேம்பு.—Kari - Vembu.

**வே - பெ.—கறிவேப்பிலை, கருவேப்பிலை, கறியபிலை.**

Bergera Kóēnigii ; Murraya Konigii.

**Eng.** Curry leaf.

| | |
|---|---|
| Tel. Kari - Vepa - Chettu. కరివేపచెట్టు. | Sans. Surabhinimba. क्रिणनिंब. |
| Mal. Kari - Véppa. കറിവേപ്പ്. | Hind. Karaypak. * کریپاک |
| Kan. Kari bevu - Kari bevina-Gida. (ಕರಿಬೇವು) ಕರಿ ಬೇವಿನಗಿಡ. | Duk. Karepak. کارئیپاک<br>* Karayapak. - کراپپاک |

இது இந்தியாவில் மிக்க ஏராளமாய் வளருகின்ற பெருஞ்செடியினம். காடுகளிலும், மலைகளிலும், வீட்டுக் கொல்லைகளிலும், தோட்டங்களிலும் பயிராகும். இதனிலை ஒருவித நறு மணத்தைக் கொடுக்கும். இந்தியர்களில் பெரும்பாலர் தங்கள் வீட்டில் செய்யப்படும் கறி வகைகளிலும் குழம்பு, மிளகுநீர், நீர்மோர் போன்ற திரவப் பொருள்களிலும் இதனிலையைத் தாளிதமாய்ச் சேர்த்து உண்பார்கள்.

**ப - உ.**—இலை, ஈர்க்கு, பட்டை, வேர்.

**சுவை.**—சிறுகார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்நிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—கருவேப்பிலையால் அரோசகம், சீதபேதியால் வரும் வயிற்றுளைவு, பழஞ்சுரம், பயித்திய தோடம் ஆகிய இவை நீங்கும்.

வாயி னருசி வயிற்றுளைச்ச லீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுங்காண்—தூய
மருவேறு காந்தளங்கை மாதே ! யுலகிற்
கருவேப் பிலையருந்திக் காண். (அ.கு.)

**வ - கு.**—இதன் இலை, பட்டை, வேர் இவைகளைக் கஷாயமிட்டுக் கொடுக்க, பித்த சாந்தியாகும். வாந்தியும் நிற்கும்.

இலையை நிழலிலுலர்த்தி, இத்துடன் மிளகு, உப்பு, சீரகம், சுக்கு முதலியவற்றைப் பொடியாக்கி சோற்றில் கூட்டி கொஞ்சம் நெய்விட்டுப் பிசறி உண்ண மந்தம், மந்தபேதி, மலதோடம், மலக்கட்டு, கிரகணி, பிரமேகம் இவை சாந்தமாகும்.

இலையுடன் சுட்டபுளி, வறுத்த உப்பு, வறுத்த மிளகாய் கூட்டித் துவையல் செய்து ஆகாரத்துடன் சாப்பிட அரோசகம், அதிசாரம், பித்தவாந்தி, பித்தக்ஷயம், செரியாமை, வயிற்றுளைச்சல் இவைகள் குணமாகும்.

ஈர்க்கின் புறணியை முலைப்பால் விட்டு இடித்து இரசம்பிழிந்து, கிராம்பு, திப்பிலி சேர்த்து 2, 3 தரம் குழந்தைகட்குப் புகட்ட வாந்தி நிற்கும். பசி தீபனத்தை யுண்டாக்கும்.

அரிசியுடன் இலையைச் சேர்த்து உரலிலிட்டுக்குத்தித் தேய்த்துப் புடைத்துவிட்டு, அவ்வரிசியுடன் ஒரு பழுத்துலர்ந்தமிளகாய் கூட்டிக் கருக்கி சாந்துநிறம் வரும்பக்குவத்தில், வசம்புச் சாம்பல், சிறு நாகப்பூ, அதிவிடயம் இவைகளைச் சேர்த்து நீர்விட்டுச் சுண்டக்காய்ச்சிக் கொடுக்க அசீரண பேதி முதலியன நீங்கும்.

இதன் ஈர்க்குடன் வேப்பீர்க்கு, நெல்லியீர்க்கு, சேர்த்து இடித்து நீர் விட்டுக் காய்ச்சிக் கொடுக்க வாந்தி உடனே நிற்கும்.

மேற்படி இலையிற் சிறிதும், வயதுக்குத்தக்கபடி 1, 3 மிளகையும் சேர்த்து நெய்யில் வறுத்து, வெந்நீர் விட்டு அரைத்துக் கரைத்து பாலர் களுக்கு நீராட்டியபின் குடிப்பிக்க மந்தம் முதலியன நீங்கிப் பசியை யுண்டு செய்யும்.

---

## கறிமுள்ளி—Kari - Mulli, பப்ரமுள்ளி—Pappramulli.

Solanum Indicum.

Eng.—Indian Nightshade.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Tella mulaka.** | తెల్ల ములక. | **San.** | **Brihati,** | **बृहति.** |
| **Mal.** | **Cheruchunda.** | ചെറുചുണ്ട. | **Hind.** | **Barahanta** | * براهنتا |
| **Kan.** | **Kiriguligida.** | ಕಿರಿಗುಳಿಗಿಡ. | | | |

இந்தச் செடி இந்தியா முழுவதும் பயிராகும்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**சமூலம்.**
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
வீக்கங்கரைச்சி - Resolvent.
குருதிப்பெருக்கி - ரக்தவர்த்தநி - Cordial.

**வேர்.**
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—நெஞ்சிற் கோழைக்கட்டு, காசம், தமகசுவாசம், சிலேத்ம சுரம் இவை நீங்கும். மேலும் சூலை, மந்தாக்கினி, கபதோடம் முதலியவைகட்கு உபயோகப்படும்.

ஈளை யிருமல் விரைப்புச்சு வாசமறும்
வாளைவென்ற கண்ணாய்! வழுத்தக்கேள்—நாளையினி
யில்லைக் கடலுலக மெங்குங்க பச்சுரநங்
கொல்லைக் கறிமுள்ளி கொள். (அ.கு.)

**காய்.**

வாதபித்த கபதோஷம், சுரம், சுவாச ரோகம் இவை நீங்கும்.

வாதபித்த ஐயத்தை மாற்றும் அனல்போக்கும்
ஒது சுவாசத்தை யோட்டுங்காண்—பூதலத்துள்
துள்ளிப்பாய் கெண்டைவிழித் தோகாய்கேள் ! எப்போதும்
முள்ளிக்காய் செய்யும் முறை. (அ.கு.)

**வ - கு.**—சமூலத்தை 1-க்கு 10 நீர் சேர்த்துக் கஷாயமிட்டுக் கால் முதல் அரை ஆழாக்குவீதம் கொடுத்துவர, மூத்திரத்தடை, மூத்திர எரிச்சல் முதலியன நீங்கும்.

இதை வற்றலிட்டு வறுத்தும், ஊறுகாய் செய்தும் உட்கொள்ளலாம்.

---

## கற்கோவை.—Karkòvai.

**Bryonia umbellata.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—சோபையை விலக்கும்.

**வ - கு.**—இலையை அல்லது சமூலத்தை யிடித்துப் பிழிந்த சாற்றை முறித்துத் தெளிவெடுத்து $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் ஒரு நாளைக்கு இரண்டு முறை கொடுத்துவர மூத்திரம் அதிகப்பட்டு இழியும். சோபை நீங்கும்.

---

## கற்பாசி.—Karpasi.

**Parmelia Perlata.**

**Eng.—Stone flowers-**

Tel. Rāti - pachi, Ráti - puvvu. రాతిపాచి ; రాతిపువ్వు.

Mal. Kalp - pausi. കൽപ്പാശി.

Kan. Kallu- huvvu. ಕಲ್ಲು ಹೂವು

Sans. Silapushpam शिलापुष्पम्.

Hind. Patthar - kà - phul. * پتھر کا پھول

Pers. Gule - sang. * گل سنگ

Arab. Khirazus - Sakhar. * قراذ سقر

இது சுவர், பழைய மரக்கட்டைகள், பெரு மரங்கள், கற்பாறை இவைகளில் உண்டாகின்ற ஒருவகைப்பாசி. சாதாரணமாய் கற்பாறையில் உண்டாவதால் **கற்பாசி** எனப்பெயர்.

இது மழையாற் பிறக்கும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent.
- வீக்கங்கரைச்சி - Resolvent.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**குணம்.**—நீடித்த மேகத்தையும், அதிசாரத்தையும் நீக்கும். வாசனைத் திரவியங்களிலொன்ருகப் பொருந்தும்.

பண்டை மேகத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்டும்
மண்டையெறி வாசனையி லாருங்காண்—தொண்டைக்
கனிக்குமொழி யூட்டுமிதழ்க் காரிகையே ! காரநற்
கனிக்குமொரு கற்பாசி தான். (அ.கு.)

**வ - கு.**—இதைப் புற்கைசெய்து அடிவயிற்றிலும், முள்ளந்தண்டின் அடிப்பாக வெலும்பினிடத்திலும் பூச, மூத்திரத்தைத் தாராளமாக இறங்கச் செய்யும்.

இதை உலரவைத்து முலைப்பால் சேர்த்தரைத்து நெற்றியிற்றடவ தலை வலி நின்றுபோம்.

---

## கற்ருமரை—Kartámarai.

Mal. Kalthamara. കൽതാമര.

இது மலையில் உற்பத்தியாகும் ஒருவகை இலை. இது தாமரையிலையைப் போலிருக்கும். ஆனல், சாதாரண தாமரையிலையை விடத் தடித்திருக்கும்.

**சுவை.**—கார்ப்பு - விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—சுக்கிலத்தையும் பலத்தையும் விருத்தியாக்கும். குட்டத்தை நீக்கும். காரீயத்தைச் செம்பாக்கும்.

வீரிய விருத்திதரு மெய்க்குப் பலம்கொடுக்குங்
கூரிய குட்டுதனைக் கோபிக்குங்—காரீயத்தை
நற்ரும் பரமாக்கு நங்காய் ! அடுக்கலுறை
கற்ரு மரையதனைக் காண். (அ.கு.)

**வ - கு.**—இதையுலர்த்திப் பொடிசெய்து சருக்கரையுடன் கலந்து காலை மாலை ஒரு சிட்டிகைத்தூள் கொண்டு உடனே பாலைக்குடித்துவர உடல் பலக்கும், சுக்கிலம் பெருகும். உப்பு புளி யாகா.

காரீயத்திற்கு இலையை யரைத்துக் கவசமிட்டு குக்கிட புடமிட்டுவர காரீயம் தாம்பிரமாக மாறும்

---

## கற்ருழை—Kartazhai.

**வே - பெ.—கன்னி, குமரி.**

Aloe Perfoliata

Eng. Indian Aloes.

Tel. Kalabanda. కలబంద.

Mal. Kattuvazha. കറ്റുവാഴ.

Kan. Kathalai gida, Lolisara. ಲೋಳೆಸರ.

Sans. Kumari. कुमारी.

Hind. Ghikauvar. گھی کنوار

இது இந்தியா முற்றிலும், ஆற்றங்கரைகளிலும், சதுப்பு நிலங்களிலும் தோட்டங்களிலும் பயிராகும்.

இதில் பல சாதியுண்டு. அவை **சிறுகற்றாழை, பெருங்கற்றாழை, பேய்க்கற்றாழை, செங்கற்றாழை,** என்பனவாகும்.

இது பலவகைப்படினும், அவற்றின் பொதுக்குணமும் செய்கையும் சற்றேறக்குறைய ஒத்தேயிருக்கும்.

சிகப்பு வகை கிடைப்பதரிது. இதன் பெருமையை போகர் ஏழாங் காண்டத்தில் காண்க.

**ப - உ.**—பால், சோறு, சாறு, சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - குளிர்ச்சி, **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
- நீர்மலம்போக்கி - விரேசநி-Purgative.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**பொது.**

**குணம்**—வாதமேகம், கபமேகம், கிருமிக்குத்தல், பெருவியாதி, மூலம், உன்மாதம், பகந்தரம், குன்மம், பித்தகிரிச்சரம் இவைபோம்.

பொல்லாமே கங்கபம்பு மூச்சூலை குட்டரசம்
அல்லார்மத் தம்பகந்த ரங்குன்மம்—எல்லாம்விட்
டேகு மிரிக்கு மெரிச்சற் கிரிச்சரமு
மாகு மிரிக்கு மருண்டு. (தே.கு.)

**வ - கு.**—இளமடலுடன், சீரகம், கற்கண்டு சேர்த்தரைத்து, இரத்தமும் சீதமும் கலந்த பேதிக்குக் கொடுக்கலாம்; மஞ்சள் சிறிது சேர்த்து அரைத்து, ஆரம்ப பிலீக வளர்ச்சிக்குக் கால், அரை பலம் வரையில் உபயோகிக்கலாம்.

**பேய்க்கற்றாழை, செங்கற்றாழை.**

பேய்க்கற்றாழைக்கு அதிநீரும், சரீர எரிவும், சுரமும், செங்கற்றாழைக்கு உள்ளழலையும் போம். இதனால் இரும்பு தங்கமாகும்.

பேய்க்கற்ற ழைக்குப் பெருமேகம் மெய்யெரிச்சல்
ஏய்க்கக்கூ டாஅழலும் ஏகுங்காண்—தாய்க்குநிக
ராஞ்சிவந்த கற்றாழை யங்கங் குளிர்விக்கும்
பாய்ஞ்சயத்தைப் பொன்னாக்கும் பார். (அ.கு.)

**வ - கு.**—கற்றாழையின் சோற்றை எடுத்துப் பலமுறை கழுவச் சுத்தமாகும். இதில் சிறிது படிகாரம் அல்லது சீனாகற்கண்டு சேர்த்துச் சிறு துண்டில் முடிந்து தொங்கவிட்டு அதன்கீழ் ஒரு பாத்திரம் வைக்க அதில் நீர் வடியும். இதைக் கண்களில் விட, கண்ணோய், கண்சிவப்பு, கண்ணருகல், முதலியன மாறும்.

இதன் தனிச்சாற்றை, வெப்பத்தைத்தணிக்கத் தகுந்த பற்பச் செந்தூரங்களுக்கு அனுபானமாக உபயோகிக்கலாம்.

இதுவே பற்ப செந்தூரஞ் செய்யவுமுதவும்.

இதன் சாற்றைக் கொண்டு எண்ணெய், நெய், இலேகியம் முதலியன செய்து மேற்கூறிய வியாதிகளுக்கு உபயோகிக்கலாம்.

இந்தச் சாற்றை வெதுப்பி மாந்த ரோகங்களுக்கும் ஊழியால்காணும் தாகத்திற்கும் உபயோகிக்கலாம். தாபிதங்களுக்குப் பூச தாபிதங்கள் தணியும். சிறிது அபினி சேர்த்துத் தலைக்குப் பற்றிட தலை நோய் நீங்கும்.

நல்லெண்ணெய் சம பாகம் கலந்து காய்ச்சி சிரசில் தடவிவர, தூக்கம் உண்டாகும். வெண்ணெய், கற்கண்டு வால்மிளகுத்தூள் இவைகளைச் சாற்றுடன் சேர்த்துண்ண மூத்திரக்கிரிச்சரம், உடலரிப்பு, உள்வெட்கை நீங்கும்.

**சோறு.**

சோற்றை எடுத்து எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைக்குத் தேய்த்துத் தலை முழுகிவர, கூந்தல் வளரும். நித்திரை உண்டாகும்.

சிற்றாமணக்கெண்ணெய் பலம் 10-ல் கற்றாழைச் சோறு பலம் 2½ ஊறவைத்து அரைத்து, வெந்தயம் பலம் ¼, சிறுக அரிந்த வெள்ளை வெங்காயம் 1, சேர்த்துக் காய்ச்சிப் பாகத்தில் இறக்கி, வடிகட்டி அதைக் காலையிலாகிலும், இரவில் படுக்கைக்குப் போகுமுன்னராகிலும் 1 உச்சிக் கரண்டி வீதம் சாப்பிட்டுவர, உடற்சூடு நீங்கும். உடல் பெருகும், மேக அனல் மாறும்.

**பால்.**

இதை, கண்இரப்பையில் உண்டாகும் புண்களுக்குத் தடவலாம். இரும்பு அல்லது எஃகு இதனால் நீறும்.

---

## கரியபோளம்—Kariabolam.

**வே - பெ.—மூஷாம்பரம், சந்நிநாயகம், இரத்தபோளம்.**

Aloe Litoralis.

Eng. Small Aloe.

| | |
|---|---|
| **Tel.** Chinikalabanda. చిన్నికలబంద. | **Sans.** Ikshuramalika |
| **Mal.** Chenni Nayakam ചെന്നിനായകം. | इक्षुमलिका. |
| **Kan.** Lolisara. ಲೋಳೆಸರ. | **Hind.** Chhotakanvar چهوٹا کنوار * |

கரியபோளம் என்பது சிறு கற்றாழையின் உலர்ந்த பால்.

இது கறுப்பாகவும், சிவப்பாகவும் இருக்கும். இதைப்பற்றி எழுதுமுன் சிறுகற்றாழையின் குணத்தைக் கவனிப்போம்.

இது சென்னை இராஜதானியின் தென்கரை யோரத்தில் (கன்னியா குமரியில்) இயற்கையாய்த் தோன்றிப் பயிராகும். அதனால் இதற்குக் "கன்னி" என்றும் "குமரி" என்றும், இதன் பாலுக்கு "கன்னியாசாரம்", "கரியபோளம்" எனப்பெயரும் வழங்கும்.

நிற்க, இது கற்றாழை இனத்தைச் சேர்ந்த சில செடிகளிலிருந்து எடுத்து உலரவைத்துக்கொள்ளுகிறதாகவும் கருதப்படுகிறது.

மேல்நாட்டார் உபயோகத்தில் நாலு ஜாதி கரியபோளம் உண்டு.

அவை :—

(1) சொக்கோட்ரைன் Soccotrine.
(2) ஹெப்பாட்டிக் Hepatic.
(3) பார்படோஸ் Barbadoes.
(4) கேப் ஆலோஸ் Cape Aloes.

இவைகள் நிறத்தில் வித்தியாசப்படுமேயன்றி செய்கையில் வித்தியாசமில்லை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்நிவர்த்தநி - Stomachic.
- பெருமலம்போக்கி - விரேசநகாரி - Cathartic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—மார்புவலி, வீக்கம், மகாவாதம், வயிற்றுவலி, பக்கநோய், மேகக்கட்டி, கைகால்களில் உண்டாகி நிலைத்த சூலை, இவைகட்கு மிக்க உபயோகமாகும்.

மார்புவலி வீக்கம் வயிற்றுவலி பங்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம்—பாருலகில்
நீளங்கை காலில் நிலைசூலை யுங்கறுத்த
போளந் தனைக்காணிற் போம். (அ.கு.)

**அளவு.**—2, 3 உழுந்தெடையாக 2, 3 நாளுக்கொரு முறை உபயோகிக்கத் தீபனத்தை அதிகரிக்கச் செய்யும்.

5, 10 உழுந்தெடை கொடுக்க விரேசனகாரியாகும்.

**வ - கு.**—இதில் கைப்புந் துர்க்கந்தமு மிருப்பதால் தனியே கொடுக்கும் வழக்கமின்றி வேறு மருந்துகளோடு சேர்த்துக் கொடுப்பார்கள்.

மேலும், பெருங்குடலிலும் ஆசனத்திலும் போய் வியாபித்து வெப்பமுண்டாக்கும் தன்மையுள்ள தாகையால், கருப்பிணிக்கும், மூல ரோகஸ்தர்களுக்கும் எச்சரிக்கையுடன் உபயோகித்தல் முறைமையாகும். இதன் வீரியம் கருப்பையைப் பற்றின் ருதுவர்த்தனியாக முடியும்.

மேற்கண்ட நோய்களன்றி, அக்கினிமந்தம், மஞ்சள் காமாலை, சூதகக்கட்டு, சூதகப்பாண்டு, ஆகிய இவைகளையும் போக்கும்.

### கரியபோள மாத்திரை.

| | |
|---|---|
| மூசாம்பரச் சூரணம் .. .. | 2 oz. (2 அவுன்ஸ் வெடை). |
| சவுக்காரத்தூள் .. .. .. | 1 oz. (1 அவுன்ஸ் வெடை). |
| சாதிக்காய்த் தைலம் .. .. | 1 dr. (1 வராக னெடை). |
| குல்கந்து .. .. .. .. | 1 oz. (1 அவுன்ஸ் வெடை). |

ஒன்றுபட அரைத்து 5—10 உளுந்தெடை தினம் இருவேளை கொடுக்க, மேற்கூறிய வியாதிகளைக் கண்டிக்கும்.

### காய மூஷாம்பர மாத்திரை.

| | |
|---|---|
| மூசாம்பரத்தூள் .. .. .. | 1 பாகம். |
| பெருங்காயம் .. .. .. | 1 ,, |
| சவுக்காரத்தூள் .. .. .. | 1 ,, |
| குல்கந்து .. .. .. .. | 1 ,, |

ஒன்றுபட அரைத்து 5—10 உளுந்தெடை கொடுக்க, சூதகச்சந்நியில் காணும் வயிற்றுவலி நிற்கும். பேதிக்கும் இதை உபயோகிக்கலாம்.

செடியின் வேரைக் கஷாயமிட்டுச் சுரநோய்களில் சுரம் இறங்க உபயோகிக்கலாம். மேலும், இக்கஷாயத்தை, மலக்கட்டை நீக்கவும், ருது வர்த்தனியாகவும் உபயோகிக்கலாம்.

கடையிற் கிடைக்கு மிச்சரக்கு சுத்தமாயிராது. மண், கல், தூசு கலந்திருப்பதால் இதை வழங்குமுன் வெந்நீரிலிட்டுக் கரைத்து ஒரு நாள் சென்ற பிறகு வடிகட்டி சூரிய புடம்வைத்து நன்றாய் இறுகியபின் எடுத்து வழங்கவும்.

ஒன்றரை முதல் மூன்று குன்றி எடை கொடுக்க மலத்தைக் கழிக்கும்.

கரியபோளம் 12 குன்றி, அன்னபேதி 30 குன்றி இவ்விரண்டையும் போதுமான அளவு தேன் விட்டு அரைத்து அரைக்கால் வராகனெடை வீதம் நாளொன்றுக்கு மூன்று தரம் கொடுக்க, பெண்களுக்கு நேரிடும் உதிரச் சிக்கலை அறுத்து வெளிப்படுத்தி அவர்களுக்குச் சுகத்தைத் தரும்.

கரியபோளம் 10 குன்றி, அன்னபேதி 15 குன்றி போதுமான அளவு தேன் விட்டுச் சேர்த்தரைத்து, 2 குன்றி வீதம் ஆறு மணிக் கொருதரம் ஒருவாரமட்டும் கொடுத்தும், இரண்டாம் வாரத்தில் நாளொன்றுக்கு இரு முறையும், மூன்றாம்வார முதல் நாளொன்றுக்கு ஒரு முறையும் ஆகாரத்துக்குப் பிறகு கொடுத்தும்வர, நாட்பட்ட மலபந்தம் நீங்கும்.

கரியபோளம் 10 குன்றி, காயம் 10 குன்றி இவ்விரண்டும் கொள்ளத்தக்க அளவு தேன்விட்டு அரைத்து இரண்டு குன்றி எடை மாத்திரை செய்து நாளொன்றுக்கு இரண்டு தரம் கொடுக்க அஜீரணம், மந்தாக்கினி, சூதகசந்நி, சூதகவயிற்றுவலி நீங்கும்.

**குறிப்பு.**—மாதவிடாயும், மூலவியாதியில் காணும் இரத்தப்போக்கும், திடீரென்று நிற்பதால் உண்டாகும் தலை நோய்க்கு இது சிறந்த மருந்தாகும்.

72 ஆம் பக்கத்திற் குறிப்பிட்ட "இரத்த போளத்தை"யும் கவனிக்க.

---

## காக்கணம்—Kákkanam.

**வே - பெ.—காக்கணங்கொடி, சங்குபுஷ்பம், காக்கணத்தி, காக்கட்டான், காக்குறட்டை (கருங்காக்கணம்).**

**Clitoria ternatia.**

**Eng.—Butterfly pea, Winged-leaved clitoria, Mazerion.**

| | | |
|---|---|---|
| Tel. | Dintana | ఢింటన. |
| Mal. | Shangu-pushpam | ശങ്കുപുഷ്പം. |
| | Kākkanamkoti | കാക്കണം കൊടി. |
| | Kāka-valli | കാക്കവള്ളി |
| Kan. | Shanka-pushpa | ಶಂಖಪುಷ್ಪ |
| Sans. | Shankha-puspa | शङ्खपुष्प. |
| Arab. | Mézeríyúne-hindī | مازريون هندى * |
| Pers. | Darakhte-bíkhe-ḥayàt | درخت بيخ حيات * |
| Hind. | Aprājitā | اپرا جيتا * |
| | Kavā-ṭhénṭhi | كاواتنتى |
| Duk. | Phíkí-kí-jaṛ-kā-jhāṛ | پهيكى كى جڑ كا جهاڑ * |

இது, சாதாரணமாக வேலிகளின் ஓரத்திலும், தோட்டங்களிலும் வைத்துப் பயிராக்கும் ஒருவகைக் கொடி. இந்தியாவில் எங்கும் கிடைக்கக் கூடியது. இக்கொடியின் பூக்களின் நிறவேற்றுமையைக் கொண்டு **வெள்ளை, நீலம்** என இருவிதமாக இது பிரிக்கப்பட்டிருக்கின்றது. இதில் வெள்ளையினமே சிலாக்கியமுடையது. இதன் விதைக்குக் காக்கண விதை அல்லது காக்கட்டான் விதை எனப்பெயர். இது புளிப்பாயும், நறுமணத்தோடுங்கூடியிருக்கும்.

வெள்ளைப்பூவுடையதற்கு "**வெண்காக்கட்டான்**" என்றும், நீலப்பூவுடையதற்கு "**கருங்காக்கட்டான்**" என்றும் பெயர் வழங்கும்.

**ப - உ.**—இலை, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு

**வேர், விதை.**

**செய்கை.** { மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**(வெண்காக்கட்டான்) வேர்.**

**குணம்.**—இதனால் வெள்ளை, பிரமேகம், தலைநோய், சுரம், கண்ணோய், ஆமம் இவை நீங்கும். பேதியுண்டாம்.

மாதரால் வந்தவெட்டை வன்மேகஞ் சென்னிவலி
ஓது சுரம்விழிநோ யோடுங்காண் - பேதியொடு
மாக்கட்டாஞ் சீதமறு மாமூலி யாம்வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் கருது. (அ.கு.)

**(கருங்காக்கட்டான்) வேர்.**

மந்தம், மலக்கிருமி, வாதாதிக்கம், சிலேத்துமரோகம், மலக்கட்டு ஆகிய இவை நீங்கும்.

மாந்தங் கிருமியடல் வாதங் கபஇனமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண்—சூழ்ந்த
அருங்காக் குவடுகளி லண்டா மயிலே !
கருங்காக்கட் டான்வேரைக் கண்டு. (அ.கு.)

**குறிப்பு.**—சுத்தி, **விதையை** இளம் வறுப்பாய் வறுத்தும், **வேரை** பாலில் வேகவைத்தும், எடுக்கச்சுத்தியாம்.

## இலை.

**வ - கு.**—(1) இலையால் பொன் பற்பமாகும்.

(2) இதன் இலைச்சாறும், இஞ்சிச்சாறும் சமபாகமெடுத்துக் கலந்து ஒன்று இரண்டு உச்சிக்கரண்டி வீதம் கொடுத்துவர, கயரோகத்திலுண்டாகும் அதிவியர்வை நீங்கும்.

(3) இதனிலையை உப்புச் சேர்த்தரைத்து நெறிக் கட்டிகளுக்குப் பூச வீக்கங்கரையும்.

## விதை.

(1) விதையை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து 15 முதல் 20 குன்றியளவு கொடுக்க நன்றாகப் பேதியாகும். அல்லது

(2) காக்கட்டான் விதைத்தூள் 7 பங்கு, இந்துப்புப் பொடி 7 பங்கு, சுக்குத்தூள் 1 பங்கு எடுத்து நன்றாய் ஒன்றுபடக் கலந்து, ஒன்று முதல் 2 வராகனெடைப் பிரமாணம் கொடுக்க, நன்றாகப் பேதியாகும். யானைக் கால் வாதம் நீங்கும்.

## வேர்.

(3) காக்கட்டான் ஊறல் கஷாயம்.

வேர் 4—16 குன்றி.

நீர் 1 ஆழாக்கு.

ஒரு நாழிகை ஊறவைத்து எடுத்ததில் $\frac{1}{4}$, $\frac{1}{2}$ ஆழாக்குவரைக் கொடுத்துவர, சிறுநீரைப்பெருக்கும், மலத்தைக் கழிக்கும்.

(4) வேரை அரைத்து ஒன்று முதல் இரண்டு கழற்சிக்காய்ப் பிரமாணம் யானைக்கால் நோய்க்குக் கொடுத்துவரலாம்.

(5) வேர்த்தூள்—இதில் 4—8 குன்றி எடை வீதம் கொடுக்கக் குழந்தைகட்குண்டாகும், வாந்தி, ஒக்காளம், ஆமக்கட்டு, கண் நோய், தலை நோய் தீரும்.

### (6) காக்கணம் வேர் பேதிமாத்திரை.

| | | | |
|---|---|---|---|
| காக்கணம் வேர் | .. .. | 2 | வராகனெடை. |
| திப்பிலி | .. .. .. | 2 | ,, |
| சுக்கு | .. .. .. | 3 | ,, |
| விளாம்பிசின் | .. .. | 2 | ,, |

கல்வத்திலிட்டு நீர்விட்டரைத்துக் குன்றியளவு மாத்திரைசெய்து, ஒரு மாத்திரை வீதம் கொடுக்க நன்கு பேதியாகும்.

குழந்தைகட்கு அரை மாத்திரை உபயோகிக்கலாம்.

The two varieties of this plant are distinguished by the colour of their flowers, white and blue, in most of the languages in the Catalogue. In some, such as Malayalam, each variety has a distinct name. According to this, the name of the blue variety in the last named language is kaka-valli, which means the crow-creeper in allusion to the resemblance of the colour of its flowers to that of crow. But this name is applied to Mucuna gigantea in the Hortus Malabaricus and some other works.

The Tamil names Kákkaṇāṉ காக்கணாங் or Kākkaṭāṉ காக்கடான் are as frequently used for C. Ternatea as for Pharbitis nil, but they are more properly the names of the former, and should be restricted to it. The seeds of Pharbitis nil are easily distinguished by other names given under that head.

The Dukni names Kāli-Zirkí or Kāli-Zirkí-ké-bínj and Sufèd-Zirkí or Sufed Zirki-ké-bínj are occasionally applied to the seeds of C. Ternatea not only in some books, but also in some bazaars ; but these are undoubtedly the correct names of the seeds of "Pharbitis nil" and its red variety, to which they should be confined.

---

## காக்கைக்கொல்லி—Kákkai-kolli.

வே. பெ.—நஞ்சுக்கொட்டை, பேன்கொட்டை, காக்காய்க்கொல்லி.

Anamarita cocculus.

Eng.—Indian berry, Fish Berry.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kākamāri | కాకమారి. | Sans. | Kakphala | काकफला |
| | Kāki-champa | కాకి చంప. | | Kakanshika | काकान्षि |
| Mal. | Nanjinkuru | നഞ്ചിൻ കുരു. | Pers. | Zehere ; Mahi | زهره - ماهی * |
| | Kakka-kolli | കാക്കാകൊല്ലി. | Hind. | Kakmari | کاکماری * |
| Kan. | Kāka-māri-bijā | ಕಾಕಮಾರಿ ಬೀಜ. | Duk. | Kakmari | کاکماری * |

இது, இலங்கை, மலையாளம், பர்மா முதலிய இடங்களில் வளரும் ஒரு வகைச் செடி. இதன் கொட்டையை உலர்த்திக் கடைகளில் விற்பது வழக்கம். இதன் உருவம் சுண்டைக்காயைப் போன்றிருக்கும். ஆனால்,

தோல் கறுத்துச் சுருங்கி இருக்கும். உள் பருப்பு மஞ்சள் நிறமாகவும் தைலப்பசையுள்ளதாகவும் இருக்கும். இதிலிருந்து எடுக்கும் தைலத்துக்கு (Picro toxine) என்று பெயர். இது கொடிய நஞ்சு. இதைச் சோறு றுடன் கலந்து காக்கைக்கு வைக்க அது இதைத் தின்ற மாத்திரத்தில் இறக்கும். அதனால், இதற்குக் "காக்கைக்கொல்லி" என்ற பெயர் வழங்கலாயிற்று.

**ப - உ.**—கொட்டை, எண்ணெய்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பொது.**

**செய்கை.**
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- தூக்குணிப்புழுக்கொல்லி - க்ருமிக்நி - Parasiticide.
- உலர்ந்தபழம்.
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - Narcotic.

## பொது.

**குணம்.**—இது காக்கைவலி, பக்கவாதம், தலைவலி, கயரோகத்தி லுண்டாகும் வியர்வை, விஷமருந்துகளாலுண்டாகும் நோய்கள் இவை களைப்போக்கும். சொறி, சிரங்கு, தினவு முதலியவைகளையும் நீக்கும்.

## பழச்சாறு.

**வ - கு.**—பழச்சாற்றைச் சொறி, சிரங்கு, அழுகிய விரணங்கள் முதலிய வைகளுக்குத் தடவ, அவைகள் சுகப்படும்.

## தைலம்.

இதிலிருந்து எடுக்கப்படும் தைலத்தை மிக்க கவனமாக மிகக் குறைந்த அளவில் கொடுக்க, காக்கைவலி, வாத நோய்களால் உடம்பில் உண் டாகும் வேதனை முதலியவற்றை நீக்கும். கயரோகிகளுக்கு இரவில் உண்டாகும் வியர்வையைத் தடுக்கும்.

## வெளிப் பிரயோகம்.

நன்றாய்ப் பொடிசெய்த காக்கைக் கொல்லி விதை 40 குன்றி, இதை ஒரு பலம் சுத்தமான பன்றிநெய் அல்லது வெண்ணெயோடு கலந்து தலையில் தேக்கப் பேன்கள் சாகும்.

உடலில் காணும் சீ கோத்த கொப்புளங்களைப் போக்குவதில் இது சிறந்தது. இக்கொட்டையின் பருப்பைத் தேங்காய் நெய்விட்டு அரைத்துக் கொப்புளங்களின்மீது தடவிவர, அவைகள் உடைந்து சீ வெளுப்படுவ துடன் எளிதில் ஆறிவிடும். இதைத் தடவி 3, 4 மணி நேரஞ் சென்ற பின் இலுப்பைப் பிண்ணாக்கு அரைப்பிட்டு இளவெந்நிநீரில் குளிக்க வேண்டும்.

---

## காசா—Kása.

**வே - பெ.—காயாச்செடி, காயாம்பூச்செடி, காசரிச்செடி, காசை.**

Memecylon Edule, M. Tinctorium.

Eng.—Iron wood tree.

| | |
|---|---|
| Tel. Allichettu అల్లిచెట్టు. | Kan. Limbatoli or Kayavu ಲಿಂಬತೊಲಿ or ಕಾಯವು. |
| Mal. Kásham കാശം | Sans. Anjane अञ्जनी or काश |

இது இலங்கையிலும், கிழக்கு மேற்குக்கரைப் பிரதேசங்களிலும் வளருகிற குத்துச்செடி அல்லது சிறுமரம். இதன் இலைகள் பளபளப்பான பச்சை நிறத்தோடு அடர்த்தியாகவிருக்கும். பூக்கள் செம்மையும் நீலமும் கலந்த நிறத்துடன் கொத்துக் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருக்கும். இதன் பழங்கள் இளஞ்சிவப்பாக உருண்டு, மாணிக்கங்கள்போலத் தொங்கும்.

**ப - உ.**—இலை, வேர், பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling. }

**குணம்.**—வெள்ளை, வெட்டை, பிரமியம், பெரும்பாடு இவைகளைப் போக்கும்.

**வ - கு.**—இலை பங்கு ஒன்றுக்கு 20 பங்கு நீர்விட்டுக் கஷாயமிட்டு எட்டிலொன்றாகக் குறுக்கி வடித்து அதில் $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் உள்ளுக்குக் கொடுக்க வெள்ளை, பிரமியம் முதலியவை தீரும். மேலும் சீதபேதியைக் கண்டிக்கும்.

வேரை உலர்த்திச் சிதைத்து 10 பங்கு நீர் விட்டுகாய்ச்சி எட்டிலொன்றாகக் குறுக்கி வடிகட்டி $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் தினம் இரண்டு அல்லது மும்முறை கொடுக்க, பெரும்பாடு குணமாகும். பெண்களுக்குண்டாகும் மிதமிஞ்சிய வெள்ளையும் போம்.

இதன் பட்டை, தேங்காய்த்திருவல், மிளகு, தேவதாரு, ஓமம் இவைகளைச் சமவெடை எடுத்து, உலர்த்திப் பொடித்து, கிழிகட்டி ஒற்றிடமிட, தசைச் சிதைவு, வலி முதலியவைகளுக்கு இதமாயிருக்கும்.

---

## காசிரத்னம்—Kàsi Ratnam.

**Ipomea quamoclit.**

**Eng.—Cupid's flower.**

| | |
|---|---|
| **Mal.** Suriakranti സൂര്യക്കിരന്തി. | |
| **Sans.** { Kamalata कामलता | **Hind.** Kāmalāta * کاملاتا |
| Turoolata तुरूलता } | |

இது, இந்தியாமுழுவதும் பயிராகிற மெல்லிய சுற்றுக்கொடி; முக்கியமாய்த் தோட்டங்களில் வளரும். அமெரிக்காவின் உஷ்ணப்பிரதேசங்களிலும் இது அதிகமாய் உண்டு. மழைக்காலங்களில் சாதாரணமாய்ப் பூக்கும். இதில் இருவிதமுண்டு. அவைகளில் சிவப்புப்பூப் பூக்கிறதைப் பார்க்கிலும், வெள்ளைப்பூப்பூக்கிறதே சர்வ சாதாரணமாய்க் கிடைக்கக் கூடியது. இவ்விருவகைச் கொடிகளின் குணமும் ஒன்றேயாம்.

**ப - உ.**—இலை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.

**குணம்.**—மூலத்தைப் போக்கும், உடம்புக்குக் குளிர்ச்சியைத் தரும், பிரமேகக் கட்டிகளைக் கரைக்கும்.

**வ - கு.**—இலையை நன்றாகச் சிதைத்து மூலத்தில் வைத்துக்கட்ட மூலநோய் நீங்கும். அத்துடன் இவ்விலைச்சாறும் பசுவின் நெய்யும் நேர்நேர் கூட்டியதில் இரண்டு உச்சிக்கரண்டி வீதம் தினமிருவேளை, காலைமாலை கொடுக்கலாம்.

நீரிழிவு நோயில் உண்டாகும் பிளவைகளுக்கு, இவ்விலையைச் சிதைத்துக்கட்டச் சுகமுண்டாகும்.

---

## காஞ்சொறி—Kánchori.

**வே. - பெ.—காஞ்சொரி, காய்ஞ்சொரி, எருமைக்காய்ஞ்சொறி.**

**Tragia involucrata.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Dula Gondi | దూలగొండి. | Sans. | Durālabha | दुरालभा |
| Mal. | Kanchori | കാഞ്ചൊറി. | Hind. | Barhanta | * برهنتا |
| Kan. | Akurabaru | ಆಕುರಬೇರು. | Duk. | Kanchkuri | * کانچکوری |

இது, இந்தியாவில் எங்கும் வளரும். இதில் முக்கியமாய்ச் **சிறு காஞ்சொறி, பெருங்காஞ்சொறி, கருங்காஞ்சொறி** என மூவகையுண்டு. இம்மூன்றில் கருங்காஞ்சொறி கிடைப்பதரிது. பெருங்காஞ்சொறி அருமையாய்க் கிடைக்கும். சிறுகாஞ்சொறி சாதாரணமாய்க் கிடைக்கக்கூடியது. இவைகளின் குணம் ஒன்றே யாகும்.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—சொறி, சிரங்கு, நமைச்சல் இவைகளைப் போக்கும். சுரத்தைக் குறைக்கும். மேலும், தாகரோகம், மேகரோகம், வாதப்பெருக்கு இவைகளையும் நீக்கும்.

**வ - கு.**—மேற்கண்ட மூவகை வேர்களில் ஒன்றை ¼, ½ பலம் எடுத்து ஆழாக்கு நீரிலிட்டு அரையாழாக்காக எரித்துச் சுண்டினபின் வடிகட்டிக் கொடுத்துவர, அந்தந்த இனத்தின் கீழ்க்கண்ட நோய்களைப் போக்கும்.

இதன் வேரைத் துளசி இலையுடன் சேர்த்தரைத்துச் சரும ரோகங்களுக்குத் தேய்த்துவர நமைச்சல் நீங்கும்.

### சிறுகாஞ்சொறி வேர்.

**குணம்.**—சிறுகாஞ்சொறி வேரினால் சிலேத்தும சுவாசம், முத்தோடத்தாலுண்டாகும் சுரக்கூட்டம், கரப்பான், சிறுசிரங்குகள், வாயு, நீர்வேட்கை ஆகிய இவைகள் நீங்கும்.

சிறுகாஞ் சொறிவேர் சிலேத்மசுவா சத்தைக்
குறியாத [1] முச்சுரக்கு ழாத்தைச் - சொறியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் [2] காலேத்தா கத்தை
உரப்பாகச் சாடுமென வோது. (அ.கு.)

### கருங்காஞ்சொறி வேர்.

**குணம்.**—இதற்குப் பொடியிருமல், நீர்க்கோவை, கபாதிக்கியம், அரோசகம் இவை போம்.

குத்திருமல் நீரேற்றங் கோர கபளுட்சை
நித்தியஅ ரோசகமும் நீங்குங்காண் - ரத்ன
அருங்காஞ்சி வாய்ந்தவிடை யன்னமே ! சுத்தக்
கருங்காஞ் சொறிவேரைக் கண்டு. (அ.கு.)

---

1 முத்தோடத்தால் பிறக்கும் சுரக்கூட்டம்.
2 வாயுவை.

பெருங்காஞ்சொறி வேர்.

**குணம்.**—இதனால் காசம், சுவாசம், கபச்சுரம் ஆகிய இவைகள் போம்.

காசம் சுவாசம் கபச்சுரங்கள் ஓடிவன
வாசஞ்செய் யும்ஊர்க்குள் வாராமல் - வாசம்
பெருக்கு மூலையாய் ! பெருங்காஞ் சொறிவேர்
இருக்கு மெளமனத்து ளெண்ணி. (அ.கு.)

---

## காட்டத்தி—Kàttatti.

**வே - பெ.**—மலையத்தி, அசமந்தம், பேயத்தி.

Ficus Oppositifolia.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Verri Atti-chettu వెఱ్ఱి అత్తి చెట్టు. | Sans. | Unmattó-dumbara उन्मत्तादुम्बर |
| Mal. | Kàttaththi കാട്ടത്തി. Pàraka-maram പാറക മരം | Arab. | Tine-barri طين - بری * |
| | | Pers. | Anjíre-dashti انجیر - دشتی * |
| | | Hind. | Jangli-gullèr جنگلی - گلیر * |
| Kan. | Kad-atti ಕಾಡತ್ತಿ. | Duk. | Jangli-Anjír جنگلی - انجیر * |

இது, முக்கியமாய் வங்காளப்பிரதேசங்களில் வளருகின்ற மரம். தென்னிந்தியாவிலும் உண்டு.

**ப - உ.**—பழம், பட்டை, பால்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதன் பாலானது, பாருபேதுமேகம், மேகச்சொறி, குட்டரோகத் தடிப்பு, மூளைவிரணம் இவற்றை விலக்கும்.

வெடிப்பைமே கப்படையை வீறிவரு குட்டந்
தடிப்பை மூளைரணத்தைச் சாடும்—படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே ! எங்குஞ் சுனைகணிறைப்
பன்னமுறு பேயத்திப் பால். (அ.கு.)

**வ - கு.**—பட்டையைக் கஷாயமிட்டு கால் ஆழாக்கு வீதம் தினமிரு வேளைக் குடித்துவர முறைச்சுரத்தைக் கண்டிக்கும். மேலும் தேகபலத்தையுண்டாக்கும்.

பழத்தையும், பட்டையையும் வெந்நீரில் வேகவைத்துக் குளித்துவர, குட்டநோய் நாளடைவில் சுகமாகும்.

வேரிலிருந்து கீறி எடுக்கும் பால் மிகச் சிறந்ததெனக் கருதப்படுகின்றது. அதில் கற்கண்டு சேர்த்துத் தகுந்த அளவில் கொடுத்துவர மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## காட்டாத்தி—Kàttàtti.

Bauhinia Tomentosa.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adavimandaramu అడవి మందారము. | Kan. | Kadatti ಕಾಡತ್ತಿ. |
| | | Sans. | Dhathaki धातकी |
| Mal. | Kattàti കാട്ടാത്തി. | Hind. | Kachnar * کچنار |

இது மர வகுப்பு. இந்தியாவிலும் இலங்கையிலும் பயிராகிறது. கண்டறைத் துவ்லியமாக்கும்.

**ப - உ.**—சமூலம், இலை, மொட்டு, பூ, பிஞ்சு, காய்.

**விதை.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**குறிப்பு.**—பூவுக்குச் சீதவீரியமுண்டு.

**செய்கை.**

**சமூலம்.**

சீதபேதிபோக்கி - Antidysentric.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Athelmintic.

**காய்.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**விதை.**

உரமாக்கி - பலகாரி - Tonic.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**சமூலம்.**

**குணம்.**—இதனால் அதிசாரபேதி, அக்கினிமந்தம், இருமல், தாவர சங்கமவிடம் முதலியன நீங்கும்.

அதிசார மந்தமிக வாலித்த காசம்
விதிராம் விடமும் விலகும்—எதிரொருவர்
மூட்டாத்தீ யென்னுமதி மோகந் தருமணங்கே !
காட்டாத்திக் கென்றுரைத்திற் காண். (அ.கு)

**குணம்.**—இதற்கு இரத்தக்கடுப்பு, இரத்தாதிசாரம், வெளுத்தமலக் கழிச்சல், பிரமேகம் ஆகியவைகள் போம்.

உதிரக் கடுப்போ டுதிரக் கழிச்சல்
விதிரக் கடும்பேதி மேகம்—எதிர்நிற்க
மாட்டா தகலும் வனச மலர்த்திருவே !
காட்டாத்திப் பூத்தனக்குக் காண். (அ.கு.)

மேலும் இது இரத்தபித்தம், கிருமி, விசர்ப்பம், நாவறட்சி, மேகம், அசுத்தரத்தம் ஆகியவைகளையும் போக்கும்.

**இலை—மொக்கு.**

**வ - கு.**—(1) இதன் இலை, மொக்குகளைப் பச்சையாக வேனும், உலர்த்தியேனும் தனித்தனியாகவேனும், வேறு மூலிகைகளோடு சேர்த்தேனும் கஷாயமிட்டுச் சீதபேதிக்குக் கொடுக்கக் குணமாகும்.

**பூ.**

(2) காட்டாத்திப்பூ, வில்வவேர், வெள்ளிலோத்திரம், யானைத்திப்பிலி இவற்றைக் கஷாயமிட்டுக் கொடுக்க அதிசாரந் தீரும்.

மேற்படிக் கஷாயத்துடன் வேண்டிய சர்க்கரை சேர்த்துக் காய்ச்சிப் பின் தேன் கூட்டி இளகிய பதமாகக்கிண்டி அந்நோயில் வழங்கலாம்.

(3) காட்டாத்திமலரைக்கொண்டு பற்பல மதுக்களைச் (ஆஸவம் - அரிஷ்டம்) செய்வது வடநூல் சார்பு.

" வெறிமதுக்கள் சேர்த்தற்கு வேண்டு மிதற்கே
செறிசீத முண்டென்பர் தேர்ந்து." (அ.கு.)

**விதை.**

(4) இதன் விதையைக் காடிவிட்டரைத்து விடக்கடியாலுண்டாகும் புண்களுக்கு வைத்துக்கட்டச் சுகமுண்டாகும்.

**மரப்பட்டை.**

(5) இதன் மரப்பட்டையைக் கழுநீர் விட்டரைத்துக் கட்டிகளின் மீது பற்றிடலாம்.

**வேர்பட்டை.**

(6) இதன் வேர்ப்பட்டையை ஊறல் கஷாயமிட்டு ஈறுபுண், வாய்ப்புண், தொண்டைப்புண் முதலியவற்றிற்கு வாய் கொப்புளிக்கச் சுகந்தரும்; கஷாயமிட்டு மண்ணீரல் வியாதிகளுக்குக் கொடுக்கலாம்.

---

## காட்டாமணக்கு—Kàttâmaṇakku.

**வே - பெ.—நாட்டுக்காட்டாமணக்கு, வெள்ளைக்காட்டாமணக்கு, கடலாமணக்கு, ஆதளை.**

Jatropha Curcas,

Eng.—English Physic nut, Nut of—

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pèpàḷam పేపాళం. / Adavi-Àmudam అడవి ఆముదము. | Sans. | Parvata-yeranda पर्वतैरण्ड: |
| | | Arab. | Dande-nahrí * ڈنڈی نہری |
| | | Pers. | Dande Barri * ڈنڈی بہری |
| Mal. | Kátta-vanakka കാട്ടാവണക്ക | Hind. | Jangií-arandí |
| Kan. | Bettada - haraḷu ಬೆಟ್ಟದ ಹರಳು. | Duk. | Janghi Yarandi } * جنگلی رانڈی |

இது குத்துச்செடி வகுப்பிற் சேர்ந்தது. இந்தியாவில் எங்கும் பயிராகிறது. தென் இந்தியாவில் மேட்டுப் புலங்களுக்கு வேலியமைக்க இது ஏராளமாய் உபயோகிக்கப்படுகிறது.

இது இரும்பை ஈயமாக்கும்.

**ப - உ.**—இலை, பால், வேர், வித்து.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** – கார்ப்பு.

**செய்கை.**
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.
- குருதிப்போக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - Hoemostatic.
- புழுவகற்றி - க்ருமிநாசநி - Vermifuge.

**இலை.**

**குணம்.**—இதனுல் மேகக்கட்டி, புண், கரப்பான், பிலீகம், குன்மக்கட்டி, கிளைக்கின்றசிரங்கு, சிலேஷ்மவாதக்குத்தல், தலைநோய், பெருவிரணம், உள்மூலம், உள்ளுருக்கி, வெள்ளை இவைபோம். சுக்கிலவிருத்தியுண்டாகும்.

கட்டி விரணங் கரப்பான்பி லீகமதி
கெட்டியுறு குன்மங் கிளைத்தசிரங்—கொட்டுமே
கூட்டோ டொழியுங் குவடனைய கொங்கைமின்னே !
காட்டா மணக்கிலையைக் கண்டு.

காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்
வீட்டு தலைநோய் விரிகிரந்தி—வாட்டுகின்ற
உண்மூலம் போகு முடம்புலர்த்தல் வெட்டையறுந்
[illegible]

### இலை.

**வ - கு.**—இலையை வதக்கி **ஸ்தனங்களுக்கு** கட்ட பால் **சுறக்கும்.** இக் குணம் பெற களியாகக் கிளறியாவது, கஷாயஞ் செய்தாவது கேப்-டி-வெர்ட் (**Cape de verd**) தீவிலுள்ளவர்கள் உபயோகிப்பதாகத் தெரியவருகிறது.

இலைரசத்தைப் புடைகளுக்கும், சருமவியாதிகளுக்கும் பூசலாம்.

### பால்.

**குணம்.**—மூத்திரத்தோடுவிழுகின்றமேகம், வெள்ளை, வயிற்றுவலி, குறிவிரணம், சருமக்கட்டி இவைகளை நீக்கும்.

விழுமேக வெள்ளைகுன்மம் மேல்விரணந் தோலில்
எழுமேருக் கட்டியிவை யெல்லாந்—தொழுதோடுங்
கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனக் கொங்கையின்னே !
காட்டா மணக்கம்பாற் கண்டு. (அ.கு.)

**வ - கு.**—இதன் பாலை வலியுள்ள பல்லில் வைக்கப் பல்வலி குணமாகும். பல் வலியுள்ளவர்கள் இதன் குச்சியைப் பல் துலக்கி வருவதுண்டு.

காயப்பட்டு இரத்தம் வெளிப்பட்ட இடத்தில் இதன் பாலைப் பூச இரத்தம் நிற்கும். காயமும் ஆறும்.

### விதை.

இதன் வித்திலிருந்து எடுக்கும் **எண்ணெய்** வெண் மஞ்சள் நிறமுள்ளது.

**செய்கை.** { பெருமலப்போக்கி - விரேசனகாரி - Cathartic.
வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.

**குணமும், வழக்கும்.**—இதர தைலங்களோடு கூட்டி வாத ரோகங்களுக்கும், சரும வியாதிகளுக்கும் பூசுவதுண்டு.

இவ்வித்தின் நெய்யை, அதிக அளவாக உள்ளுக்குக் கொடுக்கும் பட்சத்தில் உடலை விடமிக்கச் செய்யுமென்பது கொள்கை ; ஆகையால், உபயோகிக்காதிருப்பதே நலம்.

### வேர்.

**குணமும், வழக்கும்.**—இவ்வேரின் பட்டையை அரைத்துக் கீல் பிடிப்புக்கு வெளிப்பிரயோகஞ் செய்யலாம்.

இதன் வேர்ப்பட்டையுடன் பெருங்காயமும், மோருஞ் சேர்த்து அசீரணத்துக்கும், அதிசார பேதிக்கும் கொடுப்பது கொங்கண தேசத்து வழக்கமெனத் தெரியவருகிறது.

## காட்டு இருப்பை—Kâttu-iruppai.

**வே - பெ.—காட்டு இலுப்பை.**

**Bassia Latifolia.**

**Eng.—Indian Butter tree.**

| | |
|---|---|
| Tel Aḍavi-ippe-cheṭṭu అడవి ఇప్పె చెట్టు. | Sans. Aṭavì-madhùka - vrikshaha अडविमधूक वृक्ष |
| Mal. Kàṭṭirippa കാട്ടിരിപ്പ. | Pers. Darakhte - gulchakàne - ṣaḥràì درخت گلچکن صحرائی * |
| Kan. Kàḍu-ippe-giḍà ಕಾಡು ಇಪ್ಪೆ ಗಿಡ. | Hind. Janglì-mohvà جنگلی مهوا * |
| | Duk. Janglì-móhà جنگلی موها * |

இது பம்பாய், வங்காளம், இலங்கை, தென் இந்தியா முதலிய இடங்களிலுள்ள காடுகளில் வளருகின்ற மரம்.

**ப - உ.**—இலை, பூ, விதை, பட்டை.

**இலை.**

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பூ.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**விதை.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பட்டை.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**

வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**பூ.**

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
உரமாக்கி - பலகாரி - Tonic.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**விதை.**

வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.

**பட்டை.**

நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.

**குணம்.**—சருமநோய், வாதவலி, இருமல், பலயீனம் இவைகளைப் போக்கும்.

**இலை.**

**வ - கு.**—இலையைத் தண்ணீரிற் போட்டுக் காய்ச்சி வேது பிடிக்க வியர்வையுண்டாய் சுரம் நீங்கும்.

**பூ.**

பூவைக்கஷாய மிட்டுக் குடிக்க இருமல் நீங்கும்.

ஆழாக்குப்பாலில் அரைப்பலம் பூவைப் போட்டு காய்ச்சி, காலை மாலை குடித்துவர, நரம்புத்தளர்ச்சி நீங்கித் தேகபலமுண்டாகும்.

பூவை உலர்த்தி ஆமணக்கு நெய் சிறிதுவிட்டு வதக்கி விரைவீக்கத்திற்கு ஒற்றிடமிடலாம்.

**விதை.**

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய், சரும நோய்களுக்கும் தலை பாரம், அதைச் சேர்ந்த வலி முதலியவைகளுக்கும் மிகப் பயன்படும்.

**பட்டை.**

பட்டையைக் கஷாயமிட்டு வாத நோய்களுக்கு வேது பிடிக்கவும் அல்லது ஒற்றிடமிடவும் உபயோகிக்கலாம்.

இக்கஷாயத்தையே சொறி, சிரங்கு முதலிய சரும வியாதிகளைக் கழுவுவதற்கு எடுத்துக்கொள்ளலாம்.

**பிண்ணாக்கு**

பிண்ணாக்கு வாந்தியை உண்டுபண்ணும். இதை நெருப்புத் தணலிலிட்டுப் புகைக்கப் பூச்சி, புழுக்கள் சாகும்.

## காட்டு உழுந்து—Káttu-Uzhunthu.

Glycire Labialis.

| | |
|---|---|
| Tel. Adavi Minumu అడవి మినుము. | Kan. Kaduddu ಕಾಡುದ್ದು. |
| Mal. Kattuzhunnu കാട്ടുഴുന്ന്. | Sans. Mashaparni माषपर्णी |
| | Hind. Jangli mash جنگلی ماش * |

இது, பண்படுத்தப்படாத நிலங்களில் இயல்பாக வளரும் கொடி யினம். முக்கியமாய் மலையோர பூமிகளில் பயிராகும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**

**குணம்.**—இரத்தபித்தம், சுரம், வாதம் இவைகளைப் போக்கும். காந்தி, சுக்கிலம், பித்தம், கபம் இவைகளை விருத்தி செய்யும்.

**வ - கு.**—இதை வேகவைத்தாகிலும், நீரில் நன்றாய் ஊறியபின் சருக்கரை சேர்த்தாகிலும் உண்டுவர, சுக்கிலத்தைப் பெருக்கும். சுக்கிலப் பெருக்குக்காகச் செய்யப்படும் இலேகியங்களில் இதைச் சேர்ப்பதுண்டு. இதை வறுத்து மாவாக்கி, சருக்கரை அல்லது கற்கண்டு, சாரைப்பருப்பு முதலியவைகளைச் சேர்த்து உருண்டை பிடித்து உண்டுவர, மேற்கண்ட நோய்கள் தணியும். சுக்கிலம் பெருகும், காந்தியுண்டாம்.

---

## காட்டு எலுமிச்சை—Káttu-Elumichchai.

**வே - பெ.—காட்டுநாரங்கம், பெருங்குருந்து.**

Atalantia Monophylla.

Eng.—Wild lime.

| | |
|---|---|
| Tel. Adavi-nimma అడవినిమ్మ. | Sans. Adavi-jambira अडवि जम्बीर |
| Mal. Malanarakam മലനാരകം. | |
| Kan. Kadu-limbe ಕಾಡು ಲಿಂಬೆ. | Hind. Jangli-nimbu جنگلی نیمبو * |

இது, சாதாரணமாய் உஷ்ணப்பிரதேசங்களிலுள்ள மலைகளிலும், காடுகளிலும் வளரும் சிறுமர வகுப்பைச் சேர்ந்தது. இலங்கை, தென்னிந்தியா முதலிய இடங்களிலும் அதிகமாய்ப் பயிராகிறது.

**ப - உ.**—இலை, பழச்சதை, பழத்தோல்.

**இலை.**

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழச்சதை.**

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழத்தோல்.**

**சுவை.**—கைப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**விதை.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

பழச்சதை.

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

பழத்தோல்.

பசித்தீத்தூண்டி - ஜடாரக்னிவர்த்தநி - Stomachic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

விதை.

புழுவகற்றி - க்ருமிநாசநி - Vermifuge.

பட்டை.

வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதனால் வாதசேத்துமம், சூலை, குன்மம், சுரம், இருமல் இவைகள் தீரும்.

**வ - கு.**—பழரசத்தோடு வெடியுப்பு சிறிது சேர்த்துச் சொறி, சிரங்கு முதலியவைக்குப் போட அவைகள் சுகப்படும்.

பழரசத்தைக் குன்மரோகிகளுக்கு, ஒவ்வொரு தினமும் சாயங்காலங்களில் கொடுத்துவர வாந்தியோடுங் கூடிய வயிற்றுவலி சாந்தப்படும். இதனால் தலைவலியுந்தீரும்.

பழத்தைக் கும்பிச்சாம்பலிற் சுட்டுப் பிழிந்த ரசத்துடன் சிறிது தேன் அல்லது சர்க்கரை சேர்த்து ஒரு தேக்கரண்டி வீதம் கொடுக்க, இருமல் தீரும்.

பழத்தோலிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிகவும் காரமானது.

இவ்வெண்ணெயை விளக்கெண்ணெயுடன் கலந்து, ஆண்குறி, பெண் குறிகளிலுண்டாகும் நமைச்சல், வெடிப்பு முதலியவைகளுக்குத் தடவிவரலாம்.

வாதவலி, கீல்வாதம், முதலிய வேதனைகளுக்கு இத்தயிலத்தைத் தடவலாம்.

ஒரு எலுமிச்சம்பழத்தைத் துண்டு துண்டாக வெட்டி அரைப்படித் தண்ணீரிற்போட்டுக் காய்ச்சி அரை ஆழாக்காக வற்றவைத்து ஒரு இரவு முழுவதும் வெளியில் பனியில் வைத்திருந்து, வடிகட்டி அதிகாலையில் சாப்பிட்டுவரக் குளிர்சுரம் நீங்கும்.

இதைக்கீறி உப்புச்சேர்த்து ஊறுகாயாக உபயோகிக்க, அஜீரணம் நீங்கி, பித்தம் சாந்தியாகும்.

## காட்டெள்ளு—Kaṭṭeḻḻu.

**Sesamum trifoliatum.**

**Eng.—Gingeli oil plant (wild).**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Verri Nuvulu వెఱ్ఱి నువ్వులు. | Arab. | Tine-Simsim * طين سمسم |
| Mal. | Kaṭṭeḻḻu കാട്ടെള്ള. | Pers. | Anjire-Kunjad انجير كنجد * |
| Kan. | Adavi-yaḻḻu ಅಡವಿ ಯೆಳ್ಳು. | Hind. | Jangli-Til * جنگلی تل * |
| Sans. | Oummatto-Tilaha उन्मत्तोतिलः | | |

இது சுயேச்சையாகக் காடுகளிலும் மலையோரங்களில் பண்படுத்தாத பூமிகளிலும் வளரும் செடி. இது எள்ளினத்தைச் சேர்ந்தது.

இதன் சுவை, செய்கை, குணம், முதலியன நாட்டெள்ளுக்குடையதேயாகும்.

## காட்டுக்கடுகு—Káttuk-kadugu.

**வே - பே.—நாய்வேளை, நாய்க்கடுகு, பெருவேளை.**

Polanisia Icosandra ; Cleome Viscosa.

Eng.—Wild or Dog mustard ; Sticky cleome.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Néla Váminta నేల వామింట. | | Arab. | Bazar-ul - Banj بزر البنج * |
| | Kukka - ávalu కుక్క ఆవాలు. | | Hind. | Janglí Hurhur جنگلی هرهر * |
| Mal. | Náyvéla നായ്വേള. | | Dnk. | Janglí Hulvul. جنگلی هلول * |
| | Káttukatuka കാട്ടുകടുക. | | Sans. | Vana - Srarashapa वनसर्षपः |
| Kan. | Hucha - sásavi ಹುಚ್ಚ ಸಾಸವಿ. | | | |

*இது இந்தியா முழுவதும் கிடைக்கக்கூடிய ஒருவகைப் பூண்டு.*

**ப - உ.**—*இலை, வேர், சமூலம்.*

**சுவை.**—*கார்ப்பு,* **வீரியம்** - *வெப்பம்,* **பிரிவு** - *கார்ப்பு.*

**செய்கை.**
- *அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி* - Carminative.
- *புழுக்கொல்லி - க்ருமிநாசநி* - Anthelmintic.
- *அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி* - Antiseptic.
- *தடிப்புண்டாக்கி - ஷோணகாரி* - Rubefacient.
- *கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி* - Vesicant (Blister).

**குணம்.**—*வாதப்பொருமல், தேகக்கடுப்பு, குத்தல், கர்ணநாதரோகம், சிலேத்துமபீநசநோய் இவைகள் போம். மேலும், இக்கடுகானது வாத அசிர்க்கரம், வாதசோணிதம், வாதக்கடுப்பு, குன்மம் இவைகளையும் போக்கும்.*

*சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்*
*வாதவலி குன்மம் மடியுங்காண்—மாதுநல்லாய் !*
*பேய்க்குப் புகைபோடப் பேசா தொழிந்துவிடும்*
*நாய்க்கடுகை நீவிரும்பி னால்.*

*வாதம் உடற்கடுப்பு வன்சூலை காதிரைச்சல்*
*ஓதமிகு பீநசமும் ஓடுங்காண்—போதெறிந்து*
*காய்வேளைக் காயும்விழிக் காரிகையே ! வையமதில்*
*நாய்வேளை யுண்ண நவில்.* (அ.கு.)

### இலை.

**வ - கு.**—*இலையை வெந்நீர்விட்டு அரைத்து வீக்கங்களிற்போட, வீக்கம் அமுங்கிவிடும்.*

*இலையை வெந்நீர்விட்டுக் கசக்கிப் பிழிந்த சாற்றில் இரண்டொரு துளி காதில் விட, காதுநோய் குணமாகும்.*

*இதன் சாறுடன் எண்ணெய் சமனெடை சேர்த்துக் கலந்து காதுச் சீழ் நோய்க்குக் காதில் விடலாம்.*

*இலையை நெய்யிலிட்டுக் காய்ச்சியபின் இலையை எடுத்துவிட்டு, அந் நெய்யைப் புது விரணங்களுக்குப் பூச அவை சீக்கிரத்தில் குணமாகும் ; புளுவைக்காது.*

இலையைச் சமையல் செய்து சாப்பிடுவது வீட்டு வழக்கம்.

இலையை இடித்துவைத்துக் கட்டினால், கொப்புளமுண்டாகி நீர் வடியும். ஆகையால், கொப்புளமுண்டாக்கி நீர் எடுக்கவேண்டியதற்கு இதை உபயோகிக்கலாம்.

இலையை இடித்து இரசத்தைப் பிழிந்துவிட்டுத் திப்பியைச் சீதசந்நிபாதத்திற்கும், சீதத்தலைவலிக்கும் தலையின் உச்சியில்வைத்து மேல் ஒரு சிறு புதுஓட்டைவைத்துச் சீலைகொண்டு கட்டிவிட சிரோபாரம் நீங்கும். பிற்பாடு திப்பியை எடுத்துப் பிழிய நீரொழுகும், கட்டியவிடத்தில் ஒரு விந விறுவிறுப்பும் புண்பட்டதுபோன்ற வுணர்ச்சியு முண்டாகும்.

**விதை.**

விதையைப் பொடித்துத்தண்ணீரில் ஊறவைத்துப் புழு விரணங்களைக் கழுவ, அதினின்றும் புழுக்கள் விழும்.

விதைச் சூரணத்தை 5 குன்றி முதல் ஒரு வராகனெடைவரை யிலும் சர்க்கரை கூட்டி, தின மிருவேளையாக இரண்டுநாள் கொடுத்துப் பிறகு, மூன்றாம் நாள் விளக்கெண்ணெய்கொடுக்கப் பேதியாகி நாக்குப பூச்சிகள் விழும்.

விதையை காடிவிட்டரைத்து வீக்கங்களுக்குப் போட, வீக்கங்கரைந்து அதனாலுண்டாகும் வேதனையும் குறைந்துவிடும்.

இதைக் கடுகுக்குப்பதிலாக உபயோகிக்கலாம்.

இதை வடித்தால் தைலமிறங்கும். இத்தைலத்தைச் சிரங்குகளுக்குப் போடலாம்.

விதையைத் துவையல் செய்து சாப்பிடுவதும் உண்டு. அதனால் வாத ரோகங்களும், சூதக வாய்வும் போம்.

**வேர்.**

இதன் சிறிய துண்டு ஒன்றை அரைப் பலம் சிற்றாமணக் கெண்ணெ யிற் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிக் குழந்தைகட்குப் புகட்ட மாந்தம் போம். மலக்கிருமிகள் வெளிப்படும்.

**சமூலம்.**

வெளிப்பிரயோகங்களுக்கு சமூலமும் உபயோகமாகும்.

---

## காட்டுக்கருணை—Kattukkaruṇaî.

**வெ. பெ.—காட்டுச்சேனை, காட்டுக்கரணை, பெரியகருணை.**

Dracontium Polyphyllum ; Tacca Pinnatifida.

Eng.—Wild Amorphophalus.

| | |
|---|---|
| Tel. Peḍḍa - kanḍa - gaḍḍa పెద్ద కందగడ్డ. | Sans. Vana-Surana वनसूरण |
| Mal. Kaṭṭu - chena കാട്ടുചേന. | Hind. Varahikand *ورها كند |
| Kan. Kadukesavu ಕಾಡುಕೆಸವು. | Duk. Bará - kandá *كند ابڑا |

இது தென்னிந்தியாவிற் பயிராகும் ஒருவகைக் கருணைச் செடி. இதில் பெருங் கிழங்கு உண்டு. சாதாரணமாய் மலைகளிலும், காடுகளிலும் பயி ராகும்.

கெந்தியை மாய்க்கும்.

ப - உ.—கிழங்கு.

**சுவை.**—பச்சையில் - காகரப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு,

**பச்சையில்.**

**செய்கை.** { தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—வாதம், பிரமேகம், முளைமூலம், சுரதோடம் இவைபோம். மிகுபசியும், காப்பானும் உண்டாகும்.

மேகமணு காது வெகுதி பனமாகுந்
தேகமதில் மூலமுளை சேராதே—போகாச்
சுரதோடம் போங்காப்பான் றேன்றும் வனத்திற்
பரவுகருணைக்கிழங்காற் பார். (அ.கு.)

**வ - கு.**—இதைச் சமைத்துண்ண மேற்கூறிய ரோகங்கள் தணியும்.

மேனுக்குப் போட்டால் அவ்விடத்தில் வெப்பத்தையுண்டாக்கும். தோலைச்சிவப்பிக்கும்.

---

## காட்டுக்கருவாப்பட்டை—Kattuk - karuváppattai.

**Cinnamomum Iners.**

**Eng.—Wild Cinnamon. Bark of—**

Tel. Aḍavi - lavanga - paṭṭa
అడవి లవంగపట్ట.

Mal. Káttuk - karuvátoli
കാട്ടുകറുവാത്തൊലി.

Kan. Aḍavi - lavanga - paṭṭe
ಅಡವಿ ಲವಂಗಪಟ್ಟೆ.

Sans. Tejpatra तेजपत्रः ;
Tamalapatra तमालपत्रः

Arab. Tarnelly. تار نیلی *

Pers. Sazaji - Hindi ساز ج هندی *

Hind. Janglì - dár - chíni
جنگلی دار چینی *

Duk. Janglí - dar - chini
جنگلی دار چینی *

இது திருவாங்கூர், மலையாளம் முதலிய இராஜ்ஜியங்களிலும், வட இந்தியாவிலும் வளருகின்ற காட்டுக் கருவாமரத்தின் பட்டை.

**ப - உ.**—இலை, பட்டை, எண்ணெய்.

**சுவை.**—கார்ப்பு - விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.

**குணம்.**—அசிரணம், அதிசாரம், இருமல், இரத்தபேதி, கிரகணி, சீதபேதி இவைகள் போம். பசியுண்டாகும்.

**வ - கு.**—காட்டுக்கருவாப்பட்டை 1, சுக்கு 1, மிளகு 2, திப்பிலி 3, அதிமதுரம், வில்வப்பிசின், விளாம்பிசின், வேலம்பிசின், முருங்கைப் பிசின் இவைகள் வகைக்கு 8 பங்கு ஒன்றாகச் சேர்த்து இடித்து வஸ்திர காயஞ் செய்து, தக்க அளவு நீர் சேர்த்து ஒன்றரை முதல் நாலு குன்றி யளவு மாத்திரையாகச் செய்தேனும் அல்லது சூரணமாகவேனும் வைத்துக்கொண்டு மேற்படி அளவாகவே, குன்மம், இருமல், வயிற்றுப்பிசம், சுரம் முதலிய நோய்களுக்குக் கொடுத்துவரச் சுகமாகும். மேற்கூறிய மற்ற நோய்களுக்கும் கொடுக்கலாம்.

இலையை வாசனைத்திரவியமாக உபயோகிக்கலாம்.

இலையிலிருந்து எண்ணெய் வடித்து அதை மதுரவகைப்பதார்த்தங் களிற் சேர்த்து நறுமண மூட்டலாம்.

---

## காட்டுக்கஸ்தூரி. Káṭṭuk - kastúri.

**வே - பெ.—பொட்டகத்துத்தி, இரட்டகத்துத்தி, வெற்றிலைக்கஸ்தூரி, கஸ்தூரிவெண்டக்காய், காட்டுவெண்டைக்காய், சீமைவெண்டைக்காய், காட்டுப்பருத்தி.**

Hibiscus Abelmoschus.

Eng. The Musk - Mallow.

Tel. Kastùri - benḍa.
కస్తూరి బెండ.

Mal. Káṭṭu - kastùri.
കാട്ടു കസ്തൂരി.

Kan. Kadu - kastùri.
ಕಾಡು ಕಸ್ತೂರಿ.

Sans. Laṭakastùrika.
लताकस्तूरिका

Arab. Habbul - Mishk.
* حب المسك

Pers. Mushk -dánah. * مشك دانہ

Hind. *Mushk - dánah.
* مشك دانہ

Duk. Mushk - bhéndí - ké - bínj. * مشك بهينڈی کی بينج

இப்பூண்டு இந்தியாவில் அநேகவிடங்களிற் பயிராகிறது.

**ப - உ.**— இலை, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**விதை.**

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.

**குணம்.**—தலைநோய், மேகம், சந்நிசுரங்கள், குன்மம் இவை போம்.

**வ - கு.**—இலை, விதை, வேர் இவைகளைக் கஷாயமிட்டு மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்க அவைகள் குணமாகும்.

விதையை எண்ணெயில் சேர்த்து நறுமண முண்டுபண்ணலாம்.

அரபியா தேசத்தில் இவ்விதைகளைக் காப்பிப் பானத்திற் சேர்த்துப் பருகுகின்றனர்.

விதையைக் கஷாயமிட்டு, பிரமியவெள்ளை முதலிய வெப்ப நோய் களுக்குக் கொடுக்கச் சுகத்தைத் தரும்.

விதையைப் பால்விட்டு அரைத்துச் சிரங்கு, நமைச்சல் இவைகளுக்குப் பூசக் குணமாகும்.

## காட்டுக்கிராம்பு. Káttuk - kirambu.

Jussiœa Suffruticosa.

Tel. Adavibatsala. అడవిబత్సల.

Mal. Kaṭṭu - lavangam. കാട്ടുലവംഗം.

Kan. Kadu - lavanga. ಕಾಡು ಲವಂಗ.

Sans. Bhallavianga भल्लवियङ्ग.

Hind. Ban-launga. * بان لونگ

இது இந்தியாவில் அநேகவிடங்களில் கிடைக்கக்கூடிய பூண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—சிறுகார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- புழுவகற்றி - க்ருமிநாசநி - Vermifuge.

**குணம்.**—வெள்ளை, வெட்டை, சீதபேதி, வயிற்றுப்பொருமல், இரத்தப்போக்கு இவைகளை நிறுத்தும். மூத்திரத்தைப் பெருக்கும்.

**வ - கு.**—இதன் சமூலத்தை அரைத்து மோரில் கலந்து கொடுக்க, சீதபேதி சுகமாகும்.

இதைக் குறுக அரிந்து 1-க்கு 20 மடங்கு நீர் சேர்த்துக் கொதிக்க வைத்துக் கஷாயமிட்டு $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்குவரைக் கொடுக்க மூத்திரத்தை அதிகப்படுத்தும்: வயிற்றுவலியைப் போக்கும்; மலக்கிருமியைத் தள்ளும்.

இக்கஷாயத்தையே வயிற்றுப் பொருமலுக்கும் கொடுக்கலாம்.

இப்பூண்டை உலர்த்திச் சூரணித்து ஒரு படி கொதிநீரில் அரை மணி நேரம் ஊறவைத்து எடுத்து வடிகட்டி, அந்நீரால் கழுவ ஸ்திரீகளுக்கு உண்டாகும் வெள்ளை தீரும்.

---

## காட்டுக்கொள்ளு - Káttukkoḻḻu.

**வே. பெ.—இடிக்கொள், முலைப்பால்விதை.**

Cassia Absus.

Eng. Horse gram (Black.)

Tel. Chanu - pala - vittulu. చనుపాలవిత్తులు.

Mal. Karin - koḻḻa. കരിങ്കൊള്ള.

Kan. Kaduhuruli. ಕಾಡು ಹುರುಳಿ.

Sans. Vana-kulutha वनकुलुत्थ.

Arab. Chasmízaj. * چشم جاز

Pers. Chashùm. * چشم

Hind. Chaksù. * چاکسو

இது இந்தியா முழுவதும், இலங்கையிலும் பயிராகிற பூண்டின் விதைகள். இது பளபளப்பாயும் கரிய நிறமாயும் இருக்கும். காரத்தைக் கட்டும்.

**ப. உ.**—இலை, விதை.

**சுவை.**—கைப்பு - **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை. { செந்நீரிளக்கி - Attenuant.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
பெருமலம்போக்கி - விரேசநி - Cathartic.

**குணம்.**—மலபந்தம், மூளைமூலம், கபம், சுவாசம், விக்கல், நீரடைப்பு, பயித்தியம் ஆகிய இவை நீங்கும்.

**வ - கு.**—இலையை வெந்நீரிலிட்டுக் கொதிக்கக் காய்ச்சி வாதத்தினு லுண்டாகும் கை, கால் குடைச்சல் வேதனை இவைகளுக்கு ஒற்றிட மிடலாம்.

விதையைப் பொடிசெய்து பீளை கட்டுகிற கண் வியாதிகளுக்கு ஒற்றிட மிடலாம். ஆனால் நீர் வடிகிற நோய்களுக்குப் போடக்கூடாது. விதை யை வெந்நீர் விட்டரைத்துச் சிறுதுணியிற்றடவி சிறு காயங்களுக்கும் ஆண்குறியி லுண்டாகும் விரணங்களுக்கும் எருவையாகப் பயன்படுத்தலாம்.

காணத் தோல் 3 வராகனெடை எடுத்து நீர் விட்டு அரைத்து உருட்டி உள்ளுக்குக் கொடுக்க, நீரைப் பெருக்கித் தள்ளும்.

விதையை, தகர விதையோடு சமனெடை எடுத்தரைத்து, சொறித் தேமலுக்குப் போட நீங்கும்.

இதைப் பொடித்து இரண்டு முதல் ஐந்து குன்றியெடை தினம் 2-3 வேளைக்கொடுத்து வர, மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## காட்டுச்சதகுப்பை. Káttuch - chatakuppai

**Kan.** Kadusathape. ಕಾಡುಸತಾಪೆ.

இது சாதாரணமாய் எங்கும் கிடைக்கக் கூடிய பூண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை. { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
மலமிளக்கி - லகுவிரேசநி - Laxative.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—மூலம், க்ஷயம், பித்தம், இவைகளைப்போக்கி வீரிய விருத்தியை யுண்டுபண்ணும். மேலும் கபம், காசம், மலபந்தம், யோனிச்சூலை, பிலீகோதரம், வாந்தி, கிருமி இவைகளையும் போக்கும். தீபன பாசனத்தை விருத்தி செய்யும்.

**வ - கு.**—இங்குக் கண்ட குணங்களைப் பெற இதை, சதகுப்பையை உப யோகிப்பது போலவே உபயோகிக்கலாம்.

---

## காட்டுசாதிக்காய். Káttu - Sáthikkai.

**வே - பெ.**—காட்டு ஜாதிக்காய்.

Pyrrhosia Horsefieldii ; Myristica Malabarica.

**Eng.** Wild Nutmeg—nut of,—Malabar nutmeg, Bombay Mace.

**Tel.** Adavi - jáji - káya. అడవిజాజికాయ.

**Mal.** Káttu - Játhik - kaya. കാട്ടു ജാതിക്കായ

**Kan.** Kanagi, or jadnikai. ಕಾನಗಿ or ಜಾಡ್ನಿಕಾಯಿ.

**Sans.** Kamuk कामुक ,
Malati. मालती.

**Pers.** Jozboya Dashti. * جوز بوأدشتی

**Hind.** Janglí - Jaé - phal. * جنگلی جائیفل

**Duk.** Janglí - Jáphal. * جنگلی جاپھل

இது மலையாளம், கன்னடம், குடகு முதலிய தேசங்களிலும் முக்கியமாய்க் காடுகளிலும் வளரும் மரத்தின் காய்.

இதன் விதை சாதாரண சாதிக்காயைவிடப் பெரிதாயும், நீளம் சிறிது கூடுதலாயும், மணத்திலும், சுவையிலும், குணத்திலும் தாழ்ந்ததாகவும் இருக்கும்.

**ப - உ.**—விதை, பத்திரி.

**சுவை.**—கைப்பு - துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—(புற) வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Local stimulant.

**குணம்.**—இதை விரணம், வாதவலி, காது நோய் இவைகட்கு வெளிப் பிரயோகமாக உபயோகிக்கலாம்.

**பத்திரி.**

வாந்தி, நரம்புத்தளர்ச்சி இவைகளைப் போக்கும்.

**வ - கு.**—காயிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் ஒருபங்கு, தேங்காயெண்ணெய் இருபங்கு சேர்த்து அழுகிய விரணங்களுக்குப் போடச் சுகமாகும்.

நாட்பட்ட வாதநோய்க்கு வெளிப்பிரயோகமாக இவ்வெண்ணெயை உபயோகப்படுத்தலாம்.

இக்காயை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, அவ்வெண்ணெயை காது நோய்க்கு இரண்டொரு துளி விடலாம்.

பத்திரியை இதர மருந்துகளுடன் சேர்த்து உபயோகிக்கத் தேகவன்மையைக் கொடுத்துப் பலவீனத்தைப் போக்கும்.

---

## காட்டுத்துமட்டி.—Káttuthumatti.

Cucumis Trigonus.

Eng. Bitter gourd.

**Tel.** Aḍavi - puch - çha. అడవిపుచ్చ.

**Mal.** Káttukumatti. കാട്ടുകമട്ടി.

**Kan.** Hal - mekki. ಹಾಲ್ಮೆಕ್ಕಿ.

**Sans.** Vishala. विशाला.

**Hind.** Janglí - indaráyan. جنگلی اندراین *

துமட்டிவகையில், காட்டுத்துமட்டி மிகவும் கசப்பானது. காய் பச்சை நிறமாயும், மஞ்சள் வரியோடு கூடியுமிருக்கும். இது சாதாரணமாய் எங்கும் கிடைக்கக்கூடியது. கொடி வகுப்பைச் சேர்ந்தது.

**ப - உ.**—காய், வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- Alexipharmic.
- நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.

**குணம்.**—பூச்சிக்கடி, சிறுகிருமி, பைத்தியம் இவைகளைப் போக்கும்.

**வ - கு.**—விதைகளை அறுகம்புல்லோடு சேர்த்தரைத்துச் சிற்றம்மை நோயில் எழும்புகின்ற சிறு கொப்புளங்களுக்குப் போடக் குளிர்ச்சியைத் தந்து சுகமாக்கும்.

இலையை அரைத்து, வீங்கங்களில் பூச அதனுலுண்டாகும் வேதனை நீங்கிவிடும்.

காயை இடித்துப் பசுவின்பாலில் வேகவைத்துத் தலையில் பற்றிட, பைத்திய நோய் நீங்கும்.

வேர் ஒரு பங்கு, நீர் 10 பங்கு விட்டு, அரைமணி நேரம் கொதிக்க வைத்து, ¼ ஆழாக்குக் கொடுக்கப் பேதியாகும்.

---

## காட்டுப்பாகல்—Kattup-pākal.

**வே - பெ.—பழுபாகல்.**

**Momordica Dioica.**

**Eng.—Bitter gourd (wild).**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** Karkotaki కర్కోటకి. | | **Sans.** Vahassa | **वहस्सा.** |
| **Mal.** Vempával വെമ്പാവൽ. | | **Hind.** Dhar-karela | دهار کریلہ * |
| **Kan.** Madahagala-kayi ಮಾದಹಾಗಲ ಕಾಯಿ. | | | |

இது பாகல் இனத்தைச் சேர்ந்தது. இதற்குக் கிழங்கு உண்டு.

தென்னிந்தியா, இலங்கை இவ்விடங்களிலுள்ள காடுகளில் தானுகவே வளர்ந்து கிடக்கும். வங்காளம் முதலிய வடநாடுகளில் இதைப் பயிரிட்டு வளர்க்கிறதுண்டு. இவ்வினத்தில் **ஆண், பெண்** என இருவகையுளது. **பெண்** இனக் கிழங்கு, ஆண் இனக் கிழங்கைவிடப் பருமனுகவிருக்கும். ஆண் கிழங்கு மிகச் சிறுத்து ஏகதேசம் வேர் போன்றே இருக்கும்.

**ப - உ.**—இலை, காய், வேர் அல்லது கிழங்கு.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—இதனுல் கிருமிநோய், தலைவலி, மூலம், கபாதிக்கம், சருமநோய் முதலியன தீரும்.

**வ - கு.**—இலைச்சாற்ருேடு, மிளகு, தேவதாரு, தேங்காய் இவைகளைச்சேர்த்து மைப்போல் அரைத்து நெற்றியின்மீது தடவித் தலைவலியைப் போக்கலாம்.

பல்லி எச்சமிடுவதினுலுண்டாகும் சிறு கொப்புளங்களுக்கு, இதன் காய்ச்சாற்றைத் தடவிச் சுகம் பெறுதல் சாதாரண வீட்டு வழக்கம்.

காயை நன்ருய் வெயிலிற் காயவைத்துப் பொடித்துச் சூரணமாக்கி நாசியில் ஆக்ராணம் செய்யத் தீராத்தலைவலி நீங்கும்.

காயைச் சமையல் செய்து சாப்பிடுவது முண்டு.

ஆண் செடியின் வேரை அரைத்து, பாம்புக் கடிவாயில் வைத்துக் கட்ட விரணம் ஆறிப்போகும்.

பெண் செடியின் கிழங்கை மூலரோகத்துக்குக் கொடுக்கலாம்.

இக்கிழங்கை உலர்த்திப் பொடித்துச் சூரணித்துக் கபநோய்களுக்கு அனுபானமாகக் கொள்ளலாம்.

## காட்டுப்பேய்ப்புடல்—Kāttup-peipudal.

**வே - பெ.—பேய்ப்புடல்.**

Trichosanthes Cucumerina.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Adavi-potla | అడవిపొట్ల. | Kan. | Bettada-padavalá | ಬೆಟ್ಟದ ಪಡವಲ. |
| | Chédu-potla | చేదుపొట్ల. | | | |
| Mal. | Kaippam-patôlam | കൈപ്പം പടോലം. | Sans. | Patola | पटोला. |
| | Pêpatolam | പേപടോലം. | Hind. | Jangli-chi-chôndâ | جنگلی چیچونڈا * |

இது மலையாள தேசத்தில் பயிராகும் ஒரு வகைக் கொடி. அருவருப்பான மணத்தையுடையது.

**ப - உ.**—இலை, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலையும் விதையும்.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.

**வேர்.**
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனால் பித்த கப சுரங்கள், காமாலை, மசூரிகை, தாகம், மயக்கம் இவைபோம்.

பித்தசுரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்றம சூரி யுழற்றுக—நித்தியமுங்
காய்ப்புடலை யுண்ணக் கவிழ்க்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு. (அ.கு.)

**வ-கு.**—இதன் கொழுந்தைக் கஷாயமிட்டுக் கொடுக்கப் பேதியாகும்.

இலை இரசத்தைக் கொடுத்தால் வாந்தியுண்டாகும்.

பூச்சிக்கடியினால் தலைமயிர் விழுவதற்கு இதன் இரசத்தை தேய்த்தால் தலைமயிர் உதிர்வது நின்றுபோம்.

இலை 3 வராகனெடை, கொத்துமல்லி 3 வராகனெடை எடுத்து நீர் விட்டு இரவில் ஊறவைத்து, மறுநாட் காலையில் உட்கொள்ளச் சுரம் தணியும்.

---

## காட்டுமுள்ளங்கி—Kāttumullangi.

**வே - பெ.—நாரக்கரந்தை, செவருமுள்ளங்கி, சுவர்முள்ளங்கி, சுவற்றுமுள்ளங்கி.**

Blumea Aurita.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Adavi-mullangi | అడవి ముల్లంగి. | Sans. | Kukuradru | कुकुरद्रु. |
| | Kàru-pôgàku | కారు పొగాకు. | Arab. | Kamáfitus | * كمافيطوس . |
| Mal. | Kàttu-mullangi | കാട്ടുമുള്ളങ്കി. | Hind. | Janglí-kasni | جنگلی کاسنی * |
| Kan. | Kadumullangi | ಕಾಡು ಮುಲ್ಲಂಗಿ. | Duk. | Janglí-mulli | جنگلی مولی * |

இது தென் இந்தியாவில் எல்லா மூலே, இடுக்குகளிலும் சாதாரணமாய் வளருகின்றபூண்டு. முக்கியமாய் பாழ்ங்குடியிருப்புக்களிலும், மயானப் பூமி களிலும், பழஞ் சுவர்களிலும் வளர்ந்துகிடக்கும். இப்பூண்டு இளமை யாயிருக்கும்போது இலேகள் பெரிதாகவும், முதுமையடையும்போது இலே கள் சிறுத்தும், வித்தியாசமாயும் இருக்கும். இதை, நன்ருய் அறியாதவர் கள் இப்பூண்டின் இளமையையும் முதுமையையும் நோக்கி வெவ்வேறு வகைப்பூண்டெனக் கருதுவார்கள். இது இளேமையாயிருக்கையில் முக்கிய மாய் சுவர்களில் முளேத்தெழும்புகிறபடியால், இதற்குச் சுவற்றுமுள்ளங்கி அல்லது செவருமுள்ளங்கி என வேறு பெயரிட்டிருக்கின்றனர்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம். **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மணமூட்டி - Aromatic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—நீர்க்கட்டையும், மார்பு நோயையும், வாதசோபரோகத்தை யும் நீக்கும்.

நீரை யிறக்கிவிடு நெஞ்சுவலி யைத்தொலேக்குங்
கோர வதப்பைக் குடிகெடுக்கு—நேரே
தவத்திலுயர்ந் தோர்மயங்குஞ் சாயகக்கண் மாதே !
சுவற்றுமுள் ளாங்கியது சொல். (அ.கு.)

**வ - கு.**—இலேயை உலர்த்திப் பொடித்து இரண்டு வராகனெடை வீதம் வெண்ணெயில் கொடுக்க மேற்கண்ட நோய்கள் சுகமாகும்.

இலேச்சாற்றை இரண்டொரு துளி கண்ணில்விட கண்ணோய் நீங்கும்.

சமூலத்தைக் கஷாயமிட்டு ¼ ஆழாக்கு வீதம் உட்கொள்ள, வயிற்றுக் கிருமிகள் விழும். சலதோஷத்தையும், ஸ்திரீகளுக்குண்டாகும் வெள்ளே யையும் போக்கும்.

மேற்படிக் கஷாயத்தைச் சூதகக்கட்டுக்குக் கொடுக்கலாம்.

---

## காட்டுவாகை—" Káttu-vākai."

**Acacia Speciosa.**

**Eng.—Sirissa tree.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Dirisana-chettu దిరిసన చెట్టు. / Tella-dirisana-chettu తెల్ల దిరిసన చెట్టు. | **Kan.** | Bagemara ಬಾಗೆಮರ. |
| | | **Sans.** | Shirish-sahasraki शिरीष or साहस्रकी. |
| | | **Hind.** | Sufēd-kikar سفید کیکر* |
| **Mal.** | Velu-vaka വെളു വാക. | **Duk.** | Ujlí-kíkar اجلی کیکر* |

இது இந்தியாவில் காடுகளில் வளரும் மரம்.

**ப - உ.**—இலே, பூ, விதை, பட்டை,

**சுவை.**—துவர்ப்பு ; **வீரியம்** - சீதம் ; **பிரிவு** - இனிப்பு.

செய்கை. { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.

**குணம்.**—இரத்தமூலம், அஜீரணபேதி, வெள்ளை, குஷ்டம் முதலிய நோய்கள் குணமாகும்.

**வ - கு.**—கண்ணோய்க்கு இதன் இலையை ஒற்றிடமிடலாம்.

பூவை அரைத்து வீக்கம், சிரங்கு, கொப்புளம் முதலியவைகளுக்குப் பற்றிடலாம்.

விதையை அரைத்துக் கண் வியாதிகளுக்கு அஞ்சனமிடலாம்.

விதையைப் பொடித்து ½ முதல் ஒரு வராகனெடை கொடுக்க, நெறிகட்டு நோயைப்போக்கும். விதையை நீர்விட்டரைத்து மேற்படிக் கட்டிகளுக்குப் பற்றிட, பூரணசுகம் தரும்.

இவ்விதைகளிலிருந்து எடுக்கும் எண்ணெய் குட்டநோயைத் தணிக்கும்.

பட்டையை இடித்துப் பொடித்து வஸ்திரகாயம் செய்து ½ முதல் ஒரு வராகனெடை தகுந்த அனுபானத்தில் கொடுக்க, இரத்தமூலம், பேதி, வெள்ளை முதலிய நோய்கள் குணமாகும்.

---

## காட்டுவெங்காயம்—" Kāttu-vengayam."

**வே - பெ.**—காட்டீருள்ளி, நரிவெங்காயம்,

Urginea Indica.

Eng.—Indian Squill, Bulb of—

| | |
|---|---|
| Tel. Nakka-vulli-gadda నక్క-వుల్లి-గడ్డ. | Arab. Isqíle-hindi * اسقلم هندی |
| Mal. Kàṯṯulḷi കാട്ടുള്ളി. | Pers. Piyāze-dashtie-hindi * پیاز دشتی هندی |
| Kan. Adavi-neerulli ಅಡವಿ ನೀರುಳ್ಳಿ | Hind. Janglí-piyāz * جنگلی پیاز |
| Sans. Vana-palándu वनफलाण्डुः. | Duk. Kandrā * کاندرا |

இது இமாலயபர்வதத்தின் அடிவாரப்பிரதேசங்களிலும், கடற்கரை, மணற்பாங்கு பூமிகளிலும் வளருகின்றது ; வெங்காய வருக்கத்தைச் சேர்ந்த பூண்டு. இது அப்பூண்டினத்தைப்போன்றுத் திரிதிரியாயின்றி, ஒரே கிழங்காகவிருக்கும். இக்கிழங்கு முற்றுததற்கு முன்னரே எடுத்து அரிந்து நடுபாகத்தை நீக்கிவிடல் வேண்டும்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.

**குணம்.**—இதனால் சர்ப்பவிஷம், சீதளத்தாலுண்டாகிய கோழை, சுவாசம், மூலம், பகந்தரரோகம் ஆகியவைபோம்.

நஞ்சோடு சீதகபம் நாடாதி ரைப்பும்அறும்
பஞ்சாக மூல பகந்தரம்போம்—பஞ்சணைசேர்
வீட்டுள் ளிருக்கும் வினோத மடமயிலே !
காட்டுள்ளி யின்கிழங்கைக் கண்டு. (அ.கு.)

**வ - கு.**—இதைக் கஷாயமிட்டு மகோதர முதலிய நீரேற்ற நோயாளி களுக்குக் கொடுக்க மூத்திரத்தை அதிகப்படுத்தி நீரை யிறக்கும்.

இதன் கிழங்கைப் பாதங்களில் தேய்க்கக் காந்தல், வாதம் நீங்கும்.

காலாணி போன்ற காலின் நோய்களுக்கு இவ்வெங்காயத்தைச் சுட்டு, சூட்டோடே ஆணியில் வைத்து மிதித்துவர, நோய் நீங்கி குணமாகும்.

நரி வெங்காயம் ஒரு குன்றி, மிளகு 2 குன்றி, பொட்டிலுப்பு 6 குன்றி, இம்மூன்றையும் உலர்த்திப் பொடிசெய்து ஜலத்தில் கரைத்துக் கொடுக்க, மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

வெங்காயத்தைப் பிழிந்துச் சாறெடுத்து, இருமடங்கு சருக்கரைப் பாகு சேர்த்து ½ தேக்கரண்டி வீதம் கொடுத்துவர, நாட்பட்ட இருமல், கப ரோகம் இவைகள் தீரும்.

---

## காப்பிக்கொட்டை—Kāppik-kottai.

Coffea Arabica,

Eng.—Seeds of Coffee.

| | |
|---|---|
| **Tel.** Kàpi-vittulu కాపివిత్తులు. | Arab. Bun * بن |
| **Mal.** Kàppik-kuru കാപ്പിക്കുരു. | Pers. Qahvà * قهوه |
| **Kan.** Kàpi-bija ಕಾಫಿಬೀಜ. | Hind. Bûn * بن |
| **Sans.** Mleecha-phala म्लेच्छफलम्. | Duk. Bùnd * بند |

இது காப்பிச்செடிப்பழத்தின் கொட்டை. செடியானது முக்கியமாய் தென்னிந்தியா, மைசூர், குடகு முதலிய பிரதேசங்களின் மலைகளிலும், குளிர்ச்சியான பூமிகளிலும் வைத்துப் பயிராக்கப்படுகின்றது. கொட்டையைப் பொடித்துக் கஷாயமிட்டுக் காப்பிப் பானமாக அருந்துபவர் உலகத்தில் ஏராளமாகையால், இச்செடி உலகத்தின் பற்பல இடங்களிலும் அபரிமிதமாய்ப் பயிரிடப்பட்டு, ஆங்காங்கே உலகத்தின் நாலுபாகங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றது.

**ப - உ.**—கொட்டை (காய்ந்த பழம்).

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- கற்றுகளாக்கி - பாஷாணபேதநி - Antilithic.
- தூக்கமகற்றி - Antisoporific.

**குணமும் வழக்கும்**—காப்பியைத் தக்கஅளவு சேர்த்துக் கஷாயமிட்டுப் பானஞ்செய்யின் உண்ட உணவைச் செரிப்பிக்கவும், அதைத் தாதுக்களிற் சேர்க்கவும் குடலுக்கு உதவியாயிருக்கும். சப்த தாதுக்களையும் கட்டுப்படுத்தும். ஆனால், மூளையிற்சேரவேண்டிய இரத்தத்தைக் குறைத்து நரம்பு நாளங்களில் (Nervous tissue) அதிக அளவில் சேர்க்கும். மனச் சோர்வை நீக்கி நித்திரையைக் குறைக்கும். உற்சாகத்தையும் உண்டுபண்ணும்.

அதிக அளவிற் சேர்த்து உட்கொள்ளின், உமிழ் நீரைக்குறைத்து ஜீரணசக்தியைக் கெடுத்து, அதன் மூலமாய் ஆமாசயம் தன் வேலையைச் சரியாய்ச் செய்யவொட்டாமற் றடுக்கும். நாளடைவில் தீராத்தலைவலி, நித்திரையின்மை, இருதயப் படபடப்பு, பக்கவாதம், சந்நி முதலிய நோய்களைப் பிறப்பிக்கும். மேலும் குன்மம் முதலிய வயிற்று நோய்களைத் தந்து முதிர்வயதிற்குரிய குறிகுணங்களை வெகு சீக்கிரத்திற்காட்டும்.

இப்பானம் குழந்தைக்கு நித்திரையின்மையைக் கொடுத்து, அதன் வளர்ச்சியைத் தடுக்கும். ஆகையால் இப்பானத்தை குழந்தைகளுக்குக் கொடுத்தல் தகாது.

தகுந்த அளவில் கொடுக்க, கக்குவான், குழந்தைகளுக்குண்டாகும் வாந்திபேதி, அதிசாரபேதி, சந்நி, இருதயப்படபடப்பு முதலிய நோய்கள் சாந்தமாகும்.

மூத்திரத்தை விருத்திபண்ணி கைகால் வீக்கங்களைக் குறைக்கும்.

சந்நிபாதசுரத்தின் ஆரம்பத்தில் கொடுக்க, மிகுந்த குணந்தரும்.

அபின் விடமித்தலுக்கு காப்பிப்பானம் மிகுந்த பயனுள்ளது.

சஸ்திரசிகிச்சை செய்த நோயாளிகளுக்கு இப்பானத்தை ஒரு தேக்கரண்டி வீதம் அடுத்தடுத்துக் கொடுக்க வாந்தியைக் கண்டிக்கும்.

குளிர்சுரத்திற்கு இப்பானம் மிகவும் ஏற்றது.

---

## காயப்பங்கொட்டை—- Kāyappankottai

**Strychnos Ignatii ; Ignatiⁱ Amara.**

**Eng.—Ignatius Beans.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Mal. | Kayappankuru | കായപ്പൻ കുരു. | Hind. | Papítah | * پپيته |
| Arab. | Papita | * پپيتا | Duk. | Papitah | * - پپيته |

இது பிலிப்பைன் (Phillipine) தீவுகளில் வளரும் ஒருவகை மரத்தின் விதை. இது எட்டி விதைக்குச் சமம். எட்டியின் குணத்தை இதுவும் பெற்றிருக்கிறது.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant. (நரம்பு) **உரமாக்கி** - பலகாரி - Nervine Tonic.

**குணம்.**—சுவாசகாசம், வாந்திபேதி, சோபை, மூலம், தாது நட்டம் முதலிய நோய்களைச் சாந்தப்படுத்தும்.

**வ - கு.**—விதையைப் பொடித்து அரைக்குன்றியளவு வாந்திபேதிநோய்க்குக் கொடுக்க நோய் சாந்தியாகும்.

இதையே சுவாசகாசம், சோபை, மார்புநோய் முதலிய வியாதிகளுக்கும் கொடுக்கலாம்.

விதையை மாவிலங்கம் பட்டையுடன் சேர்த்து அரைத்து விரணமில்லாத வீக்கங்களுக்குப் பூச வீக்கங் கரையும்.

மேல்நாட்டார் இதிலிருந்து திராவகம் இறக்கி, அத்திராவகத்தில் மூன்று முதல் முப்பது துளி வீதம் நரம்புத்தளர்ச்சிக்குக் கொடுத்துவருகிறார்கள்.

## காய்வள்ளிக்கொடி—Kái Vallikkodi.

**வே - பெ.—வெற்றிலைவள்ளி.**

Dioscorea Bulbifera.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Chedu - paddu dumpa చేదు పద్దు దుంప. Malaka-kaya-pendalam. మలక కాయ పెండలం. | Mal. | Kachchak-kodi | കാച്ചക്കൊടി. |
| | | Kan. | Thoonagenasu | ತೂಣಗೆಣಸು. |
| | | Hind. | Zamin kand | * زمین کند |

இது மரமேறுங்கொடிவகை. கொம்புகளைச் சுற்றிச் சுற்றி ஏறும். நாட்டில் வைத்துப் பயிராக்குவதை நாட்டுக்காய்வள்ளியென்றும், தானாகவே வளருவதைக் காட்டுக்காய்வள்ளி என்றும் பெயரிட்டுள்ளார். தானாகவே காட்டில் வளரும் கொடியின் கிழங்கு மிகக் கைப்புச் சுவையுடையதெனினும், நாட்டில்வைத்து வளர்க்கப்படுவது அத்தகைய சுவையைப்பெறுவதில்லை. இது நாளடைவில் தன் கைப்புச் சுவையை இழந்து நாட்டிலுள்ள ஏழை ஜனங்கள் சமைத்துண்ணத் தக்கதாயிருக்கும்.

இக்கொடியின் கிளைகளின் மேலும், பூமிக்குள்ளும் இருவிதமாக காயும், கிழங்குமாக காய்க்கிறபடியால் இதற்குக் காய்வள்ளிக் கிழங்குக் கொடி எனப்பெயர்.

**ப - உ.**—கொடி, காய், கிழங்கு.

**காட்டுக்காய்வள்ளி.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**நாட்டுக்காய்வள்ளி.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge. **இலை.**

**குணம்.**—இதன் கிழங்கு வாதரோகத்தையும், சருமத்தின் மீது பெரிய சிறிய விரணங்களையும் உண்டாக்கும். உஷ்ணசாந்தியென்பர்.

அக்கினி வெப்பை யடக்குமென்பார் வாதமொடு
தொக்கிலதி புண்சிரங்கைத் தூண்டிவிடும்—மிக்குபசும்
வேயையுடை தோளணங்கே! வெற்றிலையாம் வள்ளியெனுங்
காயையுடை வள்ளியது காண். (அ.கு.)

**காட்டுக்காய்வள்ளி.**

**வ - கு.**—இலையை உலர்த்திக் கஷாயமிட்டுக் கொடுக்கச் சுரத்தைத் தணிக்கும்.

கொடியின் காய்களைக் காயவைத்து உலர்த்திப் பொடித்துப் புண்கள் மீது தூவிவர, புண் குணமாகும்.

மேற்படி தூளையே 30 குன்றியளவில் எடுத்து ஏலக்காய் சிறிதும், சருக்கரை, பால் இவைகளும் சேர்த்துச் சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

மேற்படிப் பொடியைச் சிறிது வெண்ணெய் சேர்த்து அதிசார பேதிக்குக்கொடுத்துவர, பேதி நின்று போகும்.

**நாட்டுக்காய்வள்ளி.**

**வ - கு.**—இதன் கிழங்கைக் கும்பிச்சாம்பலில் வேகவைத்துச் சிறிது நெய் சேர்த்துப் பிசைந்து உருட்டி, மூலத்துக்கு வைத்துக்கட்டச் சுகமாகும்.

இதன் காயையும், கிழங்கையும் ஏழை ஜனங்கள் வேக வைத்துச் சாப்பிடுகிறார்கள்.

## காராமணி—Kárámani.

**Dolichos Catiang.**

**Eng.—Cow - gram.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Boberlu ; Alusundi బొబ్బర్లు, అలుసంది. Duntu-pesulu దుంతు పెసలు. | Kan. | Ala-sandi ಅಲಸಂದಿ. |
| | | Sans. | Rajamasha राजमाष. |
| | | Hind. | Lobia لوبیا * |
| Mal. | Payara പയറ്. | | |

இது வெப்பப் பிரதேசங்களில் பயிராக்கப்படும் ஒருவகைச் சிறுசெடி.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**—சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—வாதநோய், வாதமூலம், நீங்காதபேதி இவையுண்டாம்.

காரா மணியிலையைக் காய்ச்சியுண்டால் நாவுரிசை
வாராத வாயுமிக வந்துறுமே—நேரேகேள்
மூலம் விளையும் முசியாக் கழிச்சலுண்டாந்
தாலம்அதில் அவ்விலையைத் தள். (அ கு.)

**வ - கு.**—உப்புச்சேர்த்து வேகவைத்தும், வறுத்தும் உண்ணலாம்.

---

## காரை—Kárai.

**Webera tetrandra.**

இது இந்தியாவின் பலபாகங்களிலும் வளருமாயினும் தென்னிந்தியா விற்கே சிறப்பாக உரியது. இச்செடிக்கு முள்ளுண்டு. குத்துச் செடியினத்தைச் சேர்ந்தது. காய்கள் பச்சையாயும் பழுக்கப்பழுக்க மஞ்சள், கறுப்பு நிறத்தையும் அடையும்.

இதில் **குத்துக்காரை, பெருங்காரை** என்கிற இரண்டினமுண்டு.

**ப - உ.**—இலை, பழம்.

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**குணம்.**—இலைக்கு இரத்தக்கடுப்பு விலகும்.

"காரைத் தழைக்குக் கடுப்பிரத்தம் போம்புளியைச்
சோரப்பெய் தாக்கிச் சுவைத்தறிநீ." (அ.கு.)

**பழம்.**

சீதரத்தக்கடுப்பும், அதிசாரமும் நீங்கும்.

சீதக் கடுப்புஞ் செறிந்தஇரத் தக்கடுப்பும்
ஓதுமதி சாரமும்போ முண்மையே—மோதுகடல்
நீரைப் பருகுமுகி னேரளக மின்கொடியே !
காரைப் பழத்திற்குக் காண். (அ.கு.)

**வ - கு.**—காரையைப் புளியிட்டுச் சமைத்துண்ண இரத்தக்கடுப்பு விலகும்.

பழத்தை உடைத்து விரையை நீக்கி உலர்த்திக் கஷாயமிட்டுத் தினம் இருவேளை குடித்துவரச் சீதரத்தக்கடுப்பும், அதிசாரமும் விலகும்.

## கார்போகரிசி—Kárpokarisi.

வே - பெ.—கார்புவாஅரிசி, பாகுசி, காப்புவாஅரிசி,
Psoralia Corylifolia.
Eng.—Babchi Seeds.

Tel. { Kárubógi - vittulu కరుబోగి విత్తులు. Bhávanchi - vittulu భావంచి విత్తులు.
Mal. Karboga-ari കാർബോഗ അരി

Kan. Vakuchu ವಾಕೂಚು.
Sans. Vakuchi वाकुची.
Hind. Bávanchíyan * باون چیان
Duk. Bávanchí * باون چی

இது இந்தியாவின் சமவெளிகளிலும் பங்காளத்திலும் சாதாரணமாய்க் கிடைக்கக்கூடியது. விதை வாசனையாக இருக்கும்.

ப - உ.—வித்து.

சுவை.—கைப்பு, இனிப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை. { உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative. மலமிளக்கி - லகுஸ்ரேசநி - Laxative. செரிப்புண்டாக்கி - பாசநகாரி - Digestive. வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant. காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

குணம்.—இதைக் கடுவன், விரணம், சர்ப்பவிஷம், வாதசிலேஷ்மம், தினவு, யானைச்சொறி, கிரந்தி இவைகளுக்கு உபயோகிக்கலாம். பசியை யுண்டாக்கும். குட்டம் விலகும். ஆனல் பித்தமுண்டாக்கும்.

கார்போக மாமரிசி கண்டாற் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவைபோம் பித்தமுண்டாம்—பார்மீதில்
வாத கபநமைச்சல் வன்சொறிசி ரங்குமறுஞ்
சீத மலர்க்குழலாய் ! செப்பு. (அ.கு.)

வ - கு.—கார்போகி, நீரடிமுத்து, கசகசா, பாதம்பருப்பு, கொப்பரை, கருஞ்சீரகம், காட்டுச்சீரகம் இவைகளைஒன்றுசேர்த்துக் காடிநீர் விட்டரைத்துத் தேகத்தில் பூசி ஊறவைத்து மூன்று மணிநேரஞ்சென்று இளவெந்நீரில் குளிக்கச் சொறிசிரங்கு, அழுக்குப்படை, படர்தாமரை மற்றுமுள்ள சாதாரண சருமரோகங்கள் குணப்படும்.

விதையுடன் பசும்பால்விட்டு அரைத்துத் தேய்த்துக்குளிக்கலாம்.

தைலவருக்கங்களிற் சேர்ப்பதுண்டு.

---

## காவட்டம்புல்—Kávattampul.

வே - பெ —காமாக்ஷிப்புல், மாந்தப்புல், சுன்னரிப்புல்:
Andropogon Nardus.
Eng.—Roosa grass, Citronella.

Tel. { Kámákshi - kasuvu కామాక్షి కసువు. Kámánch - gaddi కామాంచిగడ్డి.
Mal. { Kámákship - pulla കാമാക്ഷി പുല്ല. Chorap pulla ചൊറപ്പുല്ല.

Kan. Ganda - hanchi-khaddi ಗಂಢಹಂಚಿಕಡ್ಡಿ.
Sans. Bhustrina भूस्तृण.
Hind. Ganjní-ka * گانجنیکا
Duk. Ganjní-ká * گانجنیکا

இது இந்தியாவில் பல இடங்களிலும் பயிராகும் ஒருவகை நறுமண முடைய புல். இதிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். அதற்குக் **காமாக்ஷிப் புல்லெண்ணெய்** என்று பெயர்.

**ப - உ.**—புல், எண்ணெய்.

**சுவை.**—கைப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—மலபேதி, அக்கினிமந்தம், அசீரணம், சிலேத்துமசுரம் ஆகிய வைகளையும், கணமாந்தம், அதிசாரம், நாவொட்டிக்காச்சல் ஆகியவைகளை யும் போக்கும்.

மாந்தப்புற் பேதிகட்டு மந்தம்அசீ ரணத்தைச்
சாந்திசெய்யும் வந்தசுரத் தைப்போக்கும்—எந்திழையே !
காவட்டம் புற்குக் கணமாந்தம் பேதியறும்
நாவொட்டிக் காய்ச்சலும்போ நாடு. (அ.கு.)

**வ - கு.**—புல்லைக் கஷாயமிட்டு $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுக்க வயிற்றுவலி, பேதி இவைகள் சுகமாகும். அளவில் குறைத்துக் குழந்தை களுக்குக் கொடுக்கலாம்.

எண்ணெய் 3—6 துளி சருக்கரையில் கலந்து வயிற்றுவலி, வாந்தி, வாந்திபேதி, வாதநோய் இவைகட்குக் கொடுக்க ஷை நோய்கள் நீங்கும்.

எண்ணெய் ஒருபங்கு, தேங்காய்எண்ணெய் இரண்டுபங்கு சேர்த்து வாதநோய்களுக்கு மேலுக்குத் தேய்க்கலாம்.

---

## காளான்—Káḷán.

Agaricus Campestris.

Eng.—White agaric.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kukka Godugu కుక్కగొడుగు | Kan. | Alámbu ಅಳಂಬು. |
| Mal. | Kálán കാളാൻ. | Hind. | Chhattri * چهتری |

இது சாதாரணமாய் மழைகாலங்களில் வைக்கோல்போரிருக்குமிடங் களிலும், இலைச்சருகு முதலியவை குவிந்துகிடக்குமிடங்களிலும் மரங் களின் அடிகளிலும் முளைத்தெழும்பும். இதில் அநேகவிதமுண்டு. **குடைக் காளான், மரக்களான், முட்டைக்காளான், சீமைக்காளான், கடற்காளான்** முதலியன. இவைகளில் கசப்புடையனவும், கசப்பில்லாதனவும் உண்டு. கசப்பில்லாதக் குடைக்காளான் இனத்தை ஏழைகள் சமைத்துச் சாப்பிடு வார்கள். குடைக்காளானுக்கு உட்புறம் வெளுத்திருக்குமாகில் அதுவே உண்பதற்கேற்றது.

இது சூதத்தைக் கட்டும்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent
- மலநீராக்கி - ஜலவ்ரேசநி - Hydrogogue.
- பாற்சுருக்கி - க்ஷீரநாசநி - Lactifuge.

**குணம்.**—இருமல், அஜீரணபேதி, இராவேர்வை இவைகளைக் குண மாக்கும்.

வ - கு.—காளானைக் கஷாயமிட்டு அம்மைசுரம் முதலிய சுரங்களுக்குக் கொடுக்கச் சீக்கிரத்தில் கொப்புளங்களை வெளிப்படுத்தும்.

சிறு அளவாகக்கொடுக்க அஜீரணபேதியைச் சுகப்படுத்தும்.

இதை அரைத்து மார்பில் பற்றிட, முலைப்பால் சுரப்பதைக் குறைக்கும்.

அட்டைக்கடியினு லுண்டாகும் தீரா உதிரப்பாய்ச்சலை நிறுத்தவும் உபயோகிக்கலாம்.

---

## காருக்கருணை—Kárák-karunai.

**Amorphophalius Campanulatus.**

**Eng.—Telugu potator Amorphophalus.**

| | | |
|---|---|---|
| **Tel.** | Kanda-gadda కంద గడ్డ. | |
| | Manchi-kanda మంచి కంద. | |
| **Mal.** | Chénak-kizhanna ചേനക്കിഴങ്ങ്. | |
| **Kan.** | Suvarna-guddah ಸುವರ್ಣ ಗಡ್ಡೆ. | |
| **Sans.** | Arsaghna-kanda अर्शघ्न-कन्द. | |
| **Hind.** | Zamiṅ kand. | * زمین کند |

இது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகிறது. முக்கியமாய்த் தென்னிந்தியாவில் விசேஷமாயுண்டு. இதன் கிழங்கு பூமிக்குள்ளிருக்கும். ஒரே கிழங்காக மிகப்பருமனுக இருக்கும். இவ்வினத்தில் **காட்டுக்கருணை, காறு கருணை** என வேறு இருவகையுமுளது. இதன் கிழங்குக்காக இச்செடியை எங்கும் பயிரிட்டு வளர்க்கின்றனர்கள்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—காரகரப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனல் சிலேத்துமரோகம், வாதநோய், இரத்தமூலம், அக்கினிமாந்தம் இவைபோம். பசி உண்டாகும்.

ஞால மதிற்கபநோய் நாடாது வாதமறும்
மூல முளையிரத்தம் முன்பொழியும்—ஓலமிட்டு
மாறுக் கனல்மந்த மாறுமதி தீபனமாங்
காருக் கருணைதனைக் காண். (அ. கு.)

**வ - கு.**—இக்கிழங்கைச் சமைத்துப்புசிக்க, மூலவியாதி போகும்.

இதை நசுக்கி கட்டிகளுக்குவைத்துக் கட்டினுல் கட்டிகள் கரையும்.

இதை வேகவைத்து உலர்த்திப் பொடித்து மாவாக்கி கூவக்கிழங்கு மாவிற்குப்பதிலாக சீதபேதிக்குக் கொடுத்துதவலாம்.

இதையே உலர்த்திப்பொடித்து வேறு மருந்துகளுடன் சேர்த்து இலேகியமாகக் கிளறி சருமவியாதிகளுக்குக் கொடுக்கலாம்.

---

## காறுக்கருணை—Káru-Karuṇai.

**Typhonium Orixense.**

| | |
|---|---|
| **Tel.** | Durada-Kanda-Gadda దురద కంద గడ్డ. |
| **Mal.** | Kárach-chena കാറച്ചേന. |

இது இந்தியாவிலுள்ள பள்ளத்தாக்குகளிலும், சதுப்பு நிலங்களிலும் வளருகின்ற ஒருவகைக் கருணையினத்தைச் சேர்ந்தது.

**சுவை.**—சிறுகைப்பு, கரகரப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { காறலுண்டாக்கி - Acrid.<br>வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதனால் கரப்பான், பொடிச்சிரங்கு, சொறி, உட்கிரந்தி, மூலரோகம் இவைகள் நீங்கும். ஆனால், மந்தாக்கினி, கபக்கோழை, நமைச்சல் ஆகிய இவைகள் உண்டாகும்.

கரப்பான்சி ரங்குசொறி கானுக் கிரந்தி
யுரப்பாக்கு மூலநோ யோட்டும்—நிரைப்பான
மந்தமொடு கோழைதரு மாருத் தினவுநல்கு
மந்தமிகுங் காறுகரு ணை. (அ.கு.)

**வ - கு.**—இக்கிழங்கைச் சதைத்துக் கட்டிகள் கரையக் கட்டலாம். மேலும், நச்சுப்பாம்புகள் கடித்தவிடத்து இதைச் சதைத்து வைத்துக்கட்டலாம்.

---

## கானாம்வாழை—Kánámvazhai

Cammelina benghalensis—L.

இது ஒரு படர்கொடி வகை. போகுமிடமெல்லாம் வேரூன்றும். சாதாரணமாய் எங்கும் கிடைக்கக்கூடியது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு , **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.<br>காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.<br>துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—மூலவித்துருதி, சுரம், இரத்தபேதி இவை நீங்கும். சுக்கில விருத்தியும் கபப்பெருக்கமும் உண்டாகும்.

கானாம்வா ழைக்குமூலக் கண்குழிப்புண் ஆறிவிடும்
ஆனாலும் போகம் அதிகரிக்கும்—மானேகேள் !
ஐயம் விளையும் அனல்தணியும் நீங்காத
பையுதிர மாறுமுன்னிப் பார். (அ.கு.)

**வ - கு.**—இதையரைத்துக் கட்டினால் மூலயிலுண்டாகும் குழிப்புண்கள் மாறும். உட்கொள்ள இரத்தபேதி, சுரம் நீங்கும்.

இதைச் சமைத்துண்ணக் காமம் பெருகும். ஆனால், கபம் அதிகரிக்கும்.

---

## கிச்சிலிக்கிழங்கு—Kich-chilik-kizhangu.

**வே - பெ.—பூலா, பூலாங்கிழங்கு, கச்சோலம், கச்சோரம், கர்ச்சூரம்.**

Curcuma Zedoaria.

Eng.—The Round White Zedoary.

**Tel.** { **Kich-chili-gaḍḍalu** కిచ్చిలి గడ్డలు.<br>**Kach-chàram** కచ్చూరము.

**Mal.** { **Kach-chòlam** കച്ചോലം.<br>**Kach-chùrik-kizhaṉṉa** കച്ചൂരിക്കിഴങ്ങ്.

**Kan.** **Kachórà** ಕಚ್ಚೋರ.

Sans. **Kachùra** कचूर.

**Arab.** { **Zuranbad.** زرنباد *<br>**Aurùqul - káfùr** عراق الكافور *

**Pers.** **Zhuranbàd** زرنباد *

**Hind.** **Kachùr** كچور *

**Duk.** **Kachùr** كچور *

இது வெளுப்பும் வட்ட ரூபமுமுள்ள ஒரு வகைக் கிழங்கு. இக்கிழங்கிற்கு நல்ல வாசனையுண்டு. இதன் செடியை இந்தியாவில் சில தோட்டங்களில் வைத்துப் பயிரிடப்பட்டுவருகின்றது.

**ப. உ.**—இலை, கிழங்கு.

**சுவை.**—கைப்பு, அற்பகாரம், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
- மணமூட்டி - Aromatic.

**குணம்.**—கிச்சிலிக்கிழங்குக்குக் கபநோயும், கீல் பிடிப்பும், விரணமும் நீங்கும்.

* * * * *

"(ஒட்டும்)நற் கிச்சிலியி னெண்கிழங்குக் கபமும்
பூட்டுமுடமும் புண்ணும் போம்." (அ.கு.)

மேலும்—இது வாதம், வாய்நாற்றம், அரோசகம், பீலிகாபிவிருத்தி, குன்மம், குட்டம், மூலம், காசம், காமாலை முதலிய நோய்களையும் நீக்கும். தீபனத்தையுண்டாக்கும்.

**வ. கு.**—கிச்சிலி இலைச்சாற்றைத் தக்க அளவில் கொடுக்க, கைகால் வீக்கங் குறையும்.

இதன் கிழங்குடன் திப்பிலி, இலவங்கம், அதிமதுரம் சேர்த்துக் கஷாயமிட்டு, அதில் கற்கண்டு அல்லது தேன் சேர்த்துக்கொடுக்க, இருமல் தணியும்.

குழந்தைகளுக்கு இதன் பச்சைக் கிழங்குச்சாற்றைத் தக்க அளவில் கொடுக்க மலக்கிருமிகள் விழும்.

உலர்ந்த கிழங்கை வாசனைத் திரவியங்களோடு சேர்த்து அரைத்துத் தேகத்தில் பூசிக் குளிப்பதுண்டு.

வாத கப ரோகங்களுக்குச் செய்யும் தைலங்களில் இது சேருவதுண்டு.

இதை வெங்காரத்தோடு சேர்த்து அரைத்து, அடிபட்ட சிதைவினாலுண்டாகும் நோய்களுக்கு வைத்துக்கட்டலாம்.

---

## கிச்சிலிப்பழம்—Kich-chilip-pazham.

**வே - பெ.—கொழுஞ்சிப்பழம் (போஜனகஸ்தூரி).**

Citrus - Aurantium.

Eng.—Orange fruit.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kich-chili-pandu | కిచ్చిలి పండు. | Kan. | Kittaḷe-haṇṇu | ಕಿತ್ತಳೆಹಣ್ಣು. |
| | Kittaḷi - pandu | కిత్తళి పండు. | Sans. | Nàgaranga-phalam | नागरङ्ग फलम् . |
| Mal. | Madhura-naraṇṇa | മധുര നാരങ്ങ. | Arab. | Nàranj | * نارنج |
| | Kòlanji-nárakam | കോളഞ്ചിനാരങ്ങം. | Pers. | Nàrang | * نارنگ |
| | | | Hind. | Nàrangì | * نارنگی |

இது சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. முதல் முதல் சீனு தேசத்திலிருந்து போர்த்துக்கேயரால் இவ்விராஜ்ஜியத்திற்குக் கொண்டுவரப்பட்டதெனச் சிலர் கூறுகின்றனர். ஆயினும், இந்தியா முழுவதிலும் பயிராகின்றது. முக்கியமாய் மலை அடிவார பூமிகளில் வளரும். சமபூமியில் பயிராகின்ற மரத்தின் பழங்களுக்கு ஒருவித புளிப்புச் சுவையுண்டு.

இவ்வினத்தில் **புளிப்பு** அல்லது **தித்திப்பு நாரத்தை, கடார நாரத்தை, துருஞ்சி நாரத்தை, பாப்பளி மாசு, கமலா, சாத்துகுடி** எனப் பல பிரிவுகளுண்டு. இவற்றுள் சில பெரிதாகவும், சில சிறிதாகவுமிருக்கும். **குட்டிக் கிச்சிலி** என்று வேறொரு சாதியுமுண்டு.

**ப. உ.**—பூ, பழச்சதை, தோல்.

## பூ.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
துயரடக்கி - வேதனசாந்தநி - Anodyne.

**குணம்.**—உடலிலுண்டாகும் நோயை விலக்கும்.

**வ. கு.**—பூக்களிலிருந்து தீநீர் வடித்து பித்தரோகிகளுக்குக் கொடுக்க, பித்த அனலைத் தணித்து உடற்குக் குளிர்ச்சியைத் தரும்; உடல் வலி நீக்கும். பூக்களைச் சருக்கரைப்பாகு செய்து துணை மருந்தாகவும், வேறு மருந்துகளின் தீச்சுவையைக் குறைப்பதற்காகவும் உபயோகப்படுத்தலாம்.

## பழச்சதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—இனிப்புக் கிச்சிலிப்பழம் தாகம், வாந்தி, சுரம், அரோசகம், இளைப்பு இவைகளை நிறுத்தும். புளிப்புப் பழம் சீத இருமலை உண்டாக்குமாகையால் இருமல் இருக்குங்காலத்தில் இதை உபயோகிக்கக்கூடாது.

**வ. கு.**—பழச்சதையை யாவரும் பிரியமாக அருந்துவார்கள். இது இரத்தத்தைச் சுத்தி செய்யும். நாவிற்கு உருசியைத் தரும். உணவு கொள்ளுகையில் இதைப் புசிப்பின் பித்தத்தைக் குறைத்து, தேக ஆரோக்கியத்தைத் தந்து, நல்ல ஜீரண சக்தியையும் கொடுக்கும். நோயுற்றெழுந்தோர்க்கு இப்பழரசம் மிகவும் இன்றியமையாதது. முக்கியமாய், இருமல், நீரிழிவு, மார்பு நோய், ஈரல் நோய் முதலியவைகளால் பீடிக்கப்பட்டு குணமடைந்தோர்க்கு இப்பழத்தின் இரசம் மிகவும் பயன்படும். மேலும், இவ்விரசம் பித்த அதிசாரத்தை நிறுத்துஞ் சக்தியுடையது. சிறு குழந்தைகளுக்குப் பாலுடன் பழரசத்தையும் சேர்த்துக் கலந்து கொடுத்துவர, வயிற்றுக் கோளாறுகளை நிறுத்தும். குழந்தைகளுக்குண்டாகும், சோகை, கணை, உட்சூடு, மாந்தம் முதலிய நோய்களுக்கு இதன் சாற்றுடன் திராட்சைப்பழரசம் சமபாகம் கலந்து தினமிருவேளை காலை, மாலை கொடுத்துவர, மேற்படி நோய்கள் தீரும்; தேகத்துக்கு நல்ல பலத்தைக் கொடுக்கும்.

## தோல்.

**சுவை.**—கைப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** { துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
உரமாக்கி - பலகாரி - Tonic.
மணமூட்டி - Aromatic.

**குணம்.**—அக்கினி மந்தம், வாந்தி, துர்ப்பலம் முதலியவைகளைப் போக்கிப் பசியையுண்டுபண்ணும். பித்தத்தைப் போக்கும்.

**வ. கு.**—புளிப்புப் பழத்தோல் $\frac{3}{4}$ ரூபாயெடை, பச்சை எலுமிச்சம் பழத்தோல் 1 வராகனெடை, கிராம்பு, $\frac{1}{2}$ வராகனெடை இம்மூன்றையும் நன்றாய் நசுக்கி $\frac{1}{2}$ படி கொதிக்கிற வெந்நீரிலிட்டு $\frac{1}{2}$ மணி நேரம் மூடி வைத்திருந்து குளிர்ந்த பின்பு வடிகட்டி, வேளைக்கு $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம், தினம் 2, 3 முறை கொடுக்க, அசீரணம், மந்தப்பசி, பலவீனம் முதலியன போம். பழத்தோலை முறைப்படிக் கஷாயமிட்டுக் கொடுக்க, அக்கினி மந்தம், வாந்தி, துர்ப்பலம் முதலியவைகளைப் போக்கும். காய்ந்த பழத்தோலைக் குடிநீரிட்டுக் குடிக்க, வாந்தியை நிறுத்தும். மலக்கிருமியை வயிற்றில் சேரவொட்டாதபடித் தடுக்கும்.

உலர்ந்த புளிப்பு ஆறஞ்சுப் பழத்தோல் 2 பலம் எடுத்து ஒரு படி கொதிக்கிற வெந்நீரிற் போட்டு, 12 மணி நேரம் வைத்திருந்து, பிறகு தோலைப் பிழிந்து சக்கையை எறிந்து விட்டு, வடிகட்டி, 10 நிமிட நேரம் வரையில் காய்ச்சி அதில் 32 பலம் (4 சேர்) சருக்கரை சேர்த்து மணப்பாகு செய்து, வேளையொன்றுக்கு ஒன்று முதல் இரண்டு தேக்கரண்டி வீதம் சலத்திற் கலந்து கொடுக்க, அசீரணம், மந்தம், அரோசகம், வாந்தி இவைகள் சாந்தமாகும், பசியுண்டாகும். கசப்பும், வெகுட்டலுமான மருந்துகளை இத்துடன் சேர்த்துக்கொடுக்கலாம்.

**எண்ணெய்.**—பழத்தோலிலிருந்து ஓர்வித எண்ணெய் எடுக்கலாம். இவ்வெண்ணெயில் 1—3 துளி சருக்கரையில் கலந்துக் கொடுக்க, நல்ல பசியையுண்டாக்கும். இதையே வாத நோய்களுக்கு மேலுக்குந் தடவலாம்.

பூவிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிகவும் நறுமணமுடையது. இதை அருவருப்புள்ள மருந்துகளுக்கு மணமூட்டலாம்.

---

## இட்டிக்கிழங்கு—Kittik-kizhangu.

**வே - பெ.—சின்னிக்கிழங்கு.**

**Acalypha - betulina.**

| | | |
|---|---|---|
| **Tel.** | **Chinni** చిన్ని. **Tsinni** త్సిన్ని. | **Mal. Chinni** ചിന്നി. |

இது தென்னிந்தியாவிலும், மத்திய இந்தியாவிலும், நீரோடை, குளம், குட்டைகளில் பயிராகின்ற ஆம்பல், கொட்டியினத்தைச் சேர்ந்தது.

**ப. உ.**—கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை**
- செந்நீரிளக்கி - Attenuent.
- பசித்தீத்தூண்டி - ஜடாரக்னிவர்த்தநி - Stomachic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

**குணம்.**—இதனால் நாட்பட்ட பிரமேகமும், சிலேஷ்ம நோயும் போகும். மிகு பசியும், பித்த சாந்தியுமுண்டாகும்.

இட்டிக் கிழங்கால் கிளர்தீ பனமுண்டாம்
எட்டிக் கிழமேகம் ஏகுங்காண் —துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நிர்த்த மயிலே ! நிகழ்த்து. (அ.கு.)

**வ. கு.**—இதை வேகவைத்தும், வற்றலிட்டும், வறுத்தும் உண்ண, மேற்கண்ட குணங்களைக் கொடுக்கும். சில தைலங்களிலும் சேரும்.

---

## கிடைச்சி—Kidaichi.

(A watery plant.)

Eng.—Aeschynomene.

**வே - பெ.—சடை, கிடை, நெட்டி.**

இது இந்தியாவில் ஏரி, குளங்களின் ஓரத்தில் பயிராகும் செடி. ஏழைகள் காதை வளர்க்கும் பொருட்டு இதைக் காதணியாக வழங்குவார்கள்.

இதன் இலை ரசத்தால் வெள்ளி பற்பமாகும். தேரையர் கரிசலில் இரசித பற்ப முறையைக் காண்க.

இதன் இலையை ஆமணக்கு நெய் விட்டு வதக்கி வீக்கங்களுக்கு ஒற்றிடமிடலாம்.

---

## கிரந்திதகரம்—Kiranthi-thakaram.

இது தென்னிந்தியாவில் வளரும் சிறு பூண்டினம். எங்கும் கிடைக்கக் கூடியது.

**ப. உ.**—இலை, விதை.

**செய்கை.** தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குணம்.**—இதனால் பித்தரோகம், சுவாசரோகம், சர்க்கரார்ப்புத விரணம் இவை தீரும்.

சீறுபித்த நோயுந் திரையெறிதல் போலுமெறிந்
தேறுஞ் சுவாசநோ யென்பதுவும்—வீறிப்
பறந்த சர்க்க ரார்ப்புதமும் பன்னப் புகுங்காற்
கிரந்திதக ரத்தாற் கெடும். (தே. கு.)

**வ. கு.**—இதைக் குடிநீர் செய்து உபயோகிக்கலாம்.

விதையைப் புளித்த காடிநீர் விட்டரைத்துக் கட்டி, விரணங்களுக்குப் பூசலாம்.

---

## கிரந்திநாயகம்—Kiranthi-nàyagam.

**வே - பெ.—சிலந்திநாயகம், கிரந்திநாயகன், கிரந்திநாயன்**

**Ruellia patula.**

இப்பூண்டு விசேஷமாய்த் தென்னிந்தியா, இலங்கை முதலிய இடங்களில் பயிராகின்றது. சாதாரணமாய் எங்குங் கிடைக்கும்.

**ப. உ.**—இலை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.

**குணம்.**—இப்பூண்டினால், சீதளம், சர்ப்பவிடம், கண்ணோய், பைசாச முதலிய சங்கை தோடம், உட்புண், கிரந்தி ஆகிய இவைபோம்.

சீதமறு மாவிடமுந் தீரும்விழி நோயகலும்
பூதமொடு மருளும் போகுங்காண்—மேதினியுள்
ஆயகத்துப் புண்கிரந்தி யாறுமயிலே ! கிரந்தி
நாயகத்தி னாலே நவில். (அ.கு.)

**வ. கு.**—இலையை யரைத்து ஒரு கொட்டைப்பாக்களவெடுத்து, பசுவின் வெண்ணெயுடன் கலந்து காலை, மாலை இருவேளையாக வுட்கொள்ளக் குணத்தின்கீழ்க் குறிப்பிட்ட நோய்களைத் தணிக்கும். இவ்வாறு செய்து அக்கிப் புண்ணுக்கும் தடவக் குணமுண்டாகும்.

## கிளியூறல்—Kiliyural,

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு, **மகிமை** - சீதம்.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இது வாசனைத் திரவியங்களில் ஒன்று. வெப்பம், சுரம் இவைகளைப் போக்கும்.

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாய வெப்பைத் தணிக்குங்—குணமார்
கிளியூறற் பட்டையது சீதம் பயிலும்
அளியூருங் கூந்தன்மின்னே ! ஆய். (அ.கு.)

**வ. கு.**—இது அநேகமாய் வெப்பத்தைத் தணிக்கும். தைலங்களில் சேரும் சரக்குகளில் ஒன்று.

---

## கிலுகிலுப்பை—Kilu-Kiluppai.

**வே - பெ.—நரிமிரட்டி, பேய்மருட்டி, வட்டைக்கிலுகிலுப்பை, வெதுப்படக்கி.**

Crotalaria, Verrucosa.

Tel. Ghelagherinta గిలగిరింట.
Mal. Kilukiluppi കിലുകിലുപ്പി.
Sans. Sonapushpi सोनापुष्पी.
Hind. Ban-san * بنسان

இது, வெப்பமிகுந்த பிரதேசங்களிலும், இலங்கையிலும் வளருகிற பூண்டு. முக்கியமாய்க் காடுகளில் ஏராளமாய் வளர்ந்து கிடக்கும். இதன் காய், காய்ந்திருக்கும்போது, காற்று வீசி அசைய அதற்குள்ள விதைகளால் கிலுகிலுவென்ற சப்தம் வெளிப்படும். இச்சப்தத்தை திடீரென்று கேட்கிற நரியானது பயந்து மிரண்டுவிடுமாகையால், இப்பூண்டிற்கு, நரிமிரட்டியெனப் பெயர்போலும்.

**ப- உ.**—இலை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு**, கார்ப்பு.

**செய்கை.** { உமிழ்நீர்ச்சுருக்கி - Anti - sialagogue.
நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.

**குணம்.**—உமிழ்நீர்ப் பெருக்கைக் குறைக்கும். சொறி, சிரங்குகளைப் போக்கும்.

**வ-கு.**—இலையைக் கஷாயமிட்டு மேற்படி நோய்களுக்கு உள்ளுக்குக் கொடுத்தும், மேற்படி இலையையே அரைத்து, வெளிப்பிரயோகமாக மேலுக்குப் பூசியுங் குணப்படுத்தலாம்.

---

## கீரிப் பூண்டு—Keerip-puṇdu.

**வே - பெ.—கீரிச்செடி, கீரிபுரண்டான்.**

Ophiorhiza Munghos.

Eng.—The mongoose plant.

Tel. Sarpakshi-chettu సర్పాక్షీ చెట్టు.
Mal. Kiri-chedi കീരിച്ചെടി.
Kan. Patala-garuda ಪಾತಾಳಗರುಡ.
Sans. Nagasugandha नागसुगन्धा.
Hind. Sarahati * سرهاتی

இது இந்தியா, இலங்கை முதலிய விடங்களிலுள்ள காடுகளிலும் மலைகளிலும் வளருகின்ற பூண்டு. கீரியும் பாம்பும் தம்மில் வைரிகளாதலால், கீரியும் பாம்பும் சண்டையிட்டு, பாம்பைக் கீரி கடித்துக் கொன்ற பிறகு, பாம்பின் விடத்தைப் போக்க, கீரி இப்பூண்டில் விழுந்து புரண்டு விடத்தைப் போக்கிக் கொள்ளுமெனக் கூறுவாருமுளர்.

**ப. உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- உறக்கமெழுப்பி - நித்ராகாரி - Soporific.

**குணம்.**—பசியைத்தூண்டி, மலத்தைக் கழிக்கும் குணம் இதற்குண்டு. நித்திரையைத்தரும். கடிவிடங்களைப்போக்கும்.

**வ - கு.**—இதன் வேரைப் பாம்புக் கடிவிடத்தைப்போக்க உபயோகிக்கிறார்கள். வெறி நாய்க்கடியையும் போக்கும்.

வேர்ப்பட்டையை அரைத்து புன்னைக்காயளவு பாலிற் கலக்கிக் காலை தோறும் மூன்று நாட் கொடுக்க, சுகபேதியாகும். மேலும் பைத்தியம் பிடித்தவர்களுக்கு இது நித்திரையைக் கொடுக்கும்.

ஒரு பங்கு இலைக்குப் பத்து பங்கு நீர்விட்டுக் காய்ச்சி வடிகட்டி, $\frac{1}{8}$ ஆழாக்கு வீதம் குடிக்க, பசியையுண்டாக்கி, தேகபலத்தைக் கொடுக்கும்.

இதன் வேரைக் கையில் வைத்துக் கொண்டால் பாம்புக் கடிவிடம் தேகத்தில் தங்காது என்று கூறியுள்ளார்கள்.

---

## கீரை—Kirai.

### Greens.

கீரை, பொதுவாக யாதாமொரு பூண்டினது இலை யெனக் கொள்ளப் படினும், இவ்விடம், முக்கியமாய் நாம் உண்ணும் உணவிற்காகவோ, அல்லது நோய்களைத் தீர்க்கும் பொருட்டு கையாளப்படும் மருந்துகளுக் காகவோ, பயன்படுத்தும், புல், பூண்டு, செடி கொடி, விருட்சங்களின் இலைகள், இலைக்கொழுந்து, தண்டு முதலியவற்றையே இங்கு விவரித் திருக்கின்றது.

## முளைக் கீரை—Mulaik-kírai.

### Young Greens.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இது காச சுரத்தை நீக்கும், பசியைத்தரும், நாவுக்கு இதமானது. விருத்தர், பாலர், யௌவனர் யாவருக்கும் உதவும்.

தளர்ந்தவர்க்கும் பாலருக்கும் தக்கவய தோர்க்கும்
இளங்கீரை நாவுக் கிதமாம் - கிளம்பு
சுரகாசம் போக்கும் தொடர்பசியுண் டாக்கும்
பிரகாச மாயெடுத்துப் பேசு. (அ.கு.)

**வ - கு.**—இதைச் சமையல் செய்துண்ண நாவிற்கு உருசியைத்தரும். யாவருக்கும் பொருந்தும். நல்ல பசியைக் கொடுக்கும். வெப்பசுரத்தைத் தணிக்கும்.

## கலவைக் கீரை—Kalavaik-kiraí.

**இது பலவகைக் கீரைகள் சேர்ந்தது.**

**Mixed Greens.**

**செய்கை.** மலமிளக்கி - லகுவிரேசநி - Laxative.

**குணம்.**—வாதபித்தகபதோடம், மலச்சிக்கல், குடல் வாதம் இவைகளைப்போக்கும். பத்தியத்திற்கு ஏற்றது.

வாதபித்த ஐயத்தை மாற்று மலமறுக்கு
மோதுகுடல் வாதமதை யோட்டுங்காண் - போதின்
பலகலவைக் கோதாய் ! நற் பத்தியத்திற் கொவ்வும்
பலகலவைக் கீரையுண்டு பார். (அ.கு.)

**வ - கு.**—பலவகையான கீரைகளையும் சேர்த்துச் சமைத்து உண்பதனால் மேற்கூறிய குணங்கள் உண்டாகும்.

---

## புளிப்புக் கீரை—Pulippuk-kírai.

**Sour Green.**

**குணம்.**—வாத கோபம், அருசி, சீதளம், இரத்தபித்தரோகம், கரப்பான் ஆகியவற்றைப் போக்கும், ஆனால் பித்தத்தை அதிகப்படுத்தும்.

வாதமறும் பித்தமுறும் மாரு வரோசிவிடுஞ்
சீதமுடனே யகலுஞ் சேயிழையே !—போதப்
புளித்த விலைக்கறிக்குப் போமிரத்த பித்தங்
களித்த கரப்பனொடு காண். (அ.கு.)

**வ - கு.**—புளிப்புச் சுவையுள்ளக் கீரைகளைச் சமைத்துண்ணில் மேற்கூறிய நோய்கள் விலகும். ஆனால் பித்தம் அதிகரிக்கும்.

---

## போகம் விளைக்கும் கீரைகள்.

**The Names of the Greens that excite sexual appetite.**

நறுந்தாளி, நன்முருங்கை, தூதுணம், பசலை, அறுகீரை இவற்றுள் யாதேனும் ஒன்றைப் புளி நீக்கிப் பாகஞ்செய்து, அன்னத்துடன் நெய் சேர்த்துக் காலை, காலையில்மாத்திரம், ஒருமண்டலமுண்ண புணர்ச்சியில் நிருவாகம் உண்டாகும்.

தாளி முருங்கைத் தழைதூ துளம்பசலை
வாளிலறு கீரையுநெய் வார்த்துண்ணி - லாளியென
விஞ்சுவார் போகத்தில் வீம்புரைத்த பெண்களெலாங்
கெஞ்சுவார் பின்வாங்கிக் கேள். (அ.கு.)

---

## சாணக்கிக் கீரை—Chánákkik-kírai.

**Ocimum polystachion.**

**Eng.—A kind of basil.**

இது கீரைவகையைச் சேர்ந்த ஒருவகைப் பூண்டு.

**ப- உ.**—இலை.

**சுவை.**—கார்ப்பு, சிறுகைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
- நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Germicide.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ராவர்த்தநி - **Diuretic.**

**குணம்.**—இதற்குக் கபம், அக்கினிமந்தம், சூழிக்கணம், மகோதரம், புழுநெளிகின்ற விரணம் ஆகிய இவைபோம்.

கோழையொடு மாந்தங் குழந்தைச் சுழிக்கணமும்
பேழையெனச் சொல்லும் பெருவயிறும் - கீழொருவர்
காணுக் கிருமிகளைக் கக்கு மழிபுண்ணுஞ்
சாணுக்கிக் கீரையிற்போஞ் சாற்று. (அ.கு.)

**வ - கு.**—இக்கீரையைச் சமைத்து உண்ண, மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## சிறு கீரை—Chiru-kírai.

### Amaranthus Gangeticus.

இது கீரைத்தண்டினத்தைச் சேர்ந்தது. இது சிறிய கீரைத்தண்டு எனவும் கூறலாம். ஆகவே இதன் செய்கை, குணம் முதலியன ஏறக் குறைய கீரைத்தண்டை யொத்தே யிருக்கும்.

**குணம்.**—இதனால், தூம்பிரநோய், காசம், படலம், பாதரசவேகம், விரணம், மூத்திரக்கிரிச்சரம், வீக்கம், பித்தநோய், நாவி - பாஷாணம் முதலிய விடங்கள் ஆகிய இவை போம். அழகு உண்டாகும்.

கண்புகைச்ச னேத்திரநோய் காசம் படலம்ரசப்
புண்கிரிச்ச ரஞ்சோபை பொங்குபித்த - மண்பரவு
தாவரவி டங்களும்போம் தாழாத் திருவுமுண்டாம்
கூறுசிறு கீரைதனைக் கொள். (அ.கு.)

**வ - கு.**—இக்கீரையைச் சமையல் செய்துச் சாப்பிட்டுவர மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## பசறை—Pasarai.

**வே - பெ.—பசலை, சிறுபசளை, சிறுபசலை.**

### Portulacea Quadrifida.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Sanna-pappu | సన్న పప్పు. | Sans. | Laghu-Lonika | लघुलोनिका. |
| | Sanna-pavili | సన్న పవిలి. | Arab. | Baqlatul-yamaniah | بقلات اليامنيا * |
| Mal. | Cheru-Basali | ചെറു ബസലി. | | | |
| Kan. | Hali-bachcheli | ಹಾಲಿಬಚ್ಚೆಲಿ. | Hind. | Chounlayi | چونلائی * |

இந்தியாவின் வெப்பப்பிரதேசங்களில் பயிராகும் ஒருவகைச் சிறு படர் பூண்டு. இது தரையில் படரும். இலைகள் ஒன்றுக்கொன்று எதிரெதிராகவும் தட்டையாகவும், நீளத்தில் 1/5 - 1/3 அங்குலமுமிருக்கும்.

**ப - உ.**—இலை, விதை.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**

**குணம்.**—இதனால் மூத்திரக்கடுப்பு, மூர்த்திரக்கிரிச்சரம் ஒழுக்கு வெள்ளை, அருசி, வாந்தி ஆகியவை போம்.

**வ - கு.**—இலையும், விதையும் பருப்புக்கீரை வருக்கத்தைப் போலவே அவ்வவ் வியாதிக்கு வழங்கலாம். இக்கீரையைத் தினமும் சமையல் செய்து புசித்துவரின் மேல்கண்ட நோய்கள் விலகும்.

நீர்க்கடுப்பு நீரடைப்பு நீங்காத மேகமுமிவ்
ஊர்க்கடுத்து வராமல் ஓட்டுங்காண் - பார்க்கவொண்ணு
அற்பவிடை மாதே ! அரோசிசர்த்தி யைத்தொலைக்கும்
நற்பசறைக் கீரையது நன்று. (அ.கு.)

---

## துயிலிக் கீரை.

**வே - பெ.—துயிலைக் கீரை, துயுலி, தொயில்.**

Achyranthes Polygonoides.

இதுவும் கீரையினமே.

**சுவை.**—துவர்ப்பு, சிறுபுளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதற்கு, ஆமமும், நமிட்டுச்சிரங்கும், விரணமும் உண்டாகும். பழமலக்கட்டும், பிரமேகவெள்ளையும் நீங்கும்.

சீதம் விளையும் சிறுசிரங்கு புண்ணுமாங்
காது பழமலமுங் கட்டறுங்காண் - கீதக்
குயிலனையாய் ! வெட்டைபோம் கூறவழுகில்லைத்
துயிலி யிலைக்கறிக்குச் சொல். (அ.கு.)

**வ - கு.**—இக்கீரையை வேகவைத்துக் கறியாக்கி யுண்ண மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## கொடிப்பசளைக் கீரை—Kodip-pasalaik-kírai.

**வே - பெ.—கொடியலை, கொடிவசலை. கொடிப்பயலை, கொடிப்பசறை. கொடிவயலைக்கீரை, கொடிலை.**

**Basella Alba and Rubra.**

**Eng.—White basil or Indian Spinach.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Abubachchali | అబుబచ్చలి. | Hind. | Myal-ki-bhāji | مائل کی بھاجی * |
| | Alla-batsalla | అల్లబత్సల్ల. | | Lāl-bachche | لال باچی * |
| Mal. | Basela-kíra | ബസലകീര. | Duk. | Sufed-bachlā-ki-bhāji | سفید بچلے کی بھاجی * |
| Kan. | Bili-basale-balli | ಬಿಳಿಬಸಳೆ ಬಳ್ಳಿ. | | Lāl-bachle-kí-bhājí | لال بچلے کی بھاجی * |
| Sans. | Potaki | पोदकी. | | | |

இது கீரையினம். இந்தியாவில் எங்கும் பயிரிடப்படுகிறது. இதில் **வெள்ளை, சிவப்பு** என இருவகையுண்டு. இதன் இலைகள் அகன்று, நீளத்தில் 2-முதல் 5 அங்குல மிருக்கும். இலைக்காம்பின் நீளம் ½-முதல் 1 அங்குல மிருக்கும், வேனிற்காலத்தில் புட்பிக்கும். இதைச் சாதாரணமாய் வேலியோரங்களிலும், தோட்டங்களிலும் வைத்துப் பயிராக்குகிறார்கள். சுற்றுக்கொடியாகப் படர்ந்தேறுந்தன்மையுடையது.

**ப - உ.**—இலை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**குணம்.**—இதனால், புணர்ச்சியிலிச்சையும் கபமும் உண்டாகும், தாகத்தையும் சூட்டையும் தணிக்கும் ; மலத்தை இளக்கும்.

போகம் மிகக்கொடுக்கும் போர்செய்கபத் தைப்பெருக்கும்
ஆகமதிற் றகமன லைத்தணிக்கும் - மாகுடரின்
மன்னு மலமிளக்கும் மாறா வுரிசைதருந்
தின்னுங் கொடிவசலை செப்பு. (அ.கு.)

**வ - கு.**—இதை, பருப்புக்கீரையைப்போல வழங்கலாம்.

இதன் இலையை வதக்கி வீக்கம், கட்டி இவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

இதன் இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்து ஒரு உச்சிக்கரண்டி வீதம் புகட்ட, குழந்தைகளுக்கு உண்டாகும் நீர்த்தோடம் நீங்கும்.

மிதமிஞ்சின வெப்பத்துக்கு, இதன் இலையைச் சிதைத்துத் தலையில் வைத்துக் கட்டலாம்.

சிவப்பு இனத்தின் வேர்க்கஷாயம் பித்தத்தைத் தணிக்கும்.

இதை நீரிலிட்டு அலச ஒருவித குழகுழப்புப் பசையுண்டாகும். இதைத் தீராத தலைவலிக்குப் பூச, வெகு சீக்கிரத்திற் குணமுண்டாகும். நித்திரையுமுண்டாகும்.

---

## பண்ணைக் கீரை—Paṉṉaik-kírai (Plant.)

Celosia Albida.
Celosia Cristata.

| | |
|---|---|
| Tel. Erra-kodi-utta-totta-kura ఎర్రకోడి, ఉత్త తోటకూర | Hind. Píla-murghka * پیل مرغا |

இது இந்தியாமுழுவதும் பயிரிடப்படும் செடியினம். தானாகவும் வளர்ந்து கிடக்கும். இதில் அநேக விதமுண்டு : அதாவது - **சிறுபண்ணை - நறும்பண்ணை - புற்பண்ணை - புனல்பண்ணை.** இவற்றில் **நறும்பண்ணை** தவிர, மற்றவை ஒரேயினத்தைச் சேர்ந்தது. குணத்திலும், செய்கையிலும் ஒன்றுபட்டேயிருக்கும்.

**ப - உ.**—இலை, பூ, விதை.

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**குணம்.**—இக்கீரையானது ஆமம், கரப்பான், கிரந்தி, விரணம், இவைகளை நீக்கும். மலத்தை இளக்கும். குடலுக்கு வலுவைக் கொடுக்கும்.

பண்ணையிளங் கீரையது பற்று மலமிளக்கும்
எண்ணுங் குடலுக் கிதங்கொடுக்கும் - பெண்ணேகேள் !
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றிவிடுங்
கோதங் கிலையதனைக் கொள்.

(அ.கு.)

**வ - கு.**—இதனிலைக் கொழுந்தைச் சமையல் செய்துசாப்பிட்டுவர, மேற்கூறிய நோய்கள் விலகும்; குடலுக்கு நல்ல வலுவைத்தரும்; குடலைச் சுத்தி செய்யும்.

இதன் பூவைக் கஷாயமிட்டுக் குடிக்க, அதிசாரபேதி, பெரும்பாடு இவைகள் குணமாகும்.

இதன் விதையைப் பொடித்து, அல்லது பாலிலிட்டு வேகவைத்துச் சாப்பிட, இருமல், சீதபேதி, மூத்திரக்கிரிச்சரம் ஆகிய இவைகள் போம்.

---

## பருப்புக் கீரை.

**வே - பெ. பசளை (என்று மலையாள தேசத்தில் வழங்கும்.) வயலை, வயலைக்கொடி.**

Portulacea Oleracea.

Eng.—Common Indian Parselane.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Pappu-kura<br>Pedda-pavili-kura | పప్పుకూర.<br>పెద్ద పవిలికూర. | Sans. | Loni | लोनि. |
| Mal. | Kori chira | കൊറിച്ചീര. | Arab. | Kourfa kara-ar | * خرفه کرار |
| Kan. | Duda gorai. | ದುಡಗೋರೆ. | Pers. | Cholza | * چولزه |
| | | | Hind. | Khursa | * قرفا |

இது கீரையினத்தைச் சேர்ந்தது. இந்தியாவில், வெப்பப்பிரதேசங்களிலும், இலங்கையில் பண்படுத்தின பூமிகளிலும், ஏராளமாய் வளர்ந்து கிடக்கும். இமாலயப்பருவதத்தின் அடிவாரத்திலும் பயிராகின்றது எனத் தெரியவருகிறது.

**ப - உ.**—இலை, விதை, சமூலம்.

**சுவை.**—இனிப்பு, புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுதுவர்ப்பி - லகுஸங்கோசனகாரி - Astringent (mild).
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—இதனால் பித்தாதிக்கம் போம். மேலும், மூத்திர வியாதிகள், இரத்தபித்தம், மேகம், சருமரோகங்கள், சீதபேதி இவைகளும் குணமாகும். புடையும், கரப்பானும், கிருமியும் உண்டாகும்.

* * * *

பிள்ளைப் பருப்பிலைக்குப் பித்தமறுங் - கொள்ளத்
தெரியுங் கடல்சூழ் இத்தேசத்தோ ருக்குக்
கரிய குழலணங்கே ! காண்.

(அ.கு.)

### இலை.

**வ - கு.**—இலையை நன்றாய்ச் சிதைத்து, அக்கினியின்மீது பற்றிட அவைகள் குணமாகும்.

இலைச் சாற்றை ¼-முதல் ½ அழாக்கு வரையில், தினம் இருவேளை உள்ளுக்குக் கொடுத்துவர, நீர்ச்சுருக்கு, மூத்திரவெப்பநோய், சீதபேதி, இரத்தபேதி, முதலிய நோய்களைக் கண்டிக்கும்

இலையை அரைத்து நெற்றியின்மீது பற்றிட, வெப்பத்தாலுண்டான தலைநோய் சுகப்படுா

கல்லீரல் வியதிகளுக்கு இதன் கீரையை வேகவைத்துச் சாப்பிடலாம்.

இதைப் பருப்புடன் சேர்த்துச் சமையல் செய்து சாப்பிட, இலகுவிரேசனியாகப் பயன்படுவதுமன்றி, தேகத்திலுள்ள வெப்பத்தையும் போக்கி, பித்தத்தைச் சமனப்படுத்தும்.

### இலை, விதை.

இலையையும் விதையையும் அரைத்து, தீச்சுட்ட புண், வெந்நீர் வேக்காட்டுப்புண், சரும ரோகங்கள் முதலியவைகளுக்குப் பூசிவர ஆறிப் போகும்.

### விதை.

விதையை ½-முதல் 1 வராகனெடை வீதம் எடுத்து அரைத்து இளநீரில் கலக்கி உள்ளுக்குக் கொடுக்க, சீதபேதியிலுண்டாகும், உளைச்சல், முக்கல் முதலியவைகள் நீங்கும். மேலும் மூத்திர எரிச்சலைக் கண்டித்து, வெள்ளையையும் தணிக்கும்.

### தண்டு.

இக்கீரையின் தண்டை அரைத்து, வேர்க்குரு, கைகால் எரிச்சல் முதலிய ரோகங்களுக்குப் போடலாம்.

---

## பறட்டைக் கீரை—Parattaik-kírai.

**வே - பெ.—பரட்டைக்கீரை.**

**Justicia Madurensis.**

இது கீரையினத்தைச் சேர்ந்தது, தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கும்.

**சுவை.**—சிறுகைப்பு, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** மலமிளக்கி - லகுவிரேசநி - **Laxative.**

**குணம்.**—இதனால் சிலேத்தும நோயும், வாதப்பிணியும் கரப்பானும் போம். பித்தம் உண்டாகும்.

பறட்டைநறுங் கீரையது பத்தியத்திற் காகும்
வெருட்டுகின்ற பித்தம் மிகமீறும்—புரட்டுங்
கபமுடனே வாதங் கரப்பானும் ஏகுஞ்
சுபவசன மாதேநீ ! சொல். (அ.கு.)

**வ - கு.**—இதைச் சமையல் செய்து சாப்பிட்டுவர மேற்கண்ட நோய்கள் விலகும்.

## பாற்சொரிக் கீரை —Parchorikkirai.

வே - பெ.—பொற்றிக்கீரை, பாற்சொற்றிக்கீரை, பால்சொற்றிக்கீரை, பாச்சோத்திக்கீரை.

**Ruellia Secunda.**

இது கீரைவகுப்பைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**குணம்.**—இதனால், வயிற்றுக்கடுப்பு, மலபேதி, சீதபேதி, இரத்த பேதி இவைகள் நீங்கும். மேலும் வாதஉதரம், திரிதோடம், தாகம் குட்டம், கிரிச்சரம், தினவு, மலபந்தம், இரத்தபித்தம், சூலை, நயன ரோகம், மூலம், விடம், இவைகளும் போம்.

வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதம் பேதி
நியத்தரத்தப் போக்கிவைநி றுத்துங் - குயத்தையொரு
பாற்சரியக் காட்டும் பருவ வணங்கரசே !
பாற்சொரிக் கீரையது பார்.

(அ,கு.)

**வ - கு.**—இலையைச் சமைத்துச் சாப்பிட்டுவர, மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

கஷாயமிட்டு, பேதி, அதிசாரபேதி, இரத்தபேதி இவைகளுக்கும், மகோதரம், இரத்தபித்தம் முதலியவைகளுக்கும் கொடுக்கக் குணமுண்டு.

கீரையைச் சமையல் செய்து சாப்பிடுவது இந்நாட்டினர் வழக்கம்.

---

## பிண்ணாக்குக் கீரை.

**Melochia Corchorifolia.**

இந்தியா இலங்கை முதலிய இடங்களில் இது மிகவும் சாதாரணமாகக் கிடைக்கும்.

**ப - உ.**—கீரை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**குணம்.**—இதனால் மலமும், மூத்திரமும் தாராளமாய் இறங்கும். பிரமேக வெள்ளையும், அரித்திரா மேகமும் போகும். வாததோடமும், கரப்பானும் உண்டாகும்.

மலமிறங்கும் வாதமுடன் வன்கரப்பன் உண்டாம்
சலமிறக்கு மேகந் தணியும்—மலர்விழியாய் !
உண்ணுக்குக் கின்பமாம் ஒடுமனல் வெட்டையெலாம்.
புண்ணாக்குக் கீரையுண்ட போக்கு.

(அ,கு.)

**வ - கு.**—இதனை வேகவைத்து உட்கொள்ள, மேற்கூறிய நோய்கள் போம்.

## புதினா—Puthina.

**வே - பெ.—ஈயெச்சக்கீரை, பொதினா, புதியன்மூலி.**

Mentha Sativa.

Mentha Arvensis.

Eng.—The Marsh mint.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pudina పుదీనా. <br> Iga-engili-kura ఈగెంగిలికూర. | Sans. | Pudina पुदीन. |
| Mal. | Putiyina പുതിയിന. | Arab. | Naanaaul-hind نعناع لهند* |
| Kan. | Chetni-maragu ಚೆಟ್ನಿ ಮಾರಗು. | Pers. | Pùdinah پودينه* |
| | | Hind. | Pùdinah پودینہ* |

இது, இமாலய பருவதத்தைச் சேர்ந்த மேற்குச் சாரல் பிரதேசங்களிலும், தென்னிந்தியா, வங்காளம் முதலிய இடங்களிலும் பயிரிடப்படுகிற சிறுபூண்டு. இதில் பல இனங்களுண்டு. அவைகள் **Spear mint, Pepper mint, Mentha Viridis** முதலியன. இந்தியாவில் பல இடங்களிலும் பயிரிட்டு வளர்க்கப்படுகிறது. இவைகளின் குணங்கள் பெரும்பாலும் ஒன்றுபட்டே இருக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கார்ப்பும், துவர்ப்பும், **வீரியம்** - சீதவெப்பம், **பிரிவு** - கார்ப்பு

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Refrigerant.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - **Antispasmodic.**

**குணம்.**—இதனால் அருசி, சர்த்தி, மந்தாக்கினி, இரத்ததாதுவினழுக்கு, **மல**ப்போக்கு இவை நீங்கும்; உணவு செல்லும்.

அருசி யொடுவாந்தி யக்கினி மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட—லிரியுந்
துதியதன்று சோறிரங்குந் தொல்லுலகில் நாளும்
புதிய னல்மூலிபு கல். (அ.கு.)

**வ - கு.**—இதன் சமூலத்தை உலர்த்திக் கஷாயமிட்டு, $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் சுரநோய்க்குக் கொடுக்கலாம். மேலும், காமாலை, விக்கல் முதலிய நோய்களும் சாந்தப்படும். வயிற்றுவலி முதலிய நோய்களையும் போக்கும்.

இதன் சமூலத்தையும், கர்ப்பூரப்புல்லையும் சமனெடை எடுத்து முறைப்படிக் கஷாயமிட்டுக் கொடுக்கத் தலைவலி, வாந்தி, அரோசகம் முதலியவைகள் நீங்கும், சுரமும் தணியும். மூத்திரத்தை விருத்திபண்ணும்; நல்ல நித்திரையை யுண்டுபண்ணும்.

மாதாந்தர ருதுகாலத்தில் மேற்படி கஷாயத்தைக் கொடுக்க, சூதகக் கட்டைப் போக்கி, அதனாலேற்பட்ட வயிற்று வலியையும் போக்கும்.

இப்பூண்டின் சமூலத்தை நன்றாய் உலர்த்திப் பொடித்து வஸ்திரகாயம் செய்து, பல்துலக்கி வரலாம்.

இதன் இலையைத் துவையல் செய்து உணவோடு அருந்திவர, அருசி, சர்த்தி, மந்தாக்கினி முதலியவைகளைப் போக்கி, மலத்தைக் கழிக்கும்.பசியை யுண்டுபண்ணும்.

இப்பூண்டிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கிறார்கள். அது மேனாட்டார் வழங்கும் Pepper mint தைலத்தை யொத்தது. ஆனால் காரம் சிறிது குறைந்திருக்கும்.

இதைத் தலைவலிக்குத் தடவலாம்.

உள்ளுக்குச் சிறிது நீரில் கலந்து கொடுக்க, வயிற்றுவலி நீங்கி, பசியை யுண்டுபண்ணும்.

---

## புளிச்சிறு கீரை—Pulich-chirukirai.

**வே - பெ.—காய்ச்சிரங்கு, காய்ச்சொறி, காய்ச்சுரை, புளிச்சக்கீரை, சணம்பு, புளிச்சிறுகீரை, காசினிக்கீரை, காச்சக்கீரை, காச்சிரக்கு, காச்சுரை.**

Hibiscus Cannabinus.

Eng.—Brown Indian hemp.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Ghongu-kura | గోంగూర. | Sans. | Machika Phalamla | माचिकाफलाम्ल. |
| Mal. | Pulich-cheera | പുളിച്ചീര. | Hind. | Patsan | * پٹسان |
| Kan. | Pinidrike gida | ಪಿನಿಡ್ರಿಕೆ ಗಿಡ. | Duk. | Ambadi | * امباڑی |

இது வடஇந்தியாவில் கங்கை, பிரமபுத்திரா நதிகளின் பள்ளத்தாக்குகளிலும், சென்னை இராஜதானி, ஆஸ்ஸாம் முதலிய விடங்களிலும் பயிர் செய்யப்படுகின்றது. இதில் **காட்டுக்காய்ச்சுரை** என்று ஒருவித முண்டு. அது உணவிற்கு ஏற்றதல்ல.

**ப - உ.**—இலை, பூ, விதை, நார்.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - புளிப்பு.

**செய்கை.**
**இலை.**
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
**விதை.**
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—இதனால் சிணுக்கிருமலும், மந்தமும் நீங்கும், காயசித்தியும், புணர்ச்சியில் விருப்பமும், வீரியவிருத்தியும் உண்டாகும்.

மேலும் வாதநோய், அருசி, சீதளம், இரத்தபித்த ரோகம். கரப்பான், வீக்கம், அஸ்திதாதுகதசுரம் இவைகளும் நீங்கும்.

தேகசித்தி யாகுஞ் சிறுகாசம் மந்தமறும்
போகமுறும் விந்துவுநற் புஷ்டியுண்டாம் - வாகாம்
வெளிச்சிறுமான் நோக்கும்விழி மென்கொடியே ! நாளும்
புளிச்சிறு கீரையுண்ணும் போது.

(அ.கு.)

**வ - கு.**—இதன் இலையைஇடித்து, விப்புருதிக் கட்டிக்கு வைத்துக்கட்டச் சுகந்தரும்.

இதைச் சமையல் செய்து சாப்பிடுவது வழக்கம்.

தெலுங்கு நாடுகளில் இதைப் பலவழியில் பக்குவஞ்செய்து உணவாகக் கொள்ளப்படுகிறது.

இதன் பூவைப் பிழிந்து சாறு எடுத்து அத்துடன் சிறிது மிளகும், சருக்கரையும் சேர்த்து அரோசகம், பித்தவாந்தி இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

இதன் விதையை வேறு மருந்துகளோடு சேர்த்து உட்கொண்டுவர, நேக புஷ்டி உண்டாகும்.

இதன் தண்டிலிருந்து எடுக்கும் நார் கோணிப்பைகள் செய்வதற்கும், சஸ்திர சிகிச்சைகளில் டோ (Tow) என்னும் நாருக்குப் பதிலாக உபயோகப் படுத்துவதற்கும் பயன்படும்.

---

## புளியாரை—Puli-yarai.

**வே - பெ.—புளிக்கீரை, புளியாக்கீரை.**

Oxalis Corniculata.

**Eng.—The Indian Sorrel.**

**Tel.** Puli-chintaku పులి చింతాకు.

**Mal.** Puli-yarala പുളിയാരല.

**Kan.** Pullam-purachi-sappu ಪುಳ್ಳಂ ಪುರಚೀ ಸಪ್ಪು.

**Sans.** Changeri चाङ्गेरि.

**Hind.** Amboti-ki-patti انبوتی کی پتی *

**Duk.** Amboti-ki-bhaji انبوتی کی بھاجی *

இது, இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாய் வளர்ந்திருக்கும் படர் கொடியினம்.

**ப - உ.**—இலை.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனால், பித்தமயக்கம், வாதகபவிகற்பம், மூலவாயு, கிரகணி, இரத்தமூலம், இவைபோம்.

பித்த மயக்கமறும் பேருலகின் மானிடர்க்குக<br>நித்தமருள் வாதகபம் நேருமோ - மெத்தனவே<br>மூலக் கிராணியறும் மூல வுதிரமறுங்<br>கோலப் புளியாரைக் கு. (அ.கு.)

**வ - கு.**—இலையைப் பிழிந்து, சாறெடுத்துக் கொடுக்க, ஊமத்தை விடத்தாலுண்டான கொடுமை நீங்கும்.

இலையை முறைப்படிக் கஷாயமிட்டு, சுரத்தாலுண்டாகும் அதி வெப்பத்தைத் தணிக்க, உள்ளுக்குக் கொடுத்து வரலாம்.

இலையைச் சிதைத்து, அதிக வேதனையுள்ள கட்டி, வீக்கங்களுக்கு வைத்துக்கட்ட, குளிர்ச்சியை யுண்டுபண்ணி வேதனையைக் குறைக்கும்.

இலையை வெந்நீர் விட்டரைத்து, பருக்கள், கொப்புளங்கள் இவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

இலைக்கஷாயத்தைக் கண்ணில் விட்டுக் கழுவிவரக் கண்ணோய் முதலிய கண் வியாதிகள் நீங்கும்.

இலைச்சாறு ⅛ முதல் ¼ ஆழாக்குவரை, சீதபேதி, மூலந்தள்ளல் முதலியவைகளுக்குக் கொடுக்கச் சுகமுண்டாகும், அல்லது

இலையை பசுமோரில் வேகவைத்து, தினம் மூன்று வேளை, கொடுத்து வரலாம்.

இலைச்சாறு எடுத்து சிறிது மிளகுப் பொடி சேர்த்து, தகுந்த அளவு வெண்ணெயுடன் கலந்து, சருமப் புடைகளுக்குத்தடவிவரச் சுகமுண்டாகும்.

இதுவே, சருமத்திலுண்டாகும், தாமரைமுள், பாலுண்ணி, மரு முதலியவைகளுக்கும் தகுந்த மருந்தாகும்.

இதன் சமூலத்தை நீர்விட்டரைத்து, வெங்காயச் சாறு சமனெடை சேர்த்துக் காய்ச்சி, பித்தத்தினாலுண்டாகும் தீராத் தலைவலிகளுக்குத் தலையில் போடலாம்.

புது இலைகளைக் கீரையாகச் சமையல் அல்லது துவையல் செய்து சாப்பிட்டுவர, அரோசகத்தை நீக்கி, குன்மத்தைக் கண்டிக்கும்.

---

## மணலிக் கீரை—Manalik-kírai.

**வே - பெ.—மணல்கீரை, நாமவல்லிக்கீரை.**

Gisekia Pharnaceoides.

**Tel.** **Isuka-dasari-kura** ఇసుక దాసరికూర.

**Mal.** **Manalik-kíra** മണലിക്കീര.

Sans. **Valuka** वालुका.

**Hind.** **Balu-ka-sag** * بالو کا ساگ

**Duk.** **Balu-ki-bhaji** * بالو کی بھاجی

இக்கீரைப் பூண்டானது, பஞ்சாப், சிந்து, தென்னிந்தியா முதலிய இடங்களில் ஏராளமாயுண்டு.

**ப - உ.**—இலை.

**சுவை.**—துவர்ப்பு, புளிப்பு, சிறுகைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- மலமிளக்கி - வ்ரேசநி - Aperient.

**குணம்.**—இதனால் வாதகோபம், மார்புச்சளி, சிலேஷ்மரோகம், கிருமிரோகம், பயித்தியதோஷம் ஆகிய இவைகள் நீங்கும்.

வாதமறும் நெஞ்சேறி வந்த கபம்விலகுஞ்
சீதமுட னோய்பலவுந் தீருங்காண் - போதவுள்ளே
வீறு கிருமியொடு மேவாப் பயித்தியம்போங்
கூறுமண லிக்கீரைக் கு. (அ. கு.)

**வ-கு.**—இதன் சமூலத்தை நீர்விட்டு அரைத்து, 2 பலம் அளவாகஎடுத்து, நீரிற் கலக்கி அதி காலையில், வெறும் வயிற்றில், மூன்று நாள்வரை கொடுத்து இடையில் நான்குநாள்விட்டு மறுபடியும், மேற்படியாக இருமுறை (மொத்தத்தில் மும்முறை) கொடுக்க, குடலிற்றங்கியிருக்கும் தட்டைப் புழுக்களை போக்குவதில் சிறந்த மருந்தாகும்.

இக்கீரையைக் கஷாயமிட்டுக் கொடுக்க, மேற்கூறிய குணங்களைத்தந்து, நோய்களையும் போக்கும்.

இதைச் சமையல் செய்து சாப்பிடலாம்.

---

## முக்குளிக்கீரை—Mukkuḷik-Kírai.

**வே - பெ.—கோழிமுளையான்.**

Portulaca pilosa.

இது ஒரு வகைக் கீரைச் செடி.

**ப - உ.**—இலை.

**சுவை.**—துவர்ப்பு, புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
பித்தமகற்றி - பித்தஹரகாரி - Anti-bilious.

**குணம்.**—இக்கீரையானது கபதோஷம், புணர்ச்சியிலிச்சை, அதிசாரம், ஆமம் ஆகிய இவைகளை யுண்டாக்கும். வெப்பத்தை நீக்கும்.

ஐயம் மிகக்கொடுக்கும் ஆர்ந்தபோ கந்தருங்காண்
மெய்அனலை யெல்லாம் விலக்குமே - தையலே !
பேதி யளிக்கும் பெருமுக் குளிக்கீரை
சீதம் விளைக்குமெனச் செப்பு. (அ. கு.)

**வ - கு.**—இந்தக் கீரையைச் சமையல் செய்துண்பவருக்கு மேற்கூறிய குணங்கள் உண்டாகும்.

---

## முள்ளிக் கீரை—'Muḷḷik-Kírai.'

**வே - பெ.—குப்பைக்கீரை முள்ளுக்கீரை.**

Amaranthus Spinosus.

Eng.—Thorny Greens.

| | |
|---|---|
| Tel. Mundla-tôta-kūra ముండ్ల తోటకూర. | Kan. Kántá-náṭi ಕಂಟನಾಟಿ. |
| | ಕಿ ಕ್ಷುರಕಂ |
| Mal. Muḷḷan-chíra മുള്ളഞ്ചീര. | Duk. Kánṭe-máṭ * کانٹے ماٹ |

இது இந்தியாவில் எல்லா இடங்களிலும் பயிராகின்றது. தோட்டங்களிலும், பண்படுத்தப்படாத பூமிகளிலும் சாதாரணமாய் வளரும். இப்பூண்டு பச்சை, சிவப்பு முதலிய நிறங்களில் கிடைக்கும்.

**ப - உ.**—இலை, வேர், சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
புண்ணுக்கி - விரணகாரி - Caustic.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—நீரைப்பெருக்கும், வெப்பத்தையுண்டாக்கும், தங்கத்தைப் பற்பமாக்கும்.

நீரைப் பெருக்கிவிடு நீடனலைத் தானெழுப்பும்
பாரநறுந் தங்கத்தைப் பற்பிக்கு - நேரே
விடவிருக்கும் பொற்றட்டை மேவுமல்குன் மாதே !
அடவிநிற்கு முள்ளிக்கீ ரை. (அ.கு.)

### இலை.

**வ - கு.**—இதனிலையை அரைத்து, வீக்கம், கட்டி இவைகளுக்கு வைத்துக் கட்டினால், அவைகள் கரைந்துபோம்.

இலை, தங்கத்தைப் பற்பமாக்கும்.

இதன் இலைரசத்தையும், வாழைத்தண்டின் சாற்றையும், சமபாகம் சேர்த்துப் பாம்புகடி விடந்தீர, உள்ளுக்குக் கொடுத்துவரலாம்.

### வேர்.

வேரைச் சுட்டுச் சாம்பலாக்கிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட, கட்டி உடையும்.

வேர் ஒரு பலம், ஓமம் 2 வராகனெடை, ஒரு சிறிய பூண்டு, இம்மூன்றையும் சேர்த்தரைத்துக் கொடுக்க, குணமாகாத வயிற்று வலி குணமாவதுண்டு.

வேர் 2 பலம் எடுத்து, முறைப்படி கஷாயஞ் செய்து $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுத்துவர, வெள்ளை, நீரடைப்பு இவை தீரும்.

இதனிலையையும் வேரையும் கஷாயம் செய்து கொடுக்க நீரை உடைக்கும்.

### சமூலம்.

இதன் சமூலத்தை இடித்துப் பிழிந்து சாறெடுத்து $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுக்க, தேள்கொட்டல், பாம்பு விடம் முதலியன தீரும்.

இதன் சமூலத்தை, கொள்ளு, கடலை, முதலிய தானியவகைகளுடன் சேர்த்து வேகவைத்துப் பசுவிற்கு ஊட்ட, பால் அதிகம் சுரக்கும்.

---

## வங்காரவள்ளைக் கீரை—Vankara vaḻḻaikírai.

**வே - பெ.—வங்காரவச்சி.**

Sesuvium Adscendens.

இது கீரை வகுப்பைச் சேர்ந்தது. மழைக் காலத்தில் பயிராகும்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- அகட்டுவாய்வகற்றி , உதரவாதஹரகாரி - Carminative.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**குணம்.**—வாதநோய், வயிற்றுப்பிசம் இவை நீங்கும். கறுத்துச் சிக்கிய மலமும், மூத்திரமும், சரியாயிறங்கும். குடல் சுத்தப்படும்.

மாரிக்கா லத்தாய வங்கார வள்ளையினுற்
பூரித்த வாதம் பொருமலொடு - காரித்
திறங்காம லசலமி றங்குமின் புண்டாம்
உறங்காவி ழியணங்கே ! யுன். (அ.கு.)

**வ - கு.**—இக்கீரையைக் கஷாயமிட்டு அல்லது சமைத்துச் சாப்பிட, மேற்கூறியுள்ள நோய்கள் போம்.

இக்கீரையை, ஏழை மக்கள் சமைத்துண்பது வழக்கம். இது சாதாரணமாய் எங்கும் கிடைக்கக் கூடியதாகையாலும், மழைக்காலத்தில் விருத்தியாகிச் செழித்து வளருந் தன்மையுடையதாலும், வேலையின்றி வருந்தும் ஏழை மக்கட்குப் பஞ்சகாலத்தில், இது இன்றியமையாத உணவாகிறது. ஆகையாலே :

"தாயுந் தகப்பனுந் தள்ளிவிட்ட காலத்திலே
வாவென் றழைத்த வங்கார வச்சி."

**The sesuvium which calls (or invites) children cast off by parents in the time of famine.**

என்று ஒரு பழமொழி வழங்கிவருகிறது.

---

## கீரைத்தண்டு—Kíraith-thandu.

**Amaranthus Gangeticus.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Tota kura** | తోటకూర. | **Kan.** | **Harvai** | ಹರಿವೆ. |
| **Mal.** | **Thandankira** | തണ്ടങ്കീര. | **San.** | **Haruthaka** | हरुतक. |

இது இந்தியாவில் பல இடங்களிலும் பயிரிடப்பட்டு வருகிறது. இதன் இலைகளுக்காகவும், தண்டுகளுக்காகவும், நாட்டிலெங்கும் தோட்டங்களிலும் வீடுகளின் பின்புறங்களிலும் பயிரிடப்படும். இதில் **வெண்கீரை, செங்கீரை** என்கிற பிரிவுகளுமுண்டு.

**ப - உ.**—தண்டு, கீரை, சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
மலமிளக்கி - லகுவ் ரேசநி - Laxative.

**குணம்.**—இதனால், பித்தக்கிரிச்சரம், பிரமேகச்சூடு, வயிற்றுக் கடுப்பு, இரத்தபேதி முதலியவைபோம்.

தண்டுமெத்த வாய்வு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கில் சின்னேய்போம் விள்ளவோ - கொண்டக்கால்
நீர்க்கடுப்பு வெட்டையனல் நில்லாது நேரிழையே !
போர்க்கடுப்பி ரத்தமும்போம் போம். (அ.கு.)

**வ - கு.**—இதன் தண்டு, கீரை முதலியவற்றைச் சமைத்துச் சாப்பிட மேற்கூறிய நோய்கள் போம்.

---

## வெண்கீரைத் தண்டு.

**குணம்.**—வெப்பம், வெளிமூலரோகம், பித்தளிச்சல் இவைகளை நீக்கும்.

வெண்கீரைத் தண்டுவி யாதியற்ற நற்கறியாங்
கண்காணு தோடிவிடுங் காந்தலெல்லாங் - கண்காணும்
மூலம்அதற் கேற்கும் முசியா எரிவகற்றுந்
தாலமதில் அக்குணத்தைச் சாற்று. (அ.கு.)

இதைக் கஷாயமிட்டு அல்லது சமையல் செய்து சாப்பிட்டுவர, மேற்கூறிய நோய்கள் போம்.

### செங்கீரைத் தண்டு.

**குணம்.**—இது தீராத பித்த நோயையும், பெண்களுக்குண்டாகும் பெரும்பாட்டையும், பிரலாப சந்நிபாத சுரத்தையும் போக்கும்.

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தங்காமல் ஓட்டிவிடுந் தையலர்க்குப் - பொங்கும்
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கறியாந்
தரும்பாட்டு வெப்பகற்றுந் தான். (அ.கு.)

---

## கீழ்க்காய்நெல்லி—Kíshkai-nelli.

**வே - பெ.—கீழ்வாய் நெல்லி, கீழாநெல்லி,**
**Phyllanthus Niruri.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Néla usirika నేలవుసిరిక. | Sans. | Bhumyamalaki भूम्यामलकी. |
| Mal. | Kízhánelli കീഴാനെല്ലി.<br>Kízhkkáyi-nelli കീഴ്കായിനെല്ലി. | Hind. | Bhuín-anvalah * بھوئیں آونلہ |
| Kan. | Kiranelli-gidá ಕಿರನೆಲ್ಲಿ ಗಿಡಾ.<br>Nelanelligidá ನೆಲನೆಲ್ಲಿ ಗಿಡಾ. | Duk. | Bhūiń-ánvalah * بوئیں انلہ |

இது இந்தியாவில் வெப்பப் பிரதேசங்களில், சதுப்பான எல்லா இடங்களிலும் வளரும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, புளிப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - மதுரம்.

**செய்கை.**
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.

**குணம்.**—இம்மூலிகைக்கு, ஆமக்கட்டு, அக்கினிகேடவிடம், நேத்திர ரோகம், பூதமுதலிய சங்கை தோஷம், இரத்தாதிசாரம், மதுப்பிரமேக மூத்திரம், காமாலை, சப்ததாதுகதசுரம், தாதுவெப்பம், நாட்பட்டமேகப் புண் ஆகிய இவைகள் போகும்.

மேலும், அசுத்தரத்தம், விழிநோய், நாவறட்சி, தாபம் இவைகளையும் நீக்கும். வாதத்தை விருத்தி செய்யும்.

சீதம்அதி பித்தவிடஞ் செவ்விழியின் ஞேய்க்கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும் - பூதலத்துள்
தாழ்வாய்ப் பணிந்தேகுந் தப்பாது பொய்யலவே
கீழ்வா யெனுநெல்லிக் கே.

கீழாநெல் லிக்குணந்தான் கேளாய் மதுமேகந்
தாழாக்கா மாலைகளைச் சண்ணுந்தா - தேழனலுந்
தொக்கினன லுந்தொலைக்குந் தொன்மேகம் போக்கிவிடுந்
தக்கவிர ணங்கெடுக்குந் தான். (அ.கு.)

### இலை.

**வ - கு.**—இப்பூண்டின் இளங்கொழுந்தைக் கஷாயமிட்டு, சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

இலையை உப்புச் சேர்த்தரைத்து சொறி சிரங்குகளுக்குப் பூச, குணமாகும்.

உப்பில்லாமல் அரைத்துச் சதைச் சிதைவுக்குப் பற்றிடலாம்.

### இலை-வேர்.

இப்பூண்டின் இலையும் வேரும் நீங்கலாக, மற்றத் தண்டுகளை எடுத்துச் சாறு பிழிந்து, விளக்கெண்ணெயில் கலந்து, கண்காச நோயுடையோர்க்குக் கண்ணில் விடலாம்.

இலையையும் வேரையும் உலர்த்திப் பொடித்துக் கழுநீரில் குழைத்து, புண்புரைகளுக்கும், வீக்கங்களுக்கும் பூசலாம்.

இவ்விரண்டையும் கஷாயமிட்டு சுரங்களுக்குச் சூட்டோடே கொடுக்க, சுரந் தணியும்.

இக்கஷாயத்தையே ஆறினபிறகு குடித்துவர, தேக பலமுண்டாகும். தீபன சக்தியையும் தரும்.

### வேர்.

வேரைக் கழுநீரில் அரைத்துக் கலக்கிப் பெரும்பாட்டிற்குக் கொடுக்கச் சுகமாகும்.

வேரைப்பச்சையாய் ½ பலம் எடுத்து, அரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்க, காமாலை நோய் நீங்கும். அல்லது சமூலத்தை அரைத்துப் பாலில் தினமிருவேளைக் கொடுக்கலாம். மேற்படி சமூலத்தை அரைத்தெடுத்து, மோரில் கலக்கிக் கொடுக்க, மேகவியாதிகள் போம். இதையே, மூத்திர வியாதிகள் யாவற்றிற்கும் கொடுக்கலாம்.

**கீழாநெல்லித் தைலம்.**—கீழாநெல்லியை நிழலிலுலர்த்தி இடித்து எடுத்த தூள் பலம் 20, நீர் 4-படி, இதைக்காய்ச்சி ½-படிக்குக் குறுக்கி, அதில் ஆவின் பால் படி ½, நல்லெண்ணெய் படி ½, சேர்த்து, அதோடு, ஒரு பலம் சீரகத்தைப் பசுவின் பால் விட்டு அரைத்துச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து வைத்துக் கொண்டு, வாரம் இருமுறை தலை மூழ்கி வர, உட்சுரம், அழலை, அக்கினிமந்தம், கைகால், கண்ணெரிச்சல், நடுக்கல், தலைச்சுற்றல், அதிபோகத்தாலுண்டான அரித்திராமேகம், வாந்தி முதலியன போம்.

---

## செங்கீழாநெல்லி Chengízha-Nelli.

**வே - பெ.—சிவப்புகீழாநெல்லி, சிறுகீழாநெல்லி, சிவப்புநெல்லி.**

**Phyllanthus Urinaria.**

| | | |
|---|---|---|
| Tel. | Erra-usirika | ఎఱ్ఱవుసిరిక. |
| Mal. | Chiru-kízhuka - nelli | ചിറുകീഴുകാനെല്ലി. |
| | Chukanna-Kizha-nelli | ചുകന്ന കീഴാനെല്ലി. |
| Kan. | Kempu-kiranelli | ಕೆಂಪು ಕಿರನೆಲ್ಲಿ. |
| Hind. | Lál-bhuin-ánvalah | لال بهوئیں آونله * |
| Duk. | Lál-bhuin-ánvaloh | لال بهوئیں آونله * |

இது கீழ்க்காய்நெல்லி யினத்தைச் சேர்ந்தது. சிவப்பு நிறமுடையது. ஆனால் நிமிர்ந்து, சிறு சிறு பக்கக் கிளைகளைப் பெற்றிருக்கும்.

இதன் சுவை, குணம், வழக்கு இவைகள் கீழ்க்காய்நெல்லிக் குடையதே.

இதன் சமூலத்தைக் கஷாயமிட்டுக் குன்ம வியாதிகளுக்குக் கொடுக்கலாம்.

## குங்கிலியம்—Kungiliyam.

**வே - பெ.—குங்குலியம், குங்கிலிகம், சருவரசம், குக்குலு, குக்கில், குக்கிலியம்.**

Shorea Robusta (Resin of.)

Eng.—Saul tree.

| | | |
|---|---|---|
| Tel. | Guggilamu | గుగ్గిలము. |
| Mal. | Kungiliyam | കുങ്ങിലിയം. |
| Kan. | Guggaḷà | ಗುಗ್ಗುಳ. |
| Sans. | Guggilam | गुग्गिलम्. |
| Arab. | Qanquahar | * كان كوهار |
| Pers. | Raal-moaabbari | * رال موابرى |
| Hind. | Dhùnà | * دهونا |
| | Dámar | * ڈامر |

இது தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சிமலைப் பிரதேசம், கோதாவரி, சிந்து தேசம், இமயமலையின் அடிவாரம் முதலிய விடங்களிலுள்ள காடுகளில் வளரும், ஒரு வகை மரத்தின் பிசின். இந்த மரத்துக்குக் " கருமருது " என்று பெயர். இவ்வகையில் அநேக சாதிகள் உண்டெனினும், முக்கியமாய் **வெள்ளை, சிகப்பு** ஆகிய இவ்விரண்டுமே பிரசித்திபெற்றது. இவைகளில் வெள்ளைக் குங்கிலியம், பார்வைக்கு வருணமின்றியும், துல்லிய வெண்மையாயுமிருக்கும். மற்றொன்று மங்கல் வெளுப்பு, மஞ்சள் அல்லது பசுமை நிறம் பொருந்தியிருக்கும். இவ்விரண்டிலும் **நாட்டுக்குங்கிலியம், சீமைக்குங்கிலியம்** என இரு தொகுப்புண்டு. இவற்றுள், சீமைக் குங்கிலியம் சிறப்பாகக் கொள்ளப்படுகின்றது. ஆனால், நாட்டுக்குங்கிலியத்தில் நல்ல சரக்காயுள்ளது, சீமைச் சரக்கைத் தோற்கடிக்கும் என்பதில் ஐயமில்லை. இப்பிசின் கற்பூரத்தைலத்திலும், சில விதை எண்ணெய்களிலும் கரையும்.

மேற்படி மரத்தின் பட்டையில் சிறிதாகக் கீறி வடுவுண்டாக்கி அதினின்றும் வடியும்பால் உறைந்து பிசின் ஆகும்.

பூனைக்கண் குங்கிலியம் (ரூமி மஸ்தகி) என ஒரு சாதியுமுண்டு.

**ப - உ.**—பிசின்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

### பொது.

**குணம்.**—அசிர்க்கரம், தந்தி மேகம், கிளைக்கிற விரணம், சீழ் விரணம், எலும்பைப்பற்றிய விரணம் இவைகள் போம்.

பெரும்பாடு மேகம்போம் பேரா துடலில்
அரும்பியபுண் ணாறுமிவை யல்லால்—துரும்பாம்
எலும்புருக்கி புண்சீழும் ஏகும் உலகில்
சலம்பருகுங் குங்கிலியத் தால். (அ.கு.)

### வெள்ளைக் குங்கிலியம் (சருவரசம்).

வெள்ளைக் குங்கிலியத்தால், வெட்டையால் பிறந்த நாளப்புண், கொப்பூழ் விரணம், சீழ்மேகம், உள்மூல விரணம் ஆகிய இவை நீங்கும்.

வெள்ளை யளித்த விரணநா பிக்கமலத்
தொள்ளைவிர ணம்மேகந் தோற்றுகினும்—உள்ளே
வருவரச மேற்புண் வரினுஞ்சு வேதச்
சருவரச மேற்பழியைச் சாற்று. (தே.கு.)

## கருமை, செம்மைக் குங்கிலியம்.

கருமை செம்மை என்னும் இருவிதக் குங்கிலியத்தால், காது, உதடு, நாசி முதலிய விடங்களிலுண்டாகும் நோய்கள், மேகப்புண், கட்டி, வாத வித்திருதி, சூலை, கிராணி, காணுவிடம், கீல்பிடிப்பு, நகங்களைப்பற்றிய விரணம் இவைபோம்.

காததர நாசிநோய் கட்டிகடி மேகப்புண்
வாதவித்தி ரஞ்சூலை வன்குநகம்—ஓதிவையித்
திக்கி லிருக்கத் திடமுமுள வோவுபயக்
குக்கிலி ருக்கநமக் குள். (தே.கு.)

அளவு—20–30 குன்றி.

**வ - கு.**—குங்கிலியத்தைப் பொடித்து, ¼ வராகனெடை வீதம் ஆழாக்குப் பாலில் கலக்கித் தினந்தினம் காலையில் சாப்பிட்டுவரத் தாதுபுஷ்டியுண்டாகும்.

குழந்தைகளுக்குண்டாகும் சீதபேதிக்கு ¼ வராகனெடை குங்கிலியப் பொடியுடன் சமபாகம் சருக்கரை சேர்த்துக் கொடுத்து வரலாம்.

குங்கிலியத்துள் 4 வராகனெடை, மாம் பருப்புத்தூள் 5 வராகனெடை, இலவம் பிசின் தூள் 2 வராகனெடை, ஜாதிக்காய்த்தூள் 5 வராகனெடை, இவைகளைக் கலந்து வேளைக்கு 2-3 குன்றி வீதம், அதிசாரபேதி, கிராணி பேதிக்குக் கொடுத்துவரலாம்.

**குங்கிலியக்களிம்பு.**—குங்கிலியம், மெழுகு, வகைக்கு 3 பலம் இவைகளைச் சிறு தீயிட்டு உருக்கி, அதில் 10 பலம் நல்லெண்ணெய் சேர்த்துச் சூடாயிருக்கும்போதே வடிகட்டிக்கொண்டு, அதை ஆறு விரணங்கள், அழிபுண்கள் இவைகளுக்குத் துணியில் தடவி மேலுக்குப் போட்டுவரச் சுகமாகும். இத்துடன் கந்தகம், காசுக்கட்டி, வெங்காரம் இவைகள் சேர்த்து விரணங்களுக்குப் போட்டால், சிவந்த நிறமுண்டாகிச் சீக்கிரத்தில் ஆறும்.

இதைத் தணலில் போட்டுப் புகைக்க, நோயாளியிருக்குமிடம், சாக்கடை முதலிய விடங்களிலுண்டாகும் துர்க்கந்தம் நீங்கும். விஷ வாயுக்கள் போம்.

இதைச் சாராயத்தில் கரைத்து, சமனெடை முட்டை வெண்கரு சேர்த்துக் கலந்து, மேலுக்குப் பூச வாதவலி, முதலிய நோய்கள் சாந்தமாகும்.

இப்பிசினை நெய் விட்டுப் பொரித்து, தண்ணீரிலிட்டு நன்றாய் அடித்துப் பிசைந்து ஆடையில் வடிகட்டி நீரை வடித்து, ஆடைமேல் தங்கி நிற்பதை எடுத்துத் தக்க அளவில் தாது புஷ்டியாக உபயோகப்படுத்தலாம்.

இக்குங்கிலியத்தைக்கொண்டு, குக்கில் குழித்தைலம், குங்கிலிய நவநீதம் (வெண்ணெய்), குங்கிலிய பற்பம், குங்குலியத் தைலம் போன்றவைகள் செய்யலாம். இவைகள் மேகப்புண், வெட்டை முதலியவைகட்குப் பயன்படும்.

## பூனைக்கண் குங்கிலியம்.

இது, உருண்டு மஞ்சள் அல்லது பொன்னிறமுள்ளதாயும், பூனைக்கண் போலும் தோன்றும். இதன் எண்ணெய் வீக்கத்தைப் போக்கும்.

## குங்குமப்பூ—Kungumap-pù.

வே - பெ.—குங்கும்பூ, ஞாழல்பூ, காஸ்மீரம்.

Crocus Saffron.

Eng.—Saffron.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kumkuma-puvvu కుంకుమ పువ్వు. Kumkuma-kesaramu కుంకుమ కేసరము. | Sans. | Bhavarakta भवरक्तम्. Kunkuma कुङ्कुमम्. |
| Mal. | Kumkuma-pùvva കുങ്കുമ പ്പൂവ്. | Arab. | Zaafarán * زعفران |
| | | Pers. | Zaafarán * زعفران |
| Kan. | Kumkumada-huvvu ಕುಂಕುಮದ ಹೂವ್ವು. | Hind. | Kumkum * کمکم Késar * کیسر |

இது **crocus** இனத்தைச் சேர்ந்த பூண்டின் பூக்களிலுள்ள மகரந்தத் தாள்களேயாகும். இதன் நிறம் செம்மஞ்சள்; நீரிலிட்டால் சிறிது நேரத்தில் நீர் முழுவதும் செம்மஞ்சள் நிறம் பெறும். இப்பூண்டானது வட மேற்கு தேசங்களிலும், இந்தியாவில் காஸ்மீரத்திலும் பயிராகின்றது. இது ஒரு வித வாசனையோடு சிறிது மினுமினுப்பாய் இருக்கும். சாதாரணமாய் கடைகளில் விற்பது போலிச் சரக்குகளே.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடாரக்னிவர்த்தநி - Stomachic.
- துயரடக்கி - வேதநாசாந்தநி - Anodyne.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antisposmodic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—இதனால் சுக்கிலநட்டம், தாகம், மேகநீர், சூலை, கபநோய், சுரம், பித்தாதிக்கம், தலைவலி, கண்ணில் விழுகின்ற பூ, கண்ணோய், வாந்தி, பீநசம், காதுநோய், நீர்த்தோடம், வாயினிப்பு, பிரசவமலினம் முதலியன தீரும்.

விந்துநட்டந் தாகம்அண்டம் மேகசலஞ் சூலைகபம்
உந்துசுரம் பித்தங்கால் உச்சிவலி—முந்துகண்ணில்
தங்குமப்பூ வோடுறுநோய் சர்த்தியிவை நீங்கவென்றாற்
குங்குமப்பூ ஓர்இதனைக் கொள்.

குங்குமப்பூ வைக்கண்டால் கூறுகொண்ட பீநசநோய்
தங்குசெவித் தோடஞ் சலதோடம்—பொங்கு
மதுரதோ டந்தொலையும் மாதர் கருப்ப
உதிரதோ டங்களறும் ஓது.

(அ.கு.)

**வ. கு.**—இதைச் சாதாரணமாய் பதார்த்தங்களுக்கு நிறமுண்டாக்குவதற்கும் வாசனையூட்டுவதற்கும் சேர்ப்பதுண்டு.

கருப்பஸ்திரீகள், இதை வெற்றிலையோடு கலந்து தின்றாலும், அல்லது பாலில் இட்டுக் காய்ச்சி அருந்தினாலும், சுகப்பிரசவமுண்டாகும். குழந்தை நல்ல திடமாயிருக்கும். சூதகக்கட்டு, வலி முதலியவைகளும் நீங்கும்.

தலைவலி, நீர்தோடம் இவைகளுக்கு, இதை முலைப்பாலில் உரைத்து நெற்றியில் பற்றுப்போடலாம். அல்லது அபினி, விளாம்பிசின், பனை வெல்லம் இவைகளுடன் சேர்த்தரைத்து ஒரு துண்டுத்தாளில் தடவி கன்னப்பொறியின் மீது போட, வலி நீங்கும். மருந்துகளுக்கு இதைத் துணை மருந்தாகச் சேர்த்துக்கொள்ளலாம்.

குங்குமப்பூ 1 பங்கு, நீர் 80 பங்கு, இதை ஊறப்போட்டு வடிகட்டி, வேளையொன்றுக்கு ¼—½ ஆழாக்குக் கொடுத்துவர, மேற்கூறிய நோய்கள் விலகும்.

கருப்பம் வெளிப்படாமல் உபத்திரவப்படுங்கால் ஒரு கழஞ்சு குங்குமப் பூவை சோம்புக் கஷாயத்தில் கரைத்துக்கொடுக்க உடனே வெளிப்படும்.

பிள்ளை பிறந்தபின் ஒவ்வொரு பணவெடை வீதம் மூன்று வேளை கொடுக்க உதிரச் சிக்கலறும்.

இரண்டு வராகனெடை பூவை நீரிலரைத்து உருண்டை செய்து உள்ளுக்குக் கொடுக்க மரித்த பிண்டம் வெளிப்படும்.

தேனிலரைத்துப் பெண்குறி, ஆசனவாய், காது இவைகளிலுண்டாகிற நோய்களுக்குப் பூச சீக்கிரத்திலவைகள் மாறும். முலைப்பாலிலுரைத்து கண்ணில் விட்டுவர கண்ணீரொழுக்கு, கண்ணைப்பற்றிய இதர நோய்களும் குணப்படும்.

1 வராகனெடை குங்குமப்பூவை சுமார் 15 பலம் நீரில் சேர்த்து கஷாயமாக்கி மந்தாக்கினிக்குக் கொடுக்கலாம்.

---

## குடசப்பாலை—Kudasap-pàlai.

**வே - பெ.—கசப்பு வெட்பாலை, குளப்பாளை, குளப்பாலை.**

Holarrhena Antidysenterica.

Marsdenia Volubilis.

Eng.—The Kurchi ; Tellicherry Bark.

| | | |
|---|---|---|
| Tel. | Chèdu-koḍisha | చేదు కొడిశ. |
| Mal. | Kaipa-kotakap-pala | കൈപ്പകൊടകപ്പാല. |
| Kan. | Korasigina-gida | ಕೊರಸಿಗಿನ ಗಿಡ. |
| Sans. | Kutaja | कुटज: |
| Arab. | Lasánul-aaṣáfir | لسان العصافير * |
| Pers. | Indar-jave-thalakh | اندر جو تلخ * |
| | Tukhme-ahare | تخم آهری * |
| Hind. | Karvá-indarjow | كڑوا اندر جو * |

Note.—There are two kinds of வெட்பாலை in the bazaar, sweet and bitter, according to some native works and many native practitioners and druggists, they are the produce of one and the same plant, viz., Wrightia Tinctoria (வெட்பாலை); but this is contrary to the fact. W. Tinctoria is found in several gardens of Madras and elsewhere, and it always produces only one kind of seeds which are the sweet வெட்பாலை. The bitter வெட்பாலை is the produce of another plant called Holarrhena Antidysentrica or Marsdenia Volubilis.

இது காடுகளில் வளரும் மரம். **கறுப்பு, வெள்ளை** என இருவகையுண்டு. இதன் பட்டை பஞ்சைப்போல் மிருதுவாயிருக்கும்.

**ப. உ.** - பட்டை, விதை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பட்டை.**

- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**

**விதை.**

- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி -**Aphrodisiac.**
- கற்கரைச்சி - பாஷாணபேதி - **Lithontriptic.**

**குணம்.**—வாதநோய், அதிசாரம், நீரிழிவு, பிரமேகம், கரப்பான், சிரங்கு இவைகள் போம். அன்றியும் சுவாசகாசம், பக்கசூலை, அதிசாரம், வியர்வை, சுரம் இவைகளும் நீங்கும்.

வாதமறும் பேதிகட்டு மாருத நீரிழிவுங்
காதம்போ மேகங் கடக்குங்காண்—தீதடரப்
பொங்கு கரப்பானும் போகா விரணமும்போம்
இங்குகுட சப்பாலைக் கே.

சுவாசகா சம்பக்கச் சூலையதி சாரம்
அவாச வியர்ப்போ டனலந்—தவாத
கரப்பா னிவைவிலகுங் காரிகையே ! நாளும்
உரப்பாங் குளப்பாலை யுண்.

(அ.கு.)

**வ - கு.**—பட்டையை முறைப்படிக் கஷாயமிட்டு $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வரையில் தினம் மூன்று வேளை கொடுத்துவர பேதி, சீதபேதி முதலியவற்றைக் கண்டிக்கும்.

பட்டையைப் பிழிந்து சாறெடுத்து, இஞ்சிச்சாறு சமன் சேர்த்து அத்துடன் சிறிது சருக்கரை சேர்த்துச் சாப்பிட வயிற்றுநோய், மேகநோய் இவைகளைக் கண்டிக்கும்.

பட்டையைக் கஷாயமிட்டு வாய் கொப்பளிக்கப் பல்வலி தீரும்.

பட்டைச் சாற்றை எண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் கரப்பான், சொறி, சிரங்கு முதலிய சரும நோய்களுக்குத் தடவ நன்மை தரும்.

பட்டையைச் சிதைத்து வேதனையுள்ள விடங்களில் வைத்துக் கட்ட வேதனை நீங்கும்.

பட்டை 2 வராகனெடை, வில்வப்பழச் சதை 2 வராகனெடை, மாதுளம் பட்டை 1 வராகனெடை, இம்மூன்றையும் உலர்த்தி இடித்துப் பொடித்து வஸ்திரகாயம் செய்து, $\frac{1}{4}$—$\frac{1}{2}$ வராகனெடை வீதம், தேனில் அல்லது சருக்கரையில் கலந்து கொடுக்க, அதிசாரபேதி, சீதபேதி முதலியவை குணமாகும்.

## குடியோட்டுப்பூண்டு—Kudiyòttup-pùndu.

வே - பெ.—குருக்கம்செடி, பிரமதண்டி, பிரமதண்டு.

Argemone Mexicana.

Eng.—The Mexican Poppy; The yellow thistle.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Brahma-dandi-chettu బ్రహ్మదండి చెట్టు. | Sans. | Brahmadandi ब्रह्मदण्डी |
| Mal. | Brahma-dandi ബ്രഹ്മദണ്ടി. | Hind. | Bharbhánd * بھار بھند<br>Shírjàl-kanta * شرجال کانٹا |
| Kan. | (Arasina-ummatta).<br>Datturì ದತ್ತೂರೀ.<br>Datturí-giḍá ದತ್ತೂರೀ ಗಿಡಾ. | Duk. | Bhiramdandi * برم ڈنڈی<br>Pílá-dhatùrá * پیلادھتورا |

Note.—Datturì or Datturì-gidà is the canarese appellation under which the above plant is generally known in many districts of Mysore, Bangalore and Bellary and care should be taken not to confound this name with that of Datura Alba in several other languages on account of the similarity of the word Daturì.

இப்பூண்டானது இந்தியா முழுவதிலும் ஏராளமாய் பயிராகிற செடி. இதில் முள் அடர்ந்து கிடக்கும்.

**ப - உ.**—விதை, வேர், சமூலம், பால்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை**

**சமூலச்சாறு.**
உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.
துயரடக்கி - வேதநாசாந்தநி - Anodyne.
துயிலாக்கி - நித்ராகாரி - Hypnotic.

**விதை.**
வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
குமட்டலெழுப்பி - வமநவியதாகாரி - Nauseant

**விதை எண்ணெய்.**
மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**வேர்.**
துயரடக்கி - வேதநாசாந்தநி - Anodyne.

**சமூலம்.**

**குணம்.**—இதனால் பெருவிரணம், கரப்பான், சிறு சிரங்கு, சில்விடங்கள், பொடி இருமல், நீர்ப்பிரமேக வியாதி, மேகவாயு, பல் நோய், சர்ப்பவிடம் முதலியன தீரும்.

புண்ணொடு கரப்பான் பொடிசிரங்கு சில்விடங்கள்
சண்ணிருமல் மேகவளி தண்மேகம்—அண்ணிற்
படியோட்டு மாவிடமும் பல்நோயுந் தீருங்
குடியோட்டுப் பூண்டாற் குலைந்து (அ.கு.)

**பால்.**

இதனால் கண்கூசுதல், கண்குறுகல், கண்ணில் நீர் வடிதல், கண் வலி, கண் சிவத்தல் ஆகிய இவைகள் போம்.

கண்கூசல் கண்ணருகல் கண்ணெழுகல் கண்ணோதல்
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுந்—திண்ணச்
சரமதண்ட னைப்பிளக்குஞ் சாயகக்கண் மாதே!
பிரமதண்ட னற்பாற்குப் பேர்ந்து.

(அ.கு.)

**விதை.**

**வ-கு.**—விதையைத் தூள் செய்து 1 வராகனெடை எடுத்து, தேன் அல்லது சருக்கரை கலந்து தினம் மூன்று வேளை கொடுத்துவரக் கயநோய் குணமாகும். மேலும் இருமல், மார்சளி, காசரோகம் முதலிய கப நோய்களையும் சாந்தப்படுத்தும்.

விதையைப் பொடித்துத் தூபமிட்டு, அப்புகையை வாயிற்கொள்ள பல்வலி, பல் சொத்தை இவை தீரும்.

**விதை எண்ணெய்.**

இவ்வெண்ணெயை 10 முதல் 15 துளி வீதம், தினம் 3 முறை சருக்கரை அல்லது நீரிற் கலந்து உட்கொள்ளக் கயரோகம் சாந்தியாகும்.

30 துளி—சருக்கரையில் கொடுக்க நன்றுகப் பேதியாகும். ஆனால் வாந்தியுண்டாகும்.

சருமநோய், தவளைச்சொறி, தலைநோய், குட்டநோய், மேகவிரணம் இவ் வியாதிகளுக்கு வெளிப்பிரயோகமாக இதை உபயோகிக்கலாம்.

**வேர்.**

வேரைச் சூரணித்து ஒரு வராகனெடை கொடுக்கத் தட்டைப்புழு விழும்.

இதை முறைப்படிக் கஷாயமிட்டு, வேளைக்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் தினம் மூன்றுவேளை கொடுத்துவர, கயநோயாளிக்குக் குணந்தரும். பச்சை வேரைச் சிதைத்துத் தேள்கடி வாயில் வைத்துக்கட்ட விடம் நீங்கும்.

**சமூலம்.**

சமூலச் சாறும் ஆடு தீண்டாப்பாளைச் சாறும் சமனெடை சேர்த்து அதில் நெய் கலந்து ஒரு தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை சாப்பிட்டு வர பிரமேகம் குணமாகும்.

இச்சாற்றிற்கு சிறு நீரைப் பெருக்கும் செய்கை யிருப்பதால், சோகை, பாண்டு முதலிய நோய்களுக்கு அனுபானமாகக் கொடுக்கலாம்.

ஒரு தோலா சாற்றைக் காலை தோறும், வெறு வயிற்றில் 40 நாள் சாப்பிட்டு வர, குட்டம் போன்ற சரும நோய்கள் குணமாகும். இதையே வெளிப்பிரயோகமாகவும் உபயோகிக்கலாம். ஆனால் கண்ணில் படாதபடிக் கவனிக்கவேண்டும்.

**பால்.**

மேகவிரணம், துஷ்டவிரணங்களுக்குத் தடவலாம். கண்ணிலிட, கண்ணிலுண்டாகும் சிவப்பு, வலி, கூச்சம், நீர்வடிதல், குறுகல் இவை நீங்கும்.

---

## குதிரைக்குளம்படி—Kudiraik-kuḷampati.

**வே-பெ.—குளித்திப்பூண்டு - குளிரி.**

**Cyanotis Cristala.**

**Damasonium Indicum.**

இது நீர்க்கரை யோரங்களில் பயிராகும் ஒருவகைப் பூண்டு.

இதற்கு வீக்கத்தைக் கரைக்கும் குணமுண்டு.

குணம்.—இதனால் குதிரைவலி, சந்நிபாதம், திணவுபோம்.

“ குதிரைநடை வாயுசந்நி கூறுதின வும்போம்
குதிரைக் குளம்படியைக் கூறு ” (அ.கு.)

**வ - கு.**—இதை வேகவைத்து மேற்கண்ட நோய்களுக்கு ஒற்றிடமிடலாம், வீக்கங்களுக்கு வைத்துக்கட்ட வீக்கங் கரையும்.

---

## குத்துக்காற் சம்மட்டி—Kuttukkàr-chammatti.

**வே - பெ.—குத்துக்காரன் சம்மட்டி. இதற்குத் தக்க பெயர் வேறு சொற்களில் கிடைக்கவில்லை.**

இது தென்னிந்தியாவில் சமவெளிகளில் பயிராகும் ஓர் வகைக் குத்துச் செடி. இதைச் சேகரிக்கும்போது இருப்புக் கடப்பாரைக்கொண்டு இதன் வேரைக் குத்திக் கிளப்பக்கூடாது. இதன் வேர் இரும்பை இழுக்கும் குணமுள்ளது. ஆகையால் மரக்குச்சியினால் குத்திக்கிளப்பி எடுத்தல் வேண்டும்.

**ப - உ.**—வேர், சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
வீக்கமுருக்கி - ஸோபாநாசநி - Deobstruent.

**வேர்.**

**குணம்.**—இதன் வேரினால் கொடூரமான மகா வாதக் கூட்டம், மேகக்கட்டிகள், திமிர்வாதம், மூர்ச்சையின் அயர்வு ஆகியவைகள் போம்.

சாரமுறு குத்துக்காற் சம்மட்டி வேரெனச்சொற்
கோரமுள்ள மாவாதக் கூட்டமெங்கே ?—வீரமுறு
மேகத் தொகுப்பெங்கே வீறுதிமிர் வாதமெங்கே ?
சோகத் தளர்ச்சியெங்கே ? சொல். (அ.கு.)

**வ - கு.**—இதன் வேரை உலர்த்திப் பொடித்து வேளைக்குக் கால் முதல் அரை வராகனெடை வீதம் தினம் ஒன்றிற்கு இரண்டு மூன்று தரம் வேண்டிய நாள் வரைக் கொடுக்க மேற்கண்ட நோய்கள் விலகும். இதன் சமூலத்தை நீரிட்டுக் காய்ச்சி வீக்கம், கீல்வீக்கம், வாதப்பிடிப்பு, இவைகளுக்கு மேலுக்கு விட்டுவரலாம்.

---

## குந்திரிக்கம்—Kunthirikkam.

**வே - பெ.—குந்துருக்கம், குந்திலிங்கம், குமைஞ்சான், நறும்பிசின், பறங்கிச்சாம்பிராணி.**

Boswellia Glabra or B-Thurifera.

Eng.—Resin of Olibanum : Indian Frankincense.

| | | |
|---|---|---|
| Tel. | Parangi-sámbráni పరంగి సాంబ్రాణి. | Kan. Vishasha-dhoopa ವಿಶೇಷ ಧೂಪ. |
| | Anduga-pisunu అందుగ పిసును. | Sans. Salasi-niryása शल्लसिनिर्यासः |
| | | Arab. Kundur كندر * |
| Mal. | Valanku-chámbráni വളങ്കുചാമ്പ്രാണി. | Pers. Kundur كندر * |
| | | Hind. Kundur كند ر * |
| | Kunthirukkam കുന്തിരുക്കം | Duk. Farangland فرنگی آند * |

இது **Franknincense tree** என்னும் ஒரு வகை மரத்தினின்றும் வடிகிற பிசின் உறைவதனால் உண்டாகிறது. இம்மரம் மத்திய இந்தியாவிலும், மேல் கரைப் பிரதேசங்களிலுமுள்ள காடுகளில் விசேஷமாய் வளருகின்றது.

இது பலவிதமாய், அதாவது உருண்டும், கட்டையாயும், மிருதுவாயும் இருப்பதுடன், நிறத்திலும் வேறுபடும். இதில் ரோஜனமும், பிசினும் உண்டு. இதற்கு நல்ல வாசனையுண்டு.

**ப - உ.**—பிசின், எண்ணெய்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை**

**பிசின்.**

- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- வியர்வையுண்டாக்கி - ஸ்வேதஹாரி - Diaphoretic.
- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent
- குளிர்ச்சியாக்கி - சீதளகாரி - Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**எண்ணெய்.**

- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதனால் காசம், சுவாசம், மேகக்கட்டி, பலவித விடக்கட்டிகள், துர்க்கந்தம் வீசுகின்ற குட்டம், படர்தாமரை, சிரங்கு, பழைய விரணங்கள் ஆகியவை போம்.

காசசு வாசங் கனத்தமே கக்கட்டி
வீசு விடக்கடிவி றுச்சுகுட்டம்—பேசு
படர்தா மரைசிரங்கு பண்டைவிர ணங்கள்
இடர்செய்யிற் குந்திரிக்கம் ஏந்து. (அ.கு.)

**பிசின்.**

**அளவு.**—2 முதல் 20 குன்றி.

**வ - கு.**—இதை நெய்யுடன் கலந்து வெள்ளை முதலிய வெப்ப நோய்களுக்குக் கொடுக்கலாம். இதுவே கயரோகிகளுக்குண்டாகும் கபத்தை வெளிப்படுத்தி நுரையீரல் வியாதிகளைக் குணப்படுத்தும்.

இதை வேலம் பிசினோடு சேர்த்துச் சாப்பிட வாய் நாற்றத்தைப் போக்கும்.

ஒரு வராகனெடை வீதம் தினம் 2 அல்லது 3 வேளை ஆக நெடுநாள் சாப்பிட்டு வந்தால், மலட்டு நோயை விலக்கும்.

காமாலை, அதிசாரம், சீதபேதி, இரத்தப்போக்கு இவைகளுக்கும் இதைக் கொடுக்கலாம்.

மேக ரோகங்களுக்கு வெண்ணெயில் கொடுக்கச் சுகந்தரும்.

**வெளிப்பிரயோகம்.**

இப்பிசினை தேங்காயெண்ணெயிலிட்டுக் காய்ச்சி நாட்பட்ட விரணங்களுக்குத் தடவிவரக் குணமாகும்.

பழச்சாற்றில் கரைத்தும் மேற்படி விரணங்களுக்குப் போடலாம்.

இதைப்பொடித்துத் தூபமிட துர் நாற்றம் நீங்கும். இதை வெண்ணெயில் குழைத்துப்பற்றிட அரையாப்பு நீங்கும். குழந்தைகளை நீராட்டினபின், இதை சாம்பிராணி முதலிய இதர வாசனைச் சரக்குகளுடன் தூபமிட்டுவர, பிள்ளைத் தோடங்கள் நீங்கும்.

பறங்கிச்சாம்பிராணி, நல்லெண்ணெய், வெள்ளைமெழுகு, வகைக்கு எட்டு வராகனெடை எடுத்துச் சிறு தீயிட்டு உருக்கி வடிகட்டிக்கொண்டு, படர்தாமரை, கிரந்தி, விரணம், நாட்பட்ட சிரங்குகள், கட்டி, பிளவை, குட்டம் முதலியவைகளுக்கு மேலுக்குத் தடவலாம்.

**எண்ணெய்.**

**அளவு.**—10 முதல் 20 துளி.

இதை இளநீரில் கலந்து வெள்ளைக்குக் கொடுக்கலாம்.

தொண்டை வியாதிகள், ஈரல் நோய், நாட்பட்ட இருமல் நோய் இவைகளுக்கு இதை அளவுபடிக் கொடுத்துவர, அந்நோய்கள் சாந்தமாகும்.

---

## குப்பைமேனி—Kuppai-méni.

**வே - பெ.—அரிமஞ்சரி, பூனைவணங்கி, மேனி.**

Acalypha Indica.

**Eng.—Indian acalypha, Cat's struggle.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Kuppi-cheṭṭu** కుప్పిచెట్టు. | **Sans.** | **Arittamañjarie** अरित्तमञ्जरी |
| **Mal.** | **Kuppa-maṇi** കുപ്പമണി. | **Hindi.** | **Kuppí** * کُپّی |
| **Kan.** | **Kuppigida** ಕುಪ್ಪಿಗಿಡ. | **Duk.** | **Kúpi** * کپی |

**Note.**—The cat is supposed to be very fond of this plant, hence the meaning of the name cat's struggle (பூனைவணங்கி).

இப்பூண்டு இந்தியா முழுவதிலும் கிடைக்கும். தோட்டங்களிலும், வழியோரங்களிலும் சாதாரணமாய் வளர்ந்திருப்பதை யாவரும் காணலாம். ஏக தேசம் ஒரு அடி உயரமுள்ளது. வடபாஷையிலுள்ள மருத்துவ நூல்களில் இம்மூலிகையைப்பற்றி யாதொன்றும் கூறவில்லை என்கிறார்கள். ஆயினும் " **மார்ஜால மோகினி** " என்கிற பெயர் இதற்குண்டு.

**ப - உ.**—இலை, வேர், சமூலம்.

**சுவை.**—கைப்பு-கார்ப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை**
- துயரடக்கி - வேதநாசாந்தநி - Anodyne.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- பெருமலம்போக்கி - விரேசனகாரி - Cathartic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—இதன் இலையால் தந்த மூல நோய், தீச்சுட்டபுண், தாவரசங்கம விடங்கள், வயிற்றுவலி, வாதரோகம், இரத்த மூலம், நமைச்சல், குத்தல், இரைப்பு, பீநசம், கபாதிக்கம் ஆகியவை நீங்கும்.

தந்தமூ லப்பிணிதீத் தந்திடுபுண் சர்வவிடம்
உந்துகுன்மம் வாதம் உதிரமூ—லந்தினவு
சூலஞ்சு வாசம் தொடர்பீந சங்கபம்போம்
ஞாலங்கொள் மேனியத னால். (தே.கு.)

### இலை.

**வ - கு.**—இலையைச் சூரணம் செய்தோ, அல்லது கஷாயமிட்டோ, அல்லது இலையைச் சாறு பிழிந்தோ உள்ளுக்குக் கொடுக்கலாம்.

அளவு.—சிறியவர்களுக்கு—இலை ரசம் அல்லது கஷாயம் 1 முதல் 4 தேக்கரண்டி வரை கொடுக்க ஆயாசமின்றிப் பேதியாகும். கபத்தையும் மலக்கிருமிகளையும் வெளிப்படுத்தும். இருமலைத் தணிக்கும். இதே அளவில் பெரியவர்களுக்குக் கொடுக்க கோழையை யகற்றும்.

பெரியவர்களுக்கு $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்குக் கொடுக்க, வாந்தியாகும்.

சிறியவர்களுக்கு 1 தேக்கரண்டி கொடுக்க, வாந்தியாகும்.

இலைச் சூரணத்தைத் தக்க அளவாக குழந்தைகளுக்குக் கொடுக்க, மலப்புழுக்கள் வெளிப்படும். அல்லது இலையையும் சிறிதளவு பூண்டையும் சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்கலாம்.

இலைச் சூரணம் 15–20 குன்றி வரையிலும் கொடுக்க, இருமல், கபாதிக்கம் முதலிய நுரையீரல் நோய்களைச் சாந்தப்படுத்தும்.

இலையையும் உப்பையும் சேர்த்து அரைத்துச் சொறி சிரங்குகளுக்குத் தேய்த்துக் குளித்துவர, குணமாகும்.

இலைச்சாற்றை எண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி வாதவலிக்குத் தேய்த்து வரலாம்.

இலையை அரைத்து மேகவிரணம், விடக்கடி இவைகளுக்குப் போடலாம் அல்லது, இலையை மஞ்சளுடன் கூட்டி அரைத்துப் பூசலாம்.

சுண்ணும்புடன் கலந்து, வேதனையுடன் கூடிய கீல் வீக்கங்களுக்கும் கட்டிகளுக்கும் பூசலாம். இதையே காது வலிக்குக் காதைச் சுற்றிப் பூச நோய் தணியும். இத்துடன் இலைக் கஷாயத்தையும் உள்ளுக்குக் கொடுத்தல் நன்று.

இலையுடன் உப்புச், சேர்த்துச் சாறு பிழிந்து தினந்தினம் காலையில் இரு நாசிகளிலும் நசியமிட்டு, குளிர்ந்த நீரில் தலை முழுகிவர ஆரம்ப பைத்திய ரோகம் நீங்கும்.

இலையை அரைத்துக் கழற்சிப்பிரமாணம் உண்டை செய்து ஆசனவாய் வழியாய் உட்செலுத்த நாட்பட்ட மலச் சிக்கல் நீங்கும்.

சாறு பிழிந்து இத்துடன் சிறிது வேப்பெண்ணெய் கலந்து, இறகில் தோய்த்துத் தொண்டையில் அல்லது உள்நாக்கில் தடவ, சிறு குழந்தைகளுக்கு வயிற்றில் தங்கியிருக்கும் கபக்கட்டு வாந்தியாகி வெளிப்படும்.

இச்சாற்றையே தலைவலிக்கும் தடவலாம். இலைச்சூரணத்தைப் படுக்கை விரணங்களுக்கு வைத்துக் கட்டச் சுகமாகும். புழுக்கள் சாகும்.

இலைச்சாற்றைச் சுண்டக்காய்ச்சி மெழுகு பதத்தில் எடுத்து 2 முதல் 4 குன்றிவரை கொடுக்கக் குழந்தைகளுக்குக் காணும் கப இருமல் போகும்.

இலையை அரைத்து மேகவிரணங்களுக்கு வைத்துக்கட்டலாம்.

இலையைக் கஷாயமிட்டு சிறிது உப்புச் சேர்த்துக் குடிக்க மலத்தைக் கழிக்கும்.

### வேர்.

வேரைக் கஷாயமிட்டு அல்லது வெந்நீர் விட்டு இடித்துச் சாறு பிழிந்து தக்க அளவில் கொடுக்க, விரேசனகாரியாகும்.

வேரை அரைத்து சுமார் ஒரு கொட்டைப்பாக்களவு நீரிற் கலந்து 3 நாள் கொடுத்து உப்பில்லா பத்தியம் வைக்க எலிவிடம் தீரும். ஆனல் வாந்தியும் பேதியும் ஆகும்.

**சமூலம்.**

இதில் 3 பலம் எடுத்து இடித்து ஒரு ஆழாக்கு திராட்சைச் சாராயத்தில் எழு நாள் ஊறவைத்து இடையிடையே கிளறிவிட்டு, நன்ருகப் பிழிந்து சாறெடுத்து வடிகட்டி வைத்துக்கொண்டு 20 துளி முதல் ஒரு தேக்கரண்டி வரை தேனிற் கொடுக்க மேற்கூறிய குணங்களைக் கொடுக்கும்.

இதனுல் செய்யப்பட்ட மேனித்தைலம் 15–20 குன்றி மணப்பாகில் கலந்துக் கொடுக்கக் கிருமி வெளிப்படும். இத்தைலத்தையே வாத நோய்களுக்கு மேலுக்குப் பூசலாம்.

---

## குமிழ மரம்—Kumizha Maram.

**Gmelina asiatica.**

இது புதர்களிலும், காடுகளிலும், வேலி யோரங்களிலும் பயிராகும் ஒரு வகைக் குத்துச் செடி வகுப்பிற் சேர்ந்தது. இதில் மூன்று இனமுண்டு அவை **செங்குமிழ், நிலக்குமிழ், பெருங்குமிழ்** இவற்றுள், இங்குக் கூறப்புகுவது, பெருங்குமிழாகும். இதன் காய் பழுத்தவுடன் மஞ்சள் நிறத்தைப்பெறும்.

**ப - உ.**—பழம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling. / வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient. }

**குணம்.**—அதிக வெப்பத்தையும், தலையிலுண்டாம் சுண்டுகளையும் போக்கும்.

**வ - கு.**—இப்பழத்தை நசித்து நீரிற் சேர்த்துக் கஷாயமிட்டு அத்துடன் சமபாகம் எண்ணெய், பசுவின்பால் சேர்த்துக் கலக்கி, அதில் கிச்சிலிக் கிழங்கு, கசகசா, கார்போகவரிசி, காட்டுச்சீரகம், கருஞ்சீரகம் இவைகளைத் தயில முறைக்குரிய அளவு எடுத்துப் பசுவின்பால் விட்டரைத்துக் கலக்கி, சிறு தீயிட்டெரித்து, பக்குவ பாகத்தில் வடித்து, வாரத்துக்கிருமுறை தலையிலிட்டு மூழ்கிவர, உடல் வறட்சி நீங்கி உடல் மேனிபெறுவதுடன் தலையிலுண்டாகும் அரிப்புடன்கூடிய சுண்டுகளையும் போக்கும்.

---

## குருக்கத்தி—Kurukkath-thi.

**வே - பெ.—குருகு - மாதவி.**

Goertnera Racemosa.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Madhavi మాధవి. | Sans. | Madhavi Latha माधवी-लता |
| | | | ,, Viruksha माधवी वृक्षः. |

இதில் **பெருங்கொடி, மரம்** என இருவகையுண்டு.

**ப - உ.**—பூ.

**சுவை.**—சிறு கைப்பு, சிறு இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling. / இளைப்பாற்றி - Restorative. }

**குணம்.**—சிரஸ்தாபம், அதிதாகம், சிலேத்தும துட்டவிரணம், பித்த கோபம், பலவிடம் இவைகளை நீக்கும்.

சிரரோகந் தாகஞ் சிலேஷ்ம விரணம்
பொருபித்தம் பல்விடமும் போக்கும்—வரிசேர்
கருக்கொத்த வாள்விழியாய் ! கைப்புமது ரஞ்சார்
குருக்கத்திப் பூவின் குணம்.

(அ.கு.)

**வ - கு.**—குருக்கத்திப் பூவைக் கஷாயமிட்டுக் குடித்துவர மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

பூச்சாறு இரும்பைப் பற்பமாக்கவும் உதவும்.

---

## குருவிச்சி—Kuruvich-chi.

**வே - பெ.—குருவிச்சிப்பூண்டு.**

**Ehretia buxifolia.**

இது குத்துச் செடி வகுப்பைச் சேர்ந்தது.

**ப - உ.**—சமூலம்,

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்**-சீதம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை:** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனால் பெருவியாதி, மலடு, மேகக் கரப்பான், விடமாந்தம், சீதரத்தக் கிரகணி இவை போம்.

குருவிச்சிப் பூண்டெனவே கூப்பிட்டாற் போதும்
வருவிச்ச குட்டம் மலடும்—ஒருமிச்ச
மேகக் கரப்பான் விடமாந்தம் சீதரத்தம்
பேதமறப் போமொருகாற் பேசு.

(அ.கு.)

**வ - கு.**—இதன் சமூலத்தைக் கஷாயமிட்டேனும், சூரணஞ் செய்தேனும் தக்க அளவில் உட்கொள்ள மேற்கண்ட நோய்கள் தணியும்.

---

## குருவேர்—Kuruvér.

**வே - பெ.—வெட்டிவேர், விழல்வேர், வீரணம், இருவேலி**

**Andropogan Muricatus.**

**Eng.—Cuscus grass.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Vaṭṭi véru వట్టి వేరు. / Avvuuru-gaḍḍi-véru అవ్వూరుగడ్డి వేరు. | | Sans. | Usheera उशीरः / Veeranam वीरणः | |
| Mal. | Vetti-véra വെട്ടിവേര | | Arab. | Usír | * عسیر |
| Kan. | Lávanchá ಲಾವಂಚಾ. | | Pers. | Khas | * خس |
| | | | Hind. | Bálah | * بالا |

இது இந்தியாவில் எங்கும் கிடைக்கும். இதில் இருவிதமுண்டு. அவை **வெட்டி வேர், விலாமிச்சம் வேர்.** இவ்விரண்டும் ஒன்றிற்கொன்று நிறத்தில் சிறிது வித்தியாசமுண்டு. வெட்டிவேர் வெண்மஞ்சள் நிறமாயும், விலாமிச்சம் வேர் கரு நிறமாக நீளமாகவும், வாசனையோடு மிருக்கும். மாதர்கள் இதைக் கொண்டையில் அணிவார்கள். இதைத் தைலங்களில் சேர்த்துக் காய்ச்சி முடித்தைலமாக உபயோகிப்பது வழக்கம்.

**ப - உ** —வேர் - வேரிலிருந்து எடுக்கும் எண்ணெய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தனகாரி - Emmenagogue.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—வெட்டிவேருக்குப் பித்தத்தால் அகாலத்திலுண்டாகிற தாகம், சோமரோகம், காமாலை, இரத்தபித்தம், சுரம், பரவுகின்ற குட்டம், தலை நோய், கழுத்துநோய், சுக்கிலநட்டம், உன்மத்தம், தீயால் வந்த புண், மூலைச்சிலந்தி, திரிதோட மூர்ச்சை, நேத்திரரோகம், வித்திருதிக்கட்டி ஆகியவை நீங்கும்.

பித்தவி தாகம் சசிகா மிலங்கறைப் பித்தமனற்
றத்திடு குட்டஞ் சிரநோய் களமடி தாதுநட்ட
மத்தம னற்புண்ட னப்புண்வன் மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திர மேகத்தின் கட்டியும் போம்வெட்டி வேரினுக்கே. (அ.கு.)

**வெட்டி வேர் விசிறி.**

இதனால் பைத்திய தோடம், தேக எரிவு, விதாகம், இவைகள் நீங்கும். மனோவுற்சாகம் உண்டாகும்.

வாசவெட்டி வேர்விசிறி வன்பித்த கோபமொடு
வீசும் எரிச்சலையும் வீழ்த்துங்காண்—பேசுங்கால்
தாக மகற்றுஞ் சகலம னோக்கியமாம்
மோகமருண் மாதே ! மொழி. (அ.கு.)

**வ - கு.**—அளவு.—பொடி செய்த தூள் 3–12 குன்றி.
ஊறல் கஷாயம் $\frac{1}{4}$–$\frac{1}{2}$ ஆழாக்கு.
எண்ணெய் 1–2 துளி.

ஊறல் கஷாயத்தை, சுரம், வயிற்று நோய் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

எண்ணெயை சருக்கரையில் கலந்து கொடுக்க ஊழி நோயில் உண்டாகும் வாந்தி நோயை நிறுத்தும்.

இது, அநேக தைலங்களிலும், பித்த சாந்திக்குரிய சூரண இலேகியங்களிலும் சேரும். இதன் தட்டி வெப்பத்தை மாற்றும்.

## குறட்டை—Kurattai.

**வே - பெ.—சவரி, பீனசக்குறட்டை, சவுரி.**

Trichosanthes Palmata.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ábuvva ఆబువ్వ. Avvagùda-pandu అవ్వ గూడపండు. | Arab. | Anbaghól * انبگول Hanzale-ahmar حنظل احمر * |
| Mal. | Kokatonti കൊക്കതൊണ്ടി. | Pers. | Hanzale-surke حنظل سرخ * |
| Kan. | Avagude-hannu ಅವಗುಡೆ ಹಣ್ಣು. | Hind. | Lál-indráyan لال اندراین * |
| | | Duk. | Gùdá-Pandu گوڑاپانڈو * |
| Sans. | Mahakala महाकल. | Cing. | Titta-aondpla. |

இது மரமேறுங் கொடி வகுப்பைச் சேர்ந்தது. ஏகதேசம் 30 அடிக்கு மேல் கொடியாகப் படரும். இந்தியா முழுமையும் கிடைக்கக்கூடியது. இதில் **பெருங்குறட்டை, சிறுகுறட்டை** (T-Incisa) என இருவகை யுண்டு. இவைகளின் குணங்கள் ஏகதேசம் ஒன்றுபட்டேயிருக்கும்.

**ப - உ.**—பழம், வேர்.

**சுவை**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**வேர்.**

**செய்கை.** { மலநீராக்கி - வ்ரேசநி - Hydragogue.
பெருமலம்போக்கி - வ்ரேசனகாரி - Cathartic.

**குணம்.**—பழத்தால் சிரநோய், உடற்கடுப்பு, நீர்ப்பீநசம் இவை நீங்கும்.

தலைவலிகு டைச்சல் சலப்பீந சங்கள்
குலைகுலைந்து காட்டிற் குடிபோம்—நிலைவா
னவரிப் படிமாதென் றையுறுமெய்ம் மாதே !
சவரிப் பழத்தாற் சளைந்து. (அ.கு.)

**பழம்.**

**வ - கு.**—பழத்தை நன்றாய் இடித்துத் தேங்காயெண்ணெயில் காய்ச்சிக் காதுவலி, நாசி, செவி இவ்விடங்களிலுண்டாகும் புண் முதலிய வைகளுக்கிட சுகமாகும்.

பழச்சாற்றை நல்லெண்ணெயோடு சேர்த்துக் காய்ச்சித் தலை முழுகி வரத் தீராத் தலைவலி, ஒற்றைத் தலைவலி முதலியவை தீரும்.

இத்துடன் பூலாத்திப் பழமும் சேர்த்துக் காய்ச்சித் தலையில் தடவிவர முடி கறுத்து வளரும்.

மேற்கூறிய எண்ணெயை காதில் விட்டுவரக் காதில் வடியும் சீ நின்று போகும்.

பழத்தைச் சுவாச காசத்துக்குப் புகைக்க, காசம் சாந்தப்படும்.

பழம் நஞ்சாகக் கருதப்படுவதால், சோற்றுடன்கலந்து, காக்கைகளைக் கொல்ல உபயோகிக்கிறார்கள்.

இதன் வேரைக் கஷாயமிட்டு வெள்ளை நோய்க்குக் கொடுக்க நோய் தணியும்.

இதனுடன் தும்மட்டி வேரைச் சமனெடை சேர்த்தரைத்துப பிளவைகளுக்குப் பற்றிடலாம்.

கன்று காலிகளுக்குண்டாகும் ஈரல் வியாதிகளுக்கு இதன் வேரை உள்ளுக்குக் கொடுப்பதுண்டு.

---

## குறிஞ்சான்—Kurinchán.

வே - பெ.—குரிந்தை.

Hiptage Madablota.

Eng.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Mádhave-tíge మాధవితీగె. Vadla-yárála వడ్లయారాల. | Sans. | Mábdhavi माधवी Atimuktá अतिमुक्ता |
| Mal. | Kurinja കുറിഞ്ഞ. | Hind. | Huthee mookta حتی * موکتا Kampti * کامپٹی |

இது இந்தியாவின் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகிறது. இவ்வினத்தில் **சிறுகுறிஞ்சான்**, **பெருங்குறிஞ்சான்** என இருவகையுண்டு. கொடி வகுப்பைச் சேர்ந்தது. இவையிரண்டின் குணமும் ஒன்றேயாகும்.

---

## சிறு குறிஞ்சான்—Chiru-kurinchán.

Gymnema Sylvestre.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Poda-patra. పోడపత్ర. Putla-podra. పుట్లపోడ్ర. | Sans. | Sarpadarushtrik सर्पदंष्ट्रिका Mesha sringi. मेषशृङ्गी |
| Mal. | Cheru kurinja ചെറുകുറിഞ്ഞ. | Hind. | Chota-dudhilata. |
| | | Duk. | Parpatrah. |

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை**—கைப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு

**இலை.**

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**வேர்.**
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.

**கொடி.**

**குணம்.**—இதனால் வாதவிடம், ஆமம், மாதாந்த உதிரச் சிக்கல், அஸ்திகத சுரம், காணுக்கடி விடம், வாதசுரம் சந்நிபாதசுரம், கபசுரம், பித்தஜிக்வாகண்டகம், சந்தத சுரம், தாகரோகம் இவை நீங்கும்.

சிறுகுறிஞ்சா வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிரம் இல்லாத மாதர்க்—குறுமுலகில்
அத்தி சுரமும் அகலாக் கடிவிடமும்
தத்தியக லத்தகர்க்குந் தான்-

வாதசுரஞ் சந்நிசுரம் மாருக்க பச்சுரமும்
பூதலம்விட் டோடப் புரியுங்காண்—மாதேகேள் !
அக்கரங்கள் தீர்க்கும் அதிசுரந்நா கந்தொலேக்குந்
தக்க சிறுகுறிஞ்சா தான். (அ.கு.)

**வேர்.**

இதனுல் அற்ப செந்துக்களின் நஞ்சு, வாதசுரம், வாததோடம், காசம், சுவாசகாசம் இவை போம்.

சிறுகுறிஞ்சா வேர்விடத்தைத் தீர்க்கும் அனிலத்
துறுசுரங்கள் வாதம் ஒழிக்குந்—தெறிபாணக்
கண்ணுய் இருமல்முதற் காசசுவா சந்தணிக்கும்
விண்ணு டருக்கிதனை விள். (அ கு)

**இலே.**

**வ - கு.**—இலேயைக் கஷாயமிட்டு, சுரம், இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலேயை நன்ருய் மென்றதன் பிறகு, நாவின் உருசி மந்தப்படும். சருக்கரை போன்ற இனிப்புச் சுவைகளும், கைப்புச் சுவைகளும் தெரியாது.

இலேயை விளக்கெண்ணெயில் வதக்கி நெறிக்கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம்.

**வேர்.**

இதைப் பாம்புக் கடிக்கு உள்ளுக்கும், மேலுக்கும் உபயோகிக்கலாம். வேர்த்தூளைப் புண்ணின்மீது தூவியும், அல்லது நீரில் குழைத்துப் பூசியும். வேரைக் கஷாயமிட்டு உள்ளுக்குக் கொடுத்தும் பாம்பு விடத்தை மாற்றலாம்.

---

## குன்மக்குடோரி—Kunmak-kudóri.

இது ஆற்ருேரங்களில் வளரும் செடி.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை** { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative }

**குணம்.**—இதனுல் சூலே, சுவாசம், இருமல், க்ஷயம், குன்ம ரோகம் இவை நீங்கும்.

சூலேயோ டீளை தொலேயாக்கா சங்கயநோய்
காலனென்ற குன்மங்க லங்குங்காண்—ஞாலமிசை
நன்மைக் குரியகுண நல்குவமென் ருற்றிலுறுங்
குன்மக்கு டோரிதனைக் கு. (அ.கு.)

**வ - கு.**—இதைக் கஷாயமிட்டுச் சாப்பிட்டுவர மேற்கூறிய நோய்கள் நீங்கும் அல்லது சூரணஞ் செய்து சருக்கரையுடன் கலந்து நாள் ஒன்றுக்குக் காலே, மாலே இரு வேளையாக $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ வராகனெடை வீதம் சாப்பிட்டும் வரலாம்.

## குன்றி—Kuntri.

வே - பெ.—குண்டுமணி, குன்றிமணி, குன்றிவித்து.

Abrus precatorius.

Eng.—Jequirity.

| | | |
|---|---|---|
| Tel. | Guri-ginja | గురిగింజ. |
| | Guru-venda | గురువెంద. |
| Mal. | Kunni-kuru | കുന്നിക്കുരു. |
| Kan. | Gul-ganji | ಗುಲ್‌ಗಂಜಿ. |
| Sans. | Gunja | गुञ्जा |
| Arab. | Aainuddabék | عینن الد بك * |
| Pers. | Chashme-khurós | چشمۂ قروص * |
| Hind. | Gunj | گنج * |
| Duk. | Gumchí | گمچی * |
| Cing. | Olinda-aṭṭa. | |

இது கொடி வகுப்பைச் சேர்ந்தது. இந்தியா முழுமையும் வளரும். இதில் **வெண்மை, கருமை, செம்மை, மஞ்சள் நீலம்** ஆகிய 5 விதங்களுண்டெனினும், முக்கியமாய் **வெண்மை, கருமை, செம்மை** என இம்மூன்று சாதிகளே பிரதானமாயுள்ளது. பூக்கள் வெண்மையாயிருப்பின், விதையும் வெண்மையாயிருக்கும். சிவப்புக் குன்றி சாதாரணமாகக் கிடைக்கும். இதில் மலை வெண்குன்றி வேரையே **அதிமதுர**மெனச் சிலர் கூறுவர். ஆனால் அதிமதுரம் குன்றிமணிச் செடியினின்றும் கிடைக்கக்கூடிய சரக்கல்லவென்பது கீழ்வரும் குறிப்பினின்றும் கண்டு கொள்க :—

In many works (Flora Andhrica, Brown's Telugu Dictionary; Bailey's Malayalam Dictionary; Garret's Canarese Dictionary; Reeve's "Carnatic Dictionary, etc.), the names Yashtimadhukam and Atimadhuram are applied either to both the root of A. Precatorius and of Glycerrhiza glabra, or to the former alone. This is incorrect as well as a source of confusion. The names belong only to the true Liquorice root (G. glabra) and they cannot be correctly applied to the root of A. precatorius, unless the word Indian or Country is added to them as follows:—Náttu-yashṭi madhukam, Náṭṭu-atimadhuram (Tel.), Nát-yashṭi-madhukam, Náṭ‑-Atimaduram (Mal.), Nát-yashtimadhuká, Nát-atimadhurá (Can.)

I have repeatedly examined this root both in its fresh and dry conditions, and found it to be far from "abounding in sugar" as it is generally considered. It does not possess any sweetness at all until it attains a certain size or becomes pretty old, and even then it is not always distinctly perceptible to taste, nor the 'saccharine matter' of any kind easily detectable by chemical tests. Nevertheless, the root of 'A. precatorius' is not only used in some bazaars for adultration with the root of 'G. glabra,' but is also sold indiscriminately under the same names. It is quite possible, therefore, that these roots are sometimes confounded with each other, and this accounts for the misconception as to the amount of sugar in the root of A. precatorius. The following distinctions are sufficient to distinguish this root from the true Liquorice :—

| *Glycerrhiza Glabra.* | *Abrus Precatorius.* |
|---|---|
| 1. Generally about the size of a large goose squill or of the little finger to the size of a large thumb. | Generally much smaller and seldom acquires the size of a finger. |

| | |
|---|---|
| 2. Color greyish or reddish brown externally, and yellow or slightly yellow internally. | Brown externally and white internally. |
| 3. Taste sweet and mucilaginous. | Taste generally not distinctly sweet. |

The root of A-precatorius, however, still deserves the name of 'Indian or Country Liquorice' because it yields an extract which is nearly similar in medicinal properties to the Extract of Glycerrhiza, though somewhat bitterish in taste. I have succeeded in preparing an extract not only from the root, but also from the leaves of all varieties of A. precatorius. The leaves being distinctly sweet, the extract they yield is much superior both in taste and as a medicine.

Md. Sheriff Khan.

**ப - உ.**—இலை, விதை, வேர்.

**சுவை.**

இலை.

இனிப்பு, **வீரியம்**-சீதம், **பிரிவு**-இனிப்பு.

விதை.

கைப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

வேர்.

சிறு கைப்பு, இனிப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.**

இலை.

மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
தாபமகற்றி - உக்ரரோகசமனகாரி - Antiphlogistic.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

விதை.

நீர்மலம் போக்கி - வ்ரேசனகாரி - Purgative.
உரமாக்கி - பலகாரி - Tonic.

வேர்.

வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—சிவந்த குன்றிமணிப் பருப்பினால், கண்ணோய், பித்தநோய், மாறுநிறம், காமாலைரோகம், வியர்வையோடு கூடிய வெப்பத்தைத் தருகின்ற மூர்ச்சைசுரம், சிலேத்துமகோபம் இவை நீங்கும். சுக்கிலம் விருத்தியாகும்.

நேத்திரநோய் பித்தம் நிறமழுங்கல் காமாலை
வேர்த்திடுதா பச்சோப வெப்புடனே—கோத்திட்ட
ஐயமுதல் யாவும்போம் ஆயிழையே ! காட்டிலுறை
செய்யகுன்றி யின்விதையைச் சேர்.

(அ.கு)

இலை.

**வ - கு.**—இலையை மென்று சாற்றை விழுங்குவதனால், குரற்கம்மல் நீங்கும்.

எண்ணெயுடன் இலைச்சாறு சேர்த்து வேதனையுள்ள வீக்கங்களுக்குப் பூசி வர, வீக்கம் குறைந்து வேதனை நீங்கும்.

மார்புநோய், பக்க நோய், இவைகட்கு அவ்விடங்களில் விளக்கெண்ணெய் தடவி அதன் மீது சூடு இலைகளை ஒட்டிவைக்க, ஓர்வித பரபரப்புண்டாகி வேதனை தணியும். உள்நீரையும் குறைக்கும்.

காய்ந்த இலைகளை, இலைகள் மூடும்படியான அளவு தண்ணீரில் ஊற வைத்து, அடுப்பேற்றிச் சிறு தீயில் 6 மணி நேரம் எரித்து, வடிகட்டின கஷாயத்தை, ஒரு பாண்டத்தில் விட்டு கொதிக்கிற நீரில் வைத்துக் கஷாயம் வற்றி மெழுகு பதம் வரும்வரை வைத்திருந்து பிறகு எடுத்து வைத்துக் கொள்ளவும். இது மிக்க இனிப்புள்ளது. மருந்துகளில் சேர்ந்து உபயோகிக்கலாம். ஆனால் மிகவும் தாழ்ந்த சரக்கு.

இலைச்சாறு 2 பங்கு, கரிசலாங்கண்ணிச்சாறு 4 பங்கு, எண்ணெய் 4 பங்கு சேர்த்துக் காய்ச்சித் தலைமுழுகி வரத் தலைக்குக் குளிர்ச்சி தரும்.

**விதை**—அளவு —½–1½ குன்றி (தூள்).

இது நன்றாய் மலத்தைப் போக்கும். அதிக அளவில் விடமிக்கும். இக்குணம் விதையின் புறத்தோலில் இருக்கிறது

பாலில் சேர்த்துக் காய்ச்சி உண்டுவர உடம்பைத் தேற்றும். பலமுண்டாக்கும்.

4–6 விதைகளை தினம் இருவேளையாக, மாதாந்தர ருது நின்றவுடன், சில நாட்களாக விழுங்கி வந்தால், கருப்பம் உண்டாகாமல் நிறுத்தும். கருப்பைக்கு கோளாறுகளையுண்டுபண்ணும். நீர்த் தோடத்துலுண்டாகும் தீராத் தலை நோய்க்கு இவ்விதையைப் பொடித்து நசியமிடலாம்.

விதைகளை வேகவைத்துச் சாப்பிடத் தாதுபுஷ்டியுண்டாகும்.

விதையைத் தனியாகவோ, இதர மருந்துகளுடனோ சேர்த்தரைத்து, அடிப்பட்ட வீக்கம், வாதவலி, கீல்வாதம், பக்கவாதம், முடியுதிரல் முதலியவைகளுக்கு உபயோகிக்கலாம். விதைத்தூளைக் கண் வியாதிகளுக்கு உபயோகிப்பது வழக்கம்.

**வேர்.**

பச்சைக்குன்றிமணி வேர், வெண்டைக்காய் வகைக்கு 1 பலம் எடுத்து நன்றாய் நசுக்கி ½ படி கொதிக்கிற வெந்நீரிலிட்டு, மூடி வைத்து அரை மணி நேரம் கழித்து வடிகட்டி சருக்கரை, கற்கண்டு அல்லது தேன், இம் மூன்றில் ஏதேனும் ஒன்றை 8 பலம் கூட்டிச் சிறு தீயிட்டு எரித்து, மது பாகத்தில் இறக்கி வைத்துக்கொண்டு, குழந்தைகளின் இருமலுக்கு, ஒரு தேக்கரண்டி வீதம் 2 மணிக்கொருதரம் கொடுக்க, நல்ல சுகமுண்டாம். பெரியவர்களுக்குண்டாகும் சுரத்தோடு கூடிய இருமலுக்கு இதில் ⅛ முதல் ¼ ஆழாக்கு வீதம், 4 மணிக்கொருமுறை கொடுக்க நல்ல குணமுண்டாகும்.

---

## கூத்தங்குதம்பை—Kuth-than-kuthambai.

### Jnula - L.

**ப - உ.**—இலை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.**—வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**

**குணம்.**—இலைக்கு, சூலை ரோகம், சந்நிபாதம், மகாவாத ரோகம் ஆகிய இவைகள் நீங்கும் ; பித்த கோபத்தை விருத்தி செய்யும் ; மண்ரேத்தைச் சிந்தூரமாக்கும்.

குத்துகின்ற நோய்போக்குங் கோரபித்தம் உண்டாக்கும்
அத்திசெய்யுஞ் சந்நி யகற்றுங்காண்—சத்திக்கு
மாத்தங்கு வாய்வொழிக்கும் மண்ரேத் திற்குதவுங்
கூத்தங் குதம்பைக் குழை. (அ.கு.)

**வ - கு.**—இதன் சமூலத்தை நிழலிலுலர்த்திச் சூரணஞ் செய்து காலை மாலை ¼ முதல் ½ வராகனெடை வீதம் உட்கொள்ள மேற்கண்ட பிணிகள் தீரும். கஷாயமிட்டுங் கொடுக்கலாம்.

---

## கூந்தற்பனை—Kūnthar-panai.

**வே - பெ.—தாளிப்பனை, கொண்டைப்பனை, மலைப்பனை.**

**Caryota urens.**

**Eng. Sago palm.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | Kondaa-jilugu | కొండజీలుగు. | **Hind.** | Mari. | * ماڑی |
| **Mal.** | Chuntap-pana | ചൂണ്ടപ്പന. | **Duk.** | Salopa. | * سلوپا |
| | Iram-pana. | ഈറപ്പന. | | Marika-Jhad. | * ماڑی کا جھاڑ |
| **Kan.** | Beina. | ಬೈನ. | | | |

இது பனைவருக்கத்தைச் சார்ந்தது. இந்தியாவின் வடபாகத்திலும், ஆஸ்ஸாமிலும் ஏராளமாயுண்டு. தென்னிந்தியாவின் மலைப் பிரதேசங் களிலும் வளருகின்றது,

**ப - உ.**—விதை, கள்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்**-சீதம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை**
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**குணம்.**—ஓலை எழுதுவதற்கும், சோறு மலத்தைக் கட்டுவதற்கும், பாளை மாமிசத்தை வளர்க்கவும் பயன்படும்.

எழுத்திற் கிடமா யிருக்கு நெடுங்காலம்
வழுத்தி லதன்மாழை மடலாற்—கழுத்திலுறுஞ்
சோறு மலமிறுக்குந் தூறுபா ளைப்பிழியா
மூறும்விடக் கிந்தாளிக் கோர். (அ.கு.)

**வ - கு.**—இதன் ஓலை நீளமாயும், கெட்டியாயுமிருக்கும். ஆகவே குடைகள் செய்வதற்கும், எழுத்தாணியினால் எழுதுவதற்கும் உதவும்.

இதன் குருத்து துவர்ப்பாயிருக்கும். மலத்தைக் கட்டும்.

இதன் பாளையிலிருந்து ஒரு வகை மதுநீர் எடுத்துவருவதுண்டு. இதற் குக் கள்ளென்று பெயர். இக்கள்ளைக் காலையில் சாப்பிட, மலத்தை இளக்கும். இம்மதுநீரிலிருந்து செய்யும் வெல்லம் மூத்திர வியாதிகளைக் கண்டிக்கும், தாதுபுஷ்டியையும் உண்டுபண்ணும். மரத்தின் நடுவிலிருக் கும் சோறு மிகவும் இனிப்புடையது. இதை உலர்த்தி மா எடுப்பதுண்டு.

விதையை உரைத்து நெற்றியில் பூச, ஒற்றைத் தலைவலி நீங்கும்.

விதையைத் தண்ணீர் விட்டு அரைத்துத் தேள், நட்டுவக்காலி முதலிய விடக்கடிகளுக்குப் பூசலாம்.

கள்ளிலிருந்து ஒரு வகைச் சாராயம் எடுக்கப்படுகிறது.

## கூவைக்கிழங்கு—Kūvaik-kizhangu.

**வே - பெ.**—அரரூட் கிழங்கு, கூவாமாக் கிழங்கு, கூகைக் கிழங்கு.

Curcuma Angustifolia.

Eng. East Indian Arrow-root.

Tel. Ararut-gaddalu. అరారూట్ గడ్డలు.

Mal. Kuva. കൂവ. Kuva-kizhanna. കൂവകിഴങ്ങ്.

Kan. Koove - Gedde. ಕೂವೆಗೆಡ್ಡೆ.

Hind. Tikhar. * ٹیکھار

Duk. Viláyati-áté-ké-gaddé. * ولایتی اتی کی جڑ

இது சற்றேறக்குறைய மஞ்சட் செடிபோலிருக்கும். இந்தியாவில் பல பாகங்களிற் பயிராகின்றதெனினும், முக்கியமாய் மலேயாளம், தென்கன்னடம் முதலிய விடங்களில் ஏராளமாய்க் கிடைக்கும். மழைக்காலங்களில், மலைச்சாரல்களிலும், அதைச்சார்ந்த வெளிகளிலும் தானுகப் பயிராகின்றது. நன்ருய் முதிர்ந்த கிழங்கை முறித்துப் பார்த்தால் அதில் மூன்று வட்டங்கள் காணப்படும்; நடுமையத்தில் நீல நிறமாயும், அதற்கடுத்தாற் போல் மங்கலான நீல நிறமாகவும், விளிம்பில் வெண்மையாகவும் இருக்கும். நீல நிறமான வட்டத்திலுள்ளதே பூர்த்தியானது. வெண்மையாகவுள்ளது பூரணமானதல்ல.

**ப - உ.**—கிழங்கு - இதிலிருந்து மா எடுக்கிருர்கள்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

**குணம்.**—இருமல், சுரம், தாகம் நீங்கும் - தேக புஷ்டியுண்டாகும்.

மேனியிடும் வாய்க்கு மிருதுவாம் ஆக்கியுண்ணத்
தானிருமல் வெப்பதிக தாகமிவை - ஏனிருக்கும்
அம்பே றிளங்கிழங்கி தியாவர்க்கு மாமணப்பூங்
கொம்பே ! கூ கைக்கிழங்கைக் கூறு.

(அ.கு.)

### மா எடுக்கும் விதம்.

**வ - கு.**—நன்ருய் முதிர்ந்த கிழங்குகளைத் தண்ணீரிற் கழுவி, தோலைச் சீவி அரைத்து மாவாக்கியபின், ஓர் வாயகன்ற பாத்திரத்தில் நிறைய நீர்விட்டு, அப்பாத்திரத்தின் வாய்க்கு மெல்லிய துணிகட்டி, அத்துணியைத் தண்ணீர் மட்டத்துக்குக் கீழ் விட்டு, அத்துணியின்மேல் அம்மாவைக் கொட்டிக் கையால் கரைத்துக்கொண்டேயிருந்தால், மா பாத்திரத்தினடிக்குச் சென்றுவிடும். பிற்பாடு துணியை நீக்கிவிட்டு, பாத்திரத்தில் படிந்திருக்கும் மாவை நன்ருய்க் கலக்கித் தெளிய வைத்துத் தெளிவை இறுத்தபின், மீண்டும் சுத்த நீர் விட்டுக்கலக்கித் தெளிவை இறுத்தல் வேண்டும். இவ்வாறு மூன்று முறை செய்து தெளிவிறுத்து வடிகட்டி, பாத்திரத்தின் அடியிற்படிந்திருக்கும் மாவை வெயிலில் உலர்த்தி எடுத்துக்கொள்ளவேண்டும். கடையில் கிடைக்கும் மாவில் உருளைக் கிழங்கு மாவும் சேர்ந்திருக்கும்.

இம்மா மிகமெல்லியதும், எளிதில் ஜீரணமாகவும் கூடியது. ஆகையால் இதைக் கஞ்சிசெய்து நோயாளிகளுக்குக் கொடுக்கலாம். தேகத்தைப் போஷிக்கும். குழந்தைகளுக்கு ஆகாரமாய்க் கொடுக்கவுதவும். பலகாரங்கள் செய்தும் வழங்கலாம்.

**கஞ்சி**—மா 1 பங்கு, நீர் 30 பங்குசேர்த்துக் கலக்கிக் கொதிக்க வைத்துக் கிளறிக்கொண்டேயிருந்து அவசியமான பருவத்தில் எடுத்து உபயோகிக்கவும். இக்கஞ்சியைச் சீதபேதியுடையவருக்கும், மூத்திரப்பை, குடல் முதலியவைகளிலுண்டாகும் நோயாளருக்கும் கொடுக்கலாம்.

**குறிப்பு.**—மலையாளம், திருவிதாங்கூர் முதலிய விடங்களில் இம்மாவை ஏராளமாகச் செய்து, பிறதேசங்களுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள்.

---

## கேழ்வரகு—Kẽzh-varagu.

**வே - பெ.—இராகி, கேவுரு, கேப்பை (பஞ்சந்தாங்கி).**

**Eleusine Coracana.**

**Eng. Ragi.**

| | |
|---|---|
| **Tel.** Ragulu రాగులు. | **Sans.** Soma. सोमम्; Rájika. राजिका |
| **Mal.** Ragi. റാഗി. | **Hind.** Manduá. * مندوا; Makra (wild). * مکرا |
| **Kan.** Ragi. ರಾಗಿ. | |

இது தானியவகையைச் சேர்ந்தது. இந்தியாவின் எல்லா விடங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை** { துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent. / உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient. }

**குணம்.**—இது வாதத்தை அல்லது பித்தவாதத்தை யுண்டு பண்ணும்.

சுத்தஅனி லந்தன்னைத் தோன்றுவிக்கும் அல்லவெனில்
பித்தஅனி லத்தைப் பிறப்பிக்குஞ் - சித்ரமலர்த்
தாழ்குழலே ! நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள்.

(அ.கு.)

**கூழ் - களி.**

கேழ்வரகின் கூழால், வாதப்பிரகோபமும், பித்தக்கிளர்ச்சியும் தணியும். பெருவயிறு குணமாகும்.

களியால் வாதம் அதிகரிக்கும், பலம் உண்டாகும்.

கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்தமொடு
வீழ்வயிறுஞ் சாந்தமென விள்ளுவர்காண் - காழாங்
களிக்குப் பலம்உண்டாங் காணில்அதி வாதந்
தளிர்க்கு முலகிலிதைச் சாற்று.

(அ.கு.)

**வ - கு.**—இது இலகுவில் சீரணிக்காது - ஆனால் உடலுக்கு மிகுந்த வலுவைக் கொடுக்கக்கூடியது. உழைப்பாளிகளுக்கு மிகவும் ஏற்றது.

இதை இடித்து மாவாக்கி உபயோகிக்கலாம். இவ்விதையின் மேற்றோல் பேதியை யுண்டாக்கும்.

மாவைத் தோசை அல்லது அடைதட்டிப் புசித்து வந்தால் மதுமேக ரோகத்தில் அதிக நீர் இறங்குவதை நிறுத்துமென்று அநேகர் உபயோகித்து வருகிறார்கள்.

இம்மாவை வஸ்திரகாயம் செய்து, சிறிது சருக்கரை, பால், சேர்த்துக் கூழ் காய்ச்சி, அல்லது களிகிளறிக் குழந்தைகளும், வயோதிகர்களும் சாப்பிட்டுவரத் தேக ஆரோக்கியமும், வலிவும் உண்டாகும். ஆனால் மலத்தைக் கட்டும்.

மாவைக் களிகிளறி கட்டிகளுக்கு வைத்துக் கட்டினால் கட்டி சீக்கிரம் பழுக்கும்.

---

## கொஞ்சி—Konchi.

**வே - பெ.—காட்டுக்கொஞ்சி.**

**Limonia pentaphylla.**

இது இந்தியா, இலங்கை முதலிய இடங்களில் பயிராகும் சிறு மரம்.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
வெப்பமகற்றி - சுரஹரகாரி - Febrifuge. }

**குணம்.**—இதனால் பாலர் மாந்தம், வயிற்றுப்பொருமல், கணச்சூடு, ஆவிருதவாதரோக மிவைகள் போகும்.

மாந்த மகற்றும் வயிற்றுப்பி சந்தவிர்க்கு
மாந்த கணச்சுரத்தை மாற்றிவிடும் - சேர்ந்தசிறு
வாதநோ யோட்டும் வனக்கொஞ்சிப் பட்டையது
மாதரசே ! நீயுமுணர் வாய்.

(அ.கு.)

**வ - கு.**—பட்டையைக் கஷாயமிட்டு $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் காலை மாலை உட்கொள்ள மேற்படி நோய்கள் தீரும்.

---

## கடற்கொஞ்சி—Kadar konchi.

**Murraya exotica.**

**Eng.** Honey bush : Cosmetic box, China box.

| | |
|---|---|
| **Tel.** Naga Golanga. నాగగొలంగ. | **Sans.** Ekangi. **एकाङ्गी** |
| **Mal.** Kattu-konchi. കാട്ടുകൊഞ്ചി. | **Hind.** Bibzar koonti. * بیزار کونتی |

இது, வங்காளம், தென்னிந்தியா, இலங்கை, முதலிய இடங்களிலும், இமாலயப்பிரதேசங்களிலும் பயிராகும் ஒருவகைக் குத்துச் செடி.

**ப- உ.**—இலை, பூ, பட்டை.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

செய்கை
- பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- மணமூட்டி - Aromatic.

**குணம்.**—இதனால் இருமல், தாகம், உடலெரிச்சல், மயக்கம், கீல்வாதம்சுரம் போம்.

**வ - கு.**—இலையை அல்லது பூவை ஒரு பங்குக்குப் பத்துப்பங்கு நீர் விட்டு அரைமணி நேரம் ஊறவைத்து எடுத்து அதில் $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்கு வரையிலும் கொடுத்துவர மேற்கூறிய நோய்கள் சாந்தியாகும்.

---

## கொடிக்காக்கட்டான் விதை—Kodikkakkattan-vitai.

**வே - பெ.**—ஜிரிகி விரை, கொடிக்காக்கடான் விரை.

Pharbitis Nil ; Ipomoea Hederaceae.

Eng. Pharbitis seeds ; Kaladana seeds.

Tel. Jiriki-vittulu. జిరికివిత్తులు. Kolli-vittulu. కొల్లివిత్తులు.

Kan. Gouribija. ಗೌರಿಬೀಜ.

Arab. Habbun-nil. * حب النيل

Pers. Tukhma-nil. * تخم نيل

Hind. Kálá-dánah. * كالا دانه

Duk. Kali-zirki-ke-binj كالى زركى كى بينج *

இது இந்தியாவில் அநேக இடங்களில் பயிராகிற ஒரு பூண்டின் விதை. இதில் சிவப்பு இனமும் உண்டு.

**ப.உ.**—உலர்ந்த விதை.

**சுவை.**—இனிப்பு, புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை
- பெருமலம்போக்கி - ஜலவிரேசநி - Cathartic.
- புழுவகற்றி - க்ருமிநாசநி - Anthelmintic.

**குணம்.**—நாட்பட்ட மலம், வயிற்றுவலி இவைகளைப் போக்கும்.

**வ.கு.**—விதையை உலர்த்திப் பொடித்து $\frac{1}{2}$ முதல் 1 வராகனெடை தனித்தாயினும் வேறுமருந்துகளுடன் சேர்த்தாயினும் சாப்பிடப் பேதியாகும்.

கொடிக்காக்கடான் விதைத்தூள் 2 பலம், இந்துப்பு 2 பலம், அரத்தைச் சூரணம் $\frac{1}{2}$ பலம், இச்சூரணங்களைக் கலந்து வஸ்திரகாயம் செய்து $1\frac{1}{2}$ வராகனெடை முதல் 2 வராகனெடை வீதம் கொடுக்கச் செவ்வையாய்ப் பேதியாகும்.

மேற்படி விதைத்தூள் வராகனெடை 7, அதற்குச் சமன் இந்துப்பு, சுக்குத்தூள் வராகனெடை 1, இவைகளைச் செவ்வையாகக் கலந்து வஸ்திரகாயஞ்செய்து 1 முதல் 2 வராகனெடை கொடுக்கச் செவ்வையாகப் பேதியாகும். சிறுகிருமிகளும் விழும்.

குறிப்பு.—சிறுவர்களுக்குக் குறைந்த அளவில் கொடுக்கவும்.

N.B.—See the remarks, under Clitorea Ternatea with reference to the Dukni name Zirki and Tamil name Kakkanan or Kakkatan.

## கொடிவேலி—Kodivéli.

**வே - பெ.**—அணிஞ்சில், அதிகநாரி, அதிபருங்கி, அழல், உதாசனன், எரி, எழுநா, ஒலி, கருநாகம், கனலி, காரிமை, கொடுவேலி, கானிலிந் திரன், கானிலம், கொடிச்சி, சித்திரமூலி, சித்திரமூலம், சித்திரம், ஞெகிழி, தழல், திக்கு, திசைநா, வஞ்சதாரம், வன்னி, அக்னி, அதிசனசி, உதகவன், சதாவேதா, சித்திரகம், தபனன், திகனு, வசகம், வனமா, வன்னிபரியம், சித்ரகம், கொடிவன்னி, வலிவன்னி, திவிபிநாமம்.

### கொடிவேலியில் மூன்று சாதிகளுண்டு.

1. **கருங்கொடிவேலி.**
2. **செங்கொடிவேலி.**
3. **வெண்கொடிவேலி.**

N. B.—இம்மூன்றின் குணமும் பெரும்பாலும் ஒன்றேயாகும்.

**பொது குணம்.**—கட்டி, விரணம், கிரந்தி, வாதரோகம், குதஸ்தான வித்திரிதி (அரையாப்புக்கட்டி), குத்தல், சோபை, மூலரோகம், உதிரக்கட்டு, நீரேற்றம், பெருவயிறு இவைபோம்.

கட்டிவிர ணங்கிரந்தி கால்கள் அரையாப்புக்
கட்டிகு லைவீக்கங் காழ்மூலம் - முட்டிரத்தக்
கட்டுநீ ரேற்றங் கனத்த பெருவயிறும்
அட்டுங் கொடிவேலி யாம். (அ.கு.)

மேலும்,

சூலைக்கட்டு, குறிப்புண், கிரந்தி, மேகவிரணம், நெறிசுரம், விஷம சுரம், முதலியவையுந் தீரும்.

கட்டியே சூலைக்கட்டு கருதிடு குறிப்புண் கிரந்தி
ஒட்டுமே கரணத் தோடு முறுமரை யாப்புமன்றி
விட்டிடா நெறிச்சு ரம்பின் வியன்விட மச்சுரந்தான்
பொட்டெனப் பறந்து போகும் புகழ்கொடி வேலிகண்டால். (வடு.)

---

## கருங்கொடிவேலி—Karunkodivéli.

**வே - பெ.—கருங்கொடிவேர், கறுப்புச் சித்திர மூலம்-**
**Plumbago Capensis.**

**Eng.—Black coloured lead-wort.**

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Nalla-chitra-mulam నల్ల చిత్రమూలం. | | Sans. | Krishna-chitraká कृष्ण चित्रकम्<br>Níla-shikha नीलशिखा. |
| Mal. | Karutha-koṭivéli കറുത്ത കൊടിവേലി. | | Hind. | Kala-chitra کالا چترا * |
| Kan. | Níla-chitramula ನೀಲಚಿತ್ರ ಮೂಲ. | | Duk. | Vdah-chitarmul عودا چترا<br>Sheethāraj هیطرج<br>Vdah-chitarmulam<br>عودا چترا ملوم * |

இது கொடி வருக்கம். பங்காளம், தென் இந்தியா முதலிய இடங்களில் விசேஷமாகக் கிடைக்கும்.

ப - உ.—வேர்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

---

## செங்கொடிவேலி—Chenkodivéli.

**வே - பெ.—சிவப்புச் சித்திரமூலம், கொடிமூலி, செங்கொடிமூலி.**

**Plumbago Rosea.**

**Eng.—Rose colored lead-wort.**

**Tel.** Erra-chitra-mulam ఎర్ర చిత్రమూలం.

**Mal.** { Chuvanna-kotuvéli ചുവന്നകൊടുവേലി.
Chenṭi-kotuveli ചെൻ കൊടുവേലി.

**Kan.** Kempu-chitramula ಕೆಂಪು ಚಿತ್ರಮೂಲ.

**Sans.** { Rakta-chitraka रक्त चित्रकम्
Rakta-shikha रक्त शिखा

**Arab.** Shitaraje-aḥmar شيطرج احمر *

**Pers.** Shítaraje-surkh شيطرج * سرخ *

**Hind.** { Lál-chíta لال چتا *
Lál-chitarmul لال چتر اسل *

**Duk.** Lál-chitarmul لال چتر اسل *

இது சாதாரணமாய் இந்தியா முழுவதும் கிடைக்குமெனினும், பெரும்பாலும், மேற்குத் தொடர்ச்சி மலைச்சார்பையடுத்த இடங்களில் கிடைக்கும். சிற்சில தோட்டங்களில் இதை அலங்காரமாக வைத்துப் பயிராக்குவதுமுண்டு.

ப - உ.—வேர்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**உட்செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant
தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient

**புறச்செய்கை.** { புண்ணாக்கி - வ்ரணகாரி - Caustic
கொப்புளமெழுப்பி - துவக்ஸ்போடகாரி - Vesicant

**குணம்.**—கருங்கொடிவேலிக்குடையதே. ஆனால் மூத்திரக் கொதிப்புண்டாகாது.

கபம், வீக்கம், கிரகணி, வாதம், கிருமி, பாண்டு முதலியனவும், சூலை, வாய்வு, சுகசந்நி, மந்தசுரம், தலைநோய் இவைகளையும் கண்டிக்கும்.

செஞ்சித்ரமூலம் செம்பைப் பற்பமாக்கும்.

சூலையும் வாய்வுஞ் சுகசன்னி மாந்தசுரஞ்
சீலசிர நோய்வாதந் தீருங்காண் - கோலமயிற்
பேடனைய மாதே ! பிறங்குசெஞ்சித் ரம்மூலஞ்
சேடுசெம்பைத் துய்யபற்பஞ் செய். (அ.கு.)

## வெண்கொடிவேலி—Veṇkodivéli.

வே - பெ—வெண்சித்திரமூலம் ; வெண்கொடிமூலம்.
**Plumbago Zeylanica.**
**Eng.—Ceylon lead-wort.**

| | | | |
|---|---|---|---|
| Tel | Tella-chitra-mulam తెల్ల చిత్రమూలం. Agnimáta అగ్నిమాత. | Sans. | Agní-shika अग्नि शिखा Chitraka-vrikshaha चित्रक वृक्षः |
| Mal. | Tumpa-koduvéli തുമ്പക്കൊടുവേലി. | Arab. | Shítaraj * شیطرج |
| | | Pers. | Shítarak * شیطرک |
| Kan. | Chitra-mulá ಚಿತ್ರಮೂಲಾ. | Hind. | Chítá * چیتا Chitrá * چترا |

இது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடியது.

பெரும்பாலும் வேலிகளிலும், புதர்களிலும் பயிராகும்.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கார்ப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Anti-periodic.
வியர்வையுண்டாக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

இதன் வேரின் பட்டையினின்றும் செய்யப்படும் பாவனத்திராவகத்திற்கும் மேற்படி செய்கைகளுண்டு.

**குணம்.**—கருங்கொடிவேலிக்குள்ள குணமே இதற்குமுண்டு.

**அளவு.**—கால் முதல் அரை வராகனெடை.

அளவுக்கு மிஞ்சினுல் விடமிக்கும்.

**வ - கு.—(1) கொடிவேலிச் சூரணம்.**

கொடிவேலி வேர், புங்கன் வேர், ஆயில்பட்டை இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் ஒன்று ; கடுக்காய், திப்பிலி, கடுகு, கருஞ்சீரகம் இவைகளைச் சிறுவறுப்பாக வறுத்துப் பொடித்தது தனித்தனி வகைக்குப் பலம் அரை இவை யாவற்றையும் ஒன்ருகக் கலந்து வேளையொன்றுக்குத் திரிகடிப் பிரமாணம், ஒரு மண்டலம் கொள்ள, கிராணி, உதரவாயு, மூலவாயு, வாதவாயு, பட்சவாதம் முதலியன தீரும். அல்லது—

(2) கொடிவேலி பலம் ஒன்று, சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், சிறுதேக்கு, யானைத்திப்பிலி, கோஷ்டம், கடுகுப்பொடி இவை வகைக்குப் பலம் அரை ; பெருங்காயம், வசம்பு, இவை இரண்டும் வகைக்குப் பலம் கால் ; இவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து, சீனி சமன் கூட்டிக் கொள்ளவும். இச்சூரணத்தையும் மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

**அளவு.**—வெருகடிப்பிரமாணம்.

**அனுபானம்.**—வெந்நீர்.

(3) சித்திரமூலவேர்ப்பட்டை, மிளகரணைவேர்ப்பட்டை, நொச்சிவேர்ப்பட்டை, இவை ஒவ்வொன்றையும் வகைக்குப் பலம் 5 எடுத்துச் சூரணஞ்செய்து வெருகடி அல்லது திரிகடியளவு, குளிர்ந்த நீரில் அனுபானித்திட, சகலவாதமும் போம்.

(4) கொடிவேலி வேர்ப்பட்டை, எருக்கன் வேர்ப்பட்டை, சங்கன் வேர்ப்பட்டை, குங்கமப்பூ இவற்றைச் சமனெடை எடுத்துச் சூரணித்து, வெருகடியளவு மூன்று நாள் காலை, மாலை இருவேளையும் சாப்பிட்டு, நான்காநாள் தலைமுழுகி, தயிருஞ்சாதமும் சாப்பிட, வலிப்புத் தீரும்.

**பத்தியம்.**—உப்பு ஆகா.

(4) (a) சித்திரமூலவேர்ப்பட்டை, அதிமதுரம், அதிவிடயம், இந்துப்பு, கடுக்காய் நெல்லிக்காய், தான்றிக்காய், கருவேலன்பட்டை, கோட்டம், சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்லிமுள்ளி, இவைகளின் சூரணம் வகைக்கு 3 ரூபாயெடை எடுத்து, ஒன்ருய்க் கலந்துவைத்துக்கொண்டு, வேளைக்கு ½ முதல் 1 வராகனெடை வீதம் காலை, மாலை இருவேளையும் கொடுத்து வர, மஞ்சட்காமாலை, அசீரணம், அசீரணபேதி முதலியவை நீங்கி தேகத்துக்கு வலுவைத்தரும்.

(5) **கொடிவேலி எண்ணெய்.**—சித்திரமூலவேரைப் பச்சையாக எடுத்துப் பஞ்சுபோல நசுக்கி, எலுமிச்சங்காயளவு ஒரு சேர் நல்லெண்ணெயில் போட்டு அடுப்பேற்றி ஒரு கொதி வந்தவுடன் இறக்கி வடித்துக்கொள்ளவும். இத்தைலத்தை இரண்டு அல்லது மூன்று நாள் தலையில் வைத்துத் தலை முழுகிவர, நீர்ப்பீநசம், தும்மல், தீராத்தலைவலி இவைகள் தீரும். சகல வாத நோய்களும் சமனப்படும்.

(6) கால்படி நல்லெண்ணெயில், கொடிவேலிவேர்ப்பட்டை பலம் ½, கருப்புக்கட்டி பலம் ¼ அரைத்துக் கூட்டி மெழுகு பதத்தில் காய்ச்சிக் கடுகுடன் வேளை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் கடும்பத்தியமாய், மூன்று நாள், 6 வேளை சாப்பிட்டு நாலாம் நாள் விட்டு, 5-ம் நாள் தலைக்கு நீர்வார்த்து உப்பை வறுத்துக் கூட்ட அரையாப்பு நீங்கும்.

(7) **கொடிவேலித்தைலம்.**—கொடிவேலி வேர் பலம் ஒன்று எடுத்து, நாலுபடி நீர் விட்டு அரைப்படியாகக் குறுக்கி, அதில்—பால்விட்டரைத்த கருஞ்சீரகம், தாளிசபத்திரி, தான்றிக்காய் வகைக்குப் பலம் ஒன்று, நல்லெண்ணெய் படி அரை, பசுவின் வெண்ணெய் புன்னைக்காயளவு, இவைகளைச் சேர்த்துப் பதமாய்க் காய்ச்சி வடித்தெடுத்துத் தலைமுழுகிவர, ஆனந்தவாயு, சொறி, சிரங்கு, தினவு, குட்டம், அரையாப்பு, கிரந்தி, சூலை, புண்புரைகள், பிளவை, வீக்கம் இவைகள் தீரும்.

இத் தைலத்தை, கீல்வாதம், பட்சவாதம் இவைகட்குப் பூசக் குணமாகும்.

(8) **சித்திர மூலக்குளிகை.**—சித்திரமூலம் ஒருகழஞ்சு, பூரம் ஒரு கழஞ்சு, ஓமம் ஒரு கழஞ்சு, இம்மூன்றிற்கும் சமனெடை பனைவெல்லம் சேர்த்து, இரண்டு சாமம் அரைத்து எடுத்து மிளகளவு உருண்டை செய்து, பத்து நாள் சாப்பிட்டு பத்தியமிருந்துவர, விரணம், இரணக்கிரந்தி, யோனிப் புற்று, சூலை, கள்ளிப்பூக் கிரந்தி, லிங்கப்புற்று, பவுத்திரம், கன்னப் பிளவை, பக்கப்பிளவை, மார்சிலந்தி, விப்புருதி, மேகரணம், எட்டுவிதக் குன்மம் இவைகள் போம்.

சித்திரஞ்சேர் மூலமதே சீராக்க ழஞ்சியொன்று
கத்திரஞ்சேர் பூரமது வுங்கழஞ்சு—சத்தியங்கேள்
ஓமமோ ருகழஞ்சி யோதுபனை வெல்லமொடு
சாமமிரண்டு தானரைப்பாய் தான்.

அரைத்து மிளகளவு அன்பான வுண்டைசெய்து
தரையிலொரு பத்துதினந் தானருந்த—நிரைகுழலே!
ஏதுக் கலைகிருய் ரணக்கிரந்தி ரணங்களோடு
மாதர்களே! யோனிப்புற்று மாறும்.




மாறுமே சூலையெல்லாம் வரக்கன்னி பூக்கிருந்தி
தீருமே லிங்கப்புற்று பவுத்திரநீர்—சீறுங்
கன்னப் பிளவை பக்கம் காணும் படுப்பிளவை
என்ன சொல்வேன் மார்சிலந்தி யோடும்.

ஓடுமே விப்புருதி ஓடுகின்ற குன்மமெட்டும்
நாடுதனில் மேகரணம் நாடாது—மாடுகளே!
காடுதனில் மூலிகையைக் காணும லேனலைவீர்
வீட்டிலிருந் திம்முறைசெய் யின்.

(அ.)

(9) **கொடிவேலிக் குடிநீர்.**—கொடிவேலி வேர்ப்பட்டை, பறங்கிப் பட்டை, பிரப்பங்கிழங்கு, மிளகு இவை வகைக்கு மூன்று வராகனெடை எடுத்து இடித்து, நாலுபடி நீரிற் கலந்து, ½ படியாகக் குறுக்கி நாள் ஒன்றுக்கு மூன்றுதரம் அரைக்கால் படி வீதம் சாப்பிட்டுவர, வாயுவினுலுண்டாகும் உடம்புக்குத்தல்போம்.

(10) **கொடிவேலிப்பற்று.**—கொடிவேலிவேரை நல்லெண்ணெய் விட்டரைத்துப் பற்றுப்போட, கருணைமூலம், அரையாப்பு, கண்டமாலை இவை கரையும்.

செங்கொடிவேலிப் பச்சைவேர்ப்பட்டையை நீர் விட்டரைத்து, பச்சரிசி மா சேர்த்து நன்றாய்க் கலந்து, சீலையிற்றடவி, அரை மணிநேரம், கொப்புளிக்கச் செய்யவேண்டிய இடத்தில் போட்டெடுக்க, 12 முதல் 18 மணி நேரத்துக்குள், நான்குபுறமும் பரவிய கொப்புளமுண்டாகும். அக்கொப்புளங்களிலுள்ள நீரைப் போக்கித் தளிர் வாழையிலையை வைத்துக்கட்டிப் புண்ணை ஆற்றுவது வழக்கம்.

அக்கினிப் பிளாஸ்திரிக்குப் பதிலாக இதை உபயோகிக்கலாம். ஆனால் இதன் வெளிப்பிரயோகம் அதிக எரிச்சலும் பாதையுமுண்டாக்குமாதலால், வேறு வஸ்துவுடனே, கைக்குக் கிட்டாத சமயத்தில்தான் இதனை உபயோகிக்க வேண்டும்.

(11) கருப்பையை உஷ்ணிக்கின்றகுணம் இதற்கிருப்பதால், வேரின் பட்டையை, அல்குல் வழியாய்க் கருப்பையின் வாயில் வைத்துக் கருவை வெளிப்படுத்துவதும், வேர்ப்பட்டையை அரைத்து, ஒரு வராகனெடை அளவாக உட்கொண்டு உயிருடனே அல்லது அழித்தோ கருவை வெளிப்படுத்துவதும், மதியற்ற மூடப்பெண்களுள் வழக்கம்.

(12) இதன் வேர் உலர்ந்தால் வேகங்குறையும். இதையரைத்து மேகப்புடை, குட்டம் இவைகட்டு மேற் பூச்சாக உபயோகிக்கலாம்.

(13) கொடிவேலி வேரைப் பாக்களவு அரைத்து பசுவின்பால், (கறந்த ஆவிமாறுமல்) எடுத்து, அதில் கரைத்துக் குடிக்க, பாஷாணத்தின் வீறு தணியும்.

---

## கொட்டிக்கிழங்கு—Kottik-kizhangu.

**Aponogeton Mono-stachyon.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** Melluni padmam మెల్లుని పద్మము. | | **Sans.** | Makhauna मखाणैः |
| **Mal.** Kottik-kizhaṇṇa കൊട്ടി കിഴങ്ങ്. | | | Padma पद्मम् |

இது நீரில் வளரும் சிறு கொடி. குளங்குட்டைகளில் ஏராளமாய் உண்டாகும். தாமரையினத்தைச் சேர்ந்தது. இதில் பலவகையுண்டு. **கருங்கொட்டி, காறற்கொட்டி, கொட்டி**யென இம்மூன்று வகைகளிலும், சாதாரணமாய், கொட்டி, காறற்கொட்டி என இவ்விரண்டின் கிழங்குகளையும் ஏழைமக்கள் உணவாக அருந்துவார்கள். கருங்கொட்டி உணவிற்கு ஏற்ற தல்ல. இதற்கு **பேய்க்கொட்டி** என வேறு பெயருமுண்டு. இம்மூன்று வகைக்கொட்டிகளையும், அதனதன் பூவையும், இலையையும் கொண்டு பகுத்தறியலாம். இவைகளையன்றி கொட்டி என்னும் பெயரை முன்னிட்டு ஒரு செடியுளது. அதற்கு " **தண்டற்கொட்டி** " என்று பெயர் **(Arumtrilo batum)**

**ப - உ.** - கிழங்கு.

**சுவை.**—இனிப்பு - **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனால், தேமல், பிரமேகம், தேகக் கடுப்பு, உட்சூடு ஆகிய இவைபோம்.

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடல்
ஒட்டிநின்ற மேகம் ஒழிக்குங்காண்—வட்டமுலை
மானே! அகக்கடுப்பும் வந்த அழ லுந்தணிக்கும்
தானே யிதையறிந்து சாற்று. (அ.கு.)

**வ - கு.**—இதை உலர்த்திச் சூரணம் செய்து, பிரமேகம், உட்சூடு முதலிய மேற்கூறிய நோய்களுக்கு ஒன்று முதல் இரண்டு வராகனெடை கொடுக்கத்தீரும்.

இதை எடுத்துச் சுத்தி செய்து பச்சையாக இடித்து, உலர்த்தி மா வெடுத்துக் கஞ்சிகாய்ச்சிக் குடிக்கலாம்.

இது செம்பைச் சுத்தி செய்யும்.

---

## கொத்தவரை—Koth - thavarai

**வே - பெ.—சீனியவரை.**

**Dolichos Fabæformis.**

**ப - உ.**—காய்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு.** - கார்ப்பு.

**செய்கை.** சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—இதனால் பயித்தியம், கபம், வாதக்கடுப்பு இவையுண்டாகும். பித்தத்தால் நளிரையகற்றும், மருந்தை முறிக்கும்.

கொத்தவரைக் காய்பித்தங் கூடாது பத்தியத்தில்
மெத்தெனவும் ஐயம் விளைக்குங்காண்—பித்தத்தால்
சீதம் அகற்றுமென்பார் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் குடைச்சல்தரு மால். (அ.கு.)

**வ - கு.**—இதைச் சமைத்துத் தின்பதனால் மேற்கூறிய கெடுதிகள் உண்டாகும்.

## கொத்தான்—Koth-thán.

Cassytha filiformis-Luin

| | | | |
|---|---|---|---|
| Tel. Pauchi tiga పాంచి తీగ. | | Sans. Akás-vall आकाशवल्ली | |
| Mal. Akása-valli ആകാശവള്ളി. | | Hind. Amarbeli * امار بيل | |

இது வங்காள முதல் கிழக்கரை வழியாகத் தெற்கே திருவிதாங்கூர் வரையிலும் வளருகின்ற ஒருவகைக் கொடி.

ப - உ.—சமூலம்.

**சுவை.**—குழகுழப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனுல் ஒழுக்குப்பிரமேகம், மூத்திரக்கிரிச்சரம், பித்தநோய், அயர்ச்சி ஆகிய இவை நீங்கும்.

சித்த ரறிவார் செறிகுழலே! நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டகாற்—சுத்தப்
பிரமேகம் உட்கிரிச்சம் பித்தம் இளைப்பும்
அறுமே தவரு தறி. (அ.கு.)

**வ - கு.**—கொடியைக் கஷாயமிட்டுச் சாப்பிட வயிற்றின் கோளாறுகளைக் கண்டிக்கும், சிறு குழந்தைகளுக்குண்டாகும் கணை முதலிய வியாதிகளைக் குணமாக்கும்.

கொடியை உலர்த்திப் பொடித்து நல்லெண்ணெயில் சேர்த்துக் காய்ச்சித் தலைக்குப் பூசினுல் மூடிகறுத்துச் செழித்துவளரும்.

இத்தூளோடு சிறிது வெண்ணெயும், இஞ்சிச் சாறும் சேர்த்து குழைத்துப் புண்களுக்குத் தடவலாம்.

இதன் சாற்றுடன் சிறிது சருக்கரை சேர்த்துக் கண்ணேயக்குப் பூசலாம்.

இதன் சாற்றை அல்லது கஷாயத்தை உட்கொண்டுவரத் தேகபுஷ்டியுண்டாகும். இந்திரியம் கட்டும்.

---

## கொத்துமல்லி—Koththu-malli.

வே . பெ.—உருள் அரிசி, தானியா.

Coriandrum Sativam.

Eng.—Coriander seeds.

| | | | |
|---|---|---|---|
| Tel. Kotimiri కొతిమిరి. | | Sans. Kustumbari कुस्तुंबरी; Dhanyaka धान्याकम् | |
| Mal. Kotta-malli കൊത്തമല്ലി.; Kottam-pálari കൊത്തമ്പാലരി. | | Arab. Kuzbarah * خص بره | |
| | | Pers. Kashniz * كشنيز | |
| Kan. Kottamari-bíjá ಕೊತ್ತುಮರಿ ಬೀಜಾ. | | Hind. Dhanyá * دهنيا | |

இது சிறு செடி வருக்கம். இதன் விதைக்காக இந்தியாவின் சருவ பாகங்களிலும் பயிரிடப்படுகின்றது.

**ப - உ.**—இலை, விதை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்**- சீத வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- அகட்டுவாய்வகற்றி - கர்ப்பவாதஹரகாரி - **Carminative.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவிர்த்தநி - **Duretic.**

**குணம்.**

**விதை.**—இதனால் உட்சூடு, நளிர்ச்சுரம், பயித்திய ரோகம், அசீரணம், வாந்தி, விக்கல், நாவறட்சி, க்ஷீணசுக்கிலம், பெரும் ஏப்பம், கர்த்தபி விரணம் போம்.

கொத்துமல்லி வெப்பம் குளிர்காய்ச்சல் பித்தமந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டம்—கத்தியெழும்
வாந் விகாரமடர் வன்கர்த் தபிவிரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று. (அ.கு.)

**கீரை.**—இதனால் வாத அரோசகம், பித்தவருக்கம், பித்தசுரம் இவை போம். வன்மையும் சுக்கில விருத்தியும் உண்டாகும்.

கொத்துமல்லிக் கீரையுண்ணிற் கோரவ ரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண்—சத்துவமாம்
வெச்செனவே போகம் விளையுஞ் சுரந்தீருங்
கச்சுமுலை மாதே ! நீ காண். (அ.கு.)

**வ - கு.**—இலை இரசத்தைப் பிழிந்து தடவ, பித்தத்தழும்பு, இரத்த ரோகம் இவை நீங்கும்.

இதனிலையை எண்ணெய் விட்டுவதக்கி, வீக்கம் கட்டிகளுக்குக் கட்டச் சீக்கிரம் கரைந்துபோகும் அல்லது பழுக்கும். இலைக் கொழுந்தை அரைத் துத் துவையலாக அருந்தலாம்.

விதையை வாலையிலிட்டு வடித்து எண்ணெய் எடுக்கலாம். இவ் வெண்ணெயை, வயிற்றுப்பொருமல், அக்கினிமந்தம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

அளவு 1 முதல் 4 துளி.

**விதை.**

விதையை வறுத்துச் சாப்பிட உதிரபேதி அசீரணபேதியும், காடியிற் சேர்த்துக் குடிக்கச் சாராய வெறியும் ; சோம்புடன் கூட்டிச் சாப்பிட, ஏப் பமும் நீங்கும். இருதயம் வலிவு பெறும்.

**அளவு.**— விதைத்தூள் 10 குன்றி முதல் 30 குன்றி.

சந்தனத்துடன் அரைத்துப்பூசப் பித்தத் தலைவலியும், தனியாய் அரைத் துப் பற்றிட, தலைவலி, மண்டையிடி (கபால சூலை) முதலியனவும், அரைத் துக் களிறி (poultice) க்கட்ட, நாட்பட்ட விரணம், பிளவை முதலியன வும் நீங்கும். கஷாயமிட்டுக், கொப்புளிக்கத் துத்திரோகம் போம். கஷாய மிட்டுச் சருக்கரை, பால் சேர்த்துக் குடிக்க இரத்தமூலம் நீங்கும்.

சீதக் கஷாயமிட்டுக் குடிக்கக் குழந்தை மாந்தம் போம்.

கொத்துமல்லி, சந்தனம், நெல்லிவற்றல் சமவெடை சேர்த்து, நீரில் ஊறவைத்துக் கொடுக்கத் தலைசுற்றல் நீங்கும்.

இதை யூநாநி வைத்தியர்கள், ஊறல் கஷாயம் செய்து பிரசவித்த பெண்களுக்கு ஆரோக்கியம் பெறும்பொருட்டுக் கொடுப்பார்கள்.

விதையைக் கஷாயமிட்டு நன்றாய் ஆறியபின், கண்ணின் விரணங்களைக் கழுவிவரச் சுகமாகும்.

விதையை வாயிலிட்டு மெல்ல, வாய் நாற்றம் நீங்கும்.

---

## கொய்யா. Koyya.

Psidium Guyava.

Eng.—Guava tree.

| | |
|---|---|
| Tel. Koyya - pandu. కొయ్య పండు. | Sans. Perala. पेरला |
| Mal. Pera. പേര. | Hindi. Lal sufrium. * لال سفريون |
| Kan. Perala Goyya. ಪೇರಳೆ ಗೊಯ್ಯ. | |

இது இந்தியா முழுவதும் பயிராகும் சிறுமரம். இதன் பழம் மிகவும் உருசிகரமுள்ளதாகையால் தோட்டங்களில் வைத்துப் பயிரிட்டு வளர்க்கிறார்கள். இதில் இருவகையுண்டு.—(1) **வெள்ளைக்கொய்யா,** (2) **சிவப்புக் கொய்யா.** இவ்விரண்டுவித மரங்களின் செய்கை, குணம் முதலியன ஒன்றேயாகும்.

**ப - உ.**—இலை, பழம், பட்டை, வேர்.

**இலை வேர்.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**இலை, பட்டை வேர்.**

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- **பழம்.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனால், முத்தோடம், தலை மயக்கம், அரோசகம், மந்தம் வாந்தி, வயிற்றுப்பல், கரப்பன் உண்டாகும்; வீரியம் பெருகும்; மலம் கழியும்.

திரிதோஷம் சென்னித் திருப்பம் அரோசி
பொருமந்தம் வாந்தி பொருமல்—கரப்பானும்
மெய்யாய்ப் பரவுமலம் மெத்தவிடும் போகமுண்டாங்
கொய்யாப்பழத்தினற் கூறு. (அ.கு.)

**இலை.**

**வ - கு.**—இலையைக் கஷாயம் செய்து வாந்திபேதிக்குக் கொடுக்கலாம். வாந்தியையும் பேதியையும் கண்டிக்கும்.

கருணைக்கிழங்கின் காறல் நீங்க இதன் இலையை, அவரையிலைக்குப் பதிலாகச் சேர்த்து வேகவைக்கலாம்.

இலையை வாயிலிட்டு மென்றால் பல்வலி சாந்தமாகும்.

இதிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கிறார்கள்.

இலைக்கொழுந்து, அசீரணத்தைக் கண்டித்து குடலுக்கு வலுவைத் தரும்.

**பழம்.**

பழம் நாவிற்கு உருசியானது. தின்றால் மலம் இளகும்.

பழத்தைச் சருக்கரை சேர்த்துக் காய்ச்சிக் கிளறி உணவிற்குச் சேர்க்கலாம்.

கொய்யாப்பிஞ்சைக் கஷாயமிட்டு அதிசாரத்துக்குக் கொடுக்கலாம்.

பழத்தைத் தண்ணீரில் ஊறவைத்து, அத்தண்ணீரைத் தாக சாந்திக்காகக் கொடுக்கலாம்.

**பட்டை, வேர்.**

இவைகளில் ஏதாவதொன்றை கஷாயம் செய்து கொடுக்கக் குழந்தைகளின் அதிசார பேதி நின்றுபோகும். **செய்முறை**— பட்டை அல்லது வேர் 1 பலம், நீர் 12 பலம் சேர்த்துக் கஷாயமிட்டு, ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரவும். மேற்படிக் கஷாயத்தை ஊழி நோயிலுண்டாகும் வாந்திக்கும் கொடுக்கலாம்.

இக்கஷாயத்தைக் குழந்தைகட்குத் தோன்றும் அடித்தள்ளலுக்குக் கழுவலாம். இதையே அழுகிய விரணங்களுக்கும், வாய் விரணங்களுக்கும் உபயோகித்துச் சுகம் பெறலாம்.

வெள்ளைக் கொய்யாவின் வேர்ப்பட்டை ½ பலம், நீர் 8 பலம், இதைப் பாதியாகச் சுண்டவைத்து வடிகட்டி தேக்கரண்டி வீதம் குழந்தைகளுக்குக் காணும் பேதியைக் கட்ட உள்ளுக்குக் கொடுக்கலாம்.

அதிசாரத்துக்கு இக்கஷாயத்தைக் கொண்டு வஸ்தி செய்யலாம்.

---

## Kollu. கொள்ளு.

**வே - பெ. காணம், முதிரை.**

**Dolichos biflorus.**

**Eng.—Horse gram.**

**Tel.** Ulavalu. ఉలవలు.

**Mal.** Muthira. മുതിര.

**Kan.** Huruli ಹುರುಳಿ.

**San.** Kulatha. कुलुत्थम्

**Hind.** Kulthee. * کلتهی

**Arb.** Hubbul khilth * حب القلت

இச்சிறு கொடி இந்தியா முழுமையும் பயிராகிறது. இதில் **நாட்டுக்கொள்ளு, காட்டுக்கொள்ளு** என இரண்டு வகையுண்டு. இதில் **கருமை, செம்மை, வெண்மை,** என மூன்றுவகையுண்டு. **பேய்க்கொள்ளு** என வேறொரு சாதியுமுண்டு.

**ப - உ.**— விதை, சமூலம்.

**சுவை** — துவர்ப்பு, சிறுகைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent. / சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic. / உரமாக்கி - பலகாரி - Tonic. }

**குணம்.**—இதனால் பீசவாயு, பித்தகுன்மம், பயித்தியம் இவையுண்டாகும். நீரேற்றமும், நளிர்ச்சுரமும் போம் உட்கொள்ளும் மருந்தை முறிக்கும்.

குடல்வாதங் குன்மமுண்டாங் கொள்மருந்தோ நாசம்
அடல்எறு பித்தமிக ஆகும்—கடுகடுத்த
வாதநீ ரேற்றமொடு மன்னுகுளிர் காய்ச்சலும்போகுஞ்
சாதிநறுங் கொள்ளுக்குத் தான். (அ.கு.)

**கஞ்சி.**

கொள்ளும் அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியைக் குடித்துவந்தால், அதிகபசி, தேகபலம், வீரியவிருத்தி இவையுண்டாகும்.

கொள்ளுந்தண் டுலமுமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனத்தைக் கூறுவதோ—எள்ளை
நசிக்கிப் பிழிபலமு நல்விந் துவுமே
வசிக்குங் கிழவர்க்கும் வை. (அ.கு.)

**கொள்ளுச்சாறு.**

சூடான கொள்ளுச்சாற்றால், சுட்கித்த தேகம் பருக்கும், ஸ்தம்பம்போல் உரக்கும், வாததோடம், பித்தகோபம், கிரகணீ, குன்மம், சுரம், ரூட்சை, சுவாசகாசம், விழியைப்பற்றிய விரணம் முதலிய சில நோய்கள், ஜலதோடம் ஆகிய இவைகள் நீங்கும்.

வற்றிய உடம்புதூணும் வாதமும் பித்துங்குக்கி
சுற்றிய கிராணிகுன்மங் சுரம்பல சுவாசகாசம்
உற்றடர் கண்ணின்புண்ணோ டுறுபிணி யொழியும்வெப்பைப்
பெற்றிடு காணச்சாற்றாற் பெருஞ்சல தோடம்போமே.

(அ.கு.)

**வ - கு.**—சமூலத்தைப் பிழிந்து ஒரு தோலா சாறெடுத்து, அத்துடன் ¼ தோலா காசுக்கட்டி சேர்த்துக் குழைத்து, தினம் 3 வேளை கொடுத்து வர, அதிசாரம் நீங்கும்.

10 பலம் கொள்ளு, நாலு அல்லது ஐந்து முந்திரிப்பருப்பு இவைகளைச் சேர்த்து 1 சேர் நீர்விட்டுக் காய்ச்சி கஷாயமிட்டு, இரத்தபேதிக்குக் கொடுக்கலாம்.

1 பங்கு கொள்ளுக்கு 10 பங்கு நீர்விட்டு அத்துடன் 10 குன்றி இந்துப்புச் சேர்த்துக் கஷாயமிட்டுக்கொடுக்க இருமல், உள்ளுறுப்புகளிற் சேருகின்ற கற்கள், இவைகளைப் போக்கி, அதிதூல ரோகத்தைக் குறைக்கும்.

1-க்கு 10 நீர்விட்டு உண்டாக்கிய கஷாயத்தை, பிரசவ அழுக்கு நீங்க உள்ளுக்கும் உபயோகிக்கலாம். மேலும் ஸ்திரீகளுக்குக் காணும் வெள்ளை, கருப்பாசயக் கோளாறுகள் முதலியவைகளும் இக்கஷாயத்தினால் நீங்கும்.

இக்கஷாயத்தோடு பெருங்காயம், சுக்கு முதலியவையும் சேர்த்துச் சாப்பிட குன்மம் குணமாகும். விதையைத் தூள் செய்து மேலுக்குத் தடவிவர வியர்வை நீங்கும்.

கருங்கொள்ளை காவிக்கல், காந்தக்கல் புற்றுமண் முதலியவைகளோடு சேர்த்து முட்டை வெண்கருவினால் அரைத்து ஆனைக்காலுக்குப் பற்றிடலாம்.

இது வீக்கம், கட்டி முதலியவைகளுக்கும் வெளிப்பிரயோகமாய் உபயோகப்படும்.

## கொள்ளுக்காய்வேளை. Kollukkaivelai.

வே - பெ.—காய்வேளை.

Galega Purpurea.

Eng.—Purple Tephrosiaea.

Tel. Vempali. వెంపలి. Pampara chettu. వంపర చెట్టు.

Mal. Kozhinnila. കൊഴിഞ്ഞില.

Kan. Kaggi. ಕಗ್ಗಿ.

Sans. Puleehashtree. पुलीहस्ती

Hind. Sarphāokā. * سرپھونکا

Duk. Jangli - kulthi. جنگلی کلتھی *

இது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய செடி - இது கடினபூமியில் அதிகமாயுண்டாம். வேரோடு பிடுங்குகிறது கடினமாயிருக்கும். இதில் மூன்று வகையுண்டு:—

கொள்ளுக்காய் வேளை.

பூனைக்காய் வேளை Galega Villosa.

முட்காய் வேளை Galega Spinosa.

இவைகள் ஒன்றுக்கொன்று அதிக வித்தியாசமின்றி குணத்திலும் செய்கையிலும் ஒன்றுபட்டே இருக்கும்.

**ப - உ.**—இலை, விதை, வேர், வேர்ப்பட்டை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்திரவர்த்தநி - Diuretic.
சிக்கறுக்கி - சோபநாசநி - Deobstruent.

**விதை.**

குடற்புழுவகற்றி - கிருமிநாசநி - Anthelmintic.

**வேர்.**

உடலுரமாக்கி - இபனகாரி - Nutritive.

### கொள்ளுக்காய் வேளை.

**குணம்.**—இதனால் வாதாதிக்கமும் நாவறட்சியும் தந்தமூல நோயும், சொல்லுமடியச் செய்கின்ற கபமும் போம்.

வாதமிக்க தென்பார்க்கும் வாய்வறட்சி யென்பார்க்கும்
மீதுவந்த மூலநோ யென்பார்க்கும்—ஓதுமுற்ற
சொன்னுக்கா தாகபம் தோற்றியதென் பார்க்குமொரு
கொள்ளுக்காய் வேளைதனைக் கூறு. (அ.கு.)

### முக்காவேளை.

**குணம்.**—இதனால் மார்புநோய், நெஞ்சிற் கோழைகட்டல், சுவாச காசம், வெப்பம், வீக்கம், நெறிக்கட்டி இவைகள் நீங்கும். மேலும், அதிசாரம், வயிற்றுநோய், குன்மம், இரத்தமூலம், மந்தாக்கினி, நாவறட்சி, சந்நதசுரம், அன்னத்துவேடம் இவையும் போம்.

தாகாதி மந்தமதி சார மதிவறட்சி
போகாச் சுரந்தாபம் போக்கமருந்—தேகையிற்
சிக்காவே ளைப்பதத்தைத் தின்னச்செய் விக்கலென்றன்
மூக்காவே ளைப்பதத்தை மூன்.

### இலை

**வ - கு.**—இதன் இலை ஒரு பங்கும், கந்தக அரைப்பங்கும் சேர்த்து அரைத்துத் தயிரிற் கலக்கி உள்ளுக்குக் கொடுக்க இரத்தமூலம் குணமாகும்.

இலை இரு பங்கு, மிளகு ஒரு பங்கு அரைத்துத் தயிரிற் கலந்து கொடுக்க வெள்ளை சாந்தமாகும்.

மூக்காவேளைக் கீரையைச் சமையல் செய்து சாப்பிடுவது விட்டு வழக்கம்.

### விதை

விதை ஒரு பங்கு, நீர் 10 பங்கு, சேர்த்துக் காய்ச்சிக் கஷாயமிட்டு, குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி தினம் மூன்று வேளை வீதம் கொடுத்து வர மலக்கிருமிகள் விழும்.

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய் சொறி, சிரங்குகளுக்கு மிகவும் ஏற்றது.

### வேர்.

இதை மஞ்சளுடன் சேர்த்துப் பசுவின் பால் அல்லது கழுநீர் விட்டரைத்து நெரிக்கட்டு வீக்கங்களுக்குப் பூசிக் கட்டிவைக்கச் சுகமாகும்.

வேர் இரு பங்கு, மிளகு ஒரு பங்கு எடுத்துக் கஷாயமிட்டு பித்த சுரங்களுக்கும் கல்லீரல், மண்ணீரல். குண்டிக்காய் இவைகளின் நோய்க்கும் கொடுக்கலாம். வேர்க்கஷாயத்தை இரத்த சுத்திக்காக வேறு பற்ப செந்தூரங்களுடன் கொடுக்க மிகுந்த பிரயோசனமாகும்.

வேர்க்கஷாயத்தைக் குன்மம், நாட்பட்ட அதிசாரம் முதலிய நோய்களுக்கு கொடுக்கச் சுகமாகும். இக்கஷாயத்தையே வாய் கொப்புளிக்கவும் உபயோகிக்கலாம்.

வேரைச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து தேன் சேர்த்துக் குழப்பி விரணங்களுக்குப் பூசலாம்.

### வேர்ப்பட்டை.

இதை மிளகு சேர்த்து நன்றாய் அரைத்து உருட்டி தீராத வயிற்று நோய்க்குக் கொடுக்க நோய் சாந்தமாகும்.

வேரைப் பொடித்துச் சூரணமாக்கித் திரிகடிப்பிரமாணம் தினம் மூன்று வேளை நீரிற் சாப்பிட்டுவர விதைவீக்கம் குறையும்.

இதன் வேர்ப்பட்டை வெள்ளியைப் பற்பமாக்கும்.

---

## கொறுக்காய்ப்புளி. Korukkaip-puḷi.

**Gorcinia Cambogia.**

**Mal. Korukkappuli.** കൊറുക്കാ പ്പുളി.

இது மேற்குக் கரையோரங்களில் பயிராகும் மர வகுப்பிற் சேர்ந்தது.

**ப - உ.**—புளி.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை. { அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
செரிப்புண்டாக்கி - ஜீரணகாரி - Digestive.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணமும், வழக்கும்.**—புளியின் குணமே இதற்குமுண்டு. புளிக்குப் பதிலாக இதை உபயோகிக்கலாம்.

---

## கொன்றை—Konrai.

Cassia.

கொன்றையில் அநேக சாதியுண்டு. அவை, **சரக்கொன்றை, சிறுகொன்றை, செங்கொன்றை, கருங்கொன்றை, நரிக்கொன்றை** என ஒரு வகுப்பும்; **புலிநகக்கொன்றை, மந்தாரக்கொன்றை, முட்கொன்றை, மயிர்க்கொன்றை** என மற்றொரு வகுப்பும் உண்டு. மயிர்க்கொன்றையில் இரு பிரிவு உண்டு. ஒன்று **செம்மயிர்க்கொன்றை**, மற்றொன்று **பொன்மயிர்க்கொன்றை.**

---

## சரக்கொன்றை. Sarak-konrai.

**வே - பெ.—கொன்றை, கொண்டை, பெருங்கொன்றை, இருதமாலம், தாமம், மதலை, இதழி, கடுக்கை, ஆக்குபதம்.**

Cassia fistula.

Eng.—Indian Ladurnam, Pudding-pipe tree, Purging Cassia.

| | |
|---|---|
| Tel. Rēla - kāyulu. రేలకాయలు. | Arab. Khiyar - shanbar. خیار شنبر * |
| Mal. Konna - കൊന്ന. | Pers. Khiyar - Chanber. خیار چنبر * |
| Kan. Kakke. ಕಕ್ಕೆ. | |
| Sans. Aragvadham. आरग्वधः | Hind. Amaltas. * املتاس |

இது இந்தியாவிலும், பர்மாவிலும், சாதாரணமாய்க் கிடைக்கக்கூடிய மர வகுப்பைச் சேர்ந்தது. இதன் பூ மஞ்சள் நிறமாயும், காய் ஒன்று முதல் ஒன்றரையடி நீளமாயுமிருக்கும்.

**ப - உ.**—இலை, பூ, புளி, விதை, காய் ஓடு, மரப்பட்டை, வேர்ப்பட்டை.

### இலை

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை. { மலமிளக்கி - ம்ருதுவ்ரேசநி - Laxative.
புழுவகற்றி - க்ருமிநாசநி - Vermifuge.

**குணம்**—மலத்தைக் கழிக்கும், படர்தாமரையைப்போக்கும்.

**வ - கு.**—இலைக் கொழுந்தை அவித்துப் பிழிந்த சாற்றில் ஓர் ஆழாக்கு எடுத்து சருக்கரை கூட்டி உட்கொள்ள, கிருமி திமிர்ப்பூச்சி இவைகள் மலத்துடன் வெளிப்படும்.

இலையைத் துவையல் செய்து சோற்றுடன் கூட்டியுண்ண, மலங்கழியும்; இதைக் கடைந்தும் உண்ணலாம்.

இலையை அரைத்துப் படர் தாமரைக்குப் பூசலாம்.

## பூ

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Vermifuge.**

**குணம்.**—இதற்கு, பிரிமியம், வெட்டை, பாண்டு, காமாலை, சொறி, கரப்பான், தேமல், குடல்வலி ஆகியவை நீங்கும்.

மேலும் மலாசயக்கிருமி, மதுமேகம், குடலைப்பற்றிய நோய்களும்போம்.

மலக்கிருமி போகும் மதுநீர்க் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயும்—நிலத்திற்குள்
என்றைக்கும் வாடாத விண்டமலர்க் கொம்பே!
கொன்றைப் பசுமலரைக் கொள். (அ.கு.)

**வ - கு.**—பூவைத் தனித்தேனும், இதன் கொழுந்துடன் சேர்த்தேனும் அரைத்துப் பாலிற் கலக்கியுண்டால், பிரமியம், வெட்டை, பாண்டு, காமாலை குணமாகும்.

பூவைப் பழச்சாறு விட்டரைத்து உடம்பிற்றேய்த்துக் குளிக்கத் தேமல் சொறி, கரப்பான் தீரும்.

பூவைக் கஷாயமிட்டு உட்கொள்ள, வயிற்றுவலி, குடற்சம்பந்தமான நோய்கள் விலகும்.

இதைத் தேனூறல் செய்துகொடுக்க, மலத்தை இளக்கி வெளிப்படுத்தும். இதைக் காய்ச்சிய பாலுடன் கலந்து உட்கொள்ள, உள்ளுறுப்புகளைப் பலப்படுத்தும். மெலிந்தோர்க்கும், பாலர்கட்கும் மிகப் பலன்படும்.

## புளி.

**சுவை.**—புளிப்பு, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** நீர்மலம்போக்கி - விரேசனகாரி - **Purgative.**

**குணம்.**—இதனால் வாதப்பிரமேகம், மலபந்தம், குடல்வலி, அக்குடலைப் பற்றிய மாசு, வெப்பம் ஆகியவை போம்.

வன்மனில மேகமலக் கட்டோடு குடரின்
துன்மலி னம்வெப்புத் தோன்றுங்கால்—இன்பம்
தருதமா லப்பரிம ளத்தனத்தாய்! இந்தக்
கிருதமா லப்புளியைக் கேள். (அ.கு.)

**வ - கு.**—இது பாலர்கட்கும், கருப்பிணிகட்கும், மெலிந்தவர்கட்கும், மிக உசிதமான மலப்போக்கியாகும். இதைக் குறைந்த அளவில் பயமின்றி கொடுக்கலாம்.

புளியை நீர் ததும்பவிட்டு ஆறு மணிநேரம் ஊறவைத்து அடிக்கடி துழாவி, சீலையில் வடிகட்டி, மயனபதமாகக் காய்ச்சிக் கொள்ள, இது சுத்தமாகும். இதில் ஒன்று முதல் இரண்டு வராகனெடை வரையில் கொடுக்கப் பேதியாகும். அதிகவளவில், அஃதாவது ஒன்று முதல் இரண்டு பலம் வரையிலும் கொடுக்க நீர் நீராய்ப் பேதியாகும். அதனால் வாய்க் குமட்டலும், வயிற்றுக் கடுப்பும் பொருமலுமுண்டாகும். இக்குணத்தை மாற்ற திரிகடுகுபோன்ற சரக்குகளின் சூரணத்தைச் சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

இதை, நிலவாகைச் சூரணம் அல்லது சிவதைச் சூரணத்தோடு சேர்த்து இலேகியமாகக் கொள்ள மேற்கண்ட துர்க்குணமிராது.

இப்புளியைச் சாதாரண புளியுடன் சேர்த்து ஊறல் கஷாயமாக மதுமேக ரோகிகளுக்குக் கொடுக்க மலங்கழியும், பித்தநீர் வெளிப்படும்.

இப்புளியுடன் உப்பு, புளி, மிளகாய், இஞ்சி முதலியவைகளைச் சேர்த்துத் துவையல் செய்து இராப்போசனத்துடன் கொட்டைப்பாக்களவு கொள்ளக் காலையில் மலம் தாராளமாய் இறங்கும்.

இப்புளியை மிளகு நீராகவும் செய்து சாப்பிடலாம்.

இதை நீரிலரைத்துக் கொதிக்கவைத்துப் பூசினால், கீல்வாதம் முதலிய சகல பிடிப்புகளும் தீரும்.

இதை அரைத்து நாபியைச் சுற்றிப்பற்றிட, குழந்தைகளின் வயிற்றுப் பொருமல் நீங்கும். வயிறு கழியும்.

இத்துடன் கடுகுரோகணி, சுக்கு, வாய்விடங்கம், பெருங்காயம், படிகாரம் அல்லது வெங்காரம், பொட்டிலுப்பு அல்லது கம்பியுப்பு, கூகை நீறு சேர்த்தரைத்து அடிவயிற்றில் பற்றிட, மலசலக்கட்டு நீங்கும்.

இப்புளியுடன் குல்கந்து, கொட்டைத்திராட்சை, சோம்பு, கொத்துமல்லி விதை சேர்த்துக் கஷாயஞ் செய்து அரை முதல் ஒரு ஆழாக்கு உட்கொள்ள வயிற்றுவலி, வயிற்றுக்கடுப்பு, வாய்க்குமட்டல் முதலிய தீக்குணமின்றியும், இளைப்பு ஆயாசமின்றியும் மலங்கழியும்.

இதைத் தேனூறல் செய்தும் உபயோகிக்கலாம்.

**விதை.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { நீர்மலம்போக்கி - விரேசனகாரி - **Purgative.**
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**

**குணம்.**—வேர்ப்பட்டையின் குணம் இதற்குமுண்டு.

**காய் ஓடு.**

**வ - கு.**—இக்காயின் மேலோட்டைப் பொடி செய்து அதனோடு குங்குமப் பூவும் சர்க்கரையும் சேர்த்துப் பனி நீர் விட்டரைத்து உருண்டை செய்து, பிள்ளை பிறக்காமல் உபாத்திரப்படும்போதும், அல்லது பிள்ளை வயிற்றில் மரித்துப்போய் அவத்தையுள்ளபோதும் கொடுக்கப் பிள்ளை வெளிப்படும்.

**மரப்பட்டை.**

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { மலமிளக்கி - மலகாரி - **Laxative.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**

**குணம்.**—இதனால் பெருவியாதி, கிருமி, சூலை, வாதகபதொந்தம், மலக்கட்டு, அரோசகம் ஆகியவை போம். பேதியுண்டாகும்.

துட்டங் கிருமி பொருஞ்சூலை வாதமையம்
துட்ட மலம்அருசி தூரப்போம்—கட்டிச்
சுரக்கின்ற பேதியுண்டாம் துய்க்கத் துவர்க்கும்
சரக்கொன்றைக் காரணங்கே ! சாற்று. (அ.கு.)

**வ - கு.**—இதன் பட்டையையும் இலையையும் சேர்த்து எண்ணெய் விட்டரைத்துப் பூச, குட்டம், அழிபுண்ணுடன் கை கால் சில்லிடல், வித்திருதிக் கட்டி, பாரிசவாதமென்பவை முதலியன நீங்கும்.

இதன் பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுக்க, மலங்கழியும், **அரோசகம் தீரும்.** வாதகபதொந்தம் நீங்கித் தன்னிலைப்படும்.

### வேர்ப்பட்டை.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நீர்மலம்போக்கி - விரேசனகாரி - **Purgative.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**

**குணம்.**—வண்டுகடி, தேமல், சொறி, விடநீர் இவைகளைப் போக்கும். இதற்குக் கடின பேதியாகும் குணமுமுண்டு. சுரத்தையும் போக்கும்.

**வ - கு.**—ஒன்று முதல் நான்கு வராகனெடை வேர்ப்பட்டையை அரைத்துப் பாலில் கலந்து கொடுக்க நன்றாய் மலங்கழியும். மேற்குறித்த வண்டு கடி முதலியவையும் போம்.

---

## சிறுகொன்றை. Siru-Konrai.

### Cassia arboresens.

**ப - உ.**—இலை, பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** உரமாக்கி - பலகாரி -**Tonic.**

**குணம்.**—இம்மரப்பட்டைக்கு, கபாலச்சூட்டினாலுண்டான கண்ணோய், வெப்பம், உள்மூலம் நீங்கும், சரீர வன்மையும் அழகும் உண்டாகும்.

சிறுகொன்றை நற்கசப்பாம் சென்னி அனலால்
உறுகின்ற கண்களின்னோ யோடே—பெறுமுடலின்
உட்டினமுள் மூலமிவை ஓடும் அதிபலனும்
கட்டழகும் உண்டதனால் காண். (அ.கு.)

**வ - கு.**—இதனிலையை அரைத்து கண்களின்மீது வைத்துக் கட்ட கண்ணோய் நீங்கும்.

இதன் பட்டையில் அரைப்பலம் முதல் ஒரு பலம் வரையில் எடுத்துக் கஷாயமிட்டுக் கொடுக்க, வெப்பம் உள்மூலம் நீங்கும். சரீர வலிமையும், அழகும் உண்டாகும்.

---

## செங்கொன்றை. Senkonrai.

### Cassia Marginata.

**ப - உ.**—பூ, பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Vermicide.**

**குணம்.**—பூவுக்குக் காதுநோயும், பட்டைக்கு சுவாசகாசமும், வெண் குட்டமும் நீங்கும்.

**வ - கு.**—பூவை, நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் காதில்விட, காது நோய் நீங்கும்.

பட்டையை, அரை முதல் ஒரு பலம் எடுத்துச் சிதைத்துக் கஷாயம் செய்து கொடுக்க, சுவாசகாசமும், வெண்குட்டமும நீங்கும். **வெண்குட்டத்திற்குப் பட்டையை நீர்விட்டரைத்துப் பூசிவரக் குணப்படும்.**

## நரிக்கொன்றை—Narik-konrai.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Vermicide.**

**குணம்.**—இதனால் யானைச்சொறி, தவிட்டுக் கிருமிப் புடை, தினவுள்ள விரணப்புடை நீங்கும்.

> பையவே ஊறிப் படரும்யா னைச் சொறியும்
> நொய்யக் கிருமிகொண்ட நுண்புடையும்—மெய்யில்
> அரிக்கின்ற வன்புடையும் ஆழிபுகு மாதே !
> நரிக்கொன்றை தன்னை நவில். (அ.கு.)

**வ - கு.**—பட்டையை புளித்தநீர் விட்டரைத்துப் பூசிவர மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## மைக்கொன்றை—Maik-konrai.

**ப - உ.**—பூ, பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - அற்பவெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வாதமடக்கி - வாதஹரகாரி - **Anti-vata.**

**குணம்.**—இதனால் குடல்வாதம், சூலை, மேகம் இவைகள் நீங்கும்.

> குடல்வாதஞ் சூலை கொடுமேக மெல்லாம்
> அடைவாய்ப் போக்க வலைந்தே—படிமீதில்
> எக்கொன்றைத் தேடிநெஞ்சில் எண்ணம் இடுவானேன்
> மைக்கொன்றை இங்கிருந்து மால். (அ.கு.)

**வ - கு.**—இதன் பட்டையை அரை முதல் ஒரு வராகனெடை எடுத்துச் சிதைத்து நாலாழாக்கு நீர்விட்டு ஆழாக்குக்காகக் குறுக்கிக் காலை, மாலை அரையாழாக்குவீதம் போதுமான நாள் வரையிலும் கொடுக்க மேற் கண்ட நோய்கள் நீங்கும்.

இதன் பூவை அரைத்துக் கால் பலமெடுத்து வெண்ணெயுடன் கலந்து கொடுக்க, நாட்பட்ட மேகம் தணியும்.

**குறிப்பு.**—மற்ற விதக் கொன்றைகள் அதிக உபயோகத்தில் வழங் கப்படாமையால் ஈண்டு வரையப்படவில்லை.

---

## கோடகசாலை—Kódaga-sálai.

**வே - பெ.**—கோடாசூரி கோடாசுழி.

இது எங்கும் வெளிகளில் தன்னிச்சையாய்ப் பயிராகும் ஒருவகைப் பூண்டு.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வெற்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**

**குணம்.**—இதனால், அதிக வெப்பம், மேகம், கொப்புளம், கிரந்தி, குட்டம், புண், பித்தவாத தொந்தம், வாய்விரணம் ஆகிய இவைகள் விலகும்.

கோடகசா லேக்குக் கொடியஅனல் மேகமொடு
போடகங்கி ரந்திகுட்டம் புண்ணாறும்—நாடகஞ்செய்
யப்பித்த வாய்வு மலர்வாய் விரணமும்போம்
பொற்புற்ற பொன்னே ! புகல். (அ.கு.)

வ - கு.—இதை அரைத்து, கொப்புளம், இரந்தி, குட்டம், புண் இவைகளுக்குப் பூச அவைகள் ஆறும்.

இதன் சமூலத்தை உலர்த்தி அரை முதல் ஒரு பலம் எடுத்துக் கஷாயமிட்டுக் கொடுக்க, சுரம், மேகம், பித்தவாயு, வாய் விரணம் நீங்கும்.

---

## கோட்டம்—Kóttam.

**வே - பெ.—கோஷ்டம், குரா, ஒலி.**

Aplotaxis Auriculata. D.C.

Eng.—Costus root.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kostam | కోష్ఠము. | Sans. | Kóshtam | कोष्टम् |
| Mal. | Kóttam | കോട്ടം. | Arab. | Qusṭh | قسط * |
| Kan. | Kóshtam | ಕೋಷ್ಟಂ. | Pers. | Kósht | كُوشط * |
| | | | Duk. | Pachak | پاچك * |

இது இமயமலையின் வடமேற்குப் பிரதேசங்களில் பயிராகிறது. அத்தேசத்தவர்கள் அபினியைத் தெரிந்து கொள்ளாத காலத்தில் இதை அபினிக்குப் பதிலாக உபயோகித்துப் புகை பிடித்துவந்தனர் என்று கூறப்படுகின்றது. இப்புகையால் நித்திரையுண்டாகும். இதன் வேர் பூச்சி கடிக்காமலிருக்கவும், வாசனையுண்டாக்கவும் உபயோகப்படுகிறது.

இதில் இரு விதமுண்டு. **வெண்கோரட்டம், செங்கோட்டம்.**

**ப - உ.**—வேர்.

**சுவை.**—இனிப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத் தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதனால் கண், கபோலம் (தாடை), வயிறு, கழுத்து, தலை, நா, வாய், இவ்விடத்திலுண்டாகும் நோய்கள், சுரம், அதைப்பு, உதாவர்த்தரோகம், கம்பவாதம் (வாயு), மூலமுளை, விரணம், சுவாசகாசம், எலி, பாம்பு, தாவரம் முதலியவைகளின் விடங்கள், மேகக்கட்டி, அஜகல்லிகாரோகம், விடபாகம், 18 வகைப் பூதகணங்கள், பாலகிரகதோடம், தாது நட்டம், வெள்ளைவீழல், பயித்தியம் இவை போம். சுகப்பிரசவமுண்டாகும்.

நாட்டில்உறு வெட்டை நடுக்கம் எனுநோய்கள்
கோட்டம்எனச் சொன்னால் குலையுங்காண்—கூட்டிற்!
சுரதோடந் தொண்டைநோய் தோலாத பித்தம்
பரதேசம் போமே பறந்து. (அ.கு.)

திட்டிகவுள் அகடுகளஞ் சென்னி நாவாய்
செறிபிணிவெப் பதைப்புதா வர்த்தம் ஊதை
முட்டியெழு முளைவிரணம் சுவாச காசம்
மூடிகத்தோ டரவுமர விடங்கள் மேகக்
கட்டிஅஜ கல்லிவிட பாகம் பூத
கணம்பால கிரகமொடு தாது நட்டஞ்
சொட்டிவரு பிரமிபித்தம் இவையொ ருங்கே
தொலையும்விர ணரிக்குச் சுகப்பே ருமே. (தே.கு.)

**அளவு.**—½ முதல் 1 வராகனெடை.

**வ - கு.**—கோட்டம், தனியா இவைகளைச் சமனெடை அரைத்துப் பூச மண்டைக் குட்டம் நீங்கும். அல்லது, கோட்டத்தை அரைத்து வெண்ணெயிற் கலந்தும் பூசலாம்.

**கோட்டத்தைலம்** - இதை மூலத்துக்குத் தடவிப் புகையூட்டத் தீரும்.

**கோட்டச்சுரசம்** - இத்துடன் வசம்பு, தேன் கலந்துகொடுக்க, அபஸ்மாரம் நீங்கும்.

**கோட்டக்கஷாயம்.**—நன்றாய் நசுக்கிய கோட்டம் ஒரு வராகனெடை, வெந்நீர் அரைப்படி, இதை இரண்டு மணி நேரம் மூடி வைத்திருந்து, பிறகு வடிகட்டிக்கொண்டு, வேளைக்கு ⅛ முதல் ¼ ஆழாக்கு வீதம் தினம் இரண்டு அல்லது மூன்று முறை தக்க அனுபானத்துடன் கொடுக்க மேற்கூறிய நோய்கள் நீங்கும். இக்கஷாயத்தோடு தேன், வசம்பு இவைகள் சேர்த்துக்கொடுக்க அபஸ்மாரம் நீங்கும்.

கோட்டத்தை நாரத்தைச் சாற்றில் ஊறவைத்து உலர்த்திப் பொடி செய்து தேன் கூட்டி, முகக்குரு, வங்கு இவைகளுக்குப் பூசக் குணமுண்டாம்.

---

## கோதுமை—Kòthumai.

**வே - பெ.—கோதும்பை, யவை.**

Triticum sativum,

Triticum, vulgare. [Vill]

**Eng.—Wheat.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Gódumulu | గోధుమలు. | Sans. | Godūmam | गोधूमम् |
| Mal. | Kothampam | കോതമ്പം. | Arab. | Ḥinṭah | * حنطه |
| Kan. | Gódhi | ಗೋಧಿ. | Pers. | Gandum | * گندم |
| | | | Hind. | Géhùn | * گیہوں |

இது இந்தியாவில் பஞ்சாப், மத்திய மாகாணம், பம்பாய் இராஜதானி முதலிய விடங்களில் ஏராளமாய்ப் பயிரிடப்படுகின்றது. மேல் நாடுகளில் இது முக்கிய உணவாகக் கொள்ளப்படுகின்றது. வட இந்தியாவிலும் வங்காளத்திலும் இதுவே முக்கியமான ஆகாரம். கோதுமையில் முக்கிய பலந்தரும் சத்து 100-க்கு 86·7 பங்கு. கோதுமை அரிசி, கோதுமை நொய், கோதுமை மா இவைகளே முக்கியமாய்க் கொள்ளப்படுகின்றன.

ப - உ.—அரிசி.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**அரிசி.**

**குணம்.**—இது நல்ல பலம், சுக்கிலம், பித்தம் இவைகளை விருத்தி செய்யும். தனிவாதகோபத்தையும், பிரமேகத்தையும் நீக்கும்.

கோதுமையின் நற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்கும்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்—சேதிக்கும்
பித்தம் அளிக்கும் பிரமேகத் தைக்கெடுக்கும்
உத்தமமாம் என்றே உரை.

**கஞ்சி.**

வாதசுரம், சலதோடம், கபம், சந்நிபாதம் இவைகளை விலக்கும். தேகத்திற்கு வன்மைதரும்.

கோதுமைக் கஞ்சி கொடுஞ்சுரநீ ரேற்றமிவை
காதுமைக்குஞ் சந்நிக்குங் காதரமே—போத
வுடலுந் திடமா மொலிவண்டுங் கூற்றுங்
கடலும் பணிவிழியே ! காண்.

**அடை.**

இதனால் சரீர வன்மையும், உதராக்கினியும், சுக்கிலதாதுவும் அதிகரிக்கும். சிலேத்துமகோபம் நீங்கும்.

தேகம் பலக்கும்அதி தீபனம்உண் டாகும்நிறை
மோகம் பெருகுமைய மூர்க்கமறும்—கோகமிக
வோதி யடையும் உயர்கொங்கை மாதரசே !
கோதி யடையைக் கொடு. (அ.கு.)

**வ - கு.**—இது தானிய உணவுப் பொருள்களிலெல்லாம் சிறந்தது. இதை ரொட்டியாகவும், அடையாகவும் சுட்டு உலகத்திலுள்ள மக்களில் ¾ பாகத்தார் அருந்திவருகின்றனர். ஆகவே இதை "உயிருக்கு ஊன்றுகோல்" எனலாம்.

குன்ம வியாதியாளருக்கு, சுட்டு நாலைந்து நாளான புளித்த ரொட்டியையாவது, சுட்ட ரொட்டியையாவது கொடுக்க நன்று.

வயிற்றில் புளிப்புள்ளவர்கள், புதிய ரொட்டியையாவது, தவிட்டு ரொட்டியையாவது உணவாகக் கொள்ளலாம். அல்லது ரவைக் கஞ்சி மிகவும் ஏற்றது.

கபரோகிகளுக்கு, கோதுமைப்பால், அல்லது கோதுமைக் காப்பிப்பானம் மிகவும் குணந்தரும்.

**கோதுமைப்பால்.**—அரைக்கால் சேர் கோதுமை நொய்யை முந்தின நாளே நீரில் ஊறப்போட்டுக் காலையில் எடுத்து நன்றாய் அடித்துப் பசையாக்கிச் சுத்தமான மெல்லிய துணியால் வடிகட்டிப் பிழிந்து இரசத்தை எடுத்து உபயோகிக்கவும்.

கோதுமை நொய்க் கஞ்சியானது, சுர நோயுடையவர்களுக்கும், நோயுற்றெழுந்தோருக்கும் பெரும்பாடுடைய பெண்களுக்கும் மிகு பயன் தருவதாகும்.

கோதுமையை வறுத்துத் தேன் சேர்த்து, இசிவலி, முதுகுவலியுடையவர்களுக்குக் கொடுக்கலாம்.

கோதுமை மாவை, அக்கி, நாபிதம், நெருப்புப்பட்டவிடம், மேற்றோல் உரிந்துபோனவிடம் இவைகளில் பூசினாலும், தூவினாலும் எரிச்சல் தணியும்.

தாமிரம், இரசம், நாகம், வெள்ளி, அயோடின் (Iodine) முதலியவைகளை விடமிக்கச் சாப்பிட்டவர்களுக்கு, கோதுமை மாவை ஜலத்தில் கரைத்து உள்ளுக்குக் கொடுத்தால் விடம் முறிந்துவிடும்.

மாவைக் களிசெய்து கட்டிகளுக்கு வைத்துக்கட்டலாம்.

வியர்வைக் குருவுக்கு, இம்மாவைக் காடியிற் கலந்து பூசலாம்.

உள்ளீரல் க்ஷயநோய்களுக்கு இதன் தவிட்டை வறுத்து ஒற்றிடமிடலாம்.

மதுநீர் நோயாளிகள், கோதுமைத் தவிட்டுரொட்டி, கோதுமைஅடை இவைகளை உணவாகக் கொள்வது நன்மையாகும். ரொட்டியைப் பாலிலாவது வெந்நீரிலாவது ஊறவைத்துப் பிசைந்து கட்டிகளுக்கும், விரணங்களுக்கும் வைத்துக்கட்டலாம்.

---

## கோபுரந் தாங்கி—Gòpuram-Tàṇgi.

**Andrographis Echioides. [Nees].**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chalava-puri - kada చలవపురికాడ. | Mal. | Mala - kulukki മലകുലുക്കി. |
| | Gorre - chimidi గొఱ్ఱెచిమిడి. | Hind. | Charāyetah * چرایتہ |

இது இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் பெரும்பாலும் சுவற்றினமேலும், உயர்ந்த மேட்டுப்பாங்கான விடங்களிலும் பயிராகும் பூண்டு. இதுவங்கத்தைப் பற்பமாக்கும்.

---

## கோரை—Kòrai.

**வே - பெ.—முத்தக்காசு.**

**Cyprus Rotandus.**

**Eng.—Nut grass.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tungamuste తుంగముస్తె. | Sans | Mustá मुस्ता |
| Mal. | Muththaṇṇa മുത്തങ്ങ. | Hind. | Muthá * موتھا |
| Kan. | Tangahullu ತುಂಗಹುಲ್ಲು. | | |

இது, இந்தியாவில் எல்லாச் சமபூமிகளிலும் வளருகின்ற ஒருவகைப் புல்லினம். இதன் கிழங்கிற்குக் கோரைக்கிழங்கு என்று பெயர். கோரையில் பல இனமுண்டு.

இவைகளில் **சிறுகோரை, பெருங்கோரை,** என்பன முக்கியமானவை. சிறுகோரையில் கிழங்குகளுண்டு. பெருங்கோரையில் கிழங்குகள் கிடைப்பதில்லை.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- புழுவகற்றி - க்ருமிநாசநி - Vermifuge.

**குணம்.**—இதனால் நளிர்ச்சுரம், இரத்தபித்தம், வாதசுரம், பேதி, பயித்தியதோடம், பித்ததாகம், கபரோகம், குதிக்காலைப் பற்றிய வாயு, மூர்ச்சை, திரிதோட வாந்தி ஆகிய இவைகளும், துன்பத்தைத் தருகின்ற சிற்சில ரோகங்களும் போகும்.

சீத சுரந்தீர்க்குஞ் செம்புனல்பித் தம்போக்கும்
வாத சுரந்தணிக்கும் வையகத்தில்—வேதைசெய்ய
வந்த பிணியையெல்லாம் வாட்டுமுத் தக்காசு
கொந்துலவும் வார்குழலே ! கூறு.

அதிசாரம் பித்தம் அனற்ருகம் ஐயங்
குதிவாதஞ் சோபங் கொடிய—முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தாலும் அவ்வவர்க்கெ லாங்குளத்துக்
கோரைக் கிழங்கைக் கொடு. (அ.கு.)

**வ - கு.**—கோரைக் கிழங்கின் கஷாயத்தை அதிசாரம், சீதபேதி, குன்மம், வாந்தி, பேதி முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

இஞ்சி, சுத்திசெய்த கோரைக்கிழங்கு இவ்விரண்டையும் இடித்துத் தேன் விட்டரைத்து ஒரு சிறு சுண்டைப் பிரமாணம் கொடுக்க, சீதபேதி குணமாகும். இதையே அளவில் சிறிது அதிகப்படுத்திக் கொடுக்க மலப் புழுவைக் கொல்லும்.

பச்சைக் கிழங்கை அரைத்து மார்பில் பற்றிடப் பால் அதிகமாய்ச் சுரக்கும். தேட்கடிவாயிலும் பற்றிடலாம். உடலில் பூசிவர, வியர்வை நாற்றம் விலகும்.

கோரைக் கிழங்கு, பேய்ப்புடல், திரிபலை, திராட்சை, வேம்பு, வெட்பாலை இவைகளை வகைக்குக் கால் பலமெடுத்து முறைப்படிக் கஷாயமிட்டுக் கொடுக்கச் சுரம் நீங்கும்.

அபினி, கஞ்சா முதலிய விடமித்தலுக்குக் கோரைக்கிழங்கு, இலைக்கள்ளி வேர், வசம்பு, சுக்கு இவைகளை வகைக்குக் கால் பலம் எடுத்து, முறைப்படிக் கஷாயமிட்டுக் கொடுக்கலாம்.

குழந்தைகளின் சீதசுரத்திற்குக் கோரைசேர்ந்த சூரணம் பயன்படும். இதைப் பால வாகடத்தில் காண்க.

**கோரைக்கிழங்கு ஸ்நான நீர்.**—கோரைக்கிழங்கு, திரிபலை, மருக்காரை, புங்கு, கொன்றை, வாலுழுவை, வாற்கோதுமை, எழிலைப்பாலை, கோஷ்டம், ஞாழல், மரமஞ்சள், வெண்கடுகு இவற்றைக் கஷாயமிட்டு, நீராடிவரக் குஷ்டம், சொறி, வீக்கம், பாண்டு ரோகம் நீங்கும்.

கோரைக்கிழங்கு, சீந்தில், மரமஞ்சள், அன்னபேதி, கோஷ்டம், வெள்ளிலோத்திரம், கந்தகம், சாம்பிராணி, வாய்விடங்கம், மஞ்சேசிலை, தாளகம், அலசிப்பட்டை இவற்றைப் பொடித்து, தேகத்தில் எண்ணெய் தடவி, அதன்பின் மேற்படிச் சூரணத்தைத் தேய்க்க, சருமப்படை, சிரங்கு நீங்கும்.

### கோரைப்பாய்.

இது சிறு பெருங்கோரைகளால் செய்யப்படும்.

**குணம்.**—இதிற் படுக்க அக்கினிமந்தம், சுரவேகம் நீங்கும். தேகக் குளிர்ச்சியும் சுகநித்திரையும் உண்டாகும்.

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மந்தமறும்
கூரிய தேகங் குளிர்ச்சியுறும்—வாருலகில்
நன்னித் திரைகூடு நாடாது ரூட்சையிதை
யுன்னிப் புவியி லுரை. (அ.கு.)

---

## கோவை—Kòvai.

**Coccinia Indica.**
**Cephalandra Indica.**

Tel. { Bimbiká బింబిక. / Donda దొండ.
Mal. Kova കോവ.
Kan. Tondē - ballie ತೊಂಡೆಬಳ್ಳಿ.
Sans. Bimbi बिंबी
Arab. } Pers. } Kabare-hindí كبار هندى *
Hind. Kandurí-kí-bél كندورى كى بيل *

இது கொடியினம். இந்தியாவில் எங்குங்கிடைக்கும். இதில் **இனிப்பு, கைப்பு** என இருவகையுண்டு. **கருங்கோவை** என மற்றொரு இனமுமுண்டு. கோவையிலையின் உருவத்தையும் நிறத்தையும் கொண்டு **மூவிரல்கோவை, ஐவிரல்கோவை, நாமக்கோவை** என மூன்றுவித சாதிகளாகப் பிரித்திருக்கிறார்கள்.

**ப - உ.**—இலை, காய், வற்றல், தண்டு, கிழங்கு.

### இனிப்புக்கோவை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு,

### கைப்புக்கோவை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

### பொது.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.

**இலை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

### இலை.

**குணம்.**—இதற்குக் கண் குளிரும், இருமல், வாதகோபம், பெருவிரணம், சிறுசிரங்கு, தேகச்சூடு, நீரடைப்பு இவைபோம்.

கண்ணுங் குளிர்ச்சிபெறுங் காசமொடு வாயுவறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும்—நண்ணுடலம்
மீதிலார் வெப்பகலும் வீழாநீர்க் கட்டேகுங்
கோதிலாக் கோவையிலைக்கு. (அ.கு.)

**வ - கு.**—இலையைக் கொதிக்கின்ற வெந்நீரிலிட்டு 15 நிமிடங்கள் சென்றபின் வடிகட்டி, வேளைக்கு ஒரு பலம் வீதமாகவாவது, அல்லது இலையை உலர்த்திப் பொடிசெய்து திரிகடிப் பிரமாணமாகவாவது கொடுக்க, மேற்சொன்ன பிணிகள் தீரும். அன்றியும், இரசவேக்காடு சாந்தமாகும்.

இதன் சாற்றுடன் வெண்ணெய் சேர்த்துச் சிரங்குகளுக்குப் பூசலாம்.

இலையை எண்ணெயில் கொதிக்கவைத்துப் படை, சொறி, சிரங்கு, கொடியவிரணம் இவைகட்குப் பூசலாம்.

இதன் இரசத்தை, வியர்வை உண்டுபண்ணுவதற்கு உடலில் பூசுவது முண்டு.

**காய், வற்றல்.**

**குணம்.**—காயால், அருசி, நீங்காத வெப்பம், சுரகபதோடம் இவை போம். வற்றலால், அரோசகமும், கரப்பானும் நீங்கும்.

வாயின் அரோசகம்போம் மாரு அழலைஅறும்
நோயிற் கபம்அகலும் நுண்ணிடையே !—தூயஅதன்
வற்றற் கருசி மருவுகரப் பான்போகுஞ்
சுத்தக்கோ வைக்காயைச் சொல். (அ.கு.)

**வ - கு.**—இளங்காயை வாயிலிட்டு மென்று துப்ப, நாக்கின் விரணங்கள் நீங்கும். காயைச் சமைத்துச்சாப்பிட அருசி, வெப்பம் நீங்கும். இதை ஊறுகாய் செய்தும் சாப்பிடலாம்.

வற்றலை எண்ணெய் அல்லது நெய்யில் வறுத்துச் சாப்பிட, அரோசகம் கரப்பான் தீரும்.

**கிழங்கு.**

**குணம்.**—இதனுல், திரிதோஷம் சந்திகளின் குத்தல், பித்தகோபம், சருமதலகுட்டம், நாரோகம், இரைப்பு, கோழை, மதுப்பிரமேகம் இவைகள் நீங்கும்.

முத்தோடம் சூலைபித்தம் மூடுகுட்டஞ் சிக்குவைநோய்
எத்துசுவா சங்கபம்இ ளிப்புநீர் —இத்தனையுங்
கூட்டோ டகற்றுங்கு ளிர்ச்சியொடு காரத்தைக்
காட்டியகோ வைக்கிழங்கு காண். (அ.கு.)

**வ - கு.**—கிழங்கின் சாற்றை ஒரு உச்சிக்கரண்டி முதல் மூன்று உச்சிக் கரண்டிவரைக் கொடுக்க, மதுப்பிரமேகம், சருமதலக்குட்டம், முதலியன தீரும்.

கிழங்கின் சாற்றை மதுப்பிரமேகத்தில் மருந்துகளுக்கு அநுபானமாக உபயோகிக்கலாம்.

இதன் தண்டு அல்லது கிழங்கைக் கஷாயமிட்டுக் கொடுக்க நீர்க் கட்டையுடைத்து நீரை வெளிப்படுத்தும்.

---

## கௌரிவாற்புல்—Gowrivál-pul.

இது தோட்டவேலிகளில் பயிராகும் ஓர்வகைப் புல். நிரம்பிய சுணையுடையது. இதன் கதிர் நீண்டுநிற்கும். இதிலும் சுணை அதிகம். இதைச் சிறு பிள்ளைகள் விளையாட்டுக் காலங்களில் இதன் கதிரைக்கொண்டு தலைமயிரில் அணியக்கூடிய ஆபரணங்களைப்போல்செய்து அணிந்துகொள்வார்கள்.

**வ - கு.**—இதன் சாற்றினுல் பாதரசம் மடியும்.

அறிவுள்ளோார் இக்குறிப்பைக்கொண்டு அரிய காரியத்தைச் செய்யக் கூடும்.

## சங்கன்—Changan.

**வே - பெ.—சங்கஞ்செடி, நற்சங்கன், முட்சங்கன்.**

**Azima Tetracantha.**

**(Monetia Barlerioides.)**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | Tella-upi | తెల్లుప్పి. | **Sans.** | **Kundali** | कुण्डली |
| **Mal.** | Changan | ചങ്ങൻ. | **Hind.** | **Kálangúr-kamai** | کالنگور کامی * |

இது இந்தியாவின் தென்பாகத்திலும், கிழக்கரை யோரங்களிலும், இலங்கையிலும் பயிராகும் ஒருவகை முட்செடி. இலை தடித்தும் இலை நுனியில் முள்ளுமிருக்கும்.

**ப - உ.**—இலை, வேர், பால்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வெப்பமுண்டாக்கி - உத்தேஜககாரி - Stimulant.
- துவர்ப்பி - சங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- முறைவெப்பகற்றி - முறைஜ்வரநிரோதி - Antiperiodic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—இதன் இலைக்கும் வேருக்கும் சோபை, கரப்பான், வெப்பம், மந்தி, குன்மம், இசிவீக்கம், வாதகோபம், பித்தநோய், பலவிடம் இவை நீங்கும்; அன்ன நாலக்கமும், மிகுபசியும், இரத்த விருத்தியும் உண்டாகும்.

வீக்கம் கரப்பான் விதாகம் இரந்திகுன்மம்
ஊக்கமிகு சூலைவாய் வோடுபித்தந்—தாக்குவிடம்
வீறுமோ கண்துலங்கும் வீசுபசி ரத்தமுண்டாம்
கூறுசங்கம் வேர்இலை கட்டு.

(அ.கு.)

இதன் வேர்ப்பட்டைக்குக் கோழை, இருமல், கபச்சுரம், வாதக்கடுப்பு, கப அடைப்பு, பங்கவிசர்ப்பி, உட்சுரம், தனிவாதகோபம், கிருமி ஆகியவை போகும்.

சங்கம்வேர்ப் பட்டை சலியிரும லைச்சுரத்தை
அங்கவா தக்கடுப்பை ஆடதைப்பைப்—பங்கமே
செய்யுங் கிரந்தியையுள் தீகால் கிருமியையிவ்
வையந் தனிலொழிக்கு மால்.

(அ.கு.)

இதன் வேர்ப்பட்டைப் பாலுக்கு வீக்கம், நீரேற்றம், சுரவேகம் ஆகியவை நீங்கும்.

"சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கும் நீர்வடிக்கும்
அங்குசுர வெப்பகற்றும் ஐயமில்லை."

(அ.கு.)

### இலை.

**வ - கு.**—இலையின் கஷாயத்தை வாதரோகிகளுக்கு வழங்கிவரலாம். இலையை அரைத்து வைசூரியினாலுண்டான புண்களுக்குப்பூசக் குணமாகும். கரப்பான், கிரந்திகளுக்கும் பூசலாம்.

இதன் இலையும், வேப்பிலையும் சமபாகஞ் சேர்த்தரைத்துச் சிறுபுன்னைக் காயளவு பிரசவமான நாள் முதல் ஏழு நாள் வரையில் தினம் இருவேளை கொடுத்துப் பத்தியம் வைக்கப் பிரசவ மலினம் நீங்குவதுடன் இதர நோய்கள் அணுகாது.

இதன் இலைச்சாறு கோழையை வெளிப்படுத்தும், இருமலைத் தணிக்கும்.

### வேர்ப்பட்டை.

வேர்ப்பட்டையை இடித்துப் பிழிந்த பாலை ஒன்று அல்லது ஒன்றரைப் பலமெடுத்து, அதற்கிருமடங்கு வெள்ளாட்டுப்பால் சேர்த்துக் கொடுத்துவர, சிறுநீரைப் பெருக்கித் தள்ளுவதுடன் சோபை, வாதவீக்கம், சுரவெப்பம் இவைகளைப் போக்கும்.

வேர்ப்பட்டையை யரைத்துப் பூசிவர வாதக்கடுப்பு, சிலேத்தும வீக்கம் போம்.

இதைக் கஷாயமிட்டுக் கொடுத்துவர முறைச்சுரம், கிரவீக்கம், வாத - பித்தகோபம், பல்விடம், கோழை, இருமல், கபச்சுரட், பக்கவிசர்ப்பி, உட்சுரம் தணியும்.

இதன் வேர், இதர சரக்குகளோடு பற்பல குடிநீர், சூரணங்களுடன் சேரும்.

## சடாமாஞ்சி—Jadámánji.

**வே. பெ.—சடாமாசி, ஜடமாஞ்சி, பைசாசி, சடிலை, மாமிசி, பூதகேசினி.**

**Valerinæ Rhizoma.** **Nardostachys Jatamansi.**

**Eng.—Valerian root.**

| சீமைச்சடாமாஞ்சி. | | | நாட்டுச்சடாமாஞ்சி. | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Jadamamsi** | జడామాంసి. | **Tel.** | **Jaṭámámṣhi** | జటామాంశి. |
| **Mal.** | **Manji** | മാഞ്ചി. | **Mal.** | **Jeṭá-mánchi** | ജടാമാഞ്ചി. |
| **Sans.** | **Jatamamsi** | जटामांसी | **Kan.** | **Jeṭá mávaṣhí** | ಜಟಾಮಾವಶೀ. |
| **Arab. Pers** | **Sumbuluṯṯíb** | سنبل الطيب * | **Arab. Pers.** | **Sumbuluṯṯibe-hindi** | سنبل الطيب هندى * |
| **Hind.** | **Viláyati-Jatámásí** | ولايتى جٹاماسى * | **Hind.** | **Jatámási** | جٹا ماسى * |
| **Duk.** | **Viláyatí-Jhaṭámánsí** | ولايتى جهٹامانسى * | **Duk.** | **Jhaṭá-mánsí** | جهٹا مانسى * |

சீமை இனம்—வட ஆசியா, வட காஸ்மீரம், சிந்து, பர்மா, இலங்கை முதலிய விடங்களிலும் ; நாட்டு இனம்—இமயம், காஸ்மீரம், பூத்தான் முதலிய பாகங்களிலும் பயிராகிற ஒருவகைப் பருங்கோரை இனம். இதற்கு நீண்ட ஆணிவேரும் பல சல்லிவேர்களு முண்டு. புதிய வேருக்கு இனிப்பும் அதிக காரமான வாசனையு மிருக்கும். நாட் சென்றால் துர்நாற்றம் பெறும். இவ்விரண் டினத்திற்கும் குணம் சற்றேறக்குறைய ஒத்திருக்குமென்பது கொள்கை.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—(பச்சையில்) இனிப்பு (காய்ந்தபின்) கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - **Antispasmodic.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**

**குணம்.**—இதற்குக் குட்டம், சிலந்திவிடம், பழையசுரம், உட்சூடு, வாயு, பேதி, கண்ணோய், காசம், இரத்தபித்தம், இரைப்பு நீங்கும்.

குட்டஞ் சிலந்திவிடம் கோர புராணசுரம்
உட்டினங்கால் பேதிகண்ணோய் ஓட்டுருமல்—சொட்டிரத்த
பித்தம்இரைப் பேகும் பெருங்கோரை என்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சில்தனைச் சொல். (அ.கு.)

**வ - கு.**—சீமை இனத்தைச் சூரணஞ்செய்து 10—20 குன்றியெடை நீரிற் கலந்து நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்று முறை கொடுக்கப் பழைய சுரம், சூதக வலிப்பு, தாபன ரோகங்கள் தீரும். முக்கால் வராகனெடை கொடுக்கக் கபத்தை வெளிப்படுத்தும்.

நாட்டு இனத்துச் சடாமாஞ்சியை நசுக்கி இரண்டு வராகனெடை எடுத்து ஒரு ஆழாக்கு வெந்நீரில் ஒரு மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி அரைக்கால் முதல் காலாழக்கு வீதம் தினம் மும்முறை கொடுத்துவரச் சூதகசந்நி, அபஸ்மாரரோகம், வலிப்பு நீங்கும்.

இவ்விருசாதியின் பாவனத்திரவியத் (Tincture Vallerian) தில் 1, 2 தேக்கரண்டி வீதம் நீரிற் கலந்துக் கொடுத்துவர, காக்கைவலி குணப்படும்.

இதிலிருந்து ஒருவகை மஞ்சள்நிறம் பொருந்திய எண்ணெய் எடுக்கப் படும். இதை மேற்கூறிய வியாதிகளுக்குக் கொடுப்பதுடன், நரைமயிர் கறுப்பதற்கு இதைத் தடவுவது முண்டு.

---

## சணப்பு—Chanappu.

**வே - பெ.—சணல்.**

**Crotalaria Juncea.**

**Eng.—Bengal hemp.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Janapà జనప. / Janumu జనుము. | **Kan.** | Shanabu ಶಣಬು. / Pundi ಪುಂಡಿ. |
| **Mal.** | Janapa ജണപ്പ്. / Pulivanji പുളിവഞ്ചി. | **Sans.** | Pulivanji पुलिवञ्जि |
| | | **Hind.** | San * سان |
| | | **Duk.** | Janab * جانب |

இது, இந்தியாவில் பலபாகங்களிலும், முக்கியமாய் வங்காளம், மைசூர், தக்கணத்திலும் பயிரிடப்படுகிறது.

**ப - உ.**—இலை, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**இலை.**

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- நீர்மலம்போக்கி - விரேசனகாரி - Purgative.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.

**வேர்.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதற்குப் பித்தகோபமும் சிற்சில வாத ரோகங்களும் நீங்கும். இளங்கருப்பங்கள் கரையும்.

கைப்பும் உறைப்புங் கலந்திருக்குந் தின்றக்கால்
மெய்ப்புள்ள பித்தம் விலகுங்காண்—நெய்ப்பாங்
கருப்பங்க ளெல்லாம் கரைந்து விழுமே
உருப்பங்க மாஞ்சணப்புக் கோர். (அ.கு.)

வ - கு.—இதன் இலையை முறைப்படிக் கஷாயமிட்டு 1/8, ¼ ஆழாக்கு வீதம் தினமிருவேளை கொடுத்துவர, பித்த கோபத்தாலுண்டாகும் சுர நோயும், சருமநோயுடன் கூடிய சுரமும், சிற்சில வாதரோகமும் நீங்கும். சூதகக்கட்டை யுடைத்துச் சூதகத்தை வெளிப்படுத்தும்.

வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, வயிற்றுவலி நீங்கும்.

விதையை நன்றாயுலர்த்திப் பொடித்து ¼, ½ வராகனெடை வீதம் தினமிருவேளை பாலுடன் கலந்துட்கொண்டுவர, பித்த கோபந்தணியும், இரத்தம் சுத்தப்படும்.

விதையை நல்லெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சித் தலைக்குத் தடவி வர மயிர் வளரும்.

---

## சண்பகம்—Shanbagam.

**Michelia Champaca.**

**Eng.—Golden or Yellow Champa.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Champakamu** | చంపకము. | Sans. | Champaka | चम्पक |
| **Mal.** | **Champaka-pú** | ചെമ്പകപ്പൂ. | Hind. / Duk. | Champá | * چمپا |
| **Kan.** | **Sampagá-huvvu** | ಸಂಪಗೆ ಹೂವ್ವು. | | | |

இது மர வகுப்பைச் சேர்ந்தது. இந்தியா முழுமையும் இது பயிரிடப் படுகின்றது. இதன் நறுமணமுள்ள பூவைக் கோவிலில் பூசைகளுக்கு உபயோகிப்பது வழக்கமாதலால், இம்மரத்தைச் சாதாரணமாய்க் கோவில் நிலங்களில் பயிரிட்டு வருகிறார்கள்.

ப - உ.—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**சமூலம்.**

- உடற்றேற்றி - வ்யாதபேதகாரி - Alterative.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**பூ.**

- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி -Diuretic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**பட்டை.**

- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**வேர்.**

- நீர்மலம்போக்கி - வ்ரேசனி - Purgative.

**பூ.**

**குணம்.**—இதனால் வாதபித்ததொந்தச் சுரம், அத்திசுரம், பிரமேகம், தனித்தோடசுரம், சுக்கில நட்டம், நேத்திர அழலை ஆகிய இவை போம். மனக்களிப்பை உண்டாக்கும்.

வாதபித்தம் அத்திசுரம் மாமேகம் சுத்தசுரந்
தாதுநட்டங் கண்ணழற்சி தங்காவே—மாதேகேள் !
திண்புறு மனக்களிப்பாந் திவ்யமணம் உட்டினஞ்சேர்
சண்பகப் பூவதற்குத் தான். (அ.கு)

### வேர்.

இது வெப்பம், சுரம், நேத்திர ரோகம் ஆகிய இவைகளை நீக்கிப் பசியை யுண்டாக்கும்.

> திராத வெட்டினத்தைத் திர்க்குஞ் சுரம்போக்கும்
> நேரே பசியெழுப்பும் நிச்சயமே—ஒருங்கால்
> பண்புறுகண் தோடத்தைப் பற்றறுக்கும் வாசமுள்ள
> சண்பக மரத்தின்வேர் தான். (அ.கு.)

### இலை.

**வ - கு.**—இலைச் சாற்றைத் தேன்சேர்த்து வயிற்றுவலிக்குக் கொடுக்கலாம். இளந்தளிரைச் சிதைத்து நீரில் கலந்து அந்நீரைக் கண்ணில் விட்டுவர, பார்வை தெளியும். இலையில் நெய் தடவி, அதில் ஓமத்துள் தூவி தலையில் வைத்துக்கட்டத் தலைக்கு அதிக குளிர்ச்சியைத் தந்து, வெப்பத்தினு லுண்டாகும் தலைநோயைத் தணிக்கும்.

### பூ.

பூவைக் கஷாயமிட்டு அல்லது ஊறல் கஷாயமிட்டுக் குன்மம், சுரம், ஒக்காளம் முதலிய நோய்களுக்கு 1/8—$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுக்கலாம். மேலும், வெள்ளை முதலிய மேக நோய்களைச் சாந்தப்படுத்தும், நீர்ச்சுருக்கை நிறுத்தும்.

பூக்களிலிருந்து நறுமணமுடைய அத்தர் செய்யலாம்.

பூக்களை எண்ணெயிலிட்டுப் பிசைந்து தலைநோய், கண்ணோய், பீநசம் முதலியவைகளுக்கு நெற்றியில் பற்றிடலாம். இதையே கீல்வீக்கம், வாத வலி முதலிய நோய்களுக்கு மேலுக்குத் தடவலாம்.

### விதை.

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெயை வயிற்றுவலிக்கு மேலுக்குத் தடவிச் சுகம் பெறலாம்.

### பட்டை.

பட்டையைப் பொடித்து அல்லது கஷாயமிட்டு முறைச்சுரத்துக்குக் கொடுக்கலாம்.

பட்டை 1-பங்குக்கு நீர் 20 பங்கு, இதைக் கஷாயமிட்டுக் கொடுக்க நாட்பட்ட குன்மம் நீங்கும்.

பட்டைத்தூள் 5—10 குன்றி வரை நீரில் கலந்து உட்கொள்ள நாட்பட்ட வாதநோய் நீங்கும்.

**குறிப்பு.**—“சண்பகம்” என்னுஞ் சொல்லுக்கு வேறு பெயர் “சம்பங்கி” என்று வழங்கப்படினும், இது (சம்பங்கி) கொடிச்சம்பங்கி, செடிச்சம்பங்கியையும் குறிக்கும்.

---

## சதகுப்பை—Chatha-kuppai.

**வே - பெ.—சோயிக்கீரை விதை, மதுரிகை.**

**Peucedanum, Graveolens, Anetheum sowa.**

**Eng.—The Dill.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sóyikúra-vittulu సోయికూరవిత్తులు. | Arab. | Shibbit * شبت |
| Mal. | Ṣhatakuppa ശതകുപ്പ. | Pers. | Shód * شود |
| Kan. | Sabbasagi ಸಬ್ಬಸಗಿ. | Hind. | Suvà * سوآ |
| Sans. | Misi मिशिः | Duk. | Soyi * سوئی |

இது பூண்டு வகுப்பிற் சேர்ந்தது. இந்தியாவில் உஷ்ணப் பிரதேசங் களிலும், ஐரோப்பாவில் மத்திய தட்சண பாகங்களிலும் விளைகிறது. சமையலுக்கு உபயோகிக்கத் தோட்டங்களிலும் பயிரிடப்படுகின்றது. சாதா ரணமாய்க் கடைகளில் கிடைக்கக்கூடியது.

**ப - உ.**—இலை, பூ, விதை.

**சுவை.**—இனிப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பொது.**

**செய்கை.**

அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தனகாரி - Emmenagogue.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**இலை.**

இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.

**குணம்.**—இதனால் வாதரோகம், அசிர்க்கரம், தலைவலி, கர்ணசூலை, சலதோடம், கபருட்சை, ஆசனக்கடுப்பு, சலபீநசம் இவைகள் நீங்கும். அன்றியுமிது தீபனத்தை யுண்டாக்கும். ஈரல், நுரையீரல், இரைப்பை இவை களிலுள்ள சிக்கலையறுத்து வன்மையைக் கொடுக்கும். சூட்டுடம்பிற்கு ஆகாது. விக்கல், வாந்தி, ஓக்காளம், தலைச்சுற்றலை யுண்டாக்கும். இதற்கு முறிப்பாக எலுமிச்சை அல்லது புளிப்புமாதுளைப் பழச்சர்பத்து உப யோகப்படும்.

வாதமொடு சூதிகா வாதம் சிரசுநோய்
மோதுசெவி நோய்கபநோய் மூடுசுரம்—ஓதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீந சம்போக்கும்
ஞாலச் சதகுப்பை நாடு.

(அ.கு.)

**இலை.**

**வ - கு.**—இதைச் சிற்றாமணக் கெண்ணெயிலிட்டுக் காய்ச்சியாகிலும், அல்லது இதன் தனிச்சாற்றையாகிலும் எடுத்துக் குழந்தைகட்குண்டாகும் மாந்த நோய்க்கு உபயோகிக்கலாம். மேலும் சூதகசந்நி, சூதகக்கட்டு, காக்கைவலிப்பு இவைகட்கும் உபயோகமாகும்.

உலர்த்திச் சூரணஞ் செய்து சருக்கரையுடன் கலந்து மூன்று சிட்டிகை கொள்ள, கபம், சிரநோய், காதுவலி, மந்தாக்கினி, பீநசம், மூலக்கடுப்பு இவை தீரும்.

இலையை எண்ணெய் தடவி வதக்கிக் கட்டி, வீக்கங்கட்குப் போடச் சீக்கிரம் பழுக்கும்.

தோல் சிவக்கும்படி, இலையை இடித்துவைத்துக் கட்டலாம்.

கருப்ப ஸ்திரீகளுக்கு இதனிலையை உபயோகித்தால் கருவை வெளிப் படுத்துமெனக் கருதப்படுகின்றது.

இலையை உலர்த்திச் சூரணம் செய்து, நோயாளியின் அறையில் புகைக்கலாம்.

**அளவு.**—இலைக்கற்கம் ஒரு சுண்டை, இலைக்கஷாயம் 1/8—¼ ஆழாக்கு, இலைத்தீநீர் 1—2 தேக்கரண்டி.

குழந்தைகளுக்குண்டாகும் இசிவு, கிருமிநோய் இவைகளுக்கு இலைச் சாற்றை 10 முதல் 20 துளி வீதம் தேன் அல்லது கோரோசனையுடன் கலந்து 4 மணிக்கொரு தடவையாகக் கொடுத்து, மேலுக்கும் பூசலாம்.

இலையைக் கஷாயம் செய்து, பிரசவித்த பெண்களுக்குக் கொடுக்க உதிரச் சிக்கலறும்.

### விதை.

இதை இடித்துப் பொடித்து 1 தோலா முதல் 3 தோலா வரை எடுத்து 10 பலம் வெந்நீரில் ஊறல் கஷாயமிட்டுக் கொடுக்கக் குழந்தைகட்குண்டாம் மாந்தம், பெரியவர்கட்குண்டாம் வயிற்றுவலி (குன்மம்), வயிற்றுப்பொருமல் முதலியவை அனுகூலமாகும். இத்துடன் சுண்ணாம்புத் தெளிநீர்ச் சேர்த்துக்கொடுக்க அதிக பயன்கொடுக்கும்.

விதைகளை அரைத்து, வெந்நீராவியில் வேகவைத்து, இதன் வேருடன் கூட்டிக் கீல் வாதத்திற்குப் பற்றிடலாம்.

சதகுப்பை, கருஞ்சீரகம், மாமஞ்சள் இம்மூன்றும் வகைக்கு 1 பலம், வெல்லம் 3 பலம், சேர்த்தரைத்துக் கொட்டைப்பாக்களவு காலை, மாலை கொடுத்து, சோம்புக் கஷாயமும் கொடுக்க உதிரச்சிக்கலையறுத்துக் கருப்பந்தரிக்கச் செய்யும்.

### பூ.

சதகுப்பைப்பூ 1 பங்கு, நீர் 20 பங்கு, இதைக் கஷாயமிட்டு மேற்கூறிய வியாதிகளுக்குக் கொடுக்கலாம்.

இதைத் தீநீரிறக்கினால் அத்தீநீர்மீது எண்ணெய் மிதக்கும். அதை ½ முதல் 3 துளி வரையிலும் சருக்கரையுடன் கலந்து குழந்தைகளுக்கு மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## சாரணை—Cháraṇai.

இது பூமியை ஒட்டிப் பயிராகும் கொடியினத்தைச் சேர்ந்தது. இதில் சில பிரிவுகளுண்டு. அவை :—

(1) **வெள்ளைச்சாரணை.—Trianthema decandra.** இதன் பூ வெண்மையாகவே இருக்கும். இதற்குச் சத்திச்சாரணை, வெள்ளைச்சாரடை எனப் பெயர் வழங்கும்.

(2) **சாறுவேளை.**—இதில் இரண்டு பிரிவுண்டு. ஒன்றுக்கு வெள்ளைப் பூவும், மற்றொன்றுக்குச் சிவப்புநிறப்பூவும் உண்டு. **Trianthema Pendandra, T. Monogyna, T. Portulacastrum.**

(3) **சிறுசாரணை. Trianthema Triquetra.**

இவைகளைக் குறிக்க, சாரணை, சாறணை, சாறடை, சாறணத்தி, சாறுவேளை, வெள்ளைச்சாரணை, சத்திச்சாரணை, வெள்ளைச்சாரடை, சத்திச்சாட்டரணை என்கிற பல சொற்கள் வழங்குவதால், சமயம் நோக்கியும், நோய்க்குணம் நோக்கியும் மேற்கண்ட நான்கு வகைகளில் கொள்ளவேண்டியதைப் பெற வேண்டும். ஒன்றுக்கு மற்றொன்றை வழங்குவதால் முழு நன்மையுண்டாகாது. எனினும், சிறிது பலனுண்டாகும்.

இவைகளின் உண்மை உருவத்தை அறிய அதனதன் உருவப்படங்கள், கீழ் அமைக்கப்பட்டிருக்கின்றன.

---

## சத்திச்சாரணை—Sattichcharaṇai.

**வே - பெ.—வெள்ளைச்சாரணை, வெள்ளைச்சாரடை, சத்திச்சாட்டரணை, விருச்சிகம்.**

**Trianthema decandra.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Tella-ghalijéru | తెల్లగలిజేరు. | Kan. | Jaíja-Soppu | ಜೈಜ ಸೊಪ್ಪು. |
| | | | Sans. | Punarnava | पुनर्नवा |
| Mal. | Tavizhama | തവിഴാമ. | Duk- | Bees khupra | * بسکھپرا |

**ப - உ.**—சமூலம், வேர்.

**சுவை.**—கைப்பு (உவட்டல்), **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
மலமிளக்கி - லகுவ்ரேசநி - **Laxative.**
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.** }

**சமூலம்.**

**குணம்.**—இது வித்திரிதிக்கட்டி, மூலவாயு, கண்படல ரோகம், மார்பு நோய், சுவாச ரோகம், கருப்பத்தைச் சின்னப்படுத்துகின்ற சூசிகாவாதம் ஆகியவைகளைப் போக்கும்.

வித்திரிதி மூலம் விழிப்படலம் மார்புநோய்
தத்து சுவாசந் தனிக்கருப்பை—யுற்ற
கருச்சிதறச் செய்சூசி காவாத மும்போம்
விருச்சிகத்தின் பேரை விரி. (அ.கு.)

**வேர்.**

இதற்குச் சீதளம், நீரேற்றம், தேமல், தடிப்பு, குன்மம், வாதவலி, சிறு சிரங்கு, பிரமேகம், இருமல் ஆகியவை போம்.

சீதஞ் சலதோடந் தேமல்த மூம்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேகம்—ஓதரிய
காசமுதல் நோயெல்லாங் கான்சா றடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில். (அ.கு.)

**சமூலம்—இலை.**

**வ - கு.**—இதன் சமூலச்சாற்றால் இருவங்கமும் பற்பமாகும். அகத்தியர் இரத்தினச்சுருக்கத்தில் கூறிய வாதராட்சதக் குளிகையை முடிப்பதற்கு இதன் சமூலச்சாறு இன்றியமையாதது. இதை நீக்கி, சாறுவேளை, மூக்குறட்டை இவைகளிலொன்றின் சாற்றால் முடிப்பது சிறப்புடைய மருந்தாகாது.

இதன் சமூலத்தைக் குடிநீர் செய்து உட்கொண்டுவர சமூலக் குணத்தின் கீழ்கண்ட பிணிகளை விலக்கும்.

இதன் இலைச்சாற்றை மூக்கிற் பிழிய நீரேற்றம், ஒற்றைத் தலைவலி நீங்கும்; கண்ணில்விட நேத்திரப் பிணிகள்யாவும் தீரும்; இதர பானத்துடன் கலந்து குடிக்கக் காமாலை, வீக்கம், குன்மம், வயிற்றுளைச்சல் இவைகள் நீங்கும்; விடங்களை முறிக்கும்; இரச, இரத்தம், பித்ததோடங்களால் விளையும் தீங்குகள் விலகும்; தீபனம் அதிகரிக்கும். அல்லது இதன் இலையை வேகவைத்து நெய்யில் வறுத்துத் தின்று வந்தாலும் மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

இதன் இலையும், ஆமணக்கு, சுரை இவைகளின் இலைகளையும் சமவெடை எடுத்துத் தீநீர்வடித்துக் கொடுக்கக் கபத்தினாலுண்டாகும் வீக்கம் விலகும்.

இதன் இலைச்சாறும் எண்ணெயும் நேர் நேர் கூட்டிக் காயச்சிப் பூசிவரக் கீல் வாதங்கள் நீங்கும்.

நாலுபலம் நிறையுள்ள காய்ச்சாத பசுவின் பாலில் அரைப் பலஞ் சாற்றைக் கலந்துக் கொடுக்கக் கட்டுப்பட்டநீரை யுடனே இறக்கும்.

**வேர்.**

வேரைப் பால் விட்டரைத்துக் கால்பலம் வீதம் காலை, காலையில் மாத்திரம் உட்கொண்டுவர விதை (பீஜ) வீக்கம் குணமாகும்.

முற்றின வேரை வெள்ளாட்டுப் பிச்சியில் பாவனை செய்து நந்தியாவட்டப் பூச்சாறு விட்டுத் தேய்த்துக் கண்களிலிட கண்வியாதிகள் 96 - ம் நீங்கும்.

இதன் வேர், சுக்கு வகைக்குப் பலம் கால் எடுத்துக் குடிநீர் செய்து கொடுக்க மந்தம் நீங்கும். (தே - அந்.)

முதிர்ந்த வேரில் ஒரு குன்றியளவு ஆரம்பித்து, நாடோறும் ஒவ்வொரு குன்றியளவு உயர்த்தி உட்கொண்டு நாற்பதாம் நாள் 40 குன்றியளவு எடுத்ததன் பின் 41 ஆம் நாள் தொடங்கி நாடோறும் ஒவ்வொரு

[illegible] உட்கொண்டே வந்து 80-ஆம் நாள் ஒரு குன்றியள [illegible]திருந் தீராத வாத ரோகங்களும், சுரங்களும்—[illegible]கட்டுச்சுரமும், பீசங்களிலும் கால்களிலும் நீரிறங்கி [illegible] வீக்கமும், சலோதரமும் (நீராம்பலும்), மலக்கட்டு, நீர்க்கட்டு [illegible]வாயு, குன்மம், சுவாசம், வெட்டை முதலியனவும் தீரும்.

[illegible] குடிநீரும் மேற்கண்ட நோய்களைப் போக்குவதில் பின் வாங்காது.

### சாறுவேளை—சிறுசாரணை.

சத்திச்சாரணைக்குரிய குணங்கள் இவைகட்குமுண்டு. ஆனால், அதற்குப் பின்னடையும்.

[illegible] ஒன்றை இடித்துச் சாற்றைப் போக்கித் திப்பியை வைத்துக் கட்ட [illegible], காயத்த நாளத்தில் தங்கும் துர் நீர் இவைகளைப் போக்கும்.




Trianthema Decandra.—சத்திச்சாரணை.

## Trianthema Triquetra—சிறுசாரணை.




Figs.—1. Branch 2. Flower. 3 & 4. Anthers. 5. Fruit. 6. Longitudinal section of fruit. 7. Seed.

Trianthema Portulacastrum—சாறுவேளை.




Figs.—1. Branch. 2. Flower. 3. Anthers. 4. Pistil. 5. Fruit. 6. Longitudinal section of fruit. 7. Seed. 8. A small branch with stipular sheath open to show position of an immersed fruit.

# சந்தனம்—Chandanam.

Santalum Rubrum, S. Album.

Eng.—Sandal wood.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Gandhapu-chekka<br>గంధపు (చెక్క). | | Sans. | Shrí-gandha<br>Chandanam | श्रीगन्धम्<br>चन्दनम् |
| Mal. | Chandana-muṭṭi<br>ചന്ദനമുട്ടി. | | Arab. | Ṣandale-abyaz | صندل ابيض * |
| | | | Pers. | Ṣandale-sufed | صندل سفيد * |
| Kan. | Gandhadá-chekke<br>ಗಂಧದಚೆಕ್ಕೆ. | | Hind. | Chandan | چندن * |

இது மர வகுப்பைச் சேர்ந்தது. தென்னிந்தியா, மைசூர் முதலிய இடங்களிலுள்ள மலைகளில் வளருகின்றது. இதன் இலை வழவழப்பா யிருக்கும். இதில் மூன்று வகையுண்டு, **செம்மை, மஞ்சள், வெண்மை.** வாசனையுடையது.

ப - உ.—மரம், எண்ணெய்.

**சுவை.**—கைப்பு, சிறுதுவர்ப்பு, **வீரியம்** - சீதம், வெப்பம் ; **பிரிவு** - இனிப்பு, காரப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அழுகல்மணமகற்றி - பூதிகந்தநாசநி - Disinfectant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.

## பேதம்.

மூன்றுவித சந்தனத்தில் மருந்துகளுக்குச் சிவப்பு - உத்தமம் ; மஞ்சள் - மத்திமம் ; வெள்ளை - அதமம்.

> மும்மையெனச் சொல்வார் முருகுசந்தப் பேதம்அவை
> செம்மைமஞ்சள் வெண்மையெனத் தேர்முறையே—நன்மைதரும்
> உத்தமமும் மத்திபமும் ஒத்தம மும்ஆகும்
> தத்தை மொழியணங்கே ! சாற்று. (அ - கு.

## மரம்.

**குணம்.**—மரக்கட்டையைக் கிரமப்படி யனுபவிப்பவர்களுக்கு, நல்ல விவேகமும், மனமகிழ்ச்சியும், இலட்சுமி விலாசமும், சருமதாது ஒளியும், மாதரிடத்திச்சையு முண்டாகும். சீழ்ப்பிரமேகம் நீங்கும்.

> நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்புமெழிற்
> பொற்செந் திருவருளும் பூதலத்துள்—மெச்சுஞ்
> சரும வழகுந் தனிமோ கமுமாம்
> பிரமிநோ யேகும் பிறழ்ந்து. (அ - கு.)

## சந்தனம்.

இதனால் திரிதோடம், சித்தப்பிரமை, ரூட்சை, ஒழுக்குப் பிரமேகம், தாவறட்சி, உட்சூடு, நமைச்சல் இவை நீங்கும். சரீரம் பலம்பெறும்.

> கோதில்சந்தஞ் சீதோஷ்ணங் கொண்டிருக்கும் அச்சந்தம்
> வாதபித்தம் ஐயம் மனப்பிரமை—ஓதுசுரம்
> மேகம் தனித்தாகம் வெப்புசொறி யும்போக்கும்
> ஆகந் தனக்குறுதி யாம். (அ - கு.)

**வ - கு.**—மருந்துகளுக்குச் செந்நிறமூட்டவும், இந்திர கோபத்திற்குப் பதிலாகவும் செஞ்சந்தனத்தை உபயோகிப்பதுமுண்டு.

சந்தனக் கட்டையைப் பொடி செய்து காய்ச்சிய கஷாயம், அக்கினி மாந்தம், சுரங்கள், மார்புத் துடிப்பு இவைகளைப் போக்கும். மேலும் இக்குடிநீரைச் சீதசுரத்தில் கொடுக்க, வியர்வை கண்டு, தீவிர நாடி நடையைச் சமனப்படுத்தும்.

கட்டையை எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து நமைச்சல், சொறி, சிரங்கு, அக்கி, படர்தாமரை, தேமல், வீக்கம் இவைகளுக்கு மேல் பூசலாம். சுரத்தில் காணும் தலைவலி, புருவத்தின் வேதனை இவைகட்குத் தேனில் அரைத்து நெற்றியில் போடலாம்.

சந்தன அரைப்பைக் கலக்கித் தெளிந்தநீர் 2 தோலாவுடன், தண்டுல நீர், தேன், சருக்கரை கலந்து உட்கொள்ள வயிற்றுப் பொருமல், சீத பேதி, வெப்பம், தாகம் இவை தணியும்.

சந்தனத்தூளை மைபோலரைத்துப் பாலில் கலந்து சீழ் மேகத்துக்குக் கொடுப்பதுண்டு. இந்நோயினருக்குத் தாகவிடாய் இருப்பின், இளநீரில் சந்தனத்தூளை ஊறப்போட்டு வடித்துக் கொடுக்கலாம்.

சந்தனத்தூளை வாசனைத் திரவியமாகவும், புகைத்து நறுமணம் வீசவும் பயன்படுத்தி வருகிறார்கள்.

**சந்தனத்தீநீர்.**—வாலையில் வடித்தெடுத்தத் தீநீருக்கும், கஷாயத்தினுலுண்டாகும் நன்மையுண்டு.

**சந்தனத்தைலம்.**—மேற்கண்ட தீநீரின்மீது மிதக்கும் தைலம், சந்தனத்தைலம். இத்தைலத்தால், சீப்பிரமேகம், பெண்களுக்குக் காணும் வெள்ளை, உட்சூடு இவைபோம். இது பலர் அனுபவம்.

பிரமாணம்—10—20 துளி. ஆரம்பத்தில் 5 துளி.

**சந்தனாதித்தைலம்.**—இதைத் தலை மூழ்கிவர, தாக ரோகம், கை, கால், கண், தேக எரிச்சல், பித்த ரோகங்கள் தீரும். செய்கின்ற விதத்தைத் தேரையர் தைல வருக்கச் சுருக்கத்தில் காண்க.

**சந்தனமணப்பாகு.**—சந்தனத்தூள் 2, நீர் 16, இதை 4-ல் ஒன்றாக வற்றவைத்துக் குடிநீராக்கி, இதன் எடைக்கு 3 பங்கு கற்கண்டு கூட்டிக் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு, தேவையான அளவு பன்னீர் சேர்த்து 1—2 ரூபாயெடை உட்கொள்ள, மூலச்சூடு பிரமேகம், சுரம் தீரும்.

**சந்தனஊறல்கஷாயம்.**—சந்தனத்தூள் 2 வராகனெடைக்கு வெந்நீர் 2 ஆழாக்கு விட்டு மூடி, ஒரு மணிநேரம் ஊறியபின் வடிகட்டி $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## சந்நி நாயகம்—Sanni-nāyakam.

இது ஒருவகைப் பூண்டு இனத்தைச் சேர்ந்தது. இதன் பூ மஞ்சள் நிறமாயும், சற்றேறக்குறைய சிறுசாமந்திப்பூவைப் போன்று மிருக்கும். பூவைச் சுவைத்தால் மிகு விறுவிறுப்பும் காரமுமிருக்கும்; சந்நிபாத சுரங்களிற் காணும் நாவறட்சியை நீக்கும்.

---

## சவுக்கு மரம்—Chavukku-maram.

Casuarina equisetifolia.

Eng.—Casuarina or Tinian tree.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Chavuku-mánu | చవుకు మాను. | Kan. | Sura | ಸುರ. |
| | Ela-chettu | ఈల చెట్టు | Hind. | Janglí-saro | جنگلی سرو * |
| Mal. | Chavaka-maram | ചവക മരം | Duk. | Janglí-saru | جنگلی سرو * |

இது சாதாரணமாய் இந்தியாவில் எங்கும் பயிராகும் மரம். விறகுக்காகப் பயன்படும்பொருட்டு, இம்மரத்தை ஏராளமாய்ப் பயிரிட்டு வளர்த்து வருகின்றார்கள். பாதையோரங்களிலும் வைத்து வளர்ப்பதுண்டு. மணற்பாங்கான பூமிகளில் இம்மரம் நன்றாகச் செழித்து வளரும்.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—சீதபேதி, அதிசாரம் இவற்றைப் போக்கும். தேக பலத்தையுண்டுபண்ணும்.

**வ - கு.**—இதன் பட்டையைச் சிதைத்துக் குடிநீர் செய்து, தினமிரு வேளை அல்லது மூன்று வேளை சாப்பிட்டுவர, அதிசாரம், சீதபேதி நீங்கும்.

இதையே ஊறல் கஷாயமிட்டுக் குடித்துவர தேகத்துக்கு வலுவைத் தரும்.

---

## சவ்வரிசி மரம்—Chavvarisi-maram.

Sagus Laevus.

Eng.—Sago.

Tel. Sabbu-biyamu సబ్బు బియ్యము. | Kan. Sabbakki ಸಬ್ಬಕ್ಕಿ
Mal. Chavvari ചവ്വരി. |

இது பனை வகுப்பைச் சேர்ந்தது. இம்மரத்தின் நடுவிலுள்ள மரச்சோற்றை உலர்த்திப் பொடித்துச் சவ்வரிசி எடுக்கிறதாகக் கருதப்படுகின்றது.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனால், பிரமேகம், எலும்பைப்பற்றிய மேகம், சீழ்மேகம், உதிரமேகம் இவைபோம். சுக்கிலமும் கபமும் உண்டாகும்.

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றதுவுஞ்சி லேஷ்மமும்உண் - டாகும்எழிற்
செவ்வரிப டர்ந்தவிழித் தேமொழிமா தே ! யுலகிற்
சவ்வரிசி யின்குணத்தைச் சாற்று. (அ- கு.)

**வ - கு.**—இதை வேகவைத்துக் கூழாக்கி, மெலிந்த தேகிகட்கும் சீதபேதி யுடையவர்களுக்கும் கொடுக்கலாம்.

---

## சாதிக்காய்—Sáthik-kāi.

**வே - பெ.—குலக்காய், ஜாதிக்காய்.**

Myristica Officinalis.

Eng.—Nutmeg.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Jajikaya | జాజికాయ. | Arab. | Jouzbuvá | * جوز بوا |
| Mal. | Játikkaya | ജാതിക്കായ്. | Pers. | Jouzbóyah | * جوز بویاہ |
| Kan. | Jájikáyi | ಜಾಜಿ ಕಾಯಿ. | Hind. | Jae-phal | * جائیفل |
| Sans. | Játi-phalam | जातीफलम् | Duk. | Jáphal | * جاپھل |

இது, மலேயா தீபகல்பத்துக்கும், பினங்கு, மொலூக்கஸ் தேசங்களுக்கும் உரிமையான செடி. ஆயினும், இலங்கை, மலேயாளம், நீலகிரி முதலிய இடங்களிலும், செழுமையாகப் பயிரிடப்பட்டுவருகிறது. இதன் காய் "சாதிக்காய்"; இது அண்டவுருவமும், பழுப்பு நிறமுமுடையது. கெட்டியாயிருக்கும். ஆயினும் எளிதில் துகள்படுத்தக்கூடியது. இதை இரண்டாக வெட்டிப்பார்த்தால் உட்புறத்தில் புள்ளி புள்ளியாயிருக்கும். இதற்கு நல்ல வாசனையுண்டு.

**ப - உ.**—காய்.

**சுவை.**—துவர்ப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - **Narcotic.**
- மணமூட்டி - **Aromatic.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**

**குணம்.**—இதனால், விந்துநட்டம், அதிசாரம், வாயுவினாலுண்டாகும் நோய், தலைவலி, இரைப்பு (சுவாசம்), இருமல் (காசம்), கிராணி, வெப்பத்தை முன்னிட்டுவரும் பிணிகள் இவைகள் போகும். ஆனால் பித்த மயக்கத்தைத்தரும். மேலும் வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், அக்கினிமந்தம் இவைகட்கும் உபயோகப்படும்.

> தாதுநட்டம் பேதி சருவாசி யஞ்சிரநோய்
> ஓதுசுவா சங்காசம் உட்கிரணி—வேதோ
> டிலக்காய் வரும்பிணிபோம் ஏற்றமயல் பித்தங்
> குலக்கா யருந்துவர்க்குக் கூறு. (அ.கு.)

**அளவு.**—5—15 உழுந்தெடை.

**வ - கு.**—கறிமசாலையோடும், தாம்பூலத்தோடும் இதைச் சேர்ப்பது வழக்கம்.

சாதிக்காய் 2 குன்றி, சுக்குத்தூள் 2 குன்றி, சீரகம் 5 குன்றி, நன்றாய்ப் பொடிசெய்து, உணவுக்குமுன் சாப்பிட, வயிற்றிலுண்டாகும் வாயுவைப்போக்கி, சீரணத்தை யுண்டுபண்ணும்.

½ வராகனெடைத் தூளைப் பாலிற்கலக்கி, அதிசார பேதிக்குக் கொடுக்கலாம். இத்தூளை அபினிக்குப் பதிலாகவும் உபயோகிக்கலாம்.

**சாதிக்காய்த்தைலம்.**—சாதிக்காய்த் தூளைச் சலத்திற்போட்டு, வாலையிலிட்டு வடிக்கின்ற எண்ணெய். இதைப் பல்வலிக்கு உபயோகிக்கலாம். இது வெண்ணிறமும் - வாசனையுமுடையது.

அளவு—1—5 துளி.

**சாதிக்காய்த்தைலம்.**—(வேறு) சாதிக்காயைப் பொடித்து ஆவியிலவித்து, சூட்டுடனிருக்கும்போது கசக்கிப் பிழிவதனால் வரும் எண்ணெய். இது கிச்சிலிப் பழத்தோல் நிறமாயிருக்கும். வாதப்பிணி, கீல்வாதம் முதலியவைகளுக்கு உபயோகப்படும். மேலும் அதிசாரபேதி, சீதபேதி முதலியவைகளில் உண்டாகும் வேதனையைச் சாந்தி செய்ய உள்ளுக்குக் கொடுக்கலாம்.

அளவு.—1—3 துளி.

**ஜாதிபலாதிச்சூரணம்.**—சாதிக்காய், சணல், சூடன், ஏலக்காய், கிராம்பு, சித்திரமூலம் வேர் இவைகளின் சூரணங்களை வகைக்கு 1 வராகனெடை எடுத்து, நன்றாய் விரவிக்கலந்து 3 முதல் 6 குன்றி வரையில் காசம், வயிற்றுவலி, ஒற்றைத்தலைவலி, பெரும்பாடு, சூதகவலி, வாதவலி முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

ஜாதிக்காய் ஊறல் கஷாயத்தை வாந்திபேதியிலுண்டாகும் தாகத்துக்குக் கொடுக்கலாம்.

ஜாதிக்காயை அரைத்துக் கண்ணைச் சுற்றிப் பற்றிடக் கண் ஒளியடையும்.

## நாட்டுச் சாதிக்காய்—Nàttu-jāthik-kāi.

**Myristica - Malabarica.**

இது மலையாள தேசங்களிலுள்ள மலைகளில் பயிராகிறது. இதற்கு அற்பவாசனையுண்டு. இதை இடித்து வேகவைத்தால், அதிலிருந்து உறைந்த தைலமிறங்கும். இதை ஆறு விரணங்களுக்குப்பூச, துர்த்தசை நீங்கி செம்புண்படும். எண்ணெயுடன் கலந்து பூசுவது உத்தமம். வாத ரோகங் களுக்கும் பூசலாம்.

---

## சாதிபத்திரி—Chàthi-paththiri.

**வே - பெ.—ஜாதிபத்திரி, வசுவாசி.**

**Myristica Officinalis.**

**Eng.—Arillus of the nut (Maca).**

| | | | |
|---|---|---|---|
| Tel. Jápatri జాపత్రి. | | Arab. Bisbásah * بسباسه | |
| Mal. Játipattiri ജാതിപത്തിരി. | | Pers. Bazbàz * باز باز | |
| Kan. Jápatri ಜಾಪತ್ರಿ. | | Hind. Jávatrí * جوتری | |
| Sans. Játipatri जातिपत्रम्. | | Duk. Joutri * جوتری | |

இது, சாதிக்காயின்மீது மூடிக்கொண்டு, பச்சையாயிருக்கும்போது செந் நிறமும், உலர்ந்த பின் செம்மஞ்சள் நிறமுமாயிருக்கிற பொருள். இதையும் கறிமசாலை, தாம்பூலம் இவைகளில் சேர்ப்பது வழக்கம்.

**சுவை.**—கார்ப்பு - துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உறக்கமுண்டாக்கி - நித்ராகாரி - Hypnotic.

**குணம்.**—இதனால், தாபசுரம், கிரகணி, சலக்கழிச்சல் இவைபோம். தாதுவிருத்தியும், பித்தமும் உண்டாகும்.

சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியும்
ஓதுகின்ற பித்தம் உயருங்காண்—தாதுவிர்த்தி
யுண்டாங் கிரகணியோ டோதக் கழிச்சலறும்
பண்டாங் குரையே பகர். (அ - கு.)

**வ - கு.**—சாதிக்காய்க்குள்ள குணமே இதற்குமுண்டு.

## நாட்டுச் சாதிபத்திரி—Nàttu-játhi-pattiri.

நாட்டு ஜாதிபத்திரி—இதனால் க்ஷயநோயிற் காணும் சுரம், இரைப்பு, நாட்பட்ட வயிற்றுநோய் இவைகள் போம்.

## சாமந்திப்பூ—Ṣhàmantip-pù.

வே - பெ.—சிவந்திப்பூ, செவந்திப்பூ, செவ்வந்திப்பூ.

Chrysanthemum indicum.

Eng.—Chamomile flowers.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chamanti చామంతి. | Pers. | Gule-dándí گل ڈنڈی * |
| Mal. | Jévanti-pùva ജെവന്തി പൂവ. | Hind. | Gul-chíní-ká-phùl گل چینی کا پھول * |
| Kan. | Ṣhyávantige-huvu ಶ್ಯಾವಂತಿಗೆ ಹೂವು. | Duk. | Gul-chíní-ká-phùl گل چینی کا پھول * |
| Sans. | Ṣhévmntiká-pushpam चेमन्तिका पुष्पम् | | |

NOTE.—Gul-chini or Gule-chini is applied to the above plant in South India, but in Calcutta and many other places to 'Plumiera acuminata'.

இது சாதாரணமாய் எங்கும் வளரக்கூடிய பூண்டு. இதில் வெள்ளை, ஊதா, மஞ்சள், சிவப்பு முதலிய அநேக விதமுண்டு. சீமைச் சாமந்திப்பூ வென வேறொரு பிரிவுமுண்டு. அதற்கு **Anthemidies flores** என வழங்குவர். இச்சீமைச் சாமந்திக்குள்ள குணமே நம் நாட்டுச்சாமந்திக்கு மிருப்பதனால், இதைச் சாதாரணமாய்ச் சீமைச் சரக்குக்குப் பதிலாக உபயோகிக்கலாம்.

**ப - உ.—பூ.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மலமிளக்கி - லகுவ்ரேசனி - Laxative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- உரமாக்கி - பலகாரி - Tonic,

**குணம்.**—இதனால் சூதகக்கட்டு, சூதகச்சந்நி, உப்பிசம், மந்தாக்கினி, தலைவலி, குடைச்சல் இவை போம்.

**வ - கு.**—இதைக் கஷாயமிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோய்கள் தீரும். சாமந்திப்பூ ½ பலம், வெந்நீர் 10 பலம், இதை 15 நிமிஷம் மூடிவைத்திருந்து வடிகட்டிக்கொண்டு, வேளைக்கு 1½ அல்லது 2 பலம் கொடுக்கலாம். அதிக அளவில் கொடுத்தால் வாந்தியாகும்.

சுளுக்கு, வீக்கம் முதலியவைகளுக்கும் இதை ஒற்றிடம் கொடுக்கலாம்.

பூக்களை வாலையிலிட்டுத் தைலம் வடித்தெடுக்கலாம். இதில் வேளைக்கு 1 முதல் 5 துளி வீதம், சர்க்கரையில் விட்டுக் கொடுக்கலாம்.

இத்தயிலத்தைக் கீல்வாதம், வீக்கம் முதலியவைகளுக்குப் பூசலாம்.

பூவிலிருந்து ஒருவகைச் சத்து எடுக்கலாம். இதை 1 முதல் 3 குன்றி மாத்திரையாகச் செய்து மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## சாமை—Chàmai.

Panicum Miliaceum.

Eng.—Millet.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chema-Dhanyam చేమధాన్యము. | Sans. | China चैना |
| Mal. | Cháma ചാമ്. | Hind. | China چینا * |

இது இந்தியாவின் பல பாகங்களிலும் பயிரிடப்பட்டுவருகிறது. இது ஏழை மக்கள் பலரும் உணவாகக் கொள்ளும் தானியவகையைச் சேர்ந்தது.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம் , **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**குணம்.**—இதனால் தாகம், சுரம், மேகம், உடல்வாதம் போம். உடலுக்கு அழகைத் தரும்.

உடலில்உறு தாகசுரம் ஓடும்மே கம்போம்
அடலின்உறு வாதம் அகலுங்—கடலிலுறை
ஆமை யனையபதத் தன்னமே ! மேனியிடுஞ்
சாமை யரிச்சிக்குத் தான். (அ - கு.)

**சாமைச்சாதமும் கஞ்சியும்.**

இதன் சாதத்திற்கு வாதம், கோழை, சோபை இவை போம். தாது விருத்தியுண்டாகும். ஆனால், இது பித்தத்தை, தாதுவை விருத்தி பண்ணும்.

இதன் கஞ்சி முத்தோடத்தையும் போக்கும்.

சாமைச்சோ றுண்டால் தனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை—போமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசும் அதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி. (அ-கு.)

**வ - கு.**—இதைக் கஞ்சியாகச் செய்துச் சாப்பிட, பேதியை நிறுத்தும்; தேகத்தைப் பலப்படுத்தும். இதைப் புற்கையாகச் செய்து வீக்கங்களுக்குப் பூசுவதுண்டு.

---

## சாம்பிராணி—Ṣhàmbiráni.

**வே - பெ.—பெண் குமைஞ்சான், தூபம், மலாக்காச் சாம்பிராணி.**

**Benzoinum.**

**Eng.—Benzoin.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Sámbiráni | సాంబ్రాణి. | Arab. | Lubán | لوبان * |
| Mal. | Sámbráni | സാമ്പ്രാണി. | Pers. | Ḥasnlubah | حسنلوباه * |
| Kan. | Sámbráni | ಸಾಂಬ್ರಾಣಿ. | Hind. | Oud | عود * |
| Sans. | Déva-dhùpika | देवधूपिका | Duk. | Oud | عود * |

இது சீயம், ஜாவா, சுமத்திரா, போர்னியு முதலிய தேசங்களில் விளைகிற ஓர் வகைச் செடியின் பட்டையிலிருந்து வடிந்து உலர்ந்துபோன ஓர்வித நறுமணமும் கார்ப்புமுள்ள தைலப்பிசின். இப்பிசினை வெட்டிப் பார்த்தால் சிறுமணிகளைப் போலத் தோன்றும்.

இதில் (Benjoic acid) '**பென்ஜாயிக் ஆஸிட்**' என்கிற **சத்திருக்கின்றது.**

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—நாட்பட்ட இருமல், மார்ச்சளி, சத்திகுன்மம் இவைகளைப் போக்குமென்பது கொள்கை. இதன் புகை, கக்கிருமலையும், துர்வாசனைகளையும் போக்குமென்பது தீர்மானம்.

சாம்பிராணியை அப்படியே பொடிசெய்து கொடுப்பது அனுபவத்தில் அரிதாகக் காண்கிறோம்.

**மாத்திரை.**—5—10 குன்றி.

இச்சாம்பிராணியில் ஒருவகை கைப்புடைய சாதியுண்டு. அதற்குக் **கைப்புச்சாம்பிராணி** எனப்பெயர். இதனால், வாதகபரோகங்கள், கண்ணோய், நீங்காத் தலைநோய், நீர்ப்பீநசம் விலகும்.

வாதசீதங் கண்ணோய் மாறாத் தலைவலியும்
ஓதம்உறு பீநசமும் ஓட்டுங்காண்—பூதலத்தில்
வேம்பிதுதான் என்ன மிகுகசப்பை வாய்க்களிக்கும்
சாம்பிராணி என்னும் சரக்கு. (அ.கு.)

**வ - கு.**—இதை வெந்நீர் விட்டரைத்து மேலுக்குப் போட வெப்பத்தைத் தரும். இதை நாட்பட்ட சுவாசகாசம், கயம் முதலிய கபரோகங்களுக்கு உபயோகிக்கலாம்.

இதனால், சாம்பிராணித்தைலம், சாம்பிராணிப்பதங்கம் முதலியவைகள் செய்யலாம்.

### சாம்பிராணிக் களிம்பு.

சாம்பிராணித்தூள் 1, பன்றி நெய் 4—பன்றி நெய்யைச் சல இயந்திரத்தில் வைத்து உருக்கி, அதில் சாம்பிராணியைச் சேர்த்து இடைவிடாது துழாவி, 2 மணிநேரஞ் சென்றபின் வடிகட்டி, சக்கையை நீக்கி எடுக்கச் சுத்தமாயிருக்கும் ; கெடாது. விரணங்களுக்கு இதை உபயோகிக்கலாம்.

### சாம்பிராணிப் பதங்கம்.*

மலாக்கா சாம்பிராணியைப் பதங்கித்து எடுக்க, வெண்ணிறமாயும், மிருதுவாயும் சிறிய கம்பிகளாயும் இருக்கும், இதற்கு நல்ல வாசனையுண்டு. நீரில் அதிகமாய்க் கரையாது. (சாராயத்தில் கரையும்) காற்றினால் கெடாது. எரிக்கப் புகையும். இப்புகை இருமலையுண்டாக்கும்.

**அளவு.**—½—2 உழுந்தெடை, **மேருட்டுப்பதங்கம்** 10—15 உழுந்தெடை.

**சுவை.**—புளிப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- கற்றுகளாக்கி - பாஷாணபேதநி - Anti-lithic.

**குணம்.**—முத்தோடங்களையும் விலக்கும். இரைப்பு, வாயில் நுரையும் இரத்தமும் கண்டு உடல் நேர்தல், இரத்தகாசம், மஞ்சட் காமாலை, குழந்தைகட்குக் காணுகிற சொட்டுமூத்திரம், சுண்ணும்பு கலந்து வெளிப்படும் மூத்திரம், நாட்பட்ட காசரோகம், மார்ச்சளி, சந்துவாதம் முதலிய நோய்கட்கும், கொழுப்புகளைப் புளிக்காதபடித் தடுக்கவும், அழுகவொட்டாமற் பாதுகாக்கவும் உபயோகிக்கப்படும்.

**வ - கு.**—இப்பதங்கத்தைத் தக்க அளவெடுத்துச் சருக்கரை அல்லது வெல்லப்பாகில் கலந்து மேற்கூறிய ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

கால் ஆழாக்கு நீரில் ஒரு உழுந்தெடை கூட்டிக் கலக்கி விரணங்களைக் கழுவலாம்.

பிரசவ மலினத்தைப் போக்குவதற்கு, இப்பதங்கத்தில் ½—1 உழுந்தெடை வரையில், வெற்றிலையில் வைத்து உபயோகிக்கலாம். இதுவேகில் வாதத்தையும் போக்கும்.

### சாம்பிராணித் தைலம்.

வாய் அகன்ற ஒரு சட்டியில் ஒரு பலம் பளிங்குச் சாம்பிராணியைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிப்போட்டு, அடுப்பிலேற்றி, சட்டிவாய் பொருந்தும்படியான தட்டு ஒன்றால் மூடி, அதில் நீர் விட்டு, சிறு தீயிட்டு எரிக்கத் தைலம் பிறந்து, தட்டின் அடிப்புறத்தில் ஒட்டிக்கொண்டு படிந்திருக்கும். வழித்து எடுத்துக்கொள்ளவும்.

இத்தைலத்தைத் தலைவலி, சீதளம் இவைகளுக்கு நெற்றியிலும், கன்னத்திலும் பூசலாம்.

### *சாம்பிராணிப் பதங்கம் செய்முறை.

ஒரு சேர் பளிங்குச் சாம்பிராணியை பாக்குப்போல் உடைத்து ஓர் வாயகன்ற தோண்டியிலிட்டு ஒரு காகிதத்தை நீண்ட குல்லாய்போலும், குல்லாயின் அடிப்புறம் தோண்டியின் வாய் பொருந்தும்படியாயும் செய்து பிசினியால் ஒட்டிச் சிறு தீயிட்டு இரண்டு நாழிகை எரிக்க, குல்லாய்க்குள் பதங்கம் படிந்திருக்கும்.

### வேறு.

வேறு முறை தேரையர் கரிசலிலும் கூறப்பட்டுள்ளதைக் காண்க.

---

## சாயமரம்—Chàya—maram.

**வே - பெ.—செம்மரம், வத்தங்கிக்கட்டை, வர்த்தங்கிக்கட்டை.**

Hœmatoxylli Lignum.

Eng.—Logwood tree.

**கவனிப்பு.**—இன்பூறலுக்கும் "சாய வேர்" என்று ஒரு பெயரிருப்பதால், இடம் நோக்கிப் பொருள் கொள்ளவும்.

Mal. Chemmaram ചെമ്മരം.

இம்மரச் சக்கையின் உட்புறம் சிவப்பும், மேல்புறம் கறுப்புமாயிருக்கும். வாயிலிட்டுச் சுவைத்தால் நாக்குச் சிவப்பாகும்.

**ப - உ.**—மரச்சக்கை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதை நாட்பட்ட பேதி, சுரம், சீதபேதி, இரத்தப்பெருக்கு, முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம். மலச்சிக்கலை யுண்டுபண்ணுது. ஸ்திரீகளுக்குக் காணும் கருப்பமேகம், யோனிப்புற்று இவைகளுக்கு வஸ்தி செய்யலாம்.

இரத்தப் பெருக்கு நாட்பட்ட பேதியிவை
மெத்தச் சுரத்தோ டொழியுங்காண்—இத்தலத்தில்
தூயமணிப் பூணெலிக்கும் தூமயிலே ! நாளும்
சாயவேர்ச் சக்கைதனைச் சேர். (அ - கு.)

**வ - கு.**—சாயவேர்ச் சக்கைத்தூள் 1 பலம், நீர் அரைப்படி, இதை ஊறல் கஷாயமிட்டு அல்லது குடிநீர் செய்து, கருவாப்பட்டை 1 வராகனெடை சேர்த்துக் குளிர்ந்த பிறகு வடிகட்டி, தினம் 1 அல்லது 2 பலம் வீதம் மேற்படி நோய்களுக்குக் கொடுக்கலாம்.

## சாரப்பருப்பு—Chárap-paruppu.

| | |
|---|---|
| Tel. Charapappu చారపప్పు. | Mal. Mural മുരൽ. |
| Sans. Priyalu प्रियालुः | |

இது, காட்டு மாஞ்செடியின் காயினுள்ளிருக்கும் பருப்பேயாகும்.

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—இதனால் நீர்ச்சுருக்கு, மூத்திரக்கடுப்பு, நீர்ப்பிரமேகம், நீங்கும். சுக்கிலம் இறுகும். இரசம், கந்தகம் முதலிய விஷங்கள் நீங்கும்.

சாரப் பருப்பால் தனிமிசரி யின்பருப்பால்
நீரப் பருங்கடுப்பு நீர்ச்சீதந்—தீரத்
தொலையும்இரா தங்கந்தி துய்த்தார்க்கு நன்றாங்
கலையும்விந் துவுக்கூக்கங் காண். (அ - கு.)

**வ - கு.**—இதை அநேகமாய் இலேகியமுறைகளில் சேர்த்து உபயோகிக்கிறார்கள். இதைப் பசுவின்பால், சீனிக்கற்கண்டு, குங்குமப்பூ முதலிய வஸ்துக்களைச் சேர்த்து பாயசம் செய்து சாப்பிட்டுவரத் தாதுவிருத்தியுண்டாகும்.

---

## சாலாமிசிரி—Shálá-mishiri.

**Orchis Mascula.**

**Eng.—Salep Orchid.**

| | |
|---|---|
| Tel. Sálá-misiri సాలామిసిరి. | Pers. Ṣaalab-miṣri ثعلب مصری * |
| Mal. Sálá-mishri സാലാം മിശ്രി. | Hind. Ṣaalab-misiri ثعلب مصری * |
| Arab. Ṣaalab-miṣri ثعلب مصری * | Duk. Ṣáaláb-misiri ثعلب مصری * |

இது பெர்ஷியா தேசத்தில் பயிராகின்ற ஒருவகைச் செடியின் கிழங்கு (The dried root of Orchis mascula). மேனாட்டு வைத்தியத்தில் உபயோகிப்பதாகத் தெரியவில்லை. யூநானி வைத்தியநூல்கள் இதைக்குறித்துச் சிறப்பாகக் கூறும்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இது சுக்கில விருத்தியையும், போக சத்தியையும் உண்டாக்கும்; உடலை வலுக்கச் செய்யும்.

**வ - கு.**—சாலாமிசிரியைப் பொடி செய்து வெந்நீர் விட்டுக் கஞ்சிபோற் காய்ச்சியுண்ணத் தேகம் வலுக்கும். (இது குளிர்ந்தநீரில் கரையாதாகையால் வெந்நீர் விட்டே காய்ச்ச வேண்டும்.) இது, அநேக யோகங்களில் சேரும்.

**குறிப்பு.**—அன்னம், பாலையும் நீரையும் பிரிக்குமென்பதுபோல், இது நீரிலுள்ள உப்பைப் பிரித்து நந்நீராக்குமெனக் கூறப்பட்டிருப்பதால், இத்தகைய குணமுடைய கிழங்கையே பெறவேண்டும். ஏனெனில், சில கிழங்குகளையும், சில பிசின்களையும் பக்குவஞ் செய்து சாலாமிசிரி என விற்கப் படுதலினாலேயாம்.

## சிவதை—Shivadai.

**Ipomea turpethum.**

**Eng.—Turpeth root.**

**Tel.** Tegada తెగడ.

**Mal.** Trikolpa-konna ത്രികോൽപ കൊന്ന.

**Kan.** Tigade ತಿಗಡೆ.

**Sans.** Trivrith त्रिवृत्

**Arab.** Turbud * تربد

**Hind.** Nasvath * نسوت

இது இந்தியா முழுவதும் வளருகிற பூண்டு. இதில் வெள்ளை, கறுப்பு என இரண்டு வகையுண்டு. இதன் வேர் மருந்துகளுக்கு மிக உபயோகமுள்ளது. இலேசானது. வெளிப்புறம் கருமையாகவும் உட்புறம் வெண்மையாகவும் இருக்கும். வெட்டுண்ட இருபக்கங்களிலும் பிசின் படிந்திருக்கும்.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** நீர்மலம்போக்கி - விரேசநி - **Purgative.**

### பொது.

**குணம்.**—இதனால் பழைய மலம், உதாவர்த்தவாதம், பித்தவாத தொந்தம், பாலகிரகதோடம் ஆகிய இவை விலகும்.

*உள்ள மலமும் உதாவர்த்த மும்வயிற்றைக்*
*கொள்ளுபித்த வாதமும்போங் கூறுங்கால்—பிள்ளைகட்குச்*
*செப்பு கிரகமும்போந் தேனே ! யுலகத்துள்*
*தப்பில் சிவதைக்குத் தான்.* (அ - கு.)

### வெண்சிவதை வேர்.

இதனால் பைத்திய கோபமும், மலாசயக்கிருமியும், மலக்கட்டும் போம்.

*கைப்புந் துவர்ப்புங் கலந்திருக்கும் பித்தத்தை*
*இப்புவியில் நாடொட்டா திவ்வளவோ—செப்புதரத்*
*தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்*
*வெள்ளைச் சிவதைதனை விள்.* (அ - கு.)

### கருஞ்சிவதை வேர்.

இது எலிவிடத்தையும், பித்தகுன்மத்தையும் நீக்கும். மலத்தைப் போக்கும்.

*காரமுடன் கைப்பும்உண்டாங் காணு எலிவிடத்தைப்*
*பாரஅனற் குன்மத்தைப் பற்றறுக்கும்—பாரில்*
*தெரிஞ்சுரைத்தோம் பேதிதருந் தேமொழியே ! காட்டுக்*
*கருஞ்சிவதைக் கந்தம்அது காண்.* (அ - கு.)

**குறிப்பு.**—மேற்கூறிய இருவகை வேர்களுக்கும் பொதுக்குணம் ஒன்று எனினும் கருஞ்சிவதையைவிட வெண்சிவதை சாந்தமுடையது.

**வ - கு.**—இதன் சூரணத்தை ½—1 வராகனெடை வீதம், திராட்சை உப்பு, அல்லது கல்லுப்புடன் சேர்த்துக் கொடுத்தால் செவ்வையாகப் பேதியாகும்.

இதன் சூரணம் 8 தோலா, சருக்கரை 8 தோலா, திப்பிலி 2 தோலா இவைகளைக் கலந்து வேளையொன்றுக்கு 10 குன்றியளவு கொடுக்க நன்றாகப் பேதியாகும்; வயிற்றுவலி முதலியன குணமாகும்.

## சிவனார்வேம்பு—Shivanár-Vémbu.

**வே - பெ.—காந்தாரி.**

**Indigofera Aspalathoides.**

| | |
|---|---|
| Mal. Manaveli മണവേലി. | Kan. Shivamalli-gida ಶಿವಮಲ್ಲಿ ಗಿಡ. |

இது தென்னிந்தியாவில் சாதாரணமாய்க் கிடைக்கக்கூடிய பூண்டு.

**ப - உ.**—இலை, பூ, சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**குணம்.**—இதனால் ஆகந்துகவிரணம், நாட்பட்டபுண், சொறி, சிரங்கு, சர்மதலக்குட்டம், பிளவை, மகாவாதம், குறைநோய், அக்கினிமந்தம், சர்ப்பவிடம் இவை நீங்கும். அழகுண்டாகும்.

சாய்க்குமிடிப் புண்பழம்புண் சர்மகுட் டம்பிளவை
தீக்கடுகால் வன்பெருநோய் சிந்துமா—நோய்க்கு
விதையாதி வேம்பினை மெய்க்கழகு காலை
யுதையாதி வேம்பினை லுண். (அ - கு.)

**வ - கு.**—இலையையும், பூவையும், கஷாயமிட்டுக்குடிக்கத் தேகத்துக்குக் குளிர்ச்சியுண்டாம். சரும நோய்களை விலக்கும்.

வேரை வாயிலிட்டுச் சுவைக்கப் பல்வலி, வாய்விரணம் முதலியன நீங்கும்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சிச் சருமத்திலுண்டாகும் சொறி, சிரங்கு முதலியவைகளுக்குப் பூசக் குணமாகும்.

**சிவனார்வேம்புத்தைலம்.**—இத்தைலத்தை உள்ளுக்குக் காசெடை கொடுத்து, மேலுக்கும் பூச, குட்டம் முதலிய நோய்கள் குணமாகும். இத்தைலத்துடன் சிவனார் வேம்புச் சூரணத்தையும் சேர்த்துக் கொடுக்கக் குட்டம், வெடிசூலை, கரப்பான், சில்விடம், புண் தீரும்.

இதனால், இரசத்தால் (சூதத்தால்) தீரக்கூடிய நோய்கள் யாவும் தீரும்.

இதன் சமூலத்தை இடித்து வெண்ணெயில் குழைத்து வீக்கங்களுக்குப் பூசலாம்.

**சிவனார்வேம்புக்குழித்தைலம்.**—சிவனார் வேம்புச் சமூலம் பலம் 10, வாலுழுவை அரிசி பலம் 10, இவ்விரண்டையும் கருடன் கிழங்குச் சாற்றாலரைத்து வில்லை செய்துலர்த்திக் குழித்தைலமிறக்கவும்.

இதில் கருப்பூரம் சிறிது கூட்டிக் குழப்பி, வெடிசூலை, குட்டப்புண், நாட்பட்டபுண், அடிபட்டபுண் இவைகளுக்குப் பூசக் குணமுண்டாகும்.

---

## சிறுநாகப்பூ—Chiru-nágappú.

**வே-பெ.—நாகம், நாகபுட்பம், நாகேசரம், கேசரம், சாம்பேயகம், கநகம், காஞ்சநம், ஏமம், ஆடகம்.**

**Mesua Ferrea.**

| | |
|---|---|
| Tel. Nága-kesara నాగకేసర. | Sans. Nága-kesara नागकेसरम् |
| Mal. Nakappuvu നാകപ്പൂവ്. | |
| Kan. Nagá-kesára ನಾಗಕೇಸರ. | Hind. Nág-kesar *ناگکیسر |

இது, இமயம், கீழ் வங்காளம், அசாம், கீழ்த்தொடர்ச்சி, மேல்தொடர்ச்சி மலைப் பிரதேசங்களிலும் பர்மாவிலும் பயிராகின்றது.

**ப - உ.**—இலை, மொக்கு, பூ, விதை, வேர், பட்டை.

**சுவை.**—சிறுகைப்பு - கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பூ.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**

**காய்.**
மணமூட்டி - **Aromatic.**
காறலுண்டாக்கி - **Acrid.**
நீர்மலம்போக்கி - விரேசனி - **Purgative.**

**பட்டை.**
சிறுதுவர்ப்பி - லகுஸங்கோசனகாரி - **Astringent (Mild).**

**வேர் - பட்டை.**
மணமூட்டி - **Aromatic.**
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**

**குணம்.**—பிரமேகம், உதாவர்த்தவாதம், இருமல் இவைகளைப் போக்கும்.

சிறுநாகப் பூவினது செய்கைதனைச் சொல்வோம்
குறியாகும் மேகத்தைக் கொல்லும்—நெறியைவிட்டுத்
தீதாய்ச்செல் வாயுவையுந் தீர்க்கும்இரு மற்போக்கும்
கோதாய் ! இதையறிந்து கொள். (அ - கு.)

மேலும் இதற்கு நீரை வறட்டுங்குணமுண்டு. நீரடைப்பு, உதிரச்சிக் கல், மலச்சிக்கல், அக்கினி விரணம், கொப்புளம், காலெரிச்சல் ஆகியவை போகும்.

**இலை.**

**வ - கு.**—இலையைப் புற்கை செய்து தலையில் வைத்துக்கட்டச் சீதளம் விலகும்.

இலையை யரைத்து அக்கினிவிரணம், கொப்புளம் இவைகளுக்குப் போட லாம்.

இலையைக் குடிநீர் செய்து உபயோகிக்க விரல், கால், பாதம் இவைகளி லுண்டாகும் இசிவு போம்.

**மொட்டு.**

இதை மணப்பாகு செய்து உபயோகிக்கச் சீதபேதி நிற்கும்.

**பூ.**

பச்சைப்பூவை அரைத்து, வெண்ணெய், கற்கண்டுடன் கூட்டியுண்டு வர, இரத்தமூலம் குணமாகும்.

பூ உலர்ந்தபிறகும் மணம் மாறுதிருப்பதால் சூரணம், இலேகியம், தைலம், இவைகள் மணம் பெறவும், மணப்பூச்சுக் கலவைகளிலும் இது சேரும்.

உலர்ந்த பூவை நெய் விட்டரைத்து, பிறகு குளிர்ந்த நீர்விட்டு **100** தரம் அரைத்து (ஒவ்வொரு முறையும் நீரைப்போக்கி, புதிய நீர் விட்டரைக்கவும்) கை, கால்களில் காணும் எரிச்சலுக்குப் பூசிவரலாம்.

இப்பூவைச் சிறிது நெய்விட்டுக் காந்தாமல் வறுத்துச் சூரணஞ் செய்து தக்க அளவு ($\frac{1}{4}$—$\frac{1}{2}$ வராகனெடை) எடுத்து நெய்விட்டுக் குழப்பியுண்ண இரத்தமூலம், நாவறட்சி, வயிற்றுளைச்சல், கபத்தோடுகூடிய இருமல், அசீரணம், அதிவியர்வை தீரும்.

**விதை.**

இதன் விதை ஒரு பங்கு, சதாப்பிலை அரைப் பங்கு, சேர்த்தரைத்துக் கழற்சியளவு கொள்ள முறைக்காய்ச்சல், பிரமேகம், காசம், ஆவிருத வாதம் போம்.

**பட்டை.**

இதன் ஊறல் கஷாயம் அல்லது குடிநீரை உட்கொண்டுவர உடல் பலப்படும்.

---

## சிறுபேயத்தி—Chiru-péyatti.

### Ficus Nolycarpa.

| | |
|---|---|
| **Tel.** Chīnna-verri-atti చిన్న వెర్రి అత్తి. | **Duk.** Chhōtá-Junglī-anjīr *چھوٹا جنگلی انجیر |
| **Mal.** Cheríya-kattatti ചെറിയ കാട്ടത്തി. | |

இது பர்மாவிலும், பினாங்கு, சிங்கப்பூர் முதலிய விடங்களிலும் வளருகின்ற சிறிய மரம். தென்னிந்தியாவிலும் பயிராகும்.

**ப - உ.**—பட்டை, பழம், விதை.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.
- நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.

**குணம்.**—இது வாந்தியையும், பேதியையும் உண்டுபண்ணும், பாலைச் சுரப்பிக்கும், முறைச்சுரத்தைத் தணிக்கும்.

சிறுபே யத்திக்குப் பெரும்வாந்தி பேதியும்ஆம்
மறுபோ துதிசுரமும் ஏகுமே—நறுங்குடிலாள்
கொங்கையினற் பாலைச் சுரப்பிக்கும் பாரீர்
தங்குவிதை நிறைக்கனியி னால். (அ - கு.)

**வ - கு.**—பட்டை, பழம், விதை இவைகளுக்கு வாந்தியை யுண்டுபண்ணும் குணமுண்டு.

பழத்தைத் தின்றால், பால் சுரக்கும். கருவைப் பாதுகாக்கும்.

கனியை உலர்த்திப் பொடித்து நீர் விட்டுக்கிளறி கட்டுகளுக்கு வைத்துக் கட்டலாம்.

நன்றாய்ப் பழுத்த பழங்களின் விதையை உலர்த்திக் காற்றுப் புகாமல் சீசாவிலடைத்துவைத்து, அதில் ஒரு வராகனெடை கொடுக்க, நன்றாக வாந்தியாகும்.

பட்டையை உலர்த்திப் பொடித்து, அதில் ½ முதல் 1 வராகனெடை நீரில் கலக்கிக் கொடுக்க வாந்தியாகும்.

ஷைபட்டைச் சூரணத்தை 10 முதல் 20 குன்றி வரையிலும் கொடுக்க, முறைச்சுரம் நீங்கும். 5 முதல் 10 குன்றி வரையிலும் கொடுக்கத் தேகத்தைப் பலப்படுத்தும்.

## சிற்றாமுட்டி—Chirtámutti.

**வே-பெ.—சிறுகுறுந்தொட்டி, சிறுந்தொட்டி, குறுந்தொட்டி.**

**Pavonia Zeylanica.**

**Tel.** **Chittamutti** చిట్టాముట్టి.

**San.** **Balá** बला.

**Mal.** **Kurunthotti** കുറുന്തോട്ടി.

இது இலங்கையிலும், அந்தமான் தீவிலும் ஏராளமாய் வளருகின்றது. தென்னிந்தியாவிலும் பயிராகும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - **Emollient.**

**குணம்.**—இதனால் அத்திசுரம், பித்தநோய் இவைகள் நீங்கிக் கண்ணுக் கொளியுண்டாகும். மேலும் இது தைல வருக்கங்களில் சேரும்.

அத்தி சுரமுதல் அனந்தசுரம் பித்தமும்போம்
மெத்த விழிக்கொளியாம் வீறுதயி—லத்திற்காம்
நற்ற மரைத்திருவு நாடு மெழிற்றிருவே !
சிற்றாமுட் டித்தூரைச் செப்பு. (அ - கு.)

**வ - கு.**—இதன் வேரைக் கஷாயமிட்டுக் கொடுக்க, அத்திசுரம் நீங்கும். பித்த நோயைக் கண்டிக்கும். சுரவேகத்தாற் காணும் தாகம் போம்.

சிற்றாமுட்டிவேர்ச் சூரணம் 30 ரூபாய் எடை, இதை 2 படித் தண்ணீரிலிட்டு, ½ படியாகக் குறுக்கி அதில் சுக்கு, மிளகு, ஏலம், வெட்டிவேர், வகைக்கு 1½ ரூபாய் எடை அரைத்துப்போட்டு, நல்லெண்ணெய் ⅜ படி விட்டுக் காய்ச்சி, தைல பதத்தில் வடித்துக்கொண்டு, வாரம் இருமுறை தேய்த்து முழுகிவர, நேத்திர ரோகம், வாத ரோகங்கள் தீரும்.

---

## பேராமுட்டி—Péramutti.

**Pavonia Odorata.**

**Tel.** **Pedamuttavapulagamu** పెద ముత్తవపులగము.

**Mal.** **Pēramutti** പേരാമുട്ടി.

**Kan.** **Bala rakkasi gida** ಬಾಲ ರಕ್ಕಸಿ ಗಿಡ.

**Sans.** **Mahabala** महाबला.

**Hind.** **Suganda-vala** * سوگندوالا

இது பெரும்பான்மையாய் வட இந்தியா, வங்காளம் முதலிய இடங்களிலும், சிறுபான்மையாய்த் தென்னிந்தியாவிலும் வளருகின்றது. இது கஸ்தூரியின் மணம் பொருந்தியது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Cooling.**
- அகட்டுவாய்வகற்றி - ஜடாரக்னிவர்த்தநி - **Carminative**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**

**குணம்.**—இதனால், வாதசுரம், தாகம், குழந்தைகட்குக் காணும் மாந்தம், கணம், கபசுரம், பித்தம் இவை போம்.

வாதசுரம் தாகம்ப் மதலைக் கணமாந்தம்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கும்—ஓதுநம்பாற்
சேராமுட் டிக்கேகுஞ் செய்ய மடமயிலே !
பேராமுட் டித்தூரைப் பேசு. (தே - கு.)

**வ - கு.**—இதன் வேரைக் கஷாயமிட்டு, சுரம், தாகம், மூத்திர எரிச்சல், இருமல், மாந்தகணம், பித்தரோகம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இதனால் வாதசுரத்தில் வியர்வையைப் பெருக்கி, அதை வெளிப்படுத்திச் சுரத்தைத் தணிக்கும்.

---

## சின்னி—Chinni.

### Acalypha Fruticosa.

**Tel. Chinni** చిన్ని.

இது சிறு செடி வகுப்பைச் சேர்ந்தது ; இந்தியாவின் தக்கண பாகத்தில் பயிராகும். இதில் **சிறுசின்னி, பெருஞ்சின்னி** என இரு பிரிவுண்டு.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- செந்நீரிளக்கி - Attenuant.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- நச்சரி - விஷநாசநி - Alexipharmic.

## சிறுசின்னி—Chiru-chinni.

**குணம்**—இதன் இலைக்கு வண்டு முதலிய கடி விடங்கள், இன்னதென வறியப்படாத காணுக்கடிவிடம், இடுமருந்துவிடம், பிரமேகம், கணச்சுரம், அக்கினிமந்தம் ஆகிய இவைகள் போம்.

கடிவிடமுங் காணுக் கடிவிடமும் மாதர்
இடுவிடமும் ஓடும் இரு வன்றி—நெடியவிழிக்
கன்னிகையே ! மேகங் கணக்காய்ச்சல் மாந்தமும்போஞ்
சின்னி யிலைக்குத் தெறித்து. (அ - கு.)

**வ - கு.**—இதன் இலை பலம் காலுடன், ஒரு திரிப்பூண்டு, பத்து மிளகு சேர்த்தரைத்துக் கொடுக்க வண்டுகடி, காணுக்கடிவிடம், இடுமருந்து தோடம் முதலியன நீங்கும். உப்பு, புளியாகா.

இதன் இலையைமாத்திரம் அரைத்து ஒன்று முதல் மூன்று சுண்டையளவு கொடுத்துவர, அசீரணம், வாந்திபேதி வியாதிகளில் காணும் மந்தத்தைப் போக்கி, பசியைத் தூண்டும். செந்நீரிளகும், பசிமிகும். உடல்தேறும்.

## சின்னிக்கிழங்கு—Chinnik-kizhangu.

ஊர்ப்பன்றி மாமிசத்துக் கொப்பாகிய சின்னி வேருக்குச் சின்னிக் கிழங்கென்று பெயர். இதனால் மூலரோகம், இரத்தமயக்கிரகணி நீங்கும். ஆனால், இது பொடிக்கிரந்தியையும் புண்ணையும் விளைக்கும்.

சின்னிக் கிழங்கு சிறுசிரங்கு புண்வளர்க்கும்
உன்னிலது வூர்ப்பன்றிக் கொவ்வுங்காண்—அன்னமே !
மூல மறுக்குமிது மோதுரத்தஞ் சீழ்மாற்றும்
தால மறியுநிசந் தான். (அ - கு.)

இதன் வேரைக் கஷாயமிட்டுக் கொடுக்கப் பிரமேகம், மூலம், கணச் சுரம், மாந்தம் நீங்கும்.

## பெருஞ்சின்னி—Perunj-Chinni.

சிறு சின்னியின் சுவை, செய்கை இதற்கு முண்டு.

**குணம்.**—இதன் இலைக்குக் காணுக்கடிவிடமும், பார்க்கும்படிக்குக் கடித்த பற்பல செந்துவிடங்களும் நீங்கும்.

காணுக் கடியும்எதிர் கண்ட விடக்கடியும்
நாணு திருந்திடவும் ஞாயமுண்டோ—தோணு
வருஞ்சின் மதலைமொழி மாதரசே ! கேளாய்
பெருஞ்சின்னி மூலியுண்ட பேர்க்கு. (அ.கு.)

**வ - கு.**—சிறு சின்னியிலையை வழங்குவது போலவே இதனிலையையும் மேற்படி விடங்களுக்கு வழங்கலாம்.

**குறிப்பு.**—சிறுசின்னி யிலையால் கெந்தி நீருகும்.

---

## சீக்காய்—Cheek-kai.

**வே - பெ.—சிகைக்காய், சீயக்காய்.**

Acacia Concinna (A. Rugata.)

**Tel.** Cheeka చీకా.
**Mal.** Chíyakayi ചീയക്കായി.
**Kan.** Sheegae ಶೀಗೆ.
**San.** Saptala सप्तला.
**Duk.** Sikakki * سیکیکی
**Hind.** Kochi. * کوچی

இது, இந்தியா முற்றிலுமுள்ள வெப்பப்பிரதேசக் காடுகளில் பயிராகும் கொடி வருக்கத்தைச் சார்ந்தது.

**ப - உ.**—இலை, காய்.

**சுவை.**—இலை - புளிப்பு, காய் - கைப்பு, **வீரியம்** - சீத வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**அகச்செய்கை.**
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Aperient.
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**புறச்செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- புண்ணழுக்ககற்றி - வ்ரணசுத்திகாரி - Detergent.

**குணம்.**—பேதியையும் வாந்தியையு முண்டாக்கும். ஆக்கிராணம், நசியச் சிகிச்சைகட்கு முக்கிய மருந்தாயிருக்கும். பற்பல நெய்ச்சிக்குகளைப் போக்கும்.

மூக்கின் சிகிச்சைகட்கு முக்கியமாம் பேதியையுண்
டாக்கும் வமனத்தையு மழைப்பிக்கும்—தேய்க்கும்
வகைநெய்ச்சிக் கைப்போக்கும் மாதரசே ! நாளும்
சிகைக்கா யதனைத் தெரி. (அ - கு.)

இதன் கொழுந்து பித்தத்தைச் சாந்தம் பண்ணும்.

**வ - கு.**—இதன் கொழுந்துடன், உப்பு, புளி, மிளகு, மிளகாய் சேர்த்துத் துவையல் செய்து சாப்பிடப் பித்த அரோசகம் நீங்கும். இதுவே பித்த காமாலையையும் குணப்படுத்தும்.

இக்கொழுந்துடன் தக்க அளவு மிளகும், ஒரு திரி பூண்டும் சேர்த்தரைத்துக் கொடுக்க மலச்சிக்கல் நீங்குவதுடன் விட சுரத்தையும் தணிக்கும்.

காயை ஊறற் கஷாயமிட்டுக் கொடுக்க மலத்தைக் கழித்து மஞ்சட் காமாலையைப் போக்கும்.

**ஊறற்கஷாய முறை.**

விதை போக்கிய காய் பலம் இரண்டு, தனியா இரண்டு வராகனெடை, சிற்றரத்தை ஒரு வராகனெடை இவைகளை நன்றாய்ச் சிதைத்து இரண்டாழாக்கு வெந்நீரிற் சேர்த்து இரண்டு மணி நேரஞ் சென்ற பின் வடிகட்டி ¼ முதல் ½ ஆழாக்கு வீதம் கொடுக்கலாம்.

நன்றாய்ப் பொடித்த சிக்காய்த்தூள் பங்கு ஒன்றுக்கு நாற்பது பங்கு நீர் சேர்த்துக் காய்ச்சித் தலை முடியைக் கழுவிவரத் தலையிலுண்டாகும் சுண்டுகளைப் போக்கி, தலைமயிரை வளர்ப்பிக்கும்.

எண்ணெயிட்டுத் தேய்த்த தலைமயிரின் நெய்ப்பைச் சீக்காயரைப்புப் போக்கும். உடலழுக்கும் போம்.

---

## சீத்தா—Síth-tha.

Anona Squamosa.

**Eng.**—Custrad apple.

**Tel.** Seetaphalam సీతాఫలము.
**Mal.** Sirpa സിർഫ്.
**Kan.** Sitapal ಶೀತಾಫಲ.
**Sans.** Subha शुभा
**Hind.** Sharifah * شريفه

இது, இந்தியாவில் தோட்டங்கள் பலவற்றுள்ளும் வைத்துப் பயிரிடப்படும் சிறு மர வருக்கத்திற் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பட்டை, வேர், விதை, காய், பழம்.

**பழம்.—சுவை** - இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு,
**மற்றவை,**—,, துவர்ப்பு; ,, வெப்பம், ,, கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**
**பட்டை.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
உரமாக்கி - பலகாரி - **Tonic.**
**வேர்.**
நீர்மலம்போக்கி - வ்ரேசநி - **Purgative.**
**விதை.**
புண்ணழுக்ககற்றி - வ்ரணசுத்திகாரி - **Detergent.**
**காய்.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
**பழம்.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Cooling.**

**இலை.**

**குணமும் வழக்கும்.**—இலைச்சாற்றை மூக்கிற் பிழிய மூர்ச்சை, வலி போம்.

நீர் விடாமலேயரைத்துத் துஷ்டவிரணங்களுக்குப் பூச எளிதில் ஆறும், உள்ளுக்குக் கொடுக்கப் புழுக்களைக் கொன்று மலத்தின் வழியாக வெளிப் படுத்தும்.

**பட்டை.**

பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுக்க உடற் [illegible] பெருகும்.

**வேர்.**

வேர்ப்பட்டையை யரைத்து, தக்க அளவெடுத்து நீரிற் கலந்து கொடுக்கப் பேதியாகும்.

**விதை.**

விதையைப் பொடித்துப் புண்களின்மீது தூவ, அவைகளிலுள்ள அழுக்கையகற்றி அவைகளை எளிதில் ஆற்றும்.

**காய்.**

காய் அதிக துவர்ப்புடையதால் பேதி, சீதபேதிகளை நிறுத்த வழங்கலாம்.

**பழம்.**

பித்தகப தொந்தம், அக்கினிமாந்தம், சித்தப்பிரமை, ஆகியவற்றை, யுண்டாக்கு மெனினும், இதை மணப்பாகு செய்து வெப்பத்தைத் தணிக்க உபயோகித்தும் வருகிறார்கள் யூநானிவைத்தியர்.

பித்தகப மெத்தப் பெருகுமந்த மேலாடுஞ்
சித்த மதிற்றயக்கஞ் சேருங்காண்—நத்துலவும்
பூத்தானத் தாரும் புலன்கொடியே ! பூவுலகிற்
சீத்தாக் கனிக்குணத்தைத் தேர். (அ - கு.)

---

## சீந்தில்—Sindil.

**வே - பெ.—அமிர்தவல்லி, சோமவல்லி, அமிர்தை, அமிர்தக்கொடி, குண்டலி, சீந்திற்கிழங்கு.**

Tinospora Cordifolia (Cocculus Cordifolius).

**Eng.—Heart leaved moon seed.**

**Tel.** Tippa-Tiga తిప్ప తీగ.
**Mal.** Amruta അമൃത്.
**Kan.** Amruta-valli ಅಮೃತವಲ್ಲಿ
**Sans.** Guduchi गुडूची.
**Hind.** Gul-bel گل بیل *

இது கொடியினத்தைச் சேர்ந்தது. அநேகமாய் வேறு மரத்தைப் பற்றியே வளரும் ; மலையடிவாரத்தைச் சேர்ந்த நாடுகளிலும், மேலிந்தியா, பர்மா, இலங்கை முதலிய நாடுகளிலும் ஏராளமாயுண்டாகும்.

இதில் மூன்று பிரிவுடையது.—(1) **சீந்தில்,** (2) **பொற்சீந்தில்,** (3) **பேய்ச்சீந்தில்.** பேய்ச்சீந்தில் என்பது தான் **ஆகாசக்கருடன்** அல்லது **கொல்லன்கோவை** எனப்படுவது.

**ப - உ.**—இலை, கொடி, வேர் (கிழங்கு), சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- முறைவெப்பகற்றி - முறைவியாதிரோதி - Anti-periodic,
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant (Hepatic.)
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி (சொற்ப) - அல்ப மூத்ரவர்த்தநி - Mild diuretic.

அதிக அளவில் வாந்தியுண்டாக்கும்.

இதற்குரிய செய்கைகள் யாவும் குன்றுதிருக்கவேண்டின் இக்கொடியின் கைப்பு மிகவேண்டும். இக்குணமேற்படுவதற்குக் கொடி முதிரவேண்டும். முதிர்ந்த கொடியைக் கோடைக்காலத்தில் சேகரிக்க வேண்டும். மற்ற காலங்களில் சேகரிக்கப்படுவதற்கு இக்குணம் நிறைந்திருக்காது.

### இலை.

**குணமும் வழக்கும்.**—இலையை அனலில் வாட்டிப் புண்களின்மீது போட்டுவர, புண்கள் கரைந்து சீக்கிரத்தில் குணப்படும்.

### கொடி.

முற்றிய கொடியே நற்பயன் தரும். இதனுல் உடல் பலப்படும்.

நசுக்கிய சீந்திற்கொடி பலம் 1. இதை 2 ஆழாக்கு குளிர்ந்த நீரில் சேர்த்து ஒரு சாமம் ஊறியபின் வடிகட்டி, சிறிது இலவங்கப்பட்டை அல்லது இராம்புச் சூரணங்கூட்டி ½ முதல் 1/3 ஆழாக்கு வீதம் நாளொன்றுக்கு 2, 3 தரம் கொடுக்கலாம்.

நன்ருய்ச் சிதைத்த சீந்திற் கொடி பலம் ஒன்று, கொத்துமல்லி, அதிமதுரம் வகைக்கு 1 வராகனெடை, சோம்பு, பன்னீர்ப்பூ, வகைக்கு ½ வராகனெடை, வெந்நீர் 2 ஆழாக்கு இவைகளை ஒரு பாத்திரத்திற் சேர்த்து ஒரு மணிநேரம் மூடிவைத்திருந்து பிறகு வடிகட்டி வேளைக்கு 1/6 முதல் 1/3 ஆழாக்கு வீதம் கொடுக்க முறை சுரம், அசீரணம், உப்பிசம், நாட்பட்ட வாதம், அன்னுசயதாபிதம், பலக்கேடு ஆகியவற்றைப் போக்கும்.

இக்கொடியைக் கொண்டு, சீந்திலெண்ணெய், சீந்திற்கிருதம், சீந்தில் நெய் போன்றவை செய்யப்படும். அவைகளின் முறையைச் "சித்தர் உறை விளக்கத்திற்" காண்க.

இக்கொடியிலிருந்து எடுக்கும் சத்துக்குச் சீந்திற் சருக்கரை எனப்பெயர். இச்சத்து எடுக்கப்படும் முறை சிலவுண்டு. அவற்றைக் கீழ்க்காண்க.—

### சீந்திற் சருக்கரை.

நன்ருய் இடித்த சீந்திற் கொடியைச் சுத்த குளிர்ந்த நீரிலிட்டு, மறுநாள் கடைந்து திப்பியைக் கசக்கிப் பிழிந்து நீக்கி, வெயிலில் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் வைக்க நீர் தெளியும். அந்த நீரை இறுத்துவிட்டு, வேறு சுத்த நீர் விட்டுக்கலக்கி மேற்கண்டபடியே நீரை இறுத்துவிட்டு, மறுபடியும் மேற்படியாகவே செய்து நீரை இறுத்த பின் அடியிற் படிந்திருக்கும் மாவே சீந்திற்சருக்கரையாம். இதை உலர்த்திக் கொண்டு வாயிலிட கைப்பிருக்கும். இதைச் சுரங்களுக்குப் பின்காணும் பலவீனம், மண்ணீரல்வீக்கம் அல்லது வலி, காமாலை, இருமல், மூர்ச்சை, வாந்தி, கபக்கட்டு ஆகியவைகளுக்கு வழங்கலாம்.

நாட்பட்ட மூத்திரப் பையின் தாபிதங்களுக்கு மிகச்சிறந்தது. அளவு ½ முதல் 1 வராகனெடை.

### வேறு.

முற்றின சீந்திற் கொடியின் அடித்தண்டின் மேற் புறணியை நீக்கித் துண்டித்து நிழலிற் காய்ந்தபின் கல்லுரலிலிட்டு இடித்துச் சூரணஞ் செய்து, இதில் 1 படிக்கு 4 படி சுத்தநீர்விட்டு நன்ருய்ப் பிசைந்து பிசைந்துக் கலக்கிப் பாத்திரத்துடன் அசையாமல் வைக்க மா அனைத்தும் பாத்திரத்தினடியில் படிந்திருக்கும். பிறகு, மேல்தெளிந்தநீரை இறுத்துவிட்டு மறுபடியும் மாவில் 4 படி வேறு சுத்த நீர்விட்டு மேற்படியாகவே பிசைந்து பிசைந்து வெயிலில் வைத்துத் தெளிந்த நீரை வடித்துவிடவும். இவ்வாருக மொத்தத்தில் பத்து தரஞ் செய்து, பிறகு 16 பங்கு காடி நீருக்கு 1 பங்கு எலுமிச்சம் பழச்சாறு கூட்டியநீரை மேற்படி மா பங்கு 1-க்கு 4 பங்கு விட்டுக் கலக்கி ஒரு நாள் முற்றும் வைத்திருந்து மறுநாள் தெளிந்த நீரை இறுத்துவிட்டு, 16 பங்கு ஆவின்

மோருக்கு 1 பங்கு எலுமிச்சம்பழச்சாறு சேர்த்துக் கலக்கியதை மேற்படி மா பங்கு 1-க்கு 4 பங்கு விட்டுப்பிசைந்து ஒரு நாள் மட்டும் தெளிய விட்டு மறுநாள் தெளிந்த நீரை இறுத்து, மாவை உலர்த்தி எடுத்துக் கொள்ளவும். இச்சத்துக்குக் கைப்பு அதிகமிராது.

இச்சத்து படி ஒன்றுக்குப் பசுவின் பால் படி ஒன்று, வங்காளச் சீனி படி அரை கூட்டி வெயிலில் உலர்த்திக்கொள்ள, கைப்பு சிறிதுமின்றி மாறும். இது சிறந்த பாகம்.

(அ.இ. சுருக்கம்.)

**குறிப்பு.**—முற்றிய கொடியாயிருந்தால் சத்து வெண்மையாயிருக்கும். முற்றாததாயிருந்தால் சத்து அழுக்கு வெண்நிறமாயிருக்கும்.

இச்சத்தைக் கொண்டு செய்யப்படும் லேகியம்—“அமுத சருக்கரை லேகியம்” எனப்படும். கிருஷ்ணப்பிரக செந்தூரத்துக்கு இதைத் துணை மருந்தாகக் கொண்டு வழங்க மேகசுரம், மேகவெட்டை, அஸ்திசுரம், கபாலச்சூடு, வெட்டைசுரம், குட்டம் போகும். தாது விருத்தியாகும். இருதயம் பலப்படும். இரத்தம் சுத்தியாகும்.

மேலும் இச்சத்தைக் கொண்டு அடியிற்கண்டவை செய்யப்படும் :—

**அமுதாதிச்சூரணம்** (சஞ்சீவிச்சூரணம்)

**அமுதவல்லிச்சூரணம்** - “சித்தர் உறை விளக்கம்” பார்க்க.

### சீந்திற் கிழங்கு.

இதற்குச் சர்வமேகம், இரத்தபித்தரோகம், அதிசுரம், அதிசாரம், மாந்தம், பித்தகணம், ஆமிலபித்தரோகம், சருப்பவிடம் ஆகியவை போம். சடராக்னி பெருகும்.

சீந்திற் கிழங்கருந்தத் தீபனமாம் மேகவகை
போந்தவுதி ரப்பித்தம் பொங்குசுர—மாந்தம்
அதிசாரம் வெய்யகணம் ஆம்பலநோ யோடே
கதிவிடமுங் கெட்டுவிடுங் காண். (அ.கு.)

**வ - கு.**—மேற்கண்ட நோய்களைப் போக்க, இக்கிழங்கைக் குடிநீர் செய்தேனும், சூரணம் - கிருதம் - லேகியம் போன்றவை செய்தேனும் வழங்கலாம்.

## பொற்சீந்தில்—Por-sīndil.

**குணம்.**—பொற்சீந்திற் கிழங்கிற்கு மதுநீர், இளைப்பு நோய் (க்ஷயம்), அதிசுட்கரோகம், சர்ப்பவிடம், இரத்தபித்தரோகம், சுரம் ஆகியவை போம். காயசித்தி யுண்டாகும்.

பொற்சீந்தி லின்கிழங்கு பொங்கு மதுமேகம்
எச்சுகய ரோகம் இளைப்புவிடம்—பச்சையாய்
ஓடிரத்த பித்தம் உயர்சுரங்க ளைக்களையுந்
தேடரிய மேனிதருஞ் சேர். (அ.கு.)

**வ - கு.**—சீந்திற் கிழங்கைப் போலவே இதை மேற்கண்ட நோய்களுக்கு வழங்கலாம்.

## சீமை அத்தி (தேன்அத்தி)—Shímai-Atti ; (Tén – Atti.)

**Ficus Palmata-Forsk.**

**(Ficus Carica - Linn).**

**Eng.—Fig.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Shima-atti | శీమ అత్తి. | Kan. | Shima-atti | ಶೀಮೆ ಅತ್ತಿ. |
| | Tena-atti | తేనె అత్తి. | Sans. | Angurah | अङ्गुरः |
| | Anjuramu | అంజూరము. | Arab. | Anjir | * انجیر |
| Mal. | Shima-atti. | ശീമ അത്തി. | Urdu. | Anjir | * انجیر |

இது சிறு மர வகுப்பில் சேர்ந்த ஒரு வகை அத்தி ; பதினைந்து அடி முதல் 30 அடி உயரம் வரை வளரும்.

இது, முதன் முதல் சிறிய ஆசியா (Asia-minor) விலிருந்து, மற்ற தேசங்களுக்குக் கொண்டுபோய் பயிரிடப்பட்டவைகளுளொன்று. இப்பொழுது வட மேற்கு இந்தியாவில் ஏராளமாய்ப் பயிராகிறது. இத்தாலி, துர்க்கிஸ்தானம் முதலிய தேசங்களில் இதன் பழத்தை ஒரு உணவுப்பொருளாகக் கொள்கின்றனர்.

இம்மரம் வருடத்திற் கிருமுறை பலனைத்தரும்.

மேல் நாட்டில் பயிராகும் மரத்தின் பழம் நம் நாட்டுப்பழங்களை விட தசை உறுதி, மென்மை, பிசுபிசுப்பு உள்ளது. விதை குறைவு. அதிக சுவை, மங்கலான செங்கல்நிறம் பொருந்தி யிருக்கும்.

**ப - உ.**—பால், பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பால்.**

- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**பழம்.**

- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நித்தகாரி - Demulcent.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**வ - கு.**—மேகப்புடை, அக்கரம் இவைகளுக்குப் பாலைத்தடவிவர, இவைகள் நீங்கும்.

படுக்கைக்கு முன் 2, 3 பழங்களைச் சாப்பிட்டுவர, மலபந்தம் நீங்கும். உடல்குளிரும், பருக்கும், இரத்தவிருத்தியு முண்டாம்.

**குறிப்பு.**—நிலவாகை முதலிய இலேகியங்களில் சீமையத்திப்பழத்தையும் சேர்க்க மலச்சிக்கலை எளிதில் போக்கும்.

---

## சீரகம்—Chírakam.

**வே - பெ.—அசை, சிரி, உபகும்பபீசம், நற்சீரி, துத்தசாம்பலம், பிரத்தி—விகா, பித்தநாசனி, போஜனகுடோரி, மேத்தியம்.**

**Cuminum Cyminum.**

**Eng.—Cumin Seeds or fruits.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Jilakarra | జీలకర్ర. | Kan, | Jiriga | ಜೀರಿಗೆ |
| Mal. | Jírakam | ജീരകം. | Sans. | Jirakam | जीरकम् |
| | | | Hind. | Zira | * زیره |

சீரகச் செடி இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிராகின்றது. இதற்கு வாசனையுண்டு.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கார்ப்பு - இனிப்பு ; **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**

**குணம்.**—இதனால் பித்தசாந்தி ஆகும். அரோசகம், வயிற்றுவலி, வாய்ரோகம், பிலீகநோய், சுவாசம், காசம், கல்லடைப்பு, சீதாதிசாரகணி, கம்மல், வாதாதிக்கம், பீநசநோய், பைத்தியம், இவை விலகும். சரீரத்துக்கு வலுவைத் தந்து, கண்ணுக்குக் குளிர்ச்சியையும் உண்டுபண்ணும்.

வாந்தி யருசிகுன்மம் வாய்நோய்பி லீகம்இரைப்
பேந்திருமல் கல்லடைப்பி லாஞ்சனம்உட்—சேர்ந்தகம்மல்
ஆசனகு டாரியெனும் அந்தக் கிரகணியும்
போசனகு டாரியுண்ணப் போம். (தே - கு.)

வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது
காயம் நெகிழாது கண்குளிருந்—தூயமலர்க்
காரளகப் பெண்மயிலே ! கைகண்ட தித்தனையுஞ்
சீரகத்தை நீதினமுந் தின். (அ - கு.)

**வ - கு.**—நன்றாய்ப் புடைத்தெடுத்த சீரகம் பலம் 5, இதை இஞ்சிச் சாற்றில் ஊறவைத்து உலர்த்திப் பிறகு முசுமுசுக்கைச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து உலர்த்தி எடுத்துக்கொண்டு, அத்துடன் ஏலம், சுக்கு, திப்பிலி, மிளகு, கோட்டம், நெல்லிமுள்ளி, நெற்பொரி, வில்வப்பழத் தோல் இவைகளின் சூரணம் வகைக்கு 2 வராகனெடை சேர்த்து ஒன்றாய்க் கலந்து சூரணத்துக்குச் சமன் வெள்ளைச்சருக்கரை சேர்த்து வேளைக்கு ஒன்று முதல் 2 வராகனெடை வீதம் தினம் காலை, மாலை இருவேளையும் கொடுக்க மேற்கண்ட ரோகங்கள் போம்.

சீரகத்தைக் கையாந்தகரைச்சாற்றில் ஊறப்போட்டு எடுத்த சூரணம் ஒரு வராகனெடை, சருக்கரை ½ வராகனெடை, சுக்குச் சூரணம் ½ வராகனெடை இம்மூன்றையும் கலந்து தினமிருவேளையும் உட்கொள்ள, காமாலை, வாயு, உட்சுரம் தீரும்.

சீரகம், சுக்கு, ஏலம், நெல்லிமுள்ளி இவைகளின் சூரணம் சமனெடை எடுத்து, அவ்வளவிற்குப் பாதி சருக்கரை சேர்த்துத் திரிகடிப் பிரமாணம் காலை, மாலை கொள்ளப் பித்தம் சாந்தியாகும்.

சீரகம், ஏலம், பச்சைக்கற்பூரம் இவைகளின் சூரணம் சமபாகம் எடுத்து, நேர்நிறை சருக்கரை சேர்த்துத் திரிகடிப்பிரமாணம் காலை , மாலை சாப்பிட மந்தவாயு தீரும்.

சீரகத்தைப் பொடித்து வெண்ணெயில் கொடுக்க எரி குன்மம் நீங்கும்.

சீரகம், குறுந்தொட்டி வேர் சமனெடை கூட்டிக் கஷாயஞ் செய்து சாப்பிட, மூன்று நாள் 6 வேளையில் குளிர்சுரம் நீங்கும்.

சீரகம் பலம் 1, உப்பு தேவையான அளவு, சேர்த்தரைத்து நெய் விட்டுத்தாளித்து, தேன் அல்லது சருக்கரையுடன், வாத பித்த ரோகங்களுக்கு உபயோகிக்கலாம்.

சீரகம் பலம் 1½ நீரைப் பழச்சாற்றிலரைத்து, நல்ல வெல்லம் பலம் ½ சேர்த்துப் பிசைந்து, புதுச் சட்டியில் அப்பி 3 நாள் வெயிலில் காய வைத்து எடுத்து வெருகடிப்பிரமாணம் காலை, மாலை 10 நாள் சாப்பிட, பித்த வெட்டை, மேக வெட்டை, கைகால் குடைச்சல், எரிச்சல், குலை எரிச்சல் முதலிய நோய்கள் நீங்கும்.

ஒரு படி சீரகத்தைத் துணியில் மூட்டை கட்டிப் பாலில் 12 மணி நேரம் ஊற விட்டு எடுத்து, மூட்டையோடு பிசைந்து, பிசைந்து, சுத்த நீரில் மூன்று விசை அலம்பி எடுத்து, இடித்து நீர்விட்டு மைப்போல் அரைத்து, சட்டியிலிட்டுச் சிறு தீயில் வெதுப்பித் தக்க அளவு நெய் விட்டுப் புட்டுப் போல் சிவந்தபின், இறக்கி எடுத்த எடைக்குப் பாதி கற்கண்டு கூட்டித் திரிகடிப்பிரமாணம் காலை, மாலை கொடுத்து இச்சாபத்தியம் வைக்க, பித்த வெட்டை, உட்டாச்சல் உள்வேட்கை, உள்வறட்சி, இருமல், நீர்மேகம், நீர்க்கட்டு, சருவ உஷ்ணரோகமும் நீங்கும்.

சீரகத்தூள் பலம் 10, கற்கண்டு பலம் 10 இத்துடன் கரும்பு இரசம், நாரத்தம் பழ இரசம், இஞ்சி இரசம், பழ இரசம், கருப்பூரவள்ளி இரசம் வகைக்குப் பலம் 5 சேர்த்து, இலேகியஞ் செய்து, வேளைக்கு ½ முதல் 1 வராகனெடை வீதம் சாப்பிட்டு வர பித்த ரோகங்கள் தணியும்.

சீரகச் சூரணம் 1/8 தோலா, நாட்டுச்சருக்கரை 1/8 தோலா கூட்டி, எந்த வயதுடையவரேனும் கொள்ள 10 வருஷத்துக்குக்குறையாமல் வெள்ளை கண்டிருந்தாலும் அது வெகுசீக்கிரத்தில் தீரும்.

சீரகத்தையும் உப்பையும் நன்றாய்க் கசக்கிப் பொட்டுநீக்கி வாயிலிட்டுச் சுவைத்துத் திப்பியைத் துப்பிவிடவும். இதனால் அசீரணம், அசீரணபேதி, வயிற்றெரிச்சல் நீங்கிப் பசியுண்டாகும்.

சீரகத்தைச் சுண்ணாம்பு நீர்விட்டுக் கலந்து சிறிது ஊறியபின் முறத்தி லிட்டுத் தேய்த்துப்புடைத்துலர்த்திப் பழரசம் விட்டரைத்து, அரசிலையில் வைத்து வேகவைத்து ஆறவிட்டு, மறுபடியும் 6 முறை இப்படியே செய்து கொடுக்கச் சிறு குழந்தைகட்குண்டாகும் பேதி நீங்கும்.

சீரகத்தைப் பழச்சாற்றில் ஊறவைத்து நெய், சருக்கரை சேர்த்து இலேகியஞ் செய்து சாப்பிடச் சகல ரோகங்களையும் கண்டிக்கும். தீபனம் அதிகரிக்கும்.

சீரகம் 5 பலம், உலர்ந்த கற்றாழை 5 பலம், பனைவெல்லம் 5 பலம், பால், நெய் தக்க அளவு சேர்த்து இலேகியமாகச் செய்து சாப்பிட, வயிற்றுவலி, நீர்ச்சுருக்கு, எரிவு, வெப்பம், அசீரணம், கண்ணெரிவு, கை, கால், தேக எரிச்சல், ஆசனக்கடுப்பு, மலக்கட்டு இவை நீங்கும்.

ஒரு பலம் சீரகத்தை ஒரு படி நல்லெண்ணெயில் இட்டுக் காய்ச்சிச் சீரகம் ஒடியத்தக்க பதத்தில் வடித்துக் கொள்ளவும். இதை தேய்த்துத் தலை முழுகிவர, பித்த மயக்கம், நேத்திர ரோகம், வாந்தி ரோகம், தலைவலி, மந்தம், முதலியன நீங்கும்.

பத்து பலம் சீரகத்தை வல்லாரைச்சாற்றில் 4 நாள் ஊறவைத்து, உலர்த்திப் பசுவின்பாலிலரைத்து, 20 பலம் பசுவின் வெண்ணெயில் கலந்து ஒரு நாள் ஊறவைத்துக் காய்ச்சி அதில் 10 பலம் கற்கண்டு, திரிசுகந்தம், அரத்தை, ஓமம் இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் ½ சேர்த்துக் கலந்து வைத்துக்கொண்டு, பித்தம், வயிற்றுவலி, அரோசகம், சர்த்தி, அக்கினிமந்தம், விக்கல் இவைகளுக்கு, 2 முதல் 4 வராகனெடை வீதம் கொடுக்கலாம்.

ஆய்ந்து, சுண்ணாம்பு நீர் தெளித்துத் தேய்த்துப் புடைத்து உமியை நீக்கிச் சுத்தி செய்த சீரகம் 10 பலத்தை ஒரு ஆழாக்குப் புளியாரை இரசத்தில் ஊறவைத்து வெயிலில் உலர்த்திக்கொள்ளவும். பின் எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், பொன்னாங்காணி, முசுமுசுக்கை, கற்பூரவள்ளி,

புளி மாதுளம்பழம், மணத்தக்காளி இலைகளின் இரசத்தில் முறையே மேற்கூறிய பிரகாரம் ஊறவைத்து உலர்த்திக்கொள்ளவும். கடைசியாக 2 பலம் சயிந்தலவணத்தை இஞ்சிச் சாற்றில் கரைத்து அதில் மேற்படி சீரகத்தை ஊறவைத்து உலர்த்தி எடுத்துக் கொண்டு வேளைக்கு ½—1 வராகனெடை வீதம் உட்கொள்ள, வயிற்று வலி, அசீரணம் முதலிய நோய்கள் தீரும்.

**பஞ்சதீபாக்கினி லேகியம்.**—சீரகம், சுக்கு, திப்பிலி, மிளகு, ஏலம் இவைகளின் சூரணம் வகைக்கு 3 ரூபாயெடை, இரண்டு படி பசுவின்பாலில் 24 ரூபாயெடை பனை வெல்லத்தைக் கரைத்துப் பாகு செய்து, அதில் சூரணத்தை விட்டுத் தூவி, நெய் 1/8 படி விட்டுக் கிண்டி, தேவையான அளவு தேன் சேர்த்துப் பிசைந்து வைத்துக்கொண்டு, கொட்டைப்பாக்களவு சாப்பிட்டு வர, உஷ்ணவாயு, பித்தவாயு, உளைவு, குத்துவலி, கடுப்பு, எரிச்சல், பேதி, பொருமல், கிரகணி முதலியன தீரும்.

இதை வாசனைக்காகவும், சீரண சக்தியுண்டாவதற்காகவும் போசன பதார்த்தங்களுடன் சேர்ப்பது வீட்டு வழக்கம்.

---

## கருஞ்சீரகம்—Karunjchírakam.

**வே - பெ.—அரணம், உபகுஞ்சிகை.**

Nigella Sativa.

**Eng.—Black Cumin ; Small Fennel.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Nalla-jilakarra నల్లజీలకర్ర. | **Sans.** | Upakunchika उपकुञ्चिका<br>Krishna-jiraka कृष्ण-जीरकम् |
| **Mal.** | Karinchírakam കരിഞ്ചീരകം | **Hind.** | Kulanji * کلونجی *<br>Kala-Zira * کالا زیرہ |
| **Kan.** | Kari-jirige ಕರಿಜೀರಿಗೆ. | | |

இது இந்தியாவில் சற்றேறக்குறைய எல்லாப் பாகத்திலும் பயிராகும்.

**ப - உ.**—விதை. (இது சிறியவுருவமுடையது, முக்கோண வடிவம், கருநிறம்).

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு

**செய்கை.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- தூக்குணிப்புழுக்கொல்லி - க்ருமிக்நி - Parasiticide.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—மண்டைக்கரப்பான், விரணம், சிராய்ப்பீநசம், உட்சூடு, தலை நோய், கண்ணோய், இவைகளும், சிரங்கு, வயிற்றுப் பொருமல், குன்மம் மார்புவலி, இருமல், வாந்தி, ஒக்காளம், வீக்கம், காமாலை, ஆகியவை களும் கருஞ்சீரகத்தால் நீங்கும்.

கருஞ்சீ ரகத்தான் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சிராய்ப் பீநசமு மாற்றும்—அருந்திறல்
காய்ச்சல் தலைவலியுங் கண்வலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை (அ.கு.)

**வ - கு.**—இதன் சூரணத்தைக் காடியுடன் கலந்து உட்கொள்ள குடலிலுள்ள புழுக்கள் வெளிப்படும். இதையே 3-7 நாள் வரையில் காலை ½, மாலையில் 1 வராகனெடை வீதம் உபயோகிக்கப் பைத்திய நாய்க்கடி, இதர நச்சுக்கடி விடம் தீரும்.

இதன் சூரணத்தை நொச்சிக் கஷாயத்துடன் உபயோகிக்க மேகப் பிடிப்பு சுரம், விட்டுவிட்டு வருகின்ற சுரம் தணியும்.

இதை வெந்நீர் விட்டரைத்து சீதளத்தலைவலி, கீல்வீக்கம், சோபை இவைகட்கு மேற்பூச்சாகப் பூசக் குணமுண்டு. இதைக் காடிவிட்டரைத்துச் சருமப்புடைகளுக்குப் பூசலாம்.

பசுவின் நீர் அல்லது சிறுவர்களின் சிறுநீர் விட்டரைத்து வீக்கதிற்குப் பூசக் குணமுண்டு.

தேன்விட்டரைத்துப் பிரசவத்திற்குப் பின் நேரிடும் வலிக்குப் பூசலாம்.

ஆற்றுத்துமட்டிச் சாறு விட்டரைத்து இருபக்க விலாக்களிற் பூசக் குடலிற்றங்கிய புழுக்கள் வெளிப்படும்.

இதை அரைத்து நல்லெண்ணயில் குழப்பிக் கரப்பான், சிரங்கு இவைகளுக்குப் பூச நன்மை தரும்.

இதன் சூரணத்தைத் தேன் அல்லது நீரில் கலந்து கொடுக்க வயிற்றுப் பொருமல், கல்லடைப்பு முதலிய காரணங்களால் உண்டாகும் மூச்சு முட்டல் நீங்கும்; மோருடன் கலந்து கொடுக்க விடா விக்கல் தீரும்; சூதகக்கட்டு, சூதகச்சூலை இவைகட்கு ¼-¾ வராகனெடை வீதம் கொடுக்கலாம். அதிக அளவில் கொடுக்கப் பிண்டத்தை வெளிப்படுத்தும்.

இதன் திராவகம் அல்லது தைலத்திற்கு அநேக குணங்களுண்டு. அவைகளில் ஒன்றை முகர்ந்தாலும், பூசினாலும் சீதளத்தாலுண்டாகும் தலைநோய், மூக்குநீர் வடிதல், நரம்பைப்பற்றியவலி, இடுப்புவலி நீங்கும்.

இதன் தைலத்தை வெற்றிலையில் பூசித்தின்ன வீரிய விருத்தியும், ஆண்குறியிற்பூச போக சக்தியும் அதிகரிக்கும்.

---

## காட்டுச்சீரகம்—Káttu-chirakam.

**Vernonia Anthelmintica.**

**Eng.—Purple fleabane.**

| | |
|---|---|
| **Tel.** **Adavi-jilakarra** అడవి జీలకఱ్ర | **Sans.** **Vanajeerakam** वनजीरकम |
| **Mal.** **Kāttu-jíragam** കാട്ടുജീരകം. | **Hind.** **Kalouji jangli** کلونجی جنگلی * |
| **Kan.** **Vana-jirige** ವನಜೀರಿಗೆ. | |

இந்தியா முழுவதிலும், கிராமங்களுக்குச் சமீபமான பூமிகளிலும் வளரும் சிறு செடி.

**ப - உ.**—இலை, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- முறைவெப்பகற்றி - முறைவியாதிரோதி - **Antiperiodic.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - **Alterative.**

**குணம்.**—காட்டுச்சீரகத்தால் உள்ளங்கைக் கரும்புள்ளி, பிரமேகம், பைத்தியம், வாதகுன்மம் இவைபோம். குளிர்ச்சியுண்டாகும்.

> கைகறுப்பு மாறுங் கடியமே கம்போகும்
> மெய்குளிரும் பித்தம் விளையுமோ—வெய்யகரிக்
> கோட்டுப் பணைமுலையாய் ! குன்மவா தந்தொலையுங்
> காட்டுநற் சீரகத்தைக் காண் (அ.கு.)

**வ - கு.**—இலையை அல்லது வேரை அரைத்து வாத வலிகளுக்கு மேலுக்குப் பற்றிடலாம்.

விதையைப்பொடித்து முக்கால் வராகனெடைத் தேன் அல்லது நெய் யில் கலந்து தினமிருவேளைக் கொடுத்துப் பிறகு பேதிக்குக் கொடுக்க, வயிற்றுக் கிருமிகள் வெளிப்படும்.

இச்சூரணத்தை சிறிய அளவாகக் கொடுத்துவர வயிற்றுப்பொருமல், இருமல் சுகமாகும்.

இச்சூரணத்தோடு, மிளகுச் சூரணம் அல்லது எள்ளுச் சூரணம் சமனெடை சேர்த்து, ஒரு வராகனெடை வீதம், தினமும் காலையில் வெந்நீரில் சாப்பிட்டுவர, வெண்குட்டம் முதலிய சரும நோய்கள் குண மாகும்.

அரை வராகனெடை விதையைக் கஷாயமிட்டும் கொடுக்கலாம்.

விதையைப் பழரசம் விட்டு அரைத்து, சொறி சிரங்குகளுக்குப் பூச லாம். தலையில் தேய்க்கப் பேன்கள் சாகும்.

---

## கேக்குவிதை—Kékku-Vitai.

**வே. - பெ.—சீமைச்சோம்பு.**

**Carum Carui.**

**Eng.—Caraway seeds or fruits.**

| | |
|---|---|
| **Tel. Sima Sompu** సీమసోంపు. | **Hind. Vilayati-zirah** * ولایتی زیرہ |
| **Mal. Kékku-vitha** കേക്ക് വിത്ത്. | |

இது மேல்நாடுகளில் இங்கிலாந்து, ஜர்மனி முதலிய இடங்களிலும், இந்தியாவில் குளிர்ச்சியான மலைப்பிரதேசங்களிலும் கிடைக்கும். நல்ல சுகந்த மணமுடையது. பழத்திலிருந்து எடுக்கப்படுகிற விதை மஞ்சள் நிறமுடையது.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதனால் வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி,அக்னிமந்தம் போம். விரேசனகாரிகளுடைய வீரத்தையடக்கும், மருந்துகள் வாசனை பெறவும் உதவும்.

**வ - கு.**—மருந்துகளுக்கு வாசனைக்காகவும், மசாலைச்சாமான்களோடு சேர்த்தும் உபயோகிப்பது வழக்கம்.

**இதிலிருந்து எண்ணெய், தீநீர் எடுக்கிறார்கள்.**

**சீமைச்சோம்புத்திநீர்..**—1 பலம் சீமைச்சோம்பு, 20 பலம் சுத்த நீர் வாலையிலிட்டுப் பாதி வடித்தெடுத்துக்கொள்ளவும். இதில் வேளைக்கு 1 அல்லது 2 பலம் உட்கொள்ள மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

**சீமைச்சோம்பு எண்ணெய்.**—இது திநீர்மீது படிந்திருக்கும். இதில் $\frac{1}{2}$—3 துளி வரையிலும் உபயோகிக்கலாம்.

---

## பிளப்புச்சீரகம்—Pilappu-chírakam.

**வே - பெ.—சீமைச்சீரகம்.**

**Carum Nigrum.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Sima.jilakara** సీమజీలకర్ర. | **Kan.** | **Shima-jirige** ಶೀಮೆ ಜೀರಿಗೆ. |
| **Mal.** | **Shima-jiragam** ശീമ ജീരകം. | **Hind.** | **Shah-zirah** * شاہ زیرہ |

இது இந்தியாவின் சில பாகங்களில் பயிராகிறது. முக்கியமாய் இறக்குமதி செய்யப்படும் பொருள்களில் ஒன்று.

**ப - உ.**—விதை.

**சுவை.**—சீரகத்துக்குடையதே.

**செய்கை.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—இதனால் நீங்காப் பைத்தியமும், வாதகோபமும் நீங்கும். சரீர அழகு உண்டாகும்.

உடலுக் கழகாம் உறைபித்தம் ஏகும்
அடலுறு வாதம் அதமாம்—கடிசேர்
தளவுநகைக் கோட்டுமுலைத் தையலே! நாளும்
பிளவுநறுஞ் சீரகத்தைப் பேண். (அ.கு.)

**வ - கு.**—நற்சீரகத்தை வழங்குவதைப்போல் இதையும் வழங்கலாம்.

---

## பெருஞ்சீரகம்—Perunj-chírakam.

**வே. - பே.—சோம்பு, வெண்சீரகம்.**

**Pimpinella Anisum.**

**Eng:—Anise seeds ; Anise fruit.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Sopu** సోపు.<br>**Pedha-jilakarra** పెద్ద జీలకర్ర. | **Kan.** | **Sompu** "ಸೋಂಪು"<br>**Sopu-gida** ಸೋಪು ಗಿಡ<br>**Dhodda-jirige** ದೊಡ್ಡ ಜೀರಿಗೆ. |
| **Mal.** | **Perinchírakam** പെരുഞ്ചീരകം. | **San.** | **Sthula jeerakam** स्थूलजीरकम् |
| | | **Pers.** | **Badiyan** * بادیان |

இது பூண்டு வகுப்பிற் சேர்ந்தது. இதன் வித்து வெண்ணிறத்துடன் கலந்த சிறிது பச்சை நிறமுடையது; நீண்டவுரு; அடிகனத்து மேல் குறுகியிருக்கும்; வாசனையுள்ளது; 2/10" நீளம், 1/10" முதல் 2/10" அகலமுள்ளது. இந்தியாவில் எங்கும் பயிராகும்; வட இந்தியா, பாரசீகம், ஐரோப்பாவின் மத்தியபாகம், தென்பாகம் இவ்விடங்களில் ஏராளமாகப் பயிரிடப்படுகிறது.

**ப - உ.**—பூ, விதை, வேர்.

**சுவை.**—வாசனையுடன்கூடிய கார்ப்பும், இனிப்பும், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—சோம்பு - வாமினியோனிரோகம், வயிற்றுவலி, சுரம், அசீரணம், வயிற்றுப்பிசம், நுரைத்தகபவிருமல், பிலீகம், சுவாசம், ஈனத்தொனிவாதம், பீநசம் ஆகியவற்றை நீக்கும்.

யோனிநோய் குன்மம் உளுட்சைமந் தம்பொருமல்
பேனம்உறு காசம் பிலீகமிரைப்—பீனஉரை
சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகத்தால்
மூக்குநோ யில்லை மொழி. (அ.கு.)

மேலும் கருப்பவாயுவைக் கண்டிக்கிற குணமுமுண்டு.

**வ - கு.**—இதை இலேசாக வறுத்துச் சூரணஞ் செய்து வேளையொன்றுக்கு $\frac{1}{8}$—$\frac{1}{2}$ வராகனெடை வீதம் தனியாகவாவது, சருக்கரையுடன் கலந்தாவது தினமிருவேளைகொள்ள மேற்கூறிய நோய்கள் விலகும்.

### சோம்புத்தீநீர்.

சோம்பு 1-க்கு நீர் 20 பங்குவிட்டு வாலையிலிட்டு வடிக்கத் தீநீரிறங்கும். 1/12—1/3 ஆழாக்கு வரையில் வழங்கலாம்.

### சோம்புத்தைலம்.

தீநீரின்மீது படிந்திருக்கும் தைலம் சோம்புத்தைலமாகும். $\frac{1}{2}$—3 துளி உபயோகிக்கலாம். வேறு பொருள்களுடனும் சேர்த்துபயோகிக்கலாம்.

### பெருஞ்சீரகப்பூ.

இதிலும் சோம்பைப்போலவே தீநீரெடுத்து, அதற்குரிய அளவாகவே குழந்தைகளுக்கு வழங்க வயிற்றுப்பொருமல், கக்கிருமல் தீரும். பேதி மருந்துகளுடன் சேர்த்துக்கொடுக்கலாம். வெகுட்டல் இராது.

## சுக்கான்காய்—Chukkánkái.

**வே - பெ.—தும்மட்டிக்காய், கொம்மட்டி.**

இது இந்தியாவில் சாதாரணமாய் எங்கும் கிடைக்கும் கொடி வருக்கம்.

**ப - உ.**—இலை. வேர், காய்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**இலை—வேர்.**

**செய்கை.**
- நீர்மலம்போக்கி - விரேசநி - **Purgative.**

**காய்.**
- கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**

**குணம்.**—காயால் வாததோடம் நீங்கும். வற்றல் வாதத்தையும், அரோசகத்தையும் நீக்கும்.

> மைக்குழலே ! நீகேளாய் வாதம்அறும் பித்தம்என்பார்
> சுக்காண்காய் வற்றல்அது தொல்லுலகில்—கைக்கின்ற
> வாயுவை நீக்கும் வரும்அருசி போக்கிவிடும்
> நீயும் அறிவாய் நிசம். (அ.கு.)

**வ - கு.**—இலை இரசத்துக்கும், வேரின் இரசத்துக்கும் விரேசனகாரி குணமுண்டு.

காயினால், சுவாசம், பித்தம், வாதசிலேத்துமம், குன்மம், காசம் இவை நீங்கும், இதை வற்றலிட்டுப் பதார்த்தமாக உபயோகிக்கிறார்கள்.

---

## சுக்காங்கீரை—Chukkángh-kírai.

**வே - பெ.—சுக்குக்கீரை.**

**Rumex Vesicarius.**

**Eng.—Yellow dock.**

| | |
|---|---|
| **Tel.** Pullapraballi పుల్లప్రబలి. | **Sans.** Amla-Vetasàm अम्लवेतसम् |
| **Mal.** Pulivanchi പുളിവഞ്ചി. | **Hind.** Chukka چکّ |

இப்பூண்டு எல்லா விடங்களிலும் வளரும். சென்னை இராஜதானியில் விசேஷமாய் உண்டு.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - **Sedative.**

**குணம்.**—ஈரலுக்கு வலுவைத் தந்து பசி தீபனத்தை விருத்தி செய்து சீரண சக்தியை அதிகரிக்கச் செய்யும். சூட்டினாலுண்டான வாயு, நெஞ்செரிச்சல், கரும்பித்தம் முதலியவைகளைக் கண்டிக்கும். இரத்தபேதி, பித்தபேதி முதலியவைகளை நிறுத்தும்.

**வ - கு.**—சமூலத்தைக் கஷாயமிட்டுக்குடிக்க மேற்கூறிய குணங்கள் உண்டாகும்.

வேரைக்கொண்டு பல்துலக்கிவர ஈறு கரைதல், ஈற்றுப்புண் குணமாகும்.

## சுக்கு—Chukku.

**வே - பே.**—அருக்கன், அதகம், ஆர்த்ரகம், உபகுல்லம், உலர்ந்தஇஞ்சி, கடுபத்திரம், சுச்சு, சுண்டி, சொண்டி, சௌபன்னம், சௌவர்ணம், நவசுறு, நாகரம், மஹௌஷதம், விச்வ பேஷஜம், விடமுடியஅமிர்தம், வேர்க்கொம்பு.

Zingiber Officinalis

Eng.—Dried Ginger.

Tel. Sonti శొంఠి.

Mal. Chukka ചുക്ക്.

Kan. Ona Shunti or Sunti ಒಣಶುಂಠಿ, ಶುಂಠಿ.

San. Nàgaram नागरम्

Hind. Sonth * سونٹھ

Arab & Pers. Zangebilarataba * زنجبيل رطب

இது உலர்ந்த இஞ்சி. இஞ்சிச்செடி இந்தியாவில் எங்கும் பயிரிடப் படுகின்றது.

**ப - உ.**—கிழங்கு (உலர்ந்த).

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—சுக்கினால் விலாக்குத்தல், அசீரணம், மார்பெரிச்சல், புளி யேப்பம், தோடகுணம், வெப்பம், ஆசனநோய், சுவாசம், காசம், நீர்ப்பீ நசம், நீரேற்றம், மேகவாதகுன்மம், சலதோடம், சீதகிரகணி, வாதநோய், வயிற்றுப்பிசம், செவிக்குத்தல், முகநோய், சிரநோய், சூலைவலி, கபஸ் ராவம், சீதபேதி, பலவித அரோசகம், அலிமுகப்பாண்டு, வயிற்றுக் குத்தல், கபசீதசுரம் போம்.

சூலைமந்தம் நெஞ்செரிப்பு தோடம்ஏப் பம்அழலை
மூலம் இரைப்பிருமல் மூக்குநீர்—வாலகப
தோடமதி சாரந் தொடர்வாத குன்மம்நீர்த்
தோடம்ஆ மம்போக்குஞ் சுக்கு. (அ.கு.)

வாதப்பிணிவயி றூதற்செவிவாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழிநீர்
சீதத்தொடுவரு பேதிப்பலரோ
சிகமலி முகமக முகஇடி கபமார்
சீதச்சுரம்விரி பேதச்சுரநோய்
தெறிபடும் எனமொழி குவர்புவி தனிலே
ஈதுக்குதவுமி தீதுக்குதவா
தெனும்விதி யிலைநவ சுறுகுண முனவே. (தே.கு.)

**வ - கு.**—சுக்கைக் களி செய்து நெற்றிக்கிடத் தலைவலியும், கழுத்தின் மீதிட தொண்டைவலியும், புருவத்தின்மீதிட அண்மைப்பார்வைத் தோட மும் நீங்கும்.

சுக்கு, கற்கண்டு, வகைக்கு வராகனெடை ஒன்று, இரண்டையும் பொடி செய்து, காலை மாலை இருவேளையும் இளநீரில் ஒரு சிட்டிகைப் பிரமாணம் கொடுக்கச் சுவையெடுத்து உடம்பதிர்ந்து நெஞ்சுவலிப்பதும், மேல்சுவாசம் காண்பதும் நீங்கும்.

சுக்குத்தூளில் திரிகடிப் பிரமாணம் அப்போது கறந்த பசுவின்பால் ஆழாக்கில் சேர்த்துகொடுக்க உருத்திரவாயு நீங்கும். பசியுண்டாம்.

சுக்கு 1 பங்கு, இதை கையாந்தகரைச் சாற்றில் ஒரு நாள் ஊறப் போட்டும், ஏலம் 1 பங்கு இதை இஞ்சிச் சாற்றில் ஒரு நாள் ஊறப்போட்டும் இரண்டையும் ஒன்று சேர்த்து மேற்படி இரண்டு சாற்றையும் சமவெடை கூட்டி யதில் நனையவிட்டு வெயிலில் 3 நாள் வைத்து ; முதல் மூன்று நாளும் சுண்டிய சாற்றளவு விட்டு வந்து நான்காம் நாள் முதல் சாறு விடாமலே வெயிலில் நனியுலர்த்திச் சூரணஞ் செய்து, காலை மாலை, கால் முதல் அரை வராகனெடை அளவு நெய்யுடன் சேர்த்து உட்கொண்டுவர வீரியவிருத்தி யுண்டாம். பழைய சாதம், புகையிலை கூடாது.

சுக்கை வாயிலிட்டு மெல்ல, பல்வலி சாந்தமாம்.

ஒரு சிறு துண்டு சுக்கைக் காதினுள் செலுத்தக் காதடைப்பு, கனைப்பு, சீதளம் நீங்கும்.

சுக்கையரைத்து மூட்டு வீக்கங்களுக்குப் பூச வீக்கம் நாளுக்கு நாள் குறையும்.

சுக்கை விதிப்படிக் கஷாயமிட்டு ¼ முதல் ½ ஆழாக்கு வீதம் நாளொன் றுக்கு இரண்டு மூன்று முறை உட்கொள்ள மந்தம், வயிற்றுவலி, வாந்தி, உதரசூலை, நாட்பட்டசுரம், வயிற்றுப்பொருமல், அரோசகம் நீங்கும்.

கற்சுண்ணும்பு, உப்பு, பசுஞ்சாணம் இவைகளால் தனித்தனியாகக் கவசித்துக் கும்பிச் சாம்பலில் வேகவைத்தெடுத்த சுக்கைச் சூரணஞ் செய்து ½—1 வராகனெடை வீதம் நெய்யுடன் கலந்து கொடுக்க உஷ்ண பேதி, வயிற்றெரிச்சல், மந்தாக்கினி குணமாம்.

சுக்கை மென்று சாரத்தை மாத்திரம் விழுங்கத் தொண்டைக்கட்டு, குரற்கம்மல் நீங்கும்.

சுக்கைப் பிரதானமாகக் கொண்ட முறைகள் :—சௌபாக்யசுண்டி இலேகியம், கண்டாத்திரி இலேகியம், நாகராதிபூஷணம், சுக்குச்சூரணம், தயிர்ச்சுண்டி, சுக்குத்தைலம் முதலியன. (சித்தர் உறை விளக்கம்).

சுக்கை முலைப்பால் விட்டுரைத்து இலேசாக நெற்றியில் பற்றிட்டு நெருப் பனல் படும்படிக் காட்டத் தலைவலி நீங்கும்.

### சௌபாக்யசுண்டி.

சுக்கு பலம் 8, இதை மேல் தோல் சீவி சிறு துண்டுகளாக வெட்டி, செம்முள்ளி, செந்திரா, முருக்கிலை, கரிசாலை, சிறு செருப்படை இவைகளின் சாறு வகைக்குப் படி ½. இச்சாறுகளில் தனித்தனி ஊறப்போட்டு உலர்த்திச் சூரணஞ் செய்து தக்கோலம், வாலுழுவை, கூகைநீறு, கரியபோளம், வாய்விடங்கம், தான்றி, நெல்லிவற்றல், திப்பிலி, திப்பிலிமூலம் இவை களை இளவறுப்பாக வறுத்துச் சூரணஞ் செய்து வகைக்குப் பலம் 1. அமுக்கரு, பொன்முசுட்டைவேர், கண்டங்கத்திரிவேர், நன்னாரிவேர், நிலப்பனை இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் இரண்டு. மேற்கண்ட சூரணங்கள் யாவற்றிற்கும் சமபாகம் சர்க்கரை. இதைப் பசுவின்பால் படி இரண்டுடன் கூட்டிக் காய்ச்சிப் பாகுபதத்தில் மேற்படிச் சூரணங்களைச் சிறுகச் சிறுகத் தூவி இலேகியபதமாக்கிக்கொள்க. இதில் நாளொன்றுக்கு காலை மாலை இருவேளையும் அரை முதல் இரண்டு வராகனெடை அளவு கொள்ள, பிரமியம், சூசிகாவாயு, அந்தரவாயு, வாதசூலை, வாதபித்த தொந்தரோகம், அக்னிமந்தம், வாயூறல், வாய்க்கசப்பு, மேகம் போன் றவை தீரும்.

உப்பு, புளி, புகை, பெண்போகம் இவைகளை நீக்கவும்.

## சுண்டை—Chundai.

வே - பெ.—மலைச்சுண்டை, கடுகி.

Solanum Verbacifolium.

Tel. Uste-kaya ఉస్తెకాయ | Mal. Chundak-káya ചുണ്ടക്കായ്.

இது பெரும்பாலும் மலைகளில் பயிராகும் செடி. ஆனைச்சுண்டை என ஒரு சாதியுமுண்டு.

ப - உ.—காய், வற்றல், வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை. { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic. }

**காய்.**

**குணம்.** நெஞ்சிற்றங்கிய கபம், கிருமிரோகம், வாதாதிக்கம் போம். வாய் கசக்கும்.

நெஞ்சின் கபம்போம் நிறைகிருமி நோயும்போம்
விஞ்சுவா தத்தின் விளைவும்போம்—வஞ்சியரே !
வாயைக் கசப்பிக்கும் மாமலையில் உள்ளசுண்டைக்
காயைச் சுவைப்பவர்க்குக் காண். (அ.கு.)

**வற்றல்.**

பித்தஅருசி, மலக்கிருமி, கிரகணி, ஆசனத்துவாரச் சீதக்கட்டு நீங்கும். பசியையுண்டுபண்ணும். மார்ச்சளி, கிருமிரோகம், அசீரணபேதி, மூல வியாதி முதலியவைகளுக்கும் உபயோகிக்கலாம்.

பித்தஅ ரோசகம்போம் பேராப் புழுச்சாகும்
உற்ற கிராணியறும் உட்பசியாஞ்—சத்தியமாய்ப்
பண்டைக் குதஆமம் பற்றும்இங் கியாரையுந்தான்
சுண்டைக்காய் வற்றலுண்ணச் சொல். (அ.கு.)

**வ - கு.**—இதன் காயை விசேஷமாய்ப் பதார்த்த ரூபத்தில் உபயோகிப்பார்கள். காயை வற்றல் செய்து தின்பது வழக்கம்.

உலர்ந்த சுண்டைக்காயை போதுமானவளவு நன்ருய்ப்புளித்த மோரும் உப்புங் கலந்து காயவைத்து உலர்த்தி எடுத்துக்கொண்டு பதார்த்தமாக உபயோகிக்கலாம். பத்தியத்திற்கு ஏற்றது.

சுண்டைவற்றல், கருவேப்பிலை, மாங்கொட்டைப்பருப்பு, ஓமம், நெல்லிவற்றல், மாதுளைஓடு, வெந்தயம் இவற்றைச் சமனெடை எடுத்துத் தனித்தனி இளவறுப்பாய் வறுத்துச் சூரணஞ் செய்து கூட்டித் திரிகடிப் பிரமாணம் காலை, மாலை இருவேளையும், மோரில் கொடுக்க மேற் கூறிய நோய்கள் விலகும்.

காயைச் சிற்றுமணக்கெண்ணெய் விட்டு வறுத்து, உப்பு, மிளகு, சீரகம், கறிவேப்பிலை, வெந்தயம் இவைகளையும் சிறிது வறுத்துக் கூட்டிப் பொடித்துச் சோற்றுடன் கலந்து, மூலவியாதி, அக்னிமந்தம், அசீரணம், இவைகளுக்குக் கொடுப்பது உண்டு.

வேர்ப்பட்டையைச் சூரணஞ் செய்து தேங்காய்க் குடுக்கையில் வைக்க வேண்டும். இச்சூரணத்தில் ஒரு சிட்டிகை மூக்கிலிழுக்க, சிரோபாரம் நீரேற்றம், சீதளம், மண்டைக்குடைச்சல், ஒற்றைத்தலைவலி, பீநசம் இவை போம். மூர்ச்சாரோகத்திற்கும், சந்நிபாதத்திற்கும் உபயோகிப்பதுண்டு.

சண்டைவேர், தும்பைவேர், இலுப்பைப்பிண்ணாக்கு, இம்மூன்றுஞ் சமனெடை எடுத்துச் சூரணஞ் செய்து ஆக்கிராணஞ் செய்யச் சந்நிபாதம் தீரும்.

**ஆனைச்சுண்டை.**

இதன் வேரைக் கஷாயம் செய்து வாதசுரத்துக்குக் கொடுப்பதுண்டு.

---

## சுரை—Churai.

**Lagenaria Vulgaris.**

**Eng:—Bottle Gourd.**

**Tel.** Sorateega సొరతీగ.

**Mal.** Chura ചുര.

**Kan.** Kahisore ಕಹಿ ಸೋರೆ.

**San.** Alabu अलाबु

**Hind.** Lanki * لنکی

இது இந்தியா முழுவதும் பயிராகிறது. இதில் இருவகையுண்டு. ஒன்று **இனிப்பு**, மற்றொன்று **கைப்பு**. கைப்புக்குக் **காட்டுச்சுரை** என்று பெயர்.

**ப - உ.**—இலை, கொடி, காய், விதை.

**சுவை.**
- இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.
- **காட்டுச்சுரை.**
- கைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை.**
- நீர்மலம்போக்கி- விரேசநி - **Purgative.**

**காய், விதை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி- **Cooling.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி **Diuretic.**
- உடலுரமாக்கி - போஷணகாரி - **Nutritive.**
- பித்தசமனி - பித்தசாந்தநி - **Anti-bilious.**

**காட்டுச்சுரை.**
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - **Emetic.**
- பெருமலம்போக்கி - விரேசனகாரி - **Cathartic.**

**கொழுந்து, இலை.**

**குணம்.**—இதனால் சோபை, நீங்காமுத்தோடங்கள் இவைகள் நீங்கும். மலமிளகி இறங்கும். நீரிறங்கும்.

நீரிழியும் வீக்கம்போம் நேரே மலம்இறங்கும்
பாரமுறு சோபை பறக்குங்காண்—தீராத்
திரிதோடம் போகுஞ் செறிந்த சுரையின்
உரிய கொழுந்திலையை யுண். (அ.கு.)

**காய்.**

இதனால் வாதபித்தம், அருசி, பீலிகரோகம், ஆமம், மார்புநோய் இவையுண்டாகும். உட்சூடு நீங்கும்.

வாதபித்தம் வாய்அருசி வன்பிலீ கஞ்சீதம்
ஓதிருத்து நோயும்உண்டாம் உள்ளனல்போம்—ஓதத்
திருப்பாற் கடற்றிருவே ! தீக்குணத்தை மேவுஞ்
சுரக்காயைத் தின்பவர்க்குச் சொல். (அ.கு.)

இலை, கொடி.

வீக்கம், மூத்திரச்சிக்கல் விலகும். கொடியால், பைத்திய ரோகங்கள் போகும்.

சுரையிலையோ சோபையொடு தோன்றுநீர்க் கட்டைத்
தரையிலையோ வைக்காமற் சண்ணுஞ்—சுரையினது
தண்டோபித் தத்தைத் தரிக்கவொட் டாதடிக்குங்
கண்டோ ருரைப்பார்கள் காண். (அ.கு.)

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டு, சருக்கரை கலந்து காமாலை நோய்க்குக் கொடுக்கலாம்.

சமூலக் கஷாயத்தை வீக்கம், மகோதரம், நீர்க்கட்டு இவைகளுக்குக் கொடுப்பது வழக்கம்.

கொடியை மூத்திர விருத்திக் கஷாயங்களில் சேர்த்துக் கொடுப்பது வழக்கம்.

சுரைக்காயின் உட்பாகத்தை வெப்பத்தினுலுண்டாகும் தலைவலிக்கு நெற்றியில் வைத்துக் கட்டலாம். காந்தல்வாதத்துக்குப் பாதத்தின்உட்புறம் வைத்துக் கட்ட எரிச்சல் தணியும்.

சுரைக்காய் இருமலைத் தணிக்கும். சமைத்துச் சாப்பிடலாம்.

சுரைக்காய் குடுக்கையைச் சுட்ட கரியை இரசவேக்காட்டுக்குக் கொடுக்கலாம்.

காட்டுச் சுரைக்காய்ச் சாம்பலுடன் தேன் சேர்த்துக் கண்ணிலிட மாலைக் கண் சுகமாகும்.

இதன் சாறுடன் எண்ணெய் சேர்த்துக் காய்ச்சிக் கண்டமாலைக்குப் போடக் குணமாகும்.

---

## சுளுக்குநாயகம்—Chuḷukku-náyagam.

இது பூண்டுவகை. இந்தியாவில் பல இடங்களிலும் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வீக்கமுருக்கி - சோபாநாசநி - **Deobstruent.**
வீக்கங்கரைச்சி - **Resolvent.** }

**குணம்.** இதனுல் சப்த தோடம், சுரமெலிவினுல் வந்த தேகச் சுளுக்கு, சுபாவக் கைகால்களின் சுளுக்கு, இரத்தங்கட்டிய காயங்களுக்கு மேலுண்டாகிற இரத்தத்தடிப்பு ஆகியவை போம்.

சுளுக்கு நாயகந் தோடஞ் சுரமொடு
சுளுக்கும் வாங்குந் தொடுத்தகை கால்களின்
சுளுக்குமேற் கறடுங் கரைக்குஞ் சொனேம்
சுளுக்கு மேல்வீ ழிரத்தந் துடைக்குமே. (அ.கு.)

**வ - கு.**—இலை அல்லது சமூலத்தை அரைத்து மேற்கூறிய நோய்களுக்குப் பற்றிட அவைகள் அகலும்.

## சூரியகாந்தி—Súriya-kánthi.

**வே - பெ.—சூரியகாந்தம்.**

Helianthus Annuses.

Eng:—Sunflower.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Suryakanthi సూర్యకాంతి. | Kan. | Suryakanthi ಸೂರ್ಯಕಾಂತಿ. |
| Mal. | Súryakanthi സൂര്യകാന്തി. | Sans. | Adityabhakta आदित्यभक्ता |
| | | Hind. | Hurdya ہردیا* |

இது இந்தியாவில் எல்லா இடங்களிலும் கிடைக்கக்கூடிய பூண்டு. சாதாரணமாய்த் தோட்டங்களில் அலங்காரமாக வைத்துப் பயிராக்குகிறார்கள். பூ மஞ்சள் நிறம்.

**ப - உ.**—பூ, விதை.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதற்குச் சந்திகளிலுண்டாகும் வாதரோகங்களும், நீரேற்றமும் போம்.

சந்திர..............................
.................................—சந்திலுறும்
பாரிய வாதம் பருகுநீ ரேற்றமும்போம்
சூரிய காந்திக்குச் சொல்.

(அ.கு.)

**வ - கு.**—பூவைக் கஷாயமிட்டுக் குடிக்க மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெயை வெளிப்பிரயோகமாகவும் உபயோகிக்கலாம்.

---

## சூரை—Chúrai.

Zizyphus Napica.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Telumani Chettu తెలుమాని చెట్టు. | Mal. | Chura - ചൂര് |
| | | Sans. | Kakoli काकोली |

இது காரை இனத்தைச் சேர்ந்தது. அதில் இது ஒரு வகையெனவும் கூறலாம்.

**ப - உ.**—வேர் அல்லது கிழங்கு, பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**குணம்.**—இதனால் அதிமந்தமும், சீதளமும், குடல்வலியும் உண்டாகும்.

மந்தம் அதிகரிக்கும் வன்சீதளஞ் சேரும்
உந்து குடல்வலியும் உண்டாங்காண்—முந்துநவில்
காரைப் பழத்தில் கதித்தஒரு பேதமுமாஞ்
சூரைப் பழத்திற்குச் சொல்.

(அ.கு.)

**வ - கு.**—பழம் குடலுக்கு ஒவ்வாது.

இதன் வேரை, சதாவேரிக் கிழங்கைப்போல இலேகியங்களிலும் சூரணங்களிலும் சேர்த்து வழங்கலாம்.

---

## செப்புநெருஞ்சில்—Cheppu—nerunjil.

### Indigofera Enneaphylla.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Palleru | పల్లేరు. | Kan. | Kennegilu | ಕೆನ್ನೆಗಿಲು. |
| Mal. | Cheru-Nerinchil | ചെറുഞെരിഞ്ഞിൽ. | Sans. | Gokshura | गोक्षुर: |

இது இந்தியாவில் எல்லா விடங்களிலும் பயிராகும் படர் கொடி. சிவந்த சிறு பூவுடையது. இதற்கு 9 இலைகள் உண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதனால் திரிதோடம், சுர முதலிய நோய்கள், சுக்கில மேகம், நீடித்த உட்சூடு ஆகியவை நீங்கும்.

செப்புநெ ருஞ்சில் திரிதோடம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டுங்காண்—செப்பரிய
சுக்கிலமே கம்போக்குந் தொல்லை அனல்மாற்றும்
மிக்கு மருந்துநீ விள். (அ.கு.)

**வ - கு.**—சமூலத்தை வெந்நீர் ஊறல் கஷாயமிட்டு மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்க மிக்க பயனுண்டாகும். சிறுநீரைப் பெருக்கித்தள்ளும்.

இது செந்தூர மூலிகைகளில் ஒன்று. இரச வீரியத்தை யடக்கும். **பஞ்சசூத மெழுகு** செய்வதற்கு இது மிகச் சிறந்தது.

---

## செம்பரத்தை—Chemparattai.

**வே - பெ.—சப்பாத்து.**

### Hibiscus Rosa-Sinensis.

### Eng:—Shoe Flower.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Dásáni-Chettu | దాసాని చెట్టు. | Sans. | Japà | जपा. |
| Mal. | Chemparathi | ചെമ്പരത്തി. | Arab. | Angharoàq | * انگهروق |
| Kân. | Dásvàladagida | ದಾಸವಾಳದ ಗಿಡ. | Hind. | Jásún | * جاسون |
| | | | Duk. | Jàsut | * جاسوت |

இது சைனு, வட இந்தியாவுக்குரியதெனக் கூறுவர். ஆயினும் தென்னிந்தியாவில் தோட்டங்களில் வைத்துப் பயிரிடப்படுகின்றது, பம்பாய் முதலிய இடங்களில், இதன் பூக்களின் நிறவேற்றுமையையும், அடுக்குகளையும் குறிப்பிட்டு 12 விதங்கள் இருக்கின்றதென அறிந்துளோம். அவ்விடங்களில் இச்செடியை அழகுக்காகப் பாதையோரங்களில் பயிரிட்டு வளர்க்கின்றார்கள்.

ப - உ.—இலை, பூ, வேர்.

சுவை.—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

பூ.

**குணம்**.—இதனால் மேகவெள்ளை, பிரமியமேகம், இரத்தப்பிரமேகம், பெரும்பாடு, இரத்தபித்தம் இவை நீங்கும்.

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்த வெள்ளை வழுவழுப்பும்—வெம்பும்
பெரும்பாடு ரத்தபித்த பேதம் அகற்றும்
கரும்பா மொழிமயிலே ! காண். (அ.கு.)

**வ - கு.**—இலைச்சாற்றை தண்ணீரிற் கலந்து வெள்ளை நோய்க்குக் கொடுக்கலாம். அல்லது கஷாயமிட்டுக் கொடுக்கலாம்.

பூவை முறைப்படிக் குடிநீர் செய்து அல்லது ஊறல் கஷாயமிட்டு வேளைக்கு ¼ ஆழாக்கு வீதம் கொடுத்துவர, மூத்திர வியாதிகளைக் கண்டிக்கும். பெரும்பாட்டை நிறுத்தும். தேகத்திற்குக் குளிர்ச்சியைத் தரும்.

இக்கஷாயத்துடன் பால், சருக்கரை, ஓமம் சேர்த்து வெள்ளைக்குக் கொடுக்கலாம்.

பூவிதழ் 1 பங்கு, நீர் 6 பங்கு சேர்த்துச் சிறு தீயிட்டு எரித்து ½ பாகமாக்கிப், பிசைந்து வடிகட்டி, சீனிச்சருக்கரை சேர்த்து மணப்பாகு செய்து இதில் ½ முதல் 1 பலம் வரையிலும் மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

செம்பரத்தம் பூவின் சாறுக்குச் சமபாகம் ஜைதூனெண்ணெய் அல்லது தேங்காய் எண்ணெய் சேர்த்துச் சிறு தீயிட்டு நீர் சுண்டும் வரை எரித்து எடுத்துக் காற்றுப்படாமல் ஒரு குப்பியில் அடைத்து வைத்துக்கொண்டு, சிரசில் தடவிவர, மூளைக் குளிர்ச்சியடைந்து மயிர்கள் கறுத்துச் செழுமையாய் வளரும்.

இதன் வேர்ச்சூரணம், தாமரைக்கிழங்குச் சூரணம், முள்ளிலவுப்பட்டைச் சூரணம் இம்மூன்றும் சமனெடை எடுத்து, ஒன்று முதல் ஒன்றரை வராகனெடை நீரிற் கலந்து உட்கொள்ள, பெரும்பாட்டை நிறுத்தும்; மூத்திர வியாதிகளைப் போக்கும்.

இதன் வேருடன், ஆடாதோடை இலை சேர்த்துக் கஷாயமிட்டு இருமலுக்குக் கொடுக்கலாம்.

பூவின் மொக்கை உலர்த்திச் சூரணித்து, விந்து நட்டம், மூத்திரப்பைத் தாபிதம் இவைகளுக்குக் கொடுத்துவரலாம்.

---

## செம்பருத்தி—Chemparuththi.

### Gossypium Arboreum.

### Eng:—Red Cotton Tree.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Erra Patti | ఎఱ్ఱపత్తి. | Sans. | Raktakarpsa | रक्तकार्पासः |
| Mal. | Chuvanna Paruthi | ചുവന്ന പരുത്തി. | Hind. | Nurma | * نورما |
| | | | Pers. | Kapas. | * کپاس |

இச்சிறு மரவகை இந்திய சமவெளிகளில் பயிரிடப்பட்டு வளருகிறது. தோட்டங்களில் அலங்காரமாகவும் வைத்து வளர்க்கிறார்கள் இதன் பூ சாதாரண பருத்திப் பூவின் வடிவத்தில் செந்நிறமாக இருக்கும். பருத்தி வருக்கத்தைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பூ, காய், பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - cooling.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**

**குணம்.**—தேக அழற்சி, இரத்தபித்தரோகம், உதரக்கடுப்பு, சலமேகம், வெள்ளை, விடேசி முதலிய பேதிகள், தாகம் இவை நீங்கும்.

செம்பருத்திப் பூஅழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீற்—றம்பனச்செய்
மேகத்தை வெட்டையை விடேசிமுதற் பேதியையுள்
தாகத்தை ஓட்டிவிடுந் தான். (அ.கு.)

**வ - கு.**—இலையை அல்லது பிஞ்சுக் காயைக் கஷாயமிட்டு உள்ளுக்குக் கொடுக்கலாம். இத்துடன் ஏலக்காய், ஓமம், கருவாப்பட்டை முதலிய சரக்குகள் சேர்த்துக் கஷாயமிட்டருந்தப் பேதி நிற்கும்.

பூவின் இதழ்களை, தாய்ப்பால் அல்லது பசுவின் பாலில் ஊற வைத்துப் பிழிந்து எடுத்தச் சாற்றை, குழந்தைகளின் கண்ணோய்க்கு வழங்கலாம்.

வேரைக் கஷாயமிட்டு நாட்பட்ட சுர ரோகத்துக்குக் கொடுத்துதவலாம்.

---

## செம்பை—Chempai.

### Sesbania Aegyptica.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Sominda** సోమింద. | | **Sāns.** | **Jayantika** | जयन्तिका |
| **Mal.** | **Iththikkanni** ഇത്തിക്കണ്ണി. | | **Hind.** | **Jetrasin** | * جیت راسن |
| **Kan.** | **Karijeenangi-Mara** ಕರಿಜೀನಂಗಿಮರ. | | **Duk.** | **Ravasin** | * رواسن |

இது இந்தியாவில் எப்பாகங்களிலும் எல்லா விடங்களிலும், பயிராக்கப்பட்டும், தானாக வளர்ந்துமிருக்கக்கூடிய சிறிய மரம். இதில் மூன்று விதமுண்டு. அவை **கருஞ்செம்பை, மஞ்சள்செம்பை, செஞ்செம்பை** யாம்.

**ப- உ.**—இலை, பூ, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - **Emmenagogue.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி -**Astringent.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic**
- வீக்கங்கரைச்சி - **Resolvent.**

### கருஞ்செம்பை.

**குணம்.**—கருஞ்செம்பை இலையால் விப்புருதிக்கட்டி, கரப்பான், பிரமேகம், பித்த சிலேஷ்மதொந்தம் ஆகிய இவைகள் போம்.

விப்புருதிப் புண்ணுறும் வீறுகரப் பானும்போந்
தப்பாமல் மேகந் தணியுங்காண்—வெப்பார்
கபரோக மேகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கெபமா முலேமாதே ! எண். (அ.கு.)

பூ.

தலைக்குத்தல், கபநோய், சலதோடம், வாததோடம், பீநசம், கபால சூலை, முதலிய தோடங்கள் நீங்கும்.

தலைக்குத்த லையுஞ் சலதோடம் வாதம்
உலைப்பீ நசமுமிந்த வூர்க்குள்—நிலைக்கா
தருஞ்சன்ன பகநாசி யாயிழையே ! சுத்தக்
கருஞ்செம்பைப் பூவிருக்குங் கால் (அ.கு.)

செம்பையிலை.

வாயுவின் கட்டிகள், சோபை, சரீர நீரேற்றம், வாதசிலேத்துமதொந்தம் ஆகியவைகள் ஒழியும்.

கட்டி யொடுவீக்கங் காயத்துள் நீரேற்றம்
ஒட்டிவரு வாதகபம் ஓட்டுவது—தொட்டுவிடும்
அம்பையிலை வேலைவென்ற வங்கண் மடமாதே !
செம்பையிலை வேலையெனத் தேர். (அ.கு.)

வ - கு.—இலையை வதக்கி வீக்கங்களில் வைத்துக்கட்ட, பழுத்து உடையும். மேலும், விரணம், வாதநீர் வீக்கங்கள் முதலியவைகளுக்கு வதக்கிக்கட்ட நீரை இழுக்கும்.

பச்சையிலையின் ரசத்தை மலக்கிருமிகளைப் போக்க வழங்குவதுண்டு.

இதன் இலையை உப்பு, குப்பைமேனி இவைகளோடு சேர்த்து அரைத்துச் சருமத்தைப்பற்றிய சொறி, சிரங்கு முதலிய நோய்களுக்குத் தேய்த்து முழுக்காட்டிவரக் குணமாகும். இத்துடன் இதன் பட்டையை அரைத்து உள்ளுக்குக் கொடுத்துவர வேண்டும்.

பூவை எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைமுழுகத் தலைப்பாரம், கபாலச்சூலை, பீநசம் முதலியன நீங்கும்.

விதைகளை அரைத்து உள்ளுக்குக் கொடுக்க அசீரணபேதி, பெரும்பாடு, விப்புருதிக்கட்டி இவைகள் நீங்கும்.

வேரை நன்றாய் இடித்து நீர் அல்லது காடியில் குழப்பித் தேள்கடி வாயில் வைத்துத் தேய்த்துவரச் சுகமாகும்.

---

## செருப்படை—Cheruppadai.

**வே - பெ.—செருப்படி, சிறு செருப்படி.**

**Glinus Laloides.**

**Sans.** **Hamsapathi** हंसपादी | **Tel.** చెప్పుతట్టాకు.

இது இந்தியாவில் எப்பாகங்களிலும் வெயிற்காலத்தில் பயிராகும் ஓர்வகைக்கொடி. இது இருவகைப்படும். **சிறுசெருப்படை, பெருஞ்செருப்படை.**

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதற்கு வாத கோபம், மந்தாக்னி, வெள்ளைவீழல், ஆகிருஷ்ணஸ்தம்பணவாதம், சூலை, வாதகுன்மம் ஆகியவை நீங்கும்.

செருப்படைக்கு வாதமந்தஞ் சேர்வான மேகம்
இருப்படிகொள் பொல்லா இசிவும்—விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தோற்ரு தொருநாளும்
வேலையொத்த கண்ணுய் ! விளம்பு. (அ.கு.)

**வ - கு.**—மேற்கண்ட நோய்களைப்போக்க இதைச் சூரணமாகவேனும் கஷாயமாகவேனும் செய்து வழங்கலாம்.

இது செந்தூர மூலிகைகளில் ஒன்று. உலோக வகைகளைச் செந்தூரஞ் செய்ய உதவும்.

---

## செவ்வியம்—Chevviyam.

**வே - பெ.—கண்டீரை, சவிகை, சவியம்.**

இதுவே மிளகின் வேர். மிளகின் குணங்களும் இதற்குண்டு. ஆனல் மிளகின் வீரியம் இதற்கிராது.

**குணம்.**—செவ்வியத்தால் சூலை, அரோசகம், சந்நிபாத சுரம், நீடித்த காசம், ஈளை, பயித்தியம், குரற்கம்மல், தொண்டைநோய், புராணசுரம், எலும்பைப்பற்றி ஏறுகின்ற தாவரவிடம் ஆகியவைகள் போம்.

சூலை அருசிசந்நி தொல்லிருமல் ஈளைபித்தம்
மேலைக் குரற்கம்மல் வெங்களநோய்—மூலசுரம்
கவ்வியங்கத் தேறு கனதா வரவிடமுஞ்
செவ்வியங் கொள்ளவிடுந் தேர். (அ.கு.)

**வ - கு.**—இதைச் சூரணம் செய்து நாள் ஒன்றுக்கு இருதரமாக ¼, ½ வராகனெடை வீதம் கொடுத்துவரலாம். அல்லது கஷாயஞ் செய்தும் உபயோகிக்கலாம்.

இது பல யோகங்களில் சேருகின்ற சரக்குகளில் ஒன்று.

---

## சேம்பு—Chémbu.

**வே - பெ.—சாமைக்கிழங்கு, சேமைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு.**

**Arum Colocasia.**

**Eng.—Cocco.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Chamagadda** | చామగడ్డ. | **Kan.** | **Kesave** | ಕೇಸವೆ. |
| **Mal.** | **Chémpa** | ചേമ്പ്. | **Hind.** | **Kachu** | कचु. |

இது இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாய் வளருகின்றது. மேலும் உணவுக்காகவும் மருந்துக்காகவும் இந்தியா முழுவதும் பயிரிடப்பட்டும் வருகிறது. இதில் அநேக இனங்கள் உண்டு. **வெண்மை, கருமை** முதலியன.

ப - உ.—தண்டு, இளங்குருத்து, கிழங்கு.

சுவை.—கரகரப்பு, துவர்ப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை.
- குருதிப்பெருக்கடக்கி - ரத்தஸ்தம்பனகாரி - Styptic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- தடிப்புண்டாக்கி - க்ஷோணகாரி - Rubefacient.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.

குணம்.

இலைக்கு - சுட்க மூலரோகம் நீங்கும்.

" சேம்பிலைக்கு நற்புளியைச் சேர்த்துச் சமைத்துண்டால்
சூம்பிட்ட மூலமறுங் கூறு." (அ.கு.)

கிழங்கு - வாதகபம், தொண்டைக்கோழைக்கட்டு இவற்றையுண்டாக்கும். நல்ல மருந்தின் குணத்தைக் கெடுக்கும். இதையுண்பதால் மேகசாந்தியுண்டாகும்.

வாதக பத்தையுள்ளே வைத்திருக்குந் தின்றக்கால்
கோதிலாத் தொண்டைதனிற் கோழைகட்டும்—மாதரசே !
உண்மருந்தின் நற்குணத்தை ஓட்டுஞ்சேம் புக்கிழங்கு
தண்மேக சாந்தியென்பர் தாம். (அ.கு.)

வ - கு.—இலையை அல்லது தண்டைப் புளி சேர்த்துச் சமைத்துண்டால் சுட்கமூலம் நீங்கும்.

இதன் கிழங்குகளை வீக்கங்களுக்கும், கட்டிகளுக்கும் வைத்துக் கட்டலாம்.

தண்டின் இரசம் வெட்டுக்காயங்களிலுண்டாகும் இரத்தத்தை நிறுத்தும். விரணத்தைச் சீக்கிரத்தில் ஆற்றும். காதுவலி, காதுச் சீழ் முதலியவைகளுக்கு இதன் இரசத்தில் இரண்டொரு துளி விடலாம்.

குளவி முதலிய சில்விடச் செந்துக்கள் கொட்டின வாயில் இவ்விரசத்தைத் தடவ வேதனை நீங்கும்.

கருஞ்சேப்பந்தண்டு இரசத்துடன் உப்புச் சேர்த்து நெறிக்கட்டிகளுக்குப் பூச அவை அமுங்கும்.

சேம்புக்குப் புளி சேர்த்துச் சமைத்துண்பது நாட்டு வழக்கம். நாவிற்கு மிக இதமாயிருக்கும். ஆனதுபற்றியே " சிறியார்க் கினியதைக் காட்டாதே, சேம்பிற்குப் புளியிட விடையாதே " எனப் பழமொழியும் வழங்கலாயிற்று.

---

## சேராங்கொட்டை—Chérangkottai.

**வே - பெ.—சேங்கொட்டை, வல்லாதி, வல்லாதகி, எரிமுகி, பல்லாதகி, சிட்டாக்கனிக்கொட்டை.**

**Semicarpus Anacardium.**

**Eng:—Marking-nut tree.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Jeedi-ginjalu | జీడిగింజలు. | Sans. | Bhallataka Bíjam | भल्लातकबीजम् |
| Mal. | Chéra | ചേര്. | Arab. | Hab-ul-kalba | * حب الكلب |
| Kan. | Ger-kayi | ಗೇರಕಾಯಿ. | Hind. | Bhilawan | * بهلاوان |

இது மர வகையிற் சேர்ந்தது. இமயமலைச் சாரலிலும், வங்காளத்தின் கீழ்பாகத்திலும், மற்றும் இந்தியாவின் இதர வெப்பப் பிரதேசங்களிலும் பயிராகும்.

ப - உ.—விதை.

**சுவை.**—கைப்பு, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
புண்ணாக்கி - விரணகாரி - Caustic.

**குணம்.**—இது குட்டம், கயம், விடபாகம், கிருமி, சூலே, கிரந்திக் கூட்டம் இவைகளைப் போக்கடிக்கும். மேலும், உடம்புத்திமிர்நோய், தீராக்கடிவிடம், மூலம், வாதரோகம், குன்மம் இவைகளையும் விலக்கும்.

குட்டங் கயரோகங் கொல்லும் விடபாகந்
துட்டந் தருகிருமி சூலேயும்போம்—மட்டலருங்
கூந்தன்மயி லே ! கிரந்திக் கூட்டம்போஞ் செங்கையில்
ஏந்துசேங் கொட்டைதனை யே. (அ.கு.)

சேங்கொட்டை மெய்த்திமிரைத் தீராக் கடிவிடத்தைப்
பாங்கொட்டு மூலத்தைப் பற்றறுக்கும்—ஆங்கெட்டிக்
கொல்லும்வா தத்தினொடு குன்மத்தை யும்மதனை
வெல்லும் அயிற்கண்ணாய் ! விள். (அ.கு.)

இஃதன்றி, கருங்குட்டம், சருமத்திமிர், கிரந்தி, துட்டக்கிருமி, விடரோகங்கள், காணாக்கடிவிடம், விடபாகம், சொறி, சிரங்கு, விரணம், கீல்பிடிப்பு, சூலே, வாதகுன்மம், மகாவாத ரோகங்கள், உள்மூலம், கயகாசம், முதலிய நோய்களையும் போக்கவல்லது.

இக்கொட்டையில் பிசுபிசுப்புள்ள ஓர்வித எண்ணெய் உண்டு. இது கருநிறமுள்ளது. கொட்டையைச் சிதைத்துத் தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சச் சற்றேறக்குறைய 100-க்கு 32 பங்கு எண்ணெய் தேறும். இரண்டொன்றாய் வெட்டி ஒரு மட்பாத்திரத்திற்போட்டு பூப்புடத் தைலமெடுப்பதும் வழக்கம்.

**குறிப்பு.**—இக்கொட்டையை நசுக்கி எடுக்கும் எண்ணெய்க்குப் பால் **என்று கூறு**வது வழக்கம். இப்பால் மிகவும் கெட்டது. தேகத்தில் பட்டால் பட்டவிடங்களில் புண் உண்டாகும். சில சமயம் இப்புண்கள் விரணங்களாகி மரணாவஸ்தையை யுண்டுபண்ணும். இப்பாலின் வாடை பட்டாலும், பெரும்பாலாருக்கு முகவீக்கங் காணும், தேகம் நீர் கொள்ளும், மூத்திரத்தைக் குறைக்கும். ஆகையால் வெகு சாக்கிரதையாக இதை உபயோகிக்கவேண்டும்.

இதனாலுண்டாகும் விடத்தை முறிக்க, புளியிலைக் கஷாயம், அல்லது தேங்காய்ப்பாலே உள்ளுக்குக் கொடுக்கலாம். புளி, புங்கு இம்மரங்களின் காற்றுப்பட்டாலும் விடம் முறியும். வங்க உப்புச் செயநீரையும் உபயோகிக்கலாம்.

இதைத் தக்கபடி (சுத்திக் கிரமந்தப்பாது) சுத்தி செய்து, இதன் குணத்தைப் பாதுகாக்கும், இதர சரக்குகளுடன் சேர்த்து முடித்த மருந்து அமிர்தமெனப்போற்றும் பெருமை யுடைத்து.

இதை உபயோகிக்கும் வகை தெரியாது திராட்சையைப் பறிக்க வந்த நரிபோல் ' சீ, சீ, இது என்ன மருந்து ' என்று சிலர் எக்கங் கொள்வார்கள்.

சுருங்கச் சொல்லின் யாவரும் மெச்சும் இரசத்தால் தீரும் பெரு நோய்களும், இக்கொட்டையால் தீருமெனக் கூறலாம்.

சேராதழகு வடிவினுக்குச் சேருமதிகப் பசியுண்டாம் [யுண்டாம்
சேங்கன்றென்ன வுரமுண்டாஞ் சேகண்டியைப்போல் தொனி
சேடனெனவே யின்பமெல்லாஞ் சேரத்துணையா மென்மேலும்
சேயின் முகம்போல் களையுண்டாம் சேர்க்கேதனன்போல் எழிலுறுமே.
(தே.க.)

காற்பாச மாகக் கடுப்புகா வின்முன்னே
காற்பாச மாகக் கதறுமே—காற்பாசஞ்
சேரா விரைக்கற்பஞ் சீராவா மெய்க்கதனூற்
சேரா விரைக்கற்பந் தின். (தே.ய.)

காலிலே விலங்கிருப்பதைப்போல் நடக்கவொட்டாமற் கால்களை முடக்கும் வாத ரோகங்களும், அதனாலுண்டாகும் சரீரக்குத்தலும், பெருங் காற்றை எதிர்த்த பஞ்சாகும் ; இயமனுடைய பாசக்கயிறு விரைந்து சேரா ; சரீரத்துக்கு மேன்மையும் அழகும் அமைந்த கவசமும் ஆகும். ஆதலால் இதன் இலேகியம், கிருதம், சூரணங்களில் ஒன்றைக் கற்பமாகக் கொள் என்பது போன்ற முன்னோர் மொழியாலறிக.

இப்படிப்பட்ட பெருமையுடைய பொருளை அலட்சியஞ் செய்வது சுத்திக் கிரமத்தை அனுசரியாது வந்த காரணமேயாகும்.

**சுத்திக் கிரமம்.**—சேராங்கொட்டை மூக்கை மாத்திரம் வெட்டி, புதுச் சுண்ணாம்புக் கல்லுக்குள் வைத்துக் காடிவிட்டு நீற்றவும். இப்படி ஏழு முறை செய்த பின்பு சுத்த நீரில் கழுவி, சாணிப்பால், புளியிலைக் கஷாயம், புரசம்பூக் கஷாயம், கற்றாழைச் சோற்றுநீர், பனங்கள், சிவப்புப் பசுவின் தயிர், ஷை பால், இளநீர் ஆகிய இவைகள் ஒவ்வொன்றிலும், ஒன்றின்பின்னொன்றாக எடுத்து அதில் அவித்து, வெயிலில் ஒன்பது (9) நாள் உலர்த்தி எடுக்க முதல்தரமான சுத்தியாகும்.

இதைக்கொண்டு இலேகியம், சூரணம், கிருதங்கள் செய்ய அவைகள் மிக்க பயனைத் தரும்.

### வல்லாதகி லேகியம்.

வ - கு.—

(a) { சுத்தி செய்த சேராங்கொட்டை,
பறங்கிச்சக்கை, வகைக்குப் பலம் ஒன்று.

(b) { திரிகடுகு, திரிசுகந்தம், திரிமஞ்சள், ஓமத்துவயம்,
சீரகத்துவயம், சிற்றரத்தை, கொத்துமல்லி, சித்திரமூலம்,
தான்றிக்காய், சிறுதேக்கு இவை வகைக்குப் பலம் 1/8.

(c) குங்குமப்பூ, கோரோசனை, கஸ்தூரி, வகைக்குப் பலம் 1/16,

(d) { எள்ளு, வெள்ளுள்ளி, கர்ச்சூரம், நெய் வகைக்குப் பலம் 1,
வெல்லம் பலம் 10, தேன் பலம் ½.

(a) என்று குறியிட்ட சரக்குகளைக் கல்லுரலிலிட்டு, கட்டப்பாரையால் மெழுகுபோல் இடித்து, (b)-யிற் கண்ட சரக்குகளின் மெல்லிய சூரணத்தைச் சிறுகச் சிறுகக்கூட்டி இடித்து, அதன்பின் (d)-யில் உள்ளதைச் சிறுகச் சிறுகக்கூட்டிச் சாடிக்கையில் (c)-யைச்சேர்ந்தவைகளைச் சேர்த்து இடித்திடித்து மெழுகுபோல் (யாதொரு பளபளப்பு, மினுமினுப்பு இல்லாதபடி) ஒன்றுபட இடித்து நெற்குவியலில் 90 நாள் புதைத்து வைத்து உபயோகிக்கவும்.

இப்படி அநேக முறைகளை அகத்தியர் வல்லாதி 600, காவியம் 1,500 முதலிய நூல்களில் காண்க.

---

## சேவகனார் கிழங்கு—Chèvaganàr—Kizhangu.

**குணம்.**—கபரோகத்தை அடியோடு போக்கும். மரணத்தைத் தரத்தக்க விடத்தையும் கண்டிக்கும்.

கபரோகந் தன்னைக் கடலில்விழச் செய்யும்
அபமிருத்து வாம்விடத்தை யாற்றும்—இபமுலவும்
காவக நாடாக் கருங்குயிலே ! கண்டுரைத்த
சேவக னூர்கிழங்க தே.

(அ.கு.)

**வ - கு.**—இதைக் குடி நீர் அல்லது சூரணஞ் செய்து உட்கொள்ள மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## சோளம்—Chòḷam.

### Holcus Sorghum.

### Eng.—Maize.

**Tel.** Jonna జొన్న. | **Kan.** Jola ಜೋಳ.

**Mal.** Chólam. ചോളം. | **Sans.** जूर्णकम्

இது தானிய வகைகளில் ஒன்று. தென்னாட்டிற்கே உரியது. இத்தானியம் இந்நாட்டில் அபரிமிதமாய்ப் பயிரிடப்பட்டு வந்ததினாலேயே "சோழமண்டலம்" எனவும் அதை ஆதாரமாகக்கொண்டு ஆங்கிலேயர் இந்நாட்டைச் சேர்ந்த கரைக்கு "கோரமண்டல் கோஸ்ட்" (Coramandel Coast) எனப் பெயரிட்டனர் எனவும் கூறப்படுகின்றது. இது புன்செய் நிலத்தில் விளையும். ஏழை மக்களின் உணவாகக் கொள்ளப்படுகின்றது.

இத்தானியத்தில், **கருஞ்சோளம், செஞ்சோளம், காக்காய்ச்சோளம், மக்காச்சோளம், வெள்ளை** அல்லது **முத்துச்சோளம்** எனப் பலவகை உளது. இவைகளில் **மக்காச்சோளம்** மிகவும் விசேஷித்தது. இதை மேனாட்டார் உணவுக்காக வழங்கி வருகிறார்கள்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடலுரமாக்கி - போஷணகாரி - **Nutrient.**
மலமிளக்கி - லகுவ்ரேசநி - **Laxative.** }

**குணம்.**—இதன் சாதம் உடலில் சொறி, சிரங்கு, கரப்பான் இவைகளையுண்டாக்கும். மருந்தைக் கெடுக்கும் ; வீரிய விருத்தியுண்டாக்கும்.

சோளமெனப் பேர்படைத்த சோறுகளி னால்உடலில்
மீளச் சொறிசிரங்கு விர்த்தியதாம்—நாளுங்
கரப்பனும் உண்டாகும் கனமருந்தும் பாழாம்
பரப்பனைய கண்மாதே ! பார்.

(அ.கு.)

**வ - கு.**—இதன் விதையை யிடித்து மாவாக்கிக் கஞ்சி காய்ச்சிக் குடிக்கலாம். மாச்சாதம் செய்தும் சாப்பிடலாம். பச்சைக் கதிர்களை வேகவைத்து அல்லது வறுத்துச் சாப்பிடுவது நாட்டுப் பழக்கம்.

இதைப் பொரியாகப் பொரித்து, மாவாக்கிச் சருக்கரை கலந்து சாப்பிடுகிறவர்களும் உண்டு.

இதன் தட்டு இனிப்புள்ளது. இதை ஆடுமாடுகள் மிகப் பிரியமாய்த் தின்னும். இதிலிருந்து சாறெடுத்துக் காய்ச்சினால் பாகு உண்டாகும். இதைச் சருக்கரைக்குப் பதிலாக வழங்கலாம்.

அமெரிக்கா முதலிய மேனாடுகளில் இதன் புறவிதழ்களைக்கொண்டு ஒருவிதக் காகிதம் செய்கிறார்கள். அதினின்றும் பாங்கி நோட்டுகள் கூட அச்சடிக்கிறார்கள்.

மக்காச் சோளமானது மிகச் சத்துடையதென்றும் அதைக் கயரோகிகள் சாப்பிட்டு வந்தால் வியாதி குணமாகிவிடும் என்றும் யூனானி வைத்தியர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இதன் மாவையும், கஞ்சியையும் ரோக சிகிச்சையில் உபயோகிக்கலாம்.

மக்காச்சோளத்தில் தொங்கும் பட்டுப்போன்ற குஞ்சத்தைக் கஷாய மிட்டுக் கொடுத்தால் நீரடைப்பு, நீர்ச்சுருக்கு முதலிய நோய்கள் குணமா கும் என்பது மேல்நாட்டாரின் கொள்கை.

மேற்படிச் சோளக்கதிரிலுள்ள தானியத்தை எடுத்துவிட்டுக் கத் தையை எரித்த சாம்பலுடன் சோற்றுப்புக் கலந்து கொடுத்தால், கபக்கட்டு, கக்குவான் என்ற இருமலும் குணமாகிறதெனக் கூறுவாருமுளர்.

## தகரை—Thakarai.

இது இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் எங்கும் பயிராகுஞ் செடி. இதில் பல சாதிகளுண்டு. அவைகள் யாவும் கீழ் கூறப்பட்ட இரு வகுப்பு களில் அடங்கும். அவையாவன :—

(1) ஊசித்தகரை, (2) பேயாவாரை.

---

## ஊசித்தகரை—Ūsiththakarai.

**வே - பெ.—நாரத்தகரை.**

Cassia Tora.

| | |
|---|---|
| **Tel.** **Tagirisa** తగిరిశ. | **Sans.** **Chakramarda** चक्रमर्दम् |
| **Mal.** **Thakara** തകര. | **Hind.** **Chakunda** * چکوندا |
| **Kan.** **Tagasi** ತಗಸಿ. | |

இவ்வகுப்பில், **கருந்தகரை**, **காட்டுத்தகரை**, **வெண்டகரை**, என மூவி னங்களுண்டு. இவைகளின் செய்கை, குணம் ஒன்றே. இதன் இலை ஓர் வித வெகுட்டலான நாற்றமுடையது.

**ப - உ.**—இலை, வேர், விதை.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Aperient.
- நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

### எல்லாவிதத் தகரைகளுக்கும் பொது குணம்.

படர் தாமரை, சொறி, மந்தம், எலும்புருக்கிச்சுரம் இவைகளைப் போக்கும்.

தகரைப் படர்தா மரையைச் சொறியைத்
தகர வடிக்குமந்தந் தன்னை - டிகலான
அத்திசு ரத்தையுமத் தஞ்செய்யு மிம்மூலி
யுத்தமமா மென்றே யுரை. (அ - கு.)

### தகரை விதை.

வண்டுகடி, கடுவன், நாட்பட்ட நமைப்புடை, பித்த அனல் இவைகளை நீக்கும்.

வண்டு கடியுடனே வன்கடுவ னும்பலவாம்
பண்டு நமைப்புடையும் பண்டிதர்கள்—கண்டுரைக்காப்
பித்த அனலும் பெருத்த தகரைவிதைக்
கித்தரையுள் நில்லா திசை. (அ.கு.)

**குறிப்பு.**—கீழ்க்கண்ட வழக்குகள் எல்லாவகைத் தகரைகளுக்கும் சேர்ந் ததே.

வ.-கு.—இலை அல்லது வேரைப் பழ இரசம் விட்டரைத்துப் படர் தாமரை, சொறிசிரங்குகளுக்குப் பூசக் குணமாகும். பழ இரசத்துக்குப் பதில் காடிவிட்டுமரைத்துக் கொள்ளலாம்.

இதன் கஷாயத்தைச் சுமார் ஒன்று அல்லது ஒன்றரைப் பாலெடை அளவாகக் குழந்தைகட்குக் கொடுக்கப் பல் முளைக்குந்தறுவாயில் நேரிடுஞ் சுரம் நீங்கும். மலத்தைக் கழிக்கும்.

இலை அல்லது வேரை அரைத்துச் சிற்றாமணக்கெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி, புண் முதலிய விரணங்களுக்குப் பூசக் குணமாகும்.

இதன் விதையை இலைக்கள்ளி இரசம் விட்டு ஊறவைத்துக், கோமூத்திரம் விட்டரைத்துக் குட்டம், படர்தாமரை, சிறு கட்டிகளுக்குப் போடக் குணப்படும்.

---

## பேயாவாரை—Péyávárai.

**வே - பெ.—பேயாவிரை, பொன்னாவிரை.**

Cassia Occidentalis.

Eng :—Negro Coffee.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kasinda కసింద | Sans. | Kasamarda कासमर्दः |
| Mal. | Nattuthakara നാട്ടുതകര. | Hind. } Duk } | Kasunda * کسندہ |
| Kan. | Doddātagache ದೊಡ್ಡತಗಚೆ | | |

இது தகரையினம். இதன் செய்கை, குணம் முதலியன ஊசித்தரைக் குடையதேயாயினும், கீழ்க்கண்ட குணங்கள் இதற்குச் சிறப்பாக வுண்டு.

**ப - உ.**—இலை, விதை, வேர்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு.**- கார்ப்பு.

**செய்கை.**
- நச்சரி - விஷநாசநி - Antidote.
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—ஊசித்தகரைக்குடையதே.

**வ - கு.**—இதன் இலையைச் சமைத்துத் தின்பார்கள். இதனால் மலக் கட்டு நீங்கும்.

விதையை வறுத்துப் பொடித்துக் காப்பிக் கொட்டைக்குப் பதிலாக உபயோகிக்கின்றார்கள். அதிகமாய் வறுபட்டால் ஔடதகுணம் மாறிவிடும்.

இலையின் அளவு 1½ வராகனெடை.

வேரின் அளவு ½—1 வராகனெடை

இதன் இலை, விதை, வேருக்கு மலத்தைப் போக்குங் குணமிருப்பதால், அவ்விதம் உபயோகிக்கும்போது அளவைக் குறைத்து உபயோகித்தல் வேண்டும். இதை அரைத்துச் சொறி, சிரங்குகளுக்கும் உபயோகிக்கலாம்.

இதன் விதையின் பாவனத் திராவகத்தை மேனாட்டார் சுரந்தணியும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

இதன் வேர்க் கஷாயம் விடத்தை முறிக்கும். மேலும், நீரைக்கழிக்குந் தன்மை யிதற்கிருப்பதால், இக்காஷயம் பாண்டு ரோகத்தில் கொடுக்கப்படு கிறது.

---

## தக்காளி—Thakkáli.

**Physalis Minima.**

**Eng.—Cape gooseberry.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** Kupanti కుపంటి | | **Sans.** Tankari तंकारि | |
| **Mal.** Njodi - njotta ഞൊടിഞൊട്ട്. | | **Hind.** Tulatipati * تلاتی پتی | |
| **Kan.** Bandula బండుల | | | |

இப்பூண்டு இந்தியா முற்றிலும் வளரக்கூடியது. இது **நாற்றக்காளி** (பசுந்தக்காளி - நெய்த்தக்காளி), **எருமைத்தக்காளி** (**பேய்த்தக்காளி**) என இருவகைப்படும். இது நீங்க **சீமைத்தக்காளி** என்கிற ஒரு இனமும் மணித்தக்காளி என்கிற மற்றொரு இனமுமுண்டு.

### தக்காளி.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
மலமிளக்கி - லகுவ்ரேசநி - Aperient.

**குணம்.**—இது மேக வியாதிகள், மூத்திர எரிச்சல், வீக்கம் முதலிய நோய்களைப் போக்கித் தேகத்தைப் போஷிக்கும்.

**வ - கு.**—இதன் பழம் தேகத்தைப் போஷிக்கும்.

இதைக் கஷாயமிட்டு மேற்கூறிய வியாதிகளுக்குக் கொடுக்கலாம்.

இதன் சமூலத்தைக் காடியில் அரைத்துக் கட்ட முலைப்பால் பெருகும்.

---

## சீமைத்தக்காளி—Shimai - thakkàli

**Eng.—Tomato.**

இது தென்னிந்தியாவில் சீதளமிருந்த பிரதேசங்களில் வளமாகப் பயிராகிறது. இதன் காய் சிறு பந்தைப்போல உருண்டைவடிவுடன், பச்சை நிறமாகவிருக்கும் ; பழுத்தால் சிவப்பாகமாறும்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—தேகத்துக்குக் குளிர்ச்சியையும், இரத்த சுத்தியையும் உண்டாக்கும்.

**வ - கு.**—பழத்தை அநேகர் பச்சையாகத் தின்று வருகிறார்கள்.

காயை வற்றலிட்டும், கறி செய்தும் உபயோகித்து வருகிறார்கள்.

பழத்தைப் பருப்பு முதலிய பதார்த்தங்களுடன் சேர்த்துச் சமையல் செய்துண்பது இந்நாட்டு வழக்கம்.

## மணத்தக்காளி—Manaththakkàḷi.

**வே - பெ.—மணித்தக்காளி, உலகமாதா, விடைக்கந்தம், வாயசம், காகமாசி.**

Solanum Nigrum or and Solaum Rubrum.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kamanchi chettu. | కామంచిచెట్టు | Kan. | Kakmunchi. | ಕಾಕಮಂಚಿ. |
| | | | Sans. | Kakamachai. | काकमाची |
| Mal. | Manithakkali | മണിത്തക്കാളി. | Hind. | Mako. | * مکو |

இதில் சிவப்பு, கறுப்பு என இரண்டு சாதிகளுண்டு. இவ்விரண்டு வகைச் செடிகளும் இந்தியாவில் இலகுவாய்க் கிடைக்கக்கூடியது. குணத்தில் இவ்விரண்டுக்கும் அதிக வித்தியாசமில்லை.

**ப - உ.**—இலை, காய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

### மணத்தக்காளி-சமூலம்.

**குணம்.**—காய்க்குச் சிலேத்துமரோகமும், இலைக்கு நாப்புண்ணும், வேக்காடும் நீங்கும். வற்றல் நோயாளிகளுக்கு ஆகும்.

காய்க்குக் கபந்தீருங் காரிகையே ! அவ்விலைக்கு
வாய்க்கிரந்தி வேக்காடு மாறுங்காண் - தீக்குள்
உணக்கிடு வற்றல் உறுபிணியோர்க் காகும்
மணத்தக்கா ளிக்குள்ள வாறு. (அ.கு.)

### மணத்தக்காளிக்காய்.

மலத்தை இளக்கும், மாகபமும், மிகப் பலமான வாதமும் போம்.

மலம்இளகுந் தானே மகாகபமும் போகும்
பலமிகுந்த வாதம்போம் பார்க்குள் - மலைபோற்
பணைத்துப்பூ ரித்தமுலைப் பாவாய்கேள் ! நல்ல
மணத்தக்கா ளிக்காயை வாழ்த்து. (அ.கு.)

### வற்றல்.

நீர்ப்பேதியாக்கும், வாந்தியைப் போக்கும், வாயிலைப்பு நீக்கும் - நோயாளிகளுக்கு ஏற்றது.

நீர்ப்பேதி யாகும் நிலைவமனம் போம்வாயிற்
கூர்ப்ப இலைப்பும்அறுங் கூறுவதோ - பார்க்கிலினும்
மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணத்
தக்காளி வற்றலுக்குத் தான். (அ.கு.)

**வ - கு.**—இலைச்சாற்றில் $\frac{1}{4}$ ஆழாக்கு, தினம் 3 வேளை கொடுக்க, நீரைப் பெருக்கி, நீர்ப்பாண்டு, மகோதரம், உள்விரணம், உட்சூடு இவற்றை அகற்றும்.

வற்றல் அரோசகத்தை நீக்கும். காயை உலர்த்தி வற்றல் செய்து நெய்யில் வறுத்தோ அல்லது தனிக்கஷாயமிட்டோ கொடுக்கப் பித்த வாந்தியைப் போக்கி, மலத்தை நன்றாய்க் கழிக்கும்.

வற்றல் 4 பலம், இதைக் கொதிக்கிற அரைப்படி வெந்நீரில் சேர்த்து ஒரு மணி நேரம் மூடிவைத்திருந்து வடிகட்டி, நீர்க்கோவை, மூத்திரக் கிரிச்சரம் முதலியவைகளுக்கு ¼ - ½ ஆழாக்கு வீதம் கொடுக்கலாம்.

இதனால் செய்யப்படும் காகமாசித்தைலம் சுவாசகாசத்தைப் போக்கும்- (தேரையர் தைலவருக்கச் சுருக்கத்தில் காண்க.)

## தக்கோலம்—Takkòlam.

**வே - பெ.—கோலம், கிருதபலம், தக்கோலப்பொட்டு, இலதை கத்தூரிகை.** இதற்கு இதர மொழிகள் கிடைக்கவில்லை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வாதமடக்கி - வாதஹரகாரி - Anti - Vata.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**குணம்.**—தக்கோலத்தினால் பாண்டு, சுரம், வாயைப்பற்றிய வாத நோய்கள் போம். பலமும், வீரிய விருத்தியும், மலக்கட்டும் உண்டாகும்.

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேரும்
தீண்டும்உப யாசியமுந் தீருங்காண் - நீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்தமல முங்கட்டும்
கோதகலுந் தக்கோலங் கொள். (அ கு.)

**வ - கு.**—தக்கோலப் பொட்டை யுலர்த்திச் சூரணஞ் செய்து ¼—½ வராகனெடை வீதம் காலைமாலை உட்கொண்டுவரப் பாண்டு, சுரம், வாயைப்பற்றிய வாதம் நீங்கும்; கஷாயமிட்டுங் கொடுக்கலாம்.

மெலிந்த பெண்கள் இப்பொட்டைத் தாம்பூலத்துடன் கொள்ள மெலிவு நீங்கிப் பலத்தைப் பெறுவார்கள்.

அடிக்கடி இளகிய மலப்போக்குடையவர்கள் இதைத் தக்க அளவில் உபயோகித்து வரலாம்.

---

## தண்ணீர்விட்டான்—Thannìr-vittàn.

**வே - பெ.—தண்ணீர்முட்டான், சதாவேலி, சதாவேரி, சதாமூலம், சதமூலே, சதாவரி, நீர்வாளி, நாராயணி, நீர்விட்டான், ஆகேருகம். வரிவரி, உதகமூலம், சீக்குவை, பற்லீண, பீருதந்தி.**

Asparagus Sarmentosus or A. Racemosus.

| | |
|---|---|
| Tel. Pillipeechara పిల్లిపీచర. | Sans. Shatavari शतावरी |
| Mal. Satàvèri സതാവേരി. | |
| Kan. Satmula ಸತ್ಮೂಲ. | Hind. Satàvare ستاور * |

இது கொடியினம். இந்தியாவில் எல்லா விடங்களிலும் பயிராகின்றது. இவ்வினத்தில் சீமைத் தண்ணீர்விட்டான் என்ற ஓர் சாதியுமுண்டு. இவ்விரண்டிற்கும் அநேகமாய் குணத்தில் வித்தியாசமில்லை.

ப. உ.—இலை, கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.

**குணம்.**—இதன் கிழங்கு, நீரிழிவு, நாட்பட்டசுரம், எலும்புருக்கிநோய், சோமநோய், வெட்டை, உட்சூடு முதலியனவற்றை நீக்கும்.

நீரிழிவைப் போக்கும் நெடுநாட்சு ரத்தையெலாம்
ஊரைவிடுத் தோடவு ரைக்குங்காண்—நாரியரே !
வெண்ணீர்பெய் சோமநோய் வெட்டை யனல்தணிக்குந்
தண்ணீர்விட் டான்கிழங்கு தான். (அ.கு.)

**வ - கு.**—இலையை வேகவைத்து நெய்தடவி சிறு கொப்புளங்களுக்கு வைத்துக் கட்டலாம்.

இலைச் சாற்றுடன் பால் சேர்த்துக் கொடுத்துவர, தேக வெப்பத்தைக் குறைத்து வெள்ளையை நிறுத்தும்.

கிழங்கைப் பாலில் வேகவைத்து அப்பாலை உட்புகட்ட, பித்த அரோசகம், அசீரணபேதி முதலியன தீரும்.

கிழங்குச்சாறு 1 பங்கு, சுத்தமான வெண்ணெய் 1 பங்கு, பால் 10 பங்கு, இவற்றைக் கிருதமாகச் செய்து, சருக்கரை, தேன், திப்பிலி சேர்த்துச் சாப்பிடத் தாது விருத்தியாகும், நீற்றுப்போன இந்திரியத்தைக் கெட்டிப்படுத்தும்.

கிழங்கைச் சூரணஞ் செய்து வேளைக்கு ஒன்று முதல் 2 வராகனெடை வீதம் தினம் இருவேளை உபயோகிக்கலாம்.

தண்ணீர்விட்டான் கிழங்கின் இரசம், தேன் இவைகளைச் சேர்த்துக் குடித்துவர, வயிற்றிலுண்டாகும் பித்தசூலை நீங்கும்.

---

## தமரத்தம்—Tamaraththam.

**வே - பெ.—தமரத்தை, தந்தசடம்.**

**Averrhoa Carambola.**

**Eng.—Chinese Gooseberry.**

| | |
|---|---|
| Mal. Tamaratta തമരത്ത. | Sans. Karmaranga कर्मरङ्गः |
| Kan. Derchuli ದೇರ್ಚುಳಿ. | Hind. Karmaranga * کرمرنگا |

இது இந்தியாவில் பல இடங்களிலும் பயிரிடப்பட்டு வளருகின்றது.

**ப - உ.**—இலை, பழம், வேர்.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனால் வாதபித்தம், வாதகபம், வாந்தி, குற்கம்மல், கண்ணோய், தாதுநட்டம், பித்தம், தலைநோய், சித்தப்பிரமை முதலியவை போம்.

வாதபித்தம் வாதகபம் வாந்திகுரல் கம்மல்கண்ணோய்
தாதுநட்டம் பித்தந் தலைநோயோ—டோதுசித்தத்
துற்ற பிரமையும்போம் ஒண்டொடியே! மாபுளிப்பாம்
நற்றமரத் தம்பழத்தை நாடு. (அ.கு.)

**வ - கு.**—காயாயிருக்கையில் ஊறுகாய், பதார்த்தங்கள் முதலியன செய்வதற்கு உபயோகமாகும்.

பதார்த்தங்களோடு சேரும்போது அவைகளுக்கு நற்சுவையைக் கொடுக்கும். சீரணசக்தியை உண்டுபண்ணும்.

பழத்தைச் சருக்கரையுடன் சேர்த்துப் பாகுசெய்து அருந்தத் தேகத்துக்குக் குளிர்ச்சியைத் தரும். உடற்சூட்டையும் தாகத்தையும் தணிக்கும்.

பழச்சாறு துணிகளிலுள்ள மாசு, மறுக்களைப் போக்கும்.

பழம் இரத்தமூலத்தைப் போக்கும்.

---

## தரா—Thara.

**வே - பெ.—துரா, பம்பந்தரா, மதுகம்.**

**Fumaria parviflora.**

**Eng.—Common fumitory.**

| | |
|---|---|
| **Tel.** **Chata-rashi** చాతరాశి. | **Hind.** Kshetra Parputi شترہ پرپٹی |
| **Mal.** **Thurâ** തുരാ. | Pitpäpadâ * پت پاپڑا * |
| **Sans.** **Parpat** पर्पत् | |

இக்கொடி இந்தியா முழுவதிலும் கிடைக்கக்கூடியது. பண்படுத்தின பூமிகளில் செழிப்பாக வளரும். இதில் **செந்தரா** வென வேறொரு இனமும் உண்டு.

**ப - உ.**—வேரைத் தவிர சமூலம்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவார்த்தநி - Diuretic
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Aperient.

**குணம்.**—புண், கிரந்தி, வித்திரதிக்கட்டி, சந்நிபாததோடம், கிருமி, கண்புகைச்சல், கண்காசம், மாதாந்தர உதிரச்சிக்கல் ஆகிய இவைகளைப் போக்கும். பெண்களுக்கு முலைப்பாலைப் பெருக்கும்.

புண்கிரந்தி கட்டி பொருசந்நி கிடமும்போம்
கண்புகைச்சல் காசங்க திக்கும்என்பர்—பெண்களுக்குப்
பாலும் பெருகும்உள்ளே பற்றுதிரச் சிக்கல்விடும்
ஏலுந் தராவின்இலைக் கு. (அ.கு.)

**செந்தரா.**

இதன் இலைக்கு வாதமுளைமூலம், அரோசகம், வாதம், பித்தம், கபம் இவைகளின் தனித்தோடம், நீர்த்தாரையிற்சூடு, தண்ணீர்விடாய், ஆயாசம் ஆகிய இவைகள் நீங்கும், தீபனமுண்டாகும்.

அனில முளையும் அரோசகமு நீங்கும்
தனியான தோடமது தாழும்—கனிமொழியே !
வெந்தாரைச் சூடும் விடாயும்போம் தீபனமாம்
செந்தரா வின்தழைக்குச் செப்பு. (அ.கு.

**வ - கு.**—இதை முறைப்படிக் கஷாயமிட்டு மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இதன் இலையைச் சூரணஞ்செய்து சிறிது மிளகுத்தூள்சேர்த்துக் காமாலை, சுரம் முதலிய வியாதிகளுக்குக் கொடுத்து வரலாம்.

இலையுடன் சிறிது மஞ்சள் சேர்த்தரைத்துக் கட்டி, பிளவைகட்கு வைத்துக் கட்ட அவைகள் பழுத்துடையும்.

இலையை யுலர்த்திக் கஷாயமிட்டுக் குடித்துவர மலபந்தம் நீங்கும்; உடல் வலுக்கும். வெண்குட்டம் மாற இவ்விலையுடன் பந்நீர்ப்பூச் சேர்க்க வேண்டும்.

செந்தரா இலையை அரைத்துத் தாம்பிரத்தகட்டிற்கு அப்பிப் புடமிடத் தாம்பிரம் வெட்டையாகும், களிம்பும் அறும்.

---

## தருப்பை—Tharuppai.

**வே - பெ.—தர்ப்பை, குசம், குமுதம், குசைப்புல், கூச்சம், தெற்பை, விசுவாமித்திரம்.**

Poa - Cynosuriodes.

Eng.—Sacred kusa-grass.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Darbha** దర్భ. | Sans. | Kusa कुशः |
| **Mal.** | **Tharba** ദർ. | Hind. | Kusha * كوشا |

இது புல்லினம். இந்தியா முழுவதிலும் வளர்ந்து வருகிறது. இப்புல் இந்தியாவில் பூசை முதலிய பரிசுத்தக் கருமங்களுக்குப் பயன்படுகிறபடியால் இதற்கு 'அருச்சனைப்புல்' என்று பெயர் வழங்குகின்றனர்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனால் சகலவித தோடங்கள், சிறிய விடங்கள், மிஞ்சின கபம், சகலவித சுரங்கள், தாகம், நமைச்சல் இவைபோம். யாகங்கட்சாம்.

தோடஞ் சிறியவிடஞ் சோராக்க பப்பெருக்கஞ்
சாடுஞ் சகலசுரந் தாகமிவை—யோடும்
அரிப்பு மகலும் அடல்வேள்வி கட்காந்
தருப்பையெனும் புல்லுக்குத் தான். (அ.கு.)

**வ - கு.**—இதை முறைப்படிக் கஷாயமிட்டுக் கொடுக்க மேற்கூறிய நோய்கள் குணமாகும்.

## தவசுமுருங்கை—Thavasu-murungai.

**Adhatoda tranquebariensis.**

இது தென்னிந்தியாவில் எங்கும் சாதாரணமாய்க் கிடைக்கக்கூடியது.

**ப - உ.**—இலை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—இதனால் வாதபீநசம், உண்ணுக்கு, தொந்தநோய், கபம், சுவாசகாசம், பொடியிருமல் ஆகிய இவை நீங்கும்.

தவசுமுருங் கைத்தழைக்குத் தையலே கேளாய் !
அவசியம் பீநசம்உண் ணுக்கும்—உவசர்க்க
ஐயஞ்சு வாசகபம் அண்டாது குத்திருமல்
வையம்விடுத் தேகும் வழுத்து. (அ.கு.)

**வ - கு.**—இலை இரசத்தை வேளைக்கு ஒரு வராகனெடை வீதம், மேற்கூறிய வியாதிகளுக்குக் கொடுக்கலாம்.

இலைச்சாற்றைப் பிழிந்து ஏழுமுறைச் சுரசஞ் செய்து $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் கொடுக்கப் பிரசவ அழுக்கு வெளிப்பட்டுப் பிரசவித்த பெண்ணிற்குச் சுகத்தைத்தரும்.

இச்சாற்றில் வெள்ளியைப் பழுக்கக் காய்ச்சித் தோய்த்துவர, வெள்ளி வெட்டையாகும்.

---

## தழுதாழை—Thazhuthazhai.

**வே - பெ.—தக்காரி, வாதமடக்கி, நந்தக்காரி.**

**Clerodendron Phlomoides.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Telaki** తేలకి. | **Sans.** | **Váta-ghni** वातघ्नी |
| **Mal.** | **Váthamadakki** വാതമടക്കി. | **Hind.** | **Ūrin** * ऊरीं |

வெப்பப் பிரதேசங்களில் எங்கும் வளர்ந்துவருகிற இச்சிறுமரம் இந்தியா முழுவதும் கிடைக்கும்.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. }

**குணம்.**—பக்கவாத முதலிய 80 வாத ரோகங்கள், கபபீநசம், புடை, இரந்தி, ஆவிருதவாதம், மந்தகபசுரம், தேகக்குடைச்சல் இவை நீங்கும். பித்தத்தை யுண்டாக்கும்.

வாதப் பிடிப்பென்று வற்காலி யைப்புலிபோற்
போதப் பிடிக்கும் புகலவற்றே—காத
அழுதாழைப் பீநசத்தை யண்டா தகற்றுந்
தழுதாழைப் பன்னமது தான்.

சேர்ந்த சொறிசிரங்குஞ் சேர்வாதம் எண்பதும்போம்
ஆய்ந்திடிற் பித்தம் அதிகரிக்கும்—மாந்தம்அறும்
ஐயின் சுரந்தணியும் ஆனதழு தாழைக்கு
மெய்யின் கடுப்பும்போம் விள். (அ.கு.)

**வ - கு.**—இலைச்சாறு அல்லது வேர்ச்சாற்றை எடுத்துச் சமன் விளக்கெண்ணெய் சேர்த்து, மேக வியாதிகளுக்குக் கொடுத்து வரலாம், அல்லது இலைச் சூரணத்தைத் தனியாகக் கொடுக்கலாம்.

இலைச்சாறு எடுத்து அதில் அரைப்பலம் வீதம் காலை, மாலை உள்ளுக்குக் கொடுக்கச் சுரத்தைத் தணிக்கும். இத்துடன், இலை இரசத்தை மூக்கில் இரண்டொரு துளி விடலாம்.

இலையை நீரில் சேர்த்துக் காய்ச்சி வாதவலியுள்ள பாகங்களைக் கழுவலாம்.

இலைச்சூரணத்தை ஆளி எண்ணெய் விட்டுப் பிசறிச் சிறிது வெதுப்பிச் சூட்டுடன் வைத்துக் கட்ட நெறிக்கட்டிகள் கரையும்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, வாதப்பிடிப்புகளுக்குத் தடவி வரலாம் அல்லது இலையில் விளக்கெண்ணெய் தடவி வெதுப்பி வைத்துக் கட்டலாம்.

---

## தாமரை—Thámarai.

**வே - பெ.—அரவிந்தம், எல்லிமனை, சூரியநட்பு, கேகயம், பொன்மனை, விந்தம், புண்டரீகம், பதுமம், கமலம், நளினம், முளரி, முண்டகம், மாலுந்தி, சரோசம், கோகனகம், இண்டை, கஞ்சம், அப்புசம், அம்போருகம், சலசம், வனசம், வாரிசம், சலருகம், பங்கேருகம், சரோருகம், பங்கசம்.**

Nelumbium Speciosum.

Eng.—The Sacred lotus.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Tamara | తామర. | Sans. | Pankaja | पङ्कज |
| Mal. | Aravindam | അരവിന്ദം. | Arab. | Nilufer | * نیلوفر |
| Kan. | Tavare | ತಾವರೆ. | Pers. | Nilufer | * نیلوفر |

இது நீரில் வளருங் கொடி. இந்தியாவில் குளங்குட்டைகளில் செழித்து வளருகின்றது. இப் பூவின் நிறவேற்றுமையைக்கொண்டு, **வெண்மை, செம்மை, நீலம், மஞ்சள்** இனங்களாகப் பிரிக்கலாம். இதன் பூவிற்கு நறுமணமுண்டு. இப்பூவில் இலட்சுமி வாசஞ் செய்கிறாள் என்னும் நம்பிக்கை இந்துக்களுக்கிருப்பதால், இப்பூ மிகவும் பரிசுத்தமானதாகக் கருதப்படுகின்றது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பூ.**

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
கோழையகற்றி - கப்ஹரகாரி - Expectorant.
தாதுவெப்பகற்றி - சமநகாரி - Sedative.

**கிழங்கு.**

உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**விதை.**

உரமாக்கி - பலகாரி - Tonic.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

### இலை.

குணம்.—இதன் இலையில் அன்னம் புசித்தால், வெப்பமும், வாதரோகமும், மந்தாக்கினியும் உண்டாகும்; சம்பத்து நீங்கிவிடும்.

தாமரைப்பன் னத்திலுண்டால் தாங்கரிய உட்டினமாம்
நாமவா தஞ்சினந்து நண்ணுங்காண்—தூமமுறு
அக்கினிமந் தங்களுண்டாம் அன்றே மலர்த்திருவத்
திக்கினிலி ராளெனவே தேர். (அ.கு.)

### பூ.

### வே - பெ.—இராசிவம், இறும்பு, மரைப்பூ.

இது, வெப்பத்தாற் பிறந்த விழி எரிச்சல், சுரம், விதாகம் ஆகிய இவைகளைப் போக்கும்.

பருத்தநற் றாமரைப்பூ பல்வாந்தி நோயைத்
துரத்திவிடும் இன்னுஞ் சொலவோ—கரத்தில்
எடுத்தணைக்கக் கண்குளிரும் ஏகுஞ் சுரமும்
எடுத்தவி தாகமும்போம் எண். (அ.கு.)

### வெண்தாமரைப்பூ.

வெள்ளைத் தாமரைப்பூவால், ஈரலில் அதிகரிக்கின்ற வெப்பமும், வெப்பமுள்ள மருந்துகளின் வேகமும், உட்சூடும் நீங்கும்.

ஈரலைப் பற்றிமிக ஏறுகின்ற வெப்பமும்போங்
கோர மருந்தின் கொடுமையறும்—பாருலகில்
தண்டா மணத்தையுள்ள தாழ்குழலே ! காந்தல்விடும்
வெண்டா மரைப்பூவால் விள். (அ.கு.)

### விதை.

இதனால், அலசம், அருசி முதலிய சருவ தோடங்களும் போம். சுக்கில விருத்தியுண்டாகும்.

மந்தத் துவமகற்றும் வல்லருசி நீக்கிவிடும்
மந்தத் துறைதாது விற்கடலே—தந்திடும்பின்
னுன்னிலின்னுந் தோடகுணம் யாவுமோட் டுஞ்சலசந்
தன்னிலண் ணுக்கிரவுஞ் சம். (தே.கு.

### கிழங்கு.

நேத்திர ஒளி, குளிர்ச்சி இவைகளைத் தரும். காசம், மாமிச தாதுவைப் பற்றிய தவளைச்சொறி, வயிற்றுக்கடுப்பு ஆகிய இவைகளை நீக்கும்.

கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித் தம்போக்கும்
எண்ணுங் குளிர்ச்சிதரும் ஏந்திழையே !—புண்ணுகளில்
தூமரைப்புண் ணும்போக்குந் தொந்திக்க டுப்பகற்றுந்
தாமரைக் கந்தமது தான். (அ.கு.)

### தாமரைக்குளத்து நீர்,

இதனால் வாதபித்த தொந்தம், புராணசுரம். அதிதாகம் ஆகியவைகள் அதிகரிக்கும்.

தண்டா மரைக்குளத்திற் றங்கு புனலதனுல்
உண்டாகும் வாதபித்த முண்மையே—பண்டான
வெக்கைநோய் மாறுது வீறுந் தவனமுமாம்
மைக்கருங்கண் மாதே! வழுத்து. (அ.கு.)

**வ - கு.**—பூ, தண்டு முதலியவைகளின் இரசத்தை, அசீரணபேதி, ஈரல் நோய் முதலிய வியாதிகளுக்குக் கொடுக்கலாம். இருதயத்திற்குப் பலத்தைத் தரும்.

இவைகளின் கஷாயத்தைப் பித்தசம்பந்தமான சுரத்துக்குக் கொடுக்கச் சுகத்தைத் தரும்.

தாமரைப்பூவின் தேன் கண் வியாதிகளை நீக்கும்.

பூவை மணப்பாகு செய்து, இருமல், இரத்தப்போக்கு, இரத்தமூலம், சீதபேதி இவைகட்குக் கொடுக்கலாம். அளவு ½ முதல் 1 பலம்.

கிழங்கும், வளையமும் தைல வருக்கங்களில் சேருகின்றன.

விதையைப் பொடித்து ¼—½ வராகனெடை வீதம் உள்ளுக்குக் கொடுத்து வரத் தேகபலத்தைத்தரும். ஆனுல் பித்தத்தை அதிகரிக்கச் செய்யும்.

விதையை தேன்விட்டுரைத்து நாக்கில் தடவிவர வாந்தி நிற்கும்.

இதன் இலையால் சங்கு பற்பமாகும்.

---

## தாழை—Thazhai.

**வே - பெ.—கண்டல், கேதகை, கைதை, பட்டிகை, பறிவை, மடி, முசலி, முடங்கல், முண்டகம், முடக்கன்.**

Pandanus Odoratissimus

Eng.—Fragrant Screw-pine.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Mogali** | మొగలి. | |
| **Mal.** | **Kaitha** | കൈത. | **Sans.** Ketaki केतकी |
| **Kan.** | **Kedage** | ಕೇದಗೆ. | **Hind.** Ketgi * کیتکی |

இது இந்தியாவில் கடற்கரையோரங்களிலும், நீர்ப்பாங்கான வேறு இடங்களிலும் செழித்து வளரும். இதில் **செந்தாழை, வெண்தாழை** என இருவகையுண்டு. செந்தாழை கிடைப்பதரிது. இது மரவகுப்பைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பூ, சோறு, விழுது.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.

**குணம்.**—சோற்றினுல் மாதருக்குச் சோணிதம் விகுணமின்றி உண்டாகும். பூ, தீபாக்கினியையுண்டாக்கும். விழுது, விந்துவையும், ரத்தத்தையும் பிரகாசப்படுத்தும், சோபாரோகக் கூட்டங்களை நீக்கும்.

மடிச்சோற்றுன் மங்கையர்க்கு மாதாந்தப் பூப்பாம்
வெடிச்சபூ நற்பசியை விளைக்குந்—தடிச்சமுலை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்கிவிக்குஞ் சோபையெனும்
அக்குலத்தை நீக்கும் அறி. (அ.கு.)

**பாய்.**

தாழம்பாயில் படுப்பார்க்கு வமனம், தலைச்சுழற்றல், பாண்டுரோகம், பித்ததோடம், நீராமைக்கட்டி, வெகு மூத்திரம் இவைகள் விலகும்.

தாழம்பாய் வாந்தி தலைச்சுழற்றல் பாண்டுபித்தம்
ஆழஞ்சேர் நீராமை யாம்பிணியும்—வீழுந்தண்
ணீரிழிவும் போக்குமிக நேசித்த வர்க்குலகிற்
காரிழியுங் கூந்தன்மின்னே ! காண். (அ.கு.)

**வ - கு.**—ஓலைகளினால் பாய்முடைந்து படுக்கைக்கு வழங்கலாம்.

பூவிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இதைத் தலைவலி, வாதவலி முதலியவைகளுக்கு மேலுக்குத் தடவிச் சுகம்பெறலாம். இதைக் காது வலிக்கு இரண்டொரு துளிவிடலாம்.

இதிலிருந்து தீநீர், அத்தர், ஊறல்நீர் முதலிய நறுமணமுள்ள திரவங்கள் செய்யலாம்.

ஊறல் நீரில் $\frac{1}{2}$—1 வராகனெடை வீதம் உட்கொள்ளத் தேகத்துக்கு உற்சாகத்தையும் வியர்வையையும் உண்டாக்கும்.

விழுதைப் பாலில் அரைத்துக் கொடுத்துவர மலட்டு ரோகம் நீங்கும்.

வேர்ச்சாறு 2 தோலாவுடன் சிறிது சருக்கரையும் கலந்து அதிவெப்ப பிரமேகரோகத்துக்குக் கொடுக்கலாம்.

இதன் பூவைப் பெண்கள் அழகும் மணமும்பெறத் தலையில் வைப்பார்கள்.

பூவில் மணப்பாகு செய்து குடிக்க, உடம்பிலுள்ள வெப்பத்தைத் தணிக்கும். அம்மை ரோகத்தை வரவொட்டாமற் றடுக்கும். பழத்துக்கும், விதைக்கும் வாத, பித்த, கப விகர்ப்பங்களைச் சமனப்படுத்துந் தன்மையுண்டு. இதன் செய்கை குங்குமப்பூவின் செய்கையை யொத்தே இருக்கும்.

---

## தாளிசபத்திரி—Thalisa-paththiri.

**Flacourtia Cataphracta.**

**Eng.—Many spiked flacortia.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Talispatram | తాళిసపత్రం | Sans. | Talisapathra | तालीसपत्रम् |
| Mal. | Talisapatri | താളിശപത്രി. | Hind. | Talispatri | * تالیس پتری |
| Kan. | Talispatram | ತಾಳೀಸಪತ್ರಂ. | | | |

இது ஒரு செடி வருக்கம். இந்தியாவின் கடலோரங்களிலும், வங்காளம், நேபாளம் ஆஸ்ஸாம் முதலிய இடங்களிலும் வளருகின்றது.

**ப - உ.**—இலை, பட்டை, பழம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**

- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பட்டை.**

- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astrigent.

**குணம்.**—பேதி, சீதபேதி, துர்ப்பலம், சுரம், பீநசம், களரோகம், நாட்பட்ட இருமல், இரைப்பு, அரோசகம், வாந்தி, வாய்வு, சீழ்பிரமேகம், அசீரணம், அத்திசுரம் இவைகளுக்கு நன்மைதரும். சுகப்பிரசவமுண்டாக்கும்.

நாசி களப்பிணிகள் நாட்பட்ட காசஞ்சு
வாசம் அருசி வமனங்கால்—வீசிவரு
மேகமந்தம் அத்திசுரம் விட்டேகுந் தாளிசத்தால்
ஆகுஞ் சுகப்பிரச வம். (அ.கு.)

**அளவு.**—அரை வராகனெடை.

**வ - கு.**—இதைக் காடியிலரைத்துப்பூசத் தலைவலி, கண்டமாலை, குன்மம் இவை போம்.

பொடி செய்து பல்தேய்க்கப் பல்வலி நீங்கும்.

இலைச்சூரணத்தை, ஆடாதோடை இலைச்சாற்றில் கலந்து, சிறிது தேன் சேர்த்துச் சாப்பிட, இருமல் முதலிய சுவாசாசய நோய்கள் சாந்தமாகும்.

தாளிசபத்திரி 8, மிளகு 4, சுக்கு 2, வால்மிளகு 1, சருக்கரை 15 பங்கு. இவைகளைச் சேர்த்துச் சூரணஞ் செய்து ¼ ரூபாயெடை வீதம் கொடுக்க, அக்கினிமந்தம் முதலிய வயிற்று நோய்கள் விலகும்.

இலைச் சாறு 5 முதல் 10 துளி வரை நீரிலோ, அல்லது முலைப்பாலிலோ கலந்து கொடுத்துவரச் சுரந்தணியும். இதையே குழந்தைகளுக்குப் பல் முளைக்கிறதனாலுண்டாகும் இருமல், பேதி, சீதபேதி, சுரம் முதலியவைகளுக்கும் வழங்கலாம்.

தாளிசம் 8, திரிகடுகு, திரிசுகந்தம், திரிபலை, திரிநிம்பம், சாதுர்ச்சாதம் வகைக்கு 1, வெல்லம் 7 பங்கு, இவற்றை ஒன்றாகச் சேர்த்து வடக விதிப்படி செய்து, கழற்சி யளவு உருண்டைசெய்து உபயோகிக்க, அக்கினி மந்தம், பழஞ்சுரங்கள், துர்ப்பலம் இவை நீங்கும்.

பட்டையைக் கஷாயமிட்டு வாய்க் கொப்புளித்து வர, தொண்டைக் கம்மல் நீங்கி, வாய்ப்புண் சுகமாகும்.

பழத்தைப் புசிக்கலாம், அது ஓக்காளத்தை நிறுத்தும். பேதியைச் சமனஞ் செய்யும்.

---

## தாளிப்பனை—Thalip-panai.

Corypha Umbraculifera.

Eng—Fan-palm.

| | |
|---|---|
| Tel. Shree-talamu శ్రీతాళము. | Sans. Alpayushi अल्पायुषी |
| Mal. Kudapana കുടപ്പന. | Hind. Bhajarbettu بھجار بٹو* |
| Kan. Shreetali ಶ್ರೀತಾಳೆ. | |

இது பனைவருக்கம், தென்னிந்தியாவில் வளருகின்றது.

**ப - உ.**—ஓலை, காய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடலுரமாக்கி - போஷணகாரி - **Nutrient.**
துவர்ப்பி—ஸங்கோசனகாரி - **Astringent.**

குணம்.—ஓலை எழுதுவதற்குதவும், காய் மாமிசத்தை வளர்ப்பிக்கும், சோறு மலத்தைக் கட்டும்.

வ - கு.—ஓலையை முடைந்து குடையாகச் செய்து உபயோகிக்கலாம். எழுதுவதற்கும் உதவும்.

இதன் காயை உலர்த்தி, இடித்துக் கஞ்சி காய்ச்சி ஏழை மக்கள் அருந்துவார்கள். இதனால் உடல் பெருகும்.

இம்மரத்தின் குருத்தடியிலிருக்கும் சோற்றைத் தின்றால் மலத்தைக் கட்டும்.

---

## தான்றி—Thantri.

**வே - பெ.—அக்ஷம், அக்கந்தம், அக்காத்தான், அமுதம், அம்பலத்தி, ஆராமம், எரிகட்பலம், கந்தகட்பலம், கந்துகன், கலித்துருமம், களந்தூன்றி, சதகம், தாபமாரி, வாந்தியம், வித்தியம், விபீதகம், திறிலிங்கம், பூதவாசம், தானிக்காய், தாணிக்காய்.**

Terminalia Belerica.

Eng.—Beleric Myrobalans.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Thandra-kaya** | తాండ్రకాయ | **Sans.** | **Vebeethaki** | बिभीतकी |
| **Mal.** | **Tanni-kai** | താന്നിക്കായ്. | **Hind.** | **Bhairah** | * بہیرہ |
| **Kan.** | **Tanri-kayi** | ತಾಣ್ರಿಕಾಯಿ. | | | |

இது மரவகுப்பைச் சேர்ந்தது. இந்தியாவில் காடுகளிலும், மலை அடிவாரங்களிலும் உயர்ந்து வளரும். இதின் காய்க்குத் தான்றிக்காய் என்று பெயர்.

**ப - உ.**—இலை, பழம், விதை.
**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Asringent.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- மலமிளக்கி - லகுவரேசநி - Laxative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனால் சிலந்திவிடம், ஆண்குறிப்புண், சீழ்மேகம், வாதபித்தம், வாதவெப்பு, இரத்த பித்தம், இவைபோம். மேலும் தலைமயிரை வளர்க்கும், காசம், சுவாசம், அஸ்மரி, வயிற்றுப்போக்கு, வீக்கம், பல்வலி இவற்றை நீக்கும்.

சிலந்திவிடம் காமியப்புண் சீழான மேகங்
கலந்திவரும் வாதபித்தங் காலோ—டலர்ந்துடலில்
ஊன்றிக்காய் வெப்ப முதிரபித் துங்கரக்குந்
தான்றிக்காய் கையிலெடுத் தால்.

ஆணிப்பொன் மேனிக் கழகும் ஒளியுமிகும்
கோணிக்கொள் வாதபித்தக் கொள்கைபோம்—தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகம்அறும் கூறு அனற்றணியும்
கண்டவர்க்கு வாதம்போம் காண்.

(அ.கு.)

**வ - கு.**—தான்றிக்காயைச் சுட்டு, மேல்தோலைச் சூரணஞ் செய்து, சமவெடை சருக்கரை சேர்த்துத் தினம் இருவேளை, ஒருவராகனெடை வீதம், வெந்நீர் அனுபானத்தில் கொடுக்கப் பல்வலி தீரும்.

தான்றிக் கொட்டையிலிருந்து எடுக்கும் எண்ணெய், இனிப்புச் சுவையும் சீதவீரியமு மானபடியால் வாதத்தையும், வாதபித்தத்தையும் போக்கும். தலைமயிரை வளர்க்கும்.

தான்றிச் சூரணத்தைத் தேனில் கலந்து கொடுக்க அஸ்மரி ரோகம் நீங்கும்.

அரைப்பலம் தான்றிக்காய்த்தோலை ஒரு ஆழாக்கு நீரில் சேர்த்து மூன்றில் ஒருபாகமாகக் காய்ச்சித் தேன் பலம் ¼ சேர்த்துக் கொடுக்கச் சுவாசம் தணியும்.

தான்றிக்காய்த் தோற் சூரணத்துடன் சரிபாகம் வெள்ளைச் சருக்கரை கூட்டித் தேன்விட்டுப் பிசைந்து ஒருவராகனெடைவீதம் சாப்பிட்டுவரக் கண்ணுக்கு ஒளி உண்டாகும்.

இதன் தளிரை இடித்துச் சாறு பிழிந்து துல்லியமான மெல்லிய சீலையை அதில் நனைத்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு, சந்நிபாத முதலிய ரோகங்களில், கபம் தொண்டையிற் கட்டிக் கஷ்ட சுவாசத்தைத் தருகின்ற சமயத்தில், 2 அங்குல சதுரமுள்ள மேற்படி சீலையை அரைக் கால் அல்லது கால் ஆழாக்கு நீரில் கசக்கிப்பிழிந்தச் சாறைப் புகட்டக் கபம், கட்டுக் கட்டாய் வீழ்ந்து உடனே சுகத்தைத் தரும்.

புண்பட்ட இடங்களில் இதன் பருப்பை, உரைத்துப்பூசப் புண்ணாறும்.

தான்றிச்சூரணம், பாறையுப்பு, திப்பிலிச்சூரணம், சமவெடை கூட்டி மோர்விட்டு அரைத்துக்கொடுக்கத் தொண்டைக்கம்மல் நீங்கும்.

தான்றிக்காயை நெய் விட்டு வறுத்துக் கோதுமை மாவைப்பிசைந்து கவசித்து, வெதுப்பி வாயிலடக்கி வைக்கத், தொண்டைப்புண், இருமல், சீதள தோடம் இவை விலகும்.

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இம்மூன்றும் சமனெடை சேர்த்துக் கஷாயமிட்டு விரணங்களைக் கழுவிவரப் புண்கள் ஆறும்.

---

## திப்பிலி—Thippili.

**வே - பெ.—ஆர்கதி, உண்சரம், உலவைநாசி, கா்மன், குடாரி, கோ்லகம், கோ்லி, கோழையறுக்கி, சரம், சாடி, துளவி, மாகதி, கணை, சௌண்டி, தண்டுலி, கணம், கலினி, பாணம், பிப்பிலி, வைதேகி, அம்பு, ஆதிமருந்து.**

Piper Longum ; Chavica Roxburghi

Eng : Long pepper.

Tel. Pippilu పిప్పళ్లు.

Mal. Thippili തിപ്പിലി

Kan. Hippili ಹಿಪ್ಪಲಿ.

Sans. pippali पिप्पली·

Duk. Pipliyan * پپلیان

Pers. Darai fe- fil * دار فلفل

இக்கொடி தென்னிந்தியாவில் விசேஷமாயுண்டு. வங்காளத்தின் கீழ்ப் பாகங்களில் இதன் பழத்திற்காகப் பயிரிட்டுவளர்க்கிறார்கள். இதற்கு மிளகைப்பார்க்கிலும் வீரியம் அதிகம். இதில் இருசாதி உண்டு - ஒன்று அரிசித்திப்பிலி, மற்றொன்று யானைத்திப்பிலி.

**ப—உ.**—காய், அரிசி.

**பச்சை.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**உலர்ந்தது.**

கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

### பச்சைத்திப்பிலி,

குணம்—கபத்தையும், சீதத்தையும் உண்டாக்கும். பித்தத்தைப் போக்கும்.

### உலர்ந்ததிப்பிலி.

இதனால், இருமல், குன்மம், இரைப்பு, கயப்பிணி, ஈளை, பாண்டு, சந்நியாசம், அரோசகம், பொருமல், தலைவலி, மூர்ச்சை, சலதோஷம், பீலிகம், மலப்பெருக்கு, மகோதரம், மூத்தோடம், குளிர்சுரம், மேகக்கட்டி, ஆசனநோய், தொண்டைநோய், ஆவரண பித்தம், நாசி - காது - கண்நோய், இருமிநோய், வியங்கலாஞ்சனம் நீங்கும், நீத்தவிந்து இறுகும்.

### கட்டளைக்கலிப்பா.

இருமல் குன்மம் இரைப்பு கயப்பிணி
  ஈளை பாண்டு சந்நியாசம் அரோசகம்
பொருமல் ஊதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
  பூரிக் குஞ்சல தோடம் பீலீகமும்
வருமலப் பெருக் கோடு மகோதரம்
  வாதம் ஆதிமுத் தோடஞ் சுரங்குளிர்
பெருமலைப்புரி மேகப் பிடகமும்
  பேருந் திப்பிலிப் பேரங் குரைக்கவே.

### வெண்பா.

ஆசனநோய் தொண்டைநோய் ஆவரண பித்தமுதல்
நாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய்—வீசிடுவி
யங்கலாஞ்ச னஞ்சிதையும் அம்பாய் அழிவிந்தும்
பொங்கலாஞ்ச நங்கையர்கோட் போல். (தே - கு.)

வ - கு.—திப்பிலி இரண்டு பலம், கையாந்தகரையிலை ஒரு பலம் இவ்விரண்டையும் ஒரு பாத்திரத்திலிட்டுக் கால்படிநீர் சேர்த்து நீர்சுண்டக்காய்ச்சியபின் நிற்கும் திப்பிலியையும், தழையையும் பதமாய் வறுத்துப் பொடி பண்ணி, வஸ்திரகாயஞ்செய்து ஏற்பட்ட எடைக்குச் சமனெடை நெற்பொரிச்சூரணம் சேர்த்து அதற்குச் சமன் சர்க்கரைகூட்டித் திரிகடிப் பிரமாணம், அந்தி சந்தி சாப்பிட இருமல் தீரும்.

திப்பிலி 5-பங்கு, தேற்றான்விதை 3 பங்கு, இவை யிரண்டையும் நன்றாயரைத்துப் பொடிசெய்து, கழுநீரில் ஒருவராகனெடைப் பிரமாணம், 3-நாள் காலைதோறும் கொடுத்துவரப் பிரமேகம், பெரும்பாடு தீரும்.

திப்பிலிச்சூரணம், கடுக்காய்ச் சூரணம் சமவெடைகூட்டித் தேன்விட்டுப் பிசைந்து அந்திசந்தி இலந்தைக்காய் அளவு, மூன்றுமாதம் கொள்ள, அஷ்ட க்ஷயம் தீரும். அல்லது,

திப்பிலிப்பொடி வராகனெடை $10\frac{1}{2}$, கடுக்காய்ப்பொடி வராகனெடை 8 இவ்விரண்டையும் கலந்து தினம் மூன்று கழஞ்சுவீதம் தேனிற் கொடுக்கலாம்.

திப்பிலிச்சூரணம் திரிகடிப் பிரமாணத்தைக் கம்மாறு வெற்றிலைச்சாறும் தேனும் சமமாகக் கலந்ததில், உட்கொள்ளக் கபம், கோழை, இருமல், சுரம் தீரும்.

திப்பிலிச்சூரணம் கால் பலத்தைக் கால் படி பசுவின்பாலில் விட்டுக்காய்ச்சிச் சாப்பிட்டுவரக், காசம், வாய்வு, மூர்ச்சை, சந்நிபாதம் குணப்படும்.

திப்பிலி பலம் 10, மிளகு, சுக்கு வகைக்குப் பலம் 5, இருசீரகம் வகைக்குப் பலம் 2, அரத்தை பலம் 2, இலவங்கப்பட்டை பலம் 1, ஓமம் பலம் 2, தாளீசம், இலவங்கப்பத்திரி, திரிபலை, இலவங்கம், ஏலம், சித்திரமூலம் இவை வகைக்குப் பலம் 1, இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துச் சமன் சருக்கரை கலந்து தேன்விட்டுப் பிசைந்து வெருகடிப் பிரமாணம் 40 நாள் சாப்பிட்டுவர, இளைப்பு, ஈளை, காசம், கபநோய், உதரவாய்வு முதலியன தீரும்.

திப்பிலி பலம் 2, சீரகம், சுக்கு, ஏலம், திப்பிலிமூலம், வாய்விடங்கம், கடுக்காய், மிளகு வகைக்குப் பலம் ¼, இவைகளை இளவறுப்பாய் வறுத்துத் தேன், சருக்கரை அல்லது பனைவெல்லம், சமன்சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்திலிறக்கிப் பிசைந்து ஒரு பாக்களவு, தினம் இருவேளை, 40 நாள் சாப்பிட்டுவரக் கயரோகம், சோகை, குத்திருமல், ஈளை, நெட்டிருமல், காசம், இளைப்பு, கிறுகிறுப்பு, பித்தவாயு, வறட்சி இவைதீரும்.

**திப்பிலி அரிசி.**

இது கபம், வயிற்றுப்பிசம், மேகம், வாதசுரம், கயரோகம் இவைகளைப் போக்கும். விந்துவைப் போஷிக்கும்.

திப்பலியின் றண்டுலஞ் சிலேத்துமத்தைப் போக்கிவிடும்
உப்பிசத்தை மேகத்தை ஓட்டுங்காண் - தப்பாமல்
வாத சுரந்தணிக்கும் மாகபரோ கந்தொலைக்கும்
தாதுவைவ ளர்ப்பிக்குஞ் சாற்று. (அ.கு.)

**வ - கு.**—இதைச் சூரணஞ் செய்து சருக்கரையுடன் கலந்து வேளைக்கு 8–16 குன்றியளவு வுட்கொள்ள மேற்கண்ட பிணிகள் சாந்தமாகும். நெய்யுடன் கூட்டியுண்ணச் சுக்கிலத்தைப் பலப்படுத்தும்.

---

## திப்பிலிமூலம்—Thippili—Mulam.

**வே - பெ.—அம்பினடி, கிரந்திமூலம் கிரந்திகம், கிந்திகம், தன்மன், தன்மூலம், திப்பிலிக்கட்டை, திரந்திகம், தேசாவரம், நதிகாந்தை, நறுக்குமூலம், நறுக்குத்திப்பிலி, கண்டத்திப்பிலி, மோடி, வேர்.**

**Chavica Roxburgii**

**Eng: Long - pepper - Root of—**

| | |
|---|---|
| **Tel.** Pippili-mulam పిప్పలీమూలం | **Sans.** Pippalee-moola पिप्पलीमूलम् |
| **Mal.** Kattu - Thippili കാട്ടുതിപ്പിലി | |
| **Kan.** Hippili - Beru ಹಿಪ್ಪಲಿ ಬೇರು. | **Hind.** Felfelai moya * فلفلہ موي |

இது திப்பிலிக்கொடியின் மூலம். சிறுமுடிச்சுகளுடன், நீண்டு மெல்லியதாயும் வெளுத்த மஞ்சள் நிறமாயுமிருக்கும்.

**ப - உ.**—வேர்.

**சுவை.—பச்சையில்** - இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு**—இனிப்பு
**உலர்ந்தது** - கார்ப்பு ,, வெப்பம் ,, கார்ப்பு.

குறிப்பு.—இதன்வீரியம் திப்பிலியைவிடக் குறைந்தது.

**செய்கை.**—பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி – Stomachic.

**குணம்.**—தாகம், பித்தம், சோகம், விடாச்சுரம், இருமல், மேகம், குரற்கம்மல், தேகக்கடுப்பு இவை தீரும். மேலும் பித்ததாகம், மூர்ச்சை, சந்தத சுரம், காசம், சுரக்கினிரோகம், அக்கினிமந்தம், சரீரநோவு இவை போம். துர்நீரைவறட்டும். பித்ததேகிகட்குதவாது.

தாகபித்தஞ் சோகந் தணியாச் சுரம்இருமல்
மேகங் குரற்கம்மல் மெய்க்கடுப்பும்—ஏகுங்காண்
திப்பிலிமூ லங்கண்டத் திப்பிலிய தாம்நறுக்குத்
திப்பிலியென் றேயொருக்காற் செப்பு (அ.கு.)

**வ - கு.**—திப்பிலி மூலத்தைப் பால்விட்டரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்கக் குறுக்குவலி, நாவறட்சி, வாததோஷம் தீரும்.

இதைப் பொடிசெய்து மூக்கில் ஊத, மாரடைப்பு, மூர்ச்சை, மயக்கம் நீங்கும். கபத்தை அறுக்கும். வாயுவைக் கண்டிக்கும்.

---

## யானைத்திப்பலி—Ānait-ṭippili.

**வே- பெ.** **அத்தித்திப்பலி, ஆனைத்திப்பலி, கரித்திப்பலி, அலகம், கரிக்கணை, களிறினம்பு, கெஜக்கணை, மதகரிக்கணை.**

**Scindapsus (Pothos) Officinalis.**
**Eng. Piper Lanceolate.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Enuga-pippallu.** ఏనుగ పిప్పలు. **Gaja-pippallu.** గజపిప్పలు. | **Sans.** | **Gaja-pipali.** गजापिप्पली |
| **Mal.** | **Ana-thippili.** ആനത്തിപ്പിലി. | **Hind.** | **Gaj-piplí.** * گج پپلی **Bari-pipli.** بڑی پپلی |
| **Kan.** | **Dodda-hipalli.** ದೊಡ್ಡ ಹಿಪ್ಪಲಿ | | |

இது, மரத்தின் மீது தொத்துகின்ற கொடிவகையைச் சேர்ந்தது. இந்தியாவின் உஷ்ணபாகத்தில் பயிராகும். மிட்ஞப்பூர் பிரதேசங்களில் சாதாரணமாய்ப் பயிராகின்றது. மருந்துக் கடைகளில் கிடைக்கும்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடாரக்னிவர்த்தநி - Stomachic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Sudorific (Diaphoretic).

**குணம்.**—இதனால் வாதம், கபம், கரப்பான், குரற்கம்மல், நாசிநீர்ப் பாய்ச்சல் (நீர்ப்பீநசம்), சுவாசம் (இரைப்பு) நீங்கும்; தீபனம் உண்டாகும்.

வாதமறுந் தீபனமா மாருக் கபங்கரப்பான்
ஓதுகுரற் கம்மலிவை யோடுங்காண்—பூதலத்திற்
சோனையைநேர் நாசியினீர் தோலாச்சு வாசமும்போம்
யானையினற் றிப்பலிய தால். (அ.கு.)

**வ - கு.**—இதைப் பொடித்து வஸ்திரகாயம் செய்து தேனிற் குழைத்துச் சாப்பிட ஈளை, இருமல், சுவாசகாசம், குரற்கம்மல், கபப்பிரகோபத்தாலுண்டாகிய நோய்கள் போம். அசீரணபேதியும், வயிற்றுப் பொருமலும் நீங்கும். மேற்கண்ட நோய்கள் தீர இதைத் தேனில் ஊறவைத்தும் உபயோகிக்கலாம்.

**அளவு.**—அரைக்கால் முதல் கால் வராகனெடை.

## திராட்சி—Thrakshi.

**வே- பெ.**—அராவாரம், கொடிமுந்திரி, கொடிமுந்திரிகை, முந்திரிகை, திராகைக்ஷ, மதுரசம், கோத்திரிகை, திராக்கம், பலோத்தமை.

Vitis Vinifera.

Eng : Grapes.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Draksha | ద్రాక్ష. | Sans. | Draksha | द्राक्षा |
| Mal. | Draksha | ദ്രാക്ഷാ | Hindi | Munakha | * منقه |
| Kan. | Draksha | ದ್ರಾಕ್ಷೆ. | Dak | Munakha | * منقه |

இது ஓர்வகைக்கொடி. உஷ்ணப்பிரதேசங்களில் பயிரிப்படுகின்றது. இலை பீர்க்கன் இலையையும், புஷ்பங்கள் வேப்பம் பூவையும் ஒத்திருக்கும். பழங்களில் சிலவகை, பச்சையாகவும், வேறு சில ஊதா நிறமாகவும் இருக்கும். பழத்துக்குள் இரசமும், சதையும் நிறைந்து தோல் மிகமெல்லியதாக விருப்பதால், பழம் மிகப் பளபளப்பாக விருக்கும். ஒவ்வொரு பழத்திலும் சிறிய விதைகள் உண்டு. சில சாதிக்கொடிகளின் கனிகளில் விதைகள் இல்லை. பழக்குலைகள் கொத்துக் கொத்தாக, அடிகனத்தும் நுனிசிறுத்தும் மிக அலங்காரமாகத் தொங்கும். பழங்களில் சில புளிப்பும், வேறு சில இனிப்புமுள்ளவை.

**ப - உ.**—இலை, பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பழம்.**

- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive,

**இலை, காய்.**

- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.

**வற்றல்.**

- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—மலத்தை இளக்கி வெளிப்படுத்தும். இரத்தத்தைச் சுத்தி பண்ணும், வயிற்றுநோய், இரத்தப்போக்கு முதலியவைகளை நிறுத்தும், இருதயத்தைப் பலப்படுத்தும், தேகத்தைக் குளிரப்பண்ணும்.

பழவற்றல் மலத்தை யிளக்கும், கோழையை அகற்றும்.

**வ - கு.**—பழத்தைப்பிழிந்த இரசத்தை ஒரு தேக்கரண்டி வீதம் காலை, மாலை இரு வேளையும் குழந்தைகளுக்குக் கொடுத்துவர, பல்முளைக்கும்போது உண்டாகும் மலக்கட்டை நீக்கும். மேலும் மலக்கட்டினு லுண்டாகும் சந்நியையும் போக்கும். இதுவே சலதோஷம், சுரம் முதலியவைகளுக்குத் தகுந்த மருந்தாகும்.

வற்றலை, சுரம், இருமல், காமாலை, கயம் முதலியவைகளுக்கு வழங்கலாம். இதைக் கஷாயமிட்டுக் கொடுக்கத் தாகம், வறட்டிருமல் தீரும். வெப்பத்தைத் தணிக்கும்.

இலையைக் கஷாயமிட்டு அசீரணபேதிக்குக் கொடுக்கலாம்.

**குறிப்பு.**—திராட்சை இரசம் புளித்து நுரைக்கும்போது அடியில் தங்கி நிற்கும் உப்புக்குத் திராட்சைஉப்பு என்று பெயர். இது மிகவும் புளிப்பானது.

## திரிபலை—Thiripalai.

**வே - பெ.—திரிபலம்.**

Tel. Thripalam త్రిఫలము.
Mal. Muppala മുപ്പല
Thrupala. തൃഫല
Kan. Thriphala ತ್ರಿಫಲ.
Sans. Thriphala त्रिफला
Pers. Ithriphal اطریفل *

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் ஆகிய இம்மூன்று சரக்குகளின் கூட்டுறவே திரிபலையாம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இம்மூன்றும் கூடியபின் அவற்றால் விலகும் நோய்களாவன :—

ஆசனப்புண், இரைப்புப்பிசம், குன்மம், சருமரோகம், நாசிநோய், குத்திருமல், பாண்டு, பிரமியம், பிலீகம், வயிற்றுவலி, புண், வித்திரதி, வெண்குட்டம், மதமூர்ச்சை, சருவ விஷமூர்ச்சை ஆகியவையாம்.

வித்திரதி நாசிநோய் வெண்குட்டம் ஆசனப்புண்
குத்திருமல் பாண்டுகுட்டம் குன்மம்இரைப்—பெற்றுமத
மூர்ச்சைபிலீ கம்பிரமி மோடுருபுண் சர்வவிட
மூர்ச்சையறு முப்பலத்தான் முன். (தே.கு.)

அன்றியும் சீழ், ஊனீர் முதலியன கசிதல், மேதோரோகம், கபக்கோளாறு (இரைப்புப்பிசம்), இரத்தபித்தம் நீங்குமென்பது வாகப்டர் கொள்கை.

**வ - கு.**—இதைக்கொண்டு கஷாயம், இலேகியம், சூரணம், தைலம் முதலியவைகள் செய்து மேற்கூறிய நோய்களுக்கு உபயோகித்து வரலாம்.

இது இரசாயன சிகிச்சையில் நற்குணத்தைத் தரத்தக்கவற்றுள் ஒன்று.

---

## தில்லை—Thillai.

**வே - பெ.—தில்வம்.**

Execaria Agallocha.

Eng : Tiger's milk tree.

Tel. Tillamánu తిల్లమాను.
Mal. Kametti കാമെട്ടി.
Kan. Haru ಹಾರು.
Sans. Ugaru उगरु
Hind. Gangíva گنگی وا *

இது இந்திய வனாந்தரங்களில் வளருகின்ற மரம். இம்மரத்திற்குப் பா லுண்டு. இப்பால் வெண்மை. உடலிற் படின் தடிப்பை யுண்டாக்கும்.

**ப - உ.**—பால், விதை.

**சுவை.**—கைப்பு, கரகரப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.

### வித்து.

**குணம்.**—விதைக்கு சகலவித விடங்கள், திமிர்வாய்வு, கயநோய், குட்டம் இவைகள் போம்.

திலம் விதைக்குச் சிறுவிடம் மகாவிடமுஞ்
செல்வஞ் செருக்குந் திமிர்வாய்வும்—வெல்லங்கொள்
வாரை வருத்துகின்ற வன்கபமுங் குட்டமும்இவ்
ஊரைவிடுத் தேகும் உரை.

### பால்.

பாலுக்குப் பாரிசவாதம், சந்நிபாதம், சூலை, குட்டம், முடவாதம், ஐவகை வலி, சில்விடம், எண்பதுவகை வாதரோகங்கள் ஆகியவை போம்.

பாரிசவா தஞ்சந்நி பாதஞ்சூ லங்குட்டஞ்
சேருமுட வாதம்வலி சில்விடம்போம்—பேருரைக்க
இல்லையில்லை யென்றோடு மெண்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி. (அ.கு.)

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டு வலிப்பு முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம். வெளிப்பிரயோகமாக அழுகிய விரணங்களுக்கும் வழங்கலாம்.

பாலில் ஒன்று அல்லது இரண்டு துளி வழங்க நீர்ப்பேதியாகும்.

இப்பால் சவுக்காரத்துக்கு, (வழலை) காரம் ஏற்ற உதவும்.

இப்பால் சேர்ந்த எண்ணெய் மகோதரம், வீக்கம், வாதரோகம் முதலியவைகளுக்கு உதவும்.

---

## தினை—Tinai.

**வே - பெ.—இறடி, ஏனல், கங்கு.**

**Panicum Italicum.**

**Eng : Italian millet.**

| | |
|---|---|
| **Tel.** Korralu కొఱ్ఱలు. | **Sans.** Kanku कङ्गु |
| **Mal.** Thina തിന. | |
| **Kan.** Navane-akki ನವಣೆ ಅಕ್ಕಿ. | **Hind.** Samak Dana سماق دانہ * |

இது இந்தியாவில் பயிராகும் ஒருவகைத் தானியம்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

### அரிசி.

**குணம்.**—இது சோபாரோகம், சந்நிபாதசுரம், கபம், தனிவாதம் இவைகளைப் போக்கும், பித்தத்தைத் தூண்டிவிடும், பசியையுண்டாக்கும்.

சந்நிசுரம் ஐயந் தனிவாத மும்போகுந்
துனனுபித் தத்தைமிகத் தூண்டிவிடுந்—தின்னப்
பினையும் பசியாம் பெருவீக்கம் நீக்குந்
தினையரிசி யின்குணத்தைத் தேர். (அ.கு.)

**தினைமா, கஞ்சி, சாதம்.**

மா, சிலேத்துமவாத தொந்தத்தை நீக்கும்.

சாதம், வீரியத்தை விருத்திசெய்து, வாதகோபத்தை நீக்கும்.

கஞ்சி, வீக்கதோட வருக்கங்களை ஒழிக்கும்.

தினைமா கபவாதந் தீர்க்கும்அதன் சாதம்
புனைபித்த மாயினுநற் போகந்—தனைக்கொடுத்து
வாதம்போக் குங்கஞ்சி மாசோபை தோடமிதன்
பேதமெலாம் போக்குமெனப் பேசு. (அ.கு.)

**வ - கு.**—இதன் அரிசியைச் சிலர் சமைத்து உணவாக அருந்துவார்கள். வெப்பத்தை உண்டுபண்ணு மெனினும், தேகத்தைப் போஷிக்கும் குண முடையது.

இதன் கூழைப் பிரசவப்பெண்களுக்குக் கொடுக்கும் வழக்கம் இந்நாட்டில் உண்டு.

---

## துத்தி—Thuththi.

**வே - பெ.—கக்கடி, கிக்கசி.**

Abutilon Indicum.

Eng : The country mallow.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel** | **Tutturu-benda** తుత్తురుబెండ. | | Sans. | Kankatika | कंकाटिका |
| **Mal.** | **Thuththi** തുത്തി. | | Hind. | Kanghi | کنگی |

இந்தியாவின் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகும் செடி. இதில் அநேக சாதிகள் உண்டு.

| | |
|---|---|
| எலிச்செவித்துத்தி .. .. | Evolvus emarginatus. |
| ஐயிதழ்த்துத்தி .. .. | A plant. |
| ஒட்டுத்துத்தி .. .. | Urena sinuata. |
| கண்டுதுத்தி .. .. | Sida acuminata. |
| காட்டுத்துத்தி .. .. | Sida hirta. |
| கொடித்துத்தி .. .. | Sida montana. |
| சிறுதுத்தி or செந்துத்தி .. | Hibiscus obtusifolia. |
| நாமத்துத்தி .. .. | Sida cristata. |
| நிலத்துத்தி or வயற்றுத்தி .. | Sida cordifolia. |
| பணியாரத்துத்தி .. .. | A plant. |
| பெருந்துத்தி .. .. | Sida asiatica. |
| பொட்டகத்துத்தி or இரட்டகத் துத்தி .. .. .. | Hibiscus abelmoschus. |

**ப - உ.**—இலை, பூ, வேர், பட்டை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

## இலை.

**குணம்.**—இது மூலரோகம், கட்டி, விரண முளைகள், கிருமி விரணம் இவைகட்கு வைரியாகும்.

மூலநோய் கட்டி முளைமுழுப்புண் ணும்போகுந்
சாலவதக் கிக்கட்டத் தையலே !—மேலும்புரை
எப்படியே னும்புசிக்க எப்பிணியுஞ் சாந்தமுறும்
இப்படியிற் றுத்தியிலை யை. (அ.கு)

## பூ.

இது இரத்தவாந்தி, காசரோகம் இவைகளைப் போக்கும்; சுக்கில விருத்தி, தேகக்குளிர்ச்சி இவைகளை உண்டாக்கும்.

துத்தி மலரைநிதந் துய்க்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகும் மெய்குளிருஞ்—சத்தியமே
வாயால் விழும்இரத்தம் மாறும் இருமல்அறும்
தேயா மதிமுகத்தாய் ! செப்பு. (அ.கு.)

## வித்து.

இதனால் கருமேகமும், குட்டரோகமும், உட்சூடும் நீங்கும்.

கையிற்கா லிற்படர்ந்த கார்மேகம் போய்ஒழியும்
மெய்யில்உறு குட்டம்போம் வெப்பகலுந்—துய்யதிரை
யத்திதனை யொத்தவிழி யாரணங்கே நாட்டிலுள்ள
துத்தி விதையைச் சுவை. (அ.கு.)

**வ - கு.**—இலையை ஆமணக்குநெய் விட்டு வதக்கி, ஒற்றடம் கொடுத்துக் கட்ட மூலரோகம், மூலத்தில் உண்டாகும் கட்டிகள், கிருமி விரணங்கள் தீரும்.

இலையைக் கொதிக்கிற தண்ணீரில் போட்டு வேகவைத்து, அந்நீரில் துணியைத் தோய்த்துப் பிழிந்து ஒற்றடங்கொடுக்க வலிகள் தீரும்.

இலை அல்லது வேரின் கஷாயத்தால் வாய் கொப்புளிக்கப் பல், ஈறுகளிலுண்டாகும் ரோகங்கள் தீரும்.

இலையை எந்த ரூபத்தில் உண்டாலும் வெப்பத்தினால் உண்டாகும் சகல நோய்களும் நீங்கும்.

இலையின் சாறு - தோலா 1, நெய் தோலா 1 சேர்த்துக் கொடுக்கப் பித்தத்தால் உண்டான பேதி குணமாகும்.

துத்தி இலையைக் கஷாயமிட்டுப் பாலும், சருக்கரையும் சேர்த்து உட்கொண்டால் மலச்சிக்கல், ஆசனக்கடுப்பு, மேகச்சூடு முதலியவைகள் தணியும்.

இத்துடன் பருப்புச் சேர்த்து சமையல்செய்து சாப்பிடுவது வீட்டு வழக்கம். மூலவாயுக்கு நன்மை தரும்.

இதன் இரசத்துடன் பச்சரிசிமாக் கூட்டிக் களிக்கிண்டி விப்புருதிக் கட்டிகளுக்கு வைத்துக்கட்ட அவை பழுத்து உடையும்.

இதன் பூவை உலர்த்திச் சூரணித்துப் பாலும், கற்கண்டும் சேர்த்துச் சாப்பிட்டுவர இரத்தவாந்தியும், பித்தகாசமும் நீங்கும் - சுக்கில விருத்தியும், தேகக் குளிர்ச்சியும் உண்டாகும்.

விதையைச் சூரணித்துச் சருக்கரையுடன் கலந்து திரிகடிப் பிரமாணம் காலை, மாலை உண்டுவர கருமேகமும், உட்சூடும், குட்டமும் நீங்கும்.

விதையைக் கஷாயம் செய்து மூலம், வெள்ளை, தந்திவெள்ளை இவைகட்கு உபயோகிக்கலாம்.

விதையைக் கரிநெருப்பில் போட்டு அதனின்றும் எழும்பும் புகையைச் சிறு மலக்கிருமிகளுள்ள குழந்தைகளின் ஆசனத்தில் வீசும்படிச் செய்யக் கிருமிகள் வெளிப்படும்.

வேர் ஒரு பலம், திராட்சைப்பழம் அரைப்பலம், நீர் அரைப்படி சேர்த்துக் காய்ச்சி ஒரு ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிக்கொண்டு காலை, மாலை இருவேளையும் உட்கொண்டுவர மேகச்சூடு, நீர்ச்சுருக்கு, தாகம் முதலியன தீரும்.

இதன் வேரைக்கொண்டு பாலைக்கடைய பால் சருக்கரைபோ லாகும்.

---

## தும்பிலிக்காய்—Thumbilik-kay.

**வே - பெ.—தும்பி, பனிச்சக்காய்.**

Diospyros Embryopteris.

Eng. Indian - persimon ; Wild mangosteen.

| | |
|---|---|
| **Tel.** Tumiki - chettu. తుమికిచెట్టు. | **Kan.** Bandadamara. ಬಂಡದಮರ. |
| **Mal.** Panichchi maram പനിച്ചി മരം. | **Sans.** Tinduka. तिन्दुका |
| | **Hind.** Taindu. تیندو |

இம்மரம் சாதாரணமாய் இந்தியா முழுவதும் வளரும். வங்காளப் பிரதேசங்களில் ஏராளமாய் உண்டு. காய் ஏறக்குறைய இலந்தைக்காய்ப் பிரமாணம் இருக்கும்.

**ப - உ.**—பட்டை, பழம், விதை.

**சுவை.**—துவர்ப்பு, புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.

**குணம்.**—அசீரணபேதி, சீதபேதி, வாய்ப்புண், இரத்தபேதி முதலியவைகளை நிறுத்தும்.

**வ. கு.**—பட்டையைச் சிதைத்து ஒரு மணிநேரம் ஊறவைத்து எடுத்த நீரைக் கால் முதல் அரை ஆழாக்கு வீதம் முறைச்சுரத்துக்குக் கொடுக்கலாம்.

காயை நசுக்கிப் பிழிந்த சாற்றை $\frac{1}{2}$—1 பலம் வீதம் கொடுத்துவர அசீரணபேதி, சீதபேதி நிற்கும். உள்ளுறுப்புக்களின் இரத்தப்போக்கையும் நிறுத்தும். பட்டையைச் சிதைத்து வீக்கம், கட்டி முதலியவைகளுக்குக் கட்டலாம்.

பழத்தைத் தின்னலாம். இதனால் மேகம், குட்டம், இரத்தத்தைப்பற்றிய வியாதிகள் முதலியவைகள் சாந்தமாகும்.

பழத்தை விதை நீக்கி, ஊறல் கஷாயமிட்டோ அல்லது கொதிநீர்க் கஷாயமிட்டோ அசீரணபேதி, சீதபேதி இவைகட்குக் கொடுக்கலாம்.

பழத்தை ஊறல் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவரப் பல், ஈறு முதலியவைகளிலுள்ள இரணங்கள் ஆறும். மேலும் பிரமேகம், வெள்ளை முதலியவைகளுக்கு வஸ்தி செய்யலாம்.

## தும்பை—Thumbai.

வே - பெ.—துரோணம், வைகுண்டம்.

Eng: Leucus Aspera.

Tel. Tummi తుమ్మి.
Mal. Thumba തുമ്പ.
Kan. Tumba ತುಂಬ.

Sans. Dronapushpi द्रोणपुष्पी
Hind. Guma Madhupati گوما مادھوپتی *

இது இந்தியாவில் சாதாரணமாய்ப் பயிராகும் ஒருவகைச் செடி. இதில் **ஆனைத்தும்பை** அல்லது **பெருந்தும்பை** என்றொரு சாதியுமுண்டு.

**ப - உ.**—இலை, பூ.

**சுவை.**—இனிப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- மலகாரி - லகுவ்ரேசநி - Laxative.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

### இலை.

**குணம்.**—இதனால் சருப்பவிடம், வாதநோய், தலைவலி, கபதோடம், அக்னிமந்தம், சிலேத்துமசந்நி இவை நீங்கும். இதைப் புளியிட்டுக் கடைந்து உணவோடருந்தில் பிரமேகம், நேத்திரப்புகை, கால்களின் அசதி, தாகம், சோம்பல் இவை உண்டாம்.

சீறுகின்ற பாம்போடு சில்விடங்கால் சென்னிவலி
ஏறுகபம் மாந்தம் இருக்குமோ—நாறுமலர்க்
கொம்பனைய மாதே! குளிர்சீத சந்நிவிடுந்
தும்பையிலை யென்றொருக்காற் சொல்.

தும்பையிலை யையுண்ணுஞ் சோற்றுக்கெ லாங்கறியாய்
அம்புவியோர் மிக்க அருந்துங்கால்—வெம்பிவரு
மேகமொடு கண்புகைச்சல் வீறுகை காலசதி
தாகம்அதி சோம்பலுறுந் தான். (அ.கு.)

### பூ.

தும்பைப் பூவினால் தாகரோகமும், சந்நிபாதசுரங்களும், நேத்திரத் தைப்பற்றிய தோஷங்களும் நீங்கும்.

தாகங் கடிதொழியுஞ் சந்நிபா தங்கள்அறும்
ஆகந் தனில்விழிநோய் அண்டுமோ—மாகந்த
வம்பைப்பீ றுங்குயத்து மாதே! நின் செங்கரத்தால்
தும்பைப்பூத் தன்னைத் தொடு. (தே.கு.)

**வ - கு.**—பாம்புக்கடி விடத்தாலுண்டான விடமூர்ச்சையி னின்றும் உணர்ச்சிபெற இதன் இலை இரசத்தை மூக்கில் பிழிந்து விடுவதுண்டு. இதன்பின் இலையை உள்ளுக்குக் கொடுத்துச் சாற்றைக் கடிவாயிலும் விட, பாம்புக்கடி விடம் நீங்கும்.

இதன் பூவைக் கஷாயமிட்டுக் கொடுக்கச் சலதோடம் நீங்கும். அல்லது பூவின் சாறெடுத்து அதில் 5—15 துளிவரை; சமனெடை தேனும், வெங்காரமும் கலந்து கொடுக்கலாம்.

சிறு குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்குப் பூச்சாறு 6 துளியை உலர்ந்த கர்ச்சூரக்காய்ச் சூரணத்துடன் கலந்து தினம் இருவேளை கொடுத்து வரலாம்.

தீராத் தலைவலிக்கு இதன் 2 துளிச் சாற்றை நசியமிடலாம்.

சந்நிபாத ரோகங்களில் இதன் பூவை முலைப்பாலில் ஊறவைத்துக் கண்களிற் பிழியலாம்.

இப்பூவை எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலை முழுகிவரத் தலை பாரம், நீரேற்றம், சீதளம் நீங்கும்.

---

## துரிஞ்சிபீன்—Thurinjibín.

Alhagi Maurorum.

இது வட இந்தியா, டெக்கான் முதலிய இடங்களில் வளருகிற ஓர்வித முட்செடியின்மீது உறைந்திருக்கும் பனி. மேற்படிச் செடியின் இலை, சிறு கிளை முதலியவைகளைச் சுத்தமான மெல்லிய துணிகளிற் போட்டுக் குலுக்குவதனால் கிடைக்கிறது. வெண்மஞ்சள் நிறமாய், கற்கண்டுத் துண்டுகளின் சாயலோடு, இனிப்புச்சுவை பொருந்தி யிருக்கும்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { நீர்மலப்போக்கி - விரேசநி - Purgative.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**குணம்.**—இதனால் இருமல், மார்வலி, அதிபித்தம், ஓக்காளம், சூட்டைப்பற்றிய சுரங்கள் ஆகியவைகள் போம்.

**வ - கு.**—மேற்கூறிய நோய்களுக்கு ¼—½ வராகனெடை வீதம் உபயோகிக்கலாம்.

இதைப் பசுவின் பச்சைப் பாலில் கரைத்துக் குடிக்கத் தாது விருத்தி யுண்டாகும்.

---

## துவரை—Thuvarai.

**வே - பெ.**—ஆடகி, காச்சி, ஆடகம், தோரை, சுராட்டம், மிருத்தாலகம், மிருத்தனம், யவை.

Cajanus Indicus.

**Eng :** Dholl.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kandulu | కందులు. | Sans. | Tuvari | तुवरी |
| Mal. | Tuvara | തുവര. | Hind. | Arhar-dal | ارهر دال * |
| Kan. | Togari | ತೊಗರಿ. | Duk. | Thuvar-ki-dal | تور کی دال * |

இது இந்தியா முழுவதும் சாதாரணமாய்ப் பயிரிடப்பட்டு வருகின்றது. தானிய வகையைச் சேர்ந்தது. இதில் **பேய்த்துவரை** என்றொரு சாதியுமுண்டு.

**ப - உ.**—இலை, விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**—உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**குணம்.**—பட்டினி முடிவிற் சேர்க்கின்ற பஞ்சமுட்டிக் தாரக பத்தியத்திற்கும், உப்பில்லாப் பத்தியத்திற்கும், சுரத்திற்கும், சந்நிக்கும், பஞ்சணையே கிடையாக எழுந்திருக்கச் சக்தியில்லாமல் மிகவும் மெலிந்தவருக்கும் உதவும்.

பஞ்சமுட்டிக் காமரும் பத்தியவி யஞ்சணமாம்
விஞ்சுசுரஞ் சந்நிகட்கு மெத்தநன்றும்—பஞ்சில்
விழுந்துவரை யாது மெலிந்தாரைத் தேற்றும்
கொழுந்துவரை யாயினீ கொள். (அ.கு.)

**வ - கு.**—இதனிலைச் சாற்றுடன் சிறிது உப்புச் சேர்த்துக் காமாலைக்குக் கொடுக்கலாம்.

வாய்ப்புண், ஈற்றுப்புண் இவைகட்கு இதன் கொழுந்தை வாயிலிட்டு மென்று வரலாம்.

இலையையும், விதை முளையையும் மைப்போல் அரைத்து மார்பில் வைத்துக் கட்டப் பால் சுரப்பு நிற்கும்.

விதையைத் தோல் நீக்கியபின் இதற்குத் துவரம்பருப்பு என்று பெயர். இதை வேகவைத்து இரசம் செய்து சாப்பிடுவது இந்நாட்டு வழக்கம். இதன் பலன்.

**துவரம் பருப்பு ரசம்.**

வாழை, பலா, மா என்கிற முப்பழங்களையும், பால், நெய்க்கறிகளையும், மிதமின்றிப் புசிக்கில், உடனே அக்கினிமாந்தம் பிறக்கும். அதை நீக்குதற்கு வகையறியாது பரிகாரங்கேட்கும் பித்தர்களே ! கேளுங்கள், துவரம் பருப்புக் கட்டிறுத்த நீரில் மிளகு, பூண்டு முதலிய சம்பாரங்கள் சேர்த்து ரசம் வைத்து, அதை நற்கறிகள் சேர்ந்த வுணவுடன் சேர்த்துண்ணில் மேற்கூறிய அக்னிமந்தமும், வாதபிரகோபமும் நீங்கும்.

நவவைவாழைக் கனிபலவின்கனி
நல்லமாங்கனி பாலொடுநெய்க்கறி
கவரிலப்பொழுதே மந்தமாம்பரி
காரங்கேட்கும் பயித்தியக்காரரே !
எவருங்காண்க வறைகுதுமன்னத்தில்
இட்டுணுங்கறி தன்னுடன்கூடவே
துவரைநீர்மிள குள்ளியிட்டுக்கொளீர்
துட்டவாதமுந் துஞ்சிடுமுண்மையே. (தே.கு.)

இது வாயுப் பதார்த்தம்.

விதையை அரைத்து நெருப்பில் வைத்துக் கொதிக்க வைத்துக் கிளறி வீக்கங்களில் வைத்துக் கட்ட அவை கரைந்துபோம்.

முழுத்துவரையை எளிதாக வறுத்து நீர்விட்டு வேகவைத்தெடுத்த இரசத்துடன் உப்பு, புளி, காரம் முதலியன சேர்த்துப் பாகப்படுத்தி உட்கொள்ள சீதளம் நீங்கி உடற்குப் பலமுண்டாகும்.

துவரம்பருப்பைப் பலவகையாகப் பாகஞ் செய்துண்பது இந்நாட்டுப் பழக்கம்.

## துளசி—Thuḷasi.

வே - பெ.—அரி, இராமதுளசி, கிருஷ்ணதுளசி, திருத்துளாய், துளவு, குல்லை, வனம், விருந்தம், துழாய்.

Ocimum Sanctum.

Eng: Holy Basil.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Thulasi | తులసి. | Sans. | Thulasi | तुलसी |
| Mal. | Thulasi | തുളസി. | Hindi. | Thulasi | * تلسی |
| Kan. | Thulasi | ತುಳಸಿ. | | | |

இது நாடுமுழுவதும் பயிராகும் ஓர்வித வாசனைச் செடி. இதற்கு ஏறக்குறைய கற்பூர வாசனையும், காரமான ருசியுமுண்டு. ஏறக்குறைய 2–3 அடி உயரம் வளரும். இதில் அநேக சாதியுண்டு. அவை துளசி (நற்றுளசி), கருந்துளசி, செந்துளசி, நாய்த்துளசி, நிலத்துளசி, கல்துளசி, முள்துளசி களாம்.

ப - உ.—இலை, விதை.

சுவை.—கார்ப்பு, வீரியம் - வெப்பம். பிரிவு - கார்ப்பு.

செய்கை.

இலை.

- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

விதை.

- உள்ளழலாற்றி - அந்தர் ஸ்நிக்தகாரி - Demulcent.

நற்றுளசி.

குணம்.—இதனால் கபம், வயிற்றுளைச்சல், அஸ்திகத சுரம், தாகம், சுரமாந்தம், அரோசகம் இவைபோம். வெப்பத்தைத் தரும்.

ஐயம் வயிறுளைச்சல் அத்திசுரம் தாகமும்போம்
பையசுர மாந்தம் பறக்குங்காண்—மெய்யாக
வாயின் அரோசகம்போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல். (அ.கு.)

விதைக்கு சிலேத்துமமும் அரோசகமும் போம்.

## நிலத்துளசி—Nilath-thuḷasi.

குணம்.—இதனால் கணச்சூடு, பல பித்தநோய்கள், சீதசுரம், வாதசுரம், சிறுகுழந்தைகட்கு முலைப்பாலால் வரும் மாந்தம், மாந்தசுரம், பித்தருட்சை இவைபோம்.

நிலத்துளசி மாதர்தரு நீண்முலைப்பால் மந்தம்
வலுத்தசுரம் பித்தகணம் மாற்றும்—அலத்துகண
மாந்தசுரம் பித்தசுரம் மாபெரிய சீதசுரம்
சேர்ந்தோடச் செய்யுந் தெளி. (அ.கு.)

## நாய்த்துளசி—Náith-thuḷasi.

குணம்.—பொடியிருமல், கோழை, சந்நிபாதசுரம் இவைகளைப் போக்கிச் சரீரத்தைப் போஷிக்கும்.

கபத்தோடு குத்திருமல் காணு தொழியும்
சபத்தைசெய் முத்தோடம் சாடும்—விபத்தழலைச்
சாய்த்துடலைப் போஷிக்கும் தாரணியில் உள்ளோர்க்கு
நாய்த்துளசி தன்னை நவில். (அ.கு.)

## கல்துளசி—Kal-thuḷasi.

**குணம்.**—இது நீர்சுரம், வித்திரநிக்கட்டி, வண்டுகடி, சில்விடம், கோழையைத்தள்ளுகின்ற கபசுரம் இவைகளைப் போக்கும்.

தாபச் சுரமுந் தனிவித் திரதிகளுஞ்
ரோபச் சில்விடமும் தோற்றுதே—கோபிச்சங்
குற்றுளசி லேட்டுமந்தால் ஊன்றுகா சம்பறக்குங்
கற்றுளசிப் பேருரைக்குங் கால். (அ.கு.)

## முள்துளசி—Muḷ-thuḷasi.

**குணம்.**—எலிவிடம், வெட்டுப்புண், காயம் தீர்க்கும். விடங்கள் இளைக்காது.

எலிவிடம்போம் வெட்டுண் டிருக்கும் விரணக்
கிலிவிடும்வி டங்கள் இளைக்கா—உலவியரு
மட்டுறச்சி வந்தமலர் மண்டபத்துள் வாழணமே!
முட்டுளசிப் பேரை மொழி. (அ.கு.)

## செந்துளசி—Chen-thuḷasi.

**குணம்.**—அக்னிகீடவிடம், விடம், கபாதிக்கம், திரிதோடத்தா லுண்டாகும் நோய்கள் இவைகள் போகும்.

செய்ய துளசிவிடம் தீர்க்கும் கபமறுக்கும்
வெய்ய கடிவிடத்தை விண்ணேற்றும்—தையலரே!
முத்தோடத் துண்டா முரணோட்டும் அவ்வழிசேர்
எத்தோட மும்போக்கு மெண். (அ.கு.)

## கருந்துளசி—Karun-thuḷasi.

**குணம்.**—இதனால் இருமல், இரைப்பு, நெஞ்சிற் கோழை சேருவதனாலுண்டாகும் குறுகுறுவென்கிற சத்தம், கிருமி, இருமலினால் நேரிடுங் கேவல், மார்புச்சளி, சூலை, விடம் சந்நிபாதசுரம் இவைகள் நீங்கும்.

இருமலொடு நெஞ்சி விழுப்புச்சு வாசம்
கிருமி சலதோடம் கேவல்—மருமச்
சளிநட்சை சூலைவிடம் சந்நியிவை போக்கும்
தளிரார் கருந்துளசி தான். (அ.கு.)

மேற்கூறிய துளசிவகைகளுக் கெல்லாம் வழக்குகள் ஒன்றுபோலேயாகும்.

**வ - கு.**—துளசி இலையைப் பாலிலிட்டுக் காய்ச்சியுண்ணப் பாலிலுண்டான குற்றங்கள் விலகும். கபத்தைச் சேர்க்காமற் றடுக்கும்.

இலையை உலர்த்திப் பொடித்துப் பீநசத்துக்கு நசியமிடப் புழுக்கள் வெளிப்படும்.

புட்டவியல் செய்து சாறெடுத்து, சிறிது கோரோசனை கூட்டிச் சிறுகுழந்தைகட்குப் புகட்ட, இருமல் தீரும். கபக்கட்டு, மாந்தம், கணச்சூடு தணியும்.

தண்ணீர் சேர்த்துக் காய்ச்சி வேதுபிடித்தாலும், ஸ்நானஞ் செய்தாலும் கபதோடம் நீங்கும்.

துளசித்தளத்தை இந்துக்கள் ஹரிக்கு அருச்சனைசெய்து, வாயிலும் போட்டு மென்றுதின்பார்கள். இது முன்னோர்களின் ஆரோக்கிய ஆதாரங்களில் ஒன்றென யாவரும் அறியத்தக்கது. இதனால் முத்தோடமும் தன்னிலைப்படும். ஆயுள் நீடிக்கும்.

விதையைக் குளிர்ந்த நீரிலரைத்துப் பிரசவத்திற்குப்பின் காண்கின்ற வேதனைக்கும், அன்றிப் பொடியிருமல், பிரமேகம், வெப்பம் இவைகளுக்கும் கொடுக்கக் குணமுண்டாகும்.

## தூதுளை—Thúthuḷai.

**வே - பெ.—தூதுவளை, அளர்க்கம், சிங்கவல்லி.**

Solanum Trilobatum.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mullamusti | ముళ్లముష్టి. | Sans. Alarka अलर्क |
| Mal. | Mulkaththari | മുൾകത്തരി. | |

இது தென்னிந்தியாவில் சாதாரணமாய்ப் பயிராகும் ஓர் வகைக் கொடி இதிற் சிறு முட்கள் உண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—சிறிது கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

### சமூலம்.

**குணம்.**—தூதுளையிலை - உண்டிக்குச் சுவையைத் தரும். பூ - சுக்கில தாதுவை விருத்தி செய்யும். காய் - திரிதோடங்களை நீக்கும். வேரும் கொடியும் - சுவாச முதலிய சிலேத்தும ரோகங்களைப் போக்கும்.

தூது பத்திரி யூண்சுவை யாக்கும்பூ
தாது வைத்தழைப் பித்திடும் காயது
வாத பித்தக பத்தையு மாற்றும் வேர்
ஓதும் வல்லிபன் நோயுமொ ழிக்குமே.

(தே.கு.)

### இலை.

**குணம்.**—இதனால் கபத்தாலுண்டாகும் காதுமந்தம், காதெழுச்சி, காசம், நமைச்சல், மதரோகம், அக்னிமந்தம், திரிதோடம், தேகஉட்குத்தல், விந்து நட்டம், மேலிளைப்பு இவை தீரும்.

காதுமந்தம் காதெழுச்சி காசந் தினவுமதம்
ஓதுமந்தம் முத்தோடம் உட்சூலை—தாதுநட்டம்
மீதுளைப் பத்திரியை மேவச்செய் வாராய்ந்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து.

(தே.கு.)

### பூ.

இதனால் தேகபுஷ்டி, சுக்கிலவிருத்தி, சரீரபலம், வனப்பு, வசியம் முதலியன உண்டாகும்.

புஷ்டியுண்டாந் தாதுவுமாம் பொங்கழகோ டாற்றன்மிகும்
முட்ட நரைத்து முதிர்ந்தவனைக்—கட்டழகு
மாதுளத்தி னீங்காது வைத்திடவும் எண்ணம்உற்றால்
தூதுளத்தின் பூவுண்ணச் சொல்.

(தே.கு.)

### காய்.

இதனால் கபரோகங்கள், பைத்தியதோடம், அருசி, இரத்தாசயவாயு, ஆந்திர பித்தவாதம், மலபந்தம் நீங்கும்.

ஐயம்உடன் பித்தம் அகரும் அரோசகம்போம்
தையலே ! வாதம் தணியும்காண—வையமிசை
ஓதுங் குடல்வாதம் ஓடும் மலம்இழியுந்
தூதுளங் காய்உண்ணச் சொல். (அ.கு.)

**வ - கு.**—காயை வற்றலிட்டுப் பக்குவ பாகம்செய்து உண்டுவரக் கபநோய் அணுகாது.

**பழம்.**

இறுகிய மார்புச்சளி, கயம், வாதாதிமூன்று தோடங்கள், சலதோடம், சருப்பவிடம் இவைகள்தீரும்.

கபக்கட்டு கோழை கதித்ததிரி தோடம்
குடிக்கென் றெழும்புநீர்க் கோவை — கடுக்கென்
றழுத்துவிட மும்போம் அடர்தூது ளத்திற்
பழுத்துவிழும் காயைஉண்டு பார். (அ.கு.)

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டுச் சுவாசகாசம், இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலையைப் பிழிந்து காதில்விடக் காதடைப்பு, காதெழுச்சி குணமாகும்.

இதைப் பதார்த்தம், துவையல், குழம்பு செய்தும் உபயோகிக்கலாம். கபக்கட்டு அறும்.

இம்மூலிகையினால் நெய் காய்ச்சி, கயரோகங்கள், காசரோகங்கள் இவைகட்குக் கொடுத்துவரக் குணமாகும்.

---

## தெங்குமரம்---Thenku-Maram.

**வே - பெ.— தென்னைமரம், பூலோககற்பகவிருட்சம், தென்னம்பிள்ளை, தென், நாளிகேரம், தாழை, இலாங்கலி, புல்மரம்.**

Cocos Nucifera.

Eng : Cocoanut palm.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Tenkayi chettu** | టెంకాయచెట్టు | **Sans.** | **Narikela** | नारिकेलवृक्षः |
| **Mal.** | **Thenna** | തെങ്ങ. | **Hind.** | **Náriyal** | *ناریل |
| **Kan.** | **Tengina gida** | ತೆಂಗಿನಗಿಡ. | **Pers.** | **Narjeel** | *نارجیل |

இம்மரம் இந்தியாவில் எங்கும் வைத்துப் பயிராக்கப்படுகின்றதெனினும் தென்னிந்தியாவில் விசேஷமாய்க் கடற்கரையோரங்களிலும், இலங்கையின் எல்லாப்பாகங்களிலும், பர்மா, கீழ்வங்காளம் முதலிய பாகங்களில் கடலடுத்த பூமிகளிலும், மலையாளத்திலும் ஏராளமாய்ப் பயிராகின்றது. மணற்பாங்கான நிலங்களே இதற்கு ஏற்றது. அதிக உயரமாய் ஏகதேசம் 60—90 அடி வரையிலும் வளரும். தெங்கில் பல சாதிகள் உண்டு. அவைகளில் சிறந்தது **செந்தெங்கு.**

பிள்ளையானவன் தன்னைப் பெற்று வளர்த்த தாய் தந்தையர்களுக்கு, அவர்கள் தள்ளாத காலத்தில் எவ்வாறு கடமைப்பட்டுள்ளானோ, அதுபோலவே தென்னம்பிள்ளையும் தன்னை வைத்து வளர்த்தவர்களைத் தன் தலையிலுள்ள காய்களால் காப்பாற்றுகிறது என்பதை "தளரா வளர் தெங்கு, தாளுண்ட நீரைத் தலையாலே தான்தருதலால்" என்பதிலிருந்து கண்டுகொள்க. தென்னைமரத்தின் சகல உறுப்புக்களும் உபயோக முள்ளவை, ஆனதுபற்றியே இதற்குப் "பூலோக கற்பக விருட்சம்" எனவும் பெயரிட்டுள்ளார்கள்.

இதன் மட்டைகள் ஒன்றன்மேலொன்ருய் அடுக்காய்ப் பரவியிருக்கும். ஓலைகள் இணைக்கப்பட்டிருக்கும் தண்டிற்கு மட்டை என்று பெயர். இதனிலைகள் ஓலை என்றும், இதன் பூ தோட்டினின்றும் வெளிப்படாததற்கு முன், பாளை எனவும் பெயர் பெறும். இப்பாளையைச் சீவிக் கள்ளொடுக்கலாம். பாளை வெடித்து அதனின்றும் பூ வெளிப்படும். பூ முதிர்ந்து பிஞ்சாகும், இப்பிஞ்சுக்குக் "குரும்பை" என்று பெயர். இக்குரும்பை முதிர்ந்து தேங்காய் ஆகிறது. நாள்செல்ல இவை பழுத்துக் கீழே விழும். முதிராத இளந் தேங்காய்க்கு "இளநீர்" என்று பெயர். தேங்காயை மூடியிருக்கும் மட்டைக்குக் "கதம்பை" என்றும், பருப்பை மூடியிருக்கும் கடின வஸ்துவுக்குச் "சிரட்டை," அல்லது "கொட்டாங்கச்சி" என்றும் பெயர்.

ப - உ.— இலை, குருத்து, பூ, பாளை, காய், வேர்கள்.

**பூ - பாளை - வேர்.**

**சுவை.**— துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** — காப்பு.

**காய்.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.




**செய்கை.**

**பூ.**

உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.
பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**இளநீர்.**

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
மலமிளக்கி - லகுவ்ரேசநி - Aperient.
அற்பச்சிறுநீர்ப்பெருக்கி - லகுமூத்ரவர்த்தநி - Mild Diuretic.

**வழுக்கை.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தனி - Diuretic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**தேங்காய்ப்பால்.**

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant
மலமிளக்கி - லகுவ்ரேசனி - Aperient.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
சிறுநீர்ப்பெறுக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**கள்.**

வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.

**வேர்.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**பாளை (பூ)**

**குணம்.**—இளம்பாளைப் பூவால், பிரமேகம், உட்காய்ச்சல், இரத்த பித்தம், அசிர்க்கரம், ஒழுக்குப்பிரமியம், விடபாகநோய் ஆகியவை நீங்கும்.

மேகம் அகக்கொதிப்பு வீறுவி ரத்தபித்தம்
வேக அசிர்க்கரநோய் வீழ்பிரமி—தேகத்தில்
வின்னம்பா லிக்கும் விடபாகம் போகவென்ருல்
தென்னம்பா ளைப்பூவைத் தின்.

(அ.கு.)

### குருத்து.

குருத்தால் கப உபத்திரவமும், இரத்தமூலமும் நீங்கும்.

" தென்னங் குருத்தால் சிலேத்தும வலிநீங்கும்.
மன்னுதிர மூலமது மாறுங்காண்." (அ.கு.)

### கள்.

தென்னங்கள்ளானது குளிர்ச்சியையும், வாதபித்தகப தோஷங்களையும் உண்டாக்கும்.

" தெங்கின் மதுசீதந் திரிதோட முண்டாக்கும்
மங்கிவிடு கள்குலையே யாம்." (அ.கு.)

மேலும் சோணித சுக்கிலப்பெருக்கம், பாண்டுரோகம், சோபை, வாத பித்த தொந்தம், இரத்தக்கழிச்சல், கரப்பான், பேதி, பிரமேகம் ஆகிய இவைகளை உண்டாக்கும். அறிவுகெடும்.

நாதவிந் தூறு நளிர்பாண் டொடுசோபை
வாதபித் தங்கிராணி வன்கரப்பான்—பேதியிவை
பொங்கி அதிகரிக்கும் புத்திகெடு மேகமுண்டாந்
தெங்கின்மது விற்கென்றே செப்பு. (அ.கு.)

### கற்கண்டு.

இதனால் தொண்டைக்குள் திமிர், உதிரத்தில் அழுக்கு, சொறிமுகம், சிலேத்துமவாத தொந்தம், வாதம், இளைத்ததேகிகளுக்கு ஆயாசம், மந்த புத்தி ஆகியவை உண்டாகும்.

நெஞ்சிற் றிமிருஞ்செந் நீரிலழுக் கும்புடையும்
அஞ்சுகப வாதமொடு வாதமுமே—விஞ்சுமிளந்
தொங்கினதே கர்க்கயர்வுந் தூயபுத்தி மந்தமுமாம்
தெங்கினது கண்டாற் றெளி. (அ.கு.)

### வெல்லம்.

இதனால் செரியாமந்தம், வீக்கம், நீரேற்றம் இவை அதிகரிக்கும்.

" தெங்கின்வெல் லத்தாற் செரியாக் குணஞ்சோபை
அங்கமுறு நீரும் அதிகரிக்கும்."

### தேங்காய்ப் பால்.

மிகு மதுரத்தால் உணவை யுட்செலுத்துகின்ற தெங்கின் பாலால், வாத விகாரம், பித்தாதிக்கம், கரப்பான், சுக்கில விருத்தி இவை யுண்டாகும்.

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுமிக விருத்தியாந் தாழ்குழலே ! —போதநல்ல
அன்ன மிறங்கு மதியுரிசை யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி. (அ.கு.)

### தேங்காய் நெய்.

தேங்காய் நெய்யால் தீயால் வருவிரணம், தந்தமூலரோகம், படர்தாமரை, சிரங்கு, ஆகியவை தீரும், தலைமயிர் வளரும்.

தேங்காயி னெய்யத னாற் றீயால் வருபுண்போம்
பாங்காகக் கூந்தற் படர்ந்தேறு—நீங்காத
பல்லிடியின் னோயும் படர்தா மரைசிரங்கும்
அல்லலறப் போமென் றறி. (அ.கு.)

### பிண்ணாக்கு.

தேங்காய்ப் பிண்ணாக்கினால், நமைச்சல், சிரங்கு, விரணம், நீங்காத கரப்பான், மலாசயக்கிருமிகள் ஆகியவைகள் உண்டாகும்,

*சொறிசிரங்கு புண்ணுமாந் தோலாக் கரப்பான்*
*மறுவாக்கும் மேனியெலாம் மாதே !—சிறுக*
*வயிற்றிற் புழுவினங்கள் மாறு துதிக்குஞ்*
*சுயத்தேங்காய்ப் பிண்ணாக்காற் சொல்.* (அ.கு.)

**வ - கு.**—தென்னம் இளம்பாளையை வெட்டி வந்து, மடல் போக்கிப் பூவை இடித்துச் சாறு பிழிந்து அரை ஆழாக்கு எடுத்து அத்துடன் சமன் எடை தயிரும், ஒரு பலம் பழரசமும் சேர்த்துத் தினம் இரண்டு அல்லது மூன்று வேளை கொடுக்க, இரத்த சீத வயிற்றுக் கடுப்பு, நீர்ச்சுருக்கு ஆகியவை தீரும். பத்தியம் - புளியாகாது.

**மது.**

பூம்பாளையி லிருந்து மது எடுக்கிறார்கள், புளிக்காத மதுவைக் கெர்ப்ப ஸ்திரீகளுக்குக் கொடுக்கக் குழந்தைகளுக்கு நல்ல வசீகரத்தைத் தரும்.

குறைந்த அளவில் கொடுக்க வயிற்றுக் கடுப்புத் தீரும்.

தென்னங்கள்ளைக் கீழ்சாதியார் விரும்பிக் குடிக்கிறார்கள். இதனால் ஒருவித மயக்கமுண்டாகும்.

**இளநீர்.**

இதை அருந்தத் தாகந்தீரும், மேலும் இதை மூத்திரவர்த்தநிகளுடன் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இது, சில குளிர்ச்சித் தைலங்களிலும், கண்ரோக மருந்துகளிலும் சேர்க்கப்படுகின்றது.

**தேங்காய்.**

**வே - பெ.—திரியக்ஷி, முக்கண்ணன்.**

இதைத் துருவிப் பிழிந்த பால் மதுரமாக விருக்கும். ஆனால், பித்தத்தை அதிகரிக்கச் செய்யும். இப்பாலைக் காய்ச்சித் தைலம் எடுக்கலாம்.

இப்பாலைக்கொண்டு வாய் கொப்புளித்துவர, வாய் விரணம், தொண்டை விரணம் முதலியன தீரும்.

இப்பாலைக் காய்ச்சி வரும் எண்ணெயை நெருப்புச் சுட்ட விரணங்களுக்கும், புண்களுக்கும் போட்டுவரச் சீக்கிரம் குணமாகும். மேற்படி எண்ணெயைத் தலையில் தடவிவர மயிர் வளரும்.

தேங்காயிலிருந்து மூன்று விதமாக எண்ணெய் எடுக்கலாம். 1—சிரட்டை, 2—கொப்பறைத் தேங்காய், 3—தேங்காய்ப்பால்.

1. சிரட்டைத் தைலத்தை வெளிப் பிரயோகமாக மாத்திரம் வழங்கலாம். அதனால் சரும ரோகங்கள் தீரும்.

2. கொப்பறையிலிருந்து ஆட்டி எடுக்கும் எண்ணெயைக் கறி பதார்த்தங்கள் தாளிப்பதற்கும், தலையில் தேய்த்துக் கொள்வதற்குமாக மலையாள தேசத்தார் அதிகமாக வழங்கி வருகிறார்கள்.

3. தேங்காயைத் துருவிப்பிழிந்த பாலைக் காய்ச்சி எடுக்கும் எண்ணெயைத் தலைக்குத் தேய்க்கவும், கறிக்குமாக பாவிப்பதுண்டு. தலை மயிர் நன்றாய் வளரும். அன்றியும் இது விரணங்களுக்குக் காய்ச்சும் தைலங்களில் சிறப்பாகச் சேரும்.

**சிரட்டைத் தைலம் செய்முறை.**—சிரட்டையைச் சிறு துண்டுகளாக்கி, ஒரு பானையிலிட்டுக் குழித் தைலமாக இறக்கித் தைலம் எடுக்கலாம். இத்தைலத்தைத் தேங்காய் எண்ணெயுடன் கலந்து அல்லது அப்படியே பூசிவரப் படர்தாமரை, அரைப்பத்து, தேமல் முதலிய சருமவியாதிகள் நீங்கும்.

தேங்காய்ப் பிண்ணாக்கைக் கன்றுகாலிகள் உணவாகக் கொள்ளுவதுண்டு.

இதைச் கருஞ்சீரகம் முதலிய சரக்குகளுடன் அரைத்து, உடம்பில் தேய்துக் குளித்துவரச் சருமவியாதிகள் நீங்கும். ஆனால் உணவிற்கு ஏற்றதல்ல. குணத்தின் கீழ்க்கண்ட நோய்களைப் பிறப்பிக்கும்.

**குருத்து.**

இளங்குருத்து நாவிற்கு இதமானது. அதைத் தின்றால் கபத்தை நீக்கி இரத்தமூலத்தை நிறுத்தும்.

**வெல்லம், கற்கண்டு.**

இவை, மதுவினின்றும் காய்ச்சி எடுக்கப்படுவன. தேகத்துக்கு ஏற்றதல்ல. இதைத் தின்றால் குணத்தின்கீழ்க் கண்ட நோய்களுண்டாகும் எனப் பெரியோர் கூறியிருக்கின்றனர்.

**ஓலை.**

ஓலையை முடைந்து வீட்டுக்கு வேய்ந்து, கூரையாக்கிக் கொள்ளலாம்.

**வேர்.**

இதைக் கஷாயம் செய்து கருப்பாசய வியாதிகளுக்கு உள்ளுக்குக் கொடுப்பதுண்டு.

---

## தேக்கு—Thékku.

**வே - பெ.—சாகம், சாதி.**

**Tectona Grandis**

**Eng.—Teak tree.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Tekkoo | టేకు | San. | Sala | शालः |
| Mal. | Thékka | തേക്ക് | Hind. | Sagwan | * ساگوان |
| Kan. | Tegu | ತೇಗು. | | | |

இம்மரம் இந்தியா, பர்மா, மலேயா முதலிய நாடுகளிலுள்ள காடுகளில் ஏராளமாய் வளருகிறது.

**ப - உ.—மரக்கட்டை,**

**வெளிப்பிரயோகம்.**

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**வ - கு.**—மரக்கட்டையை நீர்விட்டு இழைத்துச் சேராங்கொட்டை, மூந்திரிக்கொட்டை முதலியவைகளின் விடத்தை நீக்க, மேலுக்கு உபயோகிக்கலாம்.

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய் முடியை வளரச் செய்யும்.

வீடுகட்டுவதற்கும், வீடுகளில் வழங்கும் மரச்சாமான்கள் செய்வதற்கும் இம்மரம் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

---

## தேட்கொடுக்கு—Thel-kodukku.

இது, **சிறுதேட்கொடுக்கு**, **பெருந்தேட்கொடுக்கு** என இருவகைப்படும்.

### சிறுதேட்கொடுக்கு—Chiru-Thel-Koḍukku.

**Heliotropium Indicum**

**Eng.—Heliotrope.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Nagadanti | నాగదంతి. | San. | Vrischikalee | वृश्चिकाली |
| Mal. | Tel-Kodukka | തേൾക്കൊടുക്ക. | Hind. | Hatta-juri | * ہتھ جوڑی |

இது இந்தியாவின் பல பாகங்களிலும் நமைப்புள்ள நிலங்களிலும், வெளிகளிலும் பயிராகக் கூடியது. தைத்திங்கள் முதல் சித்திரைத் திங்கள் வரையில் புட்பிக்கும்.

**ப - உ.**—இலை, பூ, காய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient. }

**பொது குணம்.**—இதனால் நமைச்சல், நாட்பட்டபுண், கரப்பான், கண் மாந்தம், சில்விடம் ஆகிய இவை நீங்கும்.

தேள்கொடுக்குண் டாயிற் றினவடங்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் நாசமாம்—கீட்பட்ட
மாந்த கணமுமறும் மானிலத்துட் சில்விடம்போம்
போந்தமருந் தாகும் புகல். (அ.கு.)

## சிறுதேட்கொடுக்கு.

**குணம்.**—இதற்குச் சொறி, சிரங்கு, விரணப்புண், கரப்பான், கீல்வாதம் கொருக்குப்புண், மாந்தம், ஒழுக்குப் பிரமேகம், பித்த வெட்டை, எலும்பு ருக்கி, ஆகியவைபோம்.

சிறுதேட் கொடுக்கதனாற் சேயிழையே ! கேளாய்
சொறிசிரங்கு புண்கரப்பான் சூலை—கொறுமாந்தை
மேகவெட்டை பித்தவெட்டை மீளா வெலும்புருக்கி
ஆகம்விடுத் தோடு மறி. (அ.கு.)

## பெருந்தேட்கொடுக்கு.

**வே - பெ.**—**சுடுகாடுமீட்டான்.**

**குணம்.**—இரச தாதுவைப் பற்றிய அணுக்கிருமி, புண்கிரந்தி, மேகப்பு ண், கருங்கிரந்தி ஆகிய இவைகள் நிவிர்த்தியாகும்.

சுடுகாடு மீட்டான் எனப்பெரியோர் சொல்லும்
நொடியபெரும் தேட்கொடுக்கால் நீரரர்—பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாக் கருங்கிரந்தி
விண்கரந்து போகாதோ விள். (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையை அரைத்துப் பூசிவரச் சொறி, சிரங்கு, கரப்பா பான், விரணப்புண், காயப்பட்டபுண், கொறுக்குப்புண், ஈறுகட்டல், முகப்ப ரு, இவை குணப்படும்.

இலைக் கல்கத்தை ஒன்று முதல் மூன்று வராகனெடை வீதம் உட் கொள்ளச் சுரம் விலகும்.

இலையையும் பூவையும் குடிநீராகச் செய்து வாய் கொப்புளித்துவரத் தொண்டைப்புண், தொண்டை இறுக்கம், தொண்டையில்காணும் வலிநீங் கும். இந்நோய்களுக்கு இக்கஷாயத்தை இரண்டு மணி நேரத்துற்கொருக் கால், அரை ஆழாக்கு விகிதம் உட்கொண்டாலும் நன்மையுண்டாகும்.

இலைச் சாற்றைக் காதிற் பிழிய சீவடிவதும், கண்ணிலிடக் கண் சிவத்த லும் நீங்கும். தேள் கொட்டிய விடம் நீங்க, கொட்டிய வாயில் இலைச்சாற் றைப் பூசலாம்.

இதன் காயைக் கஷாயமிட்டுக் கொடுக்கச் சுவாசம், குட்டம் தணியும்.

# தேவதாரு—Devadaru.

**வே - பெ.—தேவதாரம், தூண் இருதாரு, தாரு, தாரம், தேவதாரி, சுரர்மரம், பத்திரதாருகம்.**

Cedrus Deodara

Eng.—Himalayan Cedar.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Davadaru | దేవదారు. | Sans. | Devadaru | देवदारु: |
| Mal. | Thevathāram | ദേവതാരം. | Hind. | Deodar | * دیودار |
| Kan. | Devadari | ದೇವದಾರಿ. | | | |

இது இமயமலைச்சாரலில் வளரும் ஒருவித அலங்காரமான உயர்ந்த மரம். இந்தியாவின் இதர பாகங்களில் அலங்காரத்தின் பொருட்டு பயிரிடப் படுகிறது. இதில் **சர்வதேவதாரு** என்கிற ஒரு சாதியுண்டு.

**ப - உ.**—பட்டை, கட்டை.

**சுவை.**—பட்டை—துவர்ப்பு
கட்டை—சிறுகைப்பு. } **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - காரப்பு.

**பட்டை.**

**செய்கை.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
வெப்பகற்றி - ஜ்வஹரகாரி - Febrifuge.

**கட்டை.**

அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—பீநசம், புராணசுரம், நீரேற்றம், சரீர வெப்பம் இவை நீங்கும்.

தேவதா ரக்குணந்தான் சேர்ந்துவளர் பீநசத்தைக்
காவகத்தி லோட்டுங் கரப்பலவே—மாவலவர்
சொல்லும்பு ராண சுரமொடுநீ ரேற்றத்தை
வெல்லு மணற்றணிக்கு மெய். (அ.கு.)

மேலும், இது இருமல், பல்வலி, இரைப்பு, வலி, காதிரைச்சல், நடுக்கு வாதம், கபச்சுரம் இவைகளுக்கும் உபயோகமாகும்.

**வ - கு.**—இம் மரத்தின் பட்டையைக் கஷாயமிட்டுச் சுரம், அசீரணபேதி, சீதபேதி இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இப்பட்டையைத் தூள் செய்து விரணங்களின்மீது போட, அவைகள் குணமாகும்.

இம்மரத்திலிருந்து வடித்தெடுக்கும் கருநிறத்தைலம், விரணம், சருமவியாதி, குட்டம் முதலியவைகளுக்கு உபயோகமாகிறது.

கட்டையைப் பால் விட்டு உரைத்துக் கொதிப்பித்துத் தலையில் அப்பி ஒன்று முதல் நாலு சாமம் விட்டுவைக்கப் பித்தமயக்கம், கிறுகிறுப்பு, தூக்கமின்மை விலகி, நல்ல நித்திரை உண்டாகும்.

இக்கட்டையின் சந்தனத்துடன் பொட்டிலுப்புச் சேர்த்து வீக்கங்களுக்குப் போட வீக்கங் கரையும்.

சிரோபாரத்தை விலக்கக்கூடிய தைல முறை பலவற்றிலும் இது சேரும்.

துர்மணத்தைப் போக்க இதைப் புகைக்கலாம்.

## சரளதேவதாரு—Saraḷa-Devadaru.

**ப - உ.**—கட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** — கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- மணமூட்டி - Aromatic.
- அழுகலகற்றி - தாதுகஷிணரோதி - Anti-Septic.
- நாற்றமகற்றி - பூதிகந்தநாசநி - Deodorant.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதன் கட்டையினால் கபஸ்ராவரோகம், சிலேஷ்மதோடம், பல் நோய், இரைப்பு ஐவகைவலி, கர்ணநாதரோகம், நடுக்குவாதம், கபச்சுரம் முதலியன நீங்கும்.

சரளமெனுந் தேவ தாருவினாற் கண்ணீர்
விரளமா குங்கபமும் வீடுந்—தரளவெயிற்
றுமயஞ்சு வாசம்வலி யண்ணுதம் கம்பக்காற்
போமயச் சுரத்துரமும் போம். (அ.கு.

**வ - கு.**—இக்கட்டையை இடித்து $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ பலமெடுத்துக் கஷாயஞ் செய்து, காலை மாலை உட்கொண்டுவர மேற்கண்ட நோய்கள் தணியும். சூரணஞ் செய்தும் கொடுக்கலாம்.

இதன் மெல்லிய பொடியைப் புகைத்து முகத்திற்படும்படிச் செய்ய கபதோடம், பல்வலி, ஐவகைவலி தீரும். இப்பொடியைத் துர்மணமுள்ள விடங்களில் புகைக்கலாம்.

---

## தேற்றான்—Thettán.

**வெ - பெ.—இல்லம், கதகம், சில்லம், தேறு.**

**Strychnos Potatorum.**

**Eng.—Clearing-nut tree.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Chilla-Chettu. | చిల్ల చెట్టు. | Sans. | Kataka. | कतक: |
| Mal. | Tetta-maram. | തേറ്റമരം. | Hind. | Nirmali. | * نرملی |
| Kan. | Chali-mara. | ಚಾಲಿಮರ. | Pers. | Chilbunj. | * چلبینج |

இம்மரம் பர்மா, வங்காளம், தென்னிந்தியா முதலிய பிரதேசங்களில் வளருகின்றது.

**ப - உ.**—பழம், விதை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** — வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பழம்.**
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- சீதபேதி போக்கி - Antidysentric.

**விதை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுகோழையகற்றி - லகுகபஹரகாரி - Mild Expectorant.

### பழம்.

**குணம்.**—இதனால், சுவாசம், காசம், முத்தோடங்கள் முதலியன போம். ஆனால், இது வாந்தியையுண்டாக்கும். மலத்தைப் போக்கும்.

தேற்றான் கனிதனக்குச் சேயிழையே ! வன்காசந்
தோற்றா தொழியுஞ்சு வாசமும்போஞ்—சாற்றின்மிக
வாந்தி பெருகும் மலம்போம்முத் தோடத்தைச்
சேர்ந்த பிணிகளும்போஞ் செப்பு. (அ.கு.)

### விதை.

விதைக்குப் பிரமேகம், வெட்டை, உட்சூடு, சடராக்கினி, வயிற்றுக் கடுப்பு, எரிகின்ற மூத்திரக் கிரிச்சரம், விரணம் ஆகியவை நீங்கும். மந்தம் உண்டாகும். கண்ணுக்கு நன்மருந்தாகும்.

கூற்றென் றுரைக்கும்விழிக் கோமளமே ! எப்போதும்
ஊற்றும் பிரமியமும் உட்புண்ணும் ஆற்ற இலால்
வெட்டை அகக்கடுப்பும் வீறிவரிற் றேற்றாங்
கொட்டைதனை நீயெடுத்துக் கொள்.

தேற்றும் விதையதுதான் தீபனத்தைப் போக்கும் அனல்
ஆற்றும்இரு கண்ணுக் கருமருந்தாம்—கூற்றா
யிருத்துங் கிரிச்சரத்தை எங்குமிலா தோட்டுங்
குருத்துவம் உண்டாக்குங் குறி. (அ.கு.)

### சுத்தி.

இதைப் பசுவின்பாலில் ஒருநாழிகை ஊறப்போட்டு நீரில் அலம்பி உலர்த்திக் கொள்ளவும் ;

அல்லது தேற்றாங்கொட்டை எடைக்கு நாலுபங்கு சிறுகீரைச்சாறு விட்டு, அரைப்பாகம் சுண்ட எரித்துச் சுத்த சலத்தில் அலம்பி எடுக்கச் சுத்தியாகும்.

**வ - கு.**—இதனால் வாந்தியுண்டாகும் ; ஆனால் சீதபேதியை நிறுத்தக் கூடிய தன்மை இதற்குண்டு.

உலர்ந்த பழச்சூரணத்தை 5 முதல் 7 குன்றிவரைக் கொடுத்துவரச் சீதபேதியை நிறுத்தும்.

பழத்தின் ஓட்டைச் சூரணஞ்செய்து அல்லது கஷாயம்செய்து, சீதபேதி, இருமல், மதுமேகம் ஆகியவற்றிற்குரிய மருந்துகளிற் சேர்த்துக் கொடுக்க நன்மை தரும்.

### விதை.

இதைத் தண்ணீரில் உரைத்துக் கரைத்தால் அத்தண்ணீர் தெளிந்து நிற்கும்.

இதைச் சூரணஞ் செய்து பாலிற்கலந்து உள்ளுக்குக் கொடுக்க, மூத்திரக்கிரிச்சரம், வெட்டை முதலியன தீரும். மதுமேகத்துக்குங் கொடுக்கலாம்.

இத்துடன் கருப்பூரஞ் சேர்த்துத் தேன்விட்டு அரைத்து மெழுகு பதமாக்கிக் கண்ணிற் போட்டுவர கண்ணிற் பீளைதள்ளல், நீர் வடிதல் ஆகியவை போம்.

இத்துடன் இந்துப்பைச் சேர்த்தரைத்துக் கண்ணிலிட, கண் சிவத்தல் நீங்கும்.

இதன் சூரணத்தைத் தேனிற் கலந்து கட்டிகளின்மீது பூசிவர, கட்டிகள் சீக்கிரம் பழுத்து உடையும். நீரிற் கலந்து தினமிருவேளை உட்கொண்டு வர, மார்புச்சளி, கோழைக்கட்டு இளகி வெளிப்படும்.

சிறிய அளவில் குழந்தைகளுக்குக் கொடுத்து வரலாம்.

“ தேற்றாங் கொட்டையிட்டுத் தேற்று மைந்தரை ” என்னும் மேற்கோளாலறிக.

தேற்றான் விதை பலம் 5, திரிகடுகு, திரிபலை, சிற்றரத்தை, சீரகம் வகைக்குப் பலம் ½, எடுத்துப் பொடியாக்கி, அத்துடன் சருக்கரை பலம் 4ஐ ஆவின் பால் படி ஒன்றில் கரைத்துப் பாகு காய்ச்சி, மேற்படிச் சூரணங்களையும் ஆவின்நெய் ஒருபடியும் விட்டு நன்றாய்க்கிண்டிக் கீழ் இறக்கிவைத்துக்கொண்டு, தேன் அரைப்படி விட்டுக் கிளறி எடுத்து, ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் காலை, மாலை இருவேளையாக, நாகபற்பத்துடன் இருபது நாள் உட்கொண்டு வர, மூலம், கயம், அத்திசுரம், வாதமிகுதியாலுண்டான அத்திசுரம் முதலியன தீரும்.

தேற்றான் விதை பலம் ¼, விளாம்பிசின் பலம் ¼, ஆவாரை வித்து பலம் ¼, கடுக்காய் பலம் ¼, இந்நான்கையும் இடித்துச் சூரணஞ்செய்து, பசுமோரிற் கலந்து சாப்பிட்டுவர, மூத்திரப்பெருக்கு நிற்கும்.

---

## தொட்டாற்சுணுங்கி—Thottár-chunungi.

**வே - பெ.—தொட்டால்வாடி, தொட்டாற்சுணங்கி, தொட்டாற்சுருங்கி, இலச்சகி.**

**Mimosa Pudica.**

**Eng.—Sensitive or humble plant.**

| | |
|---|---|
| **Tel.** **Attapatti-chettu** అత్తపత్తిచెట్టు. | **Sans.** **Namaskári** नमस्कारी, **Lajjalu** लज्जालु: |
| **Mal.** **Thíndar-mani** തീണ്ടാർമണി. | |
| **Kan.** **Nāchike-gida** ನಾಚಿಕೆಗಿಡ. | **Hind.** **Lajalu** * لجالو |

இப்பூண்டு இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் அபரிமிதமாய்க் கிடைக்கின்றது.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, கைப்பு ; **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**இலை,**

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**வேர்.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—மேக மூத்திரத்தை நீக்கும், வசியத்திற்கு உதவும். ஓடிக் கட்டுகின்ற வாதத்தடிப்பைக் கரைக்கும்.

மேகநீ ரைத்தடுக்கு மேதினியிற் பெண்வசியம்
ஆகவுன் னிலகும் அதுவன்றி—தேகமிடை
கட்டாகக் கட்டுகின்ற காலைத் துரத்திவிடும்
தொட்டாற் சுருங்கியது சொல். (அ.கு.)

**வ - கு.**—இலைச்சாற்றைச் சிலைப்புண்களிற் பாய்ச்சிக் கட்டிவரக் குணமாகும்.

இதன் இரசத்தைக் குதிரை மூத்திரத்துடன் சமபாகம் சேர்த்துக் கண்ணிலிட்டுவரப் படலம் நீங்கும்.

இலையை நீரிற் காய்ச்சி அக்கஷாயத்தை இடுப்பு நோய்க்கும், குண்டிக்காய் வேதனைக்கும் ஒற்றிடமிட வேதனை தணியும்.

இலையையும் வேரையும் உலர்த்திப் பொடித்துப் பாலில் 1—2 வராகனெடை சேர்த்துக் கொடுக்க மூலவியாதிகள் நீங்கும்.

வேர் ஒரு பாகம், தண்ணீர் பத்துப் பாகம், முறைப்படிக் கஷாயமிட்டு $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்குவரைக் கொடுத்துவர, மூத்திரநோய்கள் நீங்கி, இரத்தம் சுத்தியாகும்.

---

## நங்கை—Nankai.

### சிறியாநங்கை—Chiriya—Nankai.

### Polygala Glabra.

### Eng.—Milkwort.

இது தென்னிந்தியாவில் சாதாரணமாய்க் கிடைக்கக் கூடிய பூண்டு, இது **சிரியாநங்கை, பெரியாநங்கை** என இருவகைப்படும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
உடற்றேற்றி -வ்யதாபேதகாரி - Alterative. }

**குணம்.**—இம்மூலி தேகவலிவைத்தரும். பெண்களை வசியப்படுத்தும். உடற்கு மேனியைத்தரும். வெங்காரத்தைப் பஸ்பமாக்கும்.

சிறியாநங் கைத்தழைச் சேவித்த பேரைப்
பிரியார் மடந்தையர்கள் பின்னும்—அறியதில்
பங்கணமும் நீறும் தனியழகு முண்டாகும்
திங்கள்முக மாதே ! தெளி. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையை யரைத்து ஒரு கொட்டைப்பாக்களவெடுத்துப் பாலுடன் கலந்து காலை மாலையில் மாத்திரம் உட்கொள்ள உடல் பலக்கும். இவர்களைப் பெண்கள் இச்சிப்பார்கள்.

இலையை உலர்த்திச் சூரணஞ்செய்து சமபாகம் சருக்கரைக் கூட்டி காலை மாலை இரு வேளையும் $\frac{1}{2}$ முதல் 1 வராகனெடை வீதம் உட்கொண்டு இச்சா பத்தியமிருந்தால் உடல் பலக்கும், மேனிபெறும். பாம்புகடி விடத்திற்கு இதன் இலையை, கைப்புச் சுவை தோன்றுமட்டும் தின்னும்படிக் கொடுத்து வர, கடிவிடம் நீங்கும்.

இதை அரைத்துச் சிறுகண் நாகத்திற்குக் கவசமிட்டு சிறு புடமிட நாகங் கட்டுபடும். பாம்புக்கடிவிடம், நாகக்கட்டு இவற்றைக் கருதியே "சிறியாநங் கையைக் கண்டவுடன் சீறிய நாகங் கட்டுபடும்" என்கிற முது மொழியும் வழங்கும்.

---

## பெரியாநங்கை—Periá-Nankai.

### Polygala telephioides.

இது தென் இந்தியாவில் கிடைக்கக் கூடிய பூண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.** { மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
பித்தமகற்றி - பித்தஹரகாரி - Anti-bilious.

**குணம்.**—இதற்குப் பித்தரோகம், மலபந்தம் நீங்கும். இதைக்கொண்டு பஸ்பங்கள் செய்யலாம்.

பெரியாநங் கைத்தழைக்குப் பித்தமென்ப தெல்லாந்
தெரியாம லோடுமிது திண்ணம்—பிரியா
மலமறுங்கும் பஸ்பவகை வைப்பத்திற்கு மாகுஞ்
சிலைநுதலே ! நன்றுய்த் தெரி. (அ. கு.)

**வ - கு.**—இதனிலையை யரைத்து $\frac{1}{4}$ பல மளவு உட்கொள்ளப் பித்தரோ கங்கள் தணியும் மலமிளகி வெளிப்படும்.

இதன் சாற்றால் பல லோகங்களையும், சிற்சில உபரசங்களையும் அரைத் துப் புடமிட அவைகள் பஸ்பமாகும்.

சில மீன்கள் கடியால் உடல் தடித்து உணர்ச்சியற்றிருக்கும், அதற்கு இதன் இலையுடன், மிளகு, ஒரு திரி பூண்டு சேர்த்தரைத்துக் கொடுத்து இச்சாபத்தியம் வைக்க 2-3 நாளில் குணங்காட்டும்.

---

## நஞ்சறுப்பான்—Nancharuppán.

**வே - பெ.—நஞ்சுமுறித்தான், கொண்டைச்சாணி, கொடிப்பாலை.**

### Ascelpius Prolifera.

இது ஓர் பூண்டினம்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.** நச்சரி - விஷ நாசநி - Antidote.

**குணம்.**—இப்பூண்டினால் கீடசர்ப்பவிடம், ஒருவர் தானே மூலிகையாதி களை முகர்வதாலும், சுவைப்பதாலும், இடுமருந்து, பாடணாதிகளாலும் வியாபித்த விடம் தீரும்.

தொடுநஞ்சு நாவார துய்க்குநஞ் சுமற்றோ
ரிடுநஞ்சுந் தாவர நஞ்சேரிப்—படுநஞ்சுங்
கூண்டுட னேகாதோ குயின்மொழியாய் ! நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீயெடுக்கும் போது. (அ.கு.)

வ - கு.—இதின் சாறு, அல்லது கஷாயம் மேற்கூறிய வீடங்களை முறிக்கும்.

---

## நத்தைச்சூரி—Naththai-churi.

வே - பெ.—கடுகம், குழிமிட்டான், சூரி, தாருணி, தொலியாகரம்பை, நத்தைச்சுண்டி.

Spermacesoe Hispida.

Eng.—Shaggy buttonweed.

| | |
|---|---|
| Tel. Madana Chettu. మదనచెట్టు. | Sans. Madan Ghanta. मदन घंट: |
| Mal. Thartavel. തർതവേൽ. | Hind. Madana Ghanti. * مدنا گھانتی |

இப்பூண்டு இந்தியா முழுவதும் கிடைக்கும். இதன் வேர் நன்னாரி வேரைப்போலிருக்கும்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**ப - உ.**—விதை, வேர்.

**வேர்.**

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**விதை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**குணம்.**—விதையினால் அதிசாரபேதி, சீதபேதி இவை நீங்கும். வேர் உடலைத் தேற்றும்.

**வ - கு.**—விதையை இலேக்கியமாகச் செய்து ½-1 வராகனெடை வீதம் காலை, மாலை இருவேளையும் சாப்பிட்டுவர, அசீரணபேதி, சீதபேதி, இவை போம். விதையைக் காப்பிப் பானத்துக்குப் பதிலாக உபயோகிக்கலாம். வேரை நன்னாரி வேரைப்போன்று வழங்கலாம்.

---

## நந்தியாவட்டம்—Nanthiyavattam.

வே - பெ.—நந்திபத்திரி, நந்தியாவர்த்தம், பட்டிடை, வலம்புரி.

Tabernoe Montana Coronaria or
Ervatamia Coronaria.

Eng.—East Indian Rose-bay Ceylon-Jasmine.

| | |
|---|---|
| Tel. Nandivardhanamu. నందివర్ధనము. | Kan. Maddarasagida. ಮದ್ದರಸಗಿಡ. |
| | Sans. Nandivraksha. नन्दिवृक्ष. |
| Mal. Nandiyavertam. നന്ദിയാവർത്തം. | Hind. Chandni * چاندنی |

இது பெருஞ்செடி வகுப்பைச் சேர்ந்தது. பூக்கள் வெண்மையாக, ஒற்றை அல்லது இரட்டையாகவிருக்கும். ஒற்றடுக்குப் பூவே விசேஷித்தது. இதில் பாலுண்டு.

**ப - உ.**—பால், பூ, வேர்.

**பூ.**

**சுவை.**— கைப்பு, **வீரியம்** - **பிரிவு** - கார்ப்பு.
**பால், வேர்.**
கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**வேர்.**

**செய்கை.** புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**
தோற்றுயரடக்கி - சர்மவேதநாசாந்தநி - **Local Anodyne.**

**பூ.**

**குணம்.**—இதனால் நேத்திரகாசம், படலம், கரும்பாவை (இலிங்கநாச) தோடங்கள், மண்டைக்குத்தல் ஆகியவை போம்.

காசம் படலம் கரும்பாவை தோடமெனப்
பேசுவிழி நோய்கள்தமை பேர்ப்பதன்றி—ஓசைதரு
தந்திபோ லேதெறித்துச் சாருமண்டை நோயகற்றும்
நந்தியா வட்டப்பூ நன்று (அ.கு.)

**பால்.**

பாலில் எண்ணெய் விட்டு நன்றாய்க் கலந்து நெற்றியில் தேய்க்கக் கண் வேதனை நீங்கும். வெட்டுக்காயங்களில் பாலைப்பூச அவைகளில் சீ பிடியாது. எளிதில் ஆறும்.

**இலை - பூ.**

**வ - கு.**—இலைச்சாறு கண்ரோகங்களுக்கு உதவும். பூவின் சாற்றைத் தனியாகவோ அல்லது எண்ணெய் கலந்தோ கண்ணில் விடக் கண்ணெரிச்சல் நீங்கும். சில சருமநோய்களுக்கும் வழங்கலாம்.

**வேர்.**

வேரை வாயிலிட்டு மெல்ல, பல்வலி நீங்கும். வேரை நீர் சிறிதுவிட்டரைத்து உள்ளுக்குக் கொடுக்க, கிருமிகள் சாகும்.

---

## நரளை—Naralai.

**வே - பெ.—சுகம்பல், நறளை.**

**Vitis Lanata.**

**Eng:—Woolly Heart Vina.**

இது கொடியினம். கிழங்குண்டு, தென்னிந்தியாவிலெங்கும் கிடைக்கும். இதில், **சிறுநரளை பெருநரளை** எனச் சில வகுப்புகள் உண்டு. **யானைத் தடிப்பு** என வேறொரு வகையுண்டு, இதற்குப் **புளிநரலை, புளிநரளை, யானைத்தடிச்சல்**, என வேறு பெயர்களுமுண்டு.

**ப - உ.**—இலை, கிழங்கு இவற்றின் குணம் ஒன்றே.

**கிழங்கு.**

**சுவை.**—புளிப்பு, துவர்ப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**இலை.**

**செய்கை.** { காறலுண்டாக்கி - Acrid.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. }

**குணம்.**—இதன் இலை பெண்கள் வயிற்றில் உருளுகின்ற இரத்த குன்மத்தைப் போக்கும்.

இதன் கிழங்கானது, மேகம், கிறுகருப்பான், அழிபுண், முளைமூலம், இவற்றைப் போக்கும். அன்றியும் செம்பைக் களிம்பறச் சுத்தி செய்யும்.

நரளையிலை தன்குணங்கேள் ! நாரியர் வயிற்றில்
உருளிரத்தக் குன்மம் ஒழிக்கும்—நரளைக்
கிழங்குக்கு மேகமொடு கிறுக ரப்பான்
புழுங்குபுண் மூலமிவை போம்.

புளிநரளை யின்கிழங்கோ பொன்போலச் செம்மைத்
தெளிவாகச் சுத்தியது செய்யும்—வெளியான
மூல முளையறுக்கு முந்துசுவைக் கேதுவுமாம்
கோல மடமயிலே ! கூறு. (அ.கு.)

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டுக் கொடுக்க இரத்த குன்மத்தைப் போக்கும்.

இதன் கிழங்கு இலிங்கத்தையும், செம்பையும் நன்றாகச் சுத்தி செய்யும்.

கிழங்கை யுலர்த்திச் சூரணஞ் செய்து சருக்கரையுடன் கலந்து ½—1 வராகனெடை வீதம் நோய்க்குத் தக்க நாளளவு உட்கொண்டுவர மேகம், கரப்பான், அழிபுண், முளைமூலம் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

---

## நரிவிளா—Narivilā.

**வே - பெ.—நிலவிளா, நெரிவிளா.**

**Feronia.**

இது சிறிய குத்துச் செடி. தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கும். இதில் **குட்டிவிளா** என்று ஒரு சாதியுமுண்டு. ஆனால் செய்கையில் அதிக வித்தியாச மொன்றுமில்லை.

**ப - உ.**—இலை.

**சுவை.**—சிறு கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம் **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதனால் கணசுரம், நாவறட்சி, விரணசுரம், பித்தம், மாறாப் பிரமேகம் இவைகள் நீங்கும்.

அழன்றகண வேக மதிதாகந் தீருஞ்
சுழன்றுவரு பித்தந் தொலையும்—உழன்று
பொருநிலமே கத்துடனே புண்சுரமும் போகும்
அருநிலவி ளாவுக் கயர்ந்து. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையை வெந்நீர் ஊறல் கஷாயமிட்டுச் சுரம், பித்தம் அதிதாகம் ஆகிய இவைகளுக்குக் கொடுக்கலாம்,

இதன் இலையுடன், சிறிது கச்சோலம், ஏலரிசி, கஸ்தூரிமஞ்சள் சேர்த் தரைத்துப் பாலர்கட்கு உடல் நீரிடும் பொழுது, தேகத்தில் பூசி நீரிட்டுக் கழுவிவர, தோலில் யாதொரு குற்றமுமின்றி அதற்கு மேனிதரும். சொறி சிரங்கு உண்டாகாது.

## நறுவிலி—Naruvili.

**வே - பெ.—நறுவலி, நறுவிளி, நறுவுளி, சீதம்.**

Cordia angustigolia.

Eng.—Sebestem plum.

Tel. { Botuku బోటుకు. / Nakkaeru నక్కేరు.

Mal. Naruviri നറുവിരി.

Kan. Mannadike ಮಣ್ಣಡಿಕೆ.

Sans. Sleshmataka श्लेष्मातकः

Arab. Dibaka دباكـ *

Hind. Lasora لسورا *

இது இந்தியா முழுவதும் வளருகிறதெனினும், வங்காளத்தில் விசேஷமாய் பயிரிடப்பட்டு வருகிறது. இம்மரம் மிகு செழிப்பாய் வளர்ந்து நிழல் கொடுக்கக் கூடியது. பட்டை, சாம்பல் நிறமாயும் பல வெடிப்புகளுள்ளதாயு மிருக்கும். குலை குலையாகக் காய்த்துத் தொங்கும் இம்மரத்தின் பழங்களின் சுளையானது மிருதுவாயும், குழ குழப்பாகவும் இருக்கும். இதில் **சிறுநறுவிலி, பெருநறுவிலி,** என்று இருவகை யுண்டு. செய்கையும், குணமும் ஒன்றே யாகும்.

**ப - உ.**—இலை, பழம், கொட்டை, பட்டை.

**இலை, பட்டை.**

**சுவை.**—துவர்ப்பு ; சிறுகைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**

"சிறு இனிப்பு," "சீதம்," இனிப்பு.

**இலை, பட்டை.**

**செய்கை.** {
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.
**பழம்.**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
}

**குணம்.**—இதனிலைக்கு இரைப்பு நீங்கும் ; வேருக்கு எலும்புருக்கி குணமாகும் ; பழத்துக்கு இரத்த பித்தமும் பிரமேகமும் போம்.

நறுவலியி லைக்கிரப்பு நாசமவ் வேர்க்கு
மறுவில் எலும்புருக்கி மாறும்—நறுவலியின்
தன்பழமி ரத்தபித்தஞ் சார்மேக முந்தீர்க்கும்
இன்புறயா வர்க்குமி சை. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையைச் சூரணஞ் செய்தாவது அல்லது குடிநீரிட்டாவது சாப்பிட இரைப்பு நீங்கும்.

இலையைப்பிழிந்து சாறெடுத்து முகத்தில் காணும் பரு அல்லது கொப்பு

ஙங்களுக்குத் தடவச் சுகமாகும்.

பழத்தை ஊறுகாய் செய்து சாப்பிடலாம்; பழத்தை இருமலுக்குக் கொடுத்துவர இருமல் தீரும். நெஞ்சில் கோழையை அகற்றுவதுடன், ஜனனேந்திரியங்களின் தளர்ச்சியையும் நீக்கும்.

கொட்டையைப் பொடித்துச் சூரணித்து எண்ணெயில் குழைத்துப் படைத் தேமலுக்குப் பூசலாம்.

பட்டையைக் கஷாயமிட்டு வாய் கொப்பளித்துவர, பல்லரணை, பல் லசைவு, ஈறுகட்டு இவைகள் நீங்கும்.

பட்டையை இடித்துச் சாறு பிழிந்துத் தேங்காய்ப் பாலில் கலக்கிக் குடிக்கக் கடினமான வயிற்றுவலி சாந்தமாகும்.

---

## நன்னாரி—Nannári.

**வே - பெ.—நறுநெட்டி, பாதாளமூலி, கோபாகு, சாரிபம், பாற்கொடி, நீறுண்டி, கானனுசாரி, கிருஷ்ணவல்லி, சாரியம்.**

Hemidesmus Indicus.

Eng.—Indian Sarasaparilla.

| | |
|---|---|
| Tel. Sugandhi సుగంధిపాల. | Sans. Sariba शारिबा. |
| Mal. Nannari നന്നാറി. | Hind. Magrabu مگرابو * |
| Kan. Sugandha - paladá ಸುಗಂಧ ಪಾಲಾಡ. | Duk. Nát-kà ushbah ناٹ کا عشبہ * |

இது இந்தியா முழுவதும் தானாகவே பயிராகின்ற ஓர் விதக் கொடி. இதில் பாலுண்டு. இதன் வேரின் மேற்புறம் கருமையாகவும் உட்புறம் வெண்மையாகவும், நல்ல வாசனையாயும், சிறு கசப்பாயும் இருக்கும். இதை உலரவைத்துக் கடைகளில் விற்பார்கள்.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—இனிப்பு-சிறுகைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதனால் பித்தநோய், வண்டு கடி போம். மேலும், நீரேற்றம், தாகம், வாய்நீர்ச்சுரப்பு, புணர்ச்சியின்சூடு, மதுநீர், கிரந்தி, சுரவேகம் இவை தணியும்.

சலதோடம் பித்தம்அதி தாகம் உழலை
சலமேறு சீதமின்னூர் தஞ்சூ—டுலகமதிற்
சொன்மதுமே கம்புண் சுரமிவையெ லாம்ஒழிக்கும்
மென்மதுர நன்னாரி வேர். (தே-கு.)

**வ - கு.**—நன்னாரிவேரை வெந்நீர் ஊறல் கஷாயமிட்டு 1/8—¼ ஆழாக்கு வீதம் தினம் 2—3 தடவை கொடுத்துவர, நாட்பட்ட வாதம், மேகப் புடை, சருமரோகம், மந்தாக்கினி, அசீரணம் இவை நீங்கும்.

இக்கஷாயத்தைச் சூடாகவே சாப்பிட வீரியம் அதிகமாகும்.

இக்கஷாயத்துடன் பாலும் சருக்கரையும் கூட்டிக் குழந்தைகளுக்குச் கொடுக்கலாம்.

வேரை உலர்த்திப் பொடித்துப் பசுவின் பால் சேர்த்து, நீர்ச்சுருக்கு முதலிய மூத்தர சம்பந்தமான வெப்ப நோய்களுக்குக் கொடுக்கலாம். மேற்படி நோய்களுக்கு நன்னாரிவேர், சீரகம் சேர்த்துக் குடிநீரிட்டும் குடிக்கலாம்.

நன்னாரி வேரை இடித்து 4 பலம் எடுத்து அத்துடன் 4 ஆழாக்கு வெந்நீர் விட்டு, நாலு மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, அதில் 28 பலம் சீனிச்சருக்கரை சேர்த்துச் சிறு தீயிட்டு எரித்துப் பதத்தில் இறக்கி, வேளைக்கு 1—2 தேக்கரண்டி வீதம் நீரில் கலந்து உட்கொள்ள, அதி வெப்பம் தணியும். நன்னாரியை வாழை யிலையில் சுற்றிக் கட்டிக் கும்பிச் சாம்பலுள் புதைத்துவைத்து எடுத்து நரம்பு நீக்கி, அத்துடன் வெல்லம், சீரகம் சேர்த்தரைத்துக் கொடுக்க, மூத்திரதாரை ரோகம் நீங்கும்.

வேரின் இரசத்தைச் கண்ணில்விட கண்ணுக்குச் குளிர்ச்சியை தரும்.

நன்னாரி, அதிமதுரம், கருநெய்தல், கோட்டம், வசம்பு இவற்றைக் காடிவிட்டரைத்து எண்ணெய் கலந்து மேல் பூசிவர, பித்தத்தால் உண்டாகும் ஒற்றைத் தலைவலி நீங்கும்.

நன்னாரிவேரை அரைத்துத் தேனில் பாகம் செய்துண்ண, அதி பித்தம் தீரும்.

இதைத் கற்றாழைச் சோற்றுடன் கலந்துண்ண வண்டுகடி போம்.

---

## நாகணம்—Nàgaṇam.

**வே - பெ.—நகம்.**

**Mal.** **Nágánam** നാഗണം. | **Sans.** **Nakham** **नखम्**

இது தென்னிந்தியாவில் கிடைக்கும்.

(**குறிப்பு.**—நேர்வாளத்துக்கு நாகணம் என்ற பெயருமுண்டு. ஆகையால் இடம்நோக்கிப் பொருள் கொள்ளவும்.)

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கார்ப்பு - துவர்ப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை.** வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதனால் சிரஸ்தாபரோகம், சலதோடம், தலைக்குத்தலுடன் இடிப்பு, மலட்டுநோய், வீக்கம், நீங்காத கண்ணோய், பெருவயிறு இவை போம்.

தலைவலிநீர் ஏற்றந் தலையிடிப்பு குத்தல்
தொலையா மலட்டுநோய் சோபை—நிலைவிழிநோய்
பாகணைச்சொன் முன்னே ! பரும்உதர ரோகமும்போம்
நாகணத்தி னாலே நவில். (அ.கு.)

**வ - கு.**—இதைக் கஷாயமிட்டுசாப்பிட மேற்கூறிய நோய்கள் போம். எளிதாக வெதுப்பிச் சூரணஞ்செய்தும் உபயோகிக்கலாம்,

## நாகதாளி—Nāgathāli.

**வே - பெ.—சப்பாத்துக்கள்ளி.**

Opuntia Dillenii.

Eng : The Prickly-pear.

Tel. Nagajamudu నాగజెముడు.

Mal. Nagatali നാകതാളി.

Kan. Shivaram Kalli ಶಿವರಂಕಳ್ಳಿ.

Sans. Vidhara-Vishva-saraka विधार, विश्वसारक

Hind. Nágphaná * ناگ پهنا

Duk. Chappal-sund * چپل سند

அநேகமாய் வறட்சியான பூமிகளில் ஏராளமாய் வளர்ந்து செழித்து வருகிற இச்செடிக்கு மிகக்கூர்மையான முட்கள் உண்டு. கள்ளி வருக்கத்தைச் சேர்ந்தது. இந்தியாவின் வெப்பப்பிரதேசங்களில் ஏராளமாயுண்டு. இதன் பூ மஞ்சள் நிறமாயும், பழுத்தால், இதன் காய் செந்நிறம் பொருந்தியு மிருக்கும்.

**ப- உ.**—இலை, பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்**-சீதம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி – சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இது தாவரவிடம், சங்கமவிடம், மகரவாதரோகம் முதலியவைகளைப் போக்கும்.

செந்துவி டங்கள் செடிவிடங்க ளைத்தொலைக்கும்
நொந்திடச்செய் வாதத்தை நூறுங்காண்—முந்தவெகு
வேகமா லிக்கும்வடி வேல்விழிமா தே!பணைத்த
நாகதா ளிக்குணத்தை நாடு. (அ - கு)

**வ - கு.**—இலையைச் சிதைத்துப் புண்களின்மீது வைத்துக்கட்டப் புண்கள் சுகமாகும். இதையே கண் வியாதிகளுக்கும் வைத்துக் கட்டலாம்.

பழத்தை வேகவைத்துப் பிழிந்தசாறு அல்லது பழரசத்தை மணப்பாகு செய்து ஒரு தேக்கரண்டி வீதம் நாளொன்றுக்கு 2 அல்லது 3 தடவைக் கொடுத்துவர, இருமல் சம்பந்தமான நோய்கள், மேகவெள்ளை, சாந்தமாகும். ஆனால், சிறுநீர் சற்றுச் சிவந்து இழியும்.

இதன் பால்நிறமுள்ள சாறு 10 துளியுடன் சருக்கரை கலந்துக் கொடுக்கப் பேதியாகும்.

---

## நாகமல்லி—Nāga-malli.

**வே - பெ.—நாகமல்லிகை, அனிச்சை.**

Rhinacanthus Communis

Tel. Negamalle నాగమల్లె.

Mal. Nāgamalli നാഗമല്ലി.

Kan. Nagamallige ನಾಗಮಲ್ಲಿಗೆ.

Sans. Yuthikapurni यूथकपूर्णी

Hind. Palak-Juhi * پالک جوهی

இந்தியாவின் எல்லாவிடங்களிலும் இச்செடி பயிரிடப்பட்டு வருகிறது.

ப - உ.—இலை, வேர்.

சுவை.—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

**குணம்.**—இதன்வேரால், ஒழியாத் தினவும், நெருங்கிய புடைகளும், இரசதாதுவைப் பற்றிய கிருமிக் கூட்டமும் நீங்கும்.

சீராரு நாகமல் லிகைச்சிவையைக் கண்டக்காற்
றீரா நமைச்சல் செறிபுடைக—ணீராருஞ்
சன்னப் புழுச்சங்கந் தங்காவாஞ் சாம்புனத
வன்னக் குயிலனையாய் ! வாழ்த்து.

**வ - கு.**—இதன் இலையை மென்றுதின்ன, பாம்புவிடம் நீங்கும்.

இலை அல்லது வேரை அரைத்து எலுமிச்சம்பழச் சாற்றுடன் கலந்து சருமத்தைப்பற்றிய மேற்கண்ட நோய்களுக்குப் பூசலாம்.

வேரைப் பாலில் வேகவைத்துச் சாப்பிடத் தாதுவை விருத்திபண்ணும்.

---

## நாணல்—Nànal.

Saccharum Spontaneum.

Eng. Thatch grass.

| | |
|---|---|
| **Tel.** Dharbha. దర్భ | **Kan:** Dharbe. ದರ್ಬೆ. |
| **Mal:** Nánal - pullu നാണൽ പുല്ല്. | **Sans:** Kusa. कुशम्. |
| | **Hind:** Kasa. * کاسا |

இது புல்லினத்தைச்சேர்ந்தது. ஆறு, குளம் குட்டை முதலிய நீர் நிலையோரங்களில், நெருக்கமாய் உயர்ந்து வளர்ந்து காற்றினால் ஆடி அசைந்து கொண்டிருக்கும். இதில், **பெருநாணல், சிறுநாணல்** என இருவகையுண்டு.

ப - உ.—அடித்தண்டு (கரும்பு), வேர்.

சுவை.—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**கரும்பு.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- பித்தமடக்கி - பித்தசாந்தநி - Antipitta.

**வேர்.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.

**கரும்பு.**

**குணம்.**—இதன் சாற்றினால், வாதபைத்தியம், வமனம், அருசி, அதிதூலம், வயிற்றிலெழுநோய், இரைப்பு, பாண்டு இவை மீறாமல் சாந்தமாகும்.

வாயுபித்தம் வாந்திநீர் மாறும் அதிதூல
நோயு ளெழும்வயிற்றி னேய்கலங்கும்—ஓயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கும்
நாளுநா ணற்கரும்பி னால். (அ.கு.

**வ - கு.**—மேற்கண்ட நோய்கள் தீர இதன் சாற்றைத் தக்க அளவில் கொடுக்கலாம்.

## நாபி—Nàbi.

**வே - பெ.—நாவி, நாபம், வசநாபி (பச்சைநாபி - மருவியகுற்றத்தால் இப்பெயர்) வத்சநாபி, விடம், மிருதம்.**

Aconitum Ferox.

Eng. Indian aconite.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Vatsanabhi. | వత్సనాభి | Sans. | Vatsanabi. | वत्सनाभम् |
| Mal. | Vatsanabhi. | വത്സനാഭി. | | | |
| Kan. | Vatsa-nabhi. | ವತ್ಸನಾಭಿ. | Hind. | Bachhnág | بچھناگ |

இது, இமயமலையின் அடிவாரம் முதலிய பிரதேசங்களில் பயிராகும் செடி. இதன் நிறத்தைப்பற்றி, இதை முக்கியமாய் நாலு விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவையாவன :—

1. **வெண்நாபி** (அந்தண [பிரம] நாபி).
2. **செந்நாபி** (அரசநாபி or சத்திரியநாபி).
3. **நீலநாபி** (வைசியநாபி).
4. **கருநாபி** (சூத்திரநாபி).

**ப - உ.**—உலர்ந்த கிழங்கு.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Anti-periodic.
- துயரடக்கி - வேதனுசாந்தநி - Anodyne.
- மேகநீர்ப்போக்கி - Anti-diabetic.
- தாபமகற்றி - உக்ரரோகசமனகாரி - Anti-phlogistic.
- வெப்படக்கி - Antipyretic.
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - Narcotic.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குணம்.—நாபியின் பொதுகுணம்.**

சுத்திசெய்த நாபி - வாதக்கடுப்பு, அசீரணம், ஓதமுள்ள சலதோடங்கள் (கபப்பிணிகள்), குட்டம், குன்மம், தேள்விடம், ஆகியவற்றைப் போக்கும்.

வாதவலி மந்தம்அறல் மாறுக் கபப்பிணிகள்
ஓதுகுட்டு குன்மந்தேள் ஓடுங்காண்—காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வனைகுழலே!
சுத்திசெய்த நாவியின்பேர் சொல். (அ.கு.)

### 1. வெண்நாபி [அந்தண (பிரம) நாபி]

இதற்குக் குட்டம், காணுக்கடிவிடம், சூலை, மார்பை வீங்கச்செய்கின்ற கிருமிரோகம், வாதகுன்மம், சுரம் இவை தொலையும்.

குட்டங் கடிசூலை கூடுபுரி வன்கிருமி
துட்டகுன்ம வாதந் தொலையுங்காண்—வட்டமுலைப்
பெண்ணே! சுரந்தணியும் பேருலகத் தார்பகைக்கும்
வெண்ணாவி தன்னை விரும்பு. (அ.கு.)

2. **செந்நாபி** வசநாபி, பச்சைநாபி.—(சத்திரிய அல்லது அரசநாபி)

இது, குறைநோய், விடசந்நிபாதம், குன்மம், அஸ்திசூடு. தாகசுரம் இவைகளை விலக்கும்.

கடியதொரு குட்டங் கனத்த விஷசந்நி
கொடியதொரு குன்மம் சூலையும்—படியில்
தளிர்அத்தி வெப்புடனே தாகசுரம் தீரும்
வளர்பச்சை நாவிதனை வாழ்த்து. (அ.கு.)

3. **நீலநாபி** (இதுவே வைசியநாபி)

இதற்கு நாவொட்டிக்காய்ச்சல், நமூகியபிலீகம், புண், கிருமிகள், வல்லைக் கட்டி, கவிசை தீரும்.

எண்ணுச் சுரம்போ மிறங்கும்பி லீகமறும்
புண்ணாறும் ஊரும் புழுக்கள்விழும்—தண்ணூரும்
வல்லை கவிகையென வையகத்தோர் சொல்லிடுநோய்
இல்லையொரு கார்நாவிக் கே. (அ.கு.)

4. **கருநாபி** (இதுவே சூத்திரநாபி)

இதனால் சுரம், சந்நிபாதம், தலைநோய், எரிகிருமி, சருப்பவிடக்கடி, உள்விரணம், குறைநோய், தேள்விடம் நீங்கும்.

காய்ச்சல் தலைநோய் கனத்தசந்நி பாதமெரி
பூச்சி விடக்கடியுட் புண்குட்டம்—கூச்சல்தரு
காத்திரத்தே ளுங்குடிபோம் காரளகப் பைங்கொடியே !
சூத்திரநா விக்குத் துவண்டு. (அ.கு.)

**வ - கு.**—இது பைரவமாத்திரைகளில் ஓர் முக்கியமான சரக்காகச் சேர்ந்து மேற்கூறிய நோய்களை விலக்கும்.

நாபி, கெந்தி, மிளகு, லிங்கம், வெண்காரம் இவை வகைக்கு 1 வராகனெடை, திப்பிலி 2 வராகனெடை இவற்றை ஊமத்தை இலைச்சாறுவிட்டு அரைத்து மிளகுப்பிரமாணம் மாத்திரைகளாகச்செய்து, ஒன்று அல்லது இரண்டு மாத்திரை வீதம் சந்நிபாதசுரத்தில் கொடுக்கலாம். பேதியாக வேண்டுமேயாகில் சிறிது வாளம் சேர்த்துக்கொள்ளலாம்.

நாபி, ஜாதிபத்திரி, மிளகு, இலிங்கம், இலவங்கம் அல்லது கருவாப்பட்டை வகைக்கு 1, அம்பர் ½, கத்தூரி ¼ வராகனெடையாக எடுத்து இவற்றை அரைத்து மிளகுப்பிரமாணம் மாத்திரை செய்து, வேளைக்கு ஒரு மாத்திரை வீதம், இருமல், சுவாசகாசம் முதலியநோய்களுக்கு வழங்கலாம்.

நாபி 2 வராகனெடை, அக்கராகாரம் 2 வராகனெடை, இந்துப்பு 5 வராகனெடை அரைத்து மெழுகுபதமாக்கிக் கை கால் வீக்கங்களுக்குப் பூசலாம்.

நாபி, அபின் இரண்டும் சமனெடை எடுத்துச் சாராயம்விட்டு மெழுகுபதமாக அரைத்து நரம்புச்சிலந்திக்கு வெளிப்பிரயோகமாக உபயோகிக்கலாம்.

இதைக் குட்டம், பாரிசவாதம் முதலிய நோய்களுக்கு வழங்குவதுண்டு.

## நாயுருவி—Náyuruvi.

**வே. - பெ.**—அபமார்க்கி, காஞ்சரி, சனம், சிகிசிரம், கதிரி, கரமஞ்சரி, சிறு கடலாடி, சுவானம், அபாமார்க்கம், நாய்குருவி, கிஷ்ணாபன்னி, சகரிகம், செகரிகம், கேசரிகம், கேசரீகம், கொட்டாவி விட்டிறுக்கி, சேகரி, நாயரஞ்சி, மாமுநி.

Achyranthes Aspera.

Eng.—Rough Chaff or Prickly Chaff.

| | | |
|---|---|---|
| Tel. | Uttareni | ఉత్తరేణి. |
| Mal. | Kadaladi | കടലാടി. |
| Kan. | Uttaranee | ಉತ್ತರಾಣಿ. |
| Sans. | Apamarga | अपामार्ग : |
| Hind. | Chir-Chira | چرچرا |

*இது, இந்தியாவில் சாதாரணமாய் எங்கும் வளரக்கூடிய பூண்டு. இதில்* **செந்நாயுருவி** *என்றொரு வகையுமுளது. இது* " **படருருக்கி** " *என்றும் வழங்கும்.*

**ப - உ.**—*சமூலம்.*

**சுவை.**—*கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு,* **வீரியம்** - *வெப்பம்,* **பிரிவு** - *கார்ப்பு.*

**செய்கை.**
- *துவர்ப்பி - ஸங்கோசனகாரி* - Astringent.
- *சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி* - Diuretic.
- *உடற்றேற்றி - வ்யதாபேதகாரி* - Alterative.
- *முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி* - Anti-periodic.

**குணம்.**—**வேரி**னால் *வசியமுண்டாகும்.* **இலை** *இரத்தமூலம், அதிசாரம், கபநோய், வியர்வை, தந்திப்பிரமேகம் இவைகளைப் போக்கும்.* **அரிசி என்** *கிற விதை பசியைப் போக்கும்.* **சமூலச்சாம்பல்** *பிரசவித்த மாதர்* **உதிரச்** *சிக்கலை* **ஒழிக்கும்,** *வங்கத்தைச் சிந்தூரமாக்கும்.*

*மலிகாரங் கைப்புள்ள அபமார்க்கி யின்வேரால் வசியமுண்டாம்*
*இலைமூல உதிரமந்தம் பேதிகபம் வியர்வுதந்தி யிறங்குமேகம்*
*மலையேறும் படிபுரியு முள்ளரிசி பசிமாற்றும் வன்சமூலம்*
*பலமாதர்க் குள்ளழுக்கை நீக்கும்வங்கச் சிந்தூரம் பண்ணுமாதே!*
(தே-கு.)

### செந்நாயுருவி.

*இதனால் வீக்கம், பாண்டு, காமாலை இவை நீங்கும். மாதர்களின் ருது காலத்தில் மாதர்களின் சோணிதத்தை* **வழக்கப்படி உண்டாக்கும்.**

*ஓதமுறு சோபை யுயர்பாண்டு வைப்போக்குந்*
*தீதுறுகா மாலைநோய் தீர்க்குமினார்—சூதகநீர்*
*பொய்ப்புறுகா லத்ததனைப் பொங்குவிக்குங் காரமொடு*
*கைப்புறுசெந் நாயுருவி காண்.* (அ.கு.)

**குறிப்பு.**—*இவ்விரு வகைகளிலும் செந்நாயுருவி* **சிறப்புடையது.**

**வ - கு.**—*சமூலத்தைக் கஷாயமிட்டு* 1/8, 1/4 *ஆழாக்கு வரையிலும் கொடுத்துவர,* **சிறுநீரைப்** *பெருக்கித்தள்ளும்.*

**வேர் ஊறல் கஷாயம்**—*வயிற்றுநோயில் மிகக் குணத்தைத் தரும்.*

இலைச்சாறு, வயிற்றுவலி, சருமச்சொறி, இவைகளை நீக்கும். அதிக அளவில் கருப்பத்தைக் கரைக்கும்.

இலைக் கற்கமும் வெல்லமும் சேர்த்து அல்லது இலையுடன் மிளகு, பூண்டு சேர்த்தரைத்துச் சுரத்துக்குக் கொடுக்கலாம்.

இலையை நீர்விட்டரைத்துச் சிறுகடிவிடங்களுக்குப் பூசலாம்.

இலைச்சாற்றை வெயிலில் வைத்து வற்றவைத்து மெழுகு பதமாக்கி அத்துடன் சிறிது அபின் சேர்த்துக் கொறுக்குப் புண்ணிற்குப் போடச் சுகமாகும்.

வேர்ச்சூரணத்துடன் சிறிது மிளகுப்பொடியும், தேனும் சேர்த்துக் கொடுக்க இருமல் நீங்கும்.

வேரைப் பூசநட்சத்திரமும் ஞாயிறும் சேர்ந்த காலத்தில் நன்றாய்க் குளித்து ஆசாரத்துடன் எடுத்துவந்து, பிரசவஅறையின் ஓர் மூலையில் தூக்கிவிடின் அங்குள்ள கருப்பிணிக்குப் பிரசவம் சீக்கிரத்திலுண்டாகும், அல்லது பெண்ணின் கொண்டையிலாவது இடுப்பிலாவது கட்டலாம் என்பது சிலர் கொள்கை. பிரசவத்தின் பின் இதனைக் கங்கையில் எறிந்துவிடவும்.

வேர்ச்சாம்பல் 5 குன்றியெடை வெல்லத்தில் கொடுக்கச் சுகப் பிரசவமுண்டாகும்.

பச்சை வேரால் பல்துலக்கிவர, பல் அழுக்குகள் நீங்கி, முகவசீகரமுண்டாகும்.

புண்களை அறுத்துக் குணப்படுத்த இதன் சாம்பல், ஊன் பூச்சுத் தைலத்தில் சேரும். (ஞ்த. தை. சு.)

நாயுருவிச் சாம்பல் தெளிநீர் 16 சேர், நாயுருவிச் சாம்பல் 1 சேர், நல்லெண்ணெய் 4 சேர் இவைகளைச் சேர்த்துக்காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துக் கொள்ளவும். இத்தைலம் செவிடு, காதுச்சீழ் முதலியவைகளை நீக்கும். மூக்கில் விட மூக்கினின்று இரத்தம் வடிதல் நீங்கும்.

இச்சாம்பலினின்றும் மிக்க காரமான ஜெயநீர் எடுக்கலாம். வங்கத்தை மடிக்க உபயோகிக்கும் மூலிகைகளில் இதுவும் ஒன்று.

நாயுருவி விதைகளின் கற்கத்தை, அரிசிகழுவிய நீருடன் உட்கொண்டு வந்தால் இரத்தமூலம் நீங்கும்.

ஷ்டி விதையைப் பாயசங்களில் சேர்த்து உட்கொள்ள மூளைநோய்களை நீக்கும். மற்றும் இதனால் அடியிற்கண்ட பலன்களைப் பெறலாம்.

சோம்புகின்ற மண்டூரஞ் சுத்தப்பொடி நாயுருவிச்
சாம்பல் மிளகுப்பொடி தான்சரியாய்—தேம்பிடவே
இஷ்டமுடன் கூடியித னிற்கழஞ்சு கொள்ள
அஷ்டகுன்ம மோடுமலைந் து.

நாயுருவி முற்றினதாய் நறுக்கி மிக்க
நற்பசுவின் கோமயத்திற் போட்டுப் பாண்டம்
வாயிலிட்டுப் பூப்புடத்திற் றயிலம் வாங்கி
வைத்ததனை வெற்றிலையில் மென்று தின்ன
நோயிற்பெரு மந்தார சுவாச காசம்
துணுக்கிருமல் யீளைகண்டத் துடிப்பு நீங்கும்
காயமதைப் பலக்கவைக்குஞ் சித்தர் சொன்னர்
கருணையிது தப்பாது கண்டு தேறே. (யா-வை.

## நாவல்—Nával.

**வே - பெ.—நவ்வல், நம்பு, சம்பு, சாதவம், ஆருகதம். நேரேடு, நேரேடம், சாட்டுவலம், சாம்பல், சுரபிபத்திரை.**

Eugenia Jambolana.

Eng.—Jambul.

Tel. Nerādu నేరేడు.
Mal. Gnával ഞാവൽ.
Kan. Nāeralu ನೇರಳು.
Sans. Jambu जम्बूः.
Hind. Jaman * جامن
Duk. Jamoon * جامن

இம்மரம் இமயமலைச் சாரலிலும், தென்னிந்தியாவிலும் ஏராளமாய் வளருகின்றது. இதில் **வெள்ளைநாவல், கொடிநாவல், குழிநாவல், கருநாவல், சம்புநாவல்** எனப் பலவகை யுள.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பொது.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பழம்.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**பட்டை.**

**குணம்.**—பட்டையினால் வாயிற்பிறக்கும் நோய்கள், இருமல், பெரும்பாடு, ஈளை, குழந்தைகளின் கிரகதோடங்கள், வியங்கம், லாஞ்சனம் என்னும் மச்ச பேதங்கள் ஆகியவை போம்.

ஆசியநோய் காசம் அசிர்க்கரஞ்சு வாசவினை
கேசமுறு பால கிரகநோய்—பேசரிய
மாவியங்க லாஞ்சனம்இவ் வன்பிணியெ லாமேகும்
நாவலுறு பட்டையத னால். (அ.கு.)

**வேர்.**

இதனால் வாதவிகாரம், கரப்பான், புண், வெகுமூத்திரம், இரத்தசீத பேதி, வாதசுரம், மச்சாமேகம் போம்.

வாத மறுங்கரப்பான் மாறும் விரணமொடு
ஓதமுறு நீரிழிவு முந்துரத்த—சீதமுங்காய்
மாவன் சுரமும் வளர்மேக மும்போகும்
நாவன்மர வேரதனை நாடு. (அ.கு.)

**பழம்.**

இதனால் அக்கினிமந்தம், சரீரநோவு, கடுவன் இவை உண்டாம். அதிநீர், வெப்பம், வாய்வு, கடுப்பு, தாகம் இவைகள் நீங்கும்.

மாந்தம் விளையும் வலிகரப்பா னுண்டாகும்
சேர்ந்ததொரு நீரிழிவுஞ் சேருமோ—நாந்தலொடு
வாய்வுங் கடுப்பும் வுருங்கொதிப்புந் தாகமும்போம்
தூயநா வற்பழத்தால் சொல். (அ.கு.)

### நீர்.

நாவல் வேர் ஊறிய நீரானது பித்த அதிசாரத்தையும், மதுமேகத்தையும் நீக்கும். சுக்கிலவிருத்தி, அதிகுளிர்ச்சி, தேகபலம், சுரம், சிலேஷ்மகோபம், அக்கினிமந்தம் இவைகளை உண்டாக்கும்.

நாவல்வே ரூறுசல நாளுமதி சாரத்தை
மாவலிய மேகத்தை மாற்றுங்காண்—பூவுலகில்
விந்தோ டதிசீதம் வீறுபலம் வெப்பையம்
மந்தமிவை யுண்டாக்கு மால். (அ.கு.)

### வெண்நாவற் பழம்.

வெள்ளை நாவற்பழம், இரத்த தாதுவையும் சுக்கில தாதுவையும் பெருக்கும். உள்வெப்பை அகற்றும்.

உதிரமொடு விந்துவையும் உண்டாக்கும் உள்ளே
அதிர் அழலைதன்னை அகற்றும்—பதியதனிற்
கண்ணுவ லியார்க்குங் கதிக்கநோக் குந்திருவே!
வெண்ணுவ லின்கனியை விள். (அ.கு.)

### சம்புநாவற் பழம்.

காட்டிலுள்ள சம்பு நாவற்பழத்தால் வாதஉஷ்ணம், பித்தஉஷ்ணம், ஒருதோடத்தால்பிறந்த தாகரோகம் இவைகள் நீங்கும்.

அனில அழலும் அரும்பித்த வெப்புந்
தனியுலவு தாகமுந் தயங்கும்—தனிவேடன்
அம்புநா ணுங்கண் அணியிழையே! கானில்உறுஞ்
சம்புநா வற்கனிக்குத் தான். (அ.கு.)

### கொழுந்து.

வ - கு.—சிவனார் கிழங்கு (வேர்) விஷத்துக்கு முறிப்பாகும், கொழுந்துக் கஷாயம் அதிசாரத்தைப் போக்கும்.

நாவற் கொழுந்தை ஏலத்துடன் சேர்த்தரைத்து ஆட்டுப்பாலில் கலந்து கொடுக்க அசீரணபேதி போம்.

நாவற்கொழுந்துச்சாறு, மாவிலைச்சாறு இவ்விரண்டும் கலந்து, கடுக்காய்ச் சூரணத்துடன் சேர்த்து ஆட்டுப்பாலில் கொடுக்கச் சீதபேதி போம்.

### விதை

விதையைத் தூள்செய்து வேளைக்கு $\frac{1}{2}$ — 1 வராகனெடை வீதம் கொடுக்க மதுநீரிலுள்ள சருக்கரை நீங்கும்.

இதன் தூளுடன், மாம்பருப்புத் தூளையும் சேர்த்துக்கொடுக்க சிறுநீரைப்பெருக்கும்.

கொட்டை விடமித்த குணத்துக்கும், அதன் முறிப்புக்கும் நஞ்சுநூலைப் பார்க்க.

### பழம்.

இதன் சாற்றைப் பிழிந்து ஒரு புட்டியில் காற்றுப்புகாமல் ஒரு மாதம் வரையில் மூடிவைத்திருந்து அதன்பின் கொடுக்க நீரிழிவு ரோகத்தாலுண்டாகும் தாகம் தீரும்.

பழத்தினாலுண்டாகும் விடத்தை முறிக்க நெல்லிக்காயை மென்று தின்று குளிர்ந்தநீர் குடிக்கவேண்டும் :—அகத்தியர் நஞ்சுமுறிவு-5.

பழச்சாற்றை மணப்பாகு செய்துகொடுக்க தீபனசக்தியை யுண்டாக்கும், அசீரணபேதி, வயற்றுப்போக்குகளை நிறுத்தும்.

பட்டை.

இதை முறைப்படிக் கஷாயஞ்செய்து உட்கொள்ள மதுமூத்திரம், பேதி, சீதபேதி ஆகியவை போம். வாய்ப்புண்ணுக்கும் மூரசிலிருந்து இரத்தம் சீழ் வடிதற்கும் இதைக்கொண்டு வாய் கொப்பளிக்கக் குணமாகும்.

இதை அரைத்து அடிபட்ட வீக்கம், கட்டி முதலியவற்றின்மேற் போட அவை அமுங்கும்.

இதன் சாற்றைப் பெரும்பாட்டுக்கு வழங்கலாம்.

இதுவே எட்டிவிடமித்தலுக்கு மாற்றாகும்.

இதன் பட்டைச் சாற்றினால் அயம் செந்தூரமாகும்.

---

## நிலக்கடம்பு—Nilak-Kadambu.

**வே - பெ.—குயக்காலம், குயகாயம், கோகனம்.**

Asareum Europæum.

இப்பூண்டு ஐரோப்பா முதலிய மேல் நாடுகளிலும், இந்தியாவிலும் பயிராகின்றது. வாசனையாயிருக்கும். இலை அகன்று, மேற்புறம் பச்சை நிறமாயும், கீழ்ப்புறம் நீலமஞ்சள் நிறமாயுமிருக்கும். புஷ்பங்கள் இந்திர நீல வருணமாயும், வாயிலிட்டால் உரப்பாயும், விருவிருப்பாயும்; வாசனையாயுமிருக்கும்.

**ப . உ**—சமூலம்,

**சுவை** - கார்ப்பு, விருவிருப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—{ சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி – Diuretic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—வாயுக்களைக் கண்டித்துச் சிறுநீரைப் பெருக்கும். உள்ளுறுப்புகளின் மாசுகளைநீக்கி, காமாலை, உதிரச்சிக்கல், வீக்கம் இவைகளைக் கண்டிக்கும். மேலும், கல்வாதம், பல்வலி, தலைவலி, நரம்புஇசிவு இவற்றையும் போக்கும்.

**வ - கு.**—இதன் சமூலத்தைக் கஷாயமிட்டு ½—1 ஆழாக்கு, அல்லது சூரணம்செய்து ¼—½ வராகனெடை வீதம் மேற்படி நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## நிலக்குமிழ்—Nilak-Kumizh.

Gmelina Asiatica (or G. Parviflora).

| | |
|---|---|
| **Mal.** **Nilak-kumizh** നിലക്കുമിഴ് | **Hind.** **Nag-phul.** * ناگ پھول |
| **Kan.** **Kumatha.** ಕುಮತ. | **Duk.** **Badhara.** * بدھرا |

இது இந்தியாவின் தென்பாகத்திலும் வங்காளத்திலும் பயிராகும் பூண்டினத்தைச் சார்ந்தது.

**ப – உ.**—இலை, வேர்.

**சுவை.**—சிறுகைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்த்காரி - Demulcent.
- மணமூட்டி - Aromatic.

**குணம்.**—இதன் இலையும் வேரும் சலமந்தபேதி, விழிசொருகல், சீதளம், வாதக்கடுப்பு, அதிகொட்டாவி, மந்தம் ஆகியவற்றைப் போக்கும்.

பேதியொடு கண்சொருகல் பேராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம்—ஓதச்
சலக்குமிழை யொத்தத னக்கருங்கண் மாதே!
நிலக்குமிழைக் கையிலெடு நீ. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையும் தளிரும் கனத்துக் குழகுழப்புள்ளதாயிருப்பதால் சுத்தநீரில் சேர்த்து அலச நீரும், குழகுழப்புத் தன்மையடையும்; இதைக்கொடுத்துவர மேகவெட்டை, நீர்ப்பைத்தாபிதம், நீர்க்கடுப்பு, நீங்கும்.

இதன் வேரை அரைத்துக் கொடுத்துவர, சலமந்தபேதி முதலிய குணத்தின் கீழ்க்குறிப்பிட்ட நோய்களைப் போக்கும்.

மேலும், இது கீல்வாதம், கவுட்டுவீக்கம், மேகரோகம் இவைகளையும் போக்கும்.

இதைப் போர்த்துக்கேயர் யாவற்று நச்சுக்குணங்களைப் போக்க உபயோகப் படுத்தியதாகவும் தெரியவருகிறது.

---

## நிலப்பனை—Nilappanai.

**வே - பெ.—வாராகி, முசலி, திரளாரம், திரக்கத்தாரு, திரணராசன், சகியம், தாலமூலி, தலைத்தாது, நிலவிழுது, நேயம், குறத்தி, சசியம், சித்தி.**

Curculigo Orchioides.

Eng. Black musale.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Naelatadi- నేలతాడి. | Sans. | Musale· मुसली. |
| Mal. | Nilppana. നിലപ്പന. | Hind. | Musalikand. * موصلی کند |
| Kan. | Neladali. ನೆಲದಾಳಿ. | | |

இது இந்தியா, இலங்கையின் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாய்ப் பயிராகின்றது.

**ப - உ.**—கிழங்கு (வேர்).

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient·

**குணம்.**—இதனால் மேகமூத்திர வெப்பம், வெண்குட்டம் விலாக்குத்தல், ஒழுக்குப்பிரமேகம், நீலாஞ்சனரோகம், இவைபோம்; புணர்ச்சியில் விருப்பமுண்டாகும்.

மேக வனல்தணியும் வெண்குட்டந் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே !—போகாத
சூலேமே கங்களொடு துன்னுகரும் புள்ளியும்போஞ்
சாலநி லப்பனைக்குத் தான். (அ.கு.)

**வ - கு.**—இதன் கிழங்கின் மேல்தோலேயும், உள் நரம்பையும் போக்கி உலர்த்திப் பொடித்து $\frac{1}{4}$ பலம் பொடியுடன் சருக்கரை கூட்டிப் பாலுடன் கலந்து காலே, மாலே உட்கொள்ள, சுவாசரோகம், மஞ்சட்காமாலே, அதிசாரம் நீங்கும். பலமு முண்டாகும்.

நிலப்பனங்கிழங்கு, சீந்தில்சத்து, பூனைக்காலி, நெருஞ்சில், இலவம் பிசின், நெல்லிவற்றல், சருக்கரை சமனெடை எடுத்துக் கலந்து வேளைக்குக் கால் பலம் வீதம் பாலுடன் உட்கொள்ளத் தாது விருத்தியுண்டாகும்.

நிலப்பனஞ்சாறு, தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு, நெய், சமபாகம் கூட்டி எரித்து வடித்துக் காலே, மாலே $\frac{1}{4}$—$\frac{1}{2}$பலம் கொடுக்க, எலும்புருக்கி நோய், கணச்சூடு முதலிய நோய்கள் தீரும்.

---

## நிலப்பூசினி—Nilappúsini.

### Ipomea Digitata.

| | | | |
|---|---|---|---|
| Tel. Nela gummudu | నేలగుమ్ముడు | Sans. Vidari. | विदारी. |
| Mal. Palmuthuka | പാൽമുതുക്. | Hind. Bilai-khand. | * بیل خواند |
| Kan. Nelakumbala. | ನೆಲಕುಂಬಳ. | | |

இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் பயிராகின்ற இச்சிறு பூண்டின் வேர்க்கிழங்கு மிகவும் பயன்தரக்கூடியது.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- மலமிளக்கி - மலகாரி - **Laxative.**
- பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனுல் தளர்ந்ததேகம் இறுகும் ; இளேத்த சப்ததாதுக்கள் செழுமையாகும் ; சருமதாது ஒளிரும் ; மலபந்தம் நீங்கும் ; நுட்பமான அறிவு உண்டாகும்.

மெய்யிறுகும் தாதுகளும் வீறுமதி தேசசுமாம்
நொய்யவுட லம்பருக்கும் நுண்ணறிவாம்—பைய
மலப்பூச லேகு மலர்த்திருவே ! நல்ல
நிலப்பூசி னிக்கிழங்கி னுல். (அ.கு.)

**வ - கு.**—இது, பெரும்பாலும் தாதுவிருத்திக்கு உபயோகப்படும் இலேகி யச் சரக்குகளில் ஒன்ருகும்.

பச்சைக்கிழங்கினின்றும் சாறுபிழிந்து, அத்துடன் பசுவின் பாலும் சருக்கரையும் கலந்து 2 பலம் முதல் 4 பலம் வரை, காலேதோறும் சாப் பிட்டுவரத் தாதுநட்டம் நீங்கும்.

இதன் சாற்றுடன், மல்லி, வெந்தயம், சீரகம், சருக்கரை சேர்த்துச் சாப்பிடப் பால்பெருகும்.

கிழங்கை உலர்த்திச் சூரணித்து, திராட்சாரிஷ்டம் அனுபானத்திலீய, பாலைப்பெருக்கும். இச் சூரணத்துடன், நெய் அல்லது தண்ணீர்விட்டான் கிழங்குநெய் சேர்த்துக் கொடுக்கத் தேகம் பருக்கும்.

கிழங்கின் சூரணத்துடன் சருக்கரை, வெண்ணெய் கலந்து, காய்ச்சி இலே கியபதமாகச்செய்து கொடுக்க, மாதாந்த ருதுவை மட்டுப்படுத்தி, தேகத்தை தூலிக்கச் செய்யும்.

---

## நிலம்புறண்டி—Nilampurandi.

இது செடிவருக்கம். தென்னிந்தியாவில் சில பாகங்களில் விசேஷமாய்ப் பயிராகின்றது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—நச்சரி - விஷநாசநி - Antidote.

**குணம்.**—அற்ப விடரோகங்களை ஒழிக்கும், புருட வசியத்துக்கு உதவும்.

" அலம்புரண்ட நோயகற்றும் ஆள்வசிய மாக்கும்
நிலம்புறண்டி மூலி நினை." (அ.கு.)

**வ - கு.**—இம் மூலிகையைக் கஷாயமிட்டு அல்லது இடித்துச் சாறு பிழிந்து, தக்க அளவாகக் கொடுக்கச் சில்விடங்கள் நீங்கும்.

வசியத்துக்குரிய சரக்குகளில் இம்மூலிகையும் ஒன்று.

---

## நிலவிளா—Nilaviḷa.

**Feronia.**

இது தரையில் படரும் ஒருவகைச் செடி. தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Refrigerant.** }

**குணம்.**—இதனல் கணச்சுரம், அதிதாகம், பித்தகோபம், மாருப் பிரமேகம், விரணசுரம் இவை நீங்கும்.

அழன்றகண வேகம் அதிதாகம் தீரும்
சுழன்றுவரு பித்தந் தொலையும்—உழன்று
பொருநிலமே கத்துடனே புண்சுரமும் போகும்
அருநிலவி ளாவுக் கயர்ந்து. (அ.கு.)

**வ - கு.**—இதன் சமூலத்தைக் கஷாயமிட்டுக் குடிக்க மேற்கூறிய நோய்கள் விலகும்.

இதை அரைத்துக் குழந்தைகளுக்குத் தேய்த்து முழுக்காட்டலாம். இதனல் பாலர்கட்குச் சொறி, சிரங்கு உண்டாகாது. உடல் தணிந்து வன்மை பெறும்.

## நிலவேம்பு—Nilavèmbu.

**வே - பெ.—சிரட்குச்சி, காண்டகம், கிராதம், கிரியாத்து, கிராகதி, நாட்டுநிலவேம்பு, அனுரியதித்தம், காண்டம், கோகனம்.**

Gentiana Kuruva.

Eng.—The Chiretta.

| | | |
|---|---|---|
| Tel. | Nelavemu | నేలవేము. |
| Mal. | Nilavèppa | നിലവേപ്പ്. |
| Kan. | Nelavepu | ನೆಲವೇಪು. |
| Sans. | Kirathathikta | किराततिक्त |
| Duk. | Charayathā | * چرایتہ |
| Hind. | Kiryat | * کریات |

இது ஒரு சிறுசாதிச் செடி. இதில், **சீமை நிலவேம்பு** அல்லது **சூரத்து நிலவேம்பு** என்று வேறொருசாதியுண்டு. இதற்குச் சிரட்டா (Chiretta) என்று மேனாட்டார் கூறுவர். சுமார் மூன்றடி நீளமுள்ள இதன் தண்டானது உருண்டு, வழுவழுப்பாயும், பழுப்பு நிறமாயும், கிளைகளுள்ளதாயுமிருக்கும். **நாட்டுநிலவேம்பா**னது வேரோடுகூடி ஒன்றரை அடி நீளமாயும் நான்கு மூலைகளுள்ளதாயும், கொஞ்சம் கறுத்தும் இருக்கும். இந்தியாவில் எல்லாக் கடைகளிலும் சாதாரணமாகக் கிடைக்கக்கூடியது. இவ்விரண்டுவகை நிலவேம்பிற்கும் செய்கை, குணம் ஒன்றுபட்டே நிற்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதனால் வாதசுரம், மேகநீர்க்கோவை, சுரதோடம், பித்த மயக்கம் இவை நீங்கும். புத்திக்குத் தெளிவுண்டாகும்.

வாதசுரம் நீரேற்றம் மாற்றுஞ் சுரதோடம்
காதமென ஓடக் கடியுங்காண்—மாதரசே !
பித்த மயக்கறுக்கும் பின்புதெளி வைக்கொடுக்கும்
சுத்தநில வேம்பின் தொழில். (அ.கு.)

**வ - கு.**—மேற்கூறிய நோய்களுக்கு, நிலவேம்பு 3¾ வராகனெடை, இச்சிலித்தோல் 30 குன்றி, கொத்துமல்லி 30 குன்றி, இவைகளை ஒன்றரை ஆழாக்கு வெந்நீரில் சேர்த்து மூடி, ஒருமணி நேரம் சென்றபின் வடிகட்டி, $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் தினம் 2—3 தடவை கொடுக்கலாம்.

இதன் இலைச்சாற்றைக் குழந்தைகட்குண்டாகும் வயிற்றுப்பொருமல், பேதிகட்கு உபயோகப்படுத்துவது வீட்டுவழக்கம்.

சிதைத்த நிலவேம்பு 4 வராகனெடை, வசம்புத்தூள் ஒருவராகனெடை, சதகுப்பை விதைத்தூள் ஒருவராகனெடை, கோரைக்கிழங்கு ½ பலம், இவைகளை உழக்கு வெந்நீரில் சேர்த்து ஒருமணி நேரம் ஊறவைத்து எடுத்து, வடிகட்டி $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் தினம் 2 அல்லது 3 வேளை கொடுத்துவரப் பலவீனம், அபதானவாதம், சுரம், ஆரம்ப சீதபேதி இவை நீங்கும்.

சிதைத்த நிலவேம்பு 6 பலம், பொடித்த வாலேந்திரபோளம், கரிய போளம் இவைகள் வகைக்கு 1 பலம், சாராயம் 2 உழக்கு கூட்டி, ஏழுநாள் வைத்திருந்து வடிகட்டி, திப்பியில் மீண்டும் சிறிது சாராயம் சேர்த்துப் பிசைந்து வடிகட்டி, ஆகமொத்தம் 2 உழக்கு எடுத்துக்கொண்டு, இதில் ஒரு தேக்கரண்டி வீதமெடுத்து சுத்தநீரிற் கலந்து சாப்பிட்டுவர மந்தாக்கினி, அசீரணம், ஈரல்-குலைநோய் இவைகள் குணமாகும்.

சிதைத்த நிலவேம்பு 1 பலம், வெந்நீர் அரைப்படி, கிராம்புத்தூள், கருவாப்பட்டைத்தூள் அல்லது பொடித்த ஏலம் இவற்றில் ஏதேனும் ஒன்றில் ஒருவராகனெடை எடுத்து ஒன்றுகூட்டி 6 மணி நேரம் ஊறவைத்து வடித்து $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் தினம் 2, 3 தடவை கொடுத்துவர, அசிரணம், குன்மம், க்ஷீணசுரம், முறைசுரம், குளிர்சுரம், கிருமி, அசீரணபேதி, கணுவாதரோகம், கருப்ப ஸ்திரீகளின் வாந்தி, நோயுற்றெழுந்தோர்களுக்குக் காணும் பலவீனம் இவை நீங்கும்.

---

## நிலவாமணக்கு—Nilâvamanakku.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dundiga డుండిగ. | Hind. | Lal-cheranda * لال چرانڈا |

இது குளத்தோரங்களிலும், நீர்நிலைகளின் ஓரங்களிலும் சாதாரணமாய் விளையும் ஒரு சிறு செடி.

**ப - உ.**—சமூலம் - வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—மூட்டுவீக்கம், வாதநோய், பிடிப்பு, ஸ்தம்பவாதம், ஈரல் நோய்கள் முதலியவைகள் சுகப்படும்; மேலும் சருமநோய்கள் பலவும் குணமாம்.

**வ - கு.**—குழந்தைகட்கு உண்டாகும் மண்ணீரல், கல்லீரல் வீக்கங்களுக்கு இதன் வேரைத் தண்ணீரில் ஊறவைத்து வடித்த சலத்தைக் கொடுத்து வரலாம்.

விரேசனகாரியாக உபயோகித்து நெறிக்கட்டு முதலிய வீக்கங்களைக் குறைக்கலாம்.

சாறு பிழிந்து கண்ணிலிட, கண்வியாதிகள் குணப்படும்.

விதைத்தைலத்தை வெளிப்பிரயோகமாக உபயோகிக்க வாதவீக்கம், வாதவலி முதலியவை குணமாகும்.

---

## நிலாவாரை—Nilà-vàrai.

**வே - பெ.**—நிலஆவாரை, நிலவாகை, நாட்டுநிலாவிரை, ஆலகாலம், கமதாயம், தாளினி, ஆவரை, ஆவாகை, குயத்தினலகை.

Cassia lanceolata.

Country senna or (Indian or Tinnevelly senna).

| | | | |
|---|---|---|---|
| Tel. Nela-tangedu నేలతంగేడు. | | Arab. | Sanna-e-hindi * سنا ء هندی |
| Mal. Nila-vàka നിലവാക. | | Hind. | Sunnamaki * سنامکی |
| Kan. Nelà-varike ನೆಲಾವರಿಕೆ. | | Duk. | Nat-ki-sona * ناٹ کی سنا |

இச்செடி இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் வளருகிறதெனினும், தென்னிந்தியாவில் திருநெல்வேலியில் பயிராகின்றதே சிறந்ததெனக்

கண்டறியப்பட்டிருக்கிறது. இதில் **சீமை நில ஆவாரை, சூரத்து நில ஆவாரை** அல்லது **சென்னு முக்கி** (Senna mukki) "Senna alexandria" என்று வேறொருவகை யுண்டு. மேற்கூறிய சரக்கு, இந்தியாவிலிருந்தும் அரேபியாவிலிருந்தும் வெளிநாட்டிற்கு ஏராளமாய் ஏற்றுமதி செய்யப்பட்டு வருகின்றது, இவ்விருசாதி நில ஆவாரைக்கும், செய்கை, குணம் முதலியன ஒரேவிதமெனினும், உருவத்தில் சிறு வித்தியாசமுண்டு. கடைச்சரக்கு மிகவும் அசுத்தமாயும், நாட்பட்டதாயும், இலைகள் ஒடிந்தும், குச்சிகள் நிறைந்ததாயுமிருக்கும். ஆகையால், கவனித்து வாங்கவேண்டியது.

**ப - உ.**—இலை.

**சுவை.**—கைப்பு (வெகுட்டல்), **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—நீர்மலம்போக்கி - வ்ரேசநி—Purgative.

**குணம்.**—இதனால் மூலவாயு, வெப்பு, கிரந்தி, குன்மம், நாட்பட்ட மலச்சிக்கல் இவைகள் நீங்கும்.

நிலாவாரை யின்குணந்தான் நீகேள் மயிலே!
பலமூல வாயுவெப்பு பாவைச்—சிலகிரந்தி
பொல்லாத குன்மம் பொருமுமலக் கட்டுமுதல்
எல்லா மகற்றுமென எண். (அ.கு.)

**சுத்தி.**

கல், மண், காம்பு, காய் இவைகளை நீக்கி இலையை மாத்திரம் எடுத்து ஆவின் பாலில் பிட்டவியல் செய்து, நிழலில் உலர்த்தி எடுத்துக்கொள்ளவும்.

மேற்கூறியபடி சுத்திசெய்து எடுத்த இலைக்கு குமட்டல், வயிற்றுவலி முதலியன இராது.

**வ - கு.**—மெலிந்த தேகமுடையோர், முதிர்ந்த வயதினர், சிறுகுழந்தைகள், ஸ்திரீகள், இவர்கட்கு பேதிக்குக் கொடுக்க இது சிறந்த மருந்தாகும்.

**அளவு.**—(சூரணம்) 10–30 உழுந்தெடை.

நிலாவாரைச் சூரணம் ஒன்று, சுக்கு, மிளகு, ஓமம், வாய்விடங்கம், சயிந்தலவணம், இவற்றின் சூரணங்கள் வகைக்குக் கால், சருக்கரை $2\frac{1}{4}$ பங்கு வீதம் கலந்து வைத்துக்கொண்டு, ஒன்று முதல் இரண்டு வராகனெடை கொடுக்க, வயிற்றுப்பிசம், வயிற்றுவலி, மலபந்தம் முதலியன நீங்கும்.

நிலாவாரை பலம் 1, சுக்குத்தூள் 30 உழுந்தெடை இவைகளை இரண்டு ஆழாக்கு வெந்நீரில் சேர்த்து, ஒருமணி நேரம் ஊறவைத்து வடித்துக் கொடுக்கவும்.

**அளவு—$\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு.**

**குறிப்பு.**—இக்கஷாயத்துடன் இந்துப்பு (சீமை) சேர்த்தும் கொடுக்கலாம். வயிற்றுக்கடுப்பு இராது. பேதி நன்றாயாகும். சுடுகையா யிருக்கும்போது, பாலும் சருக்கரையும் சேர்த்துக் கொடுக்கலாம். இது இனிப்பாயிருப்பதால் குழந்தைகட்கும், மெலிந்தவர்கட்கும், நன்மைதரும். நிலாவாரைக் கஷாயத்துடன் காடி சேர்த்துத் தேகத்தில் பூசிவரச் சொறி, சிரங்கு, புடை, தேமல், ஆறுப்புண் நீங்கும். மயிர் உதிர்வது நிற்கும். தேன் கலந்து ஒருவராம் உட்கொள்ள கால்பிடிப்பு, கீல்பிடிப்பு (வாதம்) சாந்தமாகும். மருதோன்றி யிலையோடரைத்துப் பூச மயிர் கறுக்கும்.

## நின்றுற் சிணுங்கி—Nintàr-Chinungi.

**வே - பெ.—நின்றுசிணுங்கி.**

இது, தென்னிந்தியாவில் வளரும் ஒருவகைப் பூண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—நச்சரி - விஷநாசநி - Antidote.

**குணம்.**—சர்ப்பவிஷத்தை நீக்கும். ஸ்திரீ வசியத்துக்கு உதவும்.

" நின்றுற் சிணுங்கியது நீலவிடம் போக்குமினுங்
குன்றுந் தனத்தியரைக் கூட்டுவிக்கும்." (அ.கு.)

**வ - கு.**—இதன் சாற்றைப் பாம்புவிடக் கடிகளுக்கு உள்ளுக்குக் கொடுத்தும், வெளியிற்பூசியும் விடத்தை முறிக்கலாம்.

---

## நீரடிமுத்து—Níradi-muththu.

**வே - பெ.—நீரடி, நீரெட்டிமுத்து.**

Hydnocarpus inebrians

Eng.—Jangli Almond.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nírudu నీరుడు | Sans. | Tuvarakaha तुवरकः. |
| Mal. | Maravetti മരവെട്ടി. | Hind. | Jangli Badam * جنگلی بادام |

இது ஒருவகை மரத்தின் விதை. தென்னிந்தியாவில் மலபார், திருவாங்கூர், இலங்கை முதலிய இடங்களில் விளைகிறது. இவ்விதை சிறுத்து மேல் தோலோடுகூடி, சாம்பல் கலந்த கபில நிறமாயும், தைலப்பசையுடையதாயுமிருக்கும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கைப்பு, வெகுட்டல், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- புண்ணழுக்காற்றி - வ்ரணசுத்திகாரி - Detergent.
- தூக்குணிப்புழுக்கொல்லி - க்ருமிக்நி - Parasiticide.

**குணம்.**—இதனால் நீங்காக்கிரந்தி, குட்டம், வாதரோகம், தீராச்சொறி, நமைச்சல் நீங்கும். ஆனால் பித்தம் மிகும். தேகத்தில் அனல் உண்டாகும்.

நீரடி முத்திற்கு நீங்காக் கிரந்திகுட்டம்
போரிடு வாதமுமே போகுங்காண்—காரடுக்கும்
மென்குழலாய் ! பித்தம் மிகுமனலம் உண்டாகும்
முன்கிளர்ந மைச்சலறு முன். (அ.கு.)

**அளவு.**—இதன் தைலம் 5–30 துளி.

**வ - கு.**—இதன் பருப்பைத் தயிரில் ஊறவைத்து எலுமிச்சம் பழச்சாற்றில் அல்லது காடியில் குழைத்து உடம்பில் தடவி உலர்ந்தபின் வராட்டிப் பொடியிட்டுத் தேய்த்துக் குளித்துவரச் சொறி, சிரங்கு தீரும்.

நீரடிமுத்து, கசகசா, கொப்பரை, காட்டுச்சீரகம், கருஞ்சீரகம், கார்போக வித்து, பிரமதண்டுவித்து இவைகளைச் சேர்த்துப் புளித்த நீர் விட்டு அரைத்துத் தேகத்தில் பூசி, தேகத்துக்குத் தக்கபடி 3 அல்லது 4 மணி நேரம் சென்றபின் இளவெந்நீரில் குளிக்கச் சொறி, சிரங்கு, நமைச்சல், தவளைச்சொறி, புடைகள் முதலிய சரும நோய்கள் தீரும்.

## நீரடிமுத்து நெய்.

**குணம்.**—இந்நெய்யை மேலிற் பூசினாலும், உள்ளுக்குக் கொடுத்தாலும் வாதக்கூட்டம், சிரங்கு, சொறி, பெருவியாதி, சூலை முதலியவை நீங்கும்.

பூசுகுடி வாதகணம் பொங்கு இரந்திபுடை
வீசுகுட்டம் சூலையிவை விட்டேகும்— தேசஞ்சச்
சீரடியை யொத்தநடைத் தெய்வ மடமயிலே!
நீரடிமுத் தின்னெய்யை நீ. (அ.கு.)

---

## நீரலரி—Níralari.

**Polyganum Barlatum.**

Tel. Niruganneru నీరుగన్నేరు. | Kan. Kondemalli ಕೊಂಡೆಮಲ್ಲಿ.
Mal. Vellaththalari വെള്ളത്തലരി.

இது தண்ணீரோரங்களில் வளரும் ஒருவகைப் பூண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—வயிற்றுவலி, அதிசாரம் இவைகளைப் போக்கும்.

**வ - கு.**—இலை, தண்டு முதலியவைகளைச் சேர்த்தரைத்துப் புண்களின் மீது போட, அவை குணமாகும்.

விதையை ஊறவைத்த கஷாயம், வயிற்று வலியைப் போக்கும்.

வேரைக் கஷாயமிட்டுக் குடிக்க அதிசாரத்தைப் போக்கி, தேகத்துக்கு நல்ல குளிர்ச்சியை யுண்டுபண்ணும்.

---

## நீர்ப்பிரமி—Nìr-Brahmi.

**Herpestis Monniera.**

**Eng.—Thyme-leaved Gratiola.**

Tel. Shambrani Chettu సాంబ్రాణిచెట్టు. | Sans. Mandukaparni मण्डूकपर्णी.
Mal. Nirbrahmi നീർബ്രഹ്മി.
Kan. Nirbrahmi ನೀರ್ಬ್ರಹ್ಮಿ. | Hind. Barambhi * برام ہی

இக்கொடியானது நீர் நிலையோரங்களில் படர்ந்து வளரும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { நரம்புரமாக்கி - பலகாரி (நாடி) - Nervine tonic.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணம்.**—இலகு பேதியாகும், நீரைப் பெருக்கும், தேக பலத்தை யுண்டாக்கும்.

**வ - கு.**—சமூலத்தைச் சூரணஞ் செய்து 1—2 வராகனெடை கொடுக்க இலகுவாய்ப் பேதியாகும்.

இலையைச் சாறு பிழிந்து, நெய் சேர்த்துக் கிருதமாகச் செய்தோ, அல்லது ஷெ சாறுடன் 2 வராகனெடை கோஷ்டத்தைப் பொடி செய்து சேர்த்துத் தேன் கலந்தோ கொடுத்துவர, இசிவு நோய், பித்தத்தா லுண்டாகும் புளிப்பு, எப்பம் முதலிய நோய்களும் சாந்தமாகும்.

இலையை வெண்ணெயில் பொரித்துத் தொண்டைக் கம்மல் தீரச் சாப் பிடலாம்.

சமூலத்தை அரைத்துக் கொதிக்கவைத்து நெஞ்சில் பூச, கபக்கட்டு நீங்கும்.

இலைச்சாறு சிறு குழந்தைகளின் பேதியை நிறுத்தும்.

இலைச்சாறும் மண் தைலமும் சேர்த்துக் கீல் வாதங்களுக்குப் பூசலாம்.

இலையை சிற்றாமணக்கெண்ணெய் விட்டு வதக்கி வாத வீக்கங்களுக்கு ஒற்றிடமிட்டு, அதையே அவ்வீக்கங்களின்மீது வைத்துக் கட்டிவர, வீங்கங் கரையும்.

இதன் இலைச்சாற்றைக் கொண்டு செய்யப்படும் நெய்—**பிரமிக்கிருதம்**— என வழங்கும்.

---

## நீர்ப்பூலா—Nírpoola.

### Phyllanthus multiflorus.

| | |
|---|---|
| Tel. Nallapurugudu నల్లపురుగుడు. | Kan. Sanna Kage-soppu ಸಣ್ಣ ಕಾಗೆ ಸೊಪ್ಪು. |
| Mal. Kattu Niruri കാട്ടുനീരുരി. | |
| Hind. Kāmuni * کامنی | |

இது, இந்தியாவின் கீழ்க்கரை மேல்கரைப் பிரதேசங்களில் வளரும் பூண்டு.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—இனிப்பு - துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—இதற்கு மாந்தம், கணச்சூடு, வயிற்றுப்பொருமல், அதிமூத் திரம், சொறி, சிரங்கு ஆகியவை தீரும்.

மாந்தங்க ணம்பொருமல் மாறாச் சலத்துடனே
சேர்ந்த சொறிசிரங்குந் தீருங்காண்—ஏந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழுந்திருவே ! பூவிலுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை. (அ.கு.)

மேலும், தேகத்தைத் தேற்றும் ; குளிர்ச்சியைக் கொடுக்கும் ; சிறுநீரைக் கழிக்கும்.

**வ - கு.**—இலைச்சாறு ஒரு தேக்கரண்டி வீதமெடுத்து, சருக்கரை அல் லது கற்கண்டு சேர்த்து நாள் ஒன்றுக்கு மூன்று முறை சாப்பிட, சிறுநீர் நன்றாய் இறங்கும். உடலிலெழும் அனல் தணியும்.

வேரைக் கஷாயமிட்டு வேளைக்கு $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வரையிலும் தினம் இருவேளை கொடுக்க உடம்பைத் தேற்றும்.

இலைச்சாற்றுடன், கர்ப்பூரம், வால்மிளகு இவை சேர்த்து மாத்திரை செய்து, வாயிலடக்கிவர, ஈறுகட்டு, புண் முதலியன சுகமாகும்.

சிறுநீரைப் பெருக்குகின்ற இதர சரக்குகளுடன் இதைச் சேர்த்தாவது அல்லது தனித்தாவது உபயோகிக்கலாம்.

## நீர்முள்ளி—Nírmulli.

**வே - பெ.—நிதகம், இக்குரம், காகண்டம், துரகதமூலம், முண்டகம்.**

**Hygrophila Spinosa.**

Astercantha Longifolia.

| | |
|---|---|
| **Tel.** Nírugobbi నీరుగొబ్బి. | Sans. Kokilàksha कोकिलाक्षः |
| **Mal.** Vayalchulli വയൽചുള്ളി. | |
| **Kan.** Kollavalike ಕೊಲ್ಲವಲಿಕೆ. Kalavankabija ಕಲವಂಕಬೀಜ. | **Hind.** Tálmakhana تالمکهانا |

இது இந்தியா முழுவதும் நீர்ச்சுரப்பான (ஈரமுள்ள) இடங்களில் தானுகவே வளர்ந்து கிடக்கும். முட்கள் நிறைந்திருக்கும். இதன் விதை, வேர் முதலியன சாதாரணமாகக் கடைகளில் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம், விதை.

**சுவை.**—இனிப்பு, சிறுகைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை.**

உள்ளழலாற்றி – அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent
சிறுநீர்ப்பெருக்கி – மூத்ரவர்த்தநி - Diuretic

**வேர்.**

குளிர்ச்சியுண்டாக்கி • சீதளகாரி - Refrigerant
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி . Diuretic
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி Demulcent
உரமாக்கி - பலகாரி - Tonic

**விதை.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

### விதை.

**குணம்.**—இதனுல் பிரமேகம், அதிசாரம், கபசோபை, ஆயாசம் நீங்கும். சுக்கிலமும் சப்த தாதுவும் விருத்தியாகும்.

விந்துவுமாம் தாதுவுமாம் மேகரோ கந்தொலையும்
உந்து மதிசாரம் ஒழியுங்காண்—வந்துடலில்
ஏறியநீர் வீக்கம் இறங்கும் இளைப்பும்அறும்
கூறியநீர் முள்ளிவிதைக் கு. (அ.கு.)

### சமூலம்.

இதனுல் பாண்டு, குளுப்பை, சலக்கோவை, மூத்திரச்சிக்கல், வீக்கங்கள் இவை விலகும்.

பாண்டுகு ளுப்பையறும் பாரில்வரு நீரேற்றம்
மாண்டுவிடும் நீர்க்கட்டு மாறுங்காண்—பூண்டதொரு
வீக்கமெல்லாம் நீராய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய்! சாற்று. (அ. கு.)

**வ – கு.**—இதன் உலர்ந்த இலையைக் காடியில் ஊறவைத்து மூன்று நாள் கழித்து எடுத்து வடிகட்டி 1—3 தேக்கரண்டி வீதம் விஷப்பாண்டு, மகோதரம், சூலநோய் இவைகட்குக் கொடுத்துவரலாம்.

வேர் 1-பங்கிற்கு 20 பங்கு வெந்நீர்கூட்டி ஊறல் கஷாயமிட்டு வடிகட்டி, 1/8 ஆழாக்கு வீதம், மூன்று மணிக்கு ஒருதரம், பாண்டு, நீர்க்கோவை, மகோதரம் முதலியவைகட்குக் கொடுத்துவரலாம்.

சமூலத்தை இதர நீர்ப்போக்கி மருந்துகளுடன் சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்க, நீர் நன்றாய் இறங்கி, மூத்திர வியாதிகளைப் போக்கும், மேலும் தேகத்திலுள்ள துர் நீரும் வற்றிப்போகும்.

சமூலச் சாம்பலிலிருந்து எடுக்கிற உப்பானது பாண்டு, சோகை நோய்களைப் போக்கும். அல்லது சமூலத்தைச் சுட்ட சாம்பலில் தினம் 2 தேக்கரண்டி வீதம் நீரில் கலக்கிக் கொடுக்கலாம்.

இதன் விதை தாதுபுஷ்டியைத் தரும். மேகம், மூலம், உடற்காங்கை, மூத்திரஎரிச்சல் இவைகளை நீக்கும்.

விதையைப் பாலில், அல்லது முந்திரிச்சாராயத்தில் ஊறவைத்துச் சருக்கரை கலந்துக் கொடுக்கத் தாதுபுஷ்டி யுண்டாகும்.

விதையை அநேக தாதுபுஷ்டி இலேகியங்களில் சேர்த்துக் கொள்ளுகின்றனர்.

---

## நீர்மேல் நெருப்பு—Nírmèl Neruppu.

### Ammonia Debilis.

**Tel.** Agni - Vendra - paku అగ్నివేంద్రపాకు.

**Mal.** Kallur Vanchi കല്ലൂർവഞ്ചി.

**San.** Agni - garba अग्नि गर्भा.

**Hind.** Dadmari * دادمیری

**Duk.** Aginbuti * اگن بوٹی

சதுப்பு நிலங்களில் வளரக்கூடிய இப்பூண்டு, இந்தியா முழுவதும் சாதாரணமாய்க் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { கொப்புளமெழுப்பி, த்வக்ஸ்போடகாரி - Vesicant.
நமைச்சலுண்டாக்கி - Irritant. }

**குணம்.**—மகாவாத ரோகமும், இரத்தக் குறைவினா லுண்டாகும் திமிர் வாத நோயும் போகும்.

வாதமகா ரோகம் வரினுங் கறையல்கி
மீதடர வன்றிமிரே மேவுகினும்—ஓதரிய
சீர்மேல் நிலம்பரவு தெய்வ மடமயிலே !
நீர்மேல் நெருப்பை நினை. (அ. கு.)

**வ - கு.**—இலைச் சாறு அல்லது சமூலத்தைச் சுட்ட சாம்பலுடன் எண்ணெய் சேர்த்துக் கரப்பான் முதலிய சிரங்குகளுக்குப் போட, அவை குணமாகும்.

இலையைத் தேகத்தில் பற்றவைத்துக் கொப்புள மெழுப்பலாம். சமூலத்தைப் பச்சையாகவாவது, உலர்ந்த பின்னாவது சுக்கு, கோரைக் கிழங்கு சேர்த்து முறைப்படி கஷாயமிட்டு 1/8 ஆழாக்கு வீதம், தினம் இருவேளை கொடுத்துவர, முறைசுரம் நீங்கும். வாத நோய் தணியும்;

இலைச் சாற்றை நீர் சேர்த்து மிருகங்களுக்குக் கொடுக்க அவைகளின் காமம் குறையும் என, கொங்கண தேசத்தார் கண்டறிந்திருக்கிறார்கள்.

சமூலத்தை உலரவைத்து அல்லது பச்சையாக 1—20 பங்கு நீர் சேர்த்துக் கஷாயமிட்டு $\frac{1}{8}$-$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுத்துவர, குணத்தின் கீழ்க் கண்ட நோய்கள் சுகமாகும்.

---

## நுணா—Nunà.

**வே - பெ.—மஞ்சணத்தி, மஞ்சணுத்தி, தணக்கு, நுணவு.**

Morinda Citrifolia

Eng.—Indian Mulberry

| | |
|---|---|
| Tel. Maddi-chettu మద్దిచెట్టు. | Kan. Tagate mara తగటెమర. |
| | Sans. Achuka अछुकः |
| Mal. Kadappilàva കടപ്പിലാവ്. | Hind. Achhi * اچی |

இது, இந்தியாவிலெங்கும் பயிராகி வளருகின்றது எனினும் முல்லை நிலத்திற்கே உரிய பயிராகும். சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. இம்மரம் ஓர்வகை மஞ்சள் நிறமுடையது.

**ப - உ.**—இலை, காய், பட்டை, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** – கார்ப்பு.

**இலை—பழம்.**

**செய்கை.**
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue
- உரமாக்கி - பலகாரி - Tonic
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant

**வேர்.**
- பெருமலம்போக்கி - வ்ரேசநகாரி - Cathartic

**குணம்.**—இதன் **பட்டை** கரப்பான், கபசுரம், புண், சிரந்தி இவைகளையும், **இலை**-மந்தம், மேகம் இவைகளையும் ஒழிக்கும்; ஒளியைத் தரும்.

பட்டை கரப்பனொடு பாரச்சி லேஷ்மசுரம்
ஒட்டிநின்ற புண்கிரந்தி ஓட்டுங்காண்—மட்டலரை
எந்துநு ணாவின் இலைமந்தம் தீர்த்துநல்ல
காந்திதரு மேகமடுங் காண். (அ .கு.)

**வ - கு.—நுணாப்பட்டைத் தைலம்**—(தன்வந்தரி தைலம் 500).

பட்டை 20 பலம், நீர் 4 படி இதை எட்டில் ஒன்றாகக் குறுக்கி, அத்துடன் இளநீர் $\frac{1}{2}$ படி, பழச்சாறு $\frac{1}{2}$ படி, எண்ணெய் $1\frac{1}{2}$ படி கூட்டித் தைலமாக இறக்கித் தலைமுழுகிவர, காய்ச்சல், முறைக்காய்ச்சல், குன்மம், விரணம், அரையாப்பு, கிரந்தி முதலியன போகும்.

**மாந்தத்துக்குப் பச்சிலைச்சாறு**—(பாலவாகடம்).

நொச்சியிலைச்சாறு, பொடுதலைச்சாறு, நுணாயிலைச்சாறு, வேலிப்பருத்திச்சாறு இந்நான்கும் சமனெடை கலந்துக் கொடுக்க மாந்தம் போம்.

**மாந்தத்துக்குக் கருக்குக் கஷாயம்**—(பாலவாகடம்).

நுணாயிலை, நொச்சியிலை, வேலிப்பருத்தியிலை கழற்சிக்கொடியிலை வகைக்கு ஒரு பலம் எடுத்துச் சட்டியிலிட்டு வறுத்துக் கருக்கி, நீர் ஒரு

படிவிட்டு அடுப்பேற்றி அதில், ஓமம், வசம்பு, சுக்கு, மிளகு, பொடுதலை, பெருங்காயம், திப்பிலி ஆகியவற்றை நல்லெண்ணெயில் சிவக்க வறுத்துப் பொட்டணங்கட்டி அந்நீரிற் போட்டு, எட்டிலொன்றாகக் காய்ச்சி, ஒருசங்கு (கால் பலம்) வீதம் கொடுக்க மாந்தமெல்லாம் போம்.

### விடமாந்தக் கஷாயம்.

**பா - வா.**—ஓமம், பொடுதலையிலை, நொச்சியிலை, நுணாயிலை, வேளை வேர், பூண்டு, வசம்பு இவற்றை நறுக்கி வறுத்துக் கஷாயஞ் செய்து கொடுக்க மாந்தம் நீங்கும்.

### மாந்தகணை எண்ணெய்.

**பா - வா.**—சிற்றாமணக்கெண்ணெய் படி ஒன்று, நுணா இலைச்சாறு படி ஒன்று, உள்ளிச்சாறு படி ஒன்று, வில்வக்கொழுந்து பலம் இரண்டு, கருஞ்சீரகம் வராகனெடை இரண்டு, கடுக்காய் வராகனெடை நாலு, வெங் காரம் வராகனெடை இரண்டு; இவற்றில் நெய்யையும் சாற்றையும் கலந்து அடுப்பேற்றிக்காய்ச்சி அதில் வில்வக்கொழுந்து, கருஞ்சீரகப்பொடி, கடுக் காய்ப்பொடி இவற்றைச்சேர்த்துப் பின் வெங்காரத்தைப் பொரித்துக் கொதிக் கும்போது சேர்த்துப் பதத்தில் வடித்துக்கொண்டு கால் பலம் வீதம் புகட்ட மாந்தகணங்கள் எல்லாம் போம்.

### மாந்தகணை சுரதோடத்துக்கு எண்ணெய்.

**பா - வா.**—சிற்றாமணக்கெண்ணெய் ஒருபடி, நுணாயிலை அரைப்படி, உள்ளிச்சாறு கால்படி, வெந்தயம் அரை பலம்; இவற்றை அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொண்டு, கால்பலம் வீதம் கொடுக்க மாந்த கணதோடம் நீங்கும்.

### மாந்தக் கஷாயம்.

**பா - வா.**—உத்தாமணியிலை, வேளைவேர், நொச்சியிலை, பொடுதலை யிலை, முருங்கையீர்க்கு, நுணாயீர்க்கு, சமனெடையெடுத்து வறுத்து, நீர்விட்டு அத்துடன், ஓமம், திரிகடுகு, வசம்பு சேர்த்து அரைக்காலாகக் குறுக்கி வடிகட்டிக் கொடுத்துவர, மாந்தம் போம்.

### போர்மாந்தக் கஷாயம்.

**பா - வா.**—நொச்சி, நுணா, மா, புளி, வேம்பு, கொடிவேலி இவை களின் ஈர்க்கு, பொடுதலைக்கொடி, வகைக்கு ஒரு பலம்; பூண்டு, திப்பிலி, ஒரு துட்டெடை; இவற்றைப் பாண்டத்திலிட்டுத் தண்ணீர் 4 படி விட்டு, $\frac{1}{2}$ படி யாக வற்றவைத்து, $\frac{1}{4}$ பலம் வீதம், காலை மாலை மூன்று நாள் கொடுத்து வரப் போர்மாந்தம் நீங்கும்.

நுணாயிலைக்கற்கம், நல்லெண்ணெய் சமனெடை சேர்த்துக்காய்ச்சி இறக்கி கற்கத்தை உள்ளுக்கும், எண்ணெயை வெளியிலும் போட, வெண்குட்டம் நீங்கும்.

நுணாக்காய், உப்பு சமனெடை எடுத்து ஒரு குடுவைக்குள் வைத்துச் சீலைமண் செய்து பத்து வரட்டியில் புடம்போட்டு எடுத்துப் பொடித்துப் பல் துலக்கி வர, பல் சொத்தை, பல்லரணை முதலிய பல்நோய்கள் சுகமாகும்.

காயைப்பிழிந்து சாறெடுத்துத் தொண்டையில் பூச, தொண்டைநோய் நீங்கும்; அல்லது மணப்பாகு செய்து குடிக்கலாம்.

பழத்தையும் இலையையும் கஷாயமிட்டுக் கொடுக்க ருதுவைக் கிரமப் படுத்தும்.

வேருக்குப் பேதியாக்குகிற குணமுண்டு.

மரத்தினின்று ஓர் வகைச் சாயம் எடுக்கிறார்கள்.

மரப்பட்டையைச் சிதைத்து வெந்நீரில் சேர்க்க ஒருவித செம்மஞ்சள் நிற மாக நீர் மாறும். இதில் வேட்டி, குட்டைகளைத் துவைத்துக் காயப்போட சாயமேறும். பார்வைக்குச் சுகமாயிருக்கும்.

---

## நெட்டிலிங்கம்—Nettilingam.

Polyanthia longifolia.

இது ஓங்கி வளருகின்ற பெரிய மரம். இதையே சிலர் அசோகு என்று தவறுகச் சொல்லுகின்றனர். இந்நாட்டில் சாலையோரங்களிலும், வீடுகளி லும் வைத்துப் பயிராக்கப்பட்டு வருகின்றது.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனுல் கிரகணி, அதிசாரம், சீதபேதி, பெரும்பாடு முதலி யன தீரும்.

**வ - கு.**—பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க மேற்படி நோய்கள் நீங்கும்.

பட்டையைக் காடிநீரிலிட்டு ஒருநாள் ஊறவைத்துக் கோதை நீக்கி வடித்த நீரால் புண்புரையைக் கழுவ அவை குணமாகும்.

---

## நெய்ச்சட்டி—Nēichatti.

**வே - பெ.—நெய்ச்சிட்டி, சகதேவி, தேவகந்தம், சிற்றிலே.**

Conyza cinerea.

**Eng.—Ash coloured Flea-bane.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | Meritla - karnina. మెరిట్ల కర్ణిన. | | **Kan.** | Sahadevi. | ಸಹದೇವಿ. |
| **Mal.** | Puvankuruntal. പൂവങ്കുറുന്തൽ. | | **Sans.** | Sahadevi. | सहदेवी. |
| | | | **Hind.** | Shadevi | * سہدیوی |

இப்பூண்டு வங்காளப் பிரதேசங்களில் ஏராளமாயுண்டெனினும் இந்தி யாவின் கீழ்க்கரை, மேற்கரை யோரங்களிலும் வளருகின்றது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**சமூலம்.**

**செய்கை.** { வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
**விதை.**
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
நச்சரி - விஷநாசநி - Antidote.

**குணம்.**—இது, வீரியவிருத்தி, நேத்திரஒளி, பசி, அழகு இவைகளை யுண்டாக்கும். பித்தமேகம், வெள்ளை, உட்சூடு, தாகம், பித்தகோபம், இரச கெந்தகம் இவற்றல் உண்டான வாய்ப்புண், அழற்சி, வாந்தி இவை களை நீக்கும். வேப்பெண்ணெய்க்குரிய கசப்பை விலக்கும்.

நெய்ச்சட்டி யென்றால் நிறையுமெய்யுட் சுக்கிலமும்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே !—வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டையழ லுந்தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான். (அ.கு.)

தூயழகு றப்புரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந்—தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக் கிடும்வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு. (தே.கு.)

**வ - கு.**—சமூலத்தையும் கஷாயமிட்டுக் குடிக்க மேற்கூறிய நோய்களைப் போக்கும் ; நற்குணத்தைக் கொடுக்கும். சுரத்தைக் கண்டிக்கும்.

இலையைப் புட்கைசெய்து போட நரம்புச்சிலந்தி மாறும்.

பூவின் ரசம் கண் சிகப்பை மாற்றும்.

வேரைக் கஷாயமிட்டுக் கொடுக்கத் தேகத்திலுண்டாகும் வீக்கங்கள் நீங்கும்.

விதையைப் பொடித்து வெல்லத்தில் வைத்துக்கொடுக்கக் கிருமிகள் சாகும்.

விதையைக் கஷாயமிட்டு சருமரோகிகட்கு உள்ளுக்குக் கொடுக்க நோய் திருவதுமன்றி, அவர்கள் தேகத்தையும் தேற்றும்.

---

## நெய்தற்கிழங்கு—Neitharkizhangu.

**வே - பெ.—ஆம்பல், கயிரவம், குமுதம், கைரவம்.**

Nymphæ alba - Root of.

Eng.—White water lily.

| | | |
|---|---|---|
| Tel. | Tellakaluva | తెల్లకలువ. |
| Mal. | Nírambal | നീർആമ്പൽ. |
| Kan. | Bile-Naidile | ಬಿಳೇನೈದಿಲೆ. |
| Sans. | Kumudam | कुमुदम् |
| Hind. | Nilofar | * نیلوفر |
| Duk. | Alliphul | * علی پھول |

இது குளம் குட்டை முதலிய நீர்நிலைகளில் வளருகின்ற பூண்டு. இந்தியா முழுவதும் கிடைக்கும். இதில் அநேக விதங்களுண்டு.

**ப - உ.**—பூ, வேர், கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பூ.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**வேர்.**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—இதனுல் அக்கிப்புண், பித்தஎரிச்சல், திரிதோடம், பிரமேகம், இரத்தகிரகணி, பித்தநோய் ஆகியவை போம். விழிக்குக் குளிர்ச்சியும், சுக்கிலவிருத்தியும் உண்டாகும்.

கண்ணுங் குளிருமக்கி காணுது காந்துபித்தம்
எண்ணுந்தோ டம்மேகம் ஏகுங்காண்—பெண்ணே!
வயிற்றுக் கடுப்பிரத்த மாறுநெய்த லுக்குப்
பயித்தியம்போம் விந்தூறும் பார். (அ.கு.)

**வ - கு.**—1½ பலம் பச்சை புட்ப இதழ்கள், அல்லது ¾ பலம் உலர்ந்தது, 1 பலம் சருக்கரை, 5 பலம் நீர் சேர்த்து மணப்பாகு செய்து கொடுக்கக் கண்ணுக்குக் குளிர்ச்சியையும், தலைமூளைக்குத் தெளிவையும் தந்து, அதிக் கிரமித்த வெப்பத்தையும் தணிக்கும். இருதயத் தீவிரத்தை நிறுத்திச் சமனப்படுத்தும்.

பூவினுள் அமைந்திருக்கும் மகரந்தத்தூள்களை உலர்த்திக் கஷாயமிட்டுக் கொடுக்கத் தேகஎரிச்சல், இரத்தமூலம், பெரும்பாடு இவைகள் தணியும்.

விதைகளை உலர்த்திக் கஷாயமிட்டுக்கொடுக்க மதுமேகத்தில் காணும் தாகவிடாயைத் தணிக்கும்.

வேர், கிழங்கு இவைகளை உலர்த்திப் பொடித்து, சருக்கரை, பால் சேர்த்து மூலம், வயிற்றுவலி முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

---

## நெருஞ்சில்—Nerunjil.

**வே - பெ.—திரிகண்டம், திரிகண்டகம், திறிதண்டம், நெருஞ்சி, தும்பு, அசுவசட்டிரம், சுவதட்டம், கோகண்டம், காமரசி, சுவாதுகண்டம், கிட்டிரம், கோண்டம், சுதம்.**

Tribulus Terrestris.

Eng.—Small Caltrops.

| | |
|---|---|
| **Tel.** Palleru పల్లేరు. | Sans. Gokshura गोक्षुर: |
| **Mal.** Nerunji നെരുഞ്ഞി. | **Hind.** Gokhru گوکھرو* |

இது தரையில் படரும் ஓர்வகை முட்செடி. முட்கள் மாட்டின்கொம்பைப் போல பிரிவுடையது. பூக்கள் மஞ்சள் நிறமாயிருக்கும். இதில் **சிறுநெருஞ்சில், பெருநெருஞ்சில்** அல்லது **யானைநெருஞ்சில்** எனப் பிரிவுகளுண்டு. யானைவணங்கி என யானை நெருஞ்சிலுக்கு ஓர் பெயருமுண்டு.

இவைகள் குணத்தில் அதிகம் மாறுபடுவதில்லை.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

### நல்லநெருஞ்சில்.

**குணம்.**—இதற்குச் சொட்டுமூத்திரம், சுரவெதும்பல், கல்லடைப்பு, நீரடைப்பு, முடவாதம், பிரமேகவெள்ளை, மூத்திரக்கிரிச்சரம், திரிதோ கோபம், விரணம், சுரதாகம், வெப்பம் ஆகியவைகள் நீங்கும்.

நல்ல நெருஞ்சிலது நாளுங்கி ரிச்சரத்தை
வல்ல சுரமனலை மாற்றுங்காண்—மெல்லியலே !
மாநிலத்தில் கல்லடைப்பும் வாங்காத நீர்க்கட்டும்
கூனுறுமெய் வாதமும்போக் கும். (அ.கு.)

மேகவெட்டை நீர்ச்சுறுக்கு வீறுதிரி தோடம்புண்
வேகசுர தாகவெப்பும் விட்டொழியும்—போகந்
தருஞ்சின் மதலைமொழித் தையலே ! நல்ல
நெருஞ்சி லதனை நினை. (அ.கு.)

**நெருஞ்சில்வித்து.**

இதனால் மூத்திரக்கட்டு, சதையடைப்பு, மூத்திரக்கிரீச்சரம், சர்க்கராஸ்மரி ரோகம் ஆகியவை நீங்கும்.

சொல்லவொண்ணு நீர்க்கட்டு துன்மா மிசமருகல்
கல்லடைப்பெ னும்பிணிகள் கண்டக்கால்—வல்லக்
கருஞ்சினவேற் கண்மாதே ! காசினிக்குள் நல்ல
நெருஞ்சில்நறும் வித்தை நினை. (அ.கு.)

**யானைநெருஞ்சில்.**

இதனால் மேகம், வெண்குட்டம், கல்லடைப்பு, எலும்புருக்கிநோய் முதலியன தீரும். உடம்பெரிச்சல், தாகம், பித்தம் இவையும் நீங்கும்.

மேகத்தைப் போக்கிவிடும் வெண்குட்டந் தானொழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண்—நாகத்தாந்
தேனையரும் பாகைத் திருத்துங் கிளிமொழியே !
யானை நெருஞ்சி லது. (அ.கு.)

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும்
மானே ! எலும்புருக்கி மாற்றுங்காண்—மேனிதனில்
உள்ள எரிச்சல் உழலையுள் தாகமொடு
தள்ளுபித்த மும்போக்குந் தான். (அ.கு.)

**செப்புநெருஞ்சில் (ஆதம்பேதி, சிலாபேசி).**

இதனால் திரிதோடம், அதிவெப்பம், சுக்கிலமேகம் இவைகள் போம்.

செப்புநெ ருஞ்சில் திரிதோடம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டுங்காண்—செப்பரிய
சுக்கிலமே கம்போக்குந் தொல்லையனல் மாற்றும்
மிக்கு மருந்துநீ விள். (அ.கு.)

**சிறுநெருஞ்சில்.**

**வ - கு.**—இதன் காயையும் வேரையும் பச்சரிசியோடு வேகவைத்துக் கஞ்சியை வடித்துச் சருக்கரை கூட்டி, பிரமேகம், நீர்க்கடுப்பு, இவைகளுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம்.

நசுக்கிய நெருஞ்சிக்காய் 2 பலம், கொத்துமல்லிவிதை 2 வராகனெடை, நீர் 20 பலம் இவைகளை நேர் பாதியாகச் சுண்டவைத்து வடிகட்டி $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் தினம் இருவேளை கொடுத்துவர, நீரடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு, மூத்திரக்கிரீச்சரம் முதலியன நீங்கும்.

இதன் சமூலத்தை, நீரைப்போக்கும் இதர மூலிகைச் சரக்குகளுடன் சேர்த்துக் கொடுக்கலாம்.

சமூலம் 9 தோலா, வால்மிளகு, சிறுநாகப்பூ, ரேவல்சின்னி, வெடியுப்பு, வகைக்கு 3 தோலா, இவைகளை நன்றாய்ப் பொடித்துச் சேர்த்து வைத்துக் கொண்டு, அதில் $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ வராகனெடை கொடுத்துவர, இருதய நோயோடு கூடிய சோகைரோகம் நீங்கும்.

சமூலத்துடன் சிலாசத்து, தேன் சேர்த்து மூத்திரப்பை விரணத்தோடு கூடிய மேகவாத நோய்க்குக் கொடுக்கலாம்.

காயோடுகூடிய சமூலத்தையிடித்து வெள்ளாட்டின் பாலில் ஊறவைத்துப் பிழிந்து வடிகட்டி, தேன் சேர்த்துக் கொடுத்துவர, துர்ப்பழக்கங்களால் நீங்கிப்போன ஆண் தன்மையைப் பிறப்பிக்கும்.

நெருஞ்சில் சமூலம் $12\frac{1}{2}$ சேர், நீர் 64 சேர், நாலிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டி, $6\frac{1}{4}$ சேர் சருக்கரை சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதமாக்கி அத்துடன் சுக்கு, மிளகு, திப்பிலி, கருவாப்பட்டை, ஏலம், சிறுநாகப்பூ, சாதிக்காய், வெள்ளரிவிதை வகைக்கு 16 தோலா, மூங்கிலரிசி $\frac{1}{2}$ சேர், இவைகளை நன்றாய் பொடித்து வஸ்திரகாயம் செய்து மேற்கூறிய பாகுடன் சேர்த்துக் கிளறி இலேகியமாக்கிக் கொள்ளவும். இதில் 2 தோலா வீதம் கொடுக்க, மூத்திரக் கிரீச்சரம், நீரடைப்பு, இரத்தமூத்திரம், சதையடைப்பு முதலியன நீங்கும்.

நெருஞ்சி சமூலம் 10, திரிகடுகு வகைக்கு 5, இலவங்கம் 4, ஏலம் 4, குங்குமப்பூ 1, சாதிக்காய் 3, கச்சக்காய் 4, மூங்கிலரிசி 5 பங்குகளாகச் சேர்த்துக் கஷாயமிட்டு வேளைக்கு $\frac{1}{2}$ முதல் 1 பலம் வரை கொடுக்க, மூத்திர எரிச்சலோடுகூடிய வெள்ளைநோயின் சார்பாய் உண்டாகிற சுக்கில பலவீனத்தை நீக்கி ஆண் தன்மையை உண்டுபண்ணும். அனலை மாற்றும்.

நெருஞ்சில் சமூலம் 10, இலவங்கப்பட்டை 5, ஏலக்காய் 6, சருக்கரை 10 பங்குகள் சேர்த்துத் தூளாக்கி $\frac{1}{4}$ வராகனெடை வீதம், அயபஸ்பம் அல்லது செந்தூரத்தோடு கொடுக்க, காமாலைநோய் நீங்கும்.

---

## நெல்—Nel.

**வே - பெ.—தோரை, வை, விரீகி, செந்நெல், சாலி, வரி.**

Oryza Sativa.

Eng.—Paddy (The husked seed is called Rice).

| | | | |
|---|---|---|---|
| Tel. Vari వరి. | | Arab. Arruz * أرض | |
| Mal. Nella നെല്ല് | | Pers. Biranj * برنج | |
| Kan. Bhatha ಭತ್ತ. | | Hind. Chaval * چاول | |
| Sans. Vrihi व्रीहि | | Duk. Dhan * دھان | |

இது இந்தியாவின் நன்செய் நிலங்களில் விளையும் பயிர். பர்மா, சயாம் முதலிய இடங்களிலும் ஏராளமாகப் பயிரிடப்பட்டுவருகின்றது. உலகத்திலுள்ள ஜனங்களில் சுமார் 2/3 பாகம் இதை உணவாகக் கொள்ளுகின்றது. நெற்களில் அநேக சாதிகள் உண்டு. அவைகளின் பெயரைக் குணத்தின்கீழ்க் காண்க. அவ்வவைக்குத் தக்கபடி குணதோஷங்களும் உண்டு. உருவத்திலும், கனத்திலும், நிறத்திலும், குணத்திலும் ஒன்றிற்கொன்று வித்தியாசப்படுகின்றது. இதிலுள்ள உமியைப் போக்கிய பின் அரிசியாகிறது. இதில் **பச்சரிசி** என்றும், **புழுங்கலரிசி** என்றும் இருவிதமாகச்செய்வது உணவுக்கு உதவும்.

ப - உ.—அரிசி, தவிடு, உமி.

சுவை.—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**அரிசி.**

**செய்கை.**
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

**கஞ்சி.**
- உள்ளழலாற்றி – அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**கார்அரிசி.**

**குணம்.**—மந்தகுணமுள்ள காரரிசி சரீர புஷ்டியையும் தனிவாத விளைவையும், பலத்தையும் தரும். கரப்பான் பதார்த்தம் என்பர்.

காரரிசி மந்தங் கனப்புடலில் தூலிப்பும்
பாரறிய வாயுவையும் பண்ணுங்காண்—நேரே
கரப்பான்என் பார்பொருந்திற் காயம்அது மெத்த
உரப்பாகும் என்றே யுரை. (அ.கு.)

**மணக்கத்தை, வாலான், கருங்குறவை அரிசி.**

இம்மூன்றும் விரணகுட்டத்தையும், அற்ப விடத்தையும் நீக்கும். கரப்பானை உண்டாக்கும்.

மணக்கத்தை வாலான் கருங்குறவை மூன்றும்
பிணக்குட்டைச் சில்விடத்தைப் பேர்க்கும்—இணக்கமுற
ஆக்கியுண் டாற்கரப்பான் ஆரும்என் பார்கள்சிலர்
பார்க்குள் இதைஎண்ணிப் பார். (அ.கு.)

**ஈர்க்குச்சம்பா.**

தேவாராதனைக்கான ஈர்க்குச்சம்பா அரிசி, நாவுக்கு உருசியையும், பார்க்க இச்சையையும் தரும். கொஞ்சம் பித்தத்தை உண்டுபண்ணும்.

ஈர்க்குச்சம் பாஎன் றியம்பும் அரிசியது
நாக்குக் கதியுரிசை நல்குங்காண்—பார்க்குமிடத்
தெல்லார்க்குங் காதல் இயற்றும்அற்பப் பித்தமென்பார்
வில்ஆரும் பூசைகட்காம் விள். (அ.கு.)

**புழுகுசம்பா.**

இதனால் வனப்பும் காந்தியும், அதிதீபாக்கினியும், பலமும் உண்டாகும். தாகம் நீங்கும்.

புழுகுசம் பாஅரிசி பூதலத்தில் உண்பார்க்
கழகும்ஒளி வுஞ்சேர்வ தன்றி—அழலாம்
பசிதாகந் தீரும் பலமுமிக உண்டாம்
முசிவே துடற்சுகமா முன். (அ.கு)

**கோரைச்சம்பா.**

இது பைத்தியம், உட்சூடு, பிரமேகம், நமைச்சல் இவைகளை நீக்கும். சௌக்கியம்தரும். குளிர்ச்சியென்பார்.

கோரச்சம் பாநற் குளிர்ச்சியென்பார் பித்தத்தைப்
பேரா அழலைப் பிரித்தோட்டுந்—தீராத
மேக மொடுதினவை வீட்டுஞ் சுகங்கொடுக்கும்
மேக முறைகுழலாய் ! விள். (அ.கு.)

### குறுஞ்சம்பா.

இது பித்தம், கரப்பான், சுக்கிலதாது இவைகளை விருத்தி செய்யும். சரீரத்தில் குத்துகின்ற வாதநோயை நீக்கும்.

குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்
வெறுங்கரப்பான் உண்டாக்கும் மெய்யில்—நொறுங்கச்செய்
வாதம்அருள் வாயுவினை மாற்றும்போ கங்கொடுக்குஞ்
சீதவண சத்திருவே ! செப்பு. (அ.கு.)

### மிளகுச்சம்பா.

இது சௌக்கியத்தைக்கொடுத்து, தீபாக்கினியை வளர்க்கும். மகாவா தம் முதலிய பலவித நோய்களை அகற்றும்.

மிளகுச்சம் பாஅரிசி மென்சுகத்தைச் செய்யும்
அளவில்பல நோயை அகற்றுங்—களகளெனத்
தீபனத்தைத் தூண்டிவிடுந் தீரா வளிதொலைக்குஞ்
சோபனத்தைச் செய்நகையாய் ! சொல். (அ.கு.)

### சீரகச்சம்பா.

மதுரமுள்ள சீரகச்சம்பா அரிசியை உண்டவன் மீளவும் உண்பதற்குள் பசியைத்தூண்டும். அற்ப வாதரோகங்களையும் நீக்கும்.

சீரகச்சம் பாஅரிசி தின்னச் சுவையாகும்
பேரகத்து வாதமெல்லாம் பேருங்காண்—வாருலகில்
உண்டவுட னேபசியும் உண்டாகும் பொய்யலவே
வண்டுறை பூங்குழலே ! வாழ்த்து. (அ.கு.)

### காளான்சம்பா.

இது சரீரத்துக்கு மலைபோன்ற உறுதியை யுண்டாக்கும். சௌக்கியத் தைத்தரும். சிற்சில வாத நோய்களை நீக்கும்.

காளான்சம் பாஅரிசி கல்லையொத்த மாபலத்தைக்
கேளாம லேகொடுக்கும் கேளின்னும்—நீளும்
அனிலத்தைப் போக்கிவிடும் ஆரோக்கி யத்தை
நனிலத்தில் செய்துவிடும் நாடு. (அ.கு.)

### மைச்சம்பா.

இதனால் அரோசகம், வாதபித்ததொந்தம், தனிவாதகோபம், வாந்தி நோய் ஆகியவை போம்.

மைச்சம்பாத் தண்டுலத்தால் வாய்அருசி போயொழியும்
வெச்சென்ற வாதபித்தம் மெய்யைவிடும்—நச்சுந்
தனிவாயு வுஞ்சுரக்குஞ் சர்த்தியும்போம் இன்பக்
கனிமொழியே ! நன்றாகக் காண். (அ.கு.)

### கோடைச்சம்பா.

இதற்கு முத்தோடத்தால் பிறந்த வாதவலியும், சரீரத்திலுள்ள சிற் சில நோய்களும் விலகும்.

கோடைச்சம் பாஅரிசி கொண்டாற் றிரிதோட
வாடைக் கதிக வலியுமுண்டோ—நீடும்
உறுப்பில்உள்ள நோய்எல்லாம் ஓதாமல் ஏகுங்
கறுப்பினுயர் வார்குழலே ! காண்.

**காடைச்சம்பா.**

இதற்கு பிரமேகச்சுரமும், சில அற்ப நோய்களும் நீங்கும். சுக்கில தாது விருத்தியும் பலமும் உண்டாகும்.

காடைச்சம் பாஅரிசி கண்டுதரி சித்தவர்க்கு
நீடுற்ற மேகஅனல் நிற்குமோ ?—காடைப்
பறவைபோல் நோயும் பறக்கும் பலத்தின்
உறவையெவர் சொல்வார் உரை.

(அ.கு.)

**மல்லிகைச்சம்பா.**

இது சரீர சவுக்கியத்தையும், உறுதியையும் தரும். கரப்பான், பிரமேகம், நேத்திரவெப்பம் ஆகியவைகளைப் போக்கும். உண்பதற்கு உருசியாயிருக்கும்.

மல்லிகைச்சம் பாஅரிசி வாய்க்குரிசை யாயிருக்கும்
நல்லது மெய்க்கு நலஞ்செய்யும்—பொல்லாக்
கரப்பானை மேகத்தைக் கண்அழலை நீக்கும்
உரப்பாம் பலங்கொடுக்கும் உன்.

(அ.கு.)

**இலுப்பைப்பூச்சம்பா.**

இதனால் பித்தத்தால் விளைகின்ற சிற்சில ரோகம், சிரஸ்தாபம், உபசர்க்கதாகம், வெப்பம் இவைகள் உண்டாகும்.

பித்த மிகப்பெருக்கும் பேருலகில் யாவருக்கும்
உற்ற தலைவலிநோய் உண்டாக்குஞ்—சத்தியமாய்த்
தாகம்எடுப் பிக்கும் தழல்இலுப்பைப் பூச்சம்பா
ஆகம்அதில் நோய்வளர்க்கும் ஆய்.

(அ.கு.)

**மணிச்சம்பா.**

இது மதுமூத்திரத்தை விலக்கும் ; உடற்கு நன்மை பயக்கும், விருத்தர், பாலர்களையும் வளர்க்கும். பசியையுண்டாக்கும்.

நல்ல மணிச்சம்பா நாடுகின்ற நீரிழிவைக்
கொல்லும் மிகுந்தசுகங் கொண்டளிக்கும்—மெல்லப்
பசியளிக்கும் மூத்தோரைப் பாலர்களை நாளும்
முசியாம லேவளர்க்கும் முன்.

(அ.கு.)

**வளைதடிச்சம்பா.**

இதற்கு வாதபித்ததொந்தம், வயிறு உளைதலுடன் உப்பிசம், கரப்பான், மிகுமந்தம், இவை உண்டாகும்.

வளைதடிச்சம் பாவிற்கு வாதபித்தம் உண்டாம்
உளையும் மடிபொருமி யுப்பும்—கொளகொளெனத்
தானே கரப்பானுந் தாங்கொணு மந்தமுமாந்
தேனே ! யிதனைத் தெளி.

(அ.கு.)

**கைவரைச்சம்பா.**

இதனால் உடற்கு மலைபோன்ற வன்மையும், சுக்கில ஸ்தம்பனமும், சுகமும் உண்டாகும். பித்தமில்லை.

கைவரைச்சம் பாஅரிசி கண்டால் அவரவர்தம்
மெய்வரையாம் என்றும் மிகுபலமாம்—மையல்
அடையாதென் பார்கள் அடர்சுக் கிலமும்
உடையா ததிசுகமாம் ஓது. (அ.கு.)

### செஞ்சம்பா.

இது கிளைக்கின்ற அற்பகிரந்தி, அதிவிரணம், யானைச்சொறி, மிகுபசி இவைகளை உண்டாக்கும்.

செஞ்சம்பாத் தண்டுலத்தால் தீராச் சிறுசிரங்கும்
விஞ்சுபுண்ணும் வன்சொறியும் மெய்க்கணியாம்—விஞ்சுப்
அதிகபசி தானே அணங்கரசே ! இந்தப்
பதியதனில் நாளும் பகர். (அ.கு.)

### கல்லுண்டைச்சம்பா.

இதை உண்பவர்க்கு மல்யுத்தக்காரரும் எதிர்க்கக்கூடாத, புயபலமும், மிகுவார்த்தையும் உண்டாகும்.

கல்லுண்டைச் சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்ட பேரெதிர்க்க வாய்க்குமோ—வில்உண்டை
போலுரையாம் நல்ல புசபலமாம் இன்சுவையாம்
பாலனைய மென்மொழியே ! பார். (அ.கு.)

### குண்டுச்சம்பா.

இதற்கு அக்கினிமந்தமும் பலமிகுந்த கரப்பான் ரோகமும் உண்டாகும். தாகரோகந்தீரும்.

குண்டுச்சம் பாஅரிசி கொண்டுண்ணும் பேர்களுக்குப்
பண்டையில்லா மந்தநோய் பாரிக்கும்—அண்டுபடாத்
தாகம்எல் லாம்ஒழியும் தையலே ! வன்கரப்பான்
தேகம்எல் லாம்பரவுஞ் செப்பு. (அ.கு.)

### குன்றிமணிச்சம்பா.

இதை உண்ணில் அற்பவாதரோக முதலிய சிற்சில நோய்கள் விலகும். சரீரபலமும் சுக்கிலதாதுவும் விருத்தியாகும்.

குன்றி மணிச்சம்பா கொண்டால் அனிலம்அறும்
வென்றி தரும்பலமி குக்குங்காண்—துன்றியநோய்
எல்லாம் பறக்கும்உறை இந்திரியப் புஷ்டியுண்டாம்
நல்லா ரறிய நவில். (அ.கு.)

### அன்னமழகி.

மிகு மதுரமுள்ள அன்னமழகி அரிசி சகல சுரங்களையும், பித்த வெப்பத்தையும் போக்கி, தேகத்திற்குச் சவுக்கியத்தைக் கொடுக்கும்.

அன்ன மழகியரி ஆரோக்கி யங்கொடுக்குந்
தின்ன வெகுருசியாஞ் செப்பக்கேள்—இந்நிலத்து
நோயனைத்துந் தூளாய் நொறுங்கத் தகர்த்துவிடுந்
தீயனலைப் போக்குந் தெளி. (அ.கு.)

## அரிசிகளின் பொது குணம்.

இந்த உலகில் விளைகின்ற நன்செய் புன்செய் தானிய வருக்கங்களின் பெயரையும், சுவையையும், அளவிடுதற் கரிதேயாயினும் அவற்றைப் பார்த்தவரையிலும் உண்பதற்குச் சுவை பொருந்தினவே யாகும்.

செந்நெல் வகைக்குஞ் சிறுதா னியவகைக்கும்
இந்நிலத்தி லுண்டோ இலக்கென்ப—உண்ணுங்கால்
கண்டமட்டி லேபெயராங் கண்ட அவரவர்கள்
உண்டமட்டிலே சுவையாம் ஓது.

(அ.கு.)

## பச்சைஅரிசி பொதுகுணம்.

பத்தியத்தில் விலக்கான பச்சை அரிசியினால், தனிவாதகோபமும், அலசநோயும், மிகுந்த பலமும் உண்டாகும். பித்த எரிச்சல் நீங்கும்.

சுத்த அனிலமந்தந் தோன்றுமெரி பித்தம்போம்
பத்தியத்தில் எண்ணார்கள் பண்டிதர்கள்—மெத்தவுமே
வைச்சுமை தாங்க வலியுண்டாந் தேகத்திற்
பச்சரிசி யைப்புசித்துப் பார்.

(அ.கு.)

## புழுங்கல்அரிசி பொதுகுணம்.

இது குழந்தைகள், வாதரோகியர், அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்கு உதவும். உடலுக்கு உறுதி இல்லை.

புழுங்கல் அரிசியது புத்திரர்க்கும் ஆகும்
அழுங்குகின்ற வாயுவிற்கும் ஆகும்—ஒழுங்காய்
நிலைத்தபத்தி யத்திற்கும் நீட்டலாம் மெய்க்குப்
பலத்தைக் கொடுக்காது பார்.

(அ.கு.)

## பழைமைஅரிசி பொது குணம்.

இது, விருத்தர், பாலர், ரோகியர்களுக்குமாகும், இவ்வன்னத்தை யுண்ணில் பசியும் குளிர்ச்சியுமாம். சிற்சில நோயும் கபமும் நீங்கும்.

பழஅரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கும் ஆகும்
அழல்மிகவும் ஆகும் அருந்தில்—நிழலைப்போல்
ஆகும் உடல்குளிர்ச்சி ஐயம்அறும் நோயுற்றோர்க்
காகும்பன் னேய்போம் அறி.

(அ.கு.)

## கஞ்சி புனற்பாகம்.

சுத்தமான அரிசி ஒரு பலம், சுத்த நீர் 20 பலம் சேர்த்து 20 நிமிடம் கொதிக்கவைத்து வடிகட்டி, கொஞ்சம் சருக்கரையும் ஒரு தேக்கரண்டி பழச்சாறும் சேர்த்து, சுரம், பெரியம்மை, தட்டம்மை, பிரமேகம், நீர்ச் சுருக்கு முதலிய நோய்களுக்குக் கொடுக்க நல்ல குணமுண்டாகும்.

மேற்படி கஞ்சியைப் பழச்சாறு நீக்கிக் குன்ம நோய்களுக்குக் கொடுக்கலாம்.

**புனர்பாகம்** அல்லது **புனர்பானம்.**—ஒருதரம் வடித்த அன்னத்தை மறுபடியும் வெவ்வேறு உலையிலிட்டு வடித்து நீரையெடுத்து விட்டு, மறுஉலை பாய்ச்சிச் சலரூபமாகக் கொடுப்பதற்குப் புனர்பானம் என்று பெயர். இதற்கே **தாரக பத்தியம்** என்பர்.

இதனால் வாதாதி மூன்று தோடங்கள், சுரவெப்பம் போகும். குடிப்ப தற்கு இதத்தையும், சரீர சௌக்கியத்தையும் தரும்.

புனற்பாக முத்தோடம் போக்கு மருந்தின்
அனற்பாகந் தன்னை யடக்குந்—தனிக்குணங்கள்
அம்மட்டோ ? வாய்க்கிதமா மாரோக்கி யங்கொடுக்குங்
கம்மிட்ட பூவனமே ! காண். (அ.கு.)

## பஞ்சமுஷ்டிக்கஞ்சி.

துவரை, உழுந்து, கடலை, சிறுபயறு, பச்சரிசி இவ்வைந்தும் வகை யொன்றுக்கு ஒருபிடி எடுத்துத் தனித்தனியே மெல்லிய சீலைகளில் முடிந்து, ஒரு பாத்திரத்தில் போட்டு, அதில் ஆற்றுசலம் இரண்டு படி விட்டு எட்டிலொன்றாகக் காய்ச்சி எடுத்துக்கொண்டு, நீடித்த லங்கணத்தின் முடிவில் அருந்த, திரிதோடவிகாரம் அதிகரிக்காது. ஆயாசம் நீங்கும்.

பஞ்சமுட்டிக் கஞ்சிநெடும் பட்டினியிற் கொள்ளுங்கால்
விஞ்சனில பித்தகபம் வீறுவாம்—விஞ்சும்
இளைப்பகற்றுந் தாரகவி லங்கனத்திற் கேற்குந்
திளைப்பவெழும் பூண்முலையே! செப்பு. (அ.கு.)

## முடிச்சுக்கஞ்சி.

அரையாழாக்கு அரிசிக்கு இரண்டு படி நீர் விட்டு, அரைப்பலம் சுக்கைத் தோல் நீக்கித் துண்டுதுண்டாக்கி ஒரு துணியில் முடிந்து அதில் போட்டு நாலி லொரு பங்காகக் காய்ச்சிய கஞ்சியின் தெளிவைக் குடிப்பதனால், வாத சுரம், வெப்பம், சிவந்து இறங்குகிற மூத்திரம், பித்தாதிக்கத்தா லுண்டாகிற சிற்சில நோய்கள், குடலைப்பற்றிய செரியா மந்தம் முதலிய நோய்கள் நீங்கும். உதராக்கினி விருத்தியும், போஜனப்பெருக்கமும் உண் டாகும்.

வாயுசுர நீர்இரத்த மாறும் பசியெழும்பும்
ஓயும் பலபிணிகள் உண்மையே—ஆயுங்கால்
உண்டி பருத்திடுமெய் யுள்நோய் ஏகும்முடிச்சுச்
சுண்டியினீர்க் கஞ்சியினாற் சொல். (அ.கு.)

## வடிகஞ்சி, உறைகஞ்சி, கொதிகஞ்சி.

சாதத்தினின்றும் வடித்தெடுக்கப்பட்ட கஞ்சிகள் எல்லாம் மந்தமே யானாலும் விழிக்குக் குளிர்ச்சியாகும். இவற்றால் பித்தகோபம் நீங்கும். ஆனால், தயிரைப்போலுறைந்த கஞ்சியானது வாதாதிக்கத்தையும், கபப் பெருக்கையும் உண்டாக்கும்—சாதம் வேகும்போது எடுக்கின்ற கொதித் தண்ணீர்க் கஞ்சியானது நீர்ச்சுருக்கைப் போக்கும்.

கஞ்சியெலா மந்தமவை கண்ணுக்குத் தான்குளிர்ச்சி
விஞ்சிவரும் பித்தம்அது விட்டகலும்—உஞ்சும்
அதிகஞ்சி வாயு அதிசீதஞ் சேர்க்குங்
கொதிகஞ்சி வெட்டையைப்போக் கும். (அ.கு.)

## கஞ்சி அன்னம்.

வடித்த கஞ்சியும் அன்னமும் சேர்த்துக் குடிக்கில், தேகந்தூலித் தலும், ஒளியும், கபாதிக்கமும் உண்டாகும். வெப்பமும் பித்தகோபமும் நீங்கும்.

கஞ்சி யன்னத்திற் காயம் பருத்திடு
மஞ்சி வெப்ப மகலுஞ்சி லேஷ்மமோ
விஞ்சி யுற்றிடு மேனி மினுத்திடும்
பஞ்சி போலப் பறந்திடும் பித்தமே. (தே.கு.)

### சிறுபயறு, உழுந்து, பச்சரிசிக் கஞ்சி.

சிறுபயறும் பச்சரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியானது பித்தபிர கோபத்தை நீக்கும். உழுந்து சேர்த்த கஞ்சியானது வாதத்தைப் பலப் படுத்தும். பச்சரிசி கஞ்சியானது வாதசிலேஷ்மத்தைப் போக்கும்.

சிறுபருப்புக் கஞ்சிபித்தந் தீர்க்கும் உழுந்தின்
உறுபருப்புக் கஞ்சிவளிக் கூக்கம்—நறியபசும்
பச்சரிசிக் கஞ்சி பவனகபத் தைப்போக்கும்
கச்சிருக்குங் கொங்கைமின்னே! காண். (அ.கு.)

### பால், பொரிசேர்ந்தகஞ்சி, சுடுகஞ்சி.

பசுவின் பாலில் பச்சரிசி சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியால், பித்த எரிவு நீங்கும், புத்தியும் சுக்கிலமும் விருத்தியாகும். நெற்பொரிக் கஞ்சி பைத்திய தோடத்தைப் போக்கும். சாதத்தில் வடித்தெடுத்த சுடுகைக் கஞ்சிக்கு மலமும், வாதரோகமும், தாகவிடாயும் நீங்கும்.

சுரைதரு பாலில்வெந்த சோறுறு கஞ்சிகொள்ளில்
எரிதரு பித்தந்தாழும் எழுமதி விந்துவுந்தான்
பொரிதரு கஞ்சிபித்தம் போக்கிடுஞ் சுடுகஞ்சிக்குத்
தரிதரு மலமும்வாய்வுந் தாகமும் போகுங்காணே. (அ.கு.)

### கொள்ளுக்கஞ்சி.

கொள்ளும் அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியைக் குடிக்கில், அதிக பசி, எள்ளைக் கையால் கசக்கிப் பிழியும்படியான பலம், வீரியவிருத்தி ஆகிய இவைகள் கிழவர்களுக்கும் உண்டாகும்.

கொள்ளுந்தண் டூலமுமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனத்தைக் கூறுவதோ—எள்ளை
நசுக்கிப் பிழிபலமு நல்விந் துவுமே
வசிக்குங் கிழவர்கட்கும் வை. (தே.கு.)

### நெற்பொரி.

நெல்லைப்பொரித்து உமிபோக்கி எடுத்து, கஞ்சிகாய்ச்சி நோயாளி களுக்குக் கொடுக்கலாம். முக்கியமாய் வயிற்றுநோய், பிரமேகம், நீர்ச் சுருக்கு, சுரம் முதலிய வியாதியாளருக்கு அதிக பலன்தரும். மேலும் அதிதாகம், வமனம், மந்தாக்கினி, பைத்திய வாததொந்தம், மதரோகம், மூர்ச்சை, அதிசார வருக்கம், அரோசகம் இவைகள் நீங்கும்.

நெற்பொரியைத் தின்றால் நெடுந்தாகம் வாந்திமந்தம்
மற்பித்த வாத மதமூர்ச்சை—பற்பலவாம்
பேதி யருசியிவை பேருலகை விட்டொழியுஞ்
சாதி மடமயிலே! சாற்று. (அ.கு.)

### பொரியுண்டை.

பாகில் சேர்த்துப்பிடித்த நெற்பொரியுண்டையை உண்ணில், வாந்தி, பைத்தியம், வாதகோபம், கபவாதம் முதலியவை தொலைந்து போகும்.

சர்த்திபித்த வாதந் தணியும் வலுத்தெழுந்த
சுத்த கபவாதந் தொலையுங்காண்—மெத்த
வரியுண்ட வேல்விழியாய்! வையகத்திற் சாலிப்
பொரியுண்டை நன்றாம் புசி. (அ.கு.)

## மா.

அரிசியை நீரில் ஊறவைத்தெடுத்து இடித்து மாவாக்கி அம்மாவை, தீப்பட்டபுண், கொப்புளம் முதலியவைகளின் மீது தூவிவர அதினின்றும் ஊறிவரும் நீரை இழுத்து புண்ணை ஆற்றும். மேலும் வேர்க்குரு, மேகக்கரப்பான் முதலிய சிறுசிரங்குகளின் மீது தூவிவர, சுகமாகும். அதனின்றெழும்பும் வெப்பத்தையும், நமைச்சலையும் குறைக்கும்.

## புற்கை.

மாவைக்களிகிண்டி புற்கைசெய்து கட்டிகளின் மீது வைத்துக்கட்ட அவை பழுத்து உடையும், வேதனையைக்குறைக்கும் அழுகின புண்களின் மீது வைத்துக்கட்ட, அவற்றிலுள்ள துன்மாமிசத்தைப்போக்கி, நன் மாமிசம் வளரச்செய்யும். புற்கை செய்து போடுமுன் சிறிது விளக்கெண்ணெய் தடவிச் சூட்டுடன் ஒரு தினத்தில் 3 தடவையாவது போடவேண்டும்.

நெஞ்சில் கோழைகட்டி, இருமலினால் வருத்தமுறும் நோயினர், இந்த மாக்களியை சூட்டுடன் முதுகில் இருதோள் எலும்புகளுக்கு மத்தியிலும், மார்பிலும் பற்றவைத்து ஓர் இரவு முழுவதும் விட்டுவைக்க வேண்டியது. இக்களியுடன் சிறிது கடுகுத்தூள் சேர்த்தல் உத்தமம். [4 பங்கு மாவுக்கு 1 பங்கு கடுகுத்தூள்] பற்றவைப்பதற்குமுன் மார்பிலும், முதுகிலும் சிறிது எண்ணெய் தடவவும்.

## அரிசிமாவுக்களி.

தேவையான பச்சரிசி மாவை ஓர் வாயகன்ற பாத்திரத்தில் போட்டு அடுப்புமேலேற்றிக் கொஞ்சம் தண்ணீர் விட்டுக் கைவிடாமல் கிளறி பதத் துக்கு வந்தவுடன் எடுத்துச் சுத்தமான வெள்ளைத்துணியின்மேல் 1 அல்லது ½ அங்குல கனம் அதைத் தடவி, கொஞ்சம் தேங்காய் எண்ணெய் அல் லது விளக்கெண்ணெயை அதன்மேல் தடவி, விப்புரிதிக்கட்டி, சீழ்க்கட்டி, அரையாப்பு, விரணம், மூலரோகத்தின் வலி அல்லது வீக்கம் முதலியவை களுக்கு வைத்துக் கட்ட நல்லசுகமுண்டாகும்.

மேலும் அரிசிமாவினால் பலவித பலகாரங்கள் செய்து உண்ணலாம். அவற்றில் சிலவற்றை அடியிற் கூறியுள்ளோம்.

## தோசை.

உழுந்து, அரிசிமா சேர்த்துச் செய்த தோசையானது பித்தகோபத்தை யும், வாத சேத்தும தொந்தத்தையும் நீக்கும்.

மிகுத்தெழுந்த பித்தத்தை வீறு தடக்கும்
அகத்துள் அனிலகபம் ஆற்றுஞ்—சகத்திலுறு
தேசைப் பெறுமயிலே ! தேமொழியே ! மாழத்தின்
தோசைக் குணமிதெனச் சொல். (அ.கு.)

## சாம்பாரத்தோசை.

மேலும், பெருங்காயம், மிளகு, இஞ்சி, கருவேப்பிலை முதலிய பரி சுத்தமுள்ள பல சம்பாரஞ் சேர்ந்த தோசைக்கு வாததோடமும், பைத்திய சிலேத்தும கோபமும் விலகும். சுக்கில விருத்தி உண்டாகும்.

காயமிள கிஞ்சி கருவேப் பிலைமுதலாந்
தூயபல காரம்இட்ட தோசைக்கு—வாயுவிலை
பித்தகப வேகப் பெருக்கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திருவே ! சொல். (அ.கு.)

### சுத்த இட்டலி, சம்பார இட்டலி.

உழுந்து, அரிசி இம்மாக்களால் செய்த சுத்த இட்டலிக்கு பித்தகோபம் நீங்கும். காரஞ் சேர்ந்த மேற்படி மாக்களால் செய்த சம்பார இட்டலிக்குத் திரிதோடங்கள் அதிகரிக்காது.

வெறுமாவின் இட்டலிக்கு வேகம்அறுங் காரம்
பெறுமாவின் இட்டலியைப் பேசில்—அறும்அனிலம்
ஐயபித் தங்கள் அதிகரிக்கு மோமாரன்
நய்யவெய்யுங் கண்ணாய் ! நவில். (அ.கு.)

### பிட்டு.

அரிசிமாவின் பிட்டு என்கிற பலகாரத்தை உண்பவருக்கு வன்மையும், உள்ளில் வாத வெப்பமும் உண்டாகும். மாதர்கட்கு ருது காலத்தில் மித மின்றி ஒழுகுகிற உதிரம் கட்டுப்பட்டுத் தெளிவையுறும்.

செம்புனலுங் கட்டுந் தெளியும் உரமாகும்
வெம்பனிலம் உட்புறத்தில் வீறுங்காண்—செம்பழத்தை
வட்டைப் பழிக்கும் வன்முலைமா தே ! யரிசிப்
பிட்டைப் புசிப்பார்க்குப் பேசு. (அ.கு.)

### முறுக்கு.

முறுக்கு என்கிற ஒருவிதபலகாரம் அரிசி மாவினால் செய்யப்படுகிறது. இதனால் சிலேஷ்மமும், பித்தமும், விருத்தியாகும். வாதகோபம் கொஞ்சந் தணியும்.

ஐயமொடு பித்தம் அதிகரிக்குந் தாழாத
செய்ய அனிலஞ் சிறிதடங்கும்—வையம்
நிறுக்குமிகு கற்பையுறு நேரிழையே ! நாளும்
முறுக்கின் குணமா மொழி. (அ.கு.)

### மோதகம்.

அரிசிமாவினால் செய்யப்படும் மோதகம் அல்லது கொழுக்கட்டைக்கு, வாதவிருத்தி, உதராக்கினி, மந்தம், சிலேத்துமாதிக்கம் ஆகியவைகள் உண்டாகும்.

வாதம்உறு மந்தமிகு மாருத வெப்பமுமாஞ்
சீத கபவிருத்தி சேருங்காண்—தீதுறுகட்
போதகமுஞ் செப்பும் பொருப்பு நிகர்முலையாய் !
மோதகமுண் பார்க்கு மொழி. (அ.கு.)

### தேன்குழல்.

தேன் குழலுக்கு சிலேத்தும வாத தொந்தமும், வெப்பமும், அதிதாக மும் உண்டாகும். பசி கொஞ்சம் மந்தப்படும்.

ஓங்குங் கபவாதம் உட்டினமு மீறிவரும்
வாங்குஞ் சலங்கொஞ்ச மந்தமுமாந்—தேங்குமிசை
ஆன்குழலு மியாழுமிக வஞ்சுமொழிக் கிஞ்சுகமே !
தேன்குழலுக் காங்குணத்தைத் தேர். (அ.கு.)

### அதிரசம்.

அதிரசத்தினால் கபமும் பித்தமும் விருத்தியாகும். தேகசம்ரட்சணைக் குரிய சுத்தவாதம் சுழித்து உள்ளடங்கும்.

ஐயமொடு பித்தம் அதிகரிக்கும் எக்காலுந்
துய்ய அனிலஞ் சுழிக்குங்காண்—சையத்
தெதிரசத்தை யூர்வோ னெனுங்கற்பு மாதே !
அதிரசத்தை நன்றாய் அறி. (அ.கு.)

**அவல்.**

நெல்லைச் சிறுக நனைத்து உலர்த்தி இலேசாக வறுத்து இடிக்கத் தட்டையாகி அரிசிவேறு உமிவேருகும். தட்டையான அரிசிக்கு அவல் என்று பெயர். இதை நனைய வைத்து நன்ருகக் கழுவி குழைய வேகவைத்துத் தயிரில் கொடுக்கச் சீதபேதி குணமாகும்.

இதை வேகவைத்து வடித்த தண்ணீரை அதிசாரம், சீதபேதி, குடல் வலி போன்றவைகளுக்குக் கொடுக்கச் சுகந்தரும்.

**சேர்க்கை அவல்.**

அவலில் பாலும் நெய்யும் சேர்த்துண்டால் சரீரத்துக்குப் பலம் உண்டாகும். அதைத் தயிரில் கலந்துண்ணில் மந்தம் உண்டாகும். மோரில் சேர்த்து உண்டால் சோபமும் எரிவும் விலகும். நீரில் ஊறவைத்து உண்டால் உளியால் வெட்டிஞல் அதுவும் வாய் மடங்கத்தக்க உறுதியான வாயுவு உண்டாகும் ; ஆகாரமும் ஏற்றுக் கொள்ளாது. எவ்வகைப் புளியாவது சேர்த்துண்ணில் பித்தநோய் நீங்கும்.

பானெய்சேர்த் துண்ணில் பலமாந் ததிகண்மாந்தம்
தானெய்து மோரயர்வு தாகமெரி—வேனிருக்கு
மப்புளியு மஞ்சுங்கா லாகுமிரை யொழியு
மெப்புளியு பித்திலவ லில். (தே.கு.)

**அன்னம், மா, அவல் முதலியவற்றின் பலாபலம்.**

அறுசுவையோடு புசிக்கின்ற அன்னத்தால் உடலுக்குண்டாகிற பலத்தை விட 8-பங்கு அதிக பலம் மாவும் அவலும் புசிக்கிறதிஞலுண்டாகும். இவ்விரண்டைவிட 8-பங்கு பலம் பாலும் பழமும் உண்பதஞலும், இதை விட 8-மடங்கு அதிக பலம் மாமிசமும் கிழங்கும் சாப்பிடுவதஞலும், இவை எல்லாவற்றையும்விட மேல் 8-பங்கு பலம் பற்பல நெய்கள் சாப்பிடுவதஞலும் உண்டாகும். இந்நெய்கள் பலத்தையும், மிதந்தப்பின் தீமையையும் விளைவிக்கும்.

சோறுக்கெண் கூறாக்கந் தூமா வவலிவைக்கெண்
கூறாக்க முப்பழம்பால் கொள்ளிவைக்கெண்—கூறாக்க
மூன்பலமி வைக்கெண்கூ றாக்கஞ் சுகாசுகத்துந்
தான்பலவ கைத்துப்புந் தான். (தே.கு.)

**சுத்த அன்னம்.**

பழைய அரிசியைத் தவிடு, நொய் போகும்படி நன்ருகத்தீட்டி முழு அரிசியாக ஆய்ந்து எடுத்து, இளவெந்நீரால் கழுகி வஸ்திரத்தில் கொட்டிச் சற்றே ஆறவைத்து, ஒரு பாண்டத்தில் அரிசிக்கு மூன்று பங்கு சலம் விட்டு அடுப்பேற்றி அது நுரைகட்டிக் கொதிக்கும்பொழுது, அரிசியை அதில் போட்டு முக்காற் பாகமாக வெந்தவுடன் கரண்டியால் துழாவி வடித்துக் கொண்டு, மறுபடியும் தணலில் வைத்து, நீர் வற்றிப் பக்குவமாக இருக்கும் சமயத்தில் வடித்துக்கொள்வதே சுத்த அன்னம். இது உணவுக்கு ஏற்றது. இது வாத, பித்த சிலேத்துமம் என்னும் மூவித தேகிகளுக்கும் உதவும். பத்தியத்திற்கும் வாதாதி மூவித ரோகங்களுக்கும் ஆகும். அன்றியும் குடலைப்பற்றிய நோய்கள் முழுமையும் விலகும். குற்ற மில்லை.

சுத்தஅன்னங் குற்றமில்லை தோடங் களையகற்றும்
முத்தரத்தே கிக்கும்அது முக்கியங்காண்—பத்தியத்திற்
காகும்அது முப்பிணிக்கும் ஆம்வியஞ்ச னங்கலந்துண்
ஏகும்உள்நோ யெல்லா மிரங்கி. (அ.கு.)

குறிப்பு.—எவ்வித அன்னமாகிலும் அதில் எண்வகை தோடங்களின்றி இருத்தல் வேண்டும். இத்தோடங்கள் பாகபேதங்களினால் உண்டாகின்றது. அவையாவன: 1. அஸ்ருததோஷம் (கஞ்சி சிக்கிக்கொள்வது), இதனால் தூமம், விதூமம் என்கிற அசீரணங்கள் பிறக்கும். 2. பிச்சில்தோஷம் (அன்னம் குழைந்துபோவது), இதனால் ஜடராக்கினி அணைந்து விடும். 3. அசுசி தோஷம் (மயிர், கிருமி, உமி, கல் முதலியவைகளோடு சமைப்பது), இதனால் அரோசக ரோகம் உண்டாகும். 4. கொதித்தோஷம் (நருக்கரிசி அன்னம்), இதனால் அலசநோய் உண்டாகும். 5. சுஷ்கிததோஷம் (ஆறி உலர்ந்த அன்னம்), இதனால் விதூமரோகம் உண்டாகும். 6. தக்ததோஷம் (காந்தின அன்னம்), இதனால் ஜீரணதாதுரோகமுண்டாகும். 7. விரூப தோஷம் (கொழியலரிசி அன்னம்), இதனால் ஆயுள் கெடும். 8. அனர்த்துஜதோஷம் (நொந்து நீர் பிறந்து நூலிழைந்த அன்னம்), இதனால் அதி நித்திரையும் சீதாதி ரோகங்களும் உண்டாகும்.

### நன்றாகச் சமையாத அன்னம்.

நட்டரிசி அன்னத்தைப்புசிக்கில் மலசலம் சிக்குவதுந்தவிர, மறுநாளும் சீரணமாகாது. அவ்வன்னரசம் உடலிலும் பரவாது.

நன்றாச் சமையா நடுத்தண்டு லச்சோறு
தின்றால் மலசலமுஞ் சிக்குமென்ப—தொன்றேகேள்
மற்றையநா ளுஞ்செரிக்க மாட்டா ததுவுடலிற்
சற்றும்வியா பிக்காது சாற்று. (அ.கு.)

### குழைந்த அன்னம்.

அழிந்துபோன அன்னத்தைப் புசிக்கில் வாதப்பிரமேகம், இருமல், அக்கினிமந்தம், துர்ப்பலம், பீநசம் இவை உண்டாகும்.

குழைந்தசோ றுண்ணிற் கொடுமேகங் காசம்
அழுந்துமந் தாக்கினியு மாறும்—விழுந்திடச்செய்
துர்ப்பலமும் பீநசமுந் தோன்றும் அரிவையர்க்குட்
பொற்படரு மாதே ! புகல். (அ.கு.)

### மிகுசூடுகை அன்னம்.

இது உதிரபித்தம், தாகம், பிரமை, மகோதரம் இவைகளையுண்டாக்கும்.

அதிசூடுகை யன்னம் அரத்தபித்தம் தாகம்
பிதிரேறு சித்தப் பிரமை—மதரோகம்
என்றுரைக்கு நோய்கட் கிடங்கொடுக்குந் தப்பாது
குன்றுரைக்கும் பூண்முலையே ! கூறு. (அ.கு.)

### கொஞ்சம் சூடுகையுள்ள அன்னம்.

இது உத்தமத்திலுமுத்தமம். வாத, பித்த, கபங்களினும், பீநசத்தாலும் விளைகின்ற நோயையும், அரோசகத்தையும் நீக்கும் - சரீரத்துக்கு வன்மையைத்தரும்.

அற்பச்சூட் டன்னம்வா தாதிகளாற் பீநசத்தால்
உற்பவித்த நோயை யொழித்துடற்கு—நற்பலத்தைச்
செய்யும் அருசிதனைத் தீர்க்குஞ்சர் வோத்தமமாம்
பெய்யும்வளைக் கைமாதே ! பேசு. (அ.கு.)

### பச்சையரிசி அன்னம்.

இது பலத்தையும் குழந்தைகட்கு மாந்தத்தையும் உண்டாக்கும். பித்த கோபத்தையும், கிரிச்சரத்தையும் நீக்கும். இதில் வாய்வு உண்டு.

பச்சரிசிச் சோறு பலங்கொடுக்கும் வாயுவென்பார்
நிச்சயமா கப்பித்தை நீக்குங்காண்—அச்சமற
மூத்திரக்கி ரிச்சரத்தை முன்பொழிக்குஞ் சேய்க்குமந்த
மாத்திரமுண் டாகும் வழுத்து. (அ.கு.)

## புழுங்கலரிசி அன்னம்.

இதைப்புசிக்கில் வாதகோபமும், பலமும், வலிய ரோகங்களும் இல்லை. இது நோயாளருக்கு உதவும்.

தென்புவியி னுளுஞ்செ ழித்துவள ருஞ்சாலி
வன்பு புழுங்கல் வடிசாதம்—முன்புணவே
வாயுவிலை யத்தால் வலியும்வன் னோயுமிலை
நோயுடையார்க் காகும் நுவல். (அ.கு.)

## பாலும்—அன்னமும்.

பாலும் அன்னமும் உண்டால், பித்தகோபமும், தாகமும் விலகும். கொஞ்சம் மந்தம், தேகபுஷ்டி, உடனே வீரிய விருத்தி இவையுண்டாகும். இது பாலர் முதல் விருத்தர் வரை உண்ணலாம்.

பாலுமன்ன மும்புசிக்கிற் பண்ணுபித்தந் தாகமறும்
மேலுமற்ப மந்தமென்பார் மேனியிடும்—ஞாலமதில்
அப்பொழுதே தாதுவிர்த்தி யாகுஞ் சிசுவாதி
யெப்பருவத் தர்க்குமா மெண். (அ.கு.)

## நெய் அன்னம்.

நெய்யும் அன்னமும் கலந்துண்ணில் வன்மை, விழிக்குக் குளிர்ச்சி, சீரணம் இவை உண்டாகும். பித்த விகாரம் விலகும். இது பத்திய உணவாகும், விருத்தர்கட்கு முக்கியமாக உதவும்.

வெறுநெய்யுஞ் சோறுமுண்ணில் வீறுபல நண்ணுங்
கிறுகிறுத்த பித்தநோய் கிட்டா—தறிவிக்குங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காட்டுமிகச் சீரணமாம் .
உண்ணற்குப் பத்தியமா முன். (அ.கு.)

## எண்ணெய் அன்னம்.

அன்னத்தில் நல்லெண்ணெய் சேர்த்துண்ணில் வன்மையும், புணர்ச்சியில் திடமும், நல்ல தீபனமும் உண்டாகும். வாதகபப் பிரமேகம் நீங்கும்.

எண்ணெய்யுஞ் சோறும்உண்ணில் என்றைக்கும் மாபலமாம்
பெண்ணுக் கிளையாத பீடுமுறுஞ்—சண்ணுகின்ற
வாதகப மேகம்போ மாறுப் பசியெழும்பும்
பூதலத்து ளுளும் புகல். (அ.கு.)

## புளித்த சோறு.

புளித்த பழைய காடிச்சாதம் வெப்பமாம், பித்தாதிக்கம், மந்தத்தினுல் வெளுப்பாக இறங்குகிற மலம், வமனம் இவைகளை நீக்கும்.

புளித்தபழங் காடியன்னம் பொங்கனலா நாளுந்
தளிர்த்தபித்த கோபத்தைச் சாடும்—வெளுத்தமல
மந்தத்தை நீருக்கும் வாந்தி தனையொழிக்கும்
அந்த முறுமணங்கே ! யாய். (அ.கு.)

### ஊசிய சோறு.

ஊசிய அன்னத்தை உண்ணில் உடனே நித்திரை, வாதகோபம், சீதாதிக்கம், பித்தவிருத்தி இவை உண்டாகும். இவ்வன்னம் நொந்து நூலிழைந்ததாகையால் புசியாதிருத்தலே நன்று.

ஊசலன்னம் உண்டால் உடனே வரும்உறக்கம்
பேசுவதேன் வாதம் பிரபலமாம்—ஆசித்துச்
சீதளமும் பித்தமும்வி சேடிக்கும் வள்ளையொத்த
காதளவு நீள்விழியாய் ! காண். (அ.கு.)

### ததியோதனம்.

ததியோதனம், மாருவுட்டினம், பித்தநோய்களை விலக்கும். உடலைக் காக்கும்.

ஆரு வழலகற்று மார்ந்தபித்த நோய்போக்குந்
தேருத மெய்யைமிகத் தேற்றுங்காண்—மாரு
மதியோகை கொள்ளும் வதன மயிலே !
ததியோ தனமேலாஞ் சாற்று. (அ - கு)

### மாமிசஞ் சேர்த்துச்சமைத்த அன்னம்.

மாமிசம் சேர்த்துப் பாகஞ்செய்த அன்னத்தைப் புசிக்கில் மிகுபலமும், தாதுவிருத்தியும், அதிமந்தமும் உண்டாகும். கப ஆரம்பமும், பித்தமும் சாந்தியாகும். விரண நோயினருக்கு ஆகாது.

ஊனமைத்த அன்னம்உண்ணில் உண்டாம் அதிகபலம்
போனமே தோதாதும் பூணுங்காண்—ஆனுல்
விரணநோய்க் காகா மிகுமந்த க்ஷீணந்
தருணகப பித்தசம னம். (அ.கு.)

### மோர் சாதம்.

மோரும் அன்னமும் கலந்து புசிக்கில் சடராக்கினி அதிகரிப்பதுமன்றி, பித்தமேக மூத்திரம், முளைமூலம், பாண்டு, தாகம், கிராணி, சிலேத்தும சோகை இவை விலகும். இரணங்களுக்கு ஆகாது.

மோருமன்ன மும்புசிக்கின் மூளும் பசிமேக
நீருங் குதாங்குரமு நீள்பாண்டும்—போராத
தாகங் கிராணி சலம்வறு வீக்கமும்போம்
ஆகவிர ணத்தில்விலக் காம். (அ.கு.)

### பழஞ்சோறு.

இரவில் நீருட்டிய அன்னத்தை அந்நீராகாரத்துடன் சூரியோதய காலத்தில் அருந்த சுக்கில விருத்தியும், உதராக்கினியும், சரீரமுழுவதும் தேஜசும் உண்டாகும். பைத்திய வாத தொந்தம் விலகும்.

பழஞ்சோற்றை யந்தப் பழையநீரா காரக்
கொழுஞ்சேர்க்கை யோடுதயங் கொள்ளில்—எழுந்தாது
பித்தவா தம்போம் பெரும்பசியா மெய்யெங்கும்
மெத்தவொளி வுண்டாகு மே. (அ.கு )

### மோர்சேர்ந்த பழையது.

பழைய அன்னத்தில் மோர் சேர்த்துத் திருப்தியாக உண்பவர்களுக்குத் தேக எரிச்சலும், பித்த ரோகமும், பிரமை முதலிய நோயும் நீங்கும். சிலேஷ்மாதிக்கமும், நித்திரையும் அதிகரிக்கும்.

மோரும் பழையதுமாய் மோடெடுக்க உண்டார்க்குத்
தீரும் எரிச்சலெலாஞ் சேயிழையே !—தீராத
பித்தப் பிணியும் பிரமைநோ யும்பறக்கும்
உற்றகபந் தூக்கமிகு மூன். (அ.கு.)

### கட்டமுது.

இதை நித்தியமும் புசித்துவரின் தேகமுற்றிலுங் குத்தல், சுக்கிலாஸ் மரி, இரைப்பு, இருமல், கண்டமாலை முதலிய ரோகங்கள் உண்டாகும். இரத்தப்பிரமேகமும், ஒழுக்கு வெள்ளையும் நிவர்த்தியாகும்.

சூலைசுக்கி லாஸ்மரிசு வாசகா சங்கண்ட
மாலை முதலியநோய் வந்தணுகு—மாலுலகில்
துட்டம் இரத்தமொடு தொண்மேக மும்பறக்குங்
கட்டமுதை நீயுண்ணுங் கால். (அ.கு.)

### பொங்கல் அன்னம்.

அரிசியினின்றும் நீரை வடித்தெடுக்காமல் அந்தப்படியே பொங்க வைத்து எடுக்கிற சாதத்துக்குப் பெயர். பச்சரிசிப் பொங்கல் அன்னமெல் லாம், சகல அலசரோகம், வயிற்றுப்பிசம், அங்கசலன வாதம், வெப்பம் இவைகளை உண்டாக்கும். சம்பா அரிசிப்பொங்கல் அன்னம் விந்துவை வளர்ப்பிக்கும்.

பொங்கலெலா மந்தம் பொருமல்எனு நோய்விளைக்கும்
அங்கமெலாம் வாதம்உண் டாக்குமன—லங்கெடுக்குஞ்
சம்பாநற் பச்சரிசித் தன்பொங்கல் தாதுவிர்த்தி
யென்பார் பெரியோர்க ளெண். (அ.கு.)

### பச்சைப்பருப்புப் பொங்கல்.

பச்சைப்பருப்புப் பொங்கல் அன்னத்தினுலே வீரிய விருத்தியும், வாதப் பெருக்கமும் உண்டாகும், பித்தகோபம் விலகும்.

போகமிக உண்டாகும் பொங்கியபித் தந்தணியும்
தேகமதில் வாதமிகச் சேருங்காண்—வாகார்
பொருப்புப்போல் விம்முமுலைப் பூங்கொடியே ! பச்சைப்
பருப்புப்பொங் கற்சோற்றைப் பார். (அ.கு.)

### சருக்கரைப் பொங்கல்.

இது அருசி, வாந்தி, பைத்தியம் இவைகளை விலக்கும்.

வாயின் அரோசகத்தை மாற்றிவம னம்போக்கும்
ஆயில்பித்த கோபத்தை யாற்றுங்காண்—நேயச்
செருக்கரைச்செந் தாளாற் றிருத்துமட மாதே !
சருக்கரைப்பொங் கற்சாதந் தான். (அ - கு.)

### பாற்பொங்கல்.

பாலும் அரிசியுமிட்டுப் பொங்கின சாதத்தால் தனிவாதகோபமும், இதில் நெய்யும் சருக்கரையும் சேருவதனுல் சிலேத்துமும் அதிகரிக்கும். சுரத்தினுலுண்டான பித்தமும், இரத்தபித்தமும் நீங்கும்.

ஒப்பிலாப் பாலில்வெந்த உயர்சுவை யன்னத்தாலே
வெப்பிலா வாதம்உண்டாம் வெவ்வழற் பித்தந்தாழும்
தப்பிலா இதில்நெய்வெல்லஞ் சார்ந்திடுந் தன்மையாலே
செப்பிலாக் கபமேல்ஆடுஞ் செம்பித்த மொடுங்குங்காணே.

(அ.கு.)

### மிளகோதனம்.

மிளகோதனம் உண்பதனுல் பொருமுகின்றவாயு, குடலிரைச்சல், கபாதிக்கம், பித்தகோபம் இவை விலகும். தீபனமுண்டாகும்.

மிளகோ தனமருந்த விம்முகின்ற வாதம்
இளகும் பசியு மெழும்புங்—களகளெனக்
கூவும் வயிற்றின் குடலிரைச்ச லுங்கபமுந்
தாவுபித்த முந்தணியுஞ் சாற்று. (அ.கு.)

### புளியோதனம்.

புளியோதனத்தால் வமனவேகம், அருசி, பயித்தியமாகியவை போம்.

வாந்தி யுரமொழியும் வாய்நீர்ச் சுரப்பேகும்
சாந்தியுருப் பித்தமது சாந்தியாம்—வாய்ந்த
அளியோ வயிலோவென் றையுறச்செய் கண்ணுய் !
புளியோ தனத்தாற் புகல். (அ.கு.)

### கடுகோதனம்.

கடுகும் புளியுஞ் சேர்த்தமைத்த அன்னத்தையுண்டால் வாததோடமும், சிலேத்துமகோபமும் நீங்கும்.

உரியகடு கும்புளியு மொவ்வக் கலந்தே
அரியமணத் தோடமைத்த வன்னம்—பருகினுல்
வாதமொடு ஐயமும்பின் வாங்கி விழுந்தோடும்
சீத மலர்த்திருவே ! தேர். (அ.கு.)

### எள்ளோதனம்.

எள்ளோதனம் உண்டால், வாதபயித்திய தொந்தம் விலகும். சிலேத்துமாதிக்கமும், தேகவலுவும் உண்டாகும்.

செப்பரிய வாதபித்தத் தீமையக லுங்கபம
துப்பி வளரு முடலிறுகு—முப்பழத்தின்
கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே ! நீ கேளாய்
எள்ளோ தனத்தினு லே. (அ.கு.)

### உழுந்தோதனம்.

உழுந்தோதனத்தால் சிலேத்துமவாததொந்தம், அலசம், சரீரவன்மை அதிகரிக்கும். பித்தகோபம் நீங்கும்.

எஞ்சுகப வாதமிக எறுமதி மந்தமுறும்
விஞ்சுபித் தந்தாழு மெய்யுரக்கும்—அஞ்சம்
எழுந்தோதம் புக்கு மினியநடை மாதே !
உழுந்தோ தனத்திற் குரை. (அ.கு.)

### அரிசி மது.

அரிசியைத் தண்ணீரிலிட்டு அரைப்பாகம் வெந்தபின் இறக்கிவைத்துச் சீலைமண் செய்து சிலநாட்சென்றபின் எடுத்துப்பார்க்கின் புளிப்பேறி

யிருக்கும். இதைச் சிலர் மதுபானமாக அருந்துகின்றனர். இதைத் திராவகமிறக்கிச் சாராயமாக்கி அருந்துவதுமுண்டு. இதைக்குடிப்பதனால் வாதகபமும், நீரேற்றமும் உண்டாகும்.

"சாலி மதுவாதத் தாற்சளிநீ ருண்டாக்கும்"

என்பதால் அறிக. (அ-கு.)

**தவிடு.**

அரிசியைத் தீட்டிப் புடைத்தெடுக்கும் தவிட்டை, வெல்லம் முதலியவை சேர்த்து ஏழைமக்கள் தின்பதுண்டு.

"வாய்த்தவிடும் போய் அடுப்புத்தீயும் கெட்ட கதை" என்பதால் அறிக. இது மிதமாக உண்ணில் மிகப்பலன் கொடுக்கத்தக்க உணவாகும் என்று மேல்நாட்டார் கருதுகின்றனர்.

இத்தவிட்டை நீர்விட்டுக்குழைத்து ஆடு, மாடு முதலியவைகளுக்கும், பட்சி பறவைகளுக்கும் உணவாக வழங்குவதுண்டு.

**தாள்.**

நெல்லின்தாள் கன்று காலிகளுக்குச் சிறந்த உணவாகிறது.

**வேர்.**

நெல்லின் வேரைப் பச்சையாகப் பிடுங்கி லேசாகக் கழுவிக் கஷாயமிட்டுக் கொடுக்க வாந்தி, விக்கல் போம்.

**உமி.**

நெல்லின் உமி செடிகொடிகளுக்கு உரமாகின்றது. மேலும் அடுப்பிலிட்டு எரிக்கவும் சாதகமாகிறது.

**நீராகாரம்.**

சாதத்தினின்று வடித்தெடுத்த பழைய தெளி நீரானது வாத, பித்த, சிலேத்தும வறட்சிகளையும், தாபத்தையும் விலக்கும். சுக்கிலத்தையும், அழகையும் விருத்தி செய்யும்.

வாதபித்த வைய வறட்சிகளை மாற்றிவிடுந்
தாதுவுமுண் டாக்குந்தா கம்போக்கு—மாதர்மெச்ச
வாராகா ரங்கொடுக்கு மாமதுரத் தைக்கொடுக்கு
நீராகா ரத்தெளிவு நீர். (அ.கு.)

---

## நெல்லி—Nelli.

**வே - பெ.—ஆமலகம், ஆலகம், ஆம்பல், ஆமரிகம், தாத்தாரி, தாத்திரி, கோரங்கம், மிறுதுபலா, மீதுந்து.**

Phyllanthus Emblica.

**Eng.—Indian Gooseberry.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Usirika. | ఉసిరిక. | Sans. | Amalaki. | आमलकी |
| Mal. | Nellikay. | നെല്ലിക്കായ്. | Hind. | Amlika. | آملکا * |
| Kani. | Nellikai. | ನೆಲ್ಲಿಕಾಯಿ. | Arab. | Amlaj. | املج * |
| | | | Pers. | Amila. | آمله * |

இது தென்னிந்தியாவில் ஏராளமாய் வளருகின்ற மரம். முக்கியமாய் மலைப்பிரதேசங்களில் உண்டாகும். இதன் பழம் பச்சையாயிருக்கும்போது வெண்மஞ்சள் நிறமாயும் உலர்ந்தபின் கருப்பு நிறமாயும் இருக்கும். இதற்கே "நெல்லிமுள்ளி" என்று பெயர். நெல்லிமரவகையில் **கருநெல்லி** என்றும் **அருநெல்லி** என்றும் வேறிரு சாதிகளுமுள.

ப - உ.—இலை, பூ, பட்டை, வேர், காய், விதை.

சுவை.—புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை, பட்டை, காய்ந்தபழம்.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பூ**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**பழம்.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணம்.**—நெல்லிக்காயைப் பகற்போதுண்ணில் பைத்தியம், கபநோய், பீநசம், வாய்நீர்ச்சுரப்பு, வாந்தி, உன்மாதம், மலபந்தம், தலைச்சுழலல், பிரமேகம் இவைபோம். காமன் அழகுண்டாகும். அதன் புளிப்பால் வாயுவும், துவரால் கபமும் நீங்கும்.

பித்தமன லையம் பீநசம்வாய் நீர்வாந்தி
மத்தமலக் கட்டும் மயக்கமுமில்—ஒத்தவுரு
வில்லிக்கா யம்மருங்கா மென்னுட்கா லந்தேர்ந்தே
நெல்லிக்கா யம்மருந்து ணீ. (தே.கு.)

நெல்லிக்காய்க்குப் பித்தம் நீங்கும் அதன்புளிப்பால்
செல்லுமே வாதம்அதிற் சேர்துவரால்—சொல்லும்ஐயம்
ஓடும்இதைச் சித்தத்தில் உன்ன அனலுடனே
கூடுபிற மேகமும்போங் கூறு. (தே.கு.)

**நெல்லிமரவேர்.**

இதனால் வாந்தி, அருசி, திரிதோடகோபம், தருணசுரத்தில் அபத்தியத் தாற்பிறந்த பீத ஜிம்மகதோடம், அதிலுண்டான சந்நி இவை நீங்கும். திரிதோட சமனமும், மலப்போக்கும் உண்டாகும்.

வமனம் அரோசியறும் வாதமுதன் மூன்றுஞ்
சமன முறும்மலமுஞ் சாறும்—அமானசுரம்
புல்லிவரு தோடசந்நிப் பொல்லாச் செயலும்போம்
நெல்லிமர வேரை நினை. (அ.கு.)

**நெல்லிமுள்ளியின் குணம்.**

நாவுக்குரிசியைத்தருகின்ற நெல்லிமுள்ளியால் உட்சூடு, சோமரோகம், மாதர்கள் ருதுதோடம், அஸ்திசிராவம், தூம்பிரம், தாகம், இரத்த பித்தம், தாதுக்ஷீணம், மூத்திர அருகல், ஆண்குறிக் கொப்புளம், பயித்தியம், பித்தவாந்தி, பிரமேகம் ஆகிய இவைகள் விலகும். இதை அரைத்து சிரசிற்கு இட்டு முழுக நேத்திரம் குளிரும்.

ஆகவன லஞ்சசிஅ சுர்க்கென்பு ருக்கிகண்ணோய்
தாக முதிரபித்தந் தாதுநஷ்டம்—மேகனத்தின்
இல்லிமுள்ளி போல்அருகல் எண்காமிய வியங்கம்
நெல்லிமுள்ளி யாற்போ நினை. (தே.கு.)

நல்லநெல்லி முள்ளியது நாக்குக் குருசிதரும்
அல்லல்விரி பித்தம் அகற்றும்அதை—மெல்லத்
தலைமுழுகக் கண்குளிருந் தாவுபித்த வாந்தி
இலையிழிமே கங்களும்போம் எண். (தே.கு.)

### கருநெல்லிமரத்தின் குணம்.

இதனால் 15 வகை சந்நிபாதங்களும், மயக்கமும், மனோவியாதியும் நீங்கும். காயசித்தியாகும்.

பதினைந் தெனுஞ்சந்தி பாதந் தயக்கம்
மதிநைந்தி டச்செய்வினை மாறும்—பதியிற்
சநித்த கருவுருவந் தானும்வே றுருந்
தனித்த கரு நெல்லிமரத் தால். (தே.கு.)

**வ - கு.**—நெல்லிக்காயைத் துவையல் செய்து சாப்பிட அரோசகம் நீங்கும்.

நெல்லிவற்றல் அல்லது விதையைக் கஷாயம் செய்து கொடுக்க, பித்த மயக்கம், தாகம், அரோசகம், ஒக்காளம் இவை நீங்கும்.

இலைக்கொழுந்தை அரைத்து மோரில் கலந்து சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

நெல்லி வற்றலைக் கஷாயம் செய்து சீனிகூட்டிப் பால்சேர்த்துச் சாப்பிட, பித்தச்சூடு, ஆண்குறிப்புண், வாந்தி, அரோசகம் தீரும்.

### நெல்லிக்காய் இலேகியம்.

60 பலம் நெல்லி வற்றலை 32 படித்தண்ணீரில் போட்டு, எட்டொன்றாய் வற்றவைத்து வடித்திறுத்த கஷாயத்தில், 25 பலம் சருக்கரையைப் பாகு செய்து அதில் அதிமதுரம், கூகைநீர், முந்திரிப்பழம், வகைக்குப் பலம் 2, பேரீச்சம்பழம், திப்பிலி வகைக்குப் பலம் 3, இவைகளை அரைத்து நெய் விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில் தேன்விட்டுப்பிசைந்து, வேளையொன்றுக்குப் புன்னைக்காய்ப் பிரமாணம் கொள்ள, வாந்தி, பித்தம், காமாலை, பித்தப் பாண்டு, வரட்சி, திமிர்வாயு, சோகை, நீர்ச்சுருக்கு, குன்மம், உடம்பெரிவு தீரும்.

100 பலம் நெல்லிவற்றலை, தூணிநீரில் போட்டு எட்டொன்றாய் வற்ற வைத்து வடித்த கஷாயத்தில் 10 பலம் சருக்கரையைப் பாகுசெய்து, அதில் சுக்கு, ஓமம், மூலம், கிராம்பு, தக்கோலம், ஏலம், குங்கிலியம், குக்கில், வாய்விளங்கம், சீரகம், கொத்துமல்லி, கூகைநீர், அதிமதுரம் வகைக்குப் பலம் 1, இடித்துத்தூவி, ஒருபடி நெய்விட்டுக்கிளறி மெழுகு பதத்திலெடுத்து வைத்துக் கொண்டு, வேளையொன்றுக்கு ஒரு கொட்டைப் பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர, மேகம், அஸ்திசுரம், உழலை, காந்தல், கிராணிவாயு, பொருமல், இருமல், க்ஷயம், ஈளை தீரும்.

மேலும் ஆமலக கற்பம், ஆமலகத் தைலம், ஆமலகப் பாவனம், ஆமலக இலேகியம், ஆமலகத்தித்திப்பு என்னும் இதர முறைகளுமுள. இது வன்றி, த்விதிய ப்ராஹ்ம்ய ரஸாயனம், ச்யவனப் பராச ரஸாயனம், சதுர்த்தாமலக ரஸாயனம், ஆமலக்க்ருதம், ஆமலாகவலேஹம், த்விதீயா மலகாவலேஹம், கேவலாமலகரஸாயனம், லோஹரஸாயனம் என்னும் இவைபோன்ற செய்முறைகளுமுள. அவ்வவற்றைப் பிறிதுள்ள நூல்களில் காண்க.

### நெல்லிக்காய்த்தைலம்.

நெல்லிப்பழச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, குமரிச்சாறு, சிறுகீரைச்சாறு, ஆவின் பால் இவைகள் வகைக்குப்படி 2, செவ்விளநீர் படி 8, எள்ளெண்ணெய் படி 3, இவைகளும், அதிமதுரம், கோட்டம், ஏலம், குரோசானி, பச்சிலை, பூலா, கத்தூரிமஞ்கள், சாதிக்காய், சாதிப்பத்திரி, திரிகடுகு, திரிபலை, இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை, பூஞ்சாந்து, சோம்பு, வால்மிளகு

இவைகள் வகைக்குக் கழஞ்சு 3, ஆவின் பாலில் அரைத்து மேற்படி சாறு எண்ணெயுடன் கலந்து, கமலாக்கினியில் எரித்து வடித்து தலைமுழ்கிவர, கண்காசம், மாலைக்கண், கண்நோய் 96, அஸ்தி வெட்டை, கைகால் காந்தல், பித்தவெட்டை, பித்தவாயு, பித்தமயக்கம், உடம்பெரிவு இவை நீங்கும்.

### நெல்லிமுள்ளி இலேகியம்.

நெல்லிமுள்ளி 20 பலம், 32 படி ஆற்றுநீர் விட்டுக்காய்ச்சி 4 படியாக வற்றவைத்து வடித்தெடுத்து, சருக்கரை 25 பலம் போட்டு பாகுவருந் தருணத்தில், அதிமதுரம், கூகைநீறு, திராக்ஷை வகைக்குப்பலம் 2, திப்பிலி, பேரீச்சங்காய் வகைக்குப் பலம் 3, இவைகளை மெல்லியதாகப் பொடித்து, ½ படி தேன்விட்டுக் கிளறி எடுத்துப் புன்னைக்காப் பிரமாணம், காலை, மாலை இருவேளையும் இருபதுநாள் சாப்பிட்டுவர, வாத, பித்த தோஷங்கள், காமாலை, பித்தபாண்டு, அழற்சி, வறட்சி, திமிர்வாயு, சோகை, நீர்ச்சுருக்கு, பித்தகுன்மம், உடம்பெரிவு நீங்கும். புகை, உப்பு நீக்கவும்.

---

## நேர்வாளம்—Nèrválam.

**வே. - பெ.—வாளம், நேபாளம், சோபி, சேவாலம், சம்பரி, சித்துருபம், சிறுகுறிஞ்சி, தந்தி, தெந்தி, நாகதெந்தி, நாககெந்தி, நாகணம்.**

Croton Tiglium.

Eng. Purgative Croton.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nápálam. నేపాళము. | Arab. | Hab-ul-salatin. حب السلاطين * |
| Mal. | Nérvalam. നേർവാളം. | Pers. | Bed-anjir-e-khati. بيدانجير خطائى * |
| Kan. | Jàpala beeja. ಜಾಪಾಳಬೀಜ. | Hind. | Jamalgotta. * جمالگوٹہ |
| Sans. | Danthi. दन्ती | | |

இது நேபாளத்தில் உற்பத்தி என்கிறார்கள். அக்காரணம் பற்றியே பயிராகுமிடப் பெயரையும் கொண்டதென்பார்கள். தற்காலம் இது இலங்கை, மொலூக்கஸ் தேசங்களில் பயிராகிறது. இதன் விதை சற்றேறக்குறைய ஒரு பெரிய ஆமணக்கு விதைப் பருமனாகவிருக்கும். மேல் ஓடும், உடைத்தால் உள்பருப்பும், பருப்பின் மத்தியில் இலையும் இருக்கும். விதையிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். பருப்பின் நடுவிலிருக்கின்ற இலையை எடுக்காமலும், நன்றாகச் சுத்திசெய்யாமலும் வழங்கின், வாந்தி, பேதி, வெப்பம், வயிறு - ஆசனம் இவ்விடங்களில் கடுப்பு முதலிய பலபல துன்பங்கள் நேரிடும். அன்றி அதிகமாய் சுத்தி செய்யினும் இதன் வீரியம் போய்விடும். ஆகவே மிகசாக்கிரதையாக வழங்கல் வேண்டும். அஃதன்றி வழங்கின் சரீரசுகம் கெடும், துர்ப்பலம் நேரிடும், முகம் அதைத்து தேகம் அதிவெப்பம் கொள்ளும். மேல் நாட்டார் இவ்விதையினின்றும் எண்ணெய் எடுத்து மிகச்சிறிய அளவில் உபயோகிக்கிறார்கள். இவ்வெண்ணெயின் அளவு ½—3 துளியாகும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்**—மலாசயத்தைப் பற்றிய பழைய மலமும், அதைப்பற்றிய பல பிணிகளும், வாதநோயும் போகும்.

ஓதி லுதரத் துறுமலம்பன் ஞேய்விலகும்
பேதி மருந்திற் பெரிதாகும்—வாதமறுங்
கூர்வாளை யொத்தவிழிக் கொம்பனையே! பண்டிதர்சொல்
நேர்வாளக் கொட்டைதனை நீ. (அ.கு.)

மேலும் வாதரோகம், விஷமசந்நிபாதம், தேகக்குடைச்சல், வயிற்று நோய், ஆகியவைகளுக்கும் உபயோகிக்கலாம்.

பித்தநோய், மேகநீர், இவ்வியாதியஸ்தர்கட்கு இது முற்றும் உதவாது. துர்ப்பலத்தர், முதிர்வயதினர், கர்ப்பிணி இவர்கட்குக் கொடுக்கலாகா.

உரைத்திடு வாதநோய்க்கு முறைகெடு விடஞ்சந்நிக்கும்
நிரைத்திடு சூலைகுன்ம நீண்டிடு மலக்கட்டிற்குங்
கரைத்திடு வாளந்தன்னைக் கதித்திடு மேகத்திற்கும்
அறைத்திடு பித்தத்தோர்க்கும் அகற்றிடு அதனைத்தானே.

**பிரமாணம்.**—சுத்திசெய்தபின் $\frac{1}{4}$—1 உளுந்தெடை.

**சுத்திக்கிரமம்.**

(1) பசுவின் சாணப்பால் 4 பலம், பசுவின் மூத்திரம் 4 பலம், பழச்சாறு 4 பலம் இம்மூன்றிலும், நேர்வாளம் ஒரு பலத்தை ஓர் துணியில் முடிந்து போட்டு, தனித் தனியே ஒவ்வொன்றிலும் வேகவைத்து எடுத்து, ஓட்டையும், தோலையும் உள்ளிலையையும் நீக்கிப் பசுவின்நெய்விட்டு வறுத்து எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

சோபியெனும் நேர்வாளம் புனிதமாகில்
சுரர்அருந்தும் மருந்தாகும் மருந்தாகாது
பாபியஃதே யாகுமஃ தாகாவிட்டால்
பண்ணுமுறை எப்படியென் றெண்ணவேண்டாம்
ஆபிரச மாபிரச அருணநாலொன்
றுக்கியதி லிதைமுடிந் தடுவாயோர்நாள்
நீபிறகு எடுத்துடைத்து மேலுள்போக்கி
நித்தியமா யதையுலர்த்தி வைத்துக்கொள்ளே. (தே.க.)

**வேறு.**

(2) நேர்வாளம் பலம் ஒன்றுக்கு, நெல்லிப்பழச்சாறு, கையாந்தகரைச்சாறு, பசுவின் சாணப்பால் இம்மூன்றும் வகைக்குப் பலம் $2\frac{1}{2}$ ஆகச் சேர்ந்த பலம் $7\frac{1}{2}$யும் ஓர் பாண்டத்திலிட்டு, சீலைகட்டி அதன்மீது பருப்பை வைத்து கமலாக்கினியாக ஒருசாமமெரித்து, முளைபோக்கி, நிழலிலுலர்த்தி முன்போலவே மேலும் இரண்டு முறையாக மொத்தம் மூன்று முறை செய்து, பசுவின் நெய் விட்டு வறுத்து உபயோகிக்கவும். இவ்விதம் செய்து, அறிவிலிகள் நேர்வாளத்தால் ஆசனக்கடுப்பு, வயிற்றுவலி, குமட்டல் உண்டாகுமெனச் சொல்லும் சந்தேகத்தை ஒழிப்பாயாக.

ஆமலகை யாந்தகரை யாமாம லத்தின்மழை
யாமலகை யாந்தகரை யத்திடவி—யாமலகை
பத்தரையு மையரையு பார்த்திருதி சோபியடு
பத்தரையு மையரையும் பார். (தே.ய.)

**இது விடமித்தலுக்கு முறிப்பு.**—

*சீரகத்தைத் தேன் விட்டு வறுத்துத் தண்ணீர் விட்டுக் காய்ச்சிய குடிநீர் மேற்படி தோடத்தைப் போக்கும்.*

இதைப் பக்குவப்படுத்தி உபயோகிக்கத் தெரியாதவர்களும், பக்குவஞ் செய்யத்தெரிந்தும் சோம்பலினால் செய்யத்தவறினவர்களும், இதை நோயினர்களுக்குக் கொடுத்து, அவர்கள் சுகத்தையும் கெடுத்து, சுதேச வைத்திய யோகங்களுக்கும் ஓர் அபகீர்த்தியை யுண்டு பண்ணுகின்றனர் என்று சொல்ல, நியாயமுண்டு.

சுத்திக்கிரமப்படி செய்யப்பட்டு உபயோகிக்கும் பட்சத்தில் இது "**சுரர்**" அருந்தக்கூடிய மருந்தாகும் எனக்கூறலாம்.

சுதேச வைத்தியர்களால் சாதாரணமாய் வழங்கப்படுகிற சரக்குகளில் இதுவுமொன்று. பெரும்பாலும் தனியாக வழங்குவதின்றி, மேல்கூறப்பட்ட பல்வகை நோய்களுக்கு வழங்கி வருகின்ற யோகங்களில் சேரும்.

---

## நொச்சி—Notchi.

**வே - பெ.—இந்திரசூரியம், நித்தில், நிர்க்குண்டி, நெர்க்குண்டி, சிந்துகம், சிந்துவாரம்.**

Vitex négundo

Eng. Five leaved chaste tree.

Tel. Vávili. వావిలి.

Mal. Notchi. നൊച്ചി.

Kan. Billneki. ಬಿಲ್ಲನೆಕಿ.

Sans. Nirgundi. निर्गुण्डी.

Hind. Sambhalu. * سمبھالو

Duk. Shánbáli. * شمبالی

இது இந்தியா முழுவதும் வளருகின்ற ஒரு சிறியமரம். இதில் **கருநொச்சி, நீர்நொச்சி, வெண்நொச்சி** எனப் பிரிவுகள் உண்டு. சாதாரணமாக **வெண்ணொச்சி** எங்கும் கிடைக்கக்கூடியது. **கருநொச்சி** கிடைப்பது அரிது. **நீர்நொச்சி** தாம்பிரபரணி ஆற்றங்கரையிலுண்டு.

**ப - உ.**—இலை, பூ, வேர், பட்டை.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், - **பிரிவு** கார்ப்பு.

**செய்கை.**

**பொது.**

- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- புழுவகற்றி(குடல்) - க்ருமிநாசநி (கோஷ்ட) - Vermifuge.

**வேர்.**

- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**பூ.**

- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனால் சந்நிபாதத்தாலுண்டாகும் வாதநோய் போகும்.

" . . . . . . . . . . காரநொச்சிற் பட்டையது
துள்ளுசந்நி வாதமகற்றும்"

(அ.கு.)

**வ - கு.**—நொச்சியிலையைக் கஷாயமிட்டு வாதசம்பந்தமான சுரங்களுக்குக் கொடுக்கலாம். குளிர்சுரம், முறைசுரம் இவைகள் தணியும்.

நொச்சியிலையை நீரிலிட்டுக்காய்ச்சி பிரசவஸ்திரிகள் குளிக்கலாம்.

வெந்நீரில் இலையைப்போட்டு வேகவைத்து நீராவிபிடிக்க வாதநோய் சாந்தமாகும். அல்லது வீக்கமுள்ள இடங்களில் வேது பிடிக்கலாம்.

தலைவலி, பீநசம் முதலியவைகளுக்கு இதனிலையைத் தலையணையாக உபயோகிக்கக் குணமாகும். அல்லது இலையைச் சுக்குடன் சேர்த்தரைத்துக் கன்னப்பொறிகளில் பற்றிடத் தலைவலி தீரும்.

இலையை அரைத்து மண்ணீரல் வீக்கங்களுக்குப் பற்றிடலாம்.

இலைச்சாற்றால் எண்ணெய்செய்து தலையில்தேய்த்து முழுகிவரக் கழுத்து நெறிகட்டு நாளடவில் குணமாகும்.

இதன்சாறு "நிர்க்குண்டித்தைலம்" முதலிய தைலங்கள் செய்ய உப யோகப்படுகிறது.

இலையை வறுத்து ஒற்றிடமிட, வாதவீக்கம், மேகவாதநோய், கீல்வாதம் முதலியன தீரும்.

நொச்சி, பொடுதலை, நுணா, முதலியன சேர்த்துக் கஷாயம் செய்து குழந்தைகளின் மாந்தத்துக்குக் கொடுக்கலாம்.

நொச்சியிலைச்சாறு, கரிசிலாங்கண்ணிச்சாறு, துளசிச்சாறு இவைகளைச் சமபாகம் எடுத்து ஓமத்தைப் பொடித்துச்சேர்த்து ஊறவைத்து, வேளைக்கு ½ தோலா வீதம், வாதநோய்க்குக்கொடுக்கலாம். அல்லது நொச்சியிலைச் சாறு ½ தோலாவில், சிறிது மிளகும், நெய்யும் கலந்துகொடுக்கலாம்.

2 தோலா இலைச்சாறும் 2 தோலா பசு மூத்திரமும் சேர்த்து, தினமும் காலையில் கொடுக்க, இடப்பாட்டீரல் வீக்கம் குறையும்.

வேர்க்கஷாயம், வாதநோயைப் போக்கி, அடிக்கடி மூத்திரத்தையுண் டாக்குகிற மூத்திரப்பை அழற்சியையும் நீக்கும். மேலும் வயிற்றுவலி, மலக்கிருமி நோய், குஷ்டம் முதலிய நோய்களுக்கும் கொடுக்கலாம்.

பூவை உலர்த்திப் பொடித்து சிறிது பன்னீர், கற்கண்டு, அல்லது தகுந்த துணை மருந்துகளுடன் சேர்த்துக் கொடுக்க இரத்தவாந்தி, இரத்தபேதி இவைகளை நிறுத்தும்.

நொச்சி, மிளகு, பூண்டு, இலவங்கம் சேர்த்து, சிறிதளவாக மென்று தின்ன, சுவாசகாசநோயின் எழுச்சி அடங்கும்.

---

## பச்சிலை—Pachchilai.

**வே - பெ.—தமாலதளம், மட்டிலை, பசும்பிடி.**

Zanthochymus.

| | |
|---|---|
| Kan. Kama Kasturi ಕಾಮಕಸ್ತೂರಿ. | Tel. Pachchaku పచ్చాకు. |
| Sans. Patram पत्रम् | Mal. Pachchila പച്ചില. |

இது ஓர் வாசனை இலை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—பரிமணமுள்ள பச்சிலையானது பித்தகப விரணத்தையும், இரத்தம், கபம், மலம் இவைகளைப்பற்றிய கிருமிகளையும் போக்கும்.

"பச்சிலைக்குக் கந்தம் பரிமளிக்கும் அவ்விலையோ
வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச்—சொச்சமற
ஓட்டும்." (அ.கு.)

**வ - கு.**—இது விசேஷமாகத் தைல முறைகளில் சேரும்.

பச்சிலை, பூலாங்கிழங்கு, கத்தூரிமஞ்சள், சடாமாஞ்சில், வாய்விடங்கம், கசகசா, கார்போக அரிசி, சந்தனம், இச்சிலிக்கிழங்கு, கோரைக்கிழங்கு இவைகளைச் சமனெடை சூரணித்து ஒன்றாய்க் கலந்து வைத்துக்கொண்டு, ஸ்நானம் செய்யும்போது, எண்ணெயில் குழைத்துப் பூசி ஸ்நானம் செய் தாலும், பொடியைத் தனியாகத் தேய்த்துக் குளித்தாலும், வியர்வைக்குரு, சொறி, தினவு, கற்றாழைநாற்றம் போம்.

## பண்ணிமோந்தான் கிழங்கு—Pannimónthan - Kizhangu.

வே - பெ.—முள்ளிக்காய். சிங்காரி.

Trapa Bispinosa.

Eng.—Water Chestnut (Indian).

Tel. Párigadda పారిగడ్డ.

Mal. Mullikkáya മുള്ളിക്കായ്.

Sans. Sringátaka शृङ्गाटक:

Hínd. Singhara * سنگھارہ

இது தண்ணீரில் வளரும் ஓர்வகைச் சிறுகொடி. இந்தியாவில் ஏரிகளி லும் குளங் குட்டைகளிலும் வளர்ந்து செழிக்கும். இதன் காய்க்கு முள் ளுண்டு. சில இடங்களில் வளரும் இப்பூண்டிற்கு இரண்டு முட்களும், வேறு சில இடங்களில் வளர்வதற்கு நாலு முட்களுமுண்டு. முட்கள் நேர் எதிர் பக்கங்களில் இருக்கும். விதையின் மேலோடு பச்சையாக இருக்கும் போது மிருதுவாகவும், முதிர்ந்தபோது கடினமாகவும் இருக்கும். உட் பருப்பு மிக இனிப்புள்ளது.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு. **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- வீக்கம்பரப்பி - Discutient.

**குணம்.**—வெட்டையனல், தாதுநட்டம், புற்று, தாகம் முதலியவற்றை நீக்கி, தேகத்துக்கு வன்மையையும் தாதுபலத்தையும் தரும்.

**வ - கு.**—இதன் இளந்தண்டை அரைத்துப் புற்றுக்களின் மீது வைத்துக் கட்ட அவை ஆறும்.

இளந்தண்டின் சாறெடுத்து கண்வியாதிகளுக்குக் கண்ணில் விடலாம்.

பச்சை விதை மிகவும் உருசிகரமானது. நாவிற்கு இதமாக விருக்கும். இதைத்தின்ன, உடலிலெழும் அனலைக் குறைத்து, ஆரோக்கியத்தைத் தரும்.

முற்றின விதையை வறுத்து இடித்து மாவாக்கி உணவாக அருந்துவார் கள். இம்மாவினால் அசீரணபேதி, பித்தாதிக்கம், வெட்டை இவை நீங்கும்.

இம்மாவோடு பால் சேர்த்துச் சாப்பிட தேகத்தைப் போஷித்து, வன்மை யைக் கொடுக்கும்.

மேற்படி விதை 2 தோலா, கருஞ்சீரகம் 1 தோலா, வெள்ளைச் சருக் கரை 3 தோலா இவைகளைச் சேர்த்துக் கலந்து எழுபாகமாக்கி, நாளொன் றுக்கு ஒரு பாகம் வீதம் எழுநாள் கொடுக்கப் பெரும்பாடு நீங்கும்.

---

## பப்பாய்—Pappai.

Carica Papaya.

Eng.—Papaw tree.

Tel. Boppayi బొప్పాయి.

Mal. Pappálam പപ്പാളം.

Kan. Pappaye ಪಪ್ಪಾಯೆ.

Arab. Ambā - hindi * أنبه هندى

Pers. Amba - hindi * أنبه هندى

Hind. Popaiyah * پپايا

இம்மரம் சாதாரணமாய் இந்தியாவிலுள்ள எல்லாத் தோட்டங்களிலும் பயிராகிறது. மலைச்சார்பான பூமிகளில் மிகச் செழிப்பாக வளருகின்றது.

ப - உ.—காய், விதை, பால்.

**காய், பால், விதை.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**

,, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**காய், பால், விதை.**

ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Athelmintic.

**பழம்.**

மலமிளக்கி - மலகாரி - Laxative.
உரமாக்கி - பலகாரி - Tonic.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—பாலினால் நாக்குப்பூச்சி, குன்மம், கிருமி இவைபோகும்.

வ - கு.—இலையை வெந்நீரில் போட்டெடுத்து, நரம்புத்தளர்ச்சி, நரம்பு வலி முதலியவைகளுக்கு ஒற்றிடமிடலாம். அல்லது நெருப்பில் வாட்டி வைத்தும் கட்டலாம்.

இலையை நசுக்கி வெதுப்பி, வீக்கம், கட்டி, முதலியவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

பிஞ்சுக் காயைக் கீறினால் பால் வடியும். இப்பாலிலிருந்து ஒருவகைச் சத்துள்ள உப்பு எடுத்து, வயிற்றுவலி, குன்மம், அசீரணம் முதலிய நோய்களுக்குக் கொடுக்க, அவை நீங்கும்.

இப்பாலை, நாப்புண், தொண்டைப்புண் இவைகளுக்குத் தடவலாம்.

பாலுடன், வெங்காரமும் நீரும் சேர்த்துக் குழப்பி மைக்குரு, வேர்க்குரு முதலிய சருமத்தில் எழும்பும் குருவிற்குத் தடவ அவை விழுந்துவிடும்.

இப்பாலுடன் சிறிது படிகாரம் சேர்த்துக் கரப்பானுக்குப்போட அவை குணமாகும்.

பால் ஒரு தேக்கரண்டி, தேன் ஒரு தேக்கரண்டி, வெந்நீர் $\frac{1}{4}$ ஆழாக்கு இவைகளை ஒன்றுபடக் கலந்து நன்றாய்க் குளிர்ந்தவுடன் சாப்பிட்டு, 2-மணி நேரம் கழிந்தபின் ஆமணக்கெண்ணெய் 2-பலம், பழ ரசம் ஒருபலம் கலந்து சாப்பிட கிருமிகள் விழும். மீளவும் வேண்டுமானால் இரண்டாம் நாளும் சாப்பிடவும். 3 முதல் 7 வயதுக் குழந்தைகளுக்கு 1 உச்சிக்கரண்டி பிரமாணம் கொடுக்கலாம். இதனால், வயிற்றுவலி கண்டால் சருக்கரையும் தண்ணீரும் கலந்து வேண்டிய அளவு குடிக்கச்செய்தால் உடனே நீங்கும்.

வயிற்றுவலி, குன்மரோகம் முதலியவைகளுக்கு இப்பாலை, சருக்கரை கூட்டின நீர் அல்லது சருக்கரை சேர்ந்த பாலுடன் கூட்டிக் கொடுக்கலாம்.

பழத்தைத் தினமும் புசித்து வந்தால், மலக்கட்டு நீங்கும். மூலமும் வயிற்றுவலியும் தீரும்.

பழத்தை உலர்த்தியாவது அல்லது உப்பிட்டு உலர்த்தியாவது சாப்பிட வலப்பாட்டீரல், இடப்பாட்டீரல் முதலியவற்றின் வீக்கங்கள் குறையும்.

காயைத் தோல் நீக்கிச் சமையல் செய்து சாப்பிடுவது சிலர் வழக்கம். இது முலைப்பாலைப் பெருக்கும்.

## பயறு—Payaru.

**வே - பெ.—சதீநகம், சதீநம்.**

Eng.—Peas, Pulse.

இது தானிய வகையைச் சேர்ந்தது. புன்செய் நிலங்களில் விளையும். இதில் அநேக சாதிகளுண்டு. அவையாவன :—

| | |
|---|---|
| 1. சிறுபயறு, பச்சைப்பயறு .. | Phaseolus mungo. |
| 2. எலிப்பயறு, பனிப்பயறு, காட்டுப் பயறு, நரிப்பயறு. | Phaseolus - Trilobatus. |
| 3. துலுக்கப்பயறு, நன்னிப்பயறு .. | Phaseolus - aconitifolius. |
| 4. காராமணி .. .. | Dolichos catiang. |
| 5. தட்டைப்பயறு .. .. | Dolichos (different Kinds of-) |
| 6. சடைப்பயறு .. .. | A variety of Dolichos. |
| 7. மின்னிப்பயறு .. .. | |
| 8. மொச்சை .. .. | Dolichos tetraspermus. |
| 9. பயற்றங்காய் .. .. | Dolichos tranquebaricus. |

மேற்கூறிய பலவகைப் பயறுகளில், நமக்கு அதிகப் பயன்தரக்கூடிய சிலவற்றையே கீழ்க் குறிப்பிட்டிருக்கிறோம்.

---

## பச்சைப்பயறு—Pachchai - payaru.

**வே - பெ.—சிறுபயறு, பாசிப்பயறு, முற்கம்.**

Phaseolus mungo.

Eng.—Green gram.

| | | |
|---|---|---|
| Tel. | Pacha - pesalu | పచ్చ పెసలు. |
| Mal. | Cherupayara | ചെറുപയറ്. |
| Kan. | Hesaru | ಹೆಸರು. |
| Sans. | Mudgam | मुद्गम् |
| Hind. | Moong | * مونگ |

இது இந்தியா முழுதும் பயிரிடப்பட்டு வருகின்றது. காயா யிருக்கும் போது மேற்றோல் பச்சையாகவும், காய்ந்தால் கறுப்பாகவும் மாறும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—பச்சைப்பயறு பைத்தியத்தை நீக்கும், வாயுவைத் தரும். சீதளம் என்பர்.

பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை
அச்சம்அற நாளும் அகற்றுங்காண்—கச்சுலவு
கொங்கைமட மாதே ! குளிர்ச்சியென்பார் எப்போதுந்
தங்குவா தத்தைத் தரும்.

**வ - கு.**—இதைச் சாதாரணமாய் வேகவைத்து அல்லது வறுத்து உண்பது வழக்கம். அதிகமாய்ச் சாப்பிட்டால் பேதியாகும்.

இதை வறுத்து ஒன்றிரண்டாக உடைத்து வேகவைத்து, வடிகட்டின கஷாயத்தைச் சிறிது உப்பும், காரமும் சேர்த்து நோயுற்றெழுந்தோருக்குக் கொடுக்கலாம்.

தலையிலுள்ள எண்ணெய்ப் பசையை எடுக்க இதை இடித்தெடுத்த தூளை உபயோகிக்கலாம். தலைக்கும், கண்ணுக்கும் குளிர்ச்சியை யுண்டு பண்ணும்.

இதன் மாவை வெந்நீர்விட்டுக் களியாகக் கிளறி, மார்பில் பற்றிடப் பால் கட்டுக் குறைந்து, வீக்கமும் குறைந்துபோம். மார்பின் நெறிக்கட்டிகளும் குறையும்.

இதன் மாவைப் பலகாரங்கள் செய்தும், பருப்பை ஒன்றிரண்டாக உடைத்து அரிசியுடன் சேர்த்துக் கஞ்சியாகக் காய்ச்சியும் உண்பது நாட்டு வழக்கம்.

---

## நரிப்பயறு—Narip-payaru.

**வே - பெ.—எலிப்பயறு. காட்டுப்பயறு.**

**Phaseolus Trilobus.**

**Mal.** Narip-payara നരിപ്പയറ്. | Sans. Mudgaparni मुद्गपर्णी

இது சாதாரணமாய் எங்கும் பயிராகிப் படர்ந்து வளரும். இலை மூன்று பிரிவுகளுள்ளது. இதன் காய்கள் மிகச்சிறியதாகப் பாசிப்பயற்றின் சாயலை ஒத்திருக்கும்.

**ப - உ.**—இலை, விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனால் பித்தகோபம், கபரோகங்கள், பிரமேகவெள்ளை, அரித்திராமேகம், கரப்பான் இவை போகும்.

நரிப்பயற் றங்கொடிக்கு நாடாது பித்தந்
தரிப்புற்ற ஐயமெல்லாந் தாழும்—இருப்பொழிக்கும்
மேகவெட்டை பித்தவெட்டை மீளாக் கரப்பனிவை
யாகம்விடுத் தோடு மறி. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலையைச் சமைத்துத் தின்பது நாட்டு வழக்கம்.

சமூலத்தை அரைத்துப் பாலில் கலக்கிக் குடிக்க வெட்டை நீங்கும்.

காயை வேகவைத்துக் கற்கண்டு சேர்த்துப் பாலில் கலக்கிக் குடிக்கக் கபத்தைப்போக்கும்.

## தட்டைப்பயறு.

Dolichos (one of the different kinds of).

**Eng.—Flat bean.**

**Tel.** Alachandalu అలచందలు.
**Mal.** Thattapayara തട്ടപ്പയറ്.
**Kan.** Alsande ಅಲಸಂದಿ.
Sans. Simhi. शिम्बी.
Hind. Sim *

இது கொடியினம். இந்தியாவில் எங்கும் கிடைக்கக் கூடியது.

**ப - உ.**—இலை, விதை.

**சுவை** - துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹ்ரகாரி - Expectorant. காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac

**குணம்.**—இது அக்கினிமந்தத்தையும், சந்நிபாதத்தையும் உண்டாக்கும்.

"தட்டைப் பயறுமந்தம் சந்நிதரும்" (அ.கு.)

**வ - கு.**—இதனிலை உணவாகப் பயன்படுகிறது. இலைச்சாறு கபத்தை இளக்கி வெளியிற் றள்ளும்.

விதையை வேகவைத்துத் தின்ன, தேக பலத்தைத்தருவதுடன், இரத்த பீநசத்தையும் நிறுத்தும்.

---

## மொச்சை—Motchai.

Dolichos tetraspermus.

இது இந்தியாவிலெங்கும் கிடைக்கக் கூடியது. கடைகளில் சாதாரணமாகக் கிடைக்கும். இதில் **நாட்டுமொச்சை, காட்டுமொச்சை, பாம்பு மொச்சை** என மூன்று விதமுண்டு. பின் கூறிய இருவகையும் உணவுக் கேற்றதல்ல.

**ப - உ.**—காய், கொட்டை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

### மொச்சைக்காய்.

**குணம்.**—இதற்குத் திரிதோஷம், வாதம், க்ஷீணமலம் இவைகள் விருத்தியாகும்—மிகுதியான சூட்டைத் தணிக்கும்.

அனிலபித்த வையம் அனைத்தையுமுண் டாக்குந்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டும்—அனுதினமுங்
கொச்சைமலத் தைப்பெருக்குங் கோரவுட்டி னந்தணிக்கும்
மொக்சைக்காய் செய்யு முறை. (அ.கு.)

**மொச்சைக்கொட்டை.**

இது திரிதோடங்களையும், இரைச்சலைத் தருகின்ற ஆவிருதவாயுவையும் உண்டாக்கும்.

அனிலபித்த ஐயம் அனைத்தையும்உண் டாக்கும்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டுந்—தனிவேள்
குனிக்குஞ் சிலைப்புருவக் கோதையே! நாளும்
இனிக்குமொச் சைக்கொட்டை யே. (அ.கு.)

**வ - கு.**—இதை வேகவைத்துப் பெரும்பாலும் பதார்த்தவகைகளுக்கு வழங்குவது நாட்டு வழக்கம்.

இதைச் சிலநேரம் ஊறவைத்துத் தோல் போக்கி இரண்டாகப் பிளந்து உப்பு, காரம், கூட்டியுலர்த்தி நெய்விட்டு வறுத்துண்பதும், உப்பு, காரம் சேர்க்காமலே வேறு காய்கறிகளுடன் சேர்த்துச் சமைத்துண்பதும் நாட்டு வழக்கம்.

மொச்சையை உரைத்துப் பாலுண்ணி முதலியவற்றின் மீது பூசிவர அவைகள் மறையும்.

---

## பயற்றங்காய்—Payatrangai.

Dolichos Tranquebaricus.

இது வட இந்தியாவில் ஏராளமாயுண்டு. இதன் காய் மிகவும் உருசிகரமானபடியால் இதைத் தோட்டங்களிலும் வைத்துப் பயிராக்குவார்கள்.

**ப - உ.**—காய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**குணம்.**—உடலுக்குக் குளிர்ச்சிதரும், வெப்பமகலும், உடலைப் போஷிக்கும்.

**வ - கு.**—இதைச் சமைத்து உண்ணலாம்.

---

## பருத்தி—Parutti.

**வே - பெ.—ஆச்சாதநபலை, பரி, உத்திரி, காற்பாசம், பன்னல்.**

Gossypium - Indicum.

**Eng.—Indian Cotton Plant.**

Tel. Pratti. ప్రత్తి
Mal. Parithi. പരിത്തി.
Kan. Hatti. ಹತ್ತಿ.
Sans. Karpasa. कार्पासः
Hind. Kapas: کپاس

இச்செடியானது இந்தியாவில் அநேக இடங்களிலும், இலங்கையிலும் ஏராளமாய்ப் பயிராக்கப்படுகின்றது. இதன் விளைபொருளாகிய பஞ்சானது

ஆடைகள் செய்ய மிகப் பயன்படுகின்றபடியால், இது இந்நாட்டில் ஏராளமாய்ப் பயிரிடப்பட்டு, வெளியூருக்கும் ஏற்றுமதியாகிறது. இதில் **வெண்பருத்தி**, **செம்பருத்தி** என இருவினங்கள் உண்டு. இதன் அங்கங்கள் ஒவ்வொன்றும் மருந்து செய்வதற்குப் பயன்படுதலால் மருத்துவனுக்கு இது இன்றியமையாத பொருளாயிருக்கிறது.

**ப - உ.**—இலை, பூ, பிஞ்சு, விதை, பட்டை, வேர்ப்பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை, பூ, பிஞ்சு:**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**விதை.**

மலமிளக்கி - மலகாரி - Laxative.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**பட்டை. வேர், வேர்ப்பட்டை.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

## பருத்தியிலை, மொக்கு.

**குணம்.**—இவைகட்குச் சீழ்மேகம் முதலிய மேகங்களும், இரத்த பித்தம், விரணசோபை இவைகளும் நீங்கும்.

பருத்தியிலை மொக்கிரண்டைப் பாலிலரைத் துண்ண
வருத்துகின்ற மேகமெல்லாம் மாறும்—பருத்த
விரத்தபித்தத் தோடு விரணவீக் கம்போம்
அரத்தவிதழ் மாதே! யறை.

(அ.கு.)

## பருத்தி மெத்தை.

பருத்தி மெத்தை இரத்தம், விந்து, காமம், சுரம் இவைகளை விருத்தி செய்யும்.

"அலர்பருத்திப் பஞ்சி னணையோ—உலவிரத்தம்
விந்துக ளைப்பெருக்கும் மேல்விரக முண்டாக்குங்
குந்துசு ரத்தையழைக் கும்"

(அ.கு.)

**வ - கு.**—இலை அல்லது மொக்கை ஒருபலமெடுத்தரைத்து, அரைஆழாக்குப் பசுவின்பாலில் கரைத்துண்ணில் சீழ்மேகம் முதலிய மேகங்களும், இரத்த பித்தரோகமும், விரணசோபையும் நீங்கும்.

இலை ஊறல்கஷாயம் அசீரணபேதியை நிறுத்தும்.

இலை, மொக்கு, பூ முதலியவைகளை நீரிலிட்டுக் காய்ச்சி, பிரசவித்த ஸ்திரீகள் குளிக்கலாம்.

இரண்டு அல்லது மூன்று தோலா எடை இலைச்சாற்றை பசுவின்பாலில் கலந்து சீதபேதி, மூலம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலைக் கொழுந்தை உலர்த்திக் கஷாயமிட்டு அதிசாரத்துக்குக் கொடுக்கச் சுகந் தரும்.

கொதி நீரில் மேற்படி உலர்ந்த இலைக்கொழுந்தைப் போட்டு, பேதியிலுண்டாகும் முக்கலைத் தணிக்க, ஆசன வாயில் ஆவி பிடிக்கலாம்.

கருப்பாசய குன்ம வலியைப் போக்க, இலைக் கொழுந்தையும் வேரையும் நீரில் வேகவைத்து, அந்நீரில் ஆசன முழுக்குச் செய்யலாம்.

இலையை அரைத்துக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட சீக்கிரம் பழுக்கும்.

கடுகுடன் அரைத்துத் தேள்கடி வாயில் பற்றிட வலி குறைந்து போகும்.

பூவை மணப் பாகுசெய்து கொடுக்கத் தீபன சக்தியையும் ஜீரண சக்தியையும் உண்டு பண்ணும்.

பூவை அரைத்து, தீக்கொப்புளம், சுடு நீர்க் கொப்புளம் முதலியவைகளுக்குப் பற்றிட, எரிச்சல் அடங்கும்.

பூவையும், பிஞ்சையும் கஷாயமிட்டு, ஊமத்தை விடமுறிக்கக் கொள்ளலாம்.

பிஞ்சை அரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்கச் சீதபேதி நிற்கும்.

பஞ்சினால் ஆடைகள் நெய்து உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

அன்றியும் பஞ்சை அக்கினி விரணம், வெந்நீர் விரணங்கள், சீழ்க் கட்டி முதலிய விரணங்களின் மேல் வைத்துக் கட்டிக் காற்றுப் புகவிடாமல் செய்ய, சீயை வறட்டும்.

பஞ்சின் மூலமாய், "கன் காட்டன்" (Gun cotton) னும், அதன் மூலம் "கொலோடீ" (Collodion) னும் செய்யலாம். இம் மருந்தை வெட்டுக் காயங்களின் மீது தடவ அந்த இடம் சீக்கிரம் வறண்டுபோய், அவ்விடத்தில் ஒருவகை கனதியான செதிள் போன்ற வஸ்து மூடிக் கொண்டு புறக் காற்று, கிருமி முதலியன உட்புகாதபடி காக்கும்.

பஞ்சை எரித்துச் சாம்பலாக்கிப் புண்களின் மீதுத் தூவ, அவை சீக்கிரத்தில் ஆறும்.

மூக்கிலிருந்து இரத்தம் வடிதல், ஈற்றினின்றும் சோரை யொழுகல் முதலியவற்றிற்குப் பழைய பஞ்சைப் புகைத்து மூக்கின் வாயிலாகப் புகையை உள்ளுக்கு இழுத்துப் பிறகு, இலைச்சாறு இரு தேக்கரண்டி, சருக்கரை ஒரு தேக்கரண்டி குழைத்துச் சாப்பிட இரத்தம் நின்று போகும்.

---

## செம்பருத்தி—Chemparuth-thi.

Gossypium arboreum.

| | |
|---|---|
| Tel. Pamidi - Patti పమిడిపత్తి. | Sans. Japakusuma जपाकुसुम: |
| Mal. Chemparithi ചെമ്പരത്തി. | Hind. Deo-kapas دیو کپاس * |

இந்தியாவிலுள்ள தோட்டங்களில் வைத்துப் பயிராக்கப்படுகிற செடி. பருத்தி யினத்தைச் சேர்ந்தது.

ப - உ.—இலை, பூ, விதை வேர்.

**பொது.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**இலை, பூ, விதை.**

,, இனிப்பு துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பொது.**

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

பூ.

**குணம்.**—இது, தேக அழற்சி, இரத்த பித்தம். வயிற்றுக் கடுப்பு, விந்துவை நீற்றிச் சலமாகச் செய்கின்ற மேகம், வெட்டை, தாகம், ஊழி முதலிய பேதிகள் ஆகியவைகளை நீக்கும்.

> செம்பருத்திப் பூஅழலைத் தீயரத்த பித்தத்தை
> வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீற்—றம்பனஞ்செய்
> மேகத்தை வெட்டையை விஷுசிமுதற் பேதியையுள்
> தாகத்தை ஓட்டிவிடுந் தான். (அ.கு.)

**வ - கு.**—பருத்தியின் கீழ்க் கூறிய வழக்குகளே இதற்கும் உரியது. எனினும், கீழ்க் கண்ட விசேஷ வழக்குகளைக் கூறின் மிகையாகாது.

காட்டுச் சீரகத்தை இதன் இலைச் சாற்றால் அரைத்துச் சுர சார்பாய் உண்டாகின்ற சொறி, சிரங்கு, கரப்பான், புடை முதலியவைகளுக்குப் பூச, அவை உலர்ந்து குணமாகும்.

இலையை அரைத்துப் பாலில் கலக்கி, நீர்ச்சுருக்கு, நீரெரிச்சல் மூத்திரத் தடை முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இலைக் கொழுந்தை மேற் கூறியபடி அரைத்துப் பாலில் கலக்கிச் சீதபேதி, பிரமேகம் முதலிய நோய்களுக்கு வழங்கலாம்.

பூவிதழ்களை நசுக்கி, முலைப்பாலில் தோய்த்துச் சிறு குழந்தைகளுக்குண்டாகும், கண்ணோய் முதலிய கண் வியாதிகளுக்குக் கண்களில் விட்டுவர அந்நோய் நீங்கும்.

விதை அரைப்பலம், சீரகம் கால் பலம், சோம்பு கால் பலம், மூங்கிலுப்பு அரை வராகனெடை, இவை யாவையும் ஒன்றாய் இடித்து நீர்விட்டு அரைத்து, ஓர் துணியின் வாயிலாய் வடித் திறுத்து, அந்நீரைத் தினம் நாலைந்து தடவை, நோயின் வன்மைக்குத் தக்கபடி கூட்டியும், குறைத்தும் கொடுத்துவர, வெள்ளை, வெட்டை முதலிய நோய்கள் குணமாகும்.

செம்பருத்தி வேர்ப்பட்டை, சாதிக்காய், வால்மிளகு, கற்கண்டு வகைக்கு ஒரு வராகனெடை எடுத்துக் குடிநீர் செய்து ஒரு மண்டலம் சாப்பிட்டுவர, இலிங்கத்தினாலுண்டாகும் தோடத்தை நிவாரணம் செய்யும்.

செம்பருத்திக் காய்ச்சாறு, பழச்சாறு, ஆவின்பால் சமபாகங் கூட்டி வெள்ளைச் சருக்கரை சேர்த்துத் தினம் இருவேளை, மூன்று நாள் சாப்பிட பலவித செந்தூர பற்பங்களின் வீறு தணியும்.

விதையை அரைத்து 15—30 குன்றி பாலில் கரைத்துக் கொடுக்க, தாது புஷ்டியாகும், பால் பெருகும்.

மேல் ஓட்டை நீக்கிப் பருப்பை நன்றாய்ப் பொடித்து மாவாக்கி, இரண்டு தேக் கரண்டி வீதம் பாலில் கொடுத்துவர, மூளைக்குப் பலத்தைக் கொடுத்து, நரம்புகளுக்கு உறுதியையும் தரும்.

விதையைச் சிதைத்து வெந்நீரில் ஊறவைத்து, இறுத்துப் பாலும் சீனியும் சேர்த்துச் சூட்டுடன் கொடுக்க, முறைசுரம் தணியும். சீதபேதி நிற்கும்.

விதையை அல்லது பட்டையை இடித்துப் பொடித்து, சுக்கு நீரில் குழைத்து விரை வீக்கத்துக்குப் பற்றிடலாம்.

விதையினின்று எடுக்கிற எண்ணெய், சவுக்காரம் (ஸோப்புகள்) செய்வதற்கும், சமையல் செய்வதற்கும் மிகவும் பயன்படுகிறது. தலைவலியைப் போக்கி, மூளை வெப்பத்தைத் தணிக்கும். இவ் வெண்ணெயில் பசுவின் நெய்யைவிட, போஷண சக்தி அதிகமாயுண்டு என்று கண்டறியப்பட்டிருக்றது.

## பலா—Palà.

**வே . பெ.—சக்கை, பலவு, பலாசம், பனசம், வருக்கை, ஏகாரவல்லி.**

Artocarpus Integrifolia.

**Eng.—Jack Tree.**

Tel. Panasa పనస.
Mal. Piláva പിലാവ്.
Kan. Halasu ಹಲಸು.
Sans. Panasá पनस:
Hind. Kathal * کٹہل

இது இந்தியாவிலெங்கும் பயிராகும் மரம், காடுகளில் சுயேச்சையாகவும், நாடுகளில் நட்டும் பயிரிடப்படுகிறது. இதில் ஆசினிப்பலா, கூழைப்பலா, வருக்கைப்பலா என பேதங்களுண்டு.

**ப - உ.**—இலை, காய், பழம், விதை, பால், வேர்.

**இலை, காய், விதை, பால், வேர்.**

**சுவை.**— துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**

இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**இலை, காய், விதை, பால், வேர்.**

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பழம்.**
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி -Demulcent.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

**இலை.**

**குணம்.**—பலாவிலையில் உண்டால், அடங்கிய பித்தம் அதிகரிக்கும், ஊழால் வந்த பெருவயிறும், குன்ம நோயும் நீங்கும்.

பலாவிலையி லுண்ணப் பதுங்கிநின்ற பித்தங்
குலாவி யெழும்பிக் குதிக்கும்—உலாவிவரு
கன்ம மகோதரநோய் காணு தகலாத
குன்ம மகலுங் குறி. (தே-கு.)

**பிஞ்சு.**

இதனால் தாகமும், பித்த நோயும் நீங்கும். சுக்கில விருத்தி, அலச நோய், மந்தாக்கினி, குன்மம், இவைகளுண்டாகும்.

தாகம்போம் வந்தபித்தஞ் சாந்தமாம் ஆடவர்க்குப்
போகம் மிகப்பொழியும் பொய்யன்றே—மூகம்
அலசமந்தங் குன்மம்இவை அண்டிவருஞ் சொன்னேன்
கலசப்ப லாப்பிஞ்சுண் காண். (அ-கு.)

**காய்.**

இதனால், அக்கினி மந்தம், வாத கோபம், ஆயாசம், சுவாசம், சுக்கில விருத்தி ஆகியவைகள் உண்டாகும்.

உண்ணில்மிகு மந்தம் உறுதியாம் வாதநோய்
அண்ணும் இளைப்பிரைப்பும் அண்டுங்காண்—வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி லுவமை
சொலாக்காம வாரிதியே சொல். (அ-கு.)

**பழம்.**

இது வாத, கப, பித்த தொந்தங்களையும் கரப்பானையும், முன்பில்லாத பிணிகளையும் உண்டாக்கும்.

தித்திக்கும் வாதசி லேத்மபித்தம் உண்டாக்கும்
மெத்தக் கரப்பான் விளைவிக்குஞ்—சத்தியமாய்ச்
சேராப் பிணியையெல்லாஞ் சேர்க்கும் ஒருநொடியிற்
பாராய் பலாவின் பழம். (அ-கு.)

**கொட்டை.**

கருக்கிய பலாக்கொட்டையினுல் அள்ளு மாந்தம், குடலில் தங்கிய கபத்தாலுண்டாகின்ற மலச்சிக்கல், கள் குடியர்களுக்குண்டாவதுபோல் நெஞ்சில் புளியேப்பம், கற்போல் வயிறு கெட்டிப்படல், அதில் ஒற்றைச்சாணளவு இருப்புச் சலாகை செருகினது போன்ற உபத்திரவம் இவைகளுண்டாகும்.

அள்ளேறு நீள்குடரி னப்பான் மலங்கட்டுங்
கள்ளேறு நெஞ்சர்நெஞ்சாங் கல்லகட்டி—னுள்ளே
சலாக்கொட்டை யிட்டசுகந் தானுங் கருக்கும்
பலாக்கொட்டை யிட்ட பலன். (தே—கு.)

**வ - கு.**—இலைக் கொழுந்தை அரைத்து சிரங்குகளுக்குப் பூச அவை குணமாகும்.

இலையைக் கோத்து அதில் உணவு கொள்ளலாம். ஆனால் குணத்தின் கீழ்க் கண்ட துர்க்குணங்களை உண்டுபண்ணும்.

பிஞ்சு மிகத் துவர்ப்புள்ளது. இதைச் சமைத்துத் தின்பது நாட்டு வழக்கம். வேக வைத்துத் தின்பதுமுண்டு. சுக்கில விருத்தி உண்டாகும். தாகமும், பித்தமும் போகும். ஆனால் மந்திக்கும். அலச நோயையும், குன்ம நோயையும் உண்டாக்கும் எனக் கூறப்பட்டிருக்கின்றது.

பழம் மிகவும் உருசிகரமானது. ஆனால் இலகுவில் சீரணிக்காது. முப்பழங்களில் இது ஒரு அங்கமாகக் கருதப்படுகின்றது. அதிகமாய்த் தின்றால் விடமிக்கும்.

கொட்டைகளை வறுத்து அல்லது சுட்டுத்தின்னலாம். ஆனால், தேக சுகத்துக்கு ஏற்றதல்ல.

மரத்தினின்றும் பால் எடுக்கலாம். இப்பால் மிகவும் பசை யுள்ளது. இத்துடன் காடி சேர்த்துக் குழைத்து நெறிக்கட்டிகளுக்குப் பூச அவை அமுங்கும். அல்லது பழுத்துச் சீக்கிரத்தில் உடையும்.

வேரைக் கஷாயமிட்டு அதிசாரத்துக்குக் கொடுக்கலாம். இதை அரைத்துச் சொறி சிரங்குகளுக்குப் பூச அவை குணமாகும்.

---

## பலாசு—Palásu.

**வே - பெ.—புரசு, பிரமதாரு, முருக்கு, கிஞ்சுகி, கிருமிநாசம், சீரா, பலாசம், புரைசு, புரோசு, புனமுருக்கு, வாதபோதம், வானபத்தியம்.**

**Butea Frondosa.**

**Eng.—Bastard Teak.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Moduga. | మోదుగ. | Sans. | Palash. | पलाश: |
| Mal. | Murukkamaram | മുരുക്കമരം. | Pers. | Dharakhte - palasha. درخت پلاشا * | |
| Kan. | Muttagamara | ಮುತ್ತಗಮರ. | Hind. | Dhara | دهارا * |

இம்மரம் இந்தியாவின் மலைப்பிரதேசங்களில் ஏராளமாய் வளரும்.

**ப - உ.**—இலை, பூ, விதை, பட்டை, பிசின்.

**பொது.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**விதை.**

,, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**இலை.**

**செய்கை.**

துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**பூ**

காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
தூய்மையாக்கி - மலினநிவர்த்தநி - Depurative.

**விதை**

மலமிளக்கி - மலகாரி - Laxative.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**பிசின்**

துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent.

**மரம்.**

**குணம்.**—இது வாதாதிக்கம், பித்தகோபம், சிலேத்துமதோடம், வயிற்றுநோய் மலக்கிருமி, கிரகணிரோகம், தேகக்குடைச்சல் ஆகிய இவைகளை நீக்கும். உதராக்கினியை உண்டாக்கும்.

புரசுவா தம்பித்தம் பொங்குகபங் குன்மம்
இருமி யுடனே கிராணி—பெருவலிநோய்
ஓட்டுமதி தீபனத்தை உண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய்! தெளி.

**பிசின்.**

இது கீல்கள், நரம்புகள், சுக்கிலம், அறிவு, மார்பு ஆகிய இவைகளுக்குப் பலத்தைக் கொடுக்கும்.

சந்திகட்கு நாடிகட்குந் தங்குசுக்கி லந்தனக்கும்
புந்தியுரங் கட்குமுரம் பூட்டுங்கா—ணுந்து
சரமதனுக் காகமநூல் சாற்றுமலர் மாதே!
பிரமதரு விற்சம்பி சின். (அ.கு.)

**விதை.**

இதனால் மலப்புழுக்குலம், வாதவலி, சீதம், படர்தாமரை, வயிற்றுவலி (குன்மம்), வயிறிரைச்சல், கரப்பான் இவை நீங்கும். பித்தமுண்டாகும்.

வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீதம்
நியத்தபடர் தாமரையும் நீங்கும்—வயிற்று
வலியிரைச்சல் வன்கரப்பான் மாறும்பித் துண்டாம்
மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து. (அ.கு.)

**இலை.**

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டு, அல்லது சூரணஞ்செய்து சாப்பிட, வயிற்றுநோய், மூலம், அதிசாரம் முதலியவை நீங்கும்.

இலையை அரைத்துப் பூசக் கட்டிகள் அமுங்கும். புற்றுகளின் வளர்ச்சியை நிறுத்தும்.

### பூ

பூவை நீர்விட்டு வேகவைத்துக் கட்டிகள் மீது வைத்துக்கட்ட அவை அமுங்கும். விதை வீக்கத்துக்கு, இப்பூவை நசுக்கிக் கொதிக்க வைத்துப் பற்றிடலாம். இதைக் கஷாயமிட்டுக் கொடுக்க மாதாந்தருது வெளியாகும்.

பூவை வேகவைத்தக் கஷாயத்தை, சிறிது வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க, மூத்திரக்கட்டை உடைக்கும். அளவு $\frac{1}{4}$-$\frac{1}{2}$ ஆழாக்கு.

### விதை.

விதையை நீரில் ஊறவைத்து மேல் தோலை எடுத்துவிட்டு, உட்பருப்பை உலர்த்திச் சூரணித்து 4 குன்றி வீதம் தேனில் கலந்து, தினம் மூன்று வேளையாக மூன்று நாள் சாப்பிட்டுப் பின் நான்காம் நாள் காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட, பேதியாகி, குடலிலுள்ள மலக்கிருமிகள் விழும்.

விதைச் சூரணத்தைப் பழச்சாற்றில் கலந்து, புடை முதலிய சரும நோய்களுக்குப் பூசலாம்.

### பட்டை.

பட்டைச்சாற்றையும் இஞ்சிச்சாற்றையும் கலந்து சாப்பிட, பாம்புக் கடிவிடம் நீங்கும்.

பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுக்கத் தலைபாரம், நீர்க்கோவை, இருமல் முதலியன போம்.

பட்டையைச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கற்கண்டு சேர்த்து, வாயிலிட்டு மெல்ல, அதிதாகம் நீங்கும்.

### பிசின்.

இதை நன்றுகப் பொடிசெய்து 2 குன்றி முதல் 10 குன்றிவரை, சிறிது இலவங்கச் சூரணமும் சேர்த்துக் கொடுக்க, அதிசாரம், சீதபேதி முதலியன நீங்கும்.

இதையே அதிக அளவாகக் கொடுக்கக் கயநோய், இரத்த மூத்திரம், இரத்த வாந்தி இவை நீங்கும்.

பிசினை நிரில் கரைத்து அதைத் தொண்டையில் பூசத் தொண்டைப்புண் மாறும்.

---

## பல்லிப்பூண்டு—Pallip-púṇdu.

**வே - பெ.—கொல்லைப்பல்லி, பல்லிப்பூடு.**

**Buchnera Asiatica.**

**Mal. Kollappalli** കൊല്ലപ്പല്ലി

இப்பூண்டு சாதாரணமாய்த் தண்ணீர்க் கசிவுள்ள சதுப்பு நிலங்களில் ஏராளமாய் வளருகின்றது. இது தானிய நிலங்களில் பயிர்களினூடே வளர்ந்து ஏராளமாய்ப் பெருகி, விளைவைக் கெடுத்து, நற்பயன் பெறவொட்டாமற் செய்து குடிகளுக்கு நஷ்டம் உண்டாக்குகிறபடியால், "கொல்லைப்பல்லி, குடிக்குச் சகுனி" என்ற பழமொழியும் உண்டு. இதில், வெண்மை, செம்மை, மஞ்சள், நீலம் என நாலு விதம் உண்டு.

ப. - உ.—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—நச்சரி - விஷநாசநி - Antidote.

**குணம்.**—இதனால் பாம்புவிடம், சுரதோடம், வாத பித்த தொந்தம், பல்வலி இவை போம். பாடாணமும் தாளகமும் இதில் சுத்தியாகும்.

வல்விடந் தோடசுரம் வாயுபித் தங்களொடு
பல்வலியும் பஞ்சாய்ப் பறக்குங்காண்—நல்லோர்பால்
சொல்லிப்பார் பாடாண தாளகமுஞ் சுத்தியதாம்
பல்லிப்பூண் டுண்டாயிற் பார். (அ.கு.)

**வ - கு.**—இதைக் குடிநீர் செய்து கொடுத்துவர மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

இதன் சாற்றுற் சுருக்கிட பாடணமும் தாளகமும் சுத்தியாகும்.

இதையரைத்துப் பெரிய தேங்காய்ப் பிரமாணமெடுத்து அதன் மத்தியில் பாடணத்தைப் புதைத்துத் தக்கத் தீயிட பற்பமாகும்.

இதனால் தங்கம் நீறும்.

---

## பவளமல்லி.

**வே - பெ.—பரிசாதம், பாரிஜாதம்.**

Nyctanthes Arbor-tristis.

Eng.—Night Jasmine.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Pagadamalle. | పగడమల్లె. | Sans. | Pàrijàtaka | पारिजात: |
| Mal. | Manjapúmaram. | മഞ്ഞപ്പൂമരം. | | | |
| Kan. | Párijata | ಪಾರಿಜಾತ | Hind. | Harsinghar | *هارسنگار |

இது தழைத்து வளரும் ஒரு சிறுமரம். இந்தியா முழுமையும் காடுகளில் தன்னிச்சையாக வளரும். இதன் புட்பம் நறுமணம் வீசும். இதற்காகவே இதை வீட்டிற்கடுத்த விடங்களில் வைத்து வளர்த்து வருகிறார்கள். புட்பம் ஏறக்குறைய மல்லிகைப் பூவின் உருவத்தையும் வாசனையையும் பொருந்தியிருக்கும். காம்பு, மஞ்சட் கலந்த செம்மை நிறத்துடன் அஃதாவது பவளநிறத்தை யொத்திருப்பதால், இதற்குப் பவளமல்லி எனப்பெயர் வழங்கிவருகிறது. இம்மரம் வருடமுழுவதும் புட்பிக்குமாயினும் மாரிகாலத்தில் அதிகமாய்ப் பூக்கும் தன்மையுண்டு. இதன் இலையின் மேல்பாகம் கறுத்து பசுமை நிறத்துடன் சுரசுரப்பாய் இருக்கும்.

**ப - உ.**—இலை, வேர்ப்பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**

- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**வேர்ப்பட்டை**

- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- பித்தசமனி - பித்தசாந்தநி - Antibilious.

**குணம்.**—இதனால் சுரம், கிருமி, வாதநோய், முதுகுவலி முதலியவை தீரும்.

**வ - கு.**—இளங்கொழுந்தை இஞ்சிச் சாற்றில் அரைத்து முறைசுரத்துக் குத் தினம் இருவேளை கொடுக்கத் தீரும்.

இலையை வெந்நீரிலிட்டு நன்ருய் ஊறவைத்து தினம் இருவேளை கொடுத்துவர முதுகுவலி, சுரம் இவைகள் சாந்தியாகும்.

இலைச்சாற்றுடன் சிறு உப்பிட்டு, பின் சிறிது தேனும் கலந்து கொடுக்க மலக்கிருமிகள் விழும்.

இலையைக் குடிநீரிட்டுக் கொடுக்கக் கபம் போம், மலங்கழியும்.

விதையைப் பொடி செய்து எண்ணெயில் குழைத்துத் தலையிலுண்டாம் சொறி, சிரங்கு, நமைச்சல் இவைகளுக்குத் தடவிவர அவைகள் ஒழியும்.

வேரை அரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்க மேகம் நீங்கும்.

---

## பறங்கிக்காய்—Parankkikái.

**வே - பெ.—பூசுணி, சருக்கரைப்பூசனி, சருக்கரைப்பறங்கி, பூழியபலம்.**

Cucurbita Maxima.

Eng.—Red Gourd.

| | |
|---|---|
| Tel. Gummadi-kāya గుమ్మడి కాయ. | Kan. Kumbala ಕುಂಬಳ. |
| Mal. Chakkara-kumbala ചക്കരക്കുമ്പള. | Duk. Harardana * هرا دانہ |
| | Hind. Kaddu * کدو |

இது கொடி வகை. இதன் இலை பெரிதாக, ஐந்து குறுகிய பிளவுகளையுடையது. காயின் மேல் தோல் பச்சையாயும் பழுத்தவுடன் பழுப்பு நிறத்துடனும், உட்பாகம் மஞ்சள் நிறமான சதைப்பற்றுள்ளதுமாயிருக்கும். காய் மிகப் பெரிய உருண்டை வடிவமுள்ளது. காயின் மேல் - கீழ்ப்புறம் குழிந்திருக்கும்; பக்கங்களின் ஓடுகிற வரிகள் ஆழ்ந்திருக்கும். இது இந்தியா முழுவதும் பயிரிடப்பட்டு வருகிறது. விசேஷமாய் நாட்டுப்புறங்களில், கூரைகளில் இக்கொடியைப் படரவிடுவார்கள். இதில் கோடைப் பூசனி அல்லது குழிப்பறங்கியென ஓர் சாதியுமுண்டு.

**ப - உ.**—காய், விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இது அனலால் வரும் அழற்சியையும், மிகு பித்தத்தையும் நீக்கும், நல்ல பசியையும் கபகோபத்தையும் விளைவிக்கும்.

அனல்அழலை நீக்கும் அதிபித்தம் போக்குங்
கனல்எனவே வன்பசியைக் காட்டும்—புனல்ஆரும்
மிக்கஐயம் உண்டாக்கும் மென்கொடியே ! எப்போதும்
சர்க்கரைப்ப றங்கிக்காய் தான். (அ.கு.)

**குழிப்பறங்கிக்காய். (கோடைப்பூசுணி.)**

குழிப்பறங்கிக்காய்க்கு, வாதக்கடுப்பு, கபவிருத்தி, வாதசூலை, அக்கினி மாந்தம் இவை உண்டாகும்.

வாதக் குடைச்சலுறும் மாருத ஐயமுமாம்
போதவளிச் சூலையுண்டாம் பொற்கொடியே !—ஓதுங்
குழிப்பறங்கிக் காய்க்குக் குளிர்ச்சி நிறையும்
பழிக்கடுத்த மாந்தம்மிகும் பார். (அ.கு.)

**வ - கு.**—இக்காயை அநேகர் கறியாகச் சமைத்து உண்பது வழக்கம்.

உட்சதையை விதை நீக்கி வேகவைத்துப் பிசைந்து, புண்களின்மீது வைத்துக்கட்ட, துர்நாற்றம் நீங்கிச் சதை வளர்ச்சி உண்டாகும்.

உட்சதையை விதை நீக்கி வெயிலில் நன்றாய்க் காயவைத்து இடித்து இலேகிய பதமாய்ச் செய்துகொடுக்க, இரத்தவாந்தி, இரத்தக் கோழை இவைகளை நிறுத்தும்.

பழுத்த காயின் காம்பை எடுத்து நன்றாய் உலர்த்தி நீரில் அரைத்துக் கொடுக்கச் சில்விடங்கள் நீங்கும்.

சதையை உலர்த்திச் சீரகம் சேர்த்திடித்துச் சிறிது கற்கண்டுடன் உண்ண வேனிற்கால வெப்பத்தாலுண்டாகும் அழற்சித் தணியும்.

ஒரு பலம் விதையை வறுத்துச் சருக்கரை கலந்து இரவு படுக்கைக்குப் போகுமுன் தின்று, மறுதினம் காலையில் ஆமணக்கெண்ணெய் சாப்பிட்டு வெந்நீரருந்திவரத் தட்டைப்புழுச் செத்து விழும்.

விதையை 4 முதல் 8 வராகனெடை எடுத்துக் கஷாயமிட்டுச் சாப்பிட வெள்ளை முதலிய மூத்திர நோய்களைச் சாந்தி பண்ணும். மூத்திரத்தைப் பெருக்கும்.

விதையினின்றும் ஓர் வகை எண்ணெய் எடுக்கிறார்கள்.

---

## பறங்கிப்பட்டை—Parankip-pattai.

**வே - பெ.—மதுஸ்மீகம், மதுஸ்மீகி, சீனப்பட்டை, பறங்கிச்சக்கை.**

Smilax Chinensis.

**Eng.—China root.**

| | |
|---|---|
| **Tel.** **Pirangi-chekka** పిరంగిచెక్క. | **Sans.** **Madusnuhi** मधुस्नुही |
| **Mal.** **Pavu** പാവു. | **Hind.** **Chobchini** * چوب چینی |

இது சீனு, ஜப்பான் முதலிய தேசங்களுக் குரியதே யாயினும், இந்தியா விலும் ஏராளமாய்ப் பயிரிடப்படுகின்றது. கடைகளில் சாதாரணமாய் விற்கப்படும்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- மேகப்பிணிவிலக்கி - Anti-syphilitic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- தூய்மையாக்கி - மலினநிவர்த்தநி - Depurative.

**குணம்.**—இதனால் தாகம், பற்பல வாதநோய், விந்து நட்டம், விரணம், பிளவை, நீரிழிவு, கடிவிடம், சிரங்கு, மூலமுளை. முடவாதம், குறைநோய், கபம், பகந்தரப்புண், வாந்தி இவை நீங்கும்.

தாகம் பலவாதந் தாதுநட்டம் புண்பிளவை
மேகங் கடிகிரந்தி வீழ்மூலந்—தேகமுடங்
குட்டை பகந்தரமேற் கொள்வமனம் போம்பறங்கிப்
பட்டையினை யுச்சரித்துப் பார். (தே.கு.)

**வ - கு.**—இதைச் சூரணஞ் செய்தேனும், குடிநீரிட்டேனும் உபயோகித்து வர, மேற்கண்ட நோய்கள் சாந்தமாகும்.

**பறங்கிப்பட்டைச்சூரணம்.**

அகஸ்தியர் காவியம் 1500.

இதனால் விரணம், கரப்பான், சூலை, வாதம், வெட்டை, அக்கினிமந்தம், அதிசாரம், கிராணி, உப்பிசம், வயிற்றிரைச்சல் தீரும்.

**பரங்கிப்பட்டை இரசாயனம்.**

அகத்தியர் இர-சுருக்கம்.

இதனால் கிரந்தி, புண், சூலை, கண்டமாலை, வாதநோய், பிரமியம், லிங்கப்புற்று, சேத்தும நோய், கபநோய் 96-ம் தீரும்.

**பறங்கிப்பட்டை லேகியம்.**

அக. காவியம் 1500.

பறங்கிப்பட்டை 5 பலம், ஓமம், அதிவிடயம், குரோசானிஓமம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சுக்கு, மிளகு, திரிபலை இவை வகைக்குப் பலம் கால், சூரணஞ் செய்து, பால் தளரவிட்டுப் பிசறி, நெய் படி ஒன்று விட்டுக் கிளறி, இளக்கி அடுப்பேற்றிக் கமலத்தீயில் ஒரு கடிகை வெந்தபின் கிண்டிக்கிண்டி மெழுகு பக்குவத்தில் சீனி பலம் 6 சேர்த்துக் கிண்டி 3 நாள் சென்றபின், நாளொன்றுக்கு இரண்டுவேளை தான்றிக்காயளவு நாற்பது நாள் கொள்ள, கிராணி, சூலை, பறங்கிப்புண், குட்டம், சிரச்சூலை, கபாலகுட்டம், கரப்பான், நாச்சூலை, வெடிசூலை, நெஞ்சுசூலை, சரீரசூலை, கழல்வாதம், தந்தவாதம், விலாவெலும்புவீக்கம், சோபை, முடச்சூலை, பக்கச்சூலை இவை தீரும்.

---

## பற்பாடகம்—Parpatakam.

**வே - பெ.**—சீதம், பற்படாம்.

Mollugo Cerviana.

**Eng.**—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Parpataka | పర్పాటక. | Sans. | Parpatakam | पर्पटकम् |
| Mal. | Parpatakam | പർപ്പാടകം. | Duk. | Hazardana | * هزار دانہ |
| Kan. | Parpataka | ಪರ್ಪಟಕ. | Hind. | Taph-Jhad | * طاپ جهاڑ |

இப்பூண்டு இந்தியா முழுவதும் கிடைக்கக்கூடியது. வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாயுண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- மலமிளக்கி - மலகாரி - Laxalive.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- வியர்வைப்பெருக்கி . ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதனல் சீதவாதசுரம், பித்தகாசரோகம், உன்மாதம், பித்தசீதாடம் இவை போம். விழிக்குக் குளிர்ச்சி யுண்டாகும்.

சீதவா தச்சுரமுந் தீராத தாகமும்போம்
போதவிரு கண்குளிரும் பொய்யலவே—பூதலத்துள்
வற்பார் பயித்தியமு மாபித்த முந்தொலையும்
பற்பாடகத்தையுன்னிப் பார். (அ.கு.)

**வ - கு.**—இதை முறைப்படிக் கஷாயமிட்டுக் கொடுக்கச் சுரந் தணியும். மேலும் கருப்பாசய அழுக்குகளை வெளிப்படுத்தும்.

இதன் வேரை எண்ணெயில் போட்டுக் காய்ச்சி கீல்வாதம் முதலிய வாத வீக்கங்களுக்குத் தேய்க்கச் சுகமாகும்.

இதை ஊறல் கஷாயமிட்டுக் கொடுக்க, நீர் எரிச்சல், கண்ணெரிச்சல் தீரும். தங்கிய பிரசவ அழுக்கு வெளிப்படும்.

இப்பூண்டு அநேக பித்தக்கஷாயங்களில் சேரும்.

சமூலத்தைப் பால் விட்டரைத்துத் தலைக்குத் தடவிச் சிறிது நேரங்கழித்து நீர்விட்டு மூழ்கிவரக் கண்ணெரிச்சல் நீங்கி கண்கள் குளிர்ச்சியடையும்.

---

## பனை—Panai.

**வே - பெ.**—**தாலம், கரும்புறம், ஏடகம், காமம், தருவிராகன், தாளி.**

Borassus flabelliformis.

Eng. { Palmyra Palm.
Brab tree.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Táti | తాటి. | Sans. | Tála | तालः |
| Mal. | Pana | പന | | | |
| Kan. | Panè-mara | ಪನೆಮರ. | Hind. | Tár | * تار |

இது இந்தியா முழுவதும் தன்னிச்சையாக ஓங்கி வளரும் மரம். இதன் சருவ அங்கங்களும் பலவிதமாக உபயோகப்படுமெனினும், முக்கியமாய் இலைகள், (ஓலைகள்) மட்டை, பூ, வேர் இவைகளே மருந்துகளுக்குப் பயன் படுகிறது.

**ப - உ.**—குருத்து, ஓலை, பூ, நுங்கு, பழம், மட்டை, கள், கிழங்கு, வேர்.

**இலை, மட்டை, வேர்.**

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பூ.**

,, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**கள்.**

,, இனிப்பு, புளிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை.

இலை, மட்டை.

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

நுங்கு.

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

மது.

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

கள்.

வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
தாபமகற்றி - உக்ரரோகசமநகாரி - Antiphlogistic.

### குருத்து.

**குணம்.**—இதனால் இரத்தமூலமும், அதிசாரமும் உண்டாகும்.

"பனங்குருத்து தின்றாற் பகருதிர மூலங்
கனம்பெருகும் பேதியுமாங் காண்." (அ.கு.)

### பூ.

இது வாதகுன்மம், மூத்திரச்சிக்கல், தந்தரோகம், புராணசுரம் இவைகளைப் போக்கும்.

பனையினுறு பூவதுதான் பங்கமுறுக் குன்ம
வினைஅகற்றும் நீர்க்கட்டை மீட்கும்—முனையான
பன்னோய் ஒழிக்கும் பழஞ்சுரத்தைப் போக்கிவிடும்
மின்னே இதனை விளம்பு. (அ.கு.)

### நுங்கு.

நெய்தனிலப் பனையினது இளங்காயிலுள்ள நுங்கின் சலமானது வியர்வைக் குருவை நீக்கும். பசியைத்தரும். தோலுடனே இருக்கும் நுங்கு சீதபேதியை விலக்கும்.

நீர்வார் வியர்க்குருவை நீக்குமன லாக்குந்தோற்
சார்வா மயஞ்சீதந் தானொழிக்குஞ்—சேர்வார்
விழிக்கரையாந் துஞ்சளிக்கு மென்சுரத மானே!
கழிக்கரையாந் தாளியிளங் காய். (அ.கு.)

### பழம்.

தினமும் பனம்பழத்தையே உணவாக உண்டால் கரப்பான், அழுகிய சிரங்கு, மலபந்தம், பித்தவாயுவால் பிறந்த நோயினங்கள் இவைகளுண்டாகும்.

நாளும் பனம்பழத்தை நல்அமுதாய் உண்ணுங்கால்
ஆளுங் கரப்பான் அழுகிரந்தி—நீளுமலஞ்
சிக்கும்பித் தத்தில்வளி சேருதலால் நோய்க்கணமு
திக்கும்ப லக்கும்எனச் செப்பு. (அ.கு.)

### ஓலை விசிறி.

பனைஓலை விசிறியினால் வாததோடம், சிலேத்துமரோகம், பித்தாதிக்கம், அரோசகம் ஆகியவை நீங்கும்.

பனைவிசிறி தன்றாற் பருத்ததொரு வாத
வினையுமைய நோயும் விலகுங்—கனைபித்த
நோயு மருசியென்ற நோயுங் குடியேகுந்
தேயுமிடை மாதே ! தெளி. (அ.கு.)

**கள்.**

பனங்கள்ளுக்குச் சுக்கில சோணிதவிருத்தி, சப்ததாதுக்கட்டு, பித்தாதிக்கம் இவை யுண்டாகும். தேகஉஷ்ணமும் விதாகமும் நீங்கும். இதில் பாடாணவகைகள் சுத்தியாகும்.

விந்துதிர மூறுமதி வெப்புடனே தாகம்போம்
பந்தமாந் தாதுவுமோ பாரிக்கும்—உந்துபித்தந்
தோன்றும்பா டாணங்கள் சுத்தியுமாந் தோகைமின்னே !
என்ற பனைமதுவிற் கே. (அ.கு.)

**கற்கண்டு.**

பனங்கற்கண்டுக்கு மேகசுரம், மசூரிகையின் வெப்பம், நீர்ச்சுருக்கு, உஷ்ணதாகம் இவை நீங்கும்.

மேக வனலுமிக வீசுமசூரிகையால்
ஆக முறுகனலு மாறுங்காண்—மேகனத்தில்
தங்கிவரு நீர்ச்சுருக்குந் தாகவெப்ப முந்தணியும்
இங்குபனங் கற்கண்டுக் கே. (அ.கு.)

**வெல்லம்.**

பனை வெல்லத்தால் வாதபித்ததொந்தம், சிலேத்துமதோடம், சந்நிபாதம், அரோசகம், வாதகுன்மம் இவை நீங்கும்.

"—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால்." (அ.கு.)

**கிழங்கு.**

பனங்கிழங்கால் அஸ்திகூடும், பித்தமேகம் முதலிய மேகங்களும் போகும். குளிர்ச்சியும் வனப்பும் உண்டாகும்.

"பனங்கிழங்கால் அத்திவெப்பும் பன்மேக மும்போகும்
இனுங்குளிர்ச்சி யோடழகும் எய்தும்." (அ.கு.)

**வ - கு.**—இதன் ஓலை எழுத்தாணியால் எழுத உதவும். இலகுவில் எழுத்துக்கள் அழியாது. காகிதம் இவ்விந்து தேசத்தில் வழக்கத்துக்கு வருமுன் இலக்கியம், இலக்கணம், மற்றுமுள்ளகலைகளும் இவ்வோலையிலே வரையப்பட்டன.

மேலும் இவ்வோலைகள் வீட்டிற்குக் கூரையாகப் பயன்படுகிறது.

ஓலையினால், பாய் விசிறி, சிறுபெட்டிகள், இன்னும் பலவித வீட்டுச் சாமான்கள் செய்கிறார்கள். ஓலையைச் சாயந்தோய்த்துச் செய்கிற சிறிய ஓலைப்பெட்டிகள் மிகவும் அழகு பொருந்தினவைகளா யிருக்கும்.

சாயந்தோய்த்த ஓலையைச் சுருட்டிச் சிலபெண்கள் காதில் அணிந்துக் கொள்வதுமுண்டு.

ஓலே, மட்டை இவைகளைச் சுட்ட சாம்பலிலிருந்து ஓர்வித உப்பு எடுத்துக் குறைந்த அளவில் குன்மநோய்க்குக் கொடுக்கலாம்.

மட்டைச்சாறு நேத்திரநோயை அகற்றும்.

மட்டையினின்றும் ஓர்வகைத்தும்பு (நார்) எடுத்து துடைப்பம் (Broom) செய்கிறார்கள்.

இளங்குருத்தைத் தின்னலாம். ஆனால் மூலம், பேதி முதலியவைகளுண்டாகும்.

இம்மரம் பீமனுக்கு ஒப்பாகவும், பீமனை இரசத்துக்கு ஒப்பாகவும் கூறப்பட்டதனால், இதன் குருத்துச் சாற்றினால் இரசம் பற்பமாகும்.

பூவைப் பதப்படுத்தி அதன் முனையைச்சீவி, வாய்வழியாய் வடியும் நீரைக் குடுவைகளில் தங்கும்படிச்செய்து எடுப்பார்கள். இதற்குக் கள் என்று பெயர். கொஞ்சம் சுண்ணாம்பு குடுவையில் தடவினால் மது புளிக்காது. இதற்குப் பதனீர் அல்லது மது என்று கூறுவார்கள். புளிக்காத கள் அல்லது மதுவை அதிகாலையில் 40 நாள் இடைவிடாது சாப்பிட்டுவர மேகரோகம் சாந்தியாகும்.

> " இரேவதிவரன்மாலைமந்திரம்
> இகுத்திடுமேகவனலங்குப்பையெல்லாம்." (தே.க.)

பனைமதுவினின்றும் வெல்லம், கற்கண்டு, சருக்கரை முதலியவை செய்து வருகிறார்கள்.

இக்கள்ளினால் பாஷாணங்கள் சுத்தியாகும்.

பூவைச் சுட்ட சாம்பல் துர்மாமிசத்தைப் போக்கும். மலக்கட்டு தோடம் நீங்கும்.

இதன் காய் முதிராததற்கு முன் வெட்டி உள்ளிருக்கும் நுங்கையும் நீரையும் சாப்பிட தாகசாந்தியாகும். குளிர்ச்சியைத்தரும். வேனிற்காலத்துக்கு மிகவும் ஏற்றது.

காய் முதிர்ந்தால், கொட்டை கனத்து கடினமாகி மேல்சதை பழுத்து அதிக சுவையுடனிருக்கும். இப்பழம் மிகு மந்தத்தை உண்டுபண்ணும். ஏழை ஜனங்கள் இப்பழத்தைச் சுட்டோ, வேகவைத்தோ தின்பார்கள்.

இதன் கிழங்கு மிகு தீபனசக்தி வாய்ந்தது.

கிழங்கை உலர்த்தி இடித்து மாவாக்கி அத்துடன் தேங்காய்பால் உப்பு முதலியவை சேர்த்துப் பிட்டவியல் செய்து தினமும் உண்டுவர தேகவன்மையைத்தரும்.

கிழங்கை வேகவைத்துத் தோல், உள்முளை முதலியன நீக்கித் துண்டு துண்டாக வெட்டி நன்றாகக் காயவைத்து உலர்த்தி எடுத்து, இடித்து மாவாக்கிப் பலகாரங்கள் செய்து சாப்பிடத் தாது புஷ்டியை உண்டாக்கும். தேகவன்மையையுந் தரும்.

---

## பன்னீர்ப்பூ—Pannir-Pu.

**வே - பெ.—குலாப்பூ, ரோஜாப்பூ, சிற்றுமரை.**

Rosa Gallica.

Eng. { The Rose flower, or<br>The Persian Rose.

| | | |
|---|---|---|
| Tel. | Roja Puvvu రోజా పువ్వు.<br>Gulabi puvvu గులాబి పువ్వు | Kan. Gulabipuvu ಗುಲಾಬಿ ಹೂವು. |
| Mal. | Pannirpuva പനീർ പൂവ. | Hind. Gulabkephul * گلاب کے پھول |

இது முட்கள் நிறைந்த ஓர்வகைக் குத்துச்செடி. பூக்களின் நிறவேற்றுமைகளினால் இச்செடியில் பலவகை சாதிகளுண்டு. வெள்ளை, இளஞ்சிவப்பு, நற்சிவப்பு, மஞ்சள், பச்சை, கலப்புநிறம் போன்ற பூக்களைப் புடபிக்கும் செடிகளை நாம் பல இடங்களிலும் பார்க்கின்றோம். இவ்வகை ரோசா காடுகளில் சுயேச்சையாக வளருகின்றது. இச்செடி இந்தியாவில் எங்கும் பயிரிடப்படுகின்றது. காட்டுரோஜா என்றொரு சாதியுண்டு. இதன் பூ, பார்வைக்கு மிக அழகாகச் சிவந்த வருணத்துடன் காணப்பட்ட போதிலும், நறுமணமுடையதல்ல.

**ப - உ.**—பூ.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- குளிர்ச்சியுண்டாக்கி . சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனால் மலபந்தம், சுரம், தாகம், ஒக்காளம், ஆசன எரிச்சல், இரத்தப்பிரமேகம், வயிற்றிசிவு இவைபோம்.

சிற்று மரைப்பூவால் சேர்ந்தமலக் கட்டுவிடும்
உற்றவெப்பு தாகம்அதி ஒக்காளஞ்—சற்றும்விடா
மூல எரிவுரத்த மூத்திரம் வயிற்றிசிவும்
ஞாலம்விடுத் தேகும் நவில். (அ.கு.)

**பன்னீர்.**

இதனால் சுகசந்நி, சந்நிபாதம் விலகும், தனியே குடித்தால் ஆயாசமும், மனச்சங்கடமும், திரிதோடமும் நீங்கும்.

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாராய் சுகசந்நிக்
கிந்நீர்உண் ஏகும் இளைப்புமறுஞ்—சந்நிகளும்
வாதபித்த ஐயமொடு மானே! வியாகுலமும்
பூதலம்விட் டேகும் புகல். (அ.கு.)

**வ - கு.**—பூவிதழ்களைக்கொண்டு பன்னீர், வெந்நீர் ஊறல் கஷாயம், மணப்பாகு, குல்கந்து, அத்தர் முதலியவைகள் செய்து உபயோகிக்கலாம்.

**பன்னீர்.**—பூவிதழ்கள் 6 சேர், நீர் 3 படி, வாலையிலிட்டுக் காய்ச்சிப் பன்னீர் இறக்கிக் கொள்ளவும். இதைச் சந்தனங்களோடு வாசனைக்காகவும், களிம்பு, கிலேதம் (Lotion) முதலியவைகள் உறவாகவும் சேர்த்துக்கொள்ளலாம்.

சிவப்புப் பூவிதழ்கள் 2 வராகனெடை, வெந்நீர் 10 பலம் சேர்த்து அரைமணி நேரம் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவும். இக் கஷாயத்துடன் உப்பு, பேதி மருந்துகளையும், கசப்பு மருந்துகளையும் சேர்த்துக் கொடுக்க வெகுட்டலிராது. சுரம், தாகம், ஒக்காளம் இவை நீங்கும்.

உலர்ந்த பூவிதழ்கள் 13½ தோலா எடை, 40 பலம் வெந்நீரிலிட்டு 12 மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, அதில் 2¼ சேர் சருக்கரை சேர்த்துக் காய்ச்சிப் பதத்திலிறக்கி வடிகட்டிக்கொண்டு, 1½ பலம் பன்னீர் சேர்த்துக் கொள்ளவும். இதை மலபந்தம், உஷ்ணம் இவைகளுக்கு ½ முதல் ¾ பலம் வீதம் நீரில் கலந்துக் கொடுக்கலாம். இரத்தப்பிரமேகம், வயிற்றுவலி இவை நீங்கும்.

சிவப்புப்பூவின் பச்சை இதழ்கள் 20 பலம், கற்கண்டுத்தூள் 60 பலம், புஷ்பத்தைக் கல்லுரலிலிட்டு இடித்து, கற்கண்டு அல்லது சருக்கரை சேர்த்துக் கொள்ளவும். இது மிகவும் மாதுரியமானது. மலத்தை இளக்கித்தள்ளும். ஆசன எரிச்சலை நீக்கும்.

பன்னீர் 7 பலம், மீன் கொழுப்பு 1½ பலம், வாதுமை எண்ணெய் 9 பலம், ரோசாப்பூ எண்ணெய் 10 துளி இவைகளைச் செவ்வையாய்க் கலந்து வைத்துக்கொண்டு, விரணங்களை ஆற்ற மேலுக்கு வழங்கலாம். நறுமணமாயிருக்கும்.

பூக்களிலிருந்து ஓர்வகை நறுமணம் பொருந்திய எண்ணெய் எடுப்பதுண்டு. இதற்கு அத்தர் எனப் பெயர்.

---

## பாகல்—Pákal.

**வே - பெ.—காரவல்லி, கூரம், கூலம்,**

Momordica Charantia.

Eng.—Bitter gourd.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kákara కాకర. | Sans. | Karavalli कारवल्ली |
| Mal. | Pàval പാവൽ. | Hind. | Keréla * کریلا |
| Kan. | Hagala ಹಾಗಲ. | | |

இது, கொடி வகையைச் சேர்ந்தது, இந்தியாவில் எல்லாப் பாகங்களிலும் பயிராகும். இதில் கீழ்க்கண்டவாறு அநேக சாதிகளுண்டு.

| | |
|---|---|
| பழுப்பாகல் அல்லது காட்டுப்பாகல். | M. Dioica. |
| கொம்புப்பாகல். | A variety. |
| கொல்லம்பாகல் அல்லது வேலிப்பாகல். | Bryonia Garcini. |
| நரிப்பாகல். | A variety. |
| நாய்ப்பாகல். | Bryonia Maysorensis. |
| நிலப்பாகல். | M. Humilis. |
| மிதிப்பாகல். | M. Muricata. |

இவற்றுள் பழுப்பாகலின் குணத்தைக் காட்டுப்பாகலின் கீழ்க்காண்க.

கொல்லம்பாகல் இது - பாகலில் பெரிய இனம்; நீண்டு பருமனுகவிருக்கும்.

கொல்லம்பாகல் அல்லது வேலிப்பாகல், நரிப்பாகல், நாய்ப்பாகல், இம்மூன்றும், குத்துக்காடுகளிலும், வேலி யோரங்களிலும் படர்ந்து வளரும். இவைகளின் காய் மிகச்சிறியதாகவும் மிகக் கைப்புள்ளதாகவு மிருப்பதுமன்றி மற்றைய பாகல், இனங்களைப்போல அதிகமாக வழங்குவதில்லை.

நிலப்பாகல், மிதிப்பாகல் இவ்விரண்டும் அதிகப்பருமனும், அதிகச் சிறிதுமின்றி, நடுத்தரமாய் தரையில் படர்ந்து வளரும். காய்கள் ஏராளமாய்க் காய்க்கும். இவைகளைச் சமையல் செய்து உண்பது இந்தியர்களின் வழக்கம். இங்கு, மேற்கூறிய பாகல் இனங்கள், எல்லாவற்றின் குணங்களையும் பொதுவாகக் கூறப்படும்.

ப - உ.—இலை, பழம், விதை.

சுவை.—கைப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை.

இலை.

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.

பழம்.

உரமாக்கி - பலகாரி - Tonic.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
பித்தசமனி - பித்தசாந்தநி - Antibilious.
மலமிளக்கி - மலகாரி - Laxative.
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

விதை.

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

இலை.

**பொது குணம்.**—இதற்குக் கிருமிரோகமும், திரிதோடக் கோபமும் நீங்கும். விரேசனமுண்டாகும். இதனால் பாதரச வேகம் முறியும்.

பிறியாக் கிருமியறும் பேதியுண்டாந் தோடம்
முறியும் இரதம் முறியுங்—குறியாத
மாகற் புடைய மடமயிலே! எப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து. (அ.கு.)

பழம்.

வெம்பிவிழாத பாகற் பழத்தினால் சுரம், பிரமேகம், இருமல், இரைப்பு, மூலம், முத்தோடம், குட்டம், மலக்கிருமி இவை நீங்கும்.

சுரமேகங் காசஞ்சு வாசமொடு மூலந்
திரிதோடங் குட்டம்இவை தீருங்—கிருமியறும்
மோகப் புணரியெனு மொய்குழலே! வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார். (அ.கு.)

**கொம்புப்பாகல்காய்.**

அபத்திய பதார்த்தமாகிய கொம்புப் பாகற்காய் நல்ல மருந்துகளை முறிப்பதுமன்றி, வாத, பித்தகோபங்களையும் உண்டாக்கும்.

மருந்துகளின் நற்குணத்தை மாற்றும் அஃதொன்றோ
திருந்தவலி வாதத்தைச் சேர்க்கும்—பொருந்துபித்தங்
கூட்டும் அவபத்தியத்தைக் கொண்டிருக்கும் வன்கரப்பான்
காட்டுங் கொம்புப்பாகற் காய். (அ.கு.)

**நாய்ப்பாகல்.**

இது பீநசத்தை நீக்கும். சாதிலிங்கத்தையும் பாடாணத்தையும் சுத்தி செய்யும்.

நாய்ப்பாக லின்குணத்தை நன்று யுரைக்கக்கேள்
வாய்ப்பான பீநசத்தை மாற்றுங்காண்—மாய்ப்பாக
லிங்கமதைச் சுத்திசெய்யும் நேரிற்பா டாணத்தைப்
பங்கமறச் சுத்திசெய்யும் பார். (அ.கு.)

இதனால், பித்தவாத கோபங்கள், கரப்பான் இவைகள் உண்டாகும். பாதரசம், அரிதாரம், பாடாணம் முதலியவைகளின் வேகங்களை முறிக்கும். இது கேரளதேசத்துப் பத்தியக்கறி.

பித்தமொடு வாதப் பெருக்கைமிக உண்டாக்குந்
தத்துகரப் பானைத் தருவிக்கும்—பற்றிரத
தாரபா டாணந் தமைமுறிக்குந் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய். (அ.கு.)

**வ - கு.**—அரைக்கால் சேர் இலைச்சாற்றைப் பேதியாகக் கொடுக்கலாம். இதனால் வாந்தியும் உண்டாகும். பேதியும் வாந்தியும் அளவுக்கு மிஞ்சினால், அதை நிறுத்த நெய்யும் சாதமும் சாப்பிடவும்.

மிளகை இலைஇரசத்துடன் சேர்த்தரைத்துக் கண்ணைச் சுற்றிப் பற்றிட, மாலைக்கண் நீங்கும்.

காந்தல் வாதத்துக்கு, இலைச்சாற்றை உள்ளங்காலில் பூச, எரிச்சல் குறையும்.

ஒரு தேக்கரண்டி இலைச்சாற்றுடன், சிறிது மஞ்சள்பொடி சேர்த்துச் சிறு குழந்தைகளுக்குப் புகட்ட, வாந்தியாகி, அரோசகம், ஓக்காளம் நீங்கும். வயிற்றிலுள்ள மாசுக்களை நீக்கி வயிற்றைச் சுத்தஞ் செய்யும்.

இதனிலைச்சாறு, ஆனைப்புளியிலைச்சாறு, பழுத்த வெற்றிலைச்சாறு, நாவற்பட்டைச்சாறு, இவைகளைச் சமனெடை சேர்த்து, அச்சாற்றில் சிறிது வசம்பு உரைத்துக் குழந்தைகளுக்கு 7-நாள் வரையிலும் கொடுக்க, மண்ணீரல், கல்லீரல் கட்டிகள் கரைந்து போகும்.

காயைச் சமையல் செய்து, அல்லது வற்றலாக்கி வறுத்து உண்பது நாட்டு வழக்கம்.

பழத்தை, வாதநோய், ஈரல் நோய்கள் இவைகளுக்கு ஔடத முறையாக உபயோகிக்கலாம். இதனால் இரத்தம் சுத்தியாகும்; களைப்பு, ஆயாசம் நீங்கும்.

இலை, பழம் இரண்டையும் சேர்த்துக் காமாலை, குட்டம், மூலம் முதலிய நோய்களுக்கு வழங்கலாம்.

பழத்தைப் பிழிந்து சாறெடுத்துச் சருக்கரை சேர்த்துப் புண்களுக்குப் பூசுவதுண்டு.

மேற்படிச் சாற்றைச் சருக்கரை கலந்து குடிக்க, சூதக வலி நீங்கும்.

சமூலத்துடன், கருவாப்பட்டை, திப்பிலி, அரிசி, நீரடிமுத்தெண்ணெய் சேர்த்தரைத்து, அழுகிய விரணங்கள், சிரங்குகள் முதலிய சரும நோய்களுக்குப் பூசலாம்.

சமூலத்தை உலர்த்திப் பொடித்து, குட்ட விரணங்களுக்கு மேலுக்குத் தூவலாம்.

---

## பாதம்பிசின்—Badam - Pisin.

### குறிப்பு.—வாதுமைப் பிசினல்ல.

Tragacantha.

இது பாரசீக தேசத்தில் வளரும் மரம். இதனின்றும் ஓர்வகைப்பிசின் எடுத்து இத்தேசத்துக்குக் கொண்டுவரப்படுகின்றது. இதற்குப் '**பாதம் பிசின்**' எனப் பெயர். இது வெண்மை அல்லது மஞ்சள் நிறமாக விருக்கும். அகலமாயும், தகடுகளாயும், வாசனையும் உருசியின்றியு மிருக்கும். **எளிதில்** பொடியாகாது.

ப - உ.—பிசின்.

சுவை —இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**—உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent..

**குணம்.**—இதற்கு இருமல், அசீரணபேதி இவை நிற்கும்.

**வ - கு.**—இது, சாதாரணமாய், நீரில் கரையாத மருந்துகளுடன் சேர்த்துக் குழந்தைகளுக்குக் கொடுக்க உபயோகமாகின்றது.

இப்பிசினில் கொஞ்சம் வாயில் போட்டு அடக்கி இரசத்தை விழுங்கிக் கொண்டிருக்கப் பொடி இருமல் தணியும்.

பிசின்தூள், கருவேலம்பிசின்தூள், கோதுமைச்சத்து வகைக்கு ஒரு வராகனெடை, சருக்கரை 3 வராகனெடை, நன்றாகக் கலந்து, வேளைக்கு அரை முதல் ஒரு வராகனெடை வீதம், தினம் இருவேளை, இருமல், அசீரண பேதி இவைகளுக்குக் கொடுக்கலாம்.

---

## பாதிரி—Páthiri.

**வே - பெ. கன்னி, பாடலிமரம், பாடலம், புன்காலி.**

Stereospermum Suaveolens.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kaligottu. | కలిగొట్టు. | Sans. | Patala. | पाटला |
| Mal. | Páthiri. | പാതിരി. | Hind. | Pader. | * پادر |
| Kan. | Padiri. | ಪಾದಿರಿ. | | | |

இது இந்தியாவில் சாதாரணமாய்க் கிடைக்கக் கூடிய மரம். வெப்பப் பிரதேசங்களில் அநேகமாய்ப் பயிராகிறதில்லை. இதன் பூவிற்கு “ **மதனகா மேஸ்வரப்பூ** “ என்றும் பெயர்.

ப - உ.—இலை, பூ, பட்டை, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

### பூ.

**குணம்.**—இதற்குத் தீச்சுரமும் மேகமும் நீங்கும். பெண் வசிய முண்டாகும்.

பித்த சுரந்தணியும் பெண்வசியம் உண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண்—மெத்தவுமே
மாதுரியம் நீங்கா வசன மடவனமே!
பாதிரியின் பூவையுண்டு பார். (அ.கு.)

### வேர்.

இதனால் மதுமூத்திரம், கரப்பான், உழலை, கண், காது, கை, கால் இவைகளைப் பற்றிய எரிச்சல், மேகப்பிடகம், பெருவிரணம், மூலரோகம், மேகச்சொறி, கபவாத தொந்தம், அக்கினி மாந்தம் இவை போகும்.

பாதிரியின் வேர்குணந்தான் பார்க்கில்மது மேகம்போம்
ஓதுகரப் பான்உழலை யோடிவிடும்—மாதேகேள் !
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவும்
நிண்ணயமாய்ப் போகும் நிசம்.

மேகத்தால் வந்த மிகுபிளவை மாவிரணம்
போகத்தால் வந்து பொருமூலம்—ஆகத்தில்
வந்தசொறி யோடுகப வாதமந்த மும்போகும்
கொந்தடரும் பாடலத்தாற் கூறு. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலைச்சாறுடன் பழச்சாறுங் கலந்து, தலையில் வைத்துப் பின் தலைமுழுகி வர பித்தத்தைத் தணித்துப் பைத்தியத்தை நீக்கும். மேற்கூறிய முறையை உள்ளுக்குக் குடிக்கக் கொடுக்கலாம். மேற்படி இலையைக் கஷாயமிட்டும் கொடுக்கலாம்.

பூவைக் கஷாயமிட்டு அல்லது கற்கமாக்கிச் சாப்பிட, மேகம்தணியும், சுரம் நீங்கும். இதனால் பெண் வசியமும் உண்டாகும்.

பூவின் இரசத்தில் தேன் கலந்து உட்கொள்ள விக்கல் நீங்கும்.

பட்டை ஒருபங்கு, நீர் பத்துப்பங்கு சேர்த்து ஒருமணி நேரம் ஊற வைத்து, $\frac{1}{8}$ முதல் $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் காலை, மாலை உட்கொள்ள, வயிற்று வலி, இருமல், சோபை முதலியன நீங்கும்.

வேரைக் கஷாயமிட்டாவது அல்லது உலர்த்திச் சூரணஞ்செய்தாவது உபயோகிக்க, குணத்தின் கீழ்க்கண்ட நோய்களை விலக்கும்.

---

## பார்லி—Barley.

### Hordeum Vulgare.

### Eng. Barley.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Barlí-biyam. | బార్లీబియ్యము. | Sans. | Yavam. | यवम्. |
| Mal. | Barley. | ബാർലി. | Hind. | Indarjau. | * اندر جو |
| Kan. | Jave-godhi. | ಜವೆಗೋಧಿ. | Duk. | Jowhn | * جوں |

இது, வட இந்தியாவில் பயிரிடப்பட்டு வருகின்ற தானியம். இதில் நாட்டுப் பார்லி, சீமைப்பார்லி என்று இருவகையுண்டு. நாட்டுப் பார்லி "**யவா**" என்று வழங்கும். சீமைப் பார்லி—இதை மேனாட்டார் ஏராளமாய்ப் பயிர் செய்து, அரிசியாக்கி இந்தியாவிற்கு இறக்குமதி செய்கிறார்கள். இந்த அரிசியானது முட்டை வடிவமாயும், வெண்மை நிறமாயும், மடிப்புள்ள தாயும், சிறிதாயும் இருக்கும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** . இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்திரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—உடலைத்தேற்றும், மூத்திரத்தைப் பெருக்கும். தாகத்தை அடக்கும். சீரணத்தை உண்டுபண்ணும்.

**வ - கு.**—2½ பலம் அரிசியை ஒரு படிதண்ணீரில் கொதிக்கவைத்து அரைப்படியாக வற்றவைத்து வடிகட்டித் தொண்டைப் புண், மூத்திர எரிச்சல், சுரநோயில் காணும் தாகம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இத்துடன் சிறிது சருக்கரை, பழ இரசம் சேர்ந்தால் நாவிற்கு இதமாயிருக்கும். பால் சேர்ப்பின், பழச்சாறு சேர்த்தல் கூடாது.

விதையுடன் கூடிய அத்திப்பழம் 2½பலம், அதிமதுரம் 4 வராகனெடை மேற்கூறியபடி செய்த அரிசிக் கஷாயம் ஒருபடி, இவற்றை அடுப்பேற்றி உழக்காக வற்றவைத்து வடிகட்டிக் கொடுக்க, மலமிளகும். தேக ஆரோக்கியம் உண்டாகும்.

தாய்ப்பாலற்ற குழந்தைகளுக்கு, பார்லி அரிசிக் கஷாயமும், பாலும் சமனெடை சேர்த்துக் கொடுக்கலாம். அளவுக்கு மிஞ்சிக் கொடுத்தல் ஆகாது.

அரிசியைக் கஞ்சி காய்ச்சி அருந்த, இருமலைச் சமனப்படுத்தி, மூத்திர தாரையின் எரிச்சலைத் தணிக்கும்.

---

## பாலை—Pálai.

**வே - பெ. சிவனி, சிவந்தி.**

பாலை என்னும் பெயரின் சார்பில் அநேக விதங்கள் உண்டு. அவை: கொடிவகையில்—ஊசிப்பாலை; மரவகையில்—ஏழிலைப்பாலை, குடசப்பாலை—(குளப்பாலை), தீம்பாலை, மலைப்பாலை, வெட்பாலை முதலியன. இவற்றுள் ஏழிலைப்பாலை, குடசப்பாலை (குளப்பாலை), இவை முன்னமே எழுதப்பட்டுள்ளன. அவை நீங்கலாக மற்றவற்றுள் ஊசிப்பாலை, தீம்பாலை, மலைப்பாலை, வெட்பாலை முதலியன இங்கு எழுதப்படும்.

---

## ஊசிப்பாலை—Úsip-pālai.

**Periploca esculenta.**

இது ஒரு கொடிவருக்கம்.

**ப - உ.**—இலை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதனால் பிரமேகமும் ஆண்குறியினது துவார வெப்பமும் நீங்கும்; கண்குளிர்ச்சியும், தேக புஷ்டியும் உண்டாகும்.

மேக மகலும் விழிகுளிரும் நாளத்தின்
வேக மகலுமங்க மேனியிடும்—மோகமணை
வாசிப்பா லைப்பருவ மாந்தரைவீக் குங்கொடியே!
ஊசிப்பா லைப்பன்ன முண். (அ.கு.)

**வ - கு.**—இதன் கீரையைச் சமைத்துண்டாலும், குடிநீர் செய்து உட்கொண்டாலும் மேற்கண்ட நோய்களைத் தணிக்கும்.

## தீம்பாலை—Thímpálai.

**வே. பெ.—தூறுவாதி.**

இது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய மரம்.

**ப - உ.**—பழம், பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி . சீதளகாரி - Refrigerant
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**மரம்.**

**குணம்.**—மேகவெட்டை, சந்நி, விஷம், கண்ணோய், தாகம், திரிதோடம், வாந்தி, பித்தகோபம், நீரேற்றம் இரத்தக்கிராணி இவை நீங்கும்.

மேகவெட்டை சந்நி விடபாகம் நேத்திரநோய்
தாகம்முத்தோ டஞ்சர்த்தி சாரணலம்—வேகமோ
டேறுசலம் பீநசமி ரத்தமுந்தீம் பாலையெனுந்
தூறுவா திக்ககலுஞ் சொல். (அ.கு.)

**பழம்.**

இதனால், கருங்கரப்பான், கபதோடம், வெப்பக்கிரந்தி இவைபோம். மிகு பசியுண்டாகும்.

வாத கரப்பனறும் வல்லசி லேஷ்மமும்போம்
வேதுகி ரந்தியுஞ்சாம் மென்பசியாம்—ஓதுமதன்
கோலைப் பழித்தவிழிக் கோதாய் ! இனிமையுள்ள
பாலைப் பழத்தாணீ பார். (அ.கு.)

**வ - கு.**—பட்டையைக் கஷாயமிட்டு வேளைக்கு ¼ ஆழாக்கு வீதம், சாப்பிட்டுவர மேற்கூறிய பிணிகள் விலகும்.

பழத்தைச்சாப்பிட, வெப்பந்தணியும், பசியை யுண்டாக்கும்,

இதனைத் தேனூறல் செய்தும் வழங்கலாம்.

---

## மலைப்பாலை—Malaip-pálai.

**வே - பெ.—வரைப்பாலை.**

இது மலைகளிலும் காடுகளிலும் வளர்ந்துவருகிற மரம். இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடியது.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—இதற்கு விக்கல், ஐவகை வலி, வாந்தி, வயிற்றுவலி, விலாக்குத்தல், கருங்கரப்பான், மந்தாக்கினி இவை நீங்கும்.

விக்கல்வலி வாந்திகுன்ம மீறுபக்கச் சூலையொடு
மைக்கரப்பான் மந்தமிவை மாறுங்காண்—மைக்கண்
நிரைப்பாலை யொத்தமொழி நேரிழையே ! கேளாய்
வரைப்பாலை யையுண்ட வர்க்கு (அ.கு.)

**வ - கு.**—பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுக்க மேற்கூறிய நோய்களைப் போக்கும்.

---

## வெட்பாலை—Vetpalai.

### Wrightia Tinctoria.

### Eng : Sweet Indrajo.

Tel. { Ankudu అంకుడు. / Kodisha కొడిశ.

Mal. Mathurappála. മധുരപ്പാല.

Kan. Kutaja ಕುಟಜ

Sans. Hyamaraka. ह्यमारकः.

Hind. Mithá Indrajao * میٹھا اندر جو

இது இந்தியாவில் சாதாரணமாய்க் கிடைக்கக் கூடியது. இதில் **கசப்பு**, **இனிப்பு** என இருவகையுண்டு. **கசப்பு வெட்பாலைக்குக் குடசப்பாலை** என்றும், **இனிப்பு வெட்பாலைக்கு "வெட்பாலை"** என்றும் பெயர். விபரத்துக்குக் குடசப்பாலையின் கீழ்ப் பார்க்க.

**ப - உ.**—விதை—பட்டை.

**சுவை,**—இனிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**விதை, பட்டை.**

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
பசித்தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - Stomachic.

**விதை.**

**குணம்.**—இதனால் பித்தவாத தொந்தம், கடுவன், குடல் விருத்திநோய், வயிற்றுப் பொருமல் இவைபோகும். அன்றியும் பேதி, சீதபேதி இவை கட்கும் இது உபயோகமாகும்.

வெட்பாலை தன்னரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத—முப்பிசத்தைக்
காணுமை லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணார் முலையாய்! புகல். (அ.கு.)

**மரம்.**

அக்கினிக் குணத்தையுடைய வெட்பாலை மரமானது, வாத வலியையும் திரிதோட கோபத்தையும் நீக்கும்.

அக்கினிய வைத்திருக்கு மார்ந்தவா தம்போக்குந்
திக்குள்திரி தோடத்தைத் தீர்த்துவிடுஞ்—சொக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே!
வெட்பாலை நன்மருந்தாம் விள். தே.கு.)

**வ - கு.**—இலையை வாயிலிட்டு மெல்ல, பல்வலி நீங்கும்.

இலையை அல்லது பட்டையை முறைப்படி கஷாயமிட்டுக் கொடுக்க, மேற்கண்ட குணங்களைத்தரும்.

## பால் மரம்—Pâl-Maram.

**Eng.—Milk tree.**

பால்தருகின்ற மரங்களில் இருவகையுண்டு. நாம் பருகத்தக்க நற்குணமமைந்த பாலுள்ளது ஒன்று, பருகத்தகாத துர்க்குணமமைந்த பாலுள்ளது மற்ருென்று. பருகத்தகுந்த பால்மரமென்னும் அமுத விருக்ஷம் இந்தியாவில் இருக்கிறதாகக் காணப்படவில்லை. ஆனால், தென் அமெரிக்காவிலுள்ள ஒரு குன்றின் சார்பில் பால்மரம் ஒன்றுளது என்று தாமஸ்-கெரன்ஸ் (Thomas Kerns) தமது, அர்கானு ஆப் நேச்சர் (Arcana of Nature) என்னும் புத்தகத்தில் வரைந்துள்ளார். இம்மரம் வளருகின்ற இடத்தில் மழை பெய்கிறது மிகவும் அபூர்வமாம். இம்மரத்தின் கிளைகள் எப்பொழுதும் வாடிவதங்கி, உலர்ந்திருக்கும். வேர்கள் பருமனுக பாறைகளினூடே சென்றிருக்கும். ஆனால் அம்மரம் நாளுக்குநாள் மிகவும் செழித்து ஓங்கி வளர்ந்துகொண்டே இருக்கும். இம் மரத்தின் அடிப்பாகத்தைக் கீறினால், அதனின்றும் நாவிற்கு இதமான நற்சுவையுள்ள பால் வடியும். சூரியோதய காலத்தில் ஏராளமாக இப்பால் கிடைக்கும். இப்பாலைப் பருகவென்று அக்கம் பக்கத்தார் தினமும் காலையில் அம் மரத்தினடிக்குச் செல்வார்கள். இம்மரத்தின் பெயர் பசுமரம் என்றும் கூறுவதுண்டு.

தென்னிந்தியாவில் கொல்லி மலைச்சாரலில் "கனக எருமை விருட்சம்" என்று ஓர் மரமிருக்கின்றது. இம்மரம் மிகவும் அபூர்வமானது. புளிய மரத்தையொத்து, வக்கணத்தி இலையைப்போன்ற இலைகளையுடையதாக விருக்கும். பூவின் அடிப்புறம் சிவப்பாயும், மேற்புறம் வெண்மையாயும், உட்புறம் சிறுசிவப்பாயும், காட்டரளிப் பூப்போன்றிருக்கும். இதன் பால் மிகக்காரமானது. தில்லம் பாலைக்காட்டினும் கொடியது. இப்பால் பட்ட இடம் புண்ணாகும். இம்மரத்தினின்றும் பால் எடுக்கும் விதம் அதிசயமானது. மரத்தின் அருகில் நின்று கன்றைப்போல் கனைத்துப் பின் மரத்தைக் கொத்தி ஒரு கிண்ணத்தை அடியில் வைத்தால் பால் அக் கிண்ணத்திற் வடியும் என்கிருர்கள். எருமைக் கன்றுபோல் கனைத்துப் பால் எடுப்பதால் இதற்கு "கனக எருமை மரம்" எனப் பெயர் இடப் பெற்றதாம்.

இதன் பாலினால் 64 வகைப் பாடாணங்களும் சுத்தமாகும். மேலும் மெழுகு, நீற்றினம் முதலியவைகள் செய்யலாம் என்று சித்தர் நூல்களில் காணலாம்.

---

## பால் வள்ளி—Pâl Valli.

**Ichnocarpus Frutescens.**

**Eng.—Black creeper.**

| | | |
|---|---|---|
| **Tel.** | **Nalatiga.** | నల్ల తీగ. |
| **Mâl.** | **Pâlvalli.** | പാൽവള്ളി. |
| **Kan.** | **Gowriballi.** | ಗೌರಿಬಳ್ಳಿ. |
| **Hind.** | **Dudhilata.** | * دودھی لتا |

இது கொடியினம். இந்தியா முழுவதும் வளரும்.

**ப - உ.**—சமூலம், கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

**குணமும் வழக்கும்** - நன்னூரிக் குடையதேயாகும்.

## பாவட்டை.—Pâvattai.

வே. - பெ. - பற்பணம்.

Pavetta indica.

Tel. Paputta - vargras. పపుట్టు. Nooni - papoota. నూనిప పుట్టు.

Mal. Malliamôtha. മല്ലിയമോത്.

Kan. Pavate. ಪಾವಟೆ.

Sans. Pappana. पप्पण:.

Hind. Kankra. ککرا

இது குத்துச் செடி வகுப்பைச் சேர்ந்தது. இந்தியா முழுவதும் கிடைக்கும்.

**ப - உ.**—இலை, காய், வேர்.
**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { மலமிளக்கி - மலகாரி- Laxative. உரமாக்கி - பலகாரி · Tonic.

### இலை.

**குணம்.**—இதனல் கபவாதம், வாதகபம், ஆயாசம், தாபசுரம், திரிதோடம் இவை நீங்கும்—பசி உண்டாகும்.

சீதவா தங்களறுந் தீபனமோ உண்டாகும்
வாதங் கபம்ஒழியும் வார்குழலே—போதவே
ஆவட்டைத் தாகசுரம் அற்றுவிடுந் தோடம்போம்
பாவட்டைப் பத்திரிக்குப் பார். (அ.கு.)

### காய்.

இதனல் வாத சுரம், அரோசகம், சீதக்கடுப்பு; பித்தாதிசாரம், சிலேத்தும தோடம் இவை நீங்கும்.

வாத சுரம்தணியும் வாய்அருசி ஏகிவிடுஞ்
சீதக் கடுப்பகலுந் தேமொழியே !—வாதுபுரி
பித்தஅதி சாரமொடு பேராக் கபமுமறும்
உற்றபா வட்டங்காய்க் கு (அ.கு.)

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டுக் கொடுக்க குணத்தின் கீழ்க்கண்ட நோய்கள் போகும்.

இலையை வதக்கி வைத்துக் கட்ட மூலத்தினுலுண்டாகும் வேதனை தணியும்.

காயை வற்றலிட்டுக் கறியாக உபயோகித்தாலும், அல்லது காயைச் சமைத்துண்டாலும், காயின் கீழ்க்குறிப்பிட்ட நோய்கள் விலகும்.

வேரைக் கஷாயமிட்டு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் தினமிருவேளை கொடுக்க, ஈரல் நோய்கள், வாதசுரம், அரோசகம் சாந்தமாகும். இத்துடன் சிறிது சுக்குச்சேர்த்துச் சோகை நோய்க்குக் கொடுக்க நீரை இறக்கும்.

வேர்ச் சூரணத்தை ஒரு வராகனெடை எடுத்துச் சிறிது சுக்குச்சேர்த்துக் கஷாயமிட்டுச் சருக்கரை கலந்து சிறு குழந்தைகளுக்குப் புகட்ட வலப்பாட்டீரல், இடப்பாட்டீரல் வீக்கம், நீங்கும்.

வேர்ச்சூரணம், சுக்குத்தூள் இவ்விரண்டையும் சமனெடை சேர்த்துக் கழுநீரில் கலக்கி, மகோதர ரோகிகளுக்குக் கொடுக்க, நீரை வற்றச் செய்யும்.

## பிசின்பட்டை—Pisin-pattai.

**வே - பெ.—மயிலாலக்கடி, டீக்காமல்லி.**

Tetranthra Roxburghii.

Tel. Nara mamidi నరమామిడి. | Hind. Maidá lakri * میدہ لکڑی
Mal. Pisin patta പിസിൻ പട്ട്.

இது இந்தியா முழுவதும் வளருகின்ற ஓர் சிறிய மரம். எப்பொழுதும் பச்சையாகவே இருக்கும். பட்டை ஏகதேசம் ஒரு அங்குல கனமுடையது.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுதுவர்ப்பி - லகுஸங்கோசனகாரி - Mild-astringent.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- துயரடக்கி - வேதநாசாந்தநி - Anodyne.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—இது மாமிசத்தையும், உதிரத்தையும் பற்றியிருக்கின்ற ஆவிருத வாதத்தையும், தேக வெப்பத்தையும் போக்கும்.

தசையிலுஞ் சோரி தனிலும் பரந்தே
வசிபோற்குத் திக்குடையும் வாய்வை—நிசமாகக்
கொல்லும் உடம்பின் கொதிப்பை ஒருநொடியில்
வெல்லும் பிசின்பட்டை விள்.

(அ.கு.)

**வ - கு.**—பட்டையை பச்சையாகவோ அல்லது உலர்ந்ததாகவோ எடுத்து பால் அல்லது வெந்நீர் விட்டரைத்துக் கலக்கி, அடிபட்டு நொந்த வீக்கங்களுக்குத் தாரையிடலாம். இதையே துணியில் தோய்த்துக் காயங்களுக்கு வைத்துக் கட்ட, சீக்கிரத்தில் ஆறும்.

பட்டையை அரைத்து விடகடிகளுக்கு மேலுக்குப் பற்றிட வேதனை நீங்கி விடத்தையும் மாற்றும்.

பாலில் கலக்கி அதிசாரம், சீதபேதி முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

தாதுவிருத்தியாகவும் பயன்பெறும்.

---

## பிடங்குநாறி—Pidangu-nári.

**வே - பெ.—கிருஷ்ணபாலே, புறங்கைநாறி.**

இம்மரம் 'புறங்கைநாறி' என்று பெயர். இப்பெயர் மருவிப் பிடங்குநாறி என்றுயிற்று. தென்னிந்தியாவில் அதிகமாய் வளருகின்றது.

**ப - உ.**—இலே.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—இதனுல் செரியா மந்தமும், ஆரம்ப நீர்க்கோவையும் போகும். சடாக்கினியும், புத்திக்குத் தெளிவும் உண்டாகும்.

பிடங்குநா றிப்பன்னப் பேச்சை யெடுக்கில்
அடங்கு மலசமஂ தன்றித்— தொடங்குகின்ற
நீர்ச்சுரப்பும் வாங்கிவிடும் நீடுசட ராக்கினியாந்
தேர்ச்சியுறும் புத்திக்குத் தேர். (அ.கு.)

வ - கு.—இதன் இலையைக் குடிநீரிட்டுக் கொடுக்கப் பசியுண்டாகும் ; மந்தம் நீங்கும்.

இதன் இலை 2, 3, கடுக்காய்த் தோல் ½ தோலா, கறிமஞ்சள் ¼ தோலா சேர்த்துக் குடிநீரிட்டு வழங்கக் கல்லீரல், மண்ணீரல் வீக்கம் கரையும். நீர்க் கோவை போம்.

---

## பிரண்டை—Pirandai.

**வே - பெ.—வச்சிரவல்லி.**

**Vitis Quadrangularis.**

Tel. Nalleru నల్లేరు.
Mal. Peranda പെരണ്ട.
Kan. Vajraballee ವಜ್ರಬಳ್ಳಿ.
Hind. Harshankar *هرشنكر
Sans. Asthisamhári अस्थिसंहारी.

இது இந்தியா, இலங்கை முதலிய இடங்களின் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாய் உண்டாகிற கொடியினம். இதில் **ஓலைப்பிரண்டை, உருட்டைப் பிரண்டை, முப்பிரண்டை, சதுரப்பிரண்டை, களிப்பிரண்டை, தீம்பிரண்டை, புளிப்பிரண்டை** என சில பிரிவுகளுண்டு. முப்பிரண்டை கிடைப்பதரிது.

**ப - உ.**—தண்டு, வேர்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**குணம்.**—இதனால் ஆசனத்தினவு, இரத்தமூலம் ஒழியும். மேலும் அக்கினிமந்தம், குன்மம், வாதாதிசாரம், முளைமூலம், கபதோடம், இரத்தபேதி, கால்அசதி நிவர்த்தியாகும். பசி உண்டாகும்.

பிரண்டையைநெய் யால்வறுத்துப் பின்பரைத்து மாதே !
வெருண்டிடா தேற்று விழுங்கில்—அரண்டுவரும்
மூலத் தினவடங்கும் மூலவி ரத்தமறும்
ஞாலத்தி னுள்ளே நவில்.

மாந்தம் வயிற்றுவலி வாயுஅதி சாரமுளை
சேர்ந்தமூ லங்கபம்உட் செம்புனற்போக்—கோய்ந்தநடை
யெல்லா மகலும் எழும்பும் அதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா. (அ.கு.)

**களிப்பிரண்டை.**

இதனால் கபவிருத்தி, பித்ததோடம், கரப்பான், காணக்கடிவிடம், சிலந்திவிடம் இவை நீங்கும். வீரிய விருத்தி உண்டாகும்.

ஐயமறும் பித்தம் அணுகாம லோடிவிடுந்
தையலார் போகமிகச் சாருங்காண்—பையக்
கரப்பான் விலகுங் கடிசிலந்தி யும்போம்
உரப்பாங்க ளிப்பிரண்டை யுண். (அ.கு.)

**தீம்பிரண்டை, புளிப்பிரண்டை..**

**தித்திப்புப் பிரண்டையால்** செரியாமந்தம், சீதபேதி, அதி கொட்டாவி சுவாசவிக்கல், கபவிருத்தி, வாதகோபம் இவை போகும். **புளிப்பிரண்டை** யால் சரீரவெளுப்பு, மார்புநோய், வயிற்றுவலி, கயம் இவைகள் விலகும்.

தீம்பிரண்டை தன்னுற் செரியாமந் தம்ஆமந்
தேம்பிரைப்பு விக்கல்ஐயந் திண்வாதம்—போம்பலரும்
பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுரநோய் குன்மகயம்
போக்குமது சூடாம் புகல். (அ.கு.)

**வ - கு.**—இதன் இளந்தண்டை நெய்விட்டு வதக்கி, அரைத்துத் துவையல் செய்து தின்பது நாட்டுவழக்கு. இதனுல் அருசி, வயிற்றுப் பொருமல் முதலியன போம். தீபனம் உண்டாகும்.

பிரண்டையை நெய்விட்டு வறுத்து அரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் 8 நாள், காலே, மாலே சாப்பிட்டுவர, ஆசனத்தினவும் இரத்தமூலமும் ஒழியும்.

இளந்தண்டை இலேயுடன் உலர்த்திச் சூரணித்துச் சுக்குத்தூள், மிளகுத் தூள் சிறிது சேர்த்துச் சாப்பிட வயிற்றுநோய், அசீரணம் நீங்கும். இதையே பாலில் கலந்துச் சிறிது கற்கண்டு சேர்த்து அருந்த உடலேத்தேற்றி, வன்மையைக் கொடுக்கும்.

பிரண்டையைச் சிறு தீயிலிட்டு வதக்கிச் சாறுபிழிந்து காதில் இரண்டொருதுளிவிட, காதுச்சீழ் மாறும். மூக்கில்விட இரத்தபீநசம் மாறும். இச்சாற்றைத் தகுந்த அளவில் கொடுக்க, சூதகத்தைக் கிரமப்படுத்தும்.

சிறு துண்டுப் பிரண்டையை சுண்ணும்புநீரில் ஊறவைத்துப் பத்திரப் படுத்தி, வேளேக்கு ஒன்றிரண்டு சாப்பிட, பசியைத் தூண்டும்.

வேரை உலர்த்திச் சூரணித்து $\frac{1}{2}$ வராகனெடை வீதம் கொடுத்துவர முறிந்த எலும்புகள் சீக்கிரம் கூடும். இச்சூரணத்தை வெந்நீரில் குழைத்து மேலுக்குப் பற்றிடலாம்.

---

## பிரப்பங்கிழங்கு—Pirappan-kizhangu.

**வே - பெ.—வேத்திரத்தாள், சூரல்கிழங்கு, சாதிக்கிழங்கு.**

இது பிரம்புக் கொடியின் கிழங்கு.

**ப – உ.**—கிழங்கு.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
வாதமடக்கி - வாதநாசநி - Anti-vatha.

**குணம்.**—இதனுல் தந்த மூலரோகம், வாதகோபம், கீல்ப்பிடிப்பு, பதோடம் இவை நீங்கும்.

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
யுந்துசூ லைப்பிடிப்பை யோட்டுங்காண்—வந்து
கரப்புந் திறப்புமெனக் காட்டுநகை மாதே!
பிரப்பங் கிழங்கதனைப் பேணு. (அ.கு.)

**வ - கு.**—இதன் கிழங்கைக் குடிநீர் செய்தேனும், சூரணஞ் செய்தேனும் தக்க அளவில் உபயோகித்துவர மேற்கண்ட நோய்கள் தீரும். பாரிசவாத நோய்க்கும் இது பலன்படும்.

---

## பிரமியவழுக்கை—Piramiya-Vazhukkai.

**வே - பெ.—பிரமி, சப்தளை, நீர்பிரமி, சாரசுதி, வாடிகம், திராயந்தி, வாக்குபவம், சருமம், விவிதம்.**

Gratiola Monieri.

Eng.—Thyme-leaved gratiola.

Tel. Sambaraun సంబరెణు.
Mal. Bimi ബീമി.
Kan. Bramhi ಬ್ರಹ್ಮೀ.
Sans. Manduga Brahmi मण्डूक ब्रह्मी
Hind. Barambhi * برہمی

இக் கொடிப்பூண்டு, நீர்க்கசிவுள்ள சதுப்பு நிலங்களில் வளரும். இந்தியா முழுவதும் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—இதற்குக் கீல்களின் கபம் விருத்தியடைவதால் பிறந்தவலி, வீக்கம், கால்பிடிப்பு, கைகால் எரிவு, வாதக்கடுப்பு, மலபந்தம், சோகை முதலியன போகும்.

கீலின் பசையாற் கிளைத்த வலிவீக்கங்
காலின் பிடிப்பொடுகை காலெரிவு—மேலிலெழு
வாதத்தா நோவு மலக்கட்டுஞ் சோபையும் போஞ்
சீதத்தாஞ் சப்தளைக்குச் சேர். (அ.கு.)

**வ - கு.**—இலைச்சாறு ½ தோலாவுடன் நெய் சேர்த்துக் கிருதஞ் செய்தாவது, மேற்படி சாற்றுடன் ஒரு வராகனெடை கோஷ்டத் தூள் சேர்த்தாவது பித்தக்கொதிப்பைக் குறைக்கக் கொடுக்கலாம்.

இலையை வெண்ணெயில் வதக்கிச் சாப்பிடத் தொண்டைக் கம்மல் நீங்கும்.

குலையைத் தண்டுடன் இடித்துச் சாறு பிழிந்து ஒரு மேசைக் கரண்டியளவு கொடுக்க எரிச்சலோடு கூடிய நீர்ச்சுருக்கு நீங்கும்.

இலையை நசுக்கி வேகவைத்து நெஞ்சில் பற்றிட, நெஞ்சில் கட்டிய கோழை வெளிப்படும்.

இலைச்சாற்றை ஒரு தேக்கரண்டியளவு கொடுக்க, சிறு குழந்தைகளுக் குண்டாகும் இருமல் தணியும்.

இலையை விளக்கெண்ணெய் விட்டு வதக்கி வீக்கங்களில் வைத்துக் கட்ட வீக்கந்தணியும்.

இவைகளன்றி பிரமிய மணப்பாகு, பிரமிக்கிருதம் முதலியவைகள் செய்து குணத்தின் கீழ்க்கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## பிராய்—Piráy.

**வே - பெ.—குட்டிப்பலா.**

இது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய சிறு மரம். இதன் இலை மிக வறட்சியுள்ளது.

**ப - உ.**—இலை, பால்.

**இலை.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பால்.**

இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இலை—சீதபேதி, இரத்தபேதிகளையும் ; பால்—பாத வெடிப்புகளையும் போக்கும்.

**வ - கு.**—இதன் இலையின் நரம்புகளைப் போக்கி பசுவின் நெய்யிலிட்டு வறுத்து, பணங்கற்கண்டு கூட்டி இலேகியம்போல் அரைத்து $\frac{1}{4}$—$\frac{1}{2}$ வராகனெடை வீதம் ஒரு நாளைக்கு மும்முறை வீதம் கொடுத்துவரச் சீதக் கழிச்சல், இரத்தக்கழிச்சல், மற்றுமுள்ள கிராணி ரோகங்கள் தீரும்.

கைகால்களில், சிறப்பாகப் பாதங்களில் காணும் வெடிப்பு மாற இதன் பாலைத் தடவிவரலாம்.

**குறிப்பு.**—இம்மரத்துப்பட்டைக் குழித்தைலம் பாஷாணத்தைக் கட்டும், மெழுகுமாக்கும்.

இதன் இலையைக்கொண்டு யானைத் தந்தத்தாற் செய்யப்படும் உருவங்களைத் தேய்த்து மெருகிடலாம்.

---

## பிலிம்பி—Pilimbi.

**வே - பெ.—புளிச்சி.**

Averrhoa Bilimbi.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pulusukayulu పులుసుకాయలు. | Hind. / Dak. | Belambu * بيلمبو |
| Mal. | Vilimbi വിളിമ്പി. | | |
| Kan. | Bimblee ಬಿಂಬ್ಲಿ. | | |

இது சாதாரணமாய்த் தோட்டங்களில் வைத்துப் பயிராக்கிவரும் சிறு மரம். இந்தியாவிலும், இலங்கையிலும் வளருகின்றது

**ப - உ.**—காய்.

**சுவை.**—புளிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை,**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—மூலம், தாகம், வெப்பம் இவைகளை அடக்கும்.

**வ - கு.**—இதன் காயைச் சாதாரணமாகப் புளிக்குப் பதில் கறி வகைகளுக்குச் சேர்ப்பது நாட்டு வழக்கம். இதை ஊறுகாயாகப் பக்குவப் படுத்திச் சாப்பிடுவதுண்டு.

துணிகளில் தற்செயலாய்ப்படும் கறைகளைப் போக்க இதன் இரசத்தை உபயோகப் படுத்தலாம்.

பழுத்த பழத்தின் இரசம் ஒருபங்கு, நீர் சமனெடை, சருக்கரை மூன்று பங்கு சேர்த்துச் சிறு தீயிட்டு எரித்து மணப்பாகு செய்து, அதில் ஒரு கரண்டி வீதம் கொடுத்துவரச் சுரதாகம் நீங்கி, சுரமும் தணியும்.

---

## பிளவைகொல்லி—Piḷavai-kolli.

இது, வெளிகளில் தன்னிச்சையாய்ப் பயிராகும் செடி வருக்கத்திற் சேர்ந்தது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmentic.

**குணம்.**—இதனால் சிறு சிரங்கு, கிரந்தி, ஒழுக்குப் பிரமேகம், உளமாந்தை, இராஜப்பிளவைக் கட்டி தீரும்.

பிளவைகொல்லிப் பூண்டிருந்தாற் புண்விரணம் பேரும்
அளவையுறு மேக மடங்கும்—உளமாந்தை
ஆறுப் பிளவைகட்டி எல்லாம் உலர்ந்திடுமே
மாறுக் கவினணங்கே! வாழ்த்து. (அ - கு)

**வ - கு.**—இதை நீர்விடாமலே யரைத்துச் சொறி, சிரங்கு, பிளவைகளின் மீது பூசிவர அவைகள் துரிதத்தில் ஆறும்.

---

## பீதரோகிணி—Pítharóhini.

**வே - பெ.—உரோகிணி.**

Thalictrum Foliolosum.

Eng.—Gold Thread.

| | |
|---|---|
| Mal. Bithagam ബീതകം | Pers. Asprak * اسپرك |
| Sans. Peetharohinee पीतरोहिणी. | Hind. Pilijari * پلجاری |

இது இமயமலைச் சாரலில் அகப்படுகிற ஓர்வகைப் பூண்டு. இது பயிராகும் இடங்களில் இதை **'பிலஜாரி'** என வழங்குவார்கள். ஹூமாயூன் மலைப் பிரதேசங்களிலும் இது வளருகின்றது. அத் தேசத்தில் இதற்கு **'மொமீரி'** எனப் பெயர். இது, காகத்தின் இறகு போன்ற கனமாயும், நாருள்ளதாயுமிருக்கும். வெளிப் புறத்தில் மஞ்சள் நிறமும், உட்புறத்தில் கருநீல நிறமும் உண்டு.

பீதம் = பொன். பொன் மஞ்சள் நிறம். இதன் இலையின் வெளிப்புறமும் மஞ்சள் நிறம். ஆகவே பீதரோகணி எனக் காரணப் பெயர் பெற்றது.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- உடற்றேற்றி - வியதாபேதகாரி - Alterative.

**குணம்.**—இதனால் கருவிழி நீல காசம், கிருஷ்ண மண்டலம், இமையைப் பற்றிய நீர்ப்பில்லம், கிருச்சிரோன்மீலனம் முதலிய ரோகங்கள், அக்கி நோய் இவை தீரும்.

படர்நீல காசம் படலமொடு பில்லந்
தொடர்இமைக ளிற்றேன்றுந் தோடம்—அடரும்
அருவியெனச் சொல்லுகின்ற அக்கிநோ யேகும்
ஒருபீத ரோகிணியை யுன். (அ - கு)

அன்றியும் கடுமையான நோய்களுக்கு உப சாந்தமாகவும் உபயோகப் படும். முறைக் காய்ச்சலுக்கும் அசீரணத்துக்கும் கொடுக்கலாம்.

இதைத் தேனில் உரைத்துப் பூச, தேமல் முதலிய படைகள் போகும். கட்டிகள் கரையும், தோல் மிருதுவாகும், காந்தி பெறும்.

இதை நசியமிட நீரேற்றம் முதலிய கபால சம்பந்தமான நோய்கள் விலகும்.

கண்ணிலிடக் கண் புகைச்சல் மாறும்.

கஷாயமிட்டுக் கொடுக்க, வயிற்று நோய் காமாலை நீங்கும்.

ஊறல் கஷாயமிட்டுக் கண்ணைக் கழுவக் கண் வியாதிகள் நீங்கும்.

பொடி செய்த வேர் 5–உழுந்தெடை தினம் மூன்று வேளை நீரில் கலந்து கொடுக்க, முறைசுரம் நீங்கும்.

**அளவு.**—வேர்த்தூள் 5 முதல் 10 உழுந்தெடை.

எண்ணெயிலிட்டுக்காய்ச்சித் தலைக்கிட்டுமுழுகிவரக் கண்ரோகங்கள் அணுகா ; கண் துலங்கும்.

---

## பீநாறிமரம்—Pínári-maram.

**வே - பெ-பெருமரம்.**

Sterculia Fœtida.

Eng.—Poon tree.

| | |
|---|---|
| **Tel.** Kalukranuga. కలుక్రానుగ. | Kan. Penarimara ಪೇನಾರಿಮರ. |
| | Sans. Pootheekam पूतीकम् |
| Mal. Pottakavalam പൊട്ടകവാളം. | Hind. Jangli Badam * جنگلی بادام |

இம்மரம் மலை அல்லது காட்டுப் பிரதேசங்களில் வளரும். இந்தியாவிலெங்கும் கிடைக்கும்.

**ப - உ.**—இலை, விதை, பூ, பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு

செய்கை. { மலமிளக்கி - மலகாரி - Laxative.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic. }

**விதை.**

**குணம்.**—இதனால் சொறி, சிரங்கு, சுரம் முதலியவைகள் போம்.

**வ - கு.**—இதன் விதையிலிருந்து ஓர் வகை எண்ணெய் எடுக்கிறார்கள். இவ் வெண்ணெயை உட்புகட்டியும், வெளியில் பிரயோகித்தும் வரின் சொறி, சிரங்குகள் தீரும்.

**பட்டை.**

இதனால், அதிசாரம், கிராணி, உதிர நோய், வாதாதிக்கம் ஆகியவை போம். இது உடலைப் போஷிக்கும்.

பெருமரப் பட்டையது பேதி கிராணி
மருவிரத்த நோயினத்தை மாற்றுந்—திருவே
நடலைபுரி வாதத்தை நாடாத கற்றும்
உடலையிரட் சிக்குமென வோது. (அ - கு)

**வ - கு.**—இலை, பட்டை முதலியவைகளை முறைப்படி காஷாயஞ் செய்து கொடுக்க, வியர்வை யுண்டாகிச் சுரந் தணியும், சிறு நீரைப் பெருக்கும், மற்றும் மேற்கண்ட நோய்களைப் போக்கும்.

---

## பீர்க்கு—Pírkku.

**வே - பெ.—கோசவதி.**

Cucumis acutangula

**Eng.—Ribbed luffa.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Bírakaya | బీరకాయ. | Sans. | Kosavathee | कोशवती |
| Mal. | Píchchakam | പീച്ചകം. | | | |
| Kan. | Hírekāi | ಹೀರೇಕಾಯಿ. | Hind. | Turai | * ترئی |

இது கொடியினம், தென்னிந்தியாவில் ஏராளமாய் வளருகின்றது. இது வன்றி இதில்—**நுரைப்பீர்க்கு**, **பேய்ப்பீர்க்கு**, என இரு சாதி யுண்டு. பேய்ப்பீர்க்கு ஆகாரத்துக்கு ஏற்றதல்ல—அதிக கைப்புடையது. வாந்தியை யுண்டாக்கும். நுரைப்பீர்க்கும் ஆகாரத்திற் குரியதல்ல.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**காய்.**

செய்கை. { உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
**விதை.**
நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.
வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic. }

**குணம்.**—காய்க்குச் சீதளமும் பித்தமும் அதிகமாகும். வாத கபம் தத்தம் நிலை பிசகும்.

தின்றவுடன் பீர்க்கங்காய் சீதம்உறுங் காண்பித்தம்.
ஒன்றுமூன் றாக உயருமே—மன்றலணிக்
காரளகக் கச்சுமுலைக் காரிகையே! வாதகபம்
நேர்அளவைத் தாண்டும் நினை. (அ - கு)

**வ - கு.**—காயைச் சமைத்துண்ணலாம். ஆனால் மேற் கூறிய குணங் களை உண்டுபண்ணும்.

இலையை அரைத்து அழுகிய விரணங்களுக்கு வைத்துக்கட்ட, அவை சுக மாகும்.

இலையைச் சாறு பிழிந்து கண்ணில் விட, சிறு குழந்தைகட் குண்டாகும் கண்ணோய் நீங்கும்.

இலைச் சாற்றை வெதுப்பி ஒரு தேக் கரண்டி வீதம் நீரிழிவு நோய்க்குக் கொடுக்கலாம்.

பழத்தைக் கஷாயமிட்டு வேளைக்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்குக் கொடுத்துவரத் தேக வெப்பத்தைக் குறைக்கும்.

விதையிலிருந்து எண்ணெய் எடுத்துச் சரும நோய்களுக்குப் பூசலாம்.

பேய்ப்பீர்க்கு விதைத் தைலம் இலிங்கத்தை மெழுகாக்கும்.

வேரைக் கஷாயமிட்டு சோகைக்குக் கொடுக்க வீக்கம் குறையும்.

---

## பீளை—Píḷai.

இது பூண்டு இனத்திற் சேர்ந்தது, உழவிற்குப்பின் பயிரிடாத நிலங் களிலும், வெளிகளிலும் 1—2 அடிஉயரம் வளர்ந்து வருடமுற்றுங் கிடைக்கக் கூடியது. இலைகளுக்கு மத்தியில் வெண் நிறப்பூ உண்டு. இதில் (1) **சிறுபீளை** (2) **பெரும்பீளை** என இருபிரிவுண்டு. ஆனால், குணம் ஒன்றே.

---

## சிறுபீளை—Chiru-peelai.

**வே - பெ.—சிறுகண்பீளை, கற்பேதி, பாஷாணபேதி, கண்பீளை.**

**Aerva lanata.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Pindi - Konda** | పిండికొండ. | **Sans. Pashanabhedí** पाषाणभेदी |
| **Mal.** | **Cherupila** | ചെറുപീള. | |

**ப - உ.**—இலை, பூ, சமூலம், வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**குணம்.**—இது பாண்டு, பெரும்பாடு, மூத்திரக்கிரிச்சரம், முப்பிணித் தோடம், நீரடைப்பு, கல்லடைப்பு, குடற்சூலை, இரத்தகணம் ஆகிய வைகளைப் போக்கும்.

பாண்டுபெரும் பாடு பகர்மூத்தி ரக்கிரிச்சம்
பூண்டதிரி தோடமிவை போகுங்காண்—தாண்டிப்
பறியவே ளைத்துரத்தும் பார்வையிற்கண் மாதே!
சிறிய பீளைக்குச் சிதைந்து.

நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை
போரடரி ரத்தகணம் போக்குங்காண்—வாரிறுக்கும்
பூண்முலையே! கேளாய் பொருந்துஞ் சிறுபீளை
யாமிதுகற் பேதி யறி. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலைச்சாற்றில் $\frac{1}{8}$—$\frac{1}{4}$, ஆழாக்கு வீதம் குடித்துவரப் பெரும்பாடு, கல்லடைப்பு, நீரடைப்பு, மூத்திரக்கிரிச்சரம் குணமாகும்.

இதன் வேர்க்கஷாயம் மூத்திரக்கிரிச்சரம், நீரடைப்பு, கல்லடைப்பு இவைகளைப் போக்கும்.

கஞ்சி வகைகளிலொன்றில் இதன் வேரைச் சேர்த்துக் காய்ச்சிக் குடித்துவரக் கருப்பிணிகளுக்கு வலுவை யுண்டாக்கும்.

சிறுபீளை வேர்ப்பட்டை, பனைவெல்லம் வகைக்குப் பலம் ஒன்று, ஒன்று கூட்டி மைபோலரைத்து $\frac{1}{2}$ ஆழாக்குப் பசுவின் பாலிற்கலந்து காலை மாலை யுட்கொண்டுவரக் கல்லடைப்பு, நீரடைப்பு, பாண்டு, பெரும் பாடு முதலியன நீங்கும்.

சிறுபீளைவேர், நெருஞ்சிச்சமூலம், மாவிலிங்கப்பட்டை, பேராமுட்டிவேர் இவைகள் வகைக்குப் பலம் கால் எடுத்துச் சிதைத்து மூன்று ஆழாக்கு நீர்விட்டு 1 ஆழாக்காகக் காய்ச்சி வடிகட்டி நாள் ஒன்றுக்குக் காலை மாலை இருவேளையும் குடித்துவரக் கல்லடைப்பு முதலியன தீரும்.

வெங்காரம், சீனக்காரம், வெடியுப்பு, சிலாசத்து, கல்நார், நண்டுக்கல், விரால்மீன் தலைக்கல் இவைகளின் பற்பத்திற்கு மேற்கண்டவற்றுளொன் றைத் துணைமருந்தாகக் கூட்டினால் அப்பற்பங்களின் குணம் சிறக் கும்.

---

## பெரும்பீளை—Perum-pīḻai.

**வே - பெ.—பெரும்பூளை.**

**குணம்.**—சோபை, பைசாச முதலிய சங்கைதோடம், கல்லடைப்பு முதலியன தீரும்.

பாடாண பேதியெனப் பன்னுபெரும் பீளைக்கு
மேடான வீக்கம் விலகுங்காண்—நாடரியப்
பேய்பூத மும்போகும் பேசிற் பலபிணிபோந்
தூயோ ரறிவரிதைச் சொல். (அ.கு.)

**வ - கு.**—சிறுபீளையை வழங்குவது போலவே இதனையும் வழங்கலாம்.

---

## புகையிலை—Pugaiyilai.

**வே. பெ.—பிரமபத்திரி, கஞ்னந்தி, பிரமம்.**

Nicotiana Tabacum.

Eng.—Tobacco.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Pogaku. | పొగాకు. | Sans. | Tamrakuta | ताम्रकूटः |
| Mal. | Pokala. | പൊകല. | Arab. | Tanbak. | * تنباك |
| | Puk - yila. | പുകയില. | Pers. | Tanbàku. | * تنباكو |
| Kan. | Hógesoppu. | ಹೊಗೆಸೊಪ್ಪು. | Hind. | Tamâku. | * تماكو |

இது, அமெரிக்கா தேயத்துக்குரிய பயிரென்பர். ஆனால், இது தற்காலம் இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களிலும், பர்மாவிலும் பயிராகின்றது—பர்மாவில் பயிராவதும், இந்தியாவில் கோதாவரி ஆற்றிலுள்ள சிறு தீவு களில் (இவைக்கு லங்கா எனப்பெயர் வழங்கும்) உற்பத்தியாவதும் அதிக

காரமுடையது எனச் சொல்லப்படுகின்றது. இதன் இலைக்குப் புகையிலை யெனப்பெயர். இது புகை பிடிப்பதற்குக் காரணமாயிருப்பதுபற்றி இப் பெயர் வழங்கப் பெற்றது. இதன் பச்சையிலைக்கு, உலர்ந்தபின்னுள்ள அவ்வளவு வாசனையிராது.

இதனின்றும் எடுக்கும் சத்து மிகக் கெடுதி செய்யும். இதற்கு **நிக்கோடைன் (Nicotine)** என மேனுட்டார் கூறுவார்.

இதில் பொட்டிலுப்புச் சத்து இருக்கிறது. ஆகையால் இதன் உப்பு, நீர்க்கட்டு, பிலீகம், மகோதரம் முதலிய நோய்களில் உபயோகப்படும்.

**ப - உ.**—இலை.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி ; Diuretic.
- சிரநீர்ப்போக்கி - சிரோவிரேசநி - Errhine.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- தாதுவெப்பகற்றி - ஸமநகாரி - Sedative.
- உமிழ்நீர்ப்பெருக்கி - த்ரவகாரி - Sialogogue.
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - Narcotic.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.

**குணம்.**—இது, வாய்வறட்சி, துர்ப்பலம், பித்தாதிக்கம், சுக்கில க்ஷீணம் இவைகளை விளைவித்து, நல்ல மருந்தையும் முறிக்கும்.

மருந்தை முறித்துவிடும் வாய்வறளச் செய்யும்
திருந்து பலவீனஞ் சேர்க்கும்—பொருந்துபித்தம்
உண்டாக்கும் விந்தழிக்கும் ஓது புகையிலையைக்
கண்டார்க்கும் ஆகாது காண்.

(அ.கு.)

**வ - கு.**—சுதேச வைத்திய முறையில் முக்கியமாய் சித்தஅவுஷதங்களை உபயோகிக்குங் காலத்து, புகையிலையை எவ்வகையிலும் உபயோகிக்கக் கூடாதென்கிற விதியுண்டு.

ஆனுல், அளவோடு சிலநோய்களுக்குத் தனியே உபயோகிக்கலாம் ;—

**இசிவு ரோகங்களுக்கு**—உள்ளுக்கு உபயோகிக்காமல் வெளிப் பிரயோகஞ் செய்யலாம்.

**கட்டிகள், வீக்கங்கள்.**—இவைகளால் உண்டாகும் எரிச்சலும் வேதனை யும் குறையப் புகையிலையை அவைகளின் மீது போடலாம்.

**சுவாசகாசம், இருமல்.**—இவைகளால் உண்டாகும் வேதனை, நித்திரை யின்மை முதலியவைகட்குச் சுருட்டுப் பிடிக்கச் செய்வதுண்டு. உலர்ந்த ஊமத்தம் பூவுடன் சேர்க்க விசேஷ குணமுண்டாகும்.

இறுகிக் கொண்ட **குடலிறக்கம், மலபந்தம், மூத்திரநாளம் இறுகிக் காணும் நீரடைப்பு** இவைகளுக்குப் புகையிலையைக் கஷாயமிட்டு ஆசனத்தில் பிரயோகிக்கலாம்.

**மலக்கட்டுக்குச்** சுருட்டுப் பிடித்தால் சிலருக்கு மலம் வெளிப்படுகின்றது. ஆனுல், இது தாராளமாய் மலத்தை இளக்கி வெளிப்படுத்துமென்றும், மலத்தைக் கட்டும் என்றும் இருவகை அபிப்பிராயமுண்டு. அதிகமாய் உபயோகித்தால் மயக்கமும் ஆயாசமும் தரும். வறட்சியுண்டாக்கும். பசி மந்தப்படும். ஆகையால், உபயோகிக்கா திருப்பதே நன்மை.

சிறு குழந்தைகட்குக் காணும் மலக்கட்டுக்குப் புகையிலைக்காம்பை ஆசனத்தில் வைக்கும் வழக்கம் இந்நாட்டில் உண்டு. இது, சில குழந்தை கட்கு நன்மையையும், சிலகுழந்தைகட்குத் தீமையையும் விளைக்கும். இப் பழக்கத்தை நீக்குதலே நலம்.

**பல்வலிக்கு.** ஒரு துண்டுப் புகையிலையை வாயில் அடக்கிக் கொண்டால் உமிழ்நீர் அதிகமாய் வடிந்து, பல்வலி தணியும். பழக்கமில்லாதார்க்குப் பித்தஞ் செய்யும்.

**கரப்பான், சொறி, சிரங்கு.** முதலிய சருமநோய்களுக்கு இதன் கஷாயத்தை மேலுக்கு உபயோகிப்பதுண்டு. ஆனால் வாய்க்குமட்டலும், வாய்நீரூறலும் உண்டாகும்.

**குறிப்பு.**—இருதயத் தொழிலைக் குறைக்குந் தன்மை இதற்கிருப்பதால், அளவிற்கு மிஞ்சி உபயோகித்தால் இருதயத்துடிப்பும் மார்பு நோயும் காண நேரிடும். ஆயாசமும் அதிகப்படும். மயக்கம், வறட்சி இவைகளுந் தொடரும். ஆகையால், மிக்க மெலிந்தோர்கட்கும், குழந்தைகட்கும், கிழவர்கட்கும் எவ்வகையிலும் உபயோகிக்காதிருப்பதே நலம்.

### புகையிலைக் கஷாயம்.

புகையிலை 10 குன்றி, வெந்நீர் $1\frac{1}{2}$ ஆழாக்கு, அரைமணி நேரம் ஊற வைத்து வடிகட்டவும்.

### புகையிலை உப்பு.

இதன் காம்புகளையாவது, அல்லது இலையுடன் காம்புகளையாவது நன்றாய் ஈரமின்றி உலர்த்தி, வெண்மையாகச் சுட்டுச் சாம்பலாக்கி, சாம்பல் ஒருபங்குக்கு நாலு பங்கு சுத்த நீர்விட்டு, மூன்று நாள் பரியந்தம் கலக்கிக் கலக்கி வெயிலில் வைத்துக் கொண்டுவந்து, நாலாம் நாள் தெளிவிறுத்துக்கொண்டு, சிறு தீயிட்டுக் குழம்பு பதம் வரும் வரையில் காய்ச்சி இரவியில் வைக்க உப்பாகும். இது வெண்ணிறம் பொருந்தியது. நிறபேதமிருந்தால் மறுபடியும் நீர் விட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து முன்போல் செய்து கொள்ளவும். இவ்வுப்பைத் தனித்தாவது, அல்லது மற்ற நீரையுடைக்கும் உப்புடன் அல்லது வேறு மருந்துகளுடன் கூட்டியாவது அளவுப்படி உபயோகிக்க, நீர்க்கட்டுடையும். பிலீகம், மகோதரம் போன்ற நோய்கள் தீரும்.

### வெடியுப்புச் சுன்னம்.

வெடியுப்பு ஒருபங்கு, புகையிலை இரண்டு பங்கு, எடுத்துப் புகையிலையைத் துண்டு துண்டாக வெட்டிக் கத்தரித்து ஒரு சட்டியில் கொஞ்சம் பரப்பி, அதன்மீது வெடியுப்பைப் பரப்பி, இவ்விதமாகவே அடுக்கடுக்காகப் பரப்பி, கடைசியில் புகையிலையைக் கொஞ்சமதிகமாகப் பரப்பி, வெளியில் வைத்துக் கொளுத்திவிட வெடியுப்பு ஓர்வகைச் சுன்னமாகும். இச் சுன்னத்துத்துக்கு நேர்பாதி நவாச்சாரங் கூட்டி பீங்கானிற் பரப்பி பனியில் வைக்க நீரிறங்கும். இந்நீரில் நாலி லொருபங்கு பொரித்த வெண்காரமும், படிகாரமும் கூட்டி எரிக்கச் சுன்னமாகும். இதில் ஒரு குன்றியளவு தக்க அனுபானத்தில் கொடுக்க நீர்க்கட்டு உடையும்.

புகையிலையைச் சுட்ட சாம்பலை வெண்ணெயுடன் கலந்து புண்களின் மீது பூசப் புண்கள் உலரும்.

இதன் புகை, பற்பல விடப்பிராணிகளை நசிக்கும்.

யூனன் என்னும் தேசத்தில் "ஹகீம்" என்னும் சாஸ்திரியார் காலத்தில், ஊழிநோய் உண்டாகி அநேகரை வருத்தி மரணமுண்டாக்கிய போது, இவர் புகையிலையை ஊர்முற்றிலும் கொளுத்தும்படி செய்வித்து அந் நோயை ஒழித்தாராதலால், அதன் மூலம் இதன் உபயோகம் யூனனி வைத்தியர்களால் பலவழிகளிலும் கண்டு பிடிக்க நேரிட்டதென்றும் கூறப்படுகிறது. இதனாலும், அன்றி, பர்மா, இந்தியா முதலிய இடங்களில் இதன் உபயோகம் நீண்டகாலமாய்த் தெரிந்திருந்ததனாலும், இச்செடியானது, அமெரிக்காவுக்குரிய பயிர் எனக் கூற இடமில்லை.

இதைப் பொடியாகச் செய்து மூக்குத் தூளாகவும், வெற்றிலைபாக்குடன் சேர்த்து வாயிலடக்கவும், இதரவாசனைத் திரவியங்களோடு சேர்த்து உக்கா பிடிக்கவும், உபயோகித்து வருகிறார்கள்.

இதைத் தீநீராக வடித்தால் அந்நீரின் மீது எண்ணெய் படியும், இதில் 'நிக்கோடைன்' என்ற விடமுண்டென்பர்.

5 தோலா புகையிலையை, 10 தோலா நீரில் நன்றாய்க் கசக்கிப் பிழிந்து வடிகட்டின கஷாயத்தைக் கொடுக்க, பாம்பு கடி விடம் நீங்கும்.

---

## புங்கு—Pungu.

**வே - பெ. புன்கு, பூந்தி, கரஞ்சகம், கரஞ்சம்.**

Pongamia Glabra.

Eng-Indian Beech.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** Ganuga. గానుగ. | | **Hind.** Korang. * کورنگ | |
| **Mal.** Punga. പുങ്ക്. | | **Sans.** Karanja. करञ्ज: | |
| **Kan.** Honge gida. ಹೊಂಗೆಗಿಡ. | | | |

இது சாதாரணமாய் இந்தியா முழுவதும் பயிராகக் கூடியமரம். இதில் **காட்டுப்புங்கு** என்றொரு வகையுமுண்டு. இரண்டிற்கும் **குணம்** ஒன்றே.

**ப - உ.**—இலை, பூ, விதை, வேர், எண்ணெய்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பொது.**

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- தூக்குணிப்புழுவகற்றி - Parasiticide.

**எண்ணெய்.**
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**புங்கு, காட்டுப்புங்கு விதை.**

**குணம்.**—இதனால் கழல் விரணம், கிரந்தி, கரப்பான், காது நோய், சந்நி, கண்ணோய், இவைகள் நீங்கும், மேலுமிது மலத்தைக்கட்டும். **காட்டுப்புங்கின்** விதைக்குத் தேமலும், புடையும், கீல்களைப் பற்றிய வாய்வும் போம்.

புங்கின்விதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி
அங்கசந்நி கண்ணோய்க்கும் ஆம்பேதி—யுங்கட்டும்
காட்டுப்புங் கின்விதைக்குக் கண்டதே மற்சொறிமெய்ப்
பூட்டுப்பங் கின்வாய்வும் போம். (அ.கு.)

**வேர்.**

இது வாதக்குடைச்சல் திரிதோடமூர்ச்சை, தாபசுரம், வாதகுன்மம், இரத்த தாதுவினால் பிறக்கின்ற நோய்கள், விரணம், புரையோடல், பாம்புவிடம் இவைகளை நீக்கும்.

வாதக் கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்மம் ரத்தத்தால் வந்திடுநோய்—ஓதுகின்ற
புண்புரையும் வல்விடமும் போகும் திரண்டுருண்டே
பண்புறுபுங் கம்வேர்க்குப் பார். (அ.கு.

### மரப்பால்.

புங்கம் பாலானது விரணத்தையும், வாதவலியையும் நீக்கும். தேகத்தில் பொன்போன்ற ஒளியை உண்டாக்கும்.

,, ,, ——————————

.................................—கொங்குலவு
புங்கம்பால் புண்ணுற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான். அ.கு.)

### விதையின் நெய்.

இதற்கு அழகும், ஒளிவும் உண்டாகும். கரப்பானும் சொறி, சிரங்கும் ஒழியும்.

அங்க மழகிடும்வெற் பாம்புங்கி னெய்தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாந்—திங்கண்முக
மானே ! கரப்பான்போம் வந்தசொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று. (அ.கு.)

### இலை.

**வ - கு.**—புங்கு, புளி, நொச்சில், மா, வேம்பு, பொடுதலை, உத்தாமணி கருவேம்பு, நாரத்தை, சங்கஞ்செடி, அவுரி, பொன்னுவாரை இவைகளின் இலை, ஈர்க்கு வகைக்குப் பலம் ஒன்று, நீர் படி ஒன்று விட்டு, அதில் கடுகு ரோகணி, இந்துப்பு இவைகளைச் சிறு பொட்டலமாகக் கட்டிப்போட்டு, தீ யெரித்துக் கஷாயமாக வற்றவைத்து மாந்த கணங்களுக்குக் கொடுக்கலாம்.

### பூ.

புங்கம்பூ ஒருபடிக்கு வேண்டிய அளவு நெய்விட்டு வறுத்துப் பதத்தில் எடுத்துத் தூள் செய்து வைத்துக் கொண்டு வெருகடிப் பிரமாணம் 40 நாள் உண்ண, மேகம் இருபதும் நீங்கும், **பத்தியம்** புளி, புகை, வாய்வு பதார்த்தம் ஆகாது. இச்சாபத்தியம்.

புங்கம்பூ, புளியம்பூ, வசம்பு, உள்ளி, சீரகம், வெட்பாலை அரிசி, நன்னாரி வகைக்கு ஒருபலம், பசுவின் பால் அரைப்படி, எண்ணெய் ஒரு படி, இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்கக் கரப்பான் பதினெட்டும் தீரும்.

### விதை.

புங்கம்விதை, அழிஞ்சில்விதை வகைக்கு ஒருபடி, முல்லை வேர் வீசை இரண்டு, கற்றாழைவேர் வீசை எட்டு, இவைகளை ஒரு பாண்தட்திலிட்டுக் குழித் தைலமிறக்கி, கடுகளவு உள்ளுக்கீந்து, மேலுக்கும் பூசிவர, நரை, மூப்பு நீங்கி, தேகம் வச்சிரமாகும். பாண்டு, மேகம் முதலிய நோய்களும் நீங்கும்.

### வேர்.

புங்கம் வேரைப் புறணி நீக்கி மெல்லியதாகச் சீவிப் பால் பிழிந்து, அதற்குச் சமன் தேங்காய்பால் சேர்த்துக் காய்ச்சி எண்ணெய் பக்குவத்தில் எடுத்து வைத்துக்கொண்டு, ஓர் மெல்லிய துணியில் நனைத்து, பிளவை, ஆறாத விரணங்கள், மேக விரணங்கள் ஆகியவைகளுக்குப் போட்டுவர **அவை** சீக்கிறத்தில் ஆறிப்போகும்.

புங்கம்வேர், சங்கம்வேர், சிற்றாமணக்குவேர் வகைக்குப் பலம் ஒன்று, விளக்கெண்ணெய் படி ஒன்று, பூண்டுச் சாறு படி ¼, கடுகுரோகிணி பலம் கால், முடக்கத்தான் பலம் அரை, இவைகளில் முதல் மூன்று வேரையும் அரைத்து விளக்கெண்ணெயில் கலந்து, பின் மற்ற சரக்குகளையும், சாற்றையும் சேர்த்துக் கலக்கிச் சூரிய புடம்வைத்து, தக்க அளவாக உள்ளுக்குக் கொடுத்துவர, சூலை, புண், கரப்பான் முதலியன தீரும்.

**எண்ணெய்.**

புங்கம்நெய், வேப்பம்நெய், ஆமணக்கம்நெய், புன்னைநெய், எண்ணெய், இவை வகைக்குப் படி அரை சேர்த்து, அதில் வெள்ளுள்ளி, வசம்பு, பெருங்காயம், திரிகடுகு, ஓமம், கிராம்பு, சதகுப்பை, கடுகுரோகணி, சித்திரமூலம் வகைக்குப் பலம் அரை, இவைகளைக் காடி விட்டரைத்து மேற்கூறிய எண்ணெயுடன் கலந்து, அத்துடன் காடி படி இரண்டு சேர்த்து, அடுப்பேற்றி எரித்து மெழுகு பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு, அதில் ஒரு காசெடை வீதம் கொடுத்து, மேலுக்குந் தடவிப் பிடித்துவர வாதம் 80, மேகம், சூலை, திமிர் வாதம், இசிவு, நடுக்குவாதம், கடுப்புவாதம், சூதகவலி ஆகியவை தீரும்.

*N.B.*—புங்கம்நெய்.—விதையிலிருந்து எடுக்கப்படுவது.

---

## புடல்—Pudal.

**வே - பெ.—புடோல், சோத்தினி.**

Trichosanthes anguina.

Eng.—The Serpent Cucumber.

**Tel.** Potla పొట్ల.
**Mal.** Pudala പുടല.
**Kan.** Padavala ಪಡವಲ.
**Sans.** Chinchindaha चिंचिण्डः
**Hind.** Chechendā *چچنڈا

இது கொடி வருக்கம். காய்கள் நீண்டு பச்சையாகத் தொங்கும். நாடுகளில் ஏராளமாய்ப் பயிரிட்டு வருகிறார்கள். இவ்வினத்தில் **கொத்துப் புடல், நாய்ப்புடல், பன்றிப்புடல், பேய்ப்புடல்,** எனச் சில சாதிகளுண்டு. இவைகளுள் கொத்துப்புடல், நாய்ப்புடல் இவ்விரண்டும் குத்துச் செடியாக வளரும். பன்றிப்புடல் கொடியாக விருந்தபோதிலும், சாதாரணப் புடலின் காயைப்போலன்றி, நீளம் குறுகியதாக விருக்கும். பேய்ப்புடல் மிகவும் கசப்புடையது. அது பித்த சுரத்தில் அதிகபயன் தரக்கூடியது.

**ப - உ.**—காய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**காய்.**

**குணம்.**—இதனால் சுக்கிலமும், கபமும், பயித்தியமும் அதிகரிக்கும்.

போகம் விளையும் பொருந்தி வளருமையம்
ஆகமதிற் பித்த மணுகுங்காண்—மேக
படலங் கவியளகப் பாவாய் ! கே ணுளும்
புடலங்காய்க் குள்ள புகழ். (அ.கு.)

**பன்றிப்புடலங்காய்.**

இதனால் கரப்பான், புடை, கிரந்தி, சீதளம், இவை யுண்டாவதுமன்றி, காணுக்கடிவிடம், சிலந்திவிடம், சருப்பவிடம் முதலிய விடங்கள் இறங்கியதாயினும் உடனே ஏறும்.

கரப்பான் சொறிசிரங்கு காணுச் சிலந்தி
உரப்பாம் விடக்கடியும் உண்டாம்—உரைத்தவகை
அன்றிச் சயித்தியமும் ஆம்பன்றி தன்னையொத்த
பன்றிப் புடலுக்குப் பார். (அ.கு.)

**வ - கு.**—இக்காயைச் சமையல் செய்து சாப்பிட மேற்கூறிய குணங்களை உண்டாக்கும்.

---

## புத்திரசீவிவிதை—Puththira-sivi-vithai.

**வே—பெ.—புத்திரசோகி.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—இவ்விதைக்கு மூலம், சுரம், வெள்ளை, நீர்ப்பிரமேகம், வயிற்றுப்பிசம், நாவறட்சி, இவைபோம். சுக்கிலம் விளையும்.

ஆகியதோர் மூலம் அனலம்வெட்டை மேகமும்போம்
போகம் விளையும் பொருமல்அறுந்—தாகம்போம்
புத்திர சீவியெனப் போற்றும் விதையதனுல்
இத்தரையுண் மாதே ! இயம்பு. (அ.கு.)

**வ - கு.**—இதைச் சூரணஞ் செய்து சருக்கரையுடன் கலந்து ¼—½ வராகனெடை வீதம் காலை மாலை உட்கொண்டுவர மேற்கண்ட நோய்கள் வசப்படும். சுக்கிலம் பெருகும்.

---

## புல்லுருவி—Pulluruvi.

**வே - பெ.—ஒட்டு, மரவொட்டி.**

Loranthus-pentandrus.

Eng.—Indian Mistletoe.

| | |
|---|---|
| **Tel.** Badanika బదానికే. | **Mal.** Ittikanni I ഇത്തിക്കണ്ണി. |

இது மரங்களின்மீது பற்றிவளரும் ஒரு வகைக் கொடி. எந்த மரத்தின் மீது உண்டாகின்றதோ அம்மரத்துப் பெயரால் வழங்கும். உதாரணமாக அரசுமீது படர்வதற்கு அரசுப்புல்லுருவி எனப்படும். இப்புல்லுருவிகள் பல. அவற்றைத் தெரிந்துகொள்ளச் சித்தர் காவியங்களைப் பார்க்கவும்.

## புளி—Puḷi.

**வே - பெ.— திந்துருணி, ஆம்பிரம், சிந்தூரம், சிந்தகம், எகின், சிந்தம்.**

Tamarindus Indica.

Eng.—Tamarind tree.

| | |
|---|---|
| **Tel.** Chinta-manu చింత మాను. | **Arab.** Tamar-i-hind * تمر هندی |
| **Mal.** Puli പുളി. | **Pers.** Ambala * انبال |
| **Kan.** Hunascehunnu ಹುಣಸೆಹಣ್ಣು. | **Hind.** Imli * املی |
| **Sans.** Tintrani तिन्तृणी | **Duk.** Amli * آملي |

இம்மரம் இந்தியாவிற்கே உரியது. ஆகவே இந்தியாவிலும், பர்மாவிலும் ஏராளமாய்ப் பயிராகிறது.

ப - உ.—இலை, ஈர்க்கு, பூ, காய், பழம், ஓடு, கொட்டை, பட்டை.

**இலை, பூ, காய், பழம்.**

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**ஓடு, கொட்டை, பட்டை, ஈர்க்கு.**

,, —துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலைக்கொழுந்து.**
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
பித்தசமனி - பித்தசாந்தநி - Anti-bilious.

**இலை, பூ, பிஞ்சு.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**பழம்.**
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**பழஓடு.**
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
மலமிளக்கி - மலகாரி - Laxative.
பித்தசமனி - பித்தசாந்தநி - Anti-bilious.

**கொட்டை.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**கொட்டைமேற்றோல்.**
சிறுதுவர்ப்பி - லகுஸங்கோசனகாரி - Mild Astringent.

**பட்டை.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**இலை.**

**குணம்.**—இது அழிந்தவிரணம், சோபாரோகம், பாண்டுரோகம், சிவந்த கண்ணோய் இவைகளை நீக்கும்.

அழுபுண்ணை நீக்கும் அடல்சோபை மாற்றும்
எழுபாண்டு வைப்போக்கும் இப்பால்—முழுதும்
அளியச்சி வந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல்.

(அ.கு.)

**பூ**

பூவினால் பித்தகோபம், அருசி, அதிகரித்த வமனம் நீங்கும்.

பித்தத் துடனே பெருத்தஅ ரோசகம்போம்
மெத்தஎழும் வாந்திமி தத்துள்நிற்கும் - மெத்தக்
கனத்துப்பூ ரித்தமுலைக் காரிகையே! வெற்பார்
வனத்துப் புளியம்பூ வால்.

(அ.கு.)

**காய்.**

கொட்டைமுதிராத புளியம்பிஞ்சு சோர்வையையும் பித்தகோபத்தையும் நீக்குவதுந்தவிர, வாததோடத்தை யுண்டாக்கும். கர்ப்பஸ்திரீகள் விரும்பத் தக்க உணவாகும்.

கோபமொடு பித்தந் தொலைக்கும் உரிசைதருங்
கோபமுற வாயுவையே கொண்டாடுந்—தாபக்
கருப்பமட வார்க்குக் கனவிருப்பம் உள்ளே
பருப்பைஉறுப் பைம்புளியங் காய்.

(அ.கு.)

## பழம்.

இதனால் மந்தபுத்தி, தேகந்தூலித்தல், சந்நிபாத சுரங்கள், அங்க சலனவாதம், சுக்கிலதாதுமத்திபம், திரை, நரை இவை உண்டாகும். வாந்தியும் பித்தரோகமும் நிவர்த்தியாகும்.

புத்தியும் மந்தமாகும் பொருமியே உடலம்ஊதும்
பத்தியம் தவறும்சந்நி பாதமாம் சுரங்கள்வீறுஞ்
சர்த்தியும் பித்துந்தீரும் தனுவெலாம் வாதம்ஏறும்
மத்திபந் தாதுபுஷ்டி வருந்திரை நரைபுளிக்கே. (தே.கு.)

## பழம்புளி.

இது திரிதோடம், வாதநோய், சூலை, சிலேத்துமகோபம், ருட்சை, வாந்தி, விழிநோய், பயித்தியம் இவைகளை நீக்கும்.

தீதில் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோடம்
வாதமொடு சூலைகபம் மாறுங்காண்—ஓதுசுரஞ்
சர்த்தியென்ற தோடம்இவை சாந்தமாங் கண்ணோய்போம்
பித்தமென்ற பேர்ஒழியும் பேசு. (அ.கு.)

## கொட்டை.

தோலில் துவர்ப்புள்ள கொட்டைக்குச் சுக்கிலமேகம், பித்தாதிசாரம் அதிவிரணம், மூத்திரக்கடுப்பு, வெள்ளை இவை நீங்கும்.

சுக்கில மேகம்அனற் றுன்னும்அதி சாரமொடு
மிக்கிரணம் நீர்க்கடுப்பு வெட்டையறுந்—தொக்குள்துவர்
உற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலும்
நற்றரையுண் மாதே நவிற்று. (அ.கு.)

## பட்டை.

இதனால் உளைமாந்தை, குன்மநோய், வாதாதிசாரம், சுரம், அசீரணம் இவை நீங்கும். பித்தமும் பசியும் விருத்தியாகும்.

புளிய மரத்தின் புரணிதனைக் கண்டால்
உளைமாந்தை குன்மவலி ஓடும்—வளியார்ந்த
பேதிகட் டுஞ்சுரம்போம் பித்தமுறுந் தீபனமாம்
ஓதஅ சீரணமே துன்னு. (அ.கு )

**வ - கு.**—இலை ஒருபங்கு, வேப்பிலை ஒருபங்கு இவ்விரண்டையுஞ் சேர்த் திடித்து 8 பங்கு நீர்விட்டுக் காய்ச்சிப் புண்களைக் கழுவிவர, ஆறாத விரணங்கள் ஆறிப்போகும்.

புளியிலை, ஆவாரை வேர்ப்பட்டை வகைக்குப் பலம் ஒன்று; மிளகு, கருஞ்சீரகம், வசம்புசுட்டகரி, கார்போகஅரிசி வகைக்குப் பலம் ஒன்று; இவற்றை ஆடுதீண்டாப்பாளைச் சாற்றாலரைத்து, 10 பலம் எண் ணெயில் கலக்கி, மூன்று நாள் சூரிய புடம் வைத்துப் பின் சொறி, சிரங்கு, கரப்பான் இவைகளின் மீது பூசித்தேய்த்து ஒரு சாமத்துக்குப் பின் அரைப் பிட்டு தலை முழுகிவர, மேற்படி சரும நோய்கள் தீரும்.

இலையை நசுக்கி நீர் விட்டுக் கொதிக்கவைத்து கீல் வாத வீக்கங் களின் மீது பற்றிட, வேதனை தணியும்.

இலைச்சாற்றில், பழுக்கக்காய்ந்த இருப்புச் சலாகையைத் தோய்த்து, அச்சாற்றில் ஒன்றிரண்டு சங்குவீத மெடுத்து சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

பூவை நசுக்கிச் சிறிது நீர் விட்டுக் கொதிக்கவைத்துக் கண்ணுக்குக் கண்ணைச் சுற்றிப் பூசிவரக் கண்சிவப்பு மாறும்.

பூவைச் சிறிது நெய்விட்டு வதக்கித் துவையல் செய்து உண்ணலாம்.

கொட்டை முதிராத புளியின் காயைத் தின்றால் பித்தம் நீங்கும். வாத தோடத்தை உண்டாக்கும். கருப்பவதிகளுக்குப் பிரியமான உணவாகும்.

காயை வேகவைத்துப் பிழிந்து சாறெடுத்து சருக்கரை கலந்து பாகு காய்ச்சி உண்பது நாட்டு வழக்கு.

பழத்தின் புளி ஒரு பலம், சூரத்து நிலாவாரை ஒரு வராகனெடை, கொத்துமல்லிவிதை அரை வராகனெடை, வெந்நீர் 8 பலம் இவைகளை 2 மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி அதில் சருக்கரை ½ பலம் சேர்த்து 2 முதல் 4 பலம் வரையில் கொடுக்க வேதனையில்லாமல் சுகமாய்ப் பேதியாகும்.

புதுப்புளி 2 பலம், பசும்பால் 30 பலம் இவ்விரண்டையும் அடுப்பிலேற்றி 8-ல் ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிச் சுரங்களிற் கொடுத்தால் தாபம் அடங்கும். உருசியாகவுமிருக்கும். புளியைக்கரைத்து அதில் சருக்கரை அல்லது கற்கண்டு சேர்த்துச் சீதக்கழிச்சல், இரத்தக்கழிச்சல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

புளி ஒரு பங்கு, உப்பு ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்தரைத்து உண்ணுக்கில் தடவ, அதின் வளர்ச்சி கரைந்துபோம்.

புளி சாதாரணமாய் எல்லா வீடுகளிலும் பதார்த்தங்களில் உபயோகப் படுத்தப்பட்டு வருகிறது.

புளி ஒரு பலம், அத்திப்பழம் ஒரு பலம் இதை அரைப்படி பாலில் வேகவைத்து, வடிகட்டி அதில் சிறிது இலவங்கம், ஏலம், கருப்பூரம் சேர்த்துக் கொடுக்கச் சுரம் தணியும். மலமிளகும். தேகத்துக்குச் சௌக்கியம் உண்டாகும்.

புளியை நீரில் கலக்கி வடிகட்டி அதில் மிளகுத்தூள், சருக்கரை, இலவங்கத்தூள், கருப்பூரம், ஏலத்தூள் இவைகளில் சிறிது சேர்த்துக் கலக்கிக் குடிக்கத் தேகவெப்பத்தைக் குறைத்து கண்ணெரிச்சல், தலைநோய் இவைகளைத் தணிக்கும். பசியுண்டாகும். அரோசகத்தை மாற்றும்,

பழம்புளி, கரிசிலாங்கண்ணி இவ்விரண்டையும் அரைத்துப் புன்னைக் காயளவு எட்டு நாள் உள்ளுக்குக் கொடுக்க அடிதள்ளிய நோய் நீங்கும்.

பழத்தின் மேல்ஓட்டைச் சுட்டுச் சாம்பலாக்கி, சரக்கொன்றைப்புளி முதலிய இதர சரக்குகளோடு சேர்த்தரைத்து ஈரல் நோய்களுக்கு வெளிப் பிரயோகமாக உபயோகப் படுத்தலாம்.

புதுக் கொட்டையை ஏழைமக்கள் வேகவைத்துத் தின்பதுண்டு. சிலர் இதை வெயிலில் காயவைத்து அல்லது வறுத்துப் பிறகு மாவாக்கி ரொட்டி, பலகாரம் முதலியவை செய்வார்கள். கொட்டையை மேல் தோல் நீக்கி அருந்துதலே நன்று. அல்லாவிடில் மலங்கட்டும். இதன் வெண்ணிறப் பருப்பு தேக வளர்ச்சிக் கேற்றதென பரீக்ஷையால் தெரியப் பட்டிருக்கின்றது.

சிலர் கொட்டையைப் பொடி செய்து வாத நோய்க்குப் பரிகாரமாகக் கொடுக்கின்றனர்.

இதை மாவாக்கிக் களியாகக் கிண்டிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம்.

இதை இடித்து வேகவைத்துக் கஞ்சியாக்கி பட்டுநூலுக்குப் பசையிடுவார்கள்.

கொட்டையை இடித்துப் பொடிசெய்து சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

கொட்டையின் மேற்றோலைக் காயவைத்து, இடித்துத் தூளாக்கி, 4 முதல் 6 குன்றிவரை, சருக்கரை அல்லது தேன் சேர்த்துத் தினம் 2, 3 தரம் கொடுத்துவர, சுக்கிலமேகம், அதிசாரம், அதிவிரணம், நீர்க்கடுப்பு, வெள்ளை ஆகிய இவைகள் தீரும்.

தோலைப் பொடித்துத் தூளாக்கிப் பல்துலக்கி வரலாம். பல்லிறுகும்.

இதன் தூள் ஒரு பங்கு, சீரகம் 3 பங்கு சேர்த்து இடித்துச் சமன் பனங்கற்கண்டு சேர்த்து, அரைவராகனெடை வீதம் தினம் 3 வேளை சாப்பிட்டுவர, நாட்பட்ட சீதபேதி, கிரகணி நீங்கும்.

புளியம் பட்டைத்தூள் 4-6 குன்றி வீதம் தினம் 2, 3 தரம் கொடுத்துவர, அதிசாரம், குன்மம், அசீரணம் முதலியன நீங்கும்.

பட்டையும் உப்பும் ஒரு மண்பாண்டத்திட்டு எரித்துச் சாம்பலாக்கி அதில் ஒரு குன்றி வீதம் தினம் இருவேளை கொடுத்துவர, அசீரணம், குன்மம் நீங்கும்.

பட்டைச் சாம்பலை நீரில் கலக்கித் தெளிவிறுத்து வாய் கொப்புளித்து வரத் தொண்டைப் புண் நீங்கும்.

புளியம்பட்டை, மிளகு, புங்கு இலை, வேலிப்பருத்தி இலை, நாயுருவி இலை இவைகளின் சாம்பல் வகைக்குக் கால், ஓமம் ஒரு வராகனெடை சேர்த்து நீர்விட்டுக் காய்ச்சிச் சிறு குழந்தைகளுக்குக் கொடுத்துவரத் தாகம் அடங்கும்.

புளிஈர்க்கு, வேப்பீர்க்கு, பொன்னாங்காணிவேர் வகைக்குப் பலம் ஒன்று; கோழியவரைச் செடியின் வேர் பலம் அரை ; இவற்றை எல்லாம் நறுக்கிச் சிற்றாமணக்கெண்ணெய் விட்டுச் சூரியபுடம் வைத்து உண்ண, கணம் நீங்கும்.

---

## புள்ளடி—Pulladi.

இதில் புள்ளடி, சிறுபுள்ளடி என இருபேதமுண்டு.

### Hedysarum Gangeticum.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Gitanaram. | గితానారం | Hind. | Sarivan | *سروان |
| San. | Salaparni | शालपर्णी | | | |

இது இமயத்தின் அடிவாரத்திலும், இந்தியாவின் சம வெளிகளிலும் பயிராகக்கூடியது.

**ப. உ.**—வேர், பட்டை, சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- செரிப்புண்டாக்கி - பாசநகாரி - Digestive.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

இதைக் குடிநீரிட்டுக் கொடுக்கச் சுரம் நீங்கும்.

இது தசமூலக் குடிநீரில் சேரும் சரக்குகளில் ஒன்று.

## சிறுபுள்ளடி—Chirupulladi.

**வே - பெ.—கடமாரி,**

**Desmodium Triflorum.**

இது இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் பயிராகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Múrpú. | మూర్పు | Pers. | Muskh-Zamin. | * مشک زمین |
| Hind. | Motha. | * موتها | | | |

**ப - உ.**—இலை, வேர், சமூலம்.

**சுவை.**—கார்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம். **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Galactagogue.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**

பேதியைக்கட்டும், பாலைச்சுரப்பிக்கும், வலியைப் போக்கும்.

மாந்தகணம் போராமம் வன்மந்தம் நீங்கிவிடும்
ஓய்ந்தமூலைப் பாலும் ஒழுகுங்காண்—மோந்தே
சிறுபுள் ளடிதுதையாத் தேமலர்ப்பூங் கோதாய் !
சிறுபுள் ளடியைநிதஞ் சேர்.

(அ.கு.)

**இலை**

**வ - கு.**—இலையை அரைத்துப் பசுவின் பாலில் கலக்கிக் கொடுக்க மேற்கண்டவை நீங்கும்.

**வேர்**

இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க பசியைத் தூண்டி உணவைச் செரிப்பிக்கும். நீர்க்கட்டையுடைக்கும். பித்தப் பிணியைத் தணிக்கும். உடற்குப் பலமூட்டும்.

**சமூலம்**

இதைச் சிதைத்துச் சாறுபிழிந்து எளிதில் ஆறுத கட்டி, விரணங்களுக்குப் பூசலாம்.

---

## புன்னை—Punnai.

**வே - பெ.—புன்னாகம், நாகம்.**

**சுரப்புன்னை.**

**வே - பெ.—வழை.**

**Callophyllum Apetalum, C. Inophyllum.**

**Eng. Alexandrian Laurel.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Punnagamu | పున్నాగము | Sans. | Punnagaha | पुन्नागः |
| Mal. | Punna | പുന്ന | | | |
| Kan. | Surahonnae | ಸುರಹೊನ್ನೆ. | Hind. | Undi | * اُندی |

இவை இந்தியாவின் பலபாகங்களிலும், கடற்கரையடுத்த நிலங்களிலும் பயிராகும். இதில் சுரபுன்னை அல்லது சிறுபுன்னை (Callophyllum ongifolium) என்றொரு சிறு இனமுமுண்டு. இவ்விரண்டின் குணமும்

ஒன்றே. இதன் எண்ணெயை ஆங்கில பாஷையில் Domba Oil என்று சொல்லுவார்கள்.

**ப - உ.**—இலை, பூ, விதை, பட்டை, பிசின்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** — வெப்பம், **பிரிவு** — கார்ப்பு.

**செய்கை.**

**பட்டை.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**விதை.**
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
புண்ணுக்கி - வ்ரணகாரி - Caustic.

**பிசின்.**
வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
நீர்மலம்போக்கி - வ்ரேசநி - Purgative.

## புன்னைப் பூ

**குணம்.**—இதனால் நீங்காமேகமும், சித்தவிப்ரமசந்நி, கரப்பான், சொறி, சிரங்கு இவை நீங்கும். ஆனால் மயக்க முண்டாகும். பித்தத்தை அதி கரிக்கச் செய்யும்.

புன்னைப்பூ பித்தம்என்பார் போராடு வன்மேகம்
வின்னப்ப டாச்சித்த விப்பிரமம்—பின்னுங்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகற்றும்
உரப்பாம் மயக்கம்உண்டாக் கும். (அ.கு.)

**கொட்டை.**

இதனால் செவிப்புண், சந்நி, தநுர்வாதம், சூதகவாயு, உடம்பில் நீரை ஏற்றி அதில் அழுந்திய சீதளவாயு இவை நீங்கும்.

கன்ன விரணங் கடுஞ்சந்நி பாதமுடன்
இன்னல்உறு வாதை இவைஅகலும்—புன்னைக்கொட்
டைக்கம்மட் டோவென்னில் ஆர்சூதி காவாய்வும்
மெய்க்கம்மிட் டாழ்வாய்வும் இல். (அ.கு.)

**நெய்.**

இதனால் சந்நிபாதம், மகாவாதரோகம், முன்னிசிவு, பின்னிசிவு, ஐவகைவலி, விரணம், கிருமி ஆகிய இவைகள் நீங்கும்.

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசந்நி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாய்வும்முன்—பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையும்
அல்லார் குழலே ! அறி. (அ.கு.)

**இலை, பூ.**

**வ - கு.**—இலை அல்லது பூவைத்தண்ணீரில் ஊறப்போட்டு, அந்நீரைக் கொண்டு கண்களைக் கழுவிவரக் கண்வீக்கம், சொறி, சிரங்கு முதலியன தீரும். பூவை யுலர்த்திப் பொடித்துச் சூரணஞ்செய்து தேனுடன்கூட்டிச் சந்நிபாதத்தில் உபயோகிக்கலாம்.

**விதை.**

விதையை நீர்விட்டு அரைத்துச் சூடாக்கி, கீல்வாதங்களுக்குப் பற்றிட நோய் நீங்கும்.

விதையினின்று எடுக்கப்படுகிற எண்ணெய்க்கு மூத்திரதாரை விரணங் களைப்போக்கும் குணம் மிகுதியாகவிருப்பதால் வெள்ளை, வெட்டை முதலிய நோய்களுக்குக் கொடுத்து வரலாம். அளவு 15-20 துளி.

இதை மேலுக்குத் தடவிப் பிடித்துவரப் பின்னிசிவு, முன்னிசிவு முதலிய மகா வாதங்கள் தீரும்.

இசிவு, மகாவாத ரோகம் முதலியவைகளுக்குப் பயன் தரக்கூடிய கூட்டு எண்ணெயில் இதுவுமொன்றாகும்.

மேலுக்கு இந்த எண்ணெயைச் சிரங்குகளுக்கும், செவிப்புண்களுக்கும் வழங்கலாம்.

எண்ணெயைக் குட்டவிரணங்களுக்குப் பூசி வரலாம்.

**பட்டை.**

இதைக் கஷாயமிட்டு உள்ளுறுப்புகளி லிருந்துவரும் இரத்தப் பெருக்கு களுக்குக் கொடுக்க நன்மை பயக்கும். அன்றியும்,
சீக்கிரத்தில் ஆறாமல், இரத்தம் பெருகிக்கொண்டிருக்கும் புண்களை, இக்கஷாயம் விட்டுக்கழுவி வர, அவை சீக்கிரத்தில் ஆறும்.
பட்டையைப் பிழிந்து சாறெடுத்துக் கொடுக்கப் பேதியாகும்.

**பிசின்.**

மரத்தினின்று வடியும் பிசினைத் தண்ணீரில் போட்டுவைக்க அதினின் றும் எண்ணெய் மிதந்து நிற்கும். இவ் எண்ணெயைக் கண்ணிலிடக் கண்ணோய் நீங்கும். இதை விரணங்களுக்குப் போடும் மருந்துகளுடன் சேர்ப் பதுண்டு. இப்பிசினை உள்ளுக்குக் கொடுக்க, பேதியும், வாந்தியுமாகும்.

---

## பூவரசு—Púvarasu.

**வே - பெ.—புவிராசன், பூளம்.**

**Thespesia populnea.**

**Eng.—The Portia tree (Heart wood.)**

| | | |
|---|---|---|
| Tel. | Gangaraya | గంగరాయ. |
| Mal. | Puvvarasa | പൂവരശ്. |
| Kan. | Kandarola | ಕಂದರೋಳ. |
| Sans. | Gardha bhanda Suparesh-vak | गर्धबन्धा |
| Hind. | Dumbla | * دمبلا |

இம்மரம் இந்தியாவிலெங்கும் பயிராகிறதெனினும் தென்னிந்தியாவில் விசேஷமாயுண்டு.

**ப - உ.**—இலை, பூ, காய், விதை, பட்டை, வேர்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை, பூ, காய், விதை, பட்டை.**

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
தூய்மையாக்கி - மலினநிவர்த்தநி - Depurative.

**வேர்.**

உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—நூறுவருடத்திய பூவரசம் வேர் நாட்பட்ட குட்டத்தை நீக் கும். பழுப்பிலை, பூ, விதை, காய், பட்டை, முதலியவை, கிருமி, விர ணக், பேதி, பெருவியாதி, காணாக்கடி, குத்தல், விடபாகம், பெருவயிறு, குஷ்டம், கரப்பான், சிரங்கு நீர்ப்பிரமேகம் இவைகளைப் போக்கும்.

நூருண்டு சென்றதொரு நூண்பூ வரசம்வேர்
தூருண்ட குட்டைத்தொ லேக்குங்காண்—வீறிப்
பழுத்த இலேவிதைபூ பட்டை யிவைகண்டாற்
புழுத்தபுண்வி ரேசனமும் போம். (அ.கு.)

குட்டங் கடிசூலே கொல்லும் விடபாகந்
துட்டம கோதரமுஞ் சோபையொடு—கிட்டிமெய்யில்
தாவுகரப் பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங் காய்பட்டைப் பூ. (அ.கு.)

**வ - கு.**—இதன் இலேயை அரைத்து வெதுப்பி வீக்கங்களின்மீது வைத்துக்கட்டலாம்.

பூவை அரைத்துச் சிரங்குகளின்மீது பூசிவர அவை குணமாகும்.

காயிலிருந்து உண்டாகும் ஓர்வித மஞ்சள் வருணமுள்ள பாலேச் சரும நோய்களுக்குத் தடவலாம். எச்சிற்றழும்புக்குப் பூச அது ஆறிப்போம். மூட்டு வீக்கங்களுக்குப் பூச வீக்கம் கரையும்.

காயையும் பட்டையையும் தைல முறைகளிற் சேர்த்துக்காய்ச்சி மேற்கூறிய நோய்களுக்கு வழங்குவது வழக்கம்.

சிறுதுண்டுகளாக வெட்டிய பட்டை பலம் 6, தண்ணீர் ஒருபடி விட்டுக் காய்ச்சி மூன்றில் ஒன்ருக வற்றியபின் வடிகட்டியேனும் அல்லது 10 பலம் காய்களேச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒருபடி நீர்விட்டுக் காய்ச்சி மூன்றில் ஒன்ருக வற்றவைத்து வடிகட்டியேனும், 2—4 பலம் வீதம் 3—4 தரம் கொடுத்துவரக் காணுக்கடிவிடம், பெருவயிறு, வீக்கம் முதலியன நீங்கும்.

பூவரசம்பட்டை எண்ணெயினுல், சருமநோய்கள், மேகம் தீரும்.

காயின் எண்ணெயிணல் குன்மநோய், மகோதரம், பெருவயிறு முதலியன தீரும்.

---

## பூனைக்காலி—Punaikkali.

**வே - பெ.—கண்டுதி, மற்கடி.**

**Mucuna Pruriens.**

**Eng.—Cowitch plant.**

| | | |
|---|---|---|
| **Tel.** | **Pilliadagu** | పిల్లియడగు. |
| **Mal.** | **Choraivalli** | ചൊറിവള്ളി |
| **Kan.** | **Nasugenne** | ನಸುಗೆನ್ನೆ. |
| **Sans.** | **Atmagupta** | आत्मगुप्ता |
| **Hind.** | **Kavách** | * كوانچ |

இது, வெப்பப் பிரதேசங்களில் பயிராகும் ஓர்வகைக் கொடி. சில விடங்களில் இதன் விதைக்காக இதைப் பயிரிட்டு வளர்க்கிருர்கள். காயின் உட்பாகத்தைச் சமைத்துத் தின்பது முண்டு. இதில் **கருமை, வெண்மை** என இருசாதியுண்டு.

**ப.உ.**—விதை, வேர், சுனே.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**விதை.**

துவர்ப்பி . ஸங்கோசனகாரி - Astringent.
நரம்புரமாக்கி - Nervine - Tonic.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**வேர்.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
நரம்புரமாக்கி - Nervine Tonic.

**சுணை.**

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Vermifuge.
சருமவெப்புண்டாக்கி - சர்மஉஷ்ணகாரி - Local Stimulant,

## கருமை விதை.

**குணம்.**—இதனால், கற்றாழை நாற்றம், இரத்தக் கிரகணி, கரப்பான் இவை நீங்கும். தாதுபுஷ்டி யுண்டாகும்.

தழுதளைநாற் றத்தோடு சார்இரத்தப் போக்கும்
பழுதுபுரி கின்றகரப் பானும் - அழுதேகுந்
தாலமிசை விந்துவுமாஞ் சாற்றற் கரும்பூனைக்
காலி விதையைக் கழறு. (அ.கு.)

**சுணை.**

**வ - கு.**—காயின்மீது மூடியிருக்கும் சுணையைப் பனைவெல்லத்திலாகிலும், தேனிலாகிலும் கலந்து கொடுக்க நாக்குப்பூச்சி வெளிப்படும்.

காயை விதை நீக்கி நன்றாய் உலர்த்தி இடித்துக் கஷாயமிட்டு வடிகட்டி, அதில் சிறிது காட்டாத்திப் பூச்சேர்த்து நாற்பது நாள் பூமிக்குள் புதைத்து வைத்துப் பின்பு எடுத்துத் தக்க அளவில் கொடுத்துவரச் சோபைநோய் நீங்கும். கைகால் வீக்கமும் போம்.

**விதை.**

விதையை நன்றாய் உலர்த்திப் பொடித்து அதில் 8 முதல் 16 குன்றி வரையிலும் பாலில் கொடுத்துவர வெள்ளை, வெட்டை நீங்கும். தாதுபுஷ்டி யுண்டாகும்.

மேற்படி விதைத்தூளுடன் சிறு நெருஞ்சில் விதைத்தூள் சமனெடை கலந்து ஒரு வராகனெடை வீதம் பாலில் கலந்து கொடுக்கத் தாதுபுஷ்டி யுண்டாகும்.

நாலு சேர் ஆவின் பாலில் 32 தோலா விதையைப் போட்டுப் பால் வற்றும் வரையில் காய்ச்சி, விதையை எடுத்து உலர்த்திப் பொடித்துப் பின் நெய் விட்டு இளவறுப்பாக வறுத்துச் சீனிப்பாகு இருபங்கு சேர்த்து இலேகிய பதமாகக்கிளறி எடுத்து, சுண்டைப் பிரமாணம் உருட்டி தேனில் ஊறவைத்துக்கொள்ளவும். இதில் ஒரு உண்டை தினம் இரு வேளை கொடுத்துவர, வெள்ளை, வெட்டை, பெரும்பாடு, பாரிசவாதம் நீங்கும். தாதுவை வளர்க்கும்.

இவ்விதை, சிறுநெருஞ்சில்விதை, தண்ணீர்விட்டான்கிழங்கு, முன்னிலவு, நெல்லி, இவைகளின் வேர்ச்சூரணம், சீந்தில்சருக்கரை சமவெடை சேர்த்து அதற்குச் சமவெடை கற்கண்டு கலந்து ஒன்றரை வராகனெடை எடுத்து இரண்டு தோலா நெய்யிற் கலந்து தினமிருவேளை சாப்பிட்டுப் பால் குடித்துவர, விந்து நட்டம் நீங்கும்.

விதை நீக்கிய மேல் ஓட்டைச் சுணையுடன், சருக்கரைப்பாகு அல்லது தேனில் நன்றாக ஊறவைத்துப் பின் சுணையை மெதுவாகச் சுரண்டி அத் தேனுடன் அல்லது பாகுடன் நன்றாகக் குழகுழப்பு வரும் வரை பாகு

கலந்து கொண்டே வரவும். வந்தபின், இதில் பெரியவர்களுக்கு அரைப் பலமும், சிறியவர்களுக்கு ஒரு உச்சிக்கரண்டி வீதமும், தினந்தினம் காலையில் மூன்று அல்லது நாலு நாள் கொடுத்துப் பேதிக்குக் கொடுக்க, மலக்கிருமிகள் விழும்.

மேற்படி விதை 3 வராகனெடை, நெருஞ்சிவிதை 5 வராகனெடை, கசகசா 4 வராகனெடை, நீர்முள்ளி 3 வராகனெடை, இலவின் வேர்ப்பட்டை 3 வராகனெடை, சிறு நாகப்பூ 2 வராகனெடை, நிலப்பனங்கிழங்கு, தண்ணீர் விட்டான்கிழங்கு வகைக்கு 2 வராகனெடை, சருக்கரை 2 வராகனெடை, இவைகளைப் பொடி செய்து கலந்து வைத்துக்கொண்டு அதில் ஆறு குன்றி வீதம் தினம் இருவேளை, பாலிற் கலந்து குடித்துவர, தாது நஷ்டம் நீங்கும்.

விதை, வெண்சித்திரமூலவேர்ப்பட்டை, சுக்கு, திப்பிலி, திப்பிலி மூலம், பூனைக்கண்குங்கிலியம், கருவாப்பட்டை, கிராம்பு இவைகளைச் சமனெடையாக எடுத்துத் தூள் செய்து நீர்விட்டரைத்து மிளகளவு மாத்திரை செய்து ஒரு மாத்திரை வீதம் தினமொன்றுக்கு இருவேளை கொடுத்துவர, வயிற்றுவலி, குன்மம், கிருமிநோய் முதலியன நீங்கும்.

மேற்படி விதை, சாதிப்பத்திரி, சூடன், சமுத்திராப்பச்சை, வசம்பு, சருக்கரை இவற்றைத் தனித்தனி தூள் செய்து சமனெடை கலந்து அதில் 4 குன்றி வீதம், தினமிருவேளை, பாலிற் கலந்து குடித்துவர தேக பலவீனம் நீங்கி, உடல் தேறும்.

இதன் வேரைக் கஷாயமிட்டுத் தேன் கலந்துகொடுக்க ஊழிநோய் சாந்தமாகும். சுரநோயிற்காணும் சந்நி நீங்கும்.

இதன் வேரை அரைத்து வீக்கங்களின்மீது பற்றிடலாம்.

ஆனைக்கால் வீக்கத்துக்கும் இதை இதர மருந்துகளுடன் சேர்த்துப் பற்றிடலாம்.

---

## பெருங்காயம்—Perungkáyam.

**வே - பெ.—அத்தியாக்கிரம், இங்கு, இரணம், இராமடம், கந்தி, காயம், சந்துநாசம், பூதநாசம், வல்லீகம்.**

Ferula Asafœtida.

Eng.—Asafætida.

| | |
|---|---|
| Tel. Inguva. ఇంగువ. | Arab. Hiltit * حلتيت |
| Mal. Perungayam. പെരുങ്കായം. | Pers. Angushtagandah. * انگوسہت گاندھا |
| Kan. Ingu. ಇಂಗು | Hind. / Duk. } Hing. * هنگ |
| Sans. Hingu. हिङ्गुः | |

இது, பாரஸீகம், துர்க்கிஸ்தானம், ஆப்கானிஸ்தானம், காஸ்மீரம், பஞ்சாப், முதலிய இடங்களில் தன்னிச்சையாயும், அபரிமிதமாயும் பயிராகும் ஓர்வகைச் சிறு செடியின் பால் அல்லது பிசின். இந்தியாவில் எல்லாவிடங்களிலும் கடைகளில் விற்கப்படுகின்றது. அநேக நூற்றாண்டுகளாக இந்தியர் தாங்கள் உண்ணும் உணவிற்குரிய பதார்த்தங்களிலும் நோய் தீர்க்கும் மருந்துகளிலும் உபயோகித்து வருகின்றனர்.

இது மஞ்சள் நிறம். அதிக வாசனை யுள்ளது. சற்றேறக்குறைய வெள்ளைப் பூண்டினது வாசனை வீசும். காகரப்புடன் மிகவும் கசப்புடையது. சாராயத்தில் கரையும். நீர் விட்டரைத்தால் பால் நிறமாயிருக்கும். க்ஷாரங்களுடன் கூடின் பொடிபடும்.

இதில் ஓர்வகை வெண்ணிறம் பொருந்தியதுமுண்டு. அதற்குச் '**சோம காயம்**' எனப் பெயர். இது மேற்கூறிய காயத்திலும் அதிக வீரிய முடையது.

**ப - உ.**—பிசின்.

**சுவை.**—கைப்பு, கரகரப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - **Antispasmodic.**
- கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - **Laxative.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**
- ருதுஉண்டாக்கி - ருதுவர்த்தநி - **Emmenagogue.**

**குறிப்பு:**—இது முக்கியமாய் இரத்தத்தைச் சூடாக்கி, நரம்புகளை வெட்டப் படுத்தும். இருதய ஓட்டத்துக்குக் கிளர்ச்சியை யுண்டுபண்ணிக் காமக் கிளர்ச்சியை யுண்டாக்கும். இதைத் தொடர்ச்சியாகச் சாப்பிட்டுவரின் தொண் டைப்புண், வயிறுப்பல், அசீரணபேதி, மூத்திரஎரிச்சல் புளியேப்பம் இவைகளை யுண்டுபண்ணும்.

**குணம்.**—இதனால் தந்தரோகம், தந்தமூலரோகம், சகல சர்ப்பவிடம், தேள்விடம், கிருமி, அசீரணம், வாதாதிக்கம். உதாவர்த்தவாதம், யோனி ரோகம், இருதவாயு, எண்வகைக் குன்மம், உதரரோகம், கருப்பவித்திரதி, சூலை, இரத்தக்கிருமி, கபநோய், தேகக் குடைச்சல் ஆகியவை நீங்கும்.

தந்தவேதந்த மூலத்தெழும்பிணி
சருவகாளம் விருச்சிகங்கீடம்மா
மந்தம்வாதம் உதாவர்த்தம்அல்குல்நோய்
மார்பணங்கட்ட குன்மம்மகோதரம்
உந்துகெர்ப்பத்தின் வித்திரஞ்சூலைச்சூர்
உதிரப்பூச்சி சிலேத்துமத்துறும்வலி
வந்தமெய்க்கடுப் போடிவைமுற்றுமே
மாயுநாறுநற் காயங்கிடைக்கினே. (தே-கு)

**அளவு 2½—10 குன்றி.**

இதைப் பொரித்து உபயோகித்தலே நலம். பச்சையாய் உபயோகிக்கில், வாந்தி யுண்டாக்கும்; தலைச் சுற்றும்; பித்தத்தைப் பிரகோபிக்கச் செய்யும்.

**வ - கு.**—**பெருங்காயக்கலவைமெழுகு** :—காயம் 2, கால்பேணம் (**Galbanum**) என்றுவழங்கும் கந்தபிரோஜா 2, வெள்ளைப் போளம் 2, வெல்லப் பாகு (**treacle**)1, ஒன்று கூட்டி ஜலேந்திரத்தில் வைத்து உருக்கி, யாவும் ஒன்று சேருகிறவரையில் துழாவிக் கொடுத்து எடுத்து உபயோகிக்கவும். இதைச் சூதக வலியுடைய பெண்களுக்குக் காணும் அசீரணத்துக்குக் கொடுக்கவும்.

அளவு **2½—5** குன்றி.

5 வராகனெடை பெருங்காயத்தை மூன்று ஆழாக்கு நீரில் நன்றாய் அரைக்க அது வெண்ணிறமுள்ள கனத்திரவமாகும். இதில் $\frac{1}{4}$—$\frac{1}{2}$ பலம் எடுத்து அதிசார சந்நிபாதசுரம், ஊழிநோய், வலி, குழந்தைகட்குண்டா கும் மாந்தநோய் முதலியவைகட்கு ஆசனத்துட் செலுத்தலாம்.

இதை நீர்விட்டு உரைத்து மார்பின் மீது பற்றிட, குழந்தைகட்குண்டா கும் கக்குவான் குணப்படும்.

குழந்தைகள் வயிற்றிலுண்டாகும் பூச்சிகளை வெளிப்படுத்த இதன் திரவத்தை ஆசன வழியாய்ச் செலுத்தலாம்.

அபினும் காயமும் சேர்த்துச் சொத்தைப் பல்லில் வைக்க, வலி சாந்தப்படும்.

பிரசவத்தின் பின் அழுக்கை வெளிப்படுத்த, காயத்தைப் பொரித்து, வெள்ளைப்பூண்டு, பனைவெல்லத்துடன் சேர்த்துக் காலை தோறும் கொடுக்கலாம்.

காயம், கர்ப்பூரம், மிளகு, அபின் சேர்ந்த மருந்து ஆரம்ப ஊழியில் நன்மை தரும்.

ஒற்றைத்தலைவலி, பல்வலிகளில் இதை உபயோகிக்கலாம்.

**பெருங்காய லேகியம் :**—காயம் 25 பலத்தைத் தூணி நீரில் சேர்த்து எட்டில் ஒன்றாய்க் காய்ச்சிப் பத்துபலம் சீனி கலந்து பாகு செய்து, பூண்டு, கடுகு, மிளகு, சுக்கு வகைக்கு ஒரு பலம் பொடி செய்து தூவி, கால்படி ஆவின் நெய் விட்டு இலேகிய பதமாய்க் கிண்டி, வேளை யொன்றுக்கு 5 குன்றி முதல் 20 குன்றி கொடுக்க, வாயு, வாந்தி நோய்கள் தீரும்.

**பெருங்காயச் சூரணம்.**

காயமொன்று லவணமிரட்டி சடியதிப்பிலி அதனிலிரட்டி
தீயதாகு முள்ளிச்சாறு சேரவேயி ரட்டிகூட்டி
ஆயன்சொல் தப்பாதிந்த ஔஷதங் கொள்வீராயின்
சாயுமே குன்மஞ்சூலை தநுர்வாயுந் தீருமன்றே. (தேரையர்.)

அளவு—5 குன்றி முதல் 10 குன்றி வரை.

(வேறு)

பொரித்த காயம், சுக்கு, திப்பிலி, மிளகு, ஓமம், சீரகம், கருஞ்சீரகம், இந்துப்பு இவைகளைச் சமவெடை தூக்கிச் சூரணஞ் செய்து 5–10 குன்றி எடை சோறுண்ணும் பொழுது முதற்பிடியன்னத்துடன் சேர்த் துண்டுவர, மந்தத்தை விலக்கிப் பசியையும் சீரணத்தையு முண்டாக்கு வதுடன் வயிற்றுப்பிசம் முதலியவற்றையும் போக்கும்.

கோழிமுட்டை மஞ்சட்கருவுடன் காயத்தைக் கூட்டிக் கொடுக்க வறட் டிருமல், பக்கவலி நீங்கும்.

வாலேந்திரபோளம், மிளகு, இவைகளுடன் சேர்த்துக்கொடுக்க உதிரச் சிக்கல் அறும்.

எண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் காதுக்கிட காதுவலி நீங்கும்.

சூதகசந்நி, வலி, மூர்ச்சை இவைகட்கு இதன் திரவம் உடனே பலன் தரும்.

கால் ஆழாக்கு நீரில் ½ வராகனெடை காயத்தைக் கரைத்து, ஒரு சங்களவு எடுத்துச் சிறிது ஓமத்தீநீர் சேர்த்துக் கொடுக்கக் குழந்தைகளுக் குண்டாகும் மாந்தம், வயிற்றுப் பொருமல் அனுகூலப்படும்.

காயத்துடன் உழுந்து சேர்த்துப் பொடித்துத் தீயிலிட்டுப் புகைத்த புகையை யுட்செலுத்த சுவாசம் (இரைப்பு உட்பிசம்) தணியும்.

காயத்தை நீர்விட்டரைத்துத் தேள்கடிவிடம், புடைகள் முதலியவற் றிற்குப் பூசலாம்.

## பொடுதலை—Poduthalai.

**வே - பெ.—பூற்சாதம், பொடுதிலை.**

**Lippia Nodiflora.**

Tel. Bokkana, బొక్కెన. | Sans. Vashira वशीर:
Mal. Kattutippli. കാട്ടുതിപ്പലി
Kan. Nelahippali. ನೆಲಹಿಪ್ಪಲಿ | Hind. Bakkan. * بکان

இது முக்கியமாய்த் தென்னிந்தியாவில் ஆறு, குளம், குட்டை, இவைகளின் கரைகளில் தன்னிச்சையாய்ப் பயிராகும் ஓர் பூண்டு. இதன் காய் திப்பிலியை யொத்திருக்கும்.

**ப - உ:**—சமூலம், இலை, காய்.

**சுவை** —கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உள்ளமூலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி – **Demulcent.**
- வீக்கங்கரைச்சி - ஸோபாநாசநி - **Deobstruent.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**

**குணம்.**—இதனால் சீதபேதி, அதிசாரம், இருமல், சூலைநோய், சிலேத்துமப் பிரமேகம், வாதநோய் இவை போம். உடல் பலப்படும்.

பொடுதலையின் பேருரைத்தால் போராமப் போக்கும்
அடுதலைச்செய் காசமும் அடங்கும்—கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்யுரக்கும் வாழ்த்து. (அ-கு)

**வ - கு.**—இதை வதக்கிச் சலம்விட்டுக் கொதிக்கவைத்து இறுத்துக் கொடுக்கச் சீதபேதி, மாந்தம், இருமல் தீரும்.

இதை வதக்கி, வறுத்த ஓமத்துடன் சேர்த்தரைத்துச் சலம்விட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டி, ஒரு சங்களவு புகட்டக் குழந்தைகளின் அசீரணபேதி நிற்கும்.

இதன் இலையுடன் சீரகம் சேர்த்தரைத்துக் கொடுத்துவர வெள்ளை (வெட்டை) நீங்கும்.

இதன் இலையைத் துவையல்செய்து உண்டுவர உள்மூலம் சாந்தப்படும்.

இலையை யரைத்துக் கட்டி, கொப்புளமீது பற்றிட அவைகள் பழுத்து உடையும். மேலும் புண், அக்கிப்புண், நெறிக்கட்டி, வீக்கம் இவைகள் மீதும் பூசலாம்.

பழைய அரிசியுடன், இதன் காயையும் சேர்த்து உலையிலிட்டு முதற் கொதி வந்தவுடன் வெந்த அரிசியை உலர்த்தி நொய்யாக்கி, இதைப் பொங்கி மாந்தமுள்ள குழந்தைகளுக்கு ஆகாரமாகக் கொடுக்கலாம்.

இதன் சமூலச்சாற்றுடன் சமபாகம் எண்ணெய் கூட்டி வெயிலில் வைத்துச் சாறுசுண்டி எண்ணெய் மாத்திரம் தங்கியபின் இதைத் தலையில் தேய்த்துத் தலை மூழ்கிவர தலையிற் காணும் பொடு நீங்கும். இதனாலேயே இதற்குப் பொடுதலை என்கிற காரணப் பெயருமுண்டாயிற்று.

## பொன்முசுட்டை—Ponmusuttai.

வே - பெ.—கருஞ்சாரணை, பாடை, மலைதாங்கி, வட்டத்திருப்பி (வேர்) வாரிகம், வெற்பேந்தி,

Sida Acuta.

Tel. Visha boddi. విషబొద్ది
Mal. Cheruparuva. ചെറുപറുവ
Kan. Visha khaddi. ವಿಷಕಡ್ಡಿ.

Sans. Pránijivika. प्राणजीविकी
Hind. Bariaca karela. * باریکا کریلا

இக்கொடி இந்தியா, இலங்கை முதலிய தேசங்களின் வெப்பப் பாகங் களிலுள்ள மலைகளில் வளருகின்றது. இதன் வேருக்கு 'வட்டத்திருப்பி' எனப்பெயர். கோயமுத்தூருக்கடுத்த மருத மலையிலும் ஏராளமாய்ப் பயிராகிறது.

ப - உ.—இலை, வேர்

**சுவை**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பொது.**
கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - **Alterative.**
உடலுரமாக்கி - போஷணகாரி - **Nutrient.**

**வேர்.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்நிவர்த்தநி - **Stomachic.**
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**

**குணம்.**—மலைதாங்கியால் 80 வாதம், சுரம், வாதசயித்தயம், காதுவலி, சிரநீர்க்கட்டு முதலிய நோய்கள் நீங்கும். மேலும் வாத பித்த சேத்தும நோய்களும், தினவும் போம்.

வாதம்எண்ப துஞ்சுரமும் வாத சயித்தியமுங்
காதுவலி பாரங்க ரந்திடுங்காண்—போதச்
சிலைதாங்கி நின்றநுதற் செந்திருவே! நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து.

வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்திற்
சீத மகற்றும் தினவடக்கும்—மாதேசே ள!
உண்டிக்கும் வாசனையாம் ஓங்கி வளரணலைக்
கண்டிக்கும் பொன்முசுட்டை காண். (அ - கு)

### வட்டத்திருப்பி.

வேரால் சேத்துமகோபம், விடம், வாததோடம், பித்தநோய், எலும் புருக்கி, பிரமியம், பித்தசுரம், அதிசாரம், சிரங்கு இவை தீரும். மாமிச தாதுவை வளர்க்கும்.

ஐயநஞ் சூதைபித்தத் திக்கரைவு மாபிரமி
வெய்யசுரம் பேதி விரணமெல்லாம்—வையம்விடுத்
தெட்டத் திருப்பிவிடும் என்பைஉரு க்குமன்றி
வட்டத் திருப்பிவிடு மா. (தே - கு)

**வ - கு.**—இலையை எண்ணெய்விட்டு வதக்கிக் கட்டிகள் மீது வைத்துக் கட்ட,அவை சீக்கிரத்தில் பழுத்து உடையும்.

வேரை வெந்நீர் ஊறல் கஷாயமிட்டுக் கொடுக்க வியர்வை உண்டாகும். நோயால் மெலிந்த உடலைத் தேற்றும். அசீரணத்தைப் போக்கும். வாத நோயைக் கண்டிக்கும்.

மலக்கிருமிகளை வெளிப்படுத்த பச்சை வேரைப் பிழிந்த இரசத்தை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இதன் சமூலத்தைக் குடிநீரிட்டு, கீல்வாத நோயிலும், பிரமேகத்திலும் வழங்கலாம். இது நீரைப் பெருக்கி, உள்ளழலையை யாற்றும்.

---

## பொன்னாங்காணி—Ponnàngkáni.

**வே - பெ.—கொடுப்பை, சிதை.**

Alternanthera Sessiles.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Ponnagantikura** | పొన్నగంటి కూర. | **Sans.** | **Meenakshi** | **मीनाक्षी.** |
| **Mal.** | **Mínankanni** | മീനാങ്കണ്ണി. | | **Mathsyakshi** | **मत्स्याक्षी.** |
| **Kan.** | **Vanagone soppu** | ವನಗೊನೆ ಸೊಪ್ಪು | **Duk.** | **Ponnangkani** | * پونانگ کانی |

இது இந்தியாவில் சாதாரணமாய்ப் பயிராகும் ஓர்வகைக் கொடிக் கீரை, எங்கும் கிடைக்கக் கூடியது. கற்ப மூலிகை. இக்கீரையில் தங்கச்சத்து உண்டென்றும், இதைக் கிரமப்படி உண்டு வருபவர்களது சரீரம் தங்கம் போன்ற மேனியைத்தரும் என்றும் பெரியோர் கூறியுள்ளார்கள். இதன் பெயரினின்றும் அறிந்து கொள்ள இடமுண்டு. எவ்வாறெனில் 'பொன்னாங்காணீ' என்பது, பொன்+ஆம்+காண்+நீ இதையுண்டால் உன்உடல் பொன்னாகக் காண்பாய் எனப் பொருட்படுவதால் எனக.

**சுவை.**—இனிப்பு - **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { உடற்றேற்றி – வ்யதாபேதகாரி – **Alterative.** / குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Cooling.** }

**குணம்.**—இதனால் விழியைப்பற்றிய வாதகாசம், தூம்பிரரோகம், கருவிழி ரோகங்கள், வாததோடம், தேகச்சூடு, பிலீகம், மூலரோகம் இவை போம். சரீரத்தில் பொன்னிறம் உண்டாகும்.

காசம்பு கைச்சல் கருவிழிநோய் வாதமனல்
கூசும்பி லீகம்கு தாங்குரநோய்—பேசிவையால்
என்னாங்கா ணிப்படிவம் ஏமமாம் செப்பலென்னைப்
பொன்னாங்கா ணிக்கொடியைப் போற்று. (தே.கு.)

**வ - கு.**—தினம் இதைத் துவட்டிச் சாப்பிட தேகங் காந்தி பெறும். பூண்டு சிறிது அதிகமாய்ச் சேர்த்துச் சாப்பிட மூலந்தீரும்.

உப்பில்லாமல் வேகவைத்து வெண்ணெயிட்டு நாற்பது நாளுண்ணக் கண் வியாதிகள் தீரும்.

இதை அரைத்துப் பில்லை செய்து, ஓர் நீர் நிறைந்த பானைமீது அப்பி, மறுநாள் காலையில் இதை எடுத்துக் கண்களின்மீது வைத்துக் கட்டப் பித்த சம்பந்தமான கண்ரோகங்கள் தீரும்.

நெய் விட்டு வதக்கிக் கண்களுக்குக் கட்ட, வாத அல்லது கபசம்பந்தமான கண் வியாதிகள் தீரும்.

அன்றியும் இதன் தைலத்தால் தலை மூழ்கிவர கண்நோய்கள் தீரும்.

இதன் சாறு அநுபானங்களுக்கும், தாம்பிரச் செந்தூரம் செய்யவும் உபயோகப்படும்.

இதன் சாறு படி ஒன்று, பொற்றலைக்கையான் சாறு படி ஒன்று, பழச்சாறு படி அரை, ஆவின் நெய் படி ஒன்று, ஆவின் பால் படி ஒன்று, ஒன்ருய்க் கலந்து அதில் இரண்டு பலம் அதிமதுரத்தைப் பால்விட்டு அரைத்துக் கலந்து, காய்ச்சி மெழுகு பதத்தில் வடிகட்டிக் கீழ்க்கண்ட சரக்குகளைச் சேர்க்கவும்.

சாதிக்காய் வராகனெடை $1\frac{1}{4}$, சாதிபத்திரி வராகனெடை $1\frac{1}{4}$, சீருகற்கண்டு வராகனெடை $1\frac{1}{4}$, கோரோசனை வராகனெடை $1\frac{1}{4}$, சேர்த்துக் கலந்து அதில் $\frac{1}{8}$—$\frac{1}{4}$ பலம் வீதம் தினம் இருவேளை கொடுத்துவர, மூலச்சூடு, வெப்பரோகம், கைகால் எரிவு, உலர்த்துமேகம், வாய்நாற்றம், வெள்ளை, வயிற்று எரிச்சல் இவை தீரும். கண் குளிர்ச்சியும் தீபனமும் உண்டாகும்.

இதன் சாறுபடி 2, கரிசாலைச்சாறுபடி ஒன்று, நெல்லிக்காய்ச்சாறு படி ஒன்று, எண்ணெய் படி 2, பசுவின் பால் படி 2, இதில் அதிமதுரம் பலம் 2 எடுத்துப் பால் விட்டரைத்துக் கலந்து காய்ச்சி மெழுகுபதத்தில் வடிகட்டித் தலை மூழ்கிவர 96 வகைக் கண்வியாதிகளும் பித்தவியாதிகளும் தீரும்.

---

## மகிழ்—Magizh.

**வே - பெ.—இலஞ்சி, கேசரம், வகுளம்.**

Mimusops Elengi.

Tel. Pogada పొగడ.
Mal. Mukuzha മുകുഴ്.
Kan. Ranje ರಂಜೆ.
Sans. Vakula वकुलः
Hind. Mulsari * مولسری

இது இந்தியாவில் எங்கும் பயிராகும் மரவகுப்பிலொன்று. இதன் பூவிற்கு நல்ல வாசனையிருப்பதால் இதை இந்தியப்பெண்கள் கொண்டையில் அணிவார்கள்.

**ப - உ.**—பூ, பட்டை, வித்து.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**பூ.**

**குணம்.**—பூ தேக வெப்பத்தையும், புணர்ச்சியிலிச்சையு முண்டாக்கும். இதை முகர அரோசகம் நீங்கும்.

வெகுவனலை மாகும் விரகமிக வுண்டாம்
முகர அரோசி முறியும்—மிகவும்
மகிழச் சுரத வகைகாட்டு மாதே!
மகிழத் துருமமலர்க்கு. (அ.கு.)

**வ - கு.**—பூவைக் குடிநீரிட்டுக் கொடுக்க தேக அனல் தணியும். துர்ப்பலம் நீங்கும்.

பூவின் இரசத்தைக்கொண்டு, வெள்ளியை யரைத்துப் புடமிட வெள்ளி பற்பமாகும்.

பூத் தீநீரைக் குடிநீருக்குப் பதிலாக உபயோகிக்கலாம். வாசனையூட்டவும் பயன்படும்.

பூவை உலர்த்திச் சூரணஞ்செய்து மூக்கில் முகர நாசியின் வழியாய் துர்நீர்ப்பாய்ந்து தலைவலியைப் போக்கும்.

### பட்டை.

**குணம்.**—பட்டை துவர்ப்புக் குணமுள்ளதால், இதை உடல் வெப்பகற்றவும், உடலுரமாக்கவும் உபயோகிக்கலாம்.

**வ - கு.**—பல் ஈறு கட்டி பல்வலித்து வாயினின்று நீர்பாய்வதை நிறுத்தப் பட்டையை ஊறல் கஷாயம் அல்லது குடிநீர் செய்து வாய் கொப்புளித்து வரலாம். இதையே கோஜநாளம் - நீர்ப்பை தாபிதங்களைப் போக்கப் பீச்சலாம். இதன் குடிநீர் சுரத்தைப் போக்குவதுடன் பலத்தையுந் தரும்.

### காய்.

முற்றாத காயை மென்று வந்தால் பல்லிறுகும்.

### பழம்.

இது உண்பதற்குதவும். இதனால் தலைவலி நீங்கும்.

### வித்து.

**குணம்.**—இதனால் மலாவிருதவாதம், நேத்திரதோடம், பாம்புவிடம், சுரம் ஆகியவை நீங்கும். சுக்கிலம், தேகவனப்பு, பலம் விருத்தியாகும். இது சீதளம் என்பர்.

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையு'ண் டாக்கிவிடுஞ்
சீதளமென் பார்கலிகஞ் செய்மருந்தாம்—வாதை
மலத்தைவிழித் தோடத்தை வல்விடத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை. (அ.கு.)

**வ - கு.**—விதையைப் பொடித்து பசுவின் நெய்விட்டரைத்துச் சீலையிற் றடவித் திரியாக்கி ஆசனத்திற் செருக குழந்தைகட்குண்டாகும் மலக்கட்டு தீரும்.

மூலைப்பால் விட்டரைத்துக் கண்களிற்றீட்ட நேத்திரதோடம் நீங்கும்.

விதைச் சூரணத்துடன் நெய் கூட்டிக் கொடுக்க மலாவிருதவாதம் போம். சுக்கிலம், பலம், தேகவன்மை பெருகும்.

விதைக் குடிநீர் சுரத்தைத் தணிக்கும்.
விதையைச் சுட்டுப் பற்றுலக்க தந்தமூலரோகம் போம்.

---

## மங்குஸ்தான்—Mangustân.

**Garcinia Mangostana.**

**Eng.—Mangosteen.**

| | |
|---|---|
| **Tel.** **Mangushtam (Pandu)** మంగుస్తాం (పండు) | **Kan.** **Mangustan** ಮಂಗುಸ್ತಾನ್ |
| **Mal.** **Mangusta** മാങ്കുസ്ത. | **Hind.** **Mangustan** * منگستان |

இது மலாயாப் பிரதேசங்களில் வளருகிற ஓர் வகைச் சிறுமரம். தென்ஞட்டில் சில பாகங்களில் வைத்துப் பயிரிட்டு வருகிறார்கள்.

**ப - உ.**—இலை, பட்டை, பழம்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனால் நாட்பட்ட அதிசாரம், சீதபேதி, வெள்ளை இவை குணமாகும்.

**வ - கு.**—பழத்தை வேகவைத்துப் பிழிந்தெடுத்த சாற்றை, நெருப்பில் வற்றவைத்துச் சருக்கரை கலந்து, பாகு செய்து சாப்பிட்டுவர நாட்பட்ட அதிசாரம் நீங்கும். இத்துடன் சிறிது சீரகம், மல்லி இவைகளின் தூள் சேர்த்துக் கொள்ளின் மிகுந்த நன்மை தரும்.

உலர்ந்த பழத்தைச் சூரணஞ் செய்து, 4—6 குன்றியெடை எடுத்து சருக்கரை கலந்து சாப்பிட்டுவர, மேற்கூறிய நோய்கள் விலகும்.

மேற்படி பழச்சூரணம், வால்மிளகுச்சூரணம், வெங்காரம், வேலம் பட்டைச்சூரணம் இந்நான்கும் வகைக்கு 4 குன்றி எடுத்துப் பாலில் கலந்து சாப்பிட்டுவர, நாட்பட்ட வெள்ளை, வெட்டை இவை தீரும்.

இதன் இலை, பட்டை, பழம் இவைகளின் கஷாயத்தைப் பீச்சிவர வெள்ளை நீங்கும்.

இவைகளின் சாறு உள் நாக்கு வளர்ச்சியைக் குறைக்கும். அடிதள்ளலை நீக்கும்.

பழச்சதை 5, கசகசா 4, சருக்கரை 6, மாதுளம்பட்டை 5, பன்னீர்ப் பூவிதழ் 4 இவைகளின் சூரணத்தைக் கலந்து, 4—8 குன்றிவரையிலும் கொடுத்துவரக் குழந்தைகளின் நாட்பட்ட அதிசாரம் நீங்கும்.

பழச்சதை 6, மல்லி 2, கடுக்காய் 2, சோம்பு 2 இவைகளின் சூரணத்தைக் கலந்து 4 குன்றி வீதமெடுத்து சருக்கரை கலந்துகொடுத்துவர, குழந்தைகளுக்குண்டாகும் நாட்பட்ட சீதபேதி நீங்கும்.

---

## மஞ்சள்—Manjal.

**வே - பெ.—அரிசனம், காஞ்சனி, நிசி, பீதம்.**

Curcuma Longa,

Eng.—Turmeric.

| | |
|---|---|
| Tel. Pasupu పసుపు. | Hind. Haldi * هلدی |
| Mal. Manṉal മഞ്ഞൾ. | Sans. Haridra हारिद्रा |
| Kan. Arisina ಅರಿಸಿನ. | |

இது இந்தியாவில் வெப்பமான பாகங்களில் பயிராகும் செடி. இதன் கிழங்கிற்கு **மஞ்சள்** என்று பெயர். இதற்கு ஒருவித வாசனையுண்டு.

மஞ்சள் இருவகைப்படும் (1) கப்புமஞ்சள், (2) கறிமஞ்சள்.

(1) கப்புமஞ்சள்—கிழங்கின் பெரும் பாகங்களை எடுத்துலர்த்தி நல்லெண்ணெயிற் பக்குவஞ் செய்யப்படுவது.

(2) கறிமஞ்சள்—கிழங்கின் பக்கங்களிற் கிளைக்கும் விரற்போலுள்ளவைகளை வேறுபடுத்திச் சாணப்பாலில் வேகவைத்துப் பக்குவப்படுத்துவது.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative,
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—உடலுக்கு மேனிதரும். உடலிற் பூசப் புலால் நாற்றத்தை நீக்கும். புருடவசியமும் பசியுமுண்டாக்கும். வாந்தி, வாத - பித்த - கப தோடம், தலைவலி, நீரேற்றம், பிரமேகம், பீநசம், ஐவகைவலி, வீக்கம், வண்டுகடிவிடம், பெருவிரணம் இவை போம்.

பொன்னிறமாம் மேனிப் புலானாற்ற மும்போகும்
மன்னு புருட வசியமாம்—பின்னியெழும்
வாந்திபித்த தோடமையம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்தமஞ்ச ளின்கிழங்குக் கு.

தலைவலிநீ ரேற்றஞ் சளையாத மேகம்
உலைவுதரு பீநசத்தி னூடே—வலிசுரப்பு
விஞ்சு கடிவிடமும் வீறுவிர ணங்களும்போம்
மஞ்சட் கிழங்குக்கு மால். (அ.கு.)

**வ - கு.**—மஞ்சளை நீர்விட்டரைத்து உடலிற் பூசி நீராட, தேகத்திலுண்டான நீங்காத புலால் (துர்) மணம் நீங்கும். உடல் பொன் சாயலான மேனி பெறும். மேலும் கற்றாழை நாற்றமும், முகத்திலுண்டாகின்ற ரோகமும், சீரண சிலேத்துமமும், வியர்வையும் நீங்கும்.

மஞ்சட் குளிதனக்கு மாறுந்துர்க் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விட்டகலுந்—தொஞ்சலுறும்
ஐய மொழியு மடர்வியர்வுங் காணாது
வைய மதனில் வழுத்து. (அ.கு.)

மஞ்சளைப் பொடித்து புண்கள்மீது தூவ அவைகள் ஆறும்.

சாதத்துடன் மஞ்சளைச் சேர்த்தரைத்துக் கட்டிகளின் மிது வைத்துக்கட்ட அவைகள் எளிதில் பழுத்துடையும்.

மஞ்சளைச் சுட்டு முகர நீரேற்றம் நீங்கும்.

வேப்பிலையுடன் மஞ்சளைச் சேர்த்தரைத்து, அம்மைக் கொப்புளத்தின் மீது பூச அவைகள் பழுத்துடைவதன்றி வெகு எளிதில் ஆறிப்போகும்.

மஞ்சளுடன் ஆடாதோடையிலை சேர்த்து பசுவின்மூத்திரம் விட்டரைத்துப் பூச சொறி, சிரங்கு, நமைப்புடைகள் ஒழியும்.

மஞ்சள் அரைப்புடன் சுண்ணாம்பு, பொட்டிலுப்புகூட்டி சுடவைத்துச் சுளுக்கு, சருமச்சிதைவு இவைகட்குப் பூசலாம்.

பச்சை மஞ்சள் இரசத்தைப் பூச அட்டைகடிவிடம், நூதன காயப்புண், சருமச்சிதைவு நீங்கும்.

மஞ்சட்சூரணத்தில் 8—10 குன்றியளவு உட்புகட்ட வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, மாறல்சுரம் நீங்குவதுடன் குடல் பலப்படும்.

மஞ்சள் நீரையருந்த காமாலை குணமாகும்.

மஞ்சளை யரைத்து நீரிற்கலக்கி வெண்சீலைக்குச் சாயமேற்றி அதை ஆடையாக உபயோகித்தால், வாதநீர்ச் சுருக்கு, இருமல், விடசுரம், மாருத் தினவு, தனிச்சுரம், மலபந்தம், இவை நீங்கும்.

> நீர்க்கடுப்பு காசமொடு நீடு விடசுரமுந்
> தீர்க்கநமைச் சல்வெப்புஞ் சேர்மலமும்—பார்க்குண்மிக
> அஞ்சியே யேகுமஞ்ச ளாம்வத்தி ரம்புனைந்தால்
> வஞ்சியே! நன்றாய் வழுத்து. (அ.கு.)

மஞ்சள்நீரில் ஒருசிறியவெண்சீலைத்துண்டை நனைத்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு, கண்நோய் உள்ளவர்கள், இச்சீலையைக் கொண்டு கண்களை அப்போதைக்கப்போது துடைத்து வரக் கண்சிவப்பு, கண்ணருகல், கண்வலி, கண்ணில் நீர் கோத்தல் போன்றவை சாந்தப்படும்.

மஞ்சள்தாள் மூத்திரத்திற் சிவந்தால் நீரில் உப்பிருக்கின்றதாக நிச்சயிக் கலாம்.

**கறிமஞ்சள்.**

இந்துக்கள் உபயோகிக்கும் பற்பல ஊறுகாய்களிலும், கறிமசாலையிலும் இது எராளமாய்ச் சேருவதுடன், சிற்சில பதார்த்தங்களின் துர்க்குணத்தை மாற்றி அவைகள் பார்வைக்கு அழகுபடவும் இது வழங்கப்பட்டு வருகின்றது.

---

## மரமஞ்சள்—Mara-Manjal.

**வே - பெ.—காலேயகம், தாறுவி.**

Coscinium Fenestratum.

**Eng.—Tree-Turmeric.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Manu-pasupu** | మానుపసుపు. | **Sans.** | **Dárvi** | दार्वी |
| **Mal.** | **Mara-Mannel** | മര മഞ്ഞൾ. | **Hind.** | **Jhar-haldi** | * جہاڑ هلدی |
| **Kan.** | **Marada-Arisina** | ಮರದ ಅರಿಸಿನ. | | | |

இது, இலங்கை, மலையாளம் முதலிய தேசங்களிலுள்ள காடுகளில் பயிராகிறது. இது மரவர்க்கம். இதன் சக்கை மஞ்சள் நிறமுடையது. ஆகையால் இதற்கு மரமஞ்சள் எனப்பெயர்.

**ப - உ.**—சக்கை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதற்கு முக்குகணம், மூலநோய், அரோசகம், கணச்சுரம், உட்சுரம் ஆகியவை விலகும்.

அழன்றகண மூலம் அருசி யுடனே
உழன்ற கணச்சுரமும் ஓடுஞ்—சுழன்றுள்ளே
வீறுசுர முந்தணியும் வீசுமர மஞ்சளுக்குத்
தேறு மொழியனமே ! செப்பு. (அ.கு.)

**வ - கு.**—இதையிடித்துக் கால்பலமெடுத்துக் குடிநீரிட்டுக் கொடுத்துவர மேற்கண்ட பிணிகள் விலகும். சுரத்திற்குப்பின் காணும் அசதி நீங்கும்.

இதை நீர்விட்டரைத்துத் தலையில் பற்றிட வெப்பம் மாறும். இரத்தங் கட்டிய வீக்கம், தோற்சிதைவு இவைகள்மீது பூச அவைகள் நீங்கும்.

---

## மஞ்சிட்டி—Manjitti.

**வே - பெ.—பாண்டி, மஞ்சூகம்.**

Rubia Cordifolia.

Eng.—Indian Madder.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Manjishta | మంజిష్ఠ. | Sans. | Manjishta | मञ्जिष्ठा |
| Mal. | Manchitti | മഞ്ചിട്ടി. | Hind. | Manjitha | * مجیٹھ |
| Kan. | Manjishta | ಮಂಜಿಷ್ಟ. | | | |

இது இந்தியாவின் வடமேற்கு மலைப்பிரதேசங்களிலும், நீலகிரியிலும், இதர மலைப்பிரதேசங்களிலும் பயிராகும் கொடிவகை.

**ப - உ.**—வேர்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - **Emmenagogue.**

**குணம்.**—கருப்பாசய அழுக்கை நீக்கும். இரத்தம், நீர் முதலியவை கட்குச் செந்நிறத்தை யூட்டும்.

**வ - கு.**—இவ்வேரைக் கஷாயமிட்டுக் கொடுக்க மேற்கூறிய குணங்களைத் தரும்.

வேரைத் தேன்விட்டரைத்து முகத்தின் அழகைக் கெடுக்கின்ற முகப்பரு முதலியவைகளுக்குப் பூச அவை குணமாகும்.

இதை அரைத்து வீக்கம், புண், சருமப்புடைகளுக்குப் பூசலாம்.

அதிமதுரத்துடன் இதைச்சேர்த்துக் காடிவிட்டரைத்து எலும்பு முறிவினு லுண்டான நோய்க்கும், வீக்கத்துக்கும் போடலாம்.

மஞ்சிட்டி, சந்தனம், மருட்கிழங்கு சமனெடை சேர்த்தரைத்து அல்லது பொடித்து நெய்யில் சேர்த்துக் காய்ச்சித் தீச்சுட்ட புண்மீது தடவலாம்.

இதைத் தைலங்களில் சேர்ப்பதுண்டு.

இதை அடிக்கடி உபயோகித்தால் சித்தப்பிரமையை உண்டாக்கும் என்பது சிலர் அபிப்பிராயம்.

## மணிப்புன்கு—Manippungu.

வே - பெ.—பொன்னாங்காய், புன்குமரம், பூவந்தி.

Sapindus trifoliatus.

Eng.—Soap-nut tree. Arishtaphalam.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Kunkudu chettu | కుంకుడు చెట్టు | Sans. | Phenila | फेनिल: |
| Mal. | Ponnánkai | പൊന്നാങ്കായ്. | Arab. | Findaqe-hindi | * فندق هندى |
| Kan. | Kukatekayi | ಕುಕ್ಕುಟೆಕಾಯಿ. | Pers. | Ratah | * رطوله |
| | | | Hind. | Ritha | * ریٹھا |

இம்மரம் தென்னிந்தியாவில் எங்கும் சாதாரணமாய் வளருகின்றது. தோட்டங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது.

**ப - உ.**—இலை, காய்.

**சுவை.**—கைப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- குமட்டலெழுப்பி - வமனவ்யதாகாரி - Nauseant.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**குணம்.**—இதனால் அதிசாரம், வயிற்றுநோய், தலைநோய், சூதகநோய், இவைகள் விலகும்.

**வ - கு.**—இதனிலையைத் தலைநோய், வாதநோய் இவைகளுக்குக் கஷாயமிட்டுக் கொடுக்கலாம்.

இலையை நீரிலிட்டுக் காய்ச்சி வாத வீக்கங்களுக்கு வேது பிடிக்கலாம்.

இதன் காயைச் (சவுக்காரம்) சோப்புக்குப் பதிலாக உபயோகிக்கிறார்கள்.

காயை உரைத்து அதில் ஒன்று அல்லது இரண்டு வராகனெடை கொடுக்க வாந்தியாகும்.

அளவில் அதிகமாய் கொடுத்தால் பேதியாகும்.

4 குன்றியளவில் கொடுத்துவர, குமட்டலை உண்டாக்கிக் கோழையை அகற்றும்.

ஒரு குன்றியளவில் வயிற்றுநோயைப் போக்கும்.

கொட்டையை நீரில் நன்றாய் உரைத்து வடிகட்டிச் சாப்பிட, அசீரணபேதி முதலிய வயிற்றுக் கோளாறுகளை நீக்கும்.

வேரைப் பிழிந்து சாறெடுத்து, சிறிது மூக்கில் விடத் தலைவலி, காக்கைவலி முதலியன சாந்தமாகும்.

வேரைக் காடிவிட்டரைத்துத் தேள்கடி முதலிய கடிவிடங்களுக்குப் பூசலாம். நெறிகட்டிகள் கரையும். மேலும், வாதவீக்கம், கீல்வாதம் முதலியவைகளுக்கும் வெளிப்பிரயோகமாக வழங்கலாம்.

## மதனகாமப்பூ—Madanakámappú.

**வே - பெ.**—காமப்பூ, மதனகாமேசுரப்பூ, மதனகாமியப்பூ.

Pergularia tomentosa.

(Cycas Circinalis).

The cone of the male variety.

Tel. { Madana-mastu మదనమస్తు. ; Madana-kamakshi మదనకామాక్షి. }

Mal. Rinbadam റിമ്പദം.

Sans. Madanakameswara मदनकामेश्वरः

Hind. Janglí-madan-mast-ká-phul جنگلی مدن مست کا پھول *

Duk. Pahári-madan-mast-ka-phúl پہاڑی مدن مست کا پھول *

இது மேல்கரை நாடுகளிலுள்ள மலைகளில் வளருகிற ஒருவகைச் சுற்றி ஏறுங் கொடியின் பூ. இப் பூவானது ஆண், பெண் என இருவகைப்படும். அதில் ஆண் வகைப்பூவே விசேஷமாய் உபயோகப்படுகிறது.

**ப - உ.**—பூ, விதை, தண்டு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- துயிலாக்கி - நித்திராகாரி - Narcotic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**குணம்.**—தாதுவைப் பலப்படுத்தும். இந்திரியத்தைக் கட்டும்.

**வ - கு.**—பூவை உலர்த்திச் சூரணித்து வேறு மருந்துகளுடன் சேர்த்து இலேகிய பதமாக்கிக் காலை, மாலை, ஒரு சுண்டைக்காய்ப் பிரமாணம் உண்டுவர, தேகபலத்தைக் கொடுத்து, இந்திரியத்தைக் கட்டும்.

இதன் சூரணத்தைப் பாலிலிட்டுக் காய்ச்சி இரவில் படுக்கைக்குப் போகு முன் சாப்பிட, நல்ல நித்திரையை யுண்டாக்கும்.

முற்றினபூவை அரைத்து வேதனையுள்ள இடங்களிற் பூச, வேதனை குறையும்.

விதை, தண்டு முதலியவைகளை உலர்த்திப் பொடித்து மாவாக்கி ஏழை மக்கள் உணவாக அருந்துவார்கள்.

---

## மந்தாரை (சிவப்பு)—Manthárai (Sivappu).

**வே - பெ.**—பூங்காரம்.

Bauhinia Purpurea.

Tel. { Devakanchanamu దేవకాంచనము. ; Bódanta chettu బోదంత చెట్టు. }

Mal. Mantharam മന്ദാരം.

Kan. { Mandara ಮಂದಾರ. ; Kanchivala ಕಂಚಿವಲ. }

Sans. Kánchanara काञ्चनारः

Hind. { Kachnar * کچنار ; Khairwál * کھیر وال }

மந்தாரையில் பலவினங்களுண்டு. இவைகள் இந்தியாவின் பலபாகங்களிலும் பயிராகின்றது. **அந்திமந்தாரை, காட்டுமந்தாரை, கொக்கிறகு மந்தாரை** (கொக்குமந்தாரை), **சிவப்புமந்தாரை, வெள்ளைமந்தாரை** எனப் பல பிரிவுகளுடையது. இவற்றில் அந்திமந்தாரை - **அந்திமல்லி** எனவும் காட்டுமந்தாரை - **காட்டாத்தி** எனவும் பெயர் பெறும். இவ்விரண்டையும் முன்னரே கூறியுள்ளோம். மற்ற மூன்றின் குணங்களும் ஏறக்குறைய ஒன்றுபட்டேயிருத்தல்பற்றி இங்கு அவற்றின் பொதுச்செயல்களையே வரைந்திருக்கின்றோம். இவற்றில் சிவப்பு மந்தாரை விசேஷித்தது.

**ப - உ.**—பூ, பட்டை, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பூ - வேர்.**
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**பட்டை.**
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
உரமாக்கி - பலகாரி - Tonic.
துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.

**பூ.**

**குணம்.**—இது ராஜவசியத்தையும், விழிக்குக் குளிர்ச்சியையும் செய்யும். சரீர வெப்பத்தை நீக்கும்.

மந்தாரப் பூகுளிர்ச்சி மன்னர் வசியமுமாம்
செந்தா மரைத்திருவே ! செப்பக்கேள்—மந்தாரங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காணுங் கொதிப்பகற்றும்
மண்ணில்நறும் பூவெனவே வை. (அ.கு.)

**பூ.**

**வ - கு.**—இதை உலர்த்திப் பொடித்துச் சிறிது சருக்கரையுடன் கலந்துண்ண மலமிளகும்.

கண்ணுக்குக் குளிர்ச்சியை யுண்டாக்கக்கூடிய சில தைலங்களில் இது சேரும்.

பூமொக்கைக் கஷாயமிட்டுக் குடித்துவர, இருமல், இரத்தமூலம், இரத்தமூத்திரம், பெரும்பாடு இவை நீங்கும்.

**பட்டை.**

இத்துடன், வேலம்பட்டை, மாதுளம்பூ இவைகளைச் சேர்த்துக் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவர, வாய்நீரூறல், தொண்டைப்புண் இவை நீங்கும்.

பட்டையைச் சுக்குத்தூள் சேர்த்துக் கழுநீர் விட்டரைத்துக் கண்டமாலைக்குப் பூசலாம்.

பட்டைக்கஷாயம் அதிசாரத்தை நிறுத்தும். அழுகிய விரணங்களை இக்கஷாயம் விட்டுக் கழுவ, அவை சுத்தமாகும்.

**வேர்.**

வேர், பட்டை, பூ இம்மூன்றையும் சமனெடை சேர்த்துக் கழுநீர் விட்டரைத்துக் கட்டிகள் மீது பூசக் கட்டிகள் பழுக்கும்.

இதைக் கஷாயமிட்டுக் குன்மம், வயிற்றுவலி முதலியவைகளுக்கு வழங்கலாம்.

ஸ்தூல ரோகத்துக்கு இதன் வேர் பயன்படும்.

## மயிர்மாணிக்கம்—Mayir-mánikkam.

Sida spinosa.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Mayilu manikkyamu<br>మయిలుమాణిక్యము. | | Arab. | Hulbahe-Berri. | * حلبہ بری |
| Mal. | Mayir manikkam<br>മയിർമാണിക്കം. | | Pers. | Shanblide-Berri. | * شامبلدہ بری |
| Kan. | Kádu-manthya<br>ಕಾಡುಮೆಂತ್ಯ. | | | | |
| San. | Khará-yashtika.<br>खरयष्टिका | | Hin. / Duk. | Jangli-méthé. | * جنگلی میتھی |

இச்செடியானது இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் நஞ்சை நிலங்களில் மார்கழி, தை மாதங்களில், ஏராளமாய் வளர்ந்து பயிராகும்.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை.**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ நிக்தகாரி - Demulcent.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**வேர்.**
உரமாக்கி - பலகாரி - Tonic.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதனுல் வெள்ளையும் க்ஷயமும் நீங்கும். இதில் முறைப்படி சூதஞ்சேர்த்துண்ண விரணம் ஆறும்.

மயிர்மாணிக் கத்தால் வளர்மேகம் போகுஞ்
செயிரான மேகவெட்டை தீரும்—கயரோகம்
மாவிரணம் போக்கஇதில் வல்லிரதஞ் சேர்த்தரைத்துத்
தாவியுண்பா ருண்டறிந்தோர் தாம். (அ.கு.)

**வ - கு.**—இலையை அரைத்துக் கற்கம்செய்து தயிரில் கலக்கிக் கொடுக்க வெள்ளை, வெட்டை நீங்கும்.

தலையில் தேய்த்து 2 - 3 மணி நேரம் பொறுத்துத் தலைமுழுகி வரக் கண்ணெரிச்சல் நீங்கும். தேகம் குளிரும்.

வேரைக் கஷாயமிட்டுக் கொடுக்க மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

இதன் சமூலத்தால் இலிங்கம் கட்டுப்படும்.

## மரக்காரை—Marakkárai.

**வே - பெ.—மதுக்காரை, மராடம், மருவகம், மருக்காரைப்பழம்.**

Randia Dumetorum.

Gardenia. Dumetorum.

Eng : Emetic nūt.

| | | | | |
|---|---|---|---|---|
| **Tel.** | **Mandá-káyalu** మందా కాయలు. **Mranga-káyalu** మ్రంగకాయలు. | | **Arab.** | **Jauzul-qouí** * جوزالقئى **Jouzal-kouṣal** * جوز القيسول |
| **Mal.** | **Karalik-káya** കരളിക്കായ. | | | |
| **Kan.** | **Mangari-kai** ಮಂಗರಿಕಾಯಿ. | | **Hind.** | **Mén-phal.** * ميں پهل |
| **Sans.** | **Madana-phalam** मदनफलम् | | **Duk.** | **Méd-phal** * ميد پهل |

*இது, தென்னிந்தியாவிலும், இந்தியாவின் கிழக்குப் பிரதேசங்களிலும் பயிராகும் ஒருவகைச் சிறுமரம்.*

**ப - உ.**—*பழம், பட்டை (வேர்).*

**சுவை.**—*துவர்ப்பு, சிறுகைப்பு,* **வீரியம்** - *வெப்பம்,* **பிரிவு** - *கார்ப்பு.*

**பழம்.**

**செய்கை.**
- *வாந்தியுண்டாக்கி - வமநகாரி -* **Emetic.**
- *வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி -* **Diaphoretic.**
- *இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி ·* **Antisposmodic.**
- *துவர்ப்பி - ஸங்கோஸனகாரி -* **Astringent.**
- *கோழையகற்றி — கபஹரகாரி—***Expectorant.**

**வேர்.**

**செய்கை.**
- *கோழையகற்றி — கபஹரகாரி —* **Expectorant.**
- *வாந்தியுண்டாக்கி — வமனகாரி —* **Emetic.**
- *அகட்டுவாய்வகற்றி — உதரவாதஹரகாரி —* **Carminative.**

**பழம்.**

**குணம்.**—*இதனுல் சுரம், வயிற்றுப் பொருமல், மயக்கம், மகோதரம் போகும். அறிவு உண்டாகும்.*

*சுரமும் பொருமலும்போந் தொல்மயக்க மில்லு*
*தரஊதல் போம்அறிவுந் தங்கும்—பருக*
*அரக்காகு மெல்லிதழ்வாய் ஆரணங்கே ! கான*
*மரக்காரை யின்கனியை வாழ்த்து.* (அ.கு.)

**வேர்**

**குணம்.**—*வாந்தியை யுண்டுபண்ணி கோழையை யகற்றும். கபத்தைத் தீர்க்கும். திரிதோடத்தைப் போக்கும். மேலும், சீதக்கடுப்பு இரத்த பித்தம், கரப்பான், வாதம், மாந்தகணம் இவைகளையும் போக்கும்.*

மரக்காரை யின்வேர்தான் வாந்தி மருந்தாந்
திருக்காஞ்சி லேத்மமதைத் தீர்க்கும்—முருக்காருஞ்
செய்யவிதழ் மாதே ! திரிதோட மும்போக்கும்
வெய்ய மருந்தெனவே விள்.

சீதக் * கடுப்பகலுஞ் சேராது ரத்தபித்தம்
மாதே கரப்பான்போம் வாதம்போம்—போதப்
பெருக்கான மாந்தகணம் பேரும் உலகில்
மரக்காரை வேரருந்து வார்க்கு. (அ.கு.)

**வ - கு.**—பழத்தை உடைத்து உள்ளிருக்கும் விதைகளை நீக்கிப் பழச்சதையை மாத்திரம் உலர்த்திடித்து வஸ்திரகாயம்செய்து மறுபடியும் நன்றாக உலர்த்தி அரைத்து மெல்லிதான துணியில் திரும்பவும் வஸ்திரகாயம் செய்து உலர்த்திக் காற்றுபுகாமல் ஒரு புட்டியில் அடைத்துவைத்துக் கொண்டு ¾ வராகனெடை வீதம் தேன் அல்லது சருக்கரையுடன் கூட்டிக்கொடுக்க, செவ்வையாய் வாந்தியாகும். இச்சூரணத்தில் குறைந்த அளவு அதாவது ¼ முதல் ½ வராகனெடை வீதம் சீதபேதிக்குக் கொடுக்கச் சுகமுண்டாகும். இப்பிகாக் (Ipecac) கின் குணம் இதற்குண்டு.

2 - 3 பழங்களை உடைத்து ஆழாக்கு நீரில் ஊறவைத்துப் பிசைந்து வடிகட்டிக் கொடுத்தாலும் வாந்தியாகும். வெந்நீர் குடிக்க அதிகம் வாந்தியாகும், கபத்தையும் கண்டிக்கும்.

சீதபேதிக்கு 1 - 2 காய்கள் போதுமானது. அபினி சேர்த்துக் கொடுத்தால் இம்மருந்தின் வீரியம் அதிகப்படும்.

பழம் கருவையழிக்கும் செயலுடையதால் கருப்பிணிகளுக்கு இதை உபயோகித்தல் தகாது.

**பட்டை, வேர்.**

பட்டை அல்லது வேரைக் கஷாயமிட்டு ஆழாக்கு வீதம் கொடுக்க வாந்தியாகும். ¼ முதல் ½ ஆழாக்கு வீதம் கொடுக்க, அதிசாரம், சீதபேதி இவைகளையுங் கண்டிக்கும். பட்டையை உலர்த்திப் பொடித்துச் சூரணம் செய்து 1 - 2 குன்றி உள்ளுக்குக் கொடுத்து வர, வாதநோயில் உண்டாகும் வேதனையைத் தணிக்கும்.

பட்டை அல்லது வேரை அரைத்து மேற்பூச்சாக வாதவீக்கங்களுக்குப் பூசலாம்.

---

## மரிமா—Marimá.

**வெ - பெ.—புளிமா, கானமரி.**

Spondias' Mangifera.

Eng : Hog-plum or Wild mango.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Adavi - mamidi అడవిమామిడి | | Kan. | Ambate | ಅಂಬೇಟೆ. |
| Mal. | Ambalam | അമ്പാഴം. | Hind. | Ambada | * اسبادا |

இதற்கு **மரியங்காய்** அல்லது **புளிமாங்காய்** மரம் எனப்பெயர். இம்மரம் இந்தியாவில் சாதாரணமாய்ப் பயிராகிறது.

**ப - உ.**—காய்.

**சுவை.**—புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { காமம்பெருக்கி — காமவர்த்தநி — Aphrodisiac.
பசித்தீத்தூண்டி — ஜடராக்னிவர்த்தநி — Stomachic.

**குணம்.**—இதனால் வாய்க்கசப்பும், அரோசகமும் நீங்கும். சுரரோகிகளுக்கு உதவும்.

வாயின் கசப்பகலும் மாறு அரோசகமும்
ஓயுஞ் சுரத்தோர்க் குவப்பாகுந்—தூயவரித்
தேனமரும் வார்கூந்தற் றெய்வப் பெடையனமே !
கானமரி யங்காயைக் கண்டு. (அ.கு.)

**வ - கு.**—இதன் காயைத் துவையல் செய்து அல்லது ஊறுகாய் செய்து சாப்பிடுவதனால் மேற்கண்ட குணங்களை அடையலாம்.

இலைக் கொழுந்தையும் துவையல் செய்து சாப்பிடலாம். இதனால் அரோசகம் நீங்கும். பித்தஞ் சாந்தமாகும்.

---

## மரு-கொழுந்து—Marukozhunthu.

**வே - பெ.—தமனகந்தம், மருக்கொழுந்து**

Aristalochia labiosa.

Mal. **Kozhunna** കൊഴുന്ന്.

இந்தியாவில் பயிர் செய்யப்படும் வாசனைச் செடிகளில் மரு-கொழுந்தும் ஒன்றாகும், இவ்விரண்டும் செய்கையில் சற்றேறக்குறைய ஒத்திருக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உரமாக்கி - பலகாரி - Tonic.
பசித்தீத்தூண்டி - ஜடராக்நிவர்த்தநி - Stomachic.
துயரடக்கி - வேதநாசாந்தநி — Anodyne.
இசிவகற்றி — அங்காகர்ஷணநாசநி — Antispasmodic.

**குணம்.**—**மருவுக்கு** - நேத்திரபடலம், கபதோடம், உட்சூடு நீங்கும். **கொழுந்து**—மிகுபசியையும், பலத்தையும் கொடுக்கும். சிரங்கு, விரணம், வீக்கங்களுக்கும் வழங்கலாம்.

கண்ணிலுறு தோடங் கபஞ்சூ டிவைபோக்கும்
ஒண்ணனல்கைப் புக்காரம் உள்ளமரும்—மண்ணிற்
கொழுந்தம் மருக்குணத்தைக் கொண்டிருந்த போதுந்
தழைந்தபசி வன்மைதருஞ் சாற்று. (அ.கு.)

**வ - கு.**—மரு அல்லது மருக்கொழுந்து ஒரு பலம் ; வெந்நீர் அரைப்படி ; இதை ஒருமணி காலம் மூடிவைத்து ஊறியபின் வடிகட்டிக்கொள்ளவும். இதில் $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ ஆழாக்கு உள்ளுக்குக் கொடுக்க மேற்கண்ட நோய்கள் சாந்தமாகும்.

இதன் இலையை அரைத்து எண்ணெயிற்கலந்து வெயிலில்வைத்து எடுத்துச் சொறி, சிரங்கு, விரணம் முதலியவைகளுக்குப்பூசக் குணமாகும்.

இதை சிற்றாமணக்கெண்ணெய்விட்டு வதக்கி ஒற்றிடமிட வீக்கங்கள் கரையும்.

## மருது—Maruthu.

**வே - பெ.—அருச்சுனம், கருபம், பூதவம், பூலத்தி, மருதமரம்.**

Terminalia Arjuna.

Eng.—The Arjuna Myrobalan.

Tel. Maddi. మద్ది.

Mal. Marutha. മരുത്.

Kan. Kaidaryavu. ಕೈದಾರ್ಯವು.

Sans. Arjuna. अर्जुन:

Hind. Arjuna. * ارجونا
Kaiphal. * کائی پھل

இம்மரம் இந்தியாவில் எல்லாப் பாகங்களிலும் பயிராகிறது. இதில் **வெண்மை, செம்மை** என இரண்டு சாதிகளுண்டு. இவ்விரண்டின் குணங்களும் ஒன்றே.

**ப - உ.**—இலை, பழம், வித்து, பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பட்டை.**

உரமாக்கி - பலகாரி - Tonic.
இருதயவெப்புண்டாக்கி - ஹ்ருதயஉஷ்ணகாரி - Cardiac-stimulant.

**பழம், விதை.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—இது அதிமூத்திரம், பிரமியமயக்கம், விதாகம், நீங்காத சுரத்தில் வரும் ஆயாசம், பெருவியாதி, கிருமிரோகம், உதரநோய், வறட்சூலை இவைகளைப் போக்கும்.

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமென வோடக் கடத்துங்காண்—போத
மயக்க மொடுதாக மாருச் சுரத்தின்
தயக்கமறுக் கும்மருதஞ் சாற்று.

குட்டரோ கங்கிருமி கோர வயிற்றுவலி
துட்டவறட் சூலை தொலையுங்காண்—இட்டிப்
பொருதம்பா மென்னும்விழிப் பூவையரே ! நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து. (அ.கு.)

**இலை.**

**வ - கு.**—அரைத் தோலா இலையை ஒரு ஆழாக்குப் பாலில் அரைத்துக் கலக்கித் தினமிருவேளை மூன்றுதினம் பத்தியத்துடன் சாப்பிட்டுவர, பித்த வெடிப்பு நீங்கும்.

**பழம்.**

இதை நன்றாக அவித்துப் பிசைந்து புண்களின் மீது வைத்துக் கட்டி வரத் துர்விரணங்களெல்லாம் சீக்கிரம் குணமாகும்.

**பட்டை.**

பட்டையைச் சூரணஞ்செய்து நசியமிடத் தலைவலி நீங்கும்.

மேற்படிச் சூரணத்தை இஞ்சிச் சாற்றிற் கொடுக்க, வாந்திபேதியினுற் களைத்து இருப்பவர்கட்கு உற்சாகத்தையூட்டி, மூர்ச்சையிலிருந்து அவர்களைத் தெளியப்பண்ணும்.

மேற்படிச் சூரணத்தினுல் பல் துலக்கிவரப் பல்வலி தீரும்.

பட்டைக் கஷாயத்தினுல் விரணங்களைக் கழுவிவர அவை சீக்கிரத்தில் குணமடையும்.

### பட்டைத்தைலம்.

(தந்வந்தரி - தைலம்—500.)




தப்பா தையா தாணியில் மாந்தர்க்கு
ஒப்பா மருதம் பட்டைத் தைலங்கேள்
செப்பா மூலி சிறந்த பொடுதலே
அப்பா மூன்று மறையப் பாண்டமிடே.

பாண்டந் தன்னிற் பதக்கு சலமிடு
பூண்ட கஷாயம் பொருந்தவே செய்திடு
ஆண்டு மெண்ணெய் யறியச் சமனதாய்
தீண்டுமே பதந் தெளியவே காய்ச்சிடே.

காய்ச்சும் வாலே கருதும் மனேன்மணி
ஆச்சி பாத மடிவணங்கித் தொழு
மூச்சி டாமல் முறையுடன் தான்முழு
போச்சு மேகம் புகன்றேடிப் போகுமே.

போகும் பாண்டு புகலுங்கா மாலேபோம்
ஏகும் ரோமம் எழும்பும் பெருஞ்சிரங்
காகுமே சொறி கருமேகந் தானறும்
பாகுதந் வந்திரி பாடின துண்மையே.

### பட்டை.

பட்டையைக் குடிநீர் செய்துகொடுக்க இரைப்பிருமல், க்ஷய அதிசாரம், கப சம்பந்தமான சுரங்கள் ஆகியவை தணியும்.

இதிலிருந்து எடுக்கும் குழித் தைலத்தில் ஒரு துளி காதில் விடக் காது வலி நீங்கும். அன்றியும் இத்தைலத்தையே கண்டமாலே, பெருவியாதி சம்பந்தமான நோய்களில் உள்ளுக்குக் கொடுக்கலாம்.

பட்டையை அரைத்துத் தண்ணீரிற் கலந்துக் குழம்புப் பக்குவமாய்க் காய்ச்சி எடுத்துக் கண்டமாலே சம்பந்தமான விரணங்களுக்கும், பெருவியாதி சம்பந்தமான விரணங்களுக்கும் போட்டுவரக் குணமாகும்.

பட்டையை ஆடாதோடைச்சாற்றில் ஏழுமுறை ஊறவைத்து வெயிலில் உலர்த்திப் பின் சூரணஞ் செய்து, தேன், கற்கண்டு, வெள்ளாட்டுப்பால் சேர்த்து, கய நோயாளிக்குக் கொடுக்க இருமல், இரத்த கோழை நீங்கி, உள்ளுறுப்புகளின் புண்களும் ஆறும். இதை அனுபானமாகக் கொண்டு, முத்து, பவளம், தங்கம், வங்கம், அப்பிரகம் முதலியவைகளின் பற்ப, செந்தூரங்களைப் புகட்ட கயரோகம் நீங்கும்.

### விதை.

இதை நன்ருக அரைத்து இஞ்சிச் சாற்றுடன் கலந்து, கால்களிற் பூசக் குளிர்ச்சி நீங்கி வெப்பமுண்டாகும். இதையே ஊழி நோயிற் கைகால் சில்லிட்டிருக்கும்போது பூசிவர அதிக குணந்தரும்.

யூனானி வைத்தியர்கள் இப்பூவை அல்லது இலையை அரைத்துத் தொடையிடுக்கு, குறி முதலிய இடங்களில் பற்றுப்போட்டு அதனால் காமத்தை நீடிக்கப் பண்ணுகிறார்கள்.

பூவை அரைத்துப் பூச வீக்கங் குறையும்.

பூவை வைத்து மார்பிற் கட்ட, பால்சுரப்பு நீங்கும்.

**வேர்.**

இதன் வேர்த்தூளையும், வசம்புத்தூளையும், பழச்சாறு விட்டு மத்தித்துத் தேய்க்க சருமநோய்கள் தீரும்.

**குறிப்பு.**—மல்லியில் பலசாதியுண்டு. அவை **சாதிமல்லி, ஊசிமல்லி, குடமல்லி** போன்றனவாம். குணத்தில் பெரும்பாலும் ஒன்றுபட்டேயிருக்கும்.

---

## மருள்—Marul.

### Sanseviería Roxburghiana.

| | | |
|---|---|---|
| **Tel.** Chāga. చాగ. | | **San.** Moorva. मूर्वा |
| **Mal.** Katukapel. കടുക്കപ്പൽ. | | |
| **Kan.** Heggurutika. ಹೆಗ್ಗುರುಟಿಕೆ. | | **Hind.** Murhari. * مرهری |

இது இந்தியாவில் எல்லா விடங்களிலும் சாதாரணமாய்ப் பயிராகிறது.

**ப - உ.**—பட்டை, கிழங்கு.

**சுவை.**—கார்ப்பு, இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நீர்மலம்போக்கி - விரேசநி - Purgative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதனால் கபக்கட்டு, பெருவயிறு, பலவித சோபை, மூலம் இவைபோம். தீபாக்கினி உண்டாகும்.

தொண்டைக்கட் டையந் தொலையும் மகோதரமும்
பண்டைப்பல் வீக்கம் பறக்குங்காண்—கெண்டைவிழி
மானே! மருள்கிழங்கால் மாறுமூ லங்களெலாந்
தானே பசியெழும்புந் தான். (அ.கு.)

**வ - கு.**—இதன் மடலை அனலில் காட்டி வதக்கிப் பிழிய காதுவலி நீங்கும்.

இதனின்று நாரெடுத்து உபயோகப் படுத்தலாம்.

கிழங்கைக் கஷாயமிட்டுத் தாகம், மார்புநோய், சிரங்கு, சுரம், வாத நோய், நெறிக்கட்டு முதலியவைகளுக்கு வழங்கலாம்.

கிழங்கைக் கிருதமாகச் செய்து, நாட்பட்ட இருமல், கயநோய் முதலியவைகளுக்குக் கொடுக்க அவை சாந்தமாகும்.

இதன் சுரசத்தைச் சிறு குழந்தைக் குண்டாகும் கபக்கட்டை நீக்கக் கொடுப்பதுண்டு.

## மல்லி—Malli.

**வே - பெ.—அனங்கம், புருணம், மல்லிகை, மவ்வல், மாலதி, விசகலி.**

Jasminum Sambæ.

**Eng.—The Arabian Jasmine.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Malle. మల్లె. | | Kan. | Mallige. ಮಲ್ಲಿಗೆ. | |
| Mal. | Cheru Pichchakam. ചെറു പിച്ചകം. | | Sans. | Vaarshiki. वार्षिकी | |
| | | | Hind. | Mogra. * موگرا | |

இது, மிகுந்த நறுமணத்தைத் தரக்கூடிய புட்பச் செடி. இந்தியா முழுமையும் கிடைக்கக்கூடியது. வெப்பப் பிரதேசங்களில் வளரும்.

**ப - உ.**—இலை, பூ, வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பொது.**

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—இதனால், திரிதோடம், தலைநோய், தேகவெப்பம், கண்படலம் இவை நீங்கும். நீங்காத ஒளியும், மணமும் உண்டாகும்.

**பூ.**

போகமிக உண்டாகும் பொங்குகபங் கட்பிரமை
ஆகஅனல் சூனியமும் அண்டுமோ ?—பாகனையாய் !
மன்னு திருவசியம் வாய்க்குஞ்சூ டென்றெவரும்
பன்னுமல்லி கைப்பூவாற் பார். **(அ.கு.)**

**இலை.**

**வ - கு.**—இதன் இலையை வாயிலிட்டு மெல்ல வாய்ப்புண் முதலியன மாறும்.

இலைச்சாறு அல்லது இலையிலிருந்து எடுக்கும் எண்ணெய் காது நோயை மாற்றும். சீயை நிறுத்தும். இலைச்சாறு காலாணியைச் சுகமாக்கும்.

இலையை நெய்யில் வறுத்து ஒற்றிடமிட, தொண்டை நோய், முதலியன நீங்கும்.

**பூ.**

பூக்களிலிருந்து அத்தர் செய்யலாம். இதிலிருந்து மிகவும் வாசனையுள்ள எண்ணெய் செய்து, தலையில் தேய்த்து முழுகிவர தேகத்துக்குக் குளிர்ச்சியைத் தரும். தலைவலி, சருமரோகம், கண்ணெரிச்சல் முதலியன தீரும்.

## மன்னு—Manna.

**வே - பெ.—மேனு.**

Tamarix Gallica.

Eng.—Manna.

Sans. Jhavuka जावुका

Pers. Gazmazaj * گزمازج

Hind. Jhan * جہان

இது அரேபியா, முதலிய மேல் நாடுகளில் ஏராளமாயுண்டு. **மான்னு** என்னும் ஓர் செடியைக் கீறி எடுக்கும் பால் மன்னு எனப்படும். இது செங்கல் மங்கல் நிறமாயும், துண்டுகளாயும், ஒரு பக்கம் மேடாயுமிருக்கும். உட்புறம் வெண்மையாயும், பளபளப்பாயுமிருக்கும்.

**ப – உ.**—பால்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணமும் வழக்கும்.**—நிலாவரை, சீமைஇந்துப்பு இவைகளுடன் சேர்த்துப் பெரியவர்களுக்கு 1½—2½ பலம் வீதமும் சிறியவர்களுக்கு 1½—4 வராகனெடை வீதமும் கொடுக்க, யாதொரு குமட்டலுமின்றிச் செவ்வையாகப் பேதியாகும். இது குழந்தைகட்கு மிக நன்று.

---

## மா—Má.

**வே - பெ.—ஆமிரம், ஆம்பிரம், எகின், சிஞ்சம், கொக்கு, சூதம், சேகரம், சேதாரம், மாழை, மாந்தி.**

B. N.—Mangifera Indica.

Eng.—Mango tree.

**Tel.** **Mamidi** (Chettu) మామిడి (చెట్టు.)

**Mal.** **Mavva** മാവ്.

**Kan.** **Mavina (Mavu)** ಮಾವಿನ (ಮಾವು.)

**Sans.** **Amra (Vriksha)** आम्र:

**Hind.** **Anbkaper - Amkaper** * امکاپر * انکاپر

இது அதிகமாய் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகும் மர வகைகளில் ஒன்று. இதில் பலவகைச் சாதிகளுண்டு. இது சாதாரணமாய் எங்கும் கிடைக்கும்.

**ப - உ.**—இலை, பூ, பிஞ்சு, காய், பழம், வித்து, மரப்பட்டை, வேர்ப் பட்டை, பிசின் முதலியன.

**பொது.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**காய்.**

**சுவை.**—புளிப்பு, துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**பருப்பு.**

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பிஞ்சு.**

உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**காய்.**

மலமிளக்கி - மலகாரி - Laxative.
துவர்ப்பி - ஸங்கோசநகாரி - Astringent.

**பழம்.**

மலமிளக்கி - மலகாரி - Laxative.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
உரமாக்கி - பலகாரி - Tonic.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**கொட்டைப்பருப்பு.**

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutritive.

**மரப்பட்டை, வேர்ப்பட்டை.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.—மாம்பிஞ்சு** இதுவே " சூதப்பிஞ்சு."

இதனால், வாதாதி முத்தோடப்பிரகோபம், அரோசகம், வாந்தி, அக்கினிமந்தம் ஆகியவை போம்.

கவைவாத பித்த கபம்அருசி வாந்தி
சுவைமறுத்த மந்தமெனுந் தோடம்—இவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே !
சூதத்தின் புன்வடுவைத் துய். (அ.கு.)

**மாங்காய்.**

இதனால், சுக்கிலநாசம், மிகுவாயு, சிரங்கு, ஆறுதவிரணம், சருமவெடிப்பு, தந்தங்கூசுதல், சொற்குன்றுதல் ஆகிய இவை யுண்டாம். பசியும் விலகும்.

தாதுநட்டம் வாதந் தனிக்கிரந்தி யாம்பசிபோங்
காதுமுட்டப் பக்குவிடுங் காயமதில்—ஓதுகின்ற
பாங்காறாப் புண்வளரும் பற்கூசுஞ் சொற்குளறும்
மாங்காயுண் பாரை மறு. (அ.கு.)

**மாம்பழம்.**

மாம்பழத்தை யுண்பதனால், நமைச்சலும் மார்பு, எரிச்சலும், கண்நோயும், கரப்பானும், கிரந்தியும் அதிகரிக்கும். பசி நீங்கும்.

தின்றுற் றினவெடுக்குந் தீபனம்போம் நெஞ்செரிவாம்
அன்றே விழிநோய் அடருங்காண்—துன்றிமிக
வாதக் கரப்பானும் வன்கிரந்தி யும்பெருகுஞ்
சூதக் கனியின் சுகம். (அ.கு.)

**மாம்பழம், காய், பிஞ்சு.**

வேத சத்திய மாக விளம்புவோந்
தாது விர்த்திக்குந் தம்பன மாங்கனி
போதம் மர்த்தனம் புன்காயி னுல்வடு
வாத பித்த கபங்களை மாற்றுமே. (அ.கு.)

**மாங்கொட்டை.**

இதற்குள்ளிருக்கும் பருப்பினுல், சீதபேதி, இரத்தாதிசாரம், உதிரக் கடுப்பு, மூலச்சூடு, பெரும்பாடு, மலக்கிருமி ஆகிய இவை போம்.

பேசுமே சீதப் பெருக்குஞ்சோ ரிக்கடுப்பும்
வீசுமோ மூலமுறு வெங்கொதிப்பு—மாசுடைய
பூங்கொட்டை யைத்தள்ளிப் போட்டுக் கனியில்வந்த
மாங்கொட்டையைக் காணில் வாது. (அ.கு.)

**மாமர வேர்ப்பட்டை.**

இதன் வேர்ப்பட்டையால், சீதரத்தபேதி, வயிற்றுக்கடுப்பு, வாந்தி என்னும் இவை போம்.

சீதரத் தப்போக்கைச் சிக்கெனவே தான்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பைப் போக்குங்காண்—ஓதுகின்ற
வாந்தியையும் தீர்க்கும்வெளி மாமரத்தின் வேர்ப்பட்டை
பூந்துகின் மாதே ! புகல்.

**மாம்பிசின்.**

மாம்பிசினுல், பெரும்பாடு என்கின்ற அசிர்க்கர நோயும், இரத்தாதிசாரமும், வாதப்பிரமேகவெள்ளையும் நீங்கும்.

பெரும்பாடெங் கேரத்தப் பேதியெங் கேமுக்கல்
தரும்பாழும் வெள்ளையெங் கேசாற்றுய்—கரும்பாம்பின்
நாதநிரி யாசஞ்செய் நங்காய் ! வனத்திலுறை
சூதநிரி யாசமெனச் சொல். (அ.கு.)

**இலைக்கொழுந்து.**

**(வ - கு).**—இதை உலர்த்திப் பொடித்துத் திரிகடிப்பிரமாணம் மதுமேகத்துக்குக் கொடுக்கலாம்.

**இலை.**

இலையைப் பிழிந்தெடுத்த சாறு 2 தோலா, தேன் ஒரு தோலா, பால் ஒரு தோலா, பசு நெய் ½ தோலா ஒன்றுய்க்கலந்து, இரத்த மூலத்துக்குக் கொடுக்கலாம்,

இலையைத் தேன் விட்டு வதக்கிக் கஷாயமிட்டுத் தொண்டைக்கட்டு, குரற்கம்மல் முதலியவற்றிற்குக் கொடுக்கக் குணம் தரும்.

இலையைத் தீயிலிட அதிலிருந்து வரும் புகை தொண்டைக் கம்மலை நீக்குவதோடு, விக்கலையும் நிறுத்தும்.

இலையைச் சுட்டுச் சாம்பலாக்கி வெண்ணெயில் குழைத்து, தீப்புண் வேக்காடு, முதலியவைகளுக்குப் போடச் சுகமாகும்.

### பூ.

பூவை உலர்த்திக் கஷாயமிட்டு, அதிசாரபேதி, நாட்பட்ட சீதபேதி முதலியவைகளுக்குக் கொடுத்துவரச் சுகமாகும்.

பூவை உலர்த்திய பொடியைத் தூபமிடக் கொசுவின் உபத்திரவம் குறையும்.

### பிஞ்சு.

கொட்டை முற்றாத பிஞ்சை எடுத்துக் காம்பு நீக்கி வாடவைத்து ஊசியாற் பல குத்துகளிட்டு, உப்பு நீரில் ஊறப்போட்டு வெயிலில் வைத்து உலர்த்தி உபயோகிக்கத் தீபனமுண்டாகும். அரோசகம் நீங்கும்.

### காய்.

தோலைச் சீவி எடுத்துச் சிறு துண்டுகளாக வெட்டி நெய்யில் பொரித்துச் சருக்கரை கலந்து அரைத்து மாத்திரைகளாகச் செய்து, சூதகக் கட்டுக்குக் கொடுக்கச் சுகமாகும்.

தோலை $2\frac{1}{2}$ தோலா எடுத்து தயிர்விட்டு அரைத்துக் கூழாக்கி, பேதிக்கு கொடுக்கத் தீரும்.

இதில் பலவிதத் துவையல், ஊறுகாய்கள் செய்து வழங்கலாம்.

பச்சைக்காயைக் கொண்டு வந்து தக்கபடி உப்பிட்டுக் கலந்து வைத்து அப்படியே உபயோகப் படுத்துவதுண்டு; அல்லது மிளகாய் சேர்த்துத் தாளித்து உபயோகிப்பதுமுண்டு.

மாங்காயின் மேற்றோலைச் சீவிப் பொடியாக்கி, உப்பு கலந்து தாராளமாய் எண்ணெய் விட்டுத் தாளித்து உபயோகப்படுத்தலாம்.

### பழம்.

பழத்தைத் தோல் சீவி எடுத்துவிட்டுக் கொட்டை நீக்கிச் சருக்கரை சேர்த்துக் காய்ச்சி, வாந்திபேதி (கொள்ளைநோய்) முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

பழத்தைப் பிழிந்து சாறு எடுத்துக்கொடுக்க, அது தொண்டை சம்பந்தமான வியாதிகளைப் போக்கும்.

வெளிப்பிரயோகமாக இரத்தப்போக்கை நீக்கும்.

### மாங்கொட்டைப் பருப்பு.

இரத்தமூலம், சீதபேதி ஆகியவற்றிற்கு மாங்கொட்டைப்பருப்பு ஒரு சஞ்சீவியாம்.

நாட்பட்ட சீதபேதிக்கு மாம்பருப்புடன் அபின் கூட்டிக் கொடுத்தால் மிகுந்த நன்மை செய்யும்.

கொட்டை முற்றாத மாம்பருப்பைச் சிறு துண்டுகளாக நறுக்கி வெயிலில் உலர்த்திப் பொடிசெய்து எடுத்த தூள் 3 பலம், சுக்கு, மிளகு, சீரகம் இவைகளின் தூள் வகைக்கு $1\frac{1}{4}$ பலம், மாம்பிசின் தூள் 5 வராகனெடை, அபின் 1 வராகனெடை, இதை நன்றாக அரைத்துவைத்துக்கொண்டு, மேற்கண்ட ரோகங்களுக்கு, 3 முதல் 5 குன்றிவரை நோயின் பலாபலத்தை யறிந்துகொடுக்கக் குணமாகும். அல்லது,

தனி மாம்பருப்பை மாத்திரம் தூள் செய்து முக்கால் முதல் 1½ வராகனெடை வீதம் கொடுக்கலாம்.

பருப்பை எடுத்துப் பொன்னிறமாக வறுத்துத் தூள் செய்து, 5 முதல் 10 குன்றிஎடைவரை கொடுக்க, வயிற்றுக் கடுப்பு, சீதபேதி, இரத்தபேதி ஆகிய இவைபோம்.

மாங்கொட்டைப் பருப்பு, கசகசா, சுக்கு, ஓமம் சமனெடை எடுத்துப் பழச்சாற்றாலரைத்து நெய்யில் குழப்பி வெருகடிப்பிரமாணம் கொடுக்க அதிசாரபேதி தீரும்.

### மாம்பட்டை.

இதை இடித்து அரை அவுன்ஸெடை இரசமெடுத்து பஞ்சில் நனைத்து அபானத்தில் வைத்துக்கட்ட மூலம் வெளிப்படுதல் குணமாகும்.

### அதிசாரவெந்தை நீர்.

மாம்பட்டை, கோரைக்கிழங்கு இவைகளைச் சரியெடையாய் எடுத்து இடித்துப் பிட்டவியலாக அவித்துப் பிழிந்து அதில் அதிவிடயம், இலவம்பிசின் சரியெடையாய்த் தூள் செய்து சேர்த்து கலந்து குடிக்க, அதிசாரமும் அதைச் சார்ந்த சுரமும் நீங்கும்.

### மேற்கோள்.

"முடித்துக் கனத்த கருங்குழலாய் !
முத்தக் காசு மாம்பட்டை
இடித்து நனைத்துபிட் டாய்ச்சுட்டு
மறுகப் பிழிந்திட் டதிவிடயம்
தடித்த விலவம் பிசினோடு
தகைமைப் பெறவே கொள்வீரேல்
துடித்து விருந்த வதிசாரம்
சுரத்தைப் போக்குஞ் சொன்னோமே."

### வாந்தி—கழிச்சலுக்குக் கஷாயம்.

மாம்பட்டை, நெல்லிப்பட்டை, அரசம்பட்டை, பருத்திக்கொட்டை, பருத்திப்பிஞ்சு, அத்திப்பட்டை, அத்தித்துளிர் வகைக்கு வராகனெடை எடுத்து 2 படி தண்ணீர் விட்டு ¼ படியாகக் காய்ச்சி, ஒரு சங்கு வீதம் தின மிருவேளை குழந்தைகட்குக் கொடுக்க, வாந்தி, கழிச்சல் ஆகியவை போம்.

"நெல்லிப்பட்டை மாம்பட்டை நிகழும்அரசம் பட்டையுடன்
வெல்லும்பருத்தி யின்கொட்டை மேவும்பருத்தி யின்பிஞ்சும்
அல்லும்அத்திப் பட்டையொடு அதன்றன்துளிரும் வகைவகைக்குச்
சொல்லும்வராக னெடையொன்று தூக்கிக்குறுணித் தண்ணீரே."

"தண்ணீரதனி லேபோட்டுத் தழலிற்காய்ச்சித் தாணிறக்கி
வெண்ணீரண்டு வேளையிலும் மேவியதனைப் பாலர்க்கு
எண்ணீர்வார்த்துக் கொடுத்திடவே எகும்வாந்திக் கழிச்சலுமே
பெண்ணீருலகில் தருமமுடன் பேணிச்செய்வீர் நலமாகும்."

அன்றியும் இதன் பட்டை, குழந்தைகட்குக் காணும் பித்த சோபைக்குச் செய்யும் எண்ணெயுடன் சேர்க்கப்படுகின்றது.

### மாம்பட்டைத் தயிலம்.

மாம்பட்டை பலம் 200, தண்ணீர்விட்டான் கிழங்கு பலம் 5, நிலப்பனங்கிழங்கு பலம் 5 இவற்றைப் பாண்டத்தில் நறுக்கி இடித்துப்போட்டுக் கஷாய

மாசக் காய்ச்சி அதற்குச் சமன் எண்ணெய் கூட்டி எரித்துப் பதத்தில் இறக்கி முழுகிவர மேகம், பிரமியம், சில்விஷம் ஆகியவை போம்.

மாந்தர்க் காகவே மாம்பட்டைத் தயிலமொன்று
ஆந்தப் பட்டை யிருநூற் பலமெடு
சார்ந்த நிலப்பனே சாற்றும் பலமைந்து
போர்ந்த மிட்டான் புகலச் சரிகூட்டே.

கூட்டிப் பாண்டங் குலாவி யிடித்துமே
நீட்டுங் கஷாய நிரையாகக் காய்ச்சிடு
பாட்டு மெண்ணெய் பகருஞ் சரியெடை
மூட்டிக் காய்ச்சி முதிர வடித்திடே.

வடித்த எண்ணெய் வளமாக மூழ்கிடு
நடித்த மேகம் நவிலும் பிரமியம்
கடித்த சில்விடங் காணு தொடுங்கிடும்
முடித்ததயில முறையும் பொய் யாதே.

**மாமர வேர்ப்பட்டை.**

**மாவேராதிக் குடிநீர்.**

மாமர வேர்ப்பட்டை, மாந்தளிர், நாவல்தளிர், புளியாரை, சிறுகுறிஞ்சான், நுணுவிலே, வாழைப்பூ—இவை வகைக்கு 1 கழஞ்சு எடுத்து இடித்து, இரண்டுபடி நீர் விட்டு உழக்காகக் காய்ச்சி, அதில் அரிசித் திப்பிலி வறுத்திடித்த தூள், பொரித்த வெங்காரத்தூள் வகைக்குக் கால் வராகனெடை சேர்த்துக் குடித்தால் தாகமுடன் கூடிய அதிசாரம், நான்கு நாள் முறைச் சுரம் தீரும்.

மாவடியுந் துளிர்நாவற் கொழுந்துபுளி யாரை
வன்குறிஞ்சி நுணுவிலேயு நறுவாழைப் பூவும்
தாவுவகைக் கோர்கழஞ்சு இருநாழி நீரில்
தகைமைபெற வுழக்காக்கித் தன்னே யுடனே
பூவின்வருந் திப்பிலியும் வெங்காரங் கூட்டில்
பொருந்திநீர் மேற்பொடியும் புகழ்வாய்க்குட் கொள்ள
தாவிவருந் தாகமோ டதிசார சுரமும்
தன்னுன்கு நாள்மாற லுடனஞ்சி விடுமே.

மாவிலே அல்லது பட்டையிலிருந்து வரும் பாலைக் கால் வெடிப்புக்கு உபயோகித்து வரலாம்.

**மாம்பிசின்.**

மாம்பிசினே கால் வெடிப்புக்கு உபயோகிக்கலாம்.

பட்டைப் பிசினே பழச்சாற்றேடு கலந்து சர்ம ரோகங்களுக்குப் போடலாம்.

---

## மாசிக்காய்—Máchikkái.

**Quecuo Infectoia.**

**Eng.—Magic Nuts, Oak galls.**

| | | | |
|---|---|---|---|
| Tel. Máchikkáya | మాచికాయ. | Sans. Máchika | माचिका |
| Mal. Másikkaya | മാശിക്കായ്. | Hind. Mázhuphal | * ماز و پهل |
| Kan. Máchi-kayi | ಮಾಚಿಕಾಯಿ. | | |

இது கிரீஸ், ஆசியா மைனர், சீரியாமுதல் பாரசீகம் வரையிலுமுள்ள தேசங்களில் உற்பத்தியாகி, இந்தியாவுக்கு அனுப்பப்படுகிறது. இம்மரத்தின் இளைகளில் ஓர்வித பூச்சிகள் துளையிட அதிலிருந்து வடிகிற பால் உருண்டு திரண்டு கட்டுப்படுவதே மாசிக்காயாகும். இது **கருமை, நீலம், வெண்மை** என மூன்று பேதங்களுடையது. இதற்குள் அகப்படும் பூச்சிகள் வெளிப்படாததற்கு முன்னே எடுப்பது சிறந்த குணமுடையது. அதிலுள்ள பூச்சி வெளிப்பட்டபின் கிடைப்பது இலேசத்துவமுடையது. அதில் துவாரங்களுண்டு.

**ப - உ.**—காய்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- குருதிப்போக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - **Styptic.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - **Antiperiodic**

**குணம்.**—அக்கரங்கள், மாருத உட்சூடு, குழந்தைகளின் கணச்சூடு, பலவகை மேகம் போம். உடற்குப் பலந்தரும்.

அக்கரங்கள் போக்கிவிடும் ஆருத வெப்பகற்றும்
மெய்க்குறுதி மாசிக்காய் மென்மேலும்—தக்கதொரு
பாலர்கண நோய்போக்கும் பன்மேக முந்தொலைக்கும்
வேலனைய கண்ணாய் ! விளம்பு, (அ.கு.)

**வ.கு.**—மாசிக்காய்த்தூள் ஒரு பலம், நீர் 4 ஆழாக்கு, இதைப் பத்து நிமிடம் வரை காய்ச்சி வடிகட்டி அதில் ½—1 பலம் வரையிலும் கொடுக்க, அக்கினிமந்தம், அதிசாரம், அதிக கபம் வீழல், கயத்தில் காணும் அதிவியர்வை, பேதி, நாட்பட்ட கக்கிருமல், கருப்பமேகம், வெட்டை, சீதசுரம், இவைகள் குணமாகும். பால்பிரமேகத்துக்கும் இது அனுகூலமாகும்.

இக்கஷாயத்தையே அக்கரங்களுக்கு வாய் கொப்புளிக்கவும், புண்களைக் கழுவவும், பிரமேகங்களில் நீர்த்தாரையில் பீச்சவும், பேதிக்கு வஸ்தி செய்யவும், நாசித்துவாரங்களில் புண்ணிருப்பினும் இரத்தம் வடியினும் கழுவவும் உபயோகிக்கலாம்.

மாசிக்காய்த்தூள் 5-வராகனெடை, பொடித்த சாம்பிராணி 5-வராகனெடை, பன்றி நெய் 4-பலம் சேர்த்துக்களிம்பு செய்து, அல்லது மேற்படிக் களிம்பில் 1½ வராகனெடை அபினி சேர்த்து, மூலத்துக்குப் பூச நன்மை தரும்.

இதைத் தூள் செய்து இரத்த பீநசத்துக்கு மூக்குப் பொடியாகவும் இரத்தகாசம், இரத்தவாந்தி, இரத்தமூத்திரம், பெரும்பாடு ஆகிய இவைகட்கு உள்ளுக்கும் கொடுத்துவர மேற்படி நோய்கள் நீங்கும். ஈறு, மூக்கு, மூலம் இவ்விடங்களிலிருந்து உண்டாகும் இரத்தத்தையும் நிறுத்தும்.

**அளவு.**—தூள் - 5—10 குன்றி – தினம் 2 - 3 வேளை.

**குறிப்பு.**—மயில்துத்தம், மரஉப்பு, பூநீர்உப்பு, சுண்ணாம்புத் தண்ணீர், வெந்நீர்க்கஷாயம், அபினி, நாவி, வாந்திஉப்பு இவைகளிலொன்றை விடமிக்கும்படி உட்கொண்டவர்களுக்கு இது ஓர் முறிப்பாகும்.

### மாசிக்காய் உப்பு—Tannic Acid.

இது மாசிக்காயிலிருந்து எடுக்கும் ஓர்வகை உப்பு. மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறத்துடன், வாசனையின்றி அதிக துவர்ப்புள்ளதாயிருக்

கும். அன்னபேதி சேர்ந்தால் கறுக்கும்.

**செய்கை.** { குருதிப்போக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - Styptic
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**அளவு.**—1—2½ குன்றி.

**வ.கு.**—ஒரு வராகனெடை உப்பை 3ஆழாக்கு நீரிற்கலந்து, தொண்டை விரணங்களுக்குத் துமிக்கருவி மூலமாயும், கருப்பமேகம், மேகவெட்டை முதலியவைசட்குப் பீச்சுக்குழாய் மூலமாகவும், ஒருபலம் நீருக்கு ஒரு குன்றி உப்பு வீதம் நாசித்துவார நோய்களுக்கும் உபயோகிக்கலாம்.

---

## மாசிப்பத்திரி—Máchipatri.

### Artemesia Indica.

### Grangea Maderaspatana, (Poir)

| | | | |
|---|---|---|---|
| Tel. Máchi-patri | మాచిపత్రి. | Sans. Granthiparni | ग्रन्थिपर्णी |
| Mal. Mási-pathri | മാസിപത്രി. | Hind. Majtari | ماجتری * |
| Kan. Macha-patri | ಮಾಸಪತ್ರೆ. | | |

இது இந்தியாவிலுள்ள காடுகளிலும் ஆற்றங்கரை யோரங்களிலும் பயிராகும் ஓர் வகைப்பூண்டு. இதற்கு ஓர்வித வாசனையுண்டு. இது **சீமையினம், நாட்டினம்** என இருவகைப்படும். இருவகைக்கும் குணம் ஒன்றே. நாம் இங்கு கூறுவது நாட்டு இனம்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, புளிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இது வாதநோயையும், வெப்பத்தையும், ஐவகை வலியையும் போக்கும்.

புளிப்புந் துவர்ப்பும் பொருந்தியிருந் தாலுந்
தளிர்ந்த காலைக் கனலைச்சாடும்—நெளித்த
வலிதனைவிட் டோட்டுமட மாதே ! நீ கேளாய்
வலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து. (அ.கு.)

**வ - கு**—இதனிலைச் சுரசம், இஞ்சிச்சாறு, சருக்கரை இவைகளைக் கலந்து தக்க அளவுடன் சாப்பிடச் சூதகவலி, சூதகத்தடை, வயிற்றுவலி, குன்மம் நீங்கும்.

இலையை வதக்கி ஒற்றிடமிடத் தாபமும் வலியும் நீங்கும்.

இலைச் சூரணத்தைப் புண்களின்மீது தூவப் புண்கள் ஆறும்.

இலைச்சாறு ஒரு உச்சிக்கரண்டி அளவில், கோரோசனை ஒரு குன்றி கலந்து கொடுக்க மாந்தம் நீங்கும்; பசியும், முகத்தில் தேஜசும், உண்டாகும்.

இலைச்சாற்றை உள்ளுக்குக்கொடுக்க, பூச்சிகள் விழும்.

இதன் சாற்றை உச்சியில் தேய்க்க, சுரநோய்களில் சந்நி பிறவாமல் தடுக்கும்.

தங்கத்தைச் செந்தூரிக்க இது ஓர் சிறந்த மூலிகையாகும்.

சமூலத்தைச் சூடான காடியில் ஊறவைத்து அடிபட்டசிதைவு, வீக்கங்களுக்கு வைத்துக் கட்டலாம். கிராத்தலைவலி, கீல்வாதம் முதலிய வைகளுக்கு ஒற்றிடமிடலாம்.

---

## மாதளை—Máthalai.

**வே - பெ.—தாடிமம், பீசபூரம், மாதுலங்கம், மாதுளம், மாதுளுங்கம், கழுமுள்**

Punica Granatum.

Eng.—Pomagranate.

| | |
|---|---|
| Tel. Dànimma దానిమ్మ. | Arab. Rumman * رمان |
| Mal. Mathlam മാതളം. | Pers. Gulnar * گلنار |
| Kan. Dalimba ದಾಳಿಂಬ. | Hind. Anar * انار |
| Sans. Shukhdana सुखादन | Duk. Darim * دارم |

இது சிறு மரவகுப்பைச் சேர்ந்தது. முக்கியமாய் அப்கானிஸ்தானம், பெலுசிஸ்தானம், பாரசீகம் முதலிய இடங்களில் விசேஷமாய் வளருகின்றது. இந்தியாவில் அநேகமாய் எல்லாவிடங்களிலும் பயிரிடப்பட்டு வருகிறது. இதில், **இனிப்பு, புளிப்பு, பூமாதளை** என்று மூன்று வகுப்புகளுண்டு.

**ப - உ.**—பூ, பிஞ்சு, பழம், விதை, பட்டை, வேர்.

**சுவை.**—

**பூ, பழத்தோல், பட்டை.**

துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம், விதை.**

இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை**

**பொது.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
குருதிப்பெருக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - Styptic

**பூ, பழத்தோல்.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic**

**மரப்பட்டை, வேர்ப்பட்டை.**

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Anthelmintic.**

**பழம்.**

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Refrigerant.**

**விதை.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
புழுக்கொல்லி - க்ருமிநாசநி-**Anthelmintic.**
சாயமேற்றி - **Tœnifuge.**

## பூ.

**குணம்.**—இதனால் பித்தவாந்தி, வயிற்றுக்கடுப்பு, வெப்பம், இரத்த மூலம், இவை போகும். இரத்த புஷ்டியையும், பலத்தையும் தரும்.

வாந்திபித்த தோடமொடு மாறுக் கடுப்பனலஞ்
சேர்ந்துநின்ற மூலரத்தந் தீர்க்குங்காண்—மாந்தளிர்க்கை
மாதே!யி ரத்தபுஷ்டி வல்லபலன் உண்டாக்கும்
பூதலத்துள் மாதுளையின் பூ. (அ.கு.)

## பிஞ்சு.

இதனால் மலம் - சீதம் - இரத்தம் இவைகளின் நிறமாக ஆகின்ற பற்பல அதிசாரரோகங்கள் தீரும்.

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரும்—பலக்கழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம்பிஞ் சால்அயிலை
ஆளும்கண் மாதே ! அறி. (அ.கு.)

## பழம்.

பெருமை பெறுநின்ற மாதளங் கனிகளுக்குச் சந்தேகம் நீங்க, நினைப்பையும் பேச்சையும் ஒழிக்கின்ற சந்நியாசரோகம், வாந்தி, கபம், மிகுதாகம், பித்தநோய், இவை சேரமாட்டாது. புத்திர நிமித்தம் கங்காஸ்நானம் செய்து யாசிக்கச் செய்யும் மலட்டுவியாதி போகும். மேலும் அப்பழத்தைத் தின்பதனால், வாய்நீர்ச்சுரப்பும், கசப்பும், வாந்தியும், விக்கலும், மாந்தமும், அதிக சுரமும், நெஞ்செரிவும், காதடைப்பும், நீங்காத மயக்கமும் ஒழியும். வெடித்த பழத்தைச் சீக்கிரமாகப்பிழிந்து மெல்லிய சீலையால் வடிகட்டி, தகுந்த அளவு கற்கண்டு சேர்த்து இரசத்தைச் சாப்பிட வெப்பு ஒழியும். சரீரம் முழுவதும் குளிர்ச்சியை அடையும்.

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சந்நியா சஞ்சர்த்தி
யங்கையதி தாகமமைச் சாருமோ—கங்கை
இருந்தாடி மக்கட் கிரத்தலைச்செய் நோய்போம்
இருந்நாடி மக்கனிகட் கெண்.

வாய்நீர்ஊ றல்கசப்பு வாந்திவிக்கல் மந்தமிகக்
காய்வெப்பம் நெஞ்செரிவு காதடைப்பும்—ஓயா
மயக்கமுந் தீர்ந்துவிடும் மாதுளம்ப ழத்தால்
தயக்கம்அறத் தேமொழியே ! சாற்று.

வெடித்துவீழ் பழத்தைவாங்கி மெல்லிய சீலைகட்டி
கடுக்கெனப் பிழிந்துகொண்டு கண்டுசர்க் கரையுங்கூட்டிக்
குடித்திட வெப்புமாறுங் குளிர்ந்திடும் அங்கமெல்லாம்
வடித்தநன் மொழியினாளே ! மாதுளம் பழத்தின்சாறே. (தே.கு.)

**வ·கு.**—பூமொக்கை உலர்த்திச் சூரணமாக்கி 2—குன்றியெடை கொடுக்க இருமல் நீங்கும்.

மேற்படிச் சூரணத்துடன், ஏலக்காய்த்தூள், கசகசாத்தூள், குங்கிலியத் தூள் சமனெடை சேர்த்து ஒன்றிரண்டு குன்றிவீதம் தினமிருவேளை கொடுத்துவர, நாட்பட்ட அதிசாரம், சீதபேதி இவை நீங்கும்.

பூவின்சாறும், அறுகம்புல்லின் சாறும் சமனெடை சேர்த்துக் கொடுக்க இரத்தபீநசம் நீங்கும்.

மேற்கூறிய பூ, புல் இவ்விரண்டையும் கஷாயமிட்டு பொரித்த வெங்காரம் சிறிது கூட்டி வாய் கொப்புளித்துவர தொண்டைநோய் நீங்கும். இதையே மாதருக்குப் பீச்சிவர, இரத்தப்பிரமேகம், வெள்ளை, கருப்பாசயப் புண், ஆசனத்துவாரப்புண் முதலியன நீங்கும்.

பூவை உலர்த்திச் சூரணித்து அதில் ஒரு வராகனெடை, வேலம்பிசின் தூள் ஒரு வராகனெடை, அபின் 3-அரிசி யெடை சேர்த்து, வேளைக்கு 4—6 குன்றி வீதம் கொடுத்துவர சீதபேதி, இரத்தபேதி, இரத்தமூலம், இரத்த மூத்திரம் இவை நீங்கும்.

பிஞ்சைக் கஷாயமிட்டு சீதபேதி, அதிசாரம் முதலியவைகளுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம்.

நாட்டில் எல்லோராலும் மிகப்பிரிய பதார்த்தமாக பழம் உபயோகிக் கப்பட்டுவருகின்றது.

இதைக் கற்கண்டு சேர்த்து மணப்பாகு செய்து அருந்தப் பித்தத்தைச் சமனப்படுத்தும். குளிர்ச்சியை யுண்டு பண்ணும். சுரம், அழலை, தாகம் இவை நீங்கும்.

பழச்சாற்றைக் கயரோகிகளுக்குக் கொடுக்க மிகுந்த பலனைத் தரும். குணத்தின்கீழ்க் கண்ட நோய்களை விலக்கும். மேற்கூறிய குணத்தைத்தர, பழத்தைச் சீலைமண்செய்து கும்பிச்சாம்பலில் வேகவைத்துச் சிறுதுவார மிட்டுச் சாறு பிழிந்தெடுத்துக் கொள்வதே மேலாகும். கயரோகிகளுக்கும், உடல் சுட்கினோர்க்கும், பழத்தில் துவாரமிட்டு, அதில் சிறிது வாதுமைநெய் விட்டுத் துவாரத்தைமூடிப் பின் சீலைமண் செய்து, வேகவைத்து முன் கூறியவாறு இரசத்தை உபயோகிக்க நற்பயன் தரும்.

பழத்தோலுடன் சிறிது இலவங்கம், இலவங்கப்பட்டை நசுக்கிப் போட்டு முறைப்படிக் கஷாயமிட்டு ஆறவிட்டு ⅛—¼ ஆழாக்கு வீதம் தினம் 3—4 வேளைகொடுத்துவர, நாட்பட்ட சீதபேதி, அதிசாரம் நீங்கும். பழத்தோல், மங்குஸ்தான் பழத்தோல், பாலைமரப்பட்டை வகைக்கு 1¼ பலம் எடுத்து 8-ஆழக்கு நீர்விட்டு முறைப்படிக் கஷாயம் செய்து அதில் ⅛—¼ ஆழாக்கு வீதம் கொடுத்துவர, சீதபேதி நின்றுபோகும்.

மேலும் பலவிதக் கிராணிக்கழிச்சல், பேதி முதலிய வியாதிகளுக்குத் துவர்ப்பு மருந்து வேண்டியதாயிருக்கும்போது இதை உபயோகித்துக் கொள்ளலாம்.

பழத்தோலை உலர்த்திச் சூரணமாக்கியும் உபயோகிக்கலாம்.

பழத்தோல் சூரணம் ½ பலம், வெள்ளைப்போளம் ½ பலம், சீமைச் சுண்ணாம்புத்தூள் (Prepared Chalk) ஒரு பலம் சேர்த்துக் கலந்து உபயோகிக்கத் தந்த நோய்கள் விலகும்.

வேர்ப்பட்டை ஒருபாகம், நீர் 20-பாகம் விட்டுச் சிறிது இலவங்கம் சேர்த்து எட்டில் ஒன்றாகக் காய்ச்சிக்கொடுக்க, தட்டைப்புழு விழும். இக்கஷா யத்தில் ½-ஆழாக்கு வீதம் காலையில் வெறும் வயிற்றில் குடிக்க ஆரம்பித்து

இரண்டுமணிக் கொருதடவை ஆறுதடவையாகக் குடித்துக்கொண்டே வந்து, கடைசித் தடவையில் பேதிக்குக் கொடுக்கவும். பேதியுடன் பூச்சியும் விழும்.

மேற்படிக் கஷாயத்தைக் குழந்தைகளுக் குண்டாகும் இருமல்நோய், கணநோய்க்கும், பெரியவர்களுக்குண்டாகும் நாட்பட்ட சுரம், முறைச்சுரம், மண்ணீரல்தாபிதம் இவைகளாலுண்டாகும் இரத்த பித்தம் முதலிய நோய்களுக்கும் உபயோகப்படுத்தலாம்.

பட்டைச்சாறு ½ பலம் கொடுக்க, அது மலப்புழுவைக் கொல்லும்.

**வித்து.**

விதையானது நீர்த்துப்போன சுக்கிலத்தை இறுக்கும். பிரமேகத்தில் காணும் நீர்க்கடுப்பை நீக்கும். இவ்விதை, பலவித தாதுபுஷ்டி இலேகியங் களில் சேரும்.

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோ டம்போக்கும்
அக்கணம்மே கக்கடுப்பை ஆற்றுங்காண்—எக்காலுங்
கோதுளதெண் ணுதமலர்க் கொம்பனைய மாதே !செம்
மாதுளத்தின் பீச வலி. (அ.கு.)

**மாதுளைமரத்தின் சமூலம்.**

மாதுளைவேர், பிஞ்சு இவைகட்கு வாந்தி அதிசாரம் நீங்கும். பழத்திற்குத் தாதுவிர்த்தியுண்டாகும். தாகம் போம். இலை, காய், மலர், இவைகட்கு முற்கூறிய நோய்கள் விலகும்.

மாதுளைவேர் பிஞ்சிவைக்கு வாந்திஅதி சாரம்போம்
தாதுவுமாம் அக்கினிக்குத் தாகம்போம்—சூதைநிகர்
வன்னமுலை யாய் !இலைகாய் மாமலர்க ளுக்குமுனஞ்
சொன்னவையெ லாம்போகுஞ் சொல். (அ.கு.)

---

## மாவலிக்கிழங்கு—Mávalik-kizhangu.

**வே - பெ.—பருநன்னாரி, மாகாளிக்கிழங்கு.**

Periploca (wild).

இது நன்னாரி வகுப்பைச் சேர்ந்த காட்டினம்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - *சீதம்,* **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** { குளிர்ச்சியுண்டாக்கி - *சீதளகாரி* - Refrigerent.
பசித்தீத்தூண்டி - *ஜடராக்னிவர்த்தநி* - Stomachic.

**குணம்.**—இது உட்சூடு, பித்தகோபம், சிலேஷ்மநோய், வாததோடம் இவைகளை நீக்கும். ஜடாராக்கினியை வளர்க்கும்.

அனலையதி பித்தத்தை யாற்றும் பசியாம்
அனலைஎழுப் பும்கபம றுக்கும்—அனிலத்தாம்
வேகாளத் தைத்தணிக்கு மென்கொடியே ! காட்டில்வளர்
மாகாளிக் கந்தமிது வாம். (அ.கு.)

**வ - கு.**—நன்னாரிக் குடையதே யாதும்.

## மாவிலிங்கு—Mávilingu.

வே - பெ.—மாவிலங்கு, குமாரகம், வரணி.

Cratæva Religiosa.

Eng.—Three leaved caper.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Urumatti ఉరుమత్తి. | Sans. | Pashugandha | पशुगन्धा |
| | | | Asmarighna. | अश्मरिघ्नः |
| Mal. | Nirvala നീർവള. | Hind. | Tapia | * تپیا |
| Kan. | Narumbele ನರುಂಬೆಲೆ. | | Bilasi | * بلاسی |

இம்மரம் இந்தியாவின் பல விடங்களிலும் பயிராகின்றது. இலை மூன்று பிரிவுகளை யுடையது.

ப - உ.—இலை, பட்டை, வேர்.

சுவை.—கைப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை.

இலை.

பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
உரமாக்கி - பலகாரி - Tonic.

பட்டை, வேர்ப்பட்டை.

தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
மலமிளக்கி - மலகாரி - Laxative.
கற்கரைச்சி - பாஷாணபேதநி - Lithontriptic.

பொது.

குணம்.—இதற்குச் சுரம், கடிதோடம், மகாவாதரோகங்கள், சருப்பவிட விடம், ஆகியவை போகும்.

சுரங்கடியின் றோடந் தொலையாத வாதம்
உரம்பெறு விடங்க ளொழியும்—அரமுங்
கருமா வடுவயிலுங் கண்டஞ்சுங் கண்ணாய்!
ஒருமாவி லிங்குக் குரை. (அ.கு.)

பட்டை.

இதனால் வாதரோகம், சந்நி, கல்லடைப்பு இவைகள் போகும்.

" மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சந்நிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாறுமே." (அ.கு.)

வ - கு.—இலையைக் குடிநீரிட்டுக் குடிக்கச் சுரம், அசீரணம் குணமாகும்.

இலையை அரைத்துப் பற்றிட வீக்கங் கரையும்.

இலைச் சுரசமும் தேங்காய்ப் பாலும் சமன்கூட்டி அதில் அரை ஆழாக்குக் கொடுத்துவரக் கைகால் முடக்கு நீங்கும்.

பச்சை இலையைக் காடி, பழ இரசம் அல்லது வெந்நீரிலரைத்துப் பற்றிடக் கொப்புளங்களெழும்பும்.

இலையை உலர்த்திச் சூரணஞ் செய்து புகைத்து அப்புகையைச் சுவாசிக்க நாசி ரோகங்கள் நீங்கும்.

இலையை அரைத்து உள்ளங்காலில் பற்றிட வாதத்தைப் பற்றிய வீக்கம், எரிச்சல் நீங்கும்.

தனிப்பட்டைக் குடிநீராகிலும், பட்டைகலந்த எண்ணெயாகிலும் வாத ரோகத்தையும், சந்நிரோகத்தையும் போக்கும். குழந்தைகளுக்குண்டாகும் வலியும் மாந்தரோகங்களும் மாயும். பட்டைக் குடிநீர் கல்லடைப்பு ரோகத்தைப் போக்கும். பட்டையைச் சிதைத்து அல்லது வெட்டி உட்புற மாக வைத்துக் கட்டக் கட்டிகள் குணமாகும்.

இதன் பட்டையை வட்டமாக வெட்டி ஆரம்பநிலையிலிருக்கும் அரையாப் புக் கட்டிமீது வைத்து, ஓர் ஈயத்தகட்டை அதன்மீது வைத்துக் கட்டக் கட்டி அமுங்கிவிடும்.

பட்டையை நன்றாக நசுக்கி, எருக்கம் இலையைத் தொன்னை தைத்து அதில் வைத்து சந்நிகண்டவர்களுக்குத் தலையில் வைத்துக் கட்ட சந்நி நீங்கும்.

பட்டை 5 பலம், மூக்கிரட்டை 2 பலம் எடுத்து ஒருபடி நீர்விட்டு முறைப் படிக் கஷாயம் செய்து அதில் ½—1 பலம் வீதம் கொடுத்துவர, புரை யோடிய நாட்பட்ட விரணங்கள், விரை வீக்கங்கள் நீங்கும்.

---

## மான்செவிக்கள்ளி—Mánchevikkaḷḷi.

### Cacalia klerini.

இது இலைக்கள்ளி இனத்தைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை, பால்.

**சுவை.**—கார்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- புண்ணழுக்ககற்றி - வ்ரணசுத்திகாரி - Detergent.
- நாற்றமகற்றி - பூதிகந்தநாசநி - Deodorant.
- தூக்குணிப்புழுக்கொல்லி - க்ருமிக்நி - Parasiticide.

**குணம்.**—இதனால் ஆறாதபுண்கள், மாமிசத்தைப் பற்றிய வரிகிரந்தி, தேகவறட்சி, புடை, பொரிக்கிரந்தி இவை நீங்கும். மலமிறங்கும்.

மான்செவிக்கள் ளிப்பாற்கு மாறு விரணங்கள்
என்கிளைக்கு நன்மலமி றங்குங்காண்—ஊன்சேர்
வரிகிரந்தி நீங்கா வறட்சிசொறி யோடு
பொரிகிரந்தி யும்போம் பொரிந்து. (அ.கு.)

**வ - கு.**—இலையை அரைத்துப் பூச, படை, தேமல் முதலியன நீங்கும். இலையை எண்ணெயில் காய்ச்சிப் பூசிவர மேற்கூறியவை போம்.

---

## மிளகரணை—Milakaranai.

### Toddalia Aculeata.

| | |
|---|---|
| **Tel.** Konda - kashinda కొండకసింద | **Sans.** Kanchana काञ्चनः |
| **Mal.** Milakaranai മിളകരണ. | |
| **Kan.** Kada - hakukare ಕಾಡುಹಕ್ಕುಕಾರೆ. | **Hind.** Jangli - kali mirch * جنگلي كالي مرچ |

இது இந்தியா, சீனு முதலிய இடங்களில் வளர்ந்து வருகிற ஓர் வகைக் கொடியோடுஞ் செடி.

ப - உ.—இலை, பட்டை, வேர்.

சுவை.—துவர்ப்பு, வீரியம் - சீதம், பிரிவு - கார்ப்பு.

செய்கை. { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உரமாக்கி - பலகாரி - Tonic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic. }

குணம்.—இது கபவிருத்தி, அசீரணவாயு, பயித்தியசூலை, கயம், காசம் சுவாசம், வயிற்றுப்பிசம் ஆகிய இவைகளை நீக்கும்.

ஐயம்அ கற்றும் அசீரணவா தம்போக்குஞ்
செய்யபித்த சூலைகளைத் தீர்க்குங்காண்—பையவரும்
ஈளை இருமல் இரைப்புப்பி சந்தொலைக்கும்
நாளு மிளகரணை நன்று. (அ.கு.

வ - கு.—இலையைப் பச்சையாக மென்று தின்ன வயிற்றுநோய் சாந்த மாகும்.

இலையைக் கஷாயமிட்டுக் குடிக்கச் சுரந்தணியும்.

பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுக்க முறைச்சுரம் நீங்கும். வியர் வையை யுண்டாக்கும்.

வேர்ப்பட்டை ஒன்றுக்கு, இருபது பங்கு நீர்விட்டு முறைப்படிக் கஷாய மிட்டுக் கொடுக்கச் சுரம், அதிசாரம், தேக பலவீனம் முதலியவைகள் நீங்கும்.

வேர்ப்பட்டையை இடித்து 2½ பலம் எடுத்துச் சாராயத்தில் ஏழுநாள் ஊறவைத்துப் பிழிந்து வடிகட்டி எடுத்து 2—4 வராகனெடை கொடுத்து வரக் குணத்தின் கீழ்க்கண்ட நோய்களைப் போக்கும்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி வாத வீக்கங்களுக்குப் பூசலாம்.

இதனால் கல்நார் நீறும்.

---

## மிளகாய்—Miḷakáí.

**வே - பெ.—முளகாய்.**

**Capsicum Annum.**

**Eng.—Red pepper or Chillies.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | Mirapakaya మిరపకాయ. | | **Sans.** | Katuvira | कटुवीर |
| **Mal.** | Vathal - Milaka വത്തൽ മുളക്. | | **Duk.** | Laul Mirch | * لال مرچ |
| **Kan.** | (Kempu) Menasinkai ಮೆಣಸಿನಕಾಯಿ (ಕೆಂಪು). | | **Hind.** | Gachmirich | * گچ مرچ |

இச்செடி இந்தியாவிலெங்கும் பயிரிடப்பட்டு வருகின்றது. இதில் அநேக சாதிகளுண்டு. அவைகளில் விசேஷித்தது **சீமை மிளகாய்** அல்லது **காந்தாரி மிளகாய்.** இதற்குச் சாதாரண மிளகாயைவிடக் காரம் அதிகம்

**ஊசிமிளகாய், சீனிமிளகாய்** என வேறு பெயர்களும் இதற்குண்டு. இவை எல்லாவற்றிற்கும் குணம், செய்கை முதலியன ஏறக்குறைய ஒன்று பட்டே யிருக்கும்.

**ப - உ.**—பழம்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நமைச்சலுண்டாக்கி - Irritant.
- இருதயவெப்பமுண்டாக்கி - ஹ்ருதயஉஷ்ணகாரி - Cordiac Stimulant.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—இதன் பழத்தினுல் இரத்தமூல முளையும், ஆசனக்கடுப்பும் வீரிய விருத்தியும் உண்டாகும். விடமாந்தம், அருசி, வயிற்றுநோய் விகுணவாதம், வயிற்றுப்பிசம் நீங்கும்.

மூல விரத்த முளைகடுப்பும் உண்டாகுந்
தாலம்அதில் தாதுவுந் தழைக்கும்என்பார்—ஆலம்எனும்
மந்தம் அரோசிகுன்மம் வாய்வும் பொருமலும்போம்
உந்துமிள காய்ப்பழத்தால் ஓது. (அ.கு.

**வ - கு.**—மிளகாயைத்தூள் செய்து 2 குன்றிவீதம் தினம் 2—3 வேளை கொடுக்க, அஜீரணம், குன்மம், மார்புநோய், கிராணிக்கழிச்சல், பித்தசுரத்தில் காண்கிற வாந்தி இவைகள் நீங்கும்.

இதை அரைத்துத் துணியில்தடவி சருமத்தின்மேல் போட்டுவைக்கக் கொப்புளிக்கும். தொண்டைக்கு வெளியிற்பூச, தொண்டைக்குள் எழும்பும் கட்டிகள் உடையும்.

நாட்பட்ட, முதுகு - பிடரி முதலிய விடங்களிலுண்டாகும் வலி, வீக்கங்களுக்கு இதைப் பூண்டு, மிளகு சேர்த்தரைத்து எண்ணெயில் குழைத்துப் பூச நோய் சாந்தமாகும்.

இதன் பொடியுடன் சருக்கரை, பிசின்தூள் சேர்த்து உருண்டைசெய்து வாயிலிட்டுச் சுவைக்க, தொண்டைக் கம்மல் நீங்கும்.

இதைக் குடிநீர் அல்லது திராவகம் செய்து இஞ்சிச்சாறு சேர்த்துத் தக்க அளவு கொடுக்க, வயிற்று உப்பிசம், வயிற்றுவலி நீங்கும்.

இத்துடன் பெருங்காயம், கர்ப்பூரம் சேர்த்து மாத்திரை செய்து ஊழி நோய்க்குக் கொடுக்கலாம்.

இதன் சமூலத்துடன் இலவங்கப்பட்டை, சருக்கரை சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்க, குடிவெறியர்களுக்கு மதுபானத்திலுண்டாகும் ஆவலைக் குறைக்கும்.

---

## சீமை-மிளகாய்—Chimai-Milagai.

**வே - பெ.—காந்தாரி, சீனி (ஊசி) மிளகாய்.**

**Capsicum Fastigiatum.**

**Eng.—Guinea pepper or Malabari.**

**Mal. Kanthari Milaku** കാന്താരി മുളക്.

இது இந்தியாவின் வெப்பப்பிரதேசங்களில் பயிரிடப்பட்டு வருகின்றன மலபார், திருவிதாங்கூர் இந்நாடுகளின் குளிர்ச்சியான பிரதேசங்களில் ஏதேச்சையாகவும் வளருகின்றது.

ப - உ.—காய்.

**சுவை.**—கொடிய கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடாரக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—இதனால் அசீரணம், அசீரணபேதி, மார்புநோய், முதலியவை நீங்கும். கீல்வாதம், சூதகசந்நி, மூத்திரப்பைத்தாபித ரோகம் முதலிய வைகளும் சுகமாகும்.

**வ - கு.**—இதன் பழம் 2 வராகனெடை, மீன்கொழுப்பு ஒரு வராக னெடை, சைத்தூன் எண்ணெய் ஒரு பலம், சேர்த்துக் கலக்கிக் குளிர வைத்து மேலுக்கு உபயோகிக்க, கீல்வாதம் முதலிய நோய்கள் விலகும்.

மிளகாய்த்தூள் 1¼ பலம், இதை 25 பலம் சாராயத்தில் இரண்டு நாள் ஊறவைத்து நன்றாய் வடிகட்டித் திராவகமாக்கி அதில், 10—30 துளி நீரில் கலந்து குடிக்க மேற்கூறிய குணத்தின்கீழ்க்கண்ட நோய் களைப் போக்கும்.

மிளகாய்த்தூள் ஒரு குன்றி அல்லது மேற்கூறிய திராவகம் 10—30 துளி எடுத்து, அசீரணம், அசீரணபேதி, குன்மம், மார்புநோய், பித்த சுரத்தில் காணும் வாந்தி இவைகளுக்குக் கொடுக்கலாம்.

---

## மிளகு—Milagu.

**வே - பெ.**—**கலினை, கறி, காயம், கோளகம், திரங்கல், மிரியல், மரீசம்.**

**Piper Nigrum.**

**Eng.—Pepper (black).**

| | |
|---|---|
| **Tel.** Miriyálu మిరియాలు. | **San.** Marícha मरिचः |
| **Mal.** Kurumulaku കുരുമുളക്. | **Hind.** Kàli-mirch * کالی مرچ |
| **Kan.** Menasu ಮೆಣಸು. | **Pèrs.** Filfilaisiah * فلفل سیاه |

இது தென்னிந்தியாவில் மலபார், கொச்சி, குடகு, மைசூர் முதலிய மலைநாடுகளில் பயிராகும் ஓர்வகைக் கொடி. இது மரங்களைச் சுற்றி ஏறி அடர்த்தியாக வளரும். இதன் பழத்துக்கு **மிளகு** என்று பெயர். இதன் தோலை நீக்கிவிட **வெள்ளை மிளகு** எனக் கூறுவதுண்டு. ஆனால் வெள்ளைமிளகு இக்கொடியைச் சேர்ந்ததல்ல.

ப - உ.—விதை, கொடி,

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- காறலுண்டாக்கி - Acrid.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- வீக்கங்கரைச்சி - Resolvent.
- வாதமடக்கி - வாதஹரகாரி - Anti-vata.

**காய் (மிளகு).**

**குணம்.**—இது வாதரோகங்களையும் சீழ்மூலத்தையும் நீக்கும்.

அளவைஉறுக் காரம் அடைந்திருக்கும் வாத
விளைவைஎல் லாம்அறுக்கும் மெய்யே—மிளகின்காய்
கண்டவர்க்கும் இன்பமாங் காரிகையே ! சீழ்மூலங்
கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு. (அ.கு.)

**பழம் (மிளகு).**

இதனால், குளிர்சுரம், பாண்டு, கபம், கிரகணி, குன்மம், வாயு, அரோசகம், பைத்தியம், மூலம், சந்நியாசம், அபஸ்மாரம், பிரமேகம், இருமல் பங்குவாதம், குய்யரோகம், சோணிதவாதம், களநோய், செவிவலி, இரத்தகுன்மம், அசீரணம், காமாலை இவை போகும்.

சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்
வாதம் அருசிபித்தம் மாமூலம்—ஓதுசந்நி
யாசம்அபஸ் மாரம் அடன்மேகம் காசம்இவை
நாசங் கறிமிளகி னால். (அ - கு.)

கோணுகின்ற பங்கவலி குய்யஉரோ கம்வாத
சோணிதங்க ழுத்திற்குள் தோன்றுநோய்—காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தம்என்றீர்
ஏதுநோய் காய்இருக்கில் ஈங்கு. (தே-கு.)

**வ - கு.**—இதன் இலை, தழுதாழையிலை, நொச்சியிலை இவைகளைச் சேர்த்துக் கொதிக்கவைத்த நீரைக் கீல்வீக்கம், வாதவலி, அடிபட்டவீக்கம் முதலியவைகளின் மீதுவிட்டு ஒற்றிடமிட அவை நீங்கும்.

மேற்படி நீரைக்கொண்டு வேதுபிடிக்கச் சுரம், தலைவலி இவை நீங்கும்.

மேற்படி இலைகளைச் சேர்த்தரைத்து சிறு சூடாக்கி வாதவீக்கங்களின் மீது பற்றிடலாம்.

நொச்சிக்கொழுந்து, மிளகினிலை, முதிர்ந்த மிளகாயிலை, இலவங்கம், வெற்றிலை அல்லது துளசியிலை இவைகளைச் சமனெடுத்து அரைத்த கற்கத்தை ஒரு கழற்சிக்காய்ப் பிரமாணம் காலை, மாலை கொடுத்துவர, முறைச்சுரம் நீங்கும். சுவாசகாசம் சாந்தியாகும்.

மிளகுத்தூள் 4—6 குன்றி வீதம் உபயோகித்துவர, பசியைத்தூண்டும். வெப்பத்தை உண்டுபண்ணி மனவெழுச்சி யுண்டாக்கும்.

இதன் தூளை குவைணுவுடன் சேர்த்து வழங்க முறைச்சுரம் நீங்கும்.

மிளகுத்தூள் $1\frac{1}{4}$ பலம், நீர் அரை படி விட்டு அரைமணிநேரம் காய்ச்சி வடிகட்டி அதில் $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ ஆழாக்கு வீதம், தினம் 2, 3 தரம் கொடுத்துவரத் தொண்டைக்கம்மல், தொண்டைவிரணம் இவைகள் நீங்குவதுந் தவிர, வயிறு சம்பந்தமான நோய்களும் நீங்கும்.

**I. மிளகுத்தைலம்.**—தைலவருக்கச் சுருக்கத்தில் இதன் முறையைக் காண்க. இத்தைலத்திஞல் நாட்பட்ட வாதரோகம், சிரோபாரம், ஆவர்த்த வாதம், செவிட்டுரோகம், புத்திமந்தம் நீங்கும்.

**II. மிளகுத்தைலம்.**—ஷை நூலில் இரண்டாவதுமுறை. இத்தைலத்தை ஒரு துட்டெடை உட்கொள்ள அல்லது தினந்தினமும் சரீரத்தில் தடவிப்பிடிக்க,

அல்லது வாரத்துக் கொருமுறை தலைமுழுகிவர, சோபை, பாண்டு, காசம், சலக்கோர்வை, விசர்ச்சி, கூத்தாடச் செய்கின்ற சூதிகாவாதம், தலைவலி, பலவகைத்தினவு, வாதநோய், விடமிக்கின்ற சீரணசுரம் முதலிய நோய்கள் கீரிப்பிள்ளையைக் கண்ட பாம்பைப்போல நாசத்தை அடையும்.

மிளகு, பெருங்காயம், அபினி வகைக்கு ½ வராகனெடை எடுத்துச் செவ்வையாக அரைத்து 12 மாத்திரைகள் செய்து, அதில் ஒரு மாத்திரை, ஒரு மணிக்கொருமுறை கொடுத்துவர வாந்திபேதி சாந்தப்படும்.

மிளகுத்தூள் 1¼ பலம், கேக்குவிதைத்தூள் 2 பலம், கசகசா ½ பலம், தேன் 8 பலம், ஓமம் ½ பலம் சேர்த்தரைத்து, ஒரு கழற்சிப் பிரமாணம், தினம் இருவேளை, துர்ப்பலமுடைய மூலரோகிகளுக்கும், அடித்தள்ளலுக்கும் கொடுத்துவரலாம்.

இது பற்பொடி செய்வதற்குரிய பொருள்களில் ஓர் முக்கிய சரக்காகக் கருதப்படுகின்றது.

முக்கடுகில் இது ஓர் அங்கமாகும்.

மிளகுத்தூள் 2½ வராகனெடை, எருக்கம்வேர் 4½ வராகனெடை எடுத்துப் பனை வெல்லம் தகுந்த அளவு சேர்த்தரைத்துத் தினையளவு மாத்திரை செய்து, ஒரு மாத்திரை தினமிருவேளை, சாப்பிட்டுவரக் கொருக்கு நோய் குணமாகும்.

மிளகுத்தூள், வெங்காயம், உப்பு இவைகளைச் சேர்த்தரைத்துத் தலையில் காணும் புழுவெட்டுக்குப்பூச, மயிர் முளைக்கும்.

மிளகு, சுக்கு, திப்பிலி, பெருஞ்சீரகம், பாறைஉப்பு இவைகள் சமபாகம் சேர்த்துப் பொடிசெய்து ½—1 வராகனெடை, உணவிற்குப்பின் வாயிலிட்டு மென்று விழுங்க, சீரண சக்தியைக்கொடுத்து வயிற்று நோயையும் போக்கும்.

மிளகு 1¼ பலம், பெருஞ்சீரகம் 2 பலம், தேன் 10 பலம் சேர்த்து இலேகியமாக்கி, கழற்சிக்காய்ப் பிரமாணம், தினமிருவேளை சாப்பிட்டுவர. முதியோருக்கும், மெலிந்தோருக்கும் உண்டாகின்ற மூலநோய் சாந்தமாகும்,

---

## வெள்ளைமிளகு—Vellai-Milagu.

**Pimenta.**

**Eng:—White pepper.**

**Sans.** Sitha-maricha सितमरिचः | **Pers** Filfilai-sufeed * فلفل سفید

இது காடுகளில் வளரும் ஓர்வகை மரத்தினின்று கிடைக்கும் பழத்தின் கொட்டையேயாம். ஒவ்வொரு பழத்திலும் இரண்டு கொட்டைகள் உண்டு. பழம் சிவந்த வருணமாயும், விதைகள் வெண்மையாகவும் இருக்கும்.

**ப - உ.**—விதை.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—இதனால் கிரகணி, கபவாதம், சுரம், மேகம் இவை போகும். பசி உண்டாகும்.

வெள்ளை மிளகருந்த வீறு இரகணிபோம்
தள்ளு கபவாதந் தான்வகும்—உள்ள
சுரம்போகுந் தீபனம்ஆம் தொல்மேகம் போம்இத்
திரம்பார் எவர்களுக்குஞ் செப்பு. (அ-கு.)

**வ - கு.**—மிளகைப்போல்வே இதையும் உபயோகிக்கலாம்.

---

## வால்மிளகு—Vál-miḷagu.

**Cubeba officinalis.**

**Eng.—Tail-pepper ; cubebs.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | **Toka - miriyalu** | తోక మిరియాలు. | **Sans.** | **Lankesaha** | लङ्केशः |
| **Mal.** | **Vāl-milaka** | വാൽ മിളക്, | **Arab.** | **Kababah** | * كبابه |
| **Kan.** | **Gandha-menasu** | ಗಂಧಮೆಣಸು | **Pers.** | **Hab-el-arus** | * حب‌الارض |
| | | | **Hind.** | **Kabab-chini** | * كباب چيني |

இது ஜாவா, சுமாத்திரா முதலிய தீவுகளில் உற்பத்தியாகி வளருகின்ற ஓர்வகை அடர்த்தியான மரமேறும் கொடி. நன்ருய் முதிராத காய்களை உலரவைத்து எடுத்துக்கொள்ளப்படுகிறது. இக்காய்களின் காம்புகள் சேர்ந்து ஒட்டி வால்போலிருப்பதால் இது **வால்மிளகு** எனப்பெயர் பெற்றது. தோல் சுருங்கிக் கறுத்து உள்ளே வெளுத்துத் தைலப்பசை யுள்ளதாயும், காரமும், விறுவிறுப்பும் பொருந்தி நறுமணம் பெற்றிருக்கும். இந்தியாவில் கடைகளில் சாதாரணமாய்க் கிடைக்கும்.

**ப - உ,**—(உலர்ந்த) முதிராத காய்.

**சுவை.**—கார்ப்பு, விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—இதனுல் திரிதோடகபம், குன்மம், தாகம், வெட்டை முதலியன போகும். பசி உண்டாகும்.

வாதபித்த ஐயம் வயிற்று வலிதாகஞ்
சீதம் பலநோய் சிதையுங்காண்—போத
அதிதீ பனமாம் அணங்கரசே! நாளுந்
துதிவால் மிளகருந்தச் சொல். (அ-கு.)

**வ - கு.**—வால்மிளகுத்தூள், வெடியுப்பு வகைக்கு 4 குன்றி எடுத்துக கலந்து, வெள்ளைக்குக் கொடுக்கக் குணந்தரும்.

அரை வராகனெடை வால்மிளகுத்தூளை 2 குன்றி படிகாரத்துடன் சேர்த்துத் தினம் மூன்று வேளை கொடுத்துவர நாட்பட்ட வெட்டை, வெள்ளை முதலியன தீரும்.

வால்மிளகுத்தூள் 4 குன்றி, கருவாப்பட்டைக் கஷாயம் $1\frac{1}{4}$ பலம் ; இரண்டையும் கலந்து தினம் 3 வேளை கொடுத்துவர, இருமல், சளி நீங்கும்.

4 குன்றி வால்மிளகுச் சூரணத்தைப் பாலில் கலந்து குடிக்கத் தொண் டைக்கம்மல் நீங்கிக் குரல் தெளியும்.

வால்மிளகைப் பன்னீர்ப்பூத் திராவகத்தில் அரைத்துத் தலைவலிக்குப் போடலாம்.

வால்மிளகுத்தூள் ஒருவராகனெடை எடுத்துப் பசுவின்பால், நீர், தேன் இவைகளிலொன்றில் கலந்து, தினம் மூன்றுவேளை கொடுத்துவர குணத் தின் கீழ்க் கண்ட நோய்களைப் போக்கும்.

வால்மிளகு, அதிமதுரம், திப்பிலி, சிற்றரத்தை, கடுக்காய் இவைகளின் தூள் சமபாகம் எடுத்துக் கலந்து அதற்கு 15 மடங்கு நீர் விட்டுக் காய்ச்சி நாலில் ஒன்றுகக் குறுக்கி, வேளைக்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் தினம் நாலுவேளை கொடுத்துவர இருமல் நீங்கும்.

வால்மிளகுத்தைலம் ஒரு வராகனெடை, குங்கிலியத் தைலம் 3 வராக னெடை, பிசின் 2 வராகனெடை சேர்த்துக் கலந்து இவற்றுடன் கற்பூரத் திராவகம் 6 பலம் சேர்த்து, வேளைக்கு ஒரு பலம் வீதம், தினம் 3 முறை கொடுக்க, பிரமேகம், கர்ப்பமேகம், நாட்பட்ட மேகவெட்டை இவைகள் சுக மாகும்.

---

## முசற்காதிலை—Musarkáthilai.

### Ludwigia.

இது நீர்க்கசிவுள்ள இடங்களில் வளரும் ஓர்வகைச் சிறுகொடி. இதன் இலை முயலின் காதைப் போன்றிருப்பதால் இப்பெயர் பெற்றது.

**ப.உ.**—இலை.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.

**குணம்.**—இதனுல் குடலண்டவீக்கமும், கைகால்களின் கீல்களைப்பற்றிய வீக்கமும் நீங்கும்.

பீசத் தெழுந்த பெருவீக்கங் கைகாலில்
வீசிப்பு டைத்த வெறுவீக்கமும்—பேசாமல்
ஏகு முயற்கா திலையிருக்கும் ஊரைவிட்டுப்
பாகுமொழி மாதே ! பகர். (அ-கு.)

**வ - கு.**—இதனிலையை மிளகுடன் சேர்த்தரைத்துக் கழற்சிக்காய்ப் பிர மாணம் சுக்குக் கஷாயத்தில் கலந்து மூன்றுநாள் சாப்பிட வாதநோய் நீங்கும்.

இதை அரைத்து மேற்கூறிய வீக்கங்களுக்குப் பற்றிட வீக்கம் நீங்கும்.

---

## முசுட்டை—Musuttai.

**வே - பெ.**—பஞ்சி.

### Ipomoea candicans.

இது ஓர் வகைக்கொடி. தென்னிந்தியாவிலெங்கும் கிடைக்கக்கூடியது.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Germicide.**
வாதமடக்கி - வாதஹரகாரி - **Anti-vata,**
மலமிளக்கி - மலகாரி - **Laxative.**

**குணம்.**—இது வாதகோபம், கபதோடம், பிரமேக நீர்த்தினவு, புடை, சிறுசிரங்கு இவைகளை நீக்கும். மலத்தை இளக்கும்.

மாதே ! முசுட்டையது வாதமொடு ஐயத்தைத்
தீதே புரிநீரைத் தீர்க்குங்காண்—வேதனைசெய்
வன்மலத்தைத் தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்கிவிடுஞ் சாற்று. (அ-கு.)

**வ - கு.**—சமூலத்தைக் கஷாய மிட்டாவது, சூரணஞ்செய்து இதர மருந்துகளுடன் சேர்த்தாவது கொடுக்க வாதம், கபம் இவற்றைச் சமனப் படுத்தி, நீர்த் தாரையின் தாபிதத்தைப் போக்கும்.

இதை அரைத்து எண்ணெயிட்டுக் காய்ச்சி சொறி, சிரங்கு, நமைச்சல் முதலியவைகட்குப் பூசிவர, அவை குணமாகும்.

---

## முசுமுசுக்கை—Musumusukkai.

**வே - பே.—அயிலேயம், இருகுரங்கின்கை, மொசுமொசுக்கை.**

Bryonia Scabra.

Tel. **Musumusukaya** ముసుముసుకాయ. | Duk. **Musmusa.** * مسمسا

இது இந்தியாவில் சாதாரணமாகப் பயிராகும் ஓர்வகைக்கொடி.

**ப.உ.**—இலை, வேர்.

**சுவை**—துவர்ப்பு, கார்ப்பு, **வீரியம்**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - **Expectorant.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**

### இலை.

**குணம்.**—இதனால் காசம், கோழை, சுவாசம், நெஞ்சிற் புகைக்கம்மல், சலதோடம் இவை நீங்கும்.

இருமலுட னீளை யிரைப்பு புகைச்சல்
மருவுகின்ற நீர்த்தோடம் மாறுந்—திருவுடைய
மானே ! முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான். (அ-கு.)

### வேர்.

இது துர்க்கந்தத்துடன் இறுகிய கோழை, அற்ப வீரிய விடம், விடஅலச ரோகம், வாந்தி, மார்புநோய், குன்மம், பித்தாதிக்கம் இவைகளை நீக்கும்.

கந்தம் பரவு களிச்சளியும் புன்விடமு
மந்தம் பெறுவிடமும் வாந்திகளும்—அந்தம்
பெருகுரங்குக் கிச்சூடும் பித்தமுமி ருக்கா
திருகுரங்குக் கைவேருக் கே. (அ-கு.)

**வ - கு.**—இலை இரசத்தில் சிறிது கோரோசனை சேர்த்துக் கொடுக்க மேற் கூறிய குணங்களைத் தரும்.

ஊறவைத்த புழுங்கலரிசியுடன் இவ்விலையையும் சேர்த்து அரைத்து சிறிது உப்பு கூட்டி அடைசுட்டுக் கொடுத்துவரக் கோழைக் கட்டு, இருமல், ஈளை நீங்கும்.

வேரை உலர்த்திச் சூரணமாக்கி அல்லது கஷாயமிட்டுக்கொடுக்க வாந்தி, குன்மம், மார்புநோய் முதலியன நீங்கும்.

---

## முடக்கற்றான்—Mudakkatrán.

**வே - பெ—முடக்குற்றான், முடக்கறுத்தான்.**

Cardiospermum Halicacabum.

Eng.—Balloon-Vine ; Heart Pea or Winter Cherry.

| | | | |
|---|---|---|---|
| Tel. Budda Boosara బుడ్డ బూసర | Mal. Ulinja ഉഴിഞ്ഞ. | Kan. Kánakai ಕಾನಕಾಯಿ. | |
| San. Kaınasphota कर्णस्फोट: | Hind. Kanphata کان پھٹا | | |

இப்பூண்டு இந்தியா முழுவதும் பயிராகின்ற தெனினும், முக்கியமாய் சென்னை, வங்காளம், இலங்கை முதலிய இடங்களில் விசேஷமாய் வளரு கின்றது.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உடலுரமாக்கி - வ்யதாபேதகாரி - Alterative.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**குணம்.**—இதனால் கீல்பிடிப்பு, சினைப்பு, கிரந்தி, கரப்பான், பாதத்தைப் பற்றிய வாதம், மலக்கட்டு ஆகியவை போகும்.

சூலைப் பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவாய்வுங் கன்மலமுஞ்—சாலக்
கடக்கத்தா னோடிவிடுங் காசினியை விட்டு
முடக்கற்றான் றன்னை மொழி. (அ-கு.)

**வ - கு.**—இலை, வேர் முதலியவைகளைக் கஷாயமிட்டு வாதம், மூலம், நாட்பட்ட இருமல் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலைச்சூரணத்துடன், சித்திரமூலவேர்ப்பட்டைச்சூரணம், கரியபோளம் இவை சேர்த்து மூன்று நாள் கொடுக்க, சூதகக்கட்டு நீங்கும்.

இலைகளை வதக்கி அடிவயிற்றில்கட்டச் சூதகத்தை அதிகப்படுத்தி கருப்பா சய அழுக்குகளை வெளிப்படுத்தும்.

இலையை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி அவ்வெண்ணெயை வாதவலிகளுக்குப் பூசலாம்.

இலைச் சாற்றைக் காதில் விடக் காதுவலி, சீழ் வடிதல் நீங்கும்.

வேர்க்கஷாயத்தை மூல நோய்க்குக் கொடுக்கலாம்.

சமூலக்கஷாயத்துடன் ஆமணக்கெண்ணெய் கூட்டிக் கொடுக்கப் பேதியாகி, வயிற்றிலுள்ள வாதநீர், பித்தநீர், முதலியவைகளைப் பேதியின் மூலமாய் வெளிப்படுத்தித் தேகாரோக்கியத்தை உண்டாக்கும்.

---

## முந்திரி—Munthiri.

**வே - பெ.—கொல்லமா, கொட்டைமுந்திரிமா.**

Anacardium Occidentale.

**Eng.—Cashew nut tree.**

**Tel.** Munta-mamidi (chettu) ముంతమామిడి (చెట్టు)

**Mal.** Paranki-mava പറങ്കിമാവ്.

**Kan.** Jidi ಜೀಡಿ.

**Sans.** Shophakara शोफकरा

**Hind.** Kajù *كاجو

**Pers.** Bádami Pharangi *بادام فرنكى

இது ஒரு சிறு மரவகுப்பைச்சேர்ந்தது. இந்தியாவின் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாக வளருகின்றது. முக்கியமாய்த் தென்னிந்தியாவில் கடற்கரையை அடுத்த மணற்பாங்கான பூமிகளில் பயிராகும்.

**ப.உ.**—பழம், விதை, பட்டை.

**சுவை.**—

**பழம், விதை.**

இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - இனிப்பு.

**பட்டை.**

துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**பழம்.**

சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**விதை.**

உரமாக்கி - பலகாரி - Tonic.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**பட்டை.**

துவர்ப்பி - ஸங்கோசணகாரி - Astringent.

**பருப்பு.**

**குணம்.**—இதைத் தின்றால் பித்தவாத தொந்தம், தாது விருத்தி, அக்கினி மாந்தம் இவை உண்டாம்.

மெத்தஇனிப் பாகும்அது மென்கொடியே தின்றக்கால்
பித்த அனிலம் பிறக்குமென்பார்—எத்தலத்தும்
இந்திரியப் புஷ்டி யிளைக்காது மாந்தம்உண்டாம்
முந்திரியின் நற்பருப்பை முன். (அ-கு.)

**வ - கு.**—பழத்தை அநேகர் மிகப்பிரியமாய்த் தின்பார்கள். இதில் ஓர்வகைக்காறலும் இனிப்பும் கலந்த நீர் மிகுந்திருக்கும்.

இவ்விரசத்தை வடித்துச் சாராயம் காய்ச்சுவதுண்டு. இச்சாராயத்தைத் தகுந்த அளவாக உட்கொள்ளின் மூத்திரத்தைப் பெருக்கும். வெப்பத்தை உண்டுபண்ணும்.

இதன் கொட்டைப்பருப்பு மிகவும் உருசிகரமானது. இதனால் தாது விருத்தி யுண்டாகும். ஆனால் பசி மந்தப்படும். ஆகையால் பசித் தீயைத் தூண்டக்கூடிய இதர சரக்குகளுடன் சேர்த்து உபயோகித்தல் நலம்.

கொட்டையின் மேல் ஓட்டில் இருந்து எடுக்கும் எண்ணெய் மிகவும் காரமுடையது. வெளிப் பிரயோகத்தில் மாத்திரம் வழங்கப்படுகிறது.

இத்தைலத்தின் வாடை பட்டால், கறையான், முதலிய பூச்சிகளின் உபத்திரவம் நீங்கும். இது தோலைச் சிவக்கச்செய்து எரிச்சலைத் தருவதும் தவிர, கொப்புளத்தையும் உண்டாக்கும்.

இத்தைலத்தைக் கால் வெடிப்புகளுக்கிட வெடிப்புப் புண் நீங்கும்.

பலவகை மருக்கள், பாலுண்ணி முதலிய சருமத்தில் தோன்றும் குருக்கள், புடைகள் இத்தைலம் பட நீங்கும்.

பருப்பினின்றும் ஓர்வகை எண்ணெய் எடுக்கின்றனர். இவ்வெண்ணெயை உள்ளுக்குக் கொடுக்க, விடங்களை முறித்து, அதனாலுண்டாகும் குடற் புண்களை ஆற்றும்.

வெளிப்பிரயோக மருந்துகளுக்கு இவ்வெண்ணெய் ஓர் நல்ல துணை மருந்தாகும்.

வேர்ப்பட்டையைக் கஷாயம் செய்து மது மூத்திர ரோகத்துக்குக் கொடுக்கலாம்.

---

## முருங்கை—Murungai.

**வே - பெ.—சிக்குரு, கிரஞ்சனம், கிழவி, சோபாஞ்சனம்**

Moringa Pterygosperma.

**Eng.** Horse radish; Drum - stick tree.

**Tel.** Munaga మునగ.

**Mal.** Murinna മുരിങ്ങ.

**Kan.** Nugge - gida ನುಗ್ಗೆಗಿಡ.

**Sans.** Sigru शिग्रुः

**Hind.** Sahijna * سہجنا

இம் மரம் இமய பருவதத்தின் அடிவாரத்திலுள்ள காடுகளில் எதேச்சையாக வளருகின்றது. சாதாரணமாக இந்தியா, பர்மா, இலங்கை முதலிய இடங்களில் பயிரிடப்பட்டு வருகின்றது. இதில் **காட்டுமுருங்கை** (Hedysarum Sennoicles) **கொடிமுருங்கை** (புனல்) (Indigofera arcuata) **தவசுமுருங்கை** (Justicia - Iranquebar) எனப் பலவகைகளுண்டு.

**ப—உ.**—எல்லா பாகங்களும்.

**சுவை.**— கைப்பு, துவர்ப்பு, இனிப்பு. **வீரியம்** - சீதம், **பிரிவு** - (காய்) இனிப்பு (பட்டை, வேர்) கார்ப்பு.

**பொது**

செய்கை.

இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

**பூ**

உரமாக்கி - பலகாரி - Tonic.

**பட்டை**

ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
கருப்பச்சிதைச்சி - கர்ப்பநாசநி - Abortifacient.

**பச்சை வேர்.**

காறலுண்டாக்கி - Acrid.
கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி - Vesicant.
கற்றுகளாக்கி - பாஷாணபேதி - Antilithic.

**இலை.**

**குணம்.**—இதனால் அக்கினிமந்தம், உட்சூடு, சிரஸ்தாபரோகம், பித்த மூர்ச்சை, கண்ணோவு ஆகிய இவை நீங்கும்.

செறிமந்தம் வெப்பந் தெறிக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலகும்—மறமே
நெருங்கைஇலை யொத்தவிழி நேரிழையே ! நல்ல
முருங்கை யிலையை மொழி. (அ-கு.)

**பூ.**

இதனால் பித்த தோடமும், அரோசகமும் நீங்கும். கண் குளிர்ச்சியும், சுக்கில விருத்தியும் உண்டாகும்.

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகும்
அழிவிந்துவும் புஷ்டி யாகும்—எழிலார்
ஒருங்கையக லாக்கற் புடைவா ணகையே !
முருங்கையின் பூவை மொழி. (அ-கு.)

**பிஞ்சு.**

இதன் பூப் பிஞ்சைப் பாகஞ்செய்து தோலுடனுண்ணில், அத்திசுரம், எலும்பை உருக்குகின்ற வெப்பம், அரோசகம், விந்து நஷ்டம் இவைகள் நீங்கும்.

சிக்குருக்கு யப்பிஞ்சத் திச்சுரத்திற் குஞ்சநிக்கும்
அக்குருக்கு ருப்பம் அரோசிகட்குஞ்—சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவற்கு மாமதனைப்
பச்சை யுறவருந்திப் பார். (தே-கு)

**காய்.**

நிதான நூலில் கூறும் பல பிணிக்கும் ஒவ்வியதாயும், பத்தியக்கறியாயும் இராநின்ற முருங்கைக் காயால் கபம் நீங்கும்.

சொல்லும் பிணியெல்லாந் தோல்வியாம் ஐயம்அறும்
பல்லுயிர்க்குந் தாதுமிகும் பத்தியமாம்—வில்லார்
பெருங்கைக்கா மன்றுதிக்கும் பெண்ணே ! நறிய
முருங்கைக்காய் தன்னை மொழி. (அ-கு.)

**விதை, ஈர்க்கு.**

வித்தினால் சலரூபமாகக் கரைந்த விந்துவும் பிசின் போலாகும். சரீரம் பலக்கும். இதன் இலையும் ஈர்க்கும் நீரைப் பெருக்கும்.

நீரான விந்துவுமோ நீண்டபிசி னுய்த்தடிக்குஞ்
சீராக மேனி செழிக்குங்காண்— பாராய்
முருங்கை விதைஅதனுல் மொய்த்த இலைார்க்கோ
ஒருங்கையுற நீர்இறக்கும் உன். (அ.கு.)

**பட்டை.**

இதன் வேர்ப்பட்டைக்கு, கபதோடமும், சந்நிபாதசுரமும், மரப்பட்டைக்கு வாத தோடமும், சில விடங்களும் நீங்கும்.

முருங்கைவேர்ப் பட்டைக்கு மூடு கபத்தோ
டொருங்குருச் சந்நிசுரம் ஓடும்— அருங்கனக
வட்டைப் பொருமுலையாய் ! வாய்வொடுவி டங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து. (அ.கு.)

**பிசின்.**

இது அதி மூத்திரம், மோரைப்போல் ஒழுகுகின்ற விந்து, தொந்த வாதம், இவைகளை நீக்கும். சுக்கிலத்தை இறுக்கி அழகை உண்டாக்கும்.

முந்துநீ ரைத்தடுக்கும் மோரைப்போ லேயொழுகும்
விந்துவைத்த டிப்பித்து மேனிதருந்— தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும்
பெரிய முருங்கைப் பிசின் (அ.கு.)

**சமூலம்.**

இதன் சிறிய **பிஞ்சால்** திரிதோடம் நீங்கும். **பூவால்** புணர்ச்சியில் வன்மையும், கண்ணுக்குக் குளிர்ச்சியும் உண்டாகும். **இலை**–சுரத்தையும், **பட்டை** - விடத்தையும், **வேர்** - வாத கோபத்தையும் நீக்கும்.

பிஞ்சால் திரிதோடம் பெரும்பூ வால்போகம்
உஞ்சுவிழிக் குக்குளிர்ச்சி யுஞ்சேரும்— விஞ்சிலைவெப்
பாற்றுந்தோல் நஞ்சறுக்கும் அவ்வேர்வா தச்சினத்தை
யாற்று முருங்கையி னது. (அ.கு.)

**காட்டு முருங்கைச் சமூலம்.**

கைப்புள்ள காட்டு முருங்கை **வேர்** - மகாவிடத்தை நீக்கும்; **பூ** - கண்ணுக்குக் குளிர்ச்சி தரும்; **இலை - காய் - பிசின் - பிஞ்சு** இவை, கபரோகங்களை நீக்கும்.

தின்முற் கசப்பாகுந் தீயாங் கொடுவிடத்தைக்
கொன்றுவிடுங் கட்குங் குளிர்ச்சிதரும்—என்றும்ஐயம்
ஓட்டும்வேர் பூஇலைகாய் உற்றபிசி னும்பிஞ்சுங்
காட்டுப் புனமுருங்கை காண். (அ.கு.)

**முருங்கை.**

**வ - கு.**—இதன் இலை, இரண்டு திரிப் பூண்டு, ஒரு துண்டு மஞ்சள், உப்பு, மிளகு இவைகளைச் சேர்த்தரைத்துக் கற்கம் செய்து, நாய்க்கடி விடத்தை முறிக்க, உள்ளுக்குக் கொடுத்து, அதே கற்கத்தைப் புண்ணின் மீதும் பற்றிட, புண் ஆறி, விடமும் நீங்கும்.

இலை இரசத்தைக் கண்ணில்விட வலிகள் சமனப்படும். தேனுடன் சேர்த்து அஞ்சனமாகக் கண்ணிமைகளில் தேய்க்கலாம்.

இலைச் சாற்றுடன் சிறிது வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க அதிமூத்திரம் குறையும்.

இலையும் மிளகும் சேர்த்து நசுக்கிச் சாறெடுத்துத் தலைவலிக்கு நெற்றியில் தடவலாம்.

இலைச் சாற்றை 4 ரூபா வெடையாகக் கொடுக்க, நன்றாக வாந்தியாகும்.

இலையை அரைத்து வீக்கங்களின் மீது பற்றிடலாம்.

இதன் ஈர்க்கு, கருவேப்பிலை ஈர்க்கு இவைகளைச் சேர்த்துக் கஷாயஞ் செய்து வயிற்றுவலி முதலிய நோய்களுக்குக் கொடுப்பதுண்டு. வயிற்றுக் கிருமிகளைப் போக்கும்.

பூவை அநேக இலேகியங்களில் சேர்த்துப் பக்குவம் செய்து, தாது புஷ்டியாக உபயோகிப்பதுண்டு.

இதைக் கஷாயமிட்டுக் கொடுக்கக் குணத்தின் கீழ்க்கண்ட நோய்களை நீக்கி, நற்பயனைத் தரும்.

பூவைக் காடியில் ஊறவைத்து ஆகார பதார்த்தமாக வழங்குவதுண்டு.

பூவிலிருந்து பிஞ்சு தோன்றியவுடன் எடுத்துப் பாகம் பண்ணித் தோலுடன் சாப்பிட்டுவர, மிகுந்த வெப்பத்தைத் தணித்துத் தாதுபுஷ்டியையும் உண்டுபண்ணும்.

காயைச் சமையல் செய்து மிகப் பிரியமாக சாப்பிட்டு வருகிறார்கள்; பத்தியக் கறிகளிலும் இது ஒன்றாகும்.

விதையிலிருந்து ஓர்வகை எண்ணெய் எடுக்கிறார்கள். இவ்வெண்ணெய் வாத வலியை நீக்கும்.

இதன் விதை, கடுகு, சணல்விதை, பார்லி ஆகிய இவை சமபாகம் எடுத்துத் தயிர்விட்டு அரைத்துக் கண்டமாலையின் மீது பூசிவர நற்பயனைத் தரும்.

விதை அநேக தாதுபுஷ்டி இலேகியங்களில் துணைச் சரக்காக உபயோகப்படுகின்றது. மிகவும் நீர்த்துப்போன தாதுவைக் கெட்டிப்படுத்தும்.

மரப் பட்டைச்சாறு அநேக தைலங்களில் சேருவதுண்டு.

பட்டையைச் சிதைத்து வீக்கங்கள், கட்டிகளின் மீது வைத்துக் கட்டுவதுண்டு.

பட்டைச் சாறு, குப்பைமேனிச் சாறு இவ்விரண்டையும் சேர்த்து எண்ணெய் விட்டுக் காய்ச்சிக் கரப்பான், சொறி, சிரங்குகளின் மீது தடவ அவை நீங்கும்.

பட்டைச்சாறு சில உலோகங்களைப் பற்பமாக்கும்.

பிசினை எண்ணெயில் கரைத்துக் காதில்விடக் காது விரணம் ஆறும்.

பாலிற் கரைத்துக் கன்னப்பொறியில் பூசத் தலைவலி நீங்கும். இதை நெறிக்கட்டிக்கும் பூசலாம்.

இதைக் கருப்பாசய முகத்தில் வைத்துக் கருப்பச் சிதைவு செய்வது சிலர் வழக்கம்.

இது சுக்கிலத்தை இறுக்குமாதலால் தாதுஸ்தம்பன இலேகியங்களில் சேரும்.

வேரை ஒன்றுக்கு இருபது வீதம் சேர்த்து அத்துடன் சிறிது கடுகுத் தூள் கலந்து முறைப்படிக் கஷாயமிட்டு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் கொடுத்து வர, கல்லீரல், மண்ணீரல், சம்பந்தமான நோய்களின்மூலம் உண்டாகின்ற உதரநோய் தீரும்.

மேற்படிக் கஷாயத்துடன் 4 குன்றி வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க நன்றாக நீர் இறங்கி சோபை, கைகால் வீக்கம் முதலியன நீங்கும்.

மேற்படிக் கஷாயத்தைக் கொப்புளிக்க தொண்டைக் கட்டு, தொண்டைக் கம்மல் தீரும்.

வேரின் சாற்றுடன் பால் சேர்த்துத் தக்க அளவாகச் சாப்பிட, விக்கல், சுவாசகாசம், கீல் வாதம், உள்ளுறுப்புகளின் வீக்கம், முதுகுவலி முதலியவை நீங்கும்.

வேரை அரைத்து கடுகுத் தூள் சேர்த்துப் பற்றிட வேரின் வீரியம் அதிகப்படும்.

---

## முலாம்—Mulàm.

**வே - பெ.—குமட்டி.**

**Citrullus vulgaris.**

**Eng. Water Melon.**

| | |
|---|---|
| Tel. Darbūje దర్బూజ. | San. Kuttoowmbi कुट्टुंवी |
| Mal. Mandeki. മണ്ടെകി. | Arab. Belikh zichi * بطيخ زيچي |
| Kan. Tharbooza ದರ್ಬೂಜಾ. | Hind. Jamanka * جامنکا |

இது இந்தியா முழுவதும் பயிரிடப்படும் ஓர்வகைக் கொடி. இலைகள் பெரிதாகவிருக்கும். காய்கள் பெரியதாகவும், பச்சை அல்லது வெண் மஞ்சள் நிறமாகவும், வெடித்து மிருக்கும். வெள்ளரி இனத்தைச் சேர்ந்தது.

**ப - உ.**—பழம், விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பழம்.**

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- குடற்புழுவகற்றி - Vermifuge.
- உடலுரமாக்கி - போஷண்காரி - Nutritive.

**குணம்.**—இதனால் பல்வீழல், சுக்கில க்ஷீணம், தேக ஒளி கெடல், வாதகோபம், கபாதிக்கம் ஆகியவை உண்டாகும்.

தந்தம் விழுந்திடுமே தாது மெலிந்திடுமே
விந்தைமிகுங் காந்தி விலகிடுமே—சந்ததமும்
வாதம் மிகுந்திடுமே வந்துகபஞ் சேர்ந்திடுமே
ஓதுகுமட் டிக்காயால் உன். (அ.கு.)

**வ - கு.**—இதன் காயைத் தின்றால் மேற்கூறிய தோடங்கள் உண்டாகும்.

பழம் மிகவும் உருசிகரமானது. தாகத்தைப் போக்கும்.

இதன் சாற்றைச் சந்நிபாத நோயில் கொடுக்க, குடல் புண்ணை ஆற்றுமெனக் கருதப்படுகின்றது.

சாற்றோடு சருக்கரை கலந்து கொள்ளப் பிரமேகத்தில் காணும் மூத்திர எரிச்சலைத் தணிக்கும்.

விதையை உடைத்துப் பருப்பை உலர்த்தி தேக புஷ்டியாக்கும் மருந்துகளுடன் சேர்த்து வழங்கலாம். மூத்திரத்தைப் பெருக்கும். புழுவைக் கொல்லும்.

## முள்ளங்கி—Mullángi.

வே - பெ.—முள்ளாங்கி, மூலகம், முல்லங்கி.

Raphanus Sativus.

Eng.—Garden Radish.

Tel. Mullangí ముల్లంగి.
Mal. Kankapal കങ്കാപൽ.
Kan. Mullangí ಮೂಲ್ಲಂಗಿ.
Sans. Moolaka मूलकः
Pers. Turbe * ترب
Hind. Muli * مولی

இது இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது. இதில் **வெள்ளை, சிவப்பு** என இருவகையுண்டு. குணம் ஒன்றேயாகும்.

**ப - உ.**—இலை, கிழங்கு, விதை.

**இலை - கிழங்கு.**

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**விதை.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**இலை.**

**குணம்.**—இதனால் வாதகோபம், பித்தநோய், கிருமிரோகம், மார்பெரிச்சல் ஆகியவை உண்டாகும். வயிற்றுநோய் அடங்கும்.

வாயுமிகும் பித்தம் வளருங் கிருமியுமாம்
ஓய்வுறு நெஞ்செரிவும் உண்டாங்காண்—தூயநிற
முள்ளாங்கி யின்இலையை முற்றும்உண்டாற் குன்மவலி
யுள்ளாங் கிளம்பா துரை. (அ - கு.)

**விதை.**

இது விந்து நட்டத்தைப் போக்கும்.

(காமாலை) முள்ளங்கிக் காழால்வித் தாஞ்(சடைவித்
தோமாலை யுள்ளடக்குஞ் சொல்.) (அ - கு.)

**கிழங்கு.**

இதனால் வாதப்பிணி, கரப்பான், வயிற்றெரிச்சல், குத்தல், குடல் விருத்திநோய், இருமல், கபம், தலைவலி, நீரேற்றம், பல்நோய், பல்சிலந்தி, குன்மம், சுவாசம், மூலக்கடுப்பு, இவை போம்.

வாதங் கரப்பான் வயிற்றெரிவு சூலைகுடல்
வாதங்கா சம்ஐயம் வன்தலைநோய்—மோதுநீர்க்
கோவைபன்னோய் பல்சிலந்தி குன்மம்இரைப் புக்கடுப்புஞ்
சாவுமுள்ளங் கிக்கந்தத் தால். (அ - கு.)

**வ - கு.**—முள்ளங்கி நட்டு இரண்டு மூன்று இலைகள் வந்த உடன் அவ்விலைகளில் ஒருபிடி எடுத்து அரை அல்லது ஒருவராகனெடை சோற்றுப்புச் சேர்த்துக் காலை - மாலை இருவேளையும் சாப்பிட்டுவர மேகத்தினாலுண்டாகும் நீரடைப்பு நீங்கும். மலத்தை இளக்கும்.

இலையைச் சமைத்துத்தின்பது நாட்டுவழக்கம்.

கிழங்கை நசுக்கிச் சாறுபிழிந்து, ஒன்று முதல் மூன்று பலம் வரையி லும் குடித்துவர மூத்திரத்தை நன்ருய்ப் போக்கும். மூத்திர வியாதி களைக் கண்டிக்கும்.

கிழங்கைச் சமைத்துண்பது நாட்டுவழக்கம். சிலர் பச்சையாகத் தின்ப தும் உண்டு. அரோசகத்தை நீக்கிப் பசியை யுண்டுபண்ணும். உணவைச் செரிப்பிக்கும்.

விதையைக் கஷாயமிட்டுக் குடிக்க மேற்கூறிய குணங்களைத்தரும். இவ் விதை பல தாதுபுஷ்டி இலேகியங்களிற் சேரும்.

---

## முன்னை—Munnai.

**வே - பெ.—அரணி, வைசயந்தி.**

Premna Inteyrifolia.

| | |
|---|---|
| Tel. Ghechi-nelli గేచి నెల్లి. | Sans. Agnímanthá अग्निमन्थः |
| Mal. Appel അപ്പെൽ. | |
| Kan. Takkile ತಕ್ಕಿಲೆ. | Hind. Agetha * اگیتا |

இது சிறுமர வகுப்பைச் சேர்ந்தது. இந்தியா, இலங்கை முதலிய இடங்களில் வளருகின்றது. இதில் **எருமைமுன்னை** (Premna Maysorensis), **காட்டுமுன்னை** (Croton repandum), **பேய்முன்னை** (Celtis orientalis) **பசுமுன்னை** எனப் பேதமுண்டு. பசு முன்னையே பெரும்பாலும் மருந் தாக உபயோகப்படினும், இதற்கும் மற்ற சாதிகளுக்கும் செய்கையும், குண மும் ஏறக்குறைய ஒன்றுபட்டேயிருக்கும்.

**ப - உ.**—இலை, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - **Alterative.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic .**

### இலை.

**குணம்.**—இலைக்கு அரோசகம், வீக்கம், கபம், கரப்பான் இவை உண் டாகும். வாததோடமும், அக்னிமந்தமும், மயக்கமும் போம்.

வாயருசி சோபைஐய மாருக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினிம யக்கமென்ற—நோய்கள்
அறும்உன்னை யுன்னுவர்கட் காழி யுலகில்
நறுமுன்னை தன்னிலையை நாடு. (அ - கு.)

### சமூலம்.

முன்னைவேர் வாத எப்பத்தைப் போக்கும். இலை உணவைச் செலுத் துவதுந் தவிர எண்பது வாதரோகங்களையும் விலக்கும்.

முன்னைவேர் வாதம் முதிர்எப்பந் தான்போக்கும்
அன்னமி றக்கும் அதனிலைதான்—சொன்ன
இயல்வாதம் எண்பதையும் இல்லையெனச் செய்யும்
கயல்பொருவுங் கண்ணுய்! கருது. (அ - கு.)

**வ - கு.**—இலையை முறைப்படிக் கஷாயமிட்டு $\frac{1}{8}$ - $\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் தின மிருவேளை கொடுத்துவர மேற்கூறிய குணங்களைத் தரும்.

வேரையும் மேற்கூறியபடிக் கஷாயமிட்டுக் கொடுக்கலாம். இதனுல் வாத எப்பம், பிரமேகம் நீங்கும். சுரத்திலிருந்து நீங்கினவர்களுக்குத் தேகபலத்தைத் தரும். வாதநோய், தலைநோய் சாந்தியாகும். இக்கஷா யத்துடன் தசமூலமும் சேர்த்துக் கஷாயமிட்டுக் குடிக்க மிக நன்மை தரும்.

வேரை நீர்விட்டு உரைத்து அதில் ஒருவராகனெடை எடுத்து வெண்ணெயில் தினமிருவேளையும், ஒருவாரம் சாப்பிட்டுவர, படை, கிரந்தி இவை நீங்கும்.

---

## மூக்கிரட்டை—Múkki-raṭṭai.

**வே - பெ.—புட்பகம், மூக்குறட்டை, இரத்தபுட்பிகா.**

Bōērhaavia Diffusa.

| | | |
|---|---|---|
| Tel. | Atíka-mamidi | అటికమామిడి. |
| Mal. | Thavizhama | തവിഴാമ. |
| Kan. | Sanadika | ಸಾನಾಡಿಕ. |
| Hind. | Gadha-purna | گادھاپرنا |
| Duk. | Thikri-ká-jhar | ٹھیکری کا جھاڑ |
| Sans. | Punarnava | पुनर्नवा |

**குறிப்பு**—K. M. Nadkarni அவர்கள் இயற்றிய Indian Materia Medica விலும், Lieut. Colonel. K. R. Kirtikar, F.L.S., I.M.S., Major B. D. Basu, I.M.S., & I.C.S.; இவர்களால் இயற்றிய Indian Medical Plants என்கிற ஒரு நூலிலும், மூக்கிரட்டைக்கு "புனர்நவம்" என்கிற வடமொழிப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. "புனர்நவம்" என்பது "சத்திச்சாரணையை"க் குறிக்கும்.

இது இந்தியா முற்றிலும் பாழ்வெளிகளிலும், நன்செய் - புன்செய் நிலங்களிலும், புற்களடர்ந்துள்ள விடங்களிலும் படரும் கொடி இனத்தைச் சேர்ந்தது. இதில் இரண்டு பிரிவுண்டு. ஒன்றின் இலை சிறிதாகவும், மற்றொன்றின் இலை பெரிதாகவும் இருக்கும். இதற்கு மூக்கரைச் சாரணை எனவும் பெயர் (Bōērhaavia Repens).

**ப - உ.**—சமூலம், வேர்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refigerant.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic (in larger doses.)

**குணம்.**—ஆமம், நமைச்சல், வாதப்பிணி இவைகளை நீக்கும். அழகையும், விரேசனத்தையும், பித்தப்பிணியையும் உண்டாக்கும்.

சீதம கற்றுந் தினவடக்குங் காந்திதரும்
வாத வினையை மடிக்குங்காண்—பேதி
கொடுக்குமதை உண்டாக்காற் கோமளமே! பித்தம்
அடுக்குமே மூக்குறட்டை யாய். (அ - கு.)

### இலை.

**வ - கு.**—இதன் இலையைக் கறிசெய்து சாப்பிடுவது நமது நாட்டு வழக்கம். இதனால் மலச்சிக்கல் நீங்கும். உடல் காந்திபெறும்.

### வேர்.

இதன் வேர்க்கஷாயத்தைக் கீல்வாதத்திற்கும், சுவாசத்திற்கும் கொடுக்கலாம். காமாலை, நீர்க்கட்டு, சலோதரம், சோபை இவைகளுக்கும் பயன்படும்.

சிற்றுமணக்கெண்ணெயில் இதன் வேரைச் சிதைத்துப் போட்டுக் காய்ச்சி வடிகட்டித் தக்க அளவில் கொடுக்கப் பேதியாகும். இதனால் ஆமதோடம், நமைச்சல், வாதநோய் தணியும்.

மலச்சிக்கலைப் போக்க, இதன்வேர்ச் சூரணத்தில் சற்றேறக்குறைய ½ முதல் 1 வராகனெடையாவது, வேர்க்குடிநீரையாவது கொடுக்கலாம். அதிக அளவில் வாந்தியுண்டாக்கும்.

**குறிப்பு 2.**—மூக்கிரட்டைக்கும், வெள்ளைச்சாரணைக்கும் வித்தியாச மறியாதார் எழுதிய நூல்களிலும், அகராதிகளிலும் இரண்டும் ஒன்றே என்று எழுதியிருப்பதால், ஒன்றின் குணத்தை மற்றொன்றின்மீது ஏற்றியிருப்பதைக் காணலாம். இரண்டின் குணமும் சற்றேறக்குறைய ஒன்றுபட்டிருப்பினும், இவ்விரண்டும் ஒன்றின் பெயரே யென்று சாதித்தல் கூடாது. படர்கொடி வகுப்பைச் சேர்ந்திருப்பினும் இலை, பூ, தண்டு, காய் நிறம் முதலிய தன்மைகளில் வேறுபட்டேயிருக்கும். கீழே காட்டியுள்ள மூக்கிரட்டை உருவப்படத்தைக் கவனிக்க. இதற்கும் வெள்ளைச்சாரணைக்குமுள்ள வேற்றுமை நன்கு விளங்கும்.




மூக்கிரட்டை. **Bōērhaavia Diffusa.**

## மூங்கில்—Múngkil.

**வே - பெ.**—அமை, அரி, ஆம்பல், ஓங்கல், கண், கணை, கழை, காம்பு, கீசகம், கிளை, சந்தி, தட்டை, திகிரி, துளை, தூம்பு, நேமி, பணை, பாதிரி, புறக்காழ், முடங்கல், முந்தூழ், முளை, வஞ்சம், வரை, விண்டு, வெதிர், வேரல், வேய், வேல், வேணு, வேழம்.

Bambusa Arundinaceae.

**Eng.**—Bamboo.

| | | |
|---|---|---|
| **Tel.** Veduru వెదురు. | | **Sans.** Vamsa वंश: |
| **Mal.** Mula മുള. | | |
| **Kan.** Biduru ಬಿದುರು. | | **Hind.** Bháns * بهانس |

இது தென்னிந்தியாவின் காட்டுப் பிரதேசங்களில் எதேச்சையாக வளருகின்றது. வட - கீழ்இந்தியாவில் அநேகமாய்ப் பயிரிட்டு வளர்த்து வருகின்றார்கள். மூங்கிலில் பலசாதிகளுண்டு. **மூங்கில்பாஷாணம், மூங்கில்உப்பு,** முதலியவை இதனின்றும் உற்பத்தியாகின்றது. நவமணிகளிலொன்றாகிய முத்துப் பிறக்கு மிடங்களில் இதுவுமொன்றாகும். மூங்கில் முப்பது வருடங்களுக் கொருமுறை பூத்துக் காய்க்குமென்று கண்டறியப்பட்டிருக்கின்றது. இதன் அரிசியை, ஏழைமக்கள் வேறு உணவின்றி பசியால் வருந்துங் காலை, சமைத்துச் சாப்பிடுவது வழக்கம். ஆகவே இதற்குப் பஞ்சங்காக்கும் அரிசி எனக் கூறுவதுமுண்டு.

மூங்கிலின் ஒவ்வொரு பகுதியும் மாந்தர்க்குப் பயன்படுவதாகும். இதன் இளங் குருத்தைச் சீனர்களும், ஜப்பானியர்களும் தின்கிறார்கள். காடு - மலைப்பிரதேசங்களில் வசிக்கும் ஜனங்கள் மூங்கிலை உணவுப் பாத்திரமாகவும், அதின் அரிசியை உணவுப் பதார்த்தமாகவும், நன்றாகச் சீவின மூங்கில் குச்சியைக் கத்தியாகவும், வில், அம்பு முதலியவையாகவும், அதன் வேரை மூலிகையாகவும் உபயோகித்து வருகிறதை நாம் காண்கிறோம். ஆகவே மூங்கில் மிகவும் உபயோகமுள்ளதென்று கூறுவது மிகையாகாது.

**ப - உ.**—இலை, கணு, வேர், உப்பு, விதை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**

- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி . Anthelmintic.

**பொது.**

- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- இசிவகற்றி - அங்காகர்ஷண நாசநி - Antispasmodic.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

### இலை.

**குணம்.**—இதற்குக் குடற்சூலையும், வயிற்றுநோவும், இரத்தத் தடிப்பும், பிரசவகாலத்திற்றங்கிய அழுக்கும் நீங்கும்.

குடற்கட்டுச் சூலையுடன் குன்மம் உதிரம்
உடற்கெட்டா தோடி யொழியும்—அடற்றங்கு
வேல்விழிமா தேகேளாய் ! வேயின் இலைதனக்குக்
கால்வழியுஞ் சோணிதம்போங் காண். (தே - கு.)

### விதை (அரிசி.)

பாயசம், பலகாரம் முதலானவை செய்வதற்கான மூங்கிலரிசி, இரத்த பித்தரோகம், விபரீதசுரம், நேத்திரநோய் இவைகளை நீக்கும்.

உதிரபித் தந்தீர்க்கும் ஓங்குசுரத் திற்கும்
அதிரவரு கண்ணோ யதற்கும்—புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கில் அரிசி. (அ - கு.)

### மரம்.

இதனுல் மாதாந்தருதுச் சோணிதக்கட்டு, சுரம், வாதநோய், இரைப்பு இவைகள் போம்.

சூதக வாய்வினது சோணிதந்தங் காதுவரு
மாதே! சுரந்தணியு ம் வாதம்போம்—பூதரமேல்
ஓங்கி வளர்ந்திழையு மோங்கலெனு மூங்கிலுக்கு
வாங்குஞ்சு வாசம்போம் வாழ்த்து. (அ - கு.)

### பாய்.

மூங்கிற்பாய்க்கு, மூத்திரக்கிரிச்சரம், பித்தரோகம், மிகுவெப்பம் ஆகிய இவைகள் விருத்தியடையும்.

நீர்க்கடுப்பு மெத்தவுறு நீடுபித்த மும்பெருகும்
ஆர்க்கும் அனலம் அதிகரிக்கும்—பார்க்குளுறை
கோங்கி னறியமுகைக் கொங்கை மலர்த்திருவே!
மூங்கிலின் பாய்க்கு மொழி. (அ - கு.)

ல - கு.—மூங்கிலின் இளமுளேகளை நசுக்கிப் பிழிந்துச் சாறெடுத்து அழுகல் விரணங்களுக்குப் பூசி, பின்னர் அதைச் சிதைத்து வைத்துக்கட்ட அவ்விரணங்களிலுள்ள பூச்சிகள் வெளியேறிவிடும். புண்ணும் ஆறும்.

இளங்குருத்துகளை 1-க்கு 20 நீர்விட்டுக் கஷாயமிட்டுக் கொடுக்க ருதுக் கட்டு, பிரசவ மலினம், வெள்ளை இவை நீங்கும். மேலும், சுரம், குட்டம் இவைகளும், குழந்தைகளின் வயிற்றிலுள்ள சிறு கிருமிகளும் போகும்.

முளேகளை ஊறுகாய் செய்து உபயோகிக்கப் பசியை யுண்டுபண்ணி அசீரணத்தையும் போக்கும்.

எலும்பு முறிவுக்குச் சிறு மூங்கிலைப் பத்தைகளாக வைத்துக் கட்டலாம்.

இளங்குருத்திலைகளை, மிளகு, உப்பு சேர்த்துக் கன்று காலிகளுக்குக் கொடுக்க, அவைகட்கு நேரிடும் அதிசாரம் நீங்கும்.

இளங்கணுக்களைக் கஷாயமிட்டு, குருத்துக்களுக்குப் பதிலாக உபயோகிக்கலாம்.

### மூங்கிலுப்பு.

இது மூங்கில் கணுக்களில் தங்கிநிற்கும். இதில் ஒருவராகனெடைக்கு, திப்பலி $\frac{1}{2}$ வராகனெடை, ஏலம் $\frac{1}{4}$ வராகனெடை, இலவங்கம் $\frac{1}{8}$ வராகனெடை, சருக்கரை 2 வராகனெடை, பொடித்துக் கலந்து வேளைக்கு ஒருவராகனெடை வீதம், கயநோய், காசம், சுவாசம் முதலியவைகளுக்குக் கொடுக்கச் சுகந்தரும்.

### வேர்.

வேரை அரைத்துச் சொறி, சிரங்கு, படை முதலியவைகளுக்குப் போடலாம்.

உலர்த்திக் கஷாயமிட்டுக் குடிக்க சுரவெப்பந்தணியும்

**அரிசி.**

அரிசியைப் பண்டம், பலகாரங்கள் செய்தும், சமைத்தும் தின்பது நாட்டு வழக்கம்.

மது மூத்திர நோயினர்க்கு இது தக்க உணவாகும் ; மதுவும் குறையும்.

---

## மெருகு—Merugu.

**வே - பெ.—உலக்கை, கந்தபுட்பி, தீர்க்ககந்தை, முசலம்,**

**Hamelomena aromatica.**

**Eng.—Great leaved caledum.**

Tel. Balu Rakkisa. బలురక్కిస.

Mal. Meruka മെരുക്.

Sans. Gajakarni **गजकर्णी**

Hind. Alu آلو

இது இந்தியாவில் நீர்ப்பாங்கான இடங்களில் செழித்து வளருகின்றது. தோட்டங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது. இதன் இலை சேம்பினிலையை விடமிகப் பெரிதாக நீண்டு பருமனுள்ள தண்டுகளோடுகூடி இருக்கும். கிழங்கு, அடித்தண்டிலிருந்தே பூமிக்குள்ளிறங்கி பல பக்க வேர்களுடன் உலக்கை போன்றிருக்கும்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கார்ப்பு (காறல்), **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- வாதமடக்கி - வாதஹரகாரி - Anti-vata.
- வீக்கமுருக்கி - சோபாநாசநி- Deobstruent.

**குணம்.**—இதனால் கட்டிப்பிரமேகம், வயிற்றுநோய், மூலம், ஈளை நோய், எலும்புருக்கிச்சுரநோய், கபாதிக்கம் ஆகியவைகள் நீங்கும். உடல் குளிர்ச்சியடையும்.

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப் போக்கும்
துருவுகுன்ம மூலந் துடைக்கும்—பெருமீளை
அத்திசுரம் ஐயறுக்கும் அங்கம் குளிர்விக்கும்
அத்திமுலை மாதே ! அறி. (அ - கு,)

**வ - கு.**—மேற்கூறிய நோய்களைப் போக்கக் கீழ்க்கண்ட பலவகைத் தைலங்களைச் செய்து உபயோகிக்கலாம். அவைகள் செய் முறையைத் தேரையர் தைல வருக்கத்தில் காண்க.

**மெருகுசமூலத்தைலம்.**

இதை ஒரு துட்டெடை வீதம், காலை, மாலை இருவேளையும் சாப்பிட்டு, மேலுக்குந்துவாலையிட்டு மெதுவுறப் பிடித்துவரச் சீதசுரம் விலகிப்போம்.

**கஜகர்ணிகாதைலம்.**

இதை மேற் கூறியவாறு சாப்பிட்டு வந்தாலும், அல்லது முறைப்படித் தலைமுழுகிவந்தாலும் வாதசுரம் முதலிய சகல சுரமும், கடலிற் கரைத்த பெருங்காயம் போலாம். பத்தியம்—புளிநீக்கல்.

### கஜகர்ணிபராகத்தைலம்.

இதைப்பத்தியத்துடன் தலைமுழுகிவரின் சந்ததசுரம் முதலிய முறைச் சுரங்களும், பழைமையாக நீடித்த புராண சுரங்களும் பரமசிவனது நெற்றிக்கண் சுவாலையில் அகப்பட்ட மன்மதன் போலாம்.

### சிறியகஜகர்ணிகாத்தைலம்.

இதைத் தினமிரு வேளை சாப்பிட்டு வரினும், தலைமுழுகி வரினும் சீத சுரம் விலகும்.

### மெருகுள்ளித்தைலம்.

இதைத்தேகபல மறிந்து தினம் காலையில் மாத்திரம் கொடுத்துவர, சரீரத்தின் சகலகீல்களையும் அசையவொட்டாமல் செய்கின்ற சந்திக சிலேத்தும நோயும், தளிர்போல் கிளைத்து வருகின்ற விரணமுள்ள மேகமும், வன்மையுள்ள வாயுவின் வீக்கமும் கனவிற் கண்ட பொருட் போலாகும். பத்தியம்—உப்பு, புளி நீக்கல்.

### மெருகுப்பச்சைத்தைலம்.

இதில் $2\frac{1}{2}$ பலம் வீதம் இராப்போஜனம் செய்த பின்பு, 20 நாள் வரையில் உப்பு, புளி, நெய் நீக்கிக் குடிக்கில், மூலம், மூலவாதம், குன்மம் உட்கவிச்சு, மகோதரம் என்னும் பிணிகள் நெருங்கா.

## மோதகவல்லி—Modagavalli.

### வே - பெ.—கொழுக்கட்டைமரம்.

Sterculia.

இது இந்தியாவிலெங்கும் வளருகின்ற பெருமரம்.

**ப - உ.**—பட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** துவர்ப்பி—ஸங்கோசனகாரி - Astringent.

**குணம்.**—இதனால் அசிர்க்கரம், வாதத்தால் மூலாக்கினி தள்ள வீழா நின்ற இரத்தசீதமும் நீங்கும்.

பொங்கிவரு வெள்ளப் புனலினசிர்க் குங்காலால்
அங்கியுந்த விழுமிரத் தாமயநோய்—தங்காவே
போதகத் துச்சியெனப் பூரித்த மாமுலையாய் !
மோதகப் பூருகத்தை முன்.

(அ - கு.)

**வ - கு.**—பட்டையைக் கஷாயமிட்டு அல்லது இடித்துச் சாறு பிழிந்து அல்லது உலர்த்திச் சூரணஞ் செய்து தக்க அனுபானத்துடன் கொடுத்து வர மேற்கூறிய நோய்கள் விலகும்.

### மோதகவல்லித்தைலம் (தேரையர் தைலவருக்கம்).

இதில் ஒரு உச்சிக்கரண்டி வீதம், காலை, மாலை இருவேளையும், ஒரு மண்டலம் உட்கொண்டுவர, எலும்புருக்கிநோய் மலடியின் பிள்ளை போலாகும். . புளி, புகையிலை, மீன் ஆகா.

## வசம்பு—Vasambu.

**வே - பெ.—உக்கிரம், வசம், வசை, வேணி,**

Acorus Calamus.

**Eng.—Sweet-flag.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Vasa వస | **Sans.** | Vacha वचा |
| **Mal.** | Vayamba വയമ്പ്. | **Hind.** | Bach బ |
| **Kan.** | Baja ಬಜ | | |

இது, இந்தியா, பர்மா, வட அமெரிக்கா, ஐரோப்பா முதலிய இடங்களில் ஓதமுள்ள நிலப்பரப்புகளில் சாதாரணமாய் விளைகிற ஓர் விதப் பூண்டு. இதன் தண்டு ஏறக்குறைய பெருவிரற் கனமிருக்கும். இதன் மேல சாம்பற்படிந்த நிறமிருக்கும். இதன் வேருக்கு வசம்பு என்று பெயர். இதற்கு ஒருவித சுகமண முண்டு. இதை யுலர்த்திக் கடைகளில் விற்பார்கள்.

பரிண மிக்கக்கூடியதும், வெப்ப வீரியமும் வாசனையு முள்ள ஓர்வித எண்ணெய்ச் சத்து (Glucocide acorin) இதிலுண்டு.

**ப - உ.**—வேர்,

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு,

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உரமாக்கி - பலகாரி Tonic.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Anti-periodic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- குமட்டலெழுப்பி -வமநவியதாகாரி - Nauseant.
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- தொற்றுப்புழுவகற்றி - ஆகந்துகரோகநாசநி - Disinfectant.
- நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.

**குணம்.**—வசம்பிற்கு சர்ப்ப - கீட - தாவர கிருத்திரமம் முதலிய விடங்கள், அற்புத விரணம், ஐவகைவலி, விடபாகரோகம், குன்மம், இரத்த பித்தம், வாய்நாற்றம், சூலை, சந்நிபாதம், பிசாசம், பிலீகநோய், பாத வன்மீகம், காசம், கயிறுபோல நீண்ட மலக்கிருமி ஆகியவை போம்.

பாம்பாதி நஞ்சற் புதப்புண் வலிவிடபாகங் குன்மம்
சூம்பா ரிரத்தப்பித் தம்முக நாற்றம்வன் சூலைசந்நி
வீம்பாம்பை காசம் பிலீகஞ் சிலிபதம் வீறிருமல்
தாம்பாங் கிருமி யிவையேகு மாசிவ சம்பினையே. (தே - கு.)

அன்றியும் இது மந்தாக்கினி, மந்தபேதி, வயிற்றுப்பொருமல், துர்ப்பலம், வாதரோகம், சொறி, சிரங்கு, க்ஷீணசுரங்கள், முறைக்காய்ச்சல் ஆகியவைகளையும் போக்கும்

வசம்பு ஒருபங்கிற்குப் பத்துபங்கு கொதிக்கின்ற வெந்நீர் சேர்த்து ஊறல் கஷாயமிட்டு வடிகட்டி $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு வீதம் கொடுக்கப் பசியின்மை, அசீரணம், வயிற்றுப்பொருமல், பலக்கெடுதியினாலும், ஊழியின் சம்பந்தமாகவும் குழந்தைகளுக்குண்டாகிற பேதியை நிறுத்தும். முறைக்காய்ச்சலைத் தடுக்கும்.

வசம்புடன் அதிமதுரங் கூட்டிக் காய்ச்சிய கஷாயம் பெரும்பாலும் குழந்தைகளுக்குண்டாகிற இருமல், ஈளை, சுரம், வயிற்றுவலி இவைகளைப் போக்கும்.

வசம்புத் துண்டை வாயிலிட்டுச் சுவைக்க வாய்நீர்பெருகும். வாயில் ஓர்வித அனலெழும்பும். ஆனால், தொண்டைக்கம்மல், இருமல் இவற்றைப்போக்கும்.

வசம்புச் சூரணத்தை $2\frac{1}{2}$ முதல் 10 குன்றிவரையில் உட்கொள்ள அகட்டு வாயுவை அகற்றுவதுடன் நரம்புத்தளர்ச்சியையும் விலக்கும். 15 குன்றிக்கு மேற்பட்ட அளவில் வாய்க்குமட்டலையும், வாந்தியையு முண்டாக்கும்.

விடக்காற்றால் நோய்கள் பரவுங்காலத்தில் இதை வாயிலிட்டு மெல்லுவது வழக்கம்.

நாட்பட்ட கீல்வாத நோய்களுக்குக் காச்சுக்கட்டியுடன் வசம்பைச் சேர்த்து நீர் விட்டரைத்துப் பற்றிடலாம்.

இதைச்சுட்டுக் கரியாக்கித் தேங்காய் நெய் அல்லது முத்தெண்ணெயுடன் கலந்து அடிவயிற்றிற் பூச வயிற்றுப் பொருமல் நீங்கும்.

சுத்தி செய்யாததும், சுத்திசெய்தும் அளவிற்கு மிஞ்சிக்கூட்டிய நேர்வாள மருந்தால், பெருமலங்கழிந்து வயிற்றுக்கடுப்பு, ஆசனக்கடுப்பு, ஆயாச முண்டாகி பேதி நிற்காவிட்டால், மஞ்சளையரைத்து வசம்பிற்குக் கவசமிட்டு, மஞ்சள் கருகும்படிச் சுட்டு மீண்டும் இவ்வாறே 6 முறை செய்தெடுத்த வசம்பைச் சுட்டுக் கரியாக்கித் தண்ணீர்விட்டுக் கஷாயஞ் செய்து கொடுக்க மேற்கண்டபடி யுண்டான பேதி நிற்கும்.

வசம்பு, காயம், அதிவிடயம், திப்பிலி, மிளகு, சுக்கு, கடுக்காய்த்தோல், சயிந்தலவணம் இவைகளைச் சூரணஞ் செய்து சமபாக மெடுத்துக் கூட்டி $\frac{1}{4}$—$\frac{1}{2}$ வராகனெடை வீதம் உட்கொள்ள அசீரணம், சிலவாத ரோகங்கள், மந்தாக்கினி, மந்தபேதி, வயிற்றுப் பொருமல் முதலியன நீங்கும்.

வலி, உன்மத்தம், சுரம் உள்ளகாலத்தில் இச்சூரணத்தை அந்தந்த நோய்க்குரிய மருந்துகளுடன் சேர்த்து உட்கொள்ள வெப்பமுண்டாக்கி **(Stimulant)** யாகப் பயன்தரும்.

---

## வண்டுகொல்லி—Vandu-kolli.

**வே - பெ.—சீமையகத்தி, மலைத்தகரை, பேயகத்தி, வண்டுகடியிலை.**

Cassia Alata.

Eng.—Ringworm Shurb.

| | | |
|---|---|---|
| **Tel.** | **Shima-avisi** | శీమ అవిశ |
| **Mal.** | **Shima-akati** | ശീമ അകത്തി |
| **Kan.** | **Shimigida** | ಶೀಮಿಗಿಡ |
| Sans. | Dadrughna | दद्रुघ्नः |
| Hind. | Dadmurdan | * داد مردن |

இது இந்தியாவில் எங்கும் சாதாரணமாய்க் கிடைக்கும். இதன் மஞ்சள் நிறமாயிருக்கும்.

**ப - உ.**—இலை, வேர், பூ.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { தூக்குணிப்புழுக்கொல்லி - க்ருமிக்நி - **Parasiticide.**
நீர்மலம்போக்கி - வ்ரேசநி - **Purgative.**

**குணம்.**—எச்சற்றமும்பு, படர்தாமரை, சரும நோய் முதலியவற்றைப் போக்கும்.

**வ - கு.**—மேற்கண்ட நோய்களைப் போக்க, இதன் இலையைத் தேய்க்கலாம்; அல்லது இலையையரைத்துத் தேங்காயெண்ணெய் அல்லது நல்லெண்ணெயில் குழப்பிப் பூசலாம்; அல்லது இலையை எலுமிச்சம்பழச்சாறு அல்லது கற்சுண்ணத் தெளிநீர் விட்டரைத்து மேலுக்குத் தேய்க்கலாம்; அல்லது 2 பங்கு தேன் மெழுகுடன் 5 பங்கு தேங்காயெண்ணெய் கூட்டிக் கரண்டியிலிட்டுத்தீயில் உருக்கி ஒரு பாத்திரத்தில் விட்டு, சூடு குறையுமுன் 7 பங்கு இலைச்சாற்றை விட்டு மெழுகுபோல் கிண்டி மேலுக்குத்தடவித் தேய்க்கலாம்.

இலையைக் கஷாயமிட்டுக் கொடுத்துவர, சருமநோய், விடக்கடிதோடம், மேகப்புண் குணமாகும். பேதியாகும்.

இலையையும் பூவையும் சமபாகங்கூட்டிக் கஷாயமிட்டுக் கப இருமல், மேல்மூச்சு, இவைகளுக்குக் கொடுக்கலாம். வாய்ப்புண் நீங்க இதை வாயிலிட்டுக் கொப்புளிக்கலாம். புண்களைக் கழுவலாம்.

வேரை எலுமிச்சம் பழச்சாறுவிட்டு அரைத்துப் படர்தாமரை முதலியவைகளுக்குப் பூசலாம்.

---

## வரகு—Varagu.

**வே - பெ.—கோத்திரவம்.**

Paspalum frumentaceum.

(A kind of grain.)

| | |
|---|---|
| Tel. Oragu (biyyam) ఒరగు. | Sans. Kodravam कोद्रवम् |

இது தென் இந்தியாவில் பயிரிடப்படும் தானிய வகைகளுள் ஒன்று. இதன் தானியம் உருண்டு ஒருவித கருநிற உமியால் மூடப்பட்டிருக்கும். இதைச் சிலர் விரும்பிச் சமைத்துச் சாப்பிடுவார்கள்.

**ப - உ.**—அரிசி, வைக்கோல்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.

### வரகுச்சாதம்.

**குணம்.**—மூச்செறிகின்ற சுவாசம், இதைச்சேர்ந்த பல நோய்கள், உடல் வறட்சி, சொறி, சிரங்கு, பித்தாதிக்கம் இவையுண்டாம்.

எறிகபத்தோ டேபலநோ யெய்தும் வறட்சி
சொறிசிரங்கு பித்தந் தொடரும்—நிறையுங்
கரகமெனப் பூரித்த கச்சுமுலை மாதே!
வரகரிசிச் சோற்றால் வழுத்து. (அ - கு.)

### வரகுவைக்கோல்.

**வ - கு.**—ஆற்றுத்துமட்டி, இலைக்கள்ளி, கொம்புக்கள்ளி போன்ற பொருள்களினின்றும் சுரசமெடுப்பதற்கு இவ்வைக்கோலைக் கொளுத்திய தீயில் மேற்கண்ட பொருள்களை வாட்டிச் சுரசமெடுப்பது வழக்கம்.

## வலம்புரிக்காய்—Valampurik-Kái.

**வே - பெ.—திருகுபலை.**

Isora Corylifolia.

Hind. Maroorphalli * مروڑ پھلی

இக்காய் 2 முதல் 4 அங்குல நீளமாயும், வரிகளுள்ளதாயும் திருகலாயு மிருக்கும். ஆகையால் இதற்கு "East Indian Screw-tree" என்று ஆங் கிலப் பெயர் வழங்கும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent. / துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. }

**குணம்.**—இதற்கு 18 பூதகணதோடம், பொறுக்கொணுவிழிநோய், கர்ணநாதரோகம், இருமலில் நேரிடும் கேவல், விக்கல், சீதசுர ஆயாசம், மேகம், கூன்விழுதல் நீங்கும்.

பூதபை சாசம் பொறுக்கொணு நேத்திரநோய்
சீத மிகுசெவிநோய் கேவல்விக்கல்—ஓதுகுளிர்
தோடமொடு மேகங்கூன் சொன்னவையெ லாம்நடுங்கி
ஓட வலம்புரியை யுண். (அ - கு.)

**வ - கு.**—காயை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிகட்டி காதில் 4, 5 துளி விட்டு, பஞ்சியிட்டடைக்க, காதடைப்பு, காதுகுத்தல், முதலியன நீங்கும்.

சூரணஞ்செய்து தினமொன்றுக்கு 2, 3 முறையாக 1-2 வராகனெடை வீதம் கொடுத்துவர இருமலில் நேரிடும் கேவல், விக்கல், மேகம், சீதசுரம், கூன்விழல் நீங்கும்.

சூரணத்தைக் கொடுத்து வருவதுடன், இத்தூளைப் புகைத்தும் வர பூத கண தோடங்கள் விலகும்.

---

## வல்லாரை—Vallárai.

**வே - பெ.—சண்டகி, பிண்டீரி, யோசனவல்லி.**

Hydrocotyle Asiatica.

Eng.—Indian Pennywort.

| | |
|---|---|
| Tel. { Bókudu chettu బోకుడు చెట్టు / Manduka మండూక చెట్టు. } | Kan. Vondelagi ಒಂದೆಲಗ. |
| | Sans. Brahmi ब्राह्मी |
| | Arab. Artaniya-e-hindi * ارتناء هندى |
| Mal. Kudakam കുടകം | Hind. Khulakudi * خلا کڑی |

இக்கொடி இந்தியாவிலுள்ள பல நீர்நிலைகளுக் கருகாமையிலும், தோட்டங்களிலும் சாதாரணமாய்ப் பயிராகும். இது சிறந்த மூலிகைகளுள் ஒன்று. இதை அளவுடன் உபயோகிக்கப் பெரும்பயனையளிக்கும். அள விற்கு மீறினுல் விடமிப்பதுடன் தலைச்சுற்றல், தலைவலி இவைகளை யுண்டாக்கும்.

ப - உ.—சமூலம்.

**சுவை.**—துவர்ப்பு, கைப்பு, இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**குணம்.**—(வாய்) அக்கரம், மலக்கழிச்சல், இரத்தக் கிராணியால் பிறக்கும் வயிற்றுக்கடுப்பு ஆகியவை நீங்கும்.

அக்கரநோய் மாறும் அகலும் வயிற்றிழிவு
தக்கவிரத் தக்கடுப்புத் தானேகும்—பக்கத்தில்
எல்லாரை யும்அருந்தென் றேயுரைத்து நன்மனையுள்
வல்லாரை யைவளர்த்து வை. (தே - கு.)

மேற்கண்ட நோய்களையன்றி அடியிற்கண்ட நோய்களையும் போக்கும் குணம் இதற்குண்டு :—சுரம், கயரோகத்திலுண்டாகும் தொண்டைக்கம்மல், பைத்தியம், யானைக்கால், அண்டவீக்கம், குட்டம், நெறிக்கட்டி, மேகம், மேகப்புண், காயம், கட்டி, வாதவீக்கம், புடை, கண்டமாலை, மார்பாணி, சூதகக்கட்டு.

**வ - கு.**—எல்லா சுரங்களுக்கும் இதன் இலை, துளசியிலை,மிளகு இவைகளைச் சமவெடை தூக்கி யரைத்துக் குன்றியெடை மாத்திரை செய்து காலை, மாலை இரண்டு வேளையும் கொடுத்துவர அவைகள் சாந்தப்படும்.

இலையையரைத்து வைத்துக்கட்ட யானைக்கால், அண்டவீக்கம், வாத வீக்கம், கட்டிகளின் வீக்கம், அடிபட்டுத்தசை சிதைந்துண்டான வீக்கம் குணமாகும். அல்லது இந்நோய்களுக்கு இலைச்சாற்றைப் பிழிந்தும் பூச லாம். மேலும் இந்நோய்களில் காணும் சுரம் தணிய இலைச்சுரசத்தில் 4, 5 துளி வீதம் நாள் ஒன்றுக்கு மும்முறை கொடுத்துவரலாம்.

குழந்தைகளுக்குண்டாகும் சருமவியாதிகள், இரத்தக்கேடு, நரம்பு வியாதிகள் முதலியவைகளுக்கும், முதிர்ந்த வயதுடையோர்களுக்குண்டா கும் மேகம், வயிற்றுநோய், சுரம் முதலியவைகளுக்கும், இலைச்சாறும், பசுவின் பாலும், அதிமதுரத்தூளும் சேர்த்துக் கலந்து கொடுத்துவர மிகுந்த பலன் தரும்.

குழந்தைகளுக்குண்டாகும் சீதபேதி, இரத்தக்கிரகணி, வயிற்றுக்கடுப்பு முதலிய கோளாறுகளுக்கு 3, 4 இலை எடுத்து, சீரகம், சருக்கரை கூட்டியரைத்துக் கொடுத்தும், அல்லது தனி இலையை மாத்திரம் அரைத்துக் கொப்பூழ்மீது பற்றிட்டும்வர, அவைகள் நீங்கிக் குழந்தைகள் சுகப்படும்.

இரத்தக் கொதிப்பாலுண்டாகும் கொப்புளங்களைப் போக்க இலைச் சுரசத் துடன் கடப்பம்பட்டை, கருஞ்சீரகம், நெய் சேர்த்தரைத்துப் பூசிவரலாம்.

இலையுடன் வெந்தயமும் சேர்த்துக் கஷாயமிட்டு 1, 2 சங்கு வீதம் குழந்தைகளுக்குப் புகட்ட சுரம், வயிற்றுக் கோளாறுகள் போம்.

இலை 5-6 எடுத்து, 4-5 மிளகு, ஒரு சிறுதிரிபூண்டு கூட்டியரைத்துக் காலை மாத்திரம் கொடுத்து, மோரும் சோறுமாகவுண்டுவர குட்டம், குட்டத் தில் உண்டாகும் விரணம் நீங்கும். 20-40 நாள் கொடுக்கநேரிடும்.

குட்டம், நெறிக்கட்டி, மேகம் முதலிய நோய்களுக்கும், அவைகளி லுண்டாகும் புண்களுக்கும் இலைச் சூரணத்தில் 2 குன்றிவீதம் தின மொன்றுக்கு மும்முறை கொடுத்தும், சூரணத்தில் சிறிதெடுத்துப் புண்கள் மீது தூவியும் அல்லது பச்சையிலையை யரைத்துக் கட்டியும்வர, புண்கள் எளிதில் ஆறும். சூரணத்தில் 2-5 குன்றிவரை யெடுத்துப் பசுவின்பாலில் கலந்து கொடுத்துவர ஞாபகசக்தியுண்டாகும். மூளையும் பலப்படும்.

இதன் சமூலம், வசம்பு, கடுக்காய், ஆடாதோடை, திப்பிலி, தேன் இவைகளைச் சமவெடை யெடுத்து முறைப்படி கஷாயஞ் செய்து $\frac{1}{8}$-$\frac{1}{4}$ ஆழாக்கு வரையிலும், தினம் இருவேளை கொடுத்துவர கய (க்ஷய) ரோகத்திலுண் டாகும் தொண்டைக்கம்மல் நீங்கும்.

பைத்தியம், அடிவயிறு சம்பந்தமான வியாதிகளிலுண்டாகும் நரம்புப் பலவீனம் இவைகட்கு இதன் சமூலச் சூரணம் 5, கோட்டம் 4, தேன் 6 பங்கு வீதம் கூட்டியரைத்து 2 குன்றியெடை மாத்திரை செய்து தினமிரு வேளை கொடுக்க நற்பயனைத்தரும்.

(கெவர்ன்மெண்டு, 1933-ம் வருடப் பதிப்பு) பாலவாகடத்தில் கணச் சூடு, கணமாந்தம், பிறக்கணம் இவைகட்குக் கூறிய "வல்லாரை எண்ணெய்," கணத்திற்குக் கூறிய "வல்லாரை நெய்" இவைகளைக் கவனிக்கவும்.

**குறிப்பு.**—சூரணம் செய்யும்பொழுது, குற்றமற்ற இலைகளை மாத்திரம் எடுத்து நிழலில் உலர்த்தி நுண்ணியதுகளாக்கிக் காற்றுப்புகா புட்டியில் அடக்கஞ்செய்து உபயோகிக்கவேண்டும். இன்றேல் சூரணத்திலுள்ள வீரி யம் நீங்கும். பயன்தராது.

---

## *வள்ளி—Vaḷḷi.

## சிறுவள்ளி—Chiru Vaḷḷi.

Dioscorea Aculeata.

Eng.—Sweet Yam.

Mal. Cheru vaḷḷi ചെറുവെള്ളി. | Sans. Madhvalu मद्वलु

இது கொடிவகை. தென் இந்தியாவில் சாதாரணமாய்க் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம் - கிழங்கு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Vermifuge.

**குணம்.**—இதனால் மந்தம், கரப்பான், கபவிருத்தி, முளைமூலம் ஆகியவை உண்டாகும். உதராக்கினி கெடும். வயிற்றுப் புழுக்களைக் கொல்லும்.

மந்தமிகுந் தீபனம்போம் மாருக் கரப்பானுஞ்
சிந்த மிகுகபமுஞ் சேருங்காண்—தொந்தமாய்
மூல முளைவளரும் முட்டைச் சிறுகிழங்கால்
ஏல வளகமின்னே! யெண். (அ - கு.)

**வ - கு.**—இதன் இலையைக் கஷாயமிட்டுக் கொடுக்க மலப்புழுக்கள் விழும்.

இதன் சாற்றை வேறு துணைமருந்துகளுடன் சேர்த்துக் காய்ச்சிக் குட்ட நோய் விரணங்களுக்குத் தடவலாம்.

கிழங்கைச் சமைத்துண்ணலாம். ஆனால் மந்திக்கும்.

---

* "வள்ளி" என்னும் பெயரின் கீழ் (1) சருக்கரைவள்ளி, (2) சிறுவள்ளி, (3) பெரு வள்ளி, (4) வெற்றிலைவள்ளி, (5) பால்வள்ளி எனவழங்கும் கிழங்குகளில் பெருவள்ளி என்பது ஆள் (மர) வள்ளியாகும். வெற்றிலை வள்ளி - காய் வள்ளியாகும்.

## சருக்கரைவள்ளி—Charukkarai-Valli.

வே - பெ.—சீனிக்கிழங்கு.

Ipomea Batatas.

Eng.—Sweet Potato.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Genasu గెనసు. | Kan. | Genasu ಗೆಣಸು. |
| Mal. | Chakkara valli ചക്കര വള്ളി. | Hind. | Ratalu * رتالو |

இது இந்தியாவில் எங்கும் பயிராகின்ற கொடி. இதன் கிழங்கு மிகவும் தித்திப்பானது. இதில், வெண்மை, சிவப்பு, என இருவகை யுண்டு.

ப - உ.—கொடி, கிழங்கு.

சுவை.—இனிப்பு, வீரியம் - சீதம், பிரிவு - இனிப்பு.

செய்கை. { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

குணம்.—இது மருந்தின் வீரியத்தைக் குறைக்கும். மூலமுளையையும் குடலிரைச்சலையும் வயிற்றுக்கடுப்பையும் விளைவிக்கும்.

உள்ளிற்கொள் நன்மருந்தை யும்முறிக்குஞ் சர்க்கரையாம்
வள்ளிக் கிழங்கதிக மந்தத்தால்—உள்ளில்முளை
மூலம் விளையு நிதம் மோடிரைச்ச லுண்டாகுங்
கோலவயி றுங்கடுக்குங் கூறு. (அ - கு.)

வ - கு.—இலையை அல்லது கொழுந்தையரைத்துப் பூசினால் தேள் கடியினாலுண்டாகும் வேதனை குறையும்.

கிழங்கை வேகவைத்துச் சாப்பிடலாம். ஆனால் மந்தபதார்த்தம்.

இதனால் மேற்கூறிய தோடங்கள் உண்டாகும்.

---

## செவ்வள்ளிக்கொடி—Chev-vallik-Kodi.

Dioscorea purpurea.

Eng.—Red Yam.

Sans. Thambra Latha ताम्रलता

செய்கை. புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

குணம்.—இதற்கு வீறுகுட்டம், பெருவியாதி (குறைநோய்) கடுவன், குடலண்டம், மூலம், நகம் - குதிக்கால்களைப் பற்றிய கொப்புளம் தீரும்.

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குட்டமொடு
கவ்வு குறைநோய் கரப்பானும்—இவ்வுலகில்
மானே ! குடல்வாதம் வல்ல படுவனுடன்
ஆனபரு மூலமும்போம் ஆய். (அ - கு.)

வ - கு.—இதைக் கஷாயமிட்டு உட்கொண்டும், குட்டம் முதலிய நோய் களைக் கழுவியும்வர மேற்கண்ட நோய்கள் வசப்படும்.

மேலும், இது குட்டம், கரப்பான், மூலம் இவைகட்குச் செய்யப்படும் சூரணம், இலேகியம் முதலிய மருந்துகளிலும், பீச்சு, முடி, பிடித்தைலங் களிலும் சேரும்.

## வள்ளைக்கொடி—Vallaik-Kodi.

**வே - பெ.—நாளிகம், வள்ளைக்கீரை.**

Convolvulus repens.

இது நீரில் பயிராகும் கொடி. இது நீரின்மீது நீண்டு ஓடும். இதைக் காதணிக்கு ஒப்பிடுவார்கள்.

**ப - உ.**—கீரை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.** குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**குணம்.**—இதனால் வாதகோபந் தணியும். மாதர்கட்குப் பால் சுரக்கும். "வள்ளைக்கீரை கனிலம் மாறும்பால் உண்டாகும்." (அ - கு.)

**வ - கு.**—சமைத்து உண்ண மேற்கண்ட குணங்களைப் பெறலாம். மேலும் இதை ஒரு மண்டலமட்டும் புசித்துவர **பெருமூத்திரம்** என்னும் நீர் ரோகம் நீங்கும்.

---

## வன்னி—Vanni.

**வே - பெ.—சமி, தகனம், நெருப்பு.**

**Prosopis Spicigera.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Jammi | జమ్మి. | Sans. | Sami | शमी |
| Mal. | Vanni | വന്നി. | Hind. | Cikura | * کیکورا |
| Kan. | Vanni | ವನ್ನಿ. | Duk. | Mayeen | * مايين |

இது இந்தியா முற்றிலும், பாரசீகத்தின் காடுகளிலும், நாடுகளிலும் பயிராகும் மரம். 20-25 அடி உயரம் வளரும். இதன் இலை புளியனிலை போன்ற உருவிருப்பினும், அளவில் மிகச் சிறிது.

**ப - உ.**—இலை, காய், பட்டை.

**செய்கை.** { உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - **Demulcent.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.** }

**குணம்.**—இதற்கு வாதசந்நிபாதம், திரிதோடம், விடம், சிலேத்தும கோபம், சொறி இவை நீங்கும்.

> வாதசந்நி தோடமறும் மாருத் தழலுளதென்
> றோதுவர்இவ் வன்னிக் குவமையுண்டோ—பூதலத்தில்
> காணூர் விடமுங் கபமுஞ் சொறியும்போம்
> தேனே! இதையறிந்து செப்பு. (அ - கு.)

**வ - கு.**—இலையும், பட்டையும் தோலைப் பதனிடஉதவும்.

இலைச்சாறும் பசுவின் நெய்யும் வகைக்குப் பலம் பத்து ஒன்றுகூட்டி இதில் சுத்திசெய்த வெண்குங்கிலியம் பலம் $1\frac{1}{2}$—$2\frac{1}{2}$ கூட்டி எரித்துண்டாகும் நெய்யில் வேளைக்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ பலம் வீதம் காலை மாலை உட்கொண்டுவர மேக வெட்டை, சொறி, சிரங்கு நீங்கும். அல்லது இந்நெய்யைக் காய்ச்சி எடுத்த வுடன் சுத்த நீரிற் சேர்த்து மத்திட்டுக் கடைய வெண்ணெய் திரண்டுவரும். இதையும் $\frac{1}{2}$—1 வராகனெடை வீதம் மேற்கண்ட நோய்க்கு வழங்கி வரலாம்.

இதன் முதிர்ந்த காய்த்தோலைக் கஷாயமிட்டுக் கொடுக்க உள்ளழலை நீங்கும். திரிதோடம் சாந்தமாகும்.

பட்டையை உலர்த்திச் சூரணஞ் செய்து ½—1 வராகனெடை வீதம் தினமொன்றுக்கு இருவேளை உபயோகிக்க வாதசந்நிபாதம், திரிதோடம், விடம், கபவிருத்தி நீங்கும்.

பட்டையை நன்குயிடித்து ஒரு சிறு கலயத்தில் அரைவாசி பரப்பி, அதன்மீது சோற்றுப்புவைத்து மேலும் இடித்த பட்டைத் தூளைப் பரப்பி சில்லிட்டுச் சீலை செய்து குக்கிட புடமிட உப்பு பற்பமாகும். அசீரணம், அசீரணபேதி, மந்தம் இவைகட்கு இதை வழங்கலாம்.

---

## வாகை—Vágai.

**வே - பெ.—சிரிடம், பாண்டில்.**

**Acacia Speciosa.**

**(Mimosa flexuosa or M. Sirissa.)**

**Eng:—Sirissa-tree.**

| | | |
|---|---|---|
| Tel. | Girishamu | గిరీషము. |
| Mal. | Nenmēni | നെന്മേനി. |
| Kan. | Shereesh - (mara) | ಶಿರೀಷ (ಮರ). |
| Sans. | Shirisha | शिरीष: |
| Hind. | Siris | * سرس |

இது இமயத்தைக் சார்ந்த இடங்களிலும், வங்காளம், மத்திய இந்தியா, தென் இந்தியா முதலிய இடங்களிலும் பயிராகும் மரம்.

**ப - உ.**—இலை, பூ, பட்டை, வேர்ப்பட்டை, வித்து, பிசின்.

**சுவை.**— - கார்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
குளிர்ச்சியுண்டாக்கி . சீதளகாரி - Refrigerant.

### வாகைமரம்.

**குணம்.**—பசியை யுண்டாக்கும். சர்ப்பகீட விடங்கள், பித்தவிரணம, வாதச்சொறி, தாகசுரம், கந்ததாளி ரோகங்கள் (அக்கரம்) ஆகியவைகளைப் போக்கும்.

வாகைகா ரங்கசப்பை வைத்திருக்கு முள்ளபடி
யோகையு றப்பசியை உண்டாக்கும்—தோகையரே !
தீரா விடத்தோடு சில்விடத்தை யுந்தீர்க்கும்
ஆராயத் தோன்று மது.

வாகை யனல்விரணம் வாத வறட்சியுடன்
தாக சுரமுந் தணிக்குங்காண்—ஆகமதில்
அக்கர மெல்லா மகற்றிவிடும் பூவனமே
அக்கணத்தி லென்றே யறி. (அ - கு.)

### வாகைப்பூ.

வாகைப்பூ வாத தோடத்தையும், சர்ப்ப விடங்களையும், சிலேத்தும கோபத்தையும் கெடுக்கும்.

வாதசம னஞ்செய்யும் வல்விடத்தைப் போக்கிவிடும்
சீதசிலேத் மத்தைச் சிதைக்குங்காண்—போதவுள்ளே
மாகைப்பை வைத்திருக்கும் மா நிலத்தி லேபெரிய
வாகைப்பூத் தன்னை வழுத்து. (அ - கு.)

**வாகைப்பிசின்.**

வாகைப்பிசின் பிரமேகம், வாதகிரந்தி, மேகக்கட்டி ஆகியவற்றை விலக்கும். அழகையும் வன்மையையும் உண்டாக்கும்.

வாகைப் பிசின்மேகம் வன்கிரந்தி கட்டியையும்
ஏகத் துரத்தும் இது நிசமே—மாகனக
மேனி கொடுக்கு மிகுத்தபலன் உண்டாக்கும்
தேனினிய மென்மொழியே! தேர். (அ - கு.)

**வ - கு.**—இலையை அரைத்துக் கண்ரோகங்களுக்குக் கண்களின்மீது வைத்துக் கட்டிவரலாம்.

பூவை அரைத்துக் கட்டிகள், வீக்கம், சருமத்தடிப்பு இவைகளின் மீது பூசிவர, அவைகள் குணப்படும்.

பூவை அரைத்தாவது, குடிநீர் செய்தாவது கொடுத்துவர வாததோடம், சர்ப்பவிடம், கபவிருத்தி வசப்படும்.

பட்டையை உலர்த்திச் சூரணஞ்செய்து தக்க அளவில் கொடுக்க இரத்த மூலம், அதிசாரம், பிரமேகம், மற்றும் வாகைமரத்தின் கீழ்க்கண்ட நோய்கள் தீரும்.

வேர்ப்பட்டைச் சூரணத்தைக் கொண்டு பல்துலக்க பல்லீற்றுப் புண் நீங்கும். பல் இறுகும்.

விதையை நீரிலுரைத்துக் கண்களிலிட கண்நோய்கள் தீரும். நெறிக் கட்டிகளின்மீதும் பூசலாம்.

விதைச் சூரணத்தைச் சுமார் 1—1½ வராகனெடை வீதம் உட்கொள்ள நெறிக்கட்டிகள் அமுங்கும்.

விதைத் தைலம் குட்டங்களைப் போக்கும்.

பிசினை ¼—½ வராகனெடை வீதம் கொடுத்துவர, பிரமேகம், கிரந்தி, மேகக்கட்டி சாந்தமாகும். உடலுக்கு அழகும் வன்மையு முண்டாகும்.

---

## கருவாகை—Karuvágai.

### Mimosia Amara.

| | |
|---|---|
| Tel. Nallarenga నల్లరెంగ. | Kân. Bilkambi బిల్కంబి. |
| | Sans. Krishna Sirisha |
| Mal. Karuvaka കരുവാക. | कृष्णशिरीष: |

**ப - உ.**—கட்டை, வேர்ப்பட்டை.

**சுவை.**—சிறுகைப்பு - கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** { கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
மலப்புழுக்கொல்லி - க்ருமிநாசனி - Anthelmintic.

**குணம்.**—கருவாகை மரத்துக்குப் புண், வெப்பம், வாதப்பிரகோபம், சன்னக்கிருமி, மரணமுறச் செய்யும் க்ஷயரோகம் இவை நீங்கும்.

விரணமோ டட்டிணமும் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு—மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங் குடிவிலகும்
வெய்யகரு வாகைக்கு விள். (அ - கு-)

வ - கு.—கட்டை அல்லது வேர்ப்பட்டையில் கால்பலமெடுத்து நன்றாய்ச் சிதைத்துக் குடிநீரிட்டுக் கொடுத்துவர மேற்கண்ட பிணிகள் நீங்கும். அல்லது சூரணஞ்செய்து கால்—அரை வராகனெடையாக காலை மாலை இருவேளையும் நோய்தீருமட்டுங் கொடுத்துவரலாம்.

---

## வாதநாராயணன்—Vathanàrayanan.

**வே - பெ.—வாதரக்காச்சி.**

இது இந்தியாவில் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாய்ப் பயிராகும் மரவகுப்பைச் சேர்ந்தது.

**ப - உ.**—இலை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வாதமடக்கி - வாதநாசநி - **Anti-Vata.**

**குணம்.**—வாதகோபம், வீக்கம், இவை விலகும். விரேசனமாகும்.

**வ - கு.**—இதன் இலையை சிற்றாமணக்கு நெய்விட்டு வதக்கி வாத வீக்கங்களுக்கும், கட்டிகளுக்கும் ஒற்றிடமிடலாம்.

இலைச்சாறும் ஆமணக்கு நெய்யும் சமபாகம் கூட்டிக் காய்ச்சி வடிகட்டி அரை முதல் ஒன்றரை பலம் வரையிலும் உள்ளுக்குக் கொடுக்க நன்றாய் மலங்கழியும். பிரகோபித்த வாதம் தன்னிலைப்படும்.

வாதநோயைப் போக்கும் தைலங்களில் இவ்விலையின் இரசம் சேருமாயின் வாதநோயைத் துரிதத்தில் பரிகரிக்கும் குணமுண்டாகும்.

---

## வாதுமை—Vádúmai.

**Amygdala.**

**வெ. பெ.—அடம்பு.**

**Eng.—Almond.**

| | |
|---|---|
| **Tel.** **Badama - vittula** బాదమ విత్తులు. | **Kan.** **Badami** ಬಾದಮಿ. |
| | **Sans.** **Badama** बादम् |
| **Mal.** **Bádámi** ബാദാമി. | **Hind.** **Badàm** * بادام |

இதில் இரண்டு இனமுண்டு :—(1) கைப்புவாதுமை, (2) இனிப்பு வாதுமை.

**கைப்பு (கசப்பு) வாதுமை - Kaippu (Kasappu) Vadumai.**

**Prunus Amygdalus, Var, Amara.**

**Eng.—Bitter Almond.**

இது ஸிரியா, பார்பெரி, ஐரோப்பா, ஆசியாவின் சில பாகங்களில் விளையும் மரம். தித்திப்பு வாதுமைப் போலவே யிருக்கும். ஆனால் இதன் பருப்பு கைக்கும்.

**ப - உ.**—பருப்பு, நெய்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- செந்நீரிளக்கி - Attenuent.
- புண்ணழுக்ககற்றி - விரணசுத்திகாரி - Detergent.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.

**குணமும் வழக்கும்.**—கைப்பு வாதுமைப்பருப்பை நீர் அல்லது காடி விட்டரைத்துத் தலையில் தடவப் பேன்கள் சாகும்.

இதை அரைத்துச் சீலையில் தடவித் திரியாக்கி உபயோகிக்கச் சூதகத் தடையும் அதனாலுண்டாகும் அடிவயிற்றுக் கடுப்பும் நீங்கும்.

ஒருபங்கு பருப்பை நன்றாயரைத்து எட்டுபங்கு நீரிற்கலக்கி வடிகட்டி 1—2 பலம் வரையில் கொடுக்க வெப்பத்தாலுண்டாகும் இருமல், நுரையீரல் வெதுப்பு நீங்கும். இந்நீரைச் சொறி, சிரங்குகளுக்குப் பூசலாம்.

இதையரைத்துக் களியாகக் கிண்டிப்பூச நமைச்சொறியும், சருமத்தடிப்பும் குணமாகும்.

இதன் நெய் புண்களை ஆற்றுவதற்குரிய களிம்புகளில் சேர வீரியம் பெறும். நற்பயனை யளிக்கும்.

---

## இனிப்பு (தித்திப்பு) வாதுமை—Inippu (thithippu) Vádumai.

Prunus Amygdalus Var, Dulcis.

Eng.—Sweet Almond.

இம்மரம் ஆசியாவின் மேற்பாகத்து தேசத்திற்குரியது எனினும், இந்தியாவில் பாஞ்சாலத்திலும், காஸ்மீரத்திலும், ஆப்கனிஸ்தானத்திலும் பயிரிடப்பட்டு வருகிறது. இங்கிருந்துதான் நமக்கு வாதுமைக் கொட்டை, பிசின் வருகிறது.

**ப - உ.**—பருப்பு, நெய், பிசின், ஓடு.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பருப்பு.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.

**நெய்.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.

**பிசின்.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**பருப்பு.**

வாதுமைப் பருப்பினால், கண்படலம், விரணக்கொழுமை போம். கலவியில் விருப்பமுண்டாகும்.

அடப்பம்விதை யாம்வாது மைப்பருப்பி னாலே
மடற்பெரிய கண்படல மாறும்—சடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும் போகமுண் டாகுமென
மண்மேற் புகல்வார் மகிழ்ந்து.

(அ - கு.)

## நெய்.

இது, ஔடதங்களினாலும் உழைப்பினாலும் இளைத்த வெப்பங்களையும், கபதோடத்தையும் நீக்கும். உடலில் சம உஷ்ணம், சுக்கிலவிர்த்தி, ஐம் பொறிக் கொளிவு இவைகளையும் உண்டாக்கும்.

அழலெல்லா மாற்றும் அரிய வுடம்பில்
அழலோடு விந்துவையுண் டாக்கும்—வழுவழுப்பைப்
பூண்டகபம் போக்கும் பொறிகட் கொளிவுசெய்யும்
நீண்ட அடப்பம்விதை நெய். (அ - கு.)

## பிசின்.

இதனால் சுக்கிலத்திற்குத் தடிப்புண்டாவது மன்றி விடமான மருந்துகளும் அமிர்தமாகும். கய (க்ஷய)த்தினால் அதிகரித்த கபக் கோழையானது தன்னிலையை விட்டுப் பெயரா தடங்கும்.

நெஞ்ச முரக்கு நிகழ்விந்து வுங்கட்டும்
நஞ்சு மருந்துகளு நல்லமிர்தாம்—விஞ்சுகயக்
கோழை யடக்குங் குலவாதுமை யெனவே
வாழையடம்பின் * சளிக்கு மால். (அ - கு.)

* சளி = பிசின்.

## பருப்பு.

**வ - கு.**—நெய் எடுத்த பின்புள்ள வாதுமைப்பருப்பின் திப்பியுடனாவது அல்லது பருப்புடனாவது கோதுமை மா சேர்த்து அப்பஞ் செய்து மதுமேகக் காரர்களுக்கு வழங்கலாம்.

பருப்பு—8, சருக்கரை—4, கருவேலம்பிசின்—1 பங்குகள் எடுத்து, பருப்பை மைபோலரைத்து, பிறகு பிசின், சருக்கரை கூட்டி அரைத்து 1—2 வராகனெடை வீதம் காலை மாலை உட்கொள்ள அகட்டுப்புண்களை யாற்றும். அதிக வெப்பத்தையும் கபதோடத்தையும் நீக்கும். வீரிய விர்த்தியும் ஐம்பொறிகளுக்கு வன்மையுந்தரும்.

பருப்பு—1, நீர்—8, பங்கு கொண்டு பருப்பைக் கொஞ்சம் நீர்விட்டு மைபோலரைத்து மற்ற நீரிற் கலக்கி வடிகட்டி வேறு நெய்ப்பைக்கொடுக்கும் மருந்துகளுக்கு அநுபானமாக $\frac{1}{8}$—$\frac{1}{4}$ ஆழாக்கு உபயோகிக்கலாம்.

பருப்பும், அத்திப்பழமும் சேர்த்தரைத்து வழங்க மலமிளகி வெளிப் படும்.

உப்புநீர் தெளித்து பருப்பை இலகுவாய் வறுத்து, 5, 6 மென்று தின்ன இருமல் தணியும். தொண்டைக்கம்மல் வாங்கும்.

மணப்பாகு, இளகல் செய்தும் உபயோகிக்கலாம்.

பருப்பு ஒன்றுக்கு சீனாக்கற்கண்டு அரைப்பங்கு சேர்த்து கல்வத்திட் டரைத்து, பிறகு கலுவத்தில் ஒருபக்கம் ஒதுக்கிச் சூரியனில் சாய்த்துவைக்க நெய் கக்கும். அதில் 1, 2 துளி கண்களிலிடக் கண்களிற்றங்கிய மாசுகள் நீங்கிக் கண்கள் குளிர்ச்சியடையும்.

## நெய்.

இதை $\frac{1}{2}$—1 வராகனெடை வீதம் கொள்ள, நெய்யின் கீழ்க் குறிப்பிட்ட நோய்களைப் போக்கி, சுக்கிலத்தைப் பலப்படுத்தும். ஐம்பொறிகட்கு வன்மை தரும்.

தித்திப்பு மாதுளைப்பழத்திற்குள் $\frac{1}{2}$—1 பலம் நெய் செலுத்தி செம்மண் சீலை சுற்றிக் கும்பிச் சாம்பலில் வெதுப்பி, பழத்தைக் கசக்கிப் பழரசத் தையும், நெய்யையும் உறிஞ்சியுண்ண பாதிக்கின்ற இருமல் தணியும்.

**பிசின்.**

இதில் ½—2 வராகனெடை வீதம் உட்கொள்ள இருமல், மூத்திரக் கிரிச்சரம் நீங்கும். சுக்கிலம் தடிக்கும். கபம் தன்னிலைப்பெறும்.

**ஓடு.**

இதைச் சுட்டுக் கரியாக்கிப் பல்துலக்கலாம்.

---

## வாய்விளங்கம்—Vaiviḷangam.

**வே - பெ.—வாயுவிளங்கம், கேரளம், வாய்விலங்கம்.**

**Embelia Ribes.**

**Tel.** **Vayu - vilangamu** వాయు విలంగము.
**Mal.** **Vizhálari** വിഴാലരി.
**Kan.** **Vayi - vulanga** ವಾಯಿವಲಂಗ.
**Sans.** **Vidanga** विडङ्ग:
**Hind.** **Bài - Badang** * بائی بڑنگ

இது கொடி வருக்கத்தைச் சேர்ந்தது. இது இந்தியாவில் மத்திய-கீழ் இமயத் தொடர்ச்சியிலிருந்து இலங்கை, சிங்கப்பூர் வரையிலுள்ள மலைப் பிரதேசங்களில் பயிராகிறது. இதன் பழம் நல்ல வாசனையுடன் உருசியா யிருக்கும்.

**ப - உ.**—இலை (பழம்), விதை, வேர்ப்பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்நிவர்த்தநி - Stomachic.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.

**குணம்.**—இதற்குப் பாண்டு, குட்டம், குன்மம், அதிதூல நோய், வாயு, சருப்ப - கீட - தாவரவிடங்கள், சிரசு, நாசி, வயிறு இவைகளில் இப்பிணியுள தென்றறிதற்கரிய சந்நக்கிருமி, பகந்தரம் ஆகியவை போம்.

பாண்டுகுட்டம் குன்மம் பருந்தூல நோய்வாதந்
தீண்டு திரிவிடஞ்சி ரந்துண்டம்—பூண்டமடி
நோய்விளங்கக் காட்டாத நுண்கிருமி யாசனப்புண்
வாய்விளங்கங் காட்டவிடு மால். (அ - கு.)

**இலை.**

**வ - கு.**—இலைச்சாற்றுடன் இஞ்சிச்சாறும் சேர்த்து வாய்கொப்புளித்து வரத் தொண்டைப்புண், வாய்ப்புண் மாறும்.

**விதை.**

விதையை (வாய்விளங்கத்தை)ச் சூரணம் செய்து 1—4 வராகனெடை தேனிற்குழைத்து ஒருநாளைக்கு 2—3 முறை கொடுத்து அடுத்தநாள் சிற்று மணக்கெண்ணெய் அல்லது இதன் ஊறல் கஷாயத்தைக் கொடுக்க நாக்குப் பூச்சி, மற்றப்பூச்சிக்கள் செத்து வெளிப்படும்.

சூரணத்தில் ½—1 வராகனெடை எடுத்து பாலிற் கலக்கிச் சிறுவர்கட்குக் கொடுக்க வயிற்றுப் பொருமல், அசீரணத்தால் காணும் வயிற்றுவலி நீங்கும்.

விதையை நன்றுயரைத்து வெண்ணெயிற் குழப்பித் தலைக்குப் பற்றிட தலைவலி நீங்கும்.

தேள் கொட்டலுக்கும், புடை முதலிய சரும வியாதிகளுக்கும் விதையை யரைத்துப் பூசலாம்.

இருமிகளைப் போக்கும் அநேக மருந்துமுறைகளில் இது சேரும்.

**வேர்ப்பட்டை.**

வேர்ப்பட்டையை உலர்த்திச் சூரணஞ் செய்து பல்துலக்கிவர, பல்வலி நீங்கும்.

இப்பட்டையை யரைத்து மார்பின்மீது பற்றிட கப இருமல், கோழைக் கட்டு இவைகளை நீக்குவதில் சிறந்ததாகும். மேலும் இப்பட்டையை அரிசிக் கஞ்சித் தண்ணீரில் வேகவைத்து வடிகட்டியும் கொடுக்கலாம்.

---

## வாலுழுவை—Vàluzhuvai.

**வே - பெ.—வாலுளுவை, கங்குணி, மால்கங்குணி, அதிபறிச்சம்.**

Celastrus Paniculatus.

| | |
|---|---|
| Tel. Mál - Kanguni - Vittulu మాల్-కంగుని విత్తులు | Kan. Kariganne ಕರಿಗನ್ನೆ. |
| | Sans. Jyotishmati ज्योतिष्मती |
| Mal. Cherupunnari ചെരുപ്പുന്നരി. | Hind. Mál - Kangni * مالکنگنی |

இது மரமேறுங் கொடிவகுப்பைச் சேர்ந்தது. இது இந்தியாவின் மலைப் பிரதேசங்களிலும், இமயம், இலங்கை, பர்மாவிலும் பயிராகிறது.

**ப - உ.**—இலை, விதை, நெய்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- உடற்றேற்றி - வ்யாதாபேதகாரி - Alterative.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- நாடியுரமாக்கி - Nervine Tonic.

**குணம்.**—வாலுழுவைக்கு வயிற்றுச்கடுப்பு, கடுப்புடன்கூடிய இரத்த பேதி, பித்தம், இருமல், மலக்கட்டு, சூதிகாவாதம் இவை நீங்கும்.

வயிற்றுக் கடுப்புவலி மாறுக் கிராணி
பயித்தியங் காசம்மல பந்தஞ்—சயிக்கவொணுச்
சூதிகா வாதமும்போந் தொல்வா லுழுவைவிதைக்
காதிநவ சித்தர்மொழி யாம். (அ - கு.)

மேலும், இது கபதோடத்தாலுண்டாகும் சிற்சில நோய்கள், பாரிச வாதம், குட்டம், கைகால்களில் திமிரோடுங் காணுகிற ஓர்வித வாதவீக்க ரோகம் (இதையே Beri - Beri என்பார்கள்), கீல்வாதத்தில் உண்டாகும் நோக்காடு இவைகளையும் போக்கும் குணமிதற்குண்டு.

**இலை.**

**வ - கு.**—இலைச்சாற்றைக் கொடுக்க அபினிதோடம் முறியும்.

**வித்து.**

வித்தைப் பசுவின் நீர் விட்டரைத்து, அந்நீரிலேயே குழப்பிப் புண், பக்குடனுள்ள புண் இவைகளுக்குப்பூசத் தீரும்.

விதையைக் களிகிண்டி நாட்பட்ட விரணங்களுக்கு வைத்துக்கட்ட வெகு துரிதத்தில் விரணங்கள் குணமாகும்.

விதையைச் சூரணஞ் செய்து நாள் ஒன்றுக்கு 2—3 முறை $\frac{1}{4}$—$\frac{1}{2}$ வராக னெடை வீதம் கொடுத்துவர, இருமல், கடுப்புடன்கூடிய இரத்தபேதி, வயிற்றுக்கடுப்பு, மலபந்தம், அசிர்க்கரரோகம், பித்தம் இவை தீரும். இதையே பாலில் காய்ச்சியுண்ண மேனியுண்டாகும்.

**நெய்**

வித்திலிருந்து எடுக்கும் நெய்க்கு ஞாபக சக்தியையும், புத்திகூர்மை யையும் உண்டுபண்ணும் செயலிருப்பதாகக் கொண்டு நியாயாதிபதி, உபாத் தியாயர், பண்டிதர், பாடகர் இவர்களில் சிலர் உபயோகித்து வருவதாகக் கருதப்படுகிறது.

மேலும், இது பாடகர்களின் தொனியைச் சுத்தப்படுத்தும். பாடுங்காலத் தில் அவர்களுக்கு ஆயாசமுமிராது.

கைகால்களில் திமிரோடுங் காணுகிற ஒருவித வாதவீக்கரோகத்திற்கு (Beri-Beri) 10—30 துளிவீதம் ஒருநாளைக்கு 3—4 தரம் கொடுக்கக் குணமுண்டா கிறதென்றும், 10—15 துளிவீதம் தினமொன்றுக்கு 2 முறை கொடுத்தால் வியர்வை யுண்டாகிறதென்றும், அதனால் களை முதலிய துர்க்குணங்கள் உண்டாகிறதில்லை என்றும் டாக்டர் ஹெர்க் லோட்ஸ் (Dr. Herklots), டாக்டர் மால்கோம்ஸன் (Dr. Malcomson), டாக்டர் இ. ஜெ. வாரிங்ஸ் (Dr. E. J. Warings) முதலிய பரதேச வைத்தியர்களால் வழங்கப்பட்ட தாகத் தெரியவருகிறது. இது கறுப்பு வாலுழுவை நெய்யாகவே இருக்க வேண்டும்.

---

## வாலேந்திரபோளம்—Válendrabólam.

**வே - பெ.—குங்குமதீபம், குந்துரு, வெள்ளைப்போளம், வெள்ளாத்திபோளம், மீறு.**

**Balsamodendron Myrrha.**

**Eng.—Myrrh.**

| | |
|---|---|
| Tel. Balintra-pōlamu బాలింత్ర పోలము. | Sans. Gandha Rasaha गन्धरसः |
| Kan. Bōḷā ಬೋಳ. | Hindi. Bola بول* |

இது அரேபியா, அபிசீனியா தேசங்களில் பயிராகும் மரத்திலிருந்து கீறி எடுத்து சேகரிக்கப்படும் பிசின். இது கட்டிகளாயும், சிவப்பும், கறுப் பும் கலந்த நிறமாயும் கடுமணமாயு மிருக்கும். எளிதில் தூளாகும். நீரில் இறுகும். சாராயத்தில் கரையும்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.

**குணம்.**—இதனால் கீல்பிடிப்பு, க்ஷயம், நமைச்சல், கரப்பான், குன்மம் இவைகள் போவதுடன், சூதகக்கட்டு, சூதகப்பாண்டு, பாண்டு, கபரோகங்கள், சுவாசகாசம், அக்கினிமந்தம், ஆருதவிரணம், வாய்ப்புண், கருப்பாசய சம்பந்தமான நோய்கள் ஆகியவைகளும் நீங்கும்.

சூலைகய ரோகம் சொறிகரப்பான் குன்மம்இவை
ஆலைவா யின்கோல்போல் ஆகுங்காண்—நீலசக்கர
வாளமெனத் தோற்றுமுலை மாதரசே! வாலேந்திர
போளந் தனையெடுக்கும் போது.

**வ-கு.**—இதைப் பொடித்து ⅛ முதல் ½ வராகனிடை கொடுக்கச் சூதகக் கட்டு, சூதகப்பாண்டு முதலிய கருப் பையையனுசரித்த நோய்களும், சுவாச காசம், அக்கினிமந்தம், பாண்டு, கபரோகங்களும் குணப்படும்.

| | | |
|---|---|---|
| வாலேந்திரபோளம் | 1-அவுன்ஸ் | இவைகளைப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்து குல்கந்தைச் சேர்த்து நன்றாய்க் கலந்து 5—10 உழுந்தெடை கொடுக்கப் பேதியாகும். சூதகத்தைக் கிரமப்படுத்தும். |
| கரியபோளம் | 2 ,, | |
| குங்குமப்பூ | ½ ,, | |
| குல்கந்து | 2½ ,, | |

இத்துடன் கரியபோளம், அயம் சேர்த்துக்கொடுக்கச் சூதகக்கட்டு நீங்கும்.

இதைக் கரியபோளத்துடனும் அன்னபேதியுடனும் சேர்த்து உபயோகிக்க வாதரோகம், சூதகக்கட்டு முதலிய நோய்கள் குணப்படும். (கரியபோளத் தின்கீழ்க் காண்க).

பற்பொடிகளிற் சேர்த்துப் பல்விளக்க, வாய் நாற்றம், ஈறுவளர்ச்சி, தொண்டைப்புண் குணமாகும்.

---

## வாழை—Vàzhai.

**வே-பெ.—அம்பணம், அரம்பை, ஓசை, கதலி, கவர், சேகிலி, திரணபதி.**

Musa Sapientum.

Eng.—The Plantain tree

| | | |
|---|---|---|
| Tel. | Arati అరటి. / Kadali కదళి. | Sans. Kadali कदली |
| Mal. | Vazha വാഴ. | Pers. Moug * موغ |
| Kan. | Bale ಬಾಳೆ. | Duk. Maoz * موز |

வாழை—பனை, தெங்குபோல மானிட வாழ்க்கைக்கு இன்றியமையா திருப்பதால், இதை இந்தியாவில் எல்லாப் பாகங்களிலும் வைத்துப் பயிர் செய்யப்படுகிறது. இதில் பலசாதிகளுண்டு. அவையாவன:—(1) அடுக்கு வாழை, (2) இரசதாளிவாழை, (3) கருவாழை, (4) கொட்டைவாழை, (5) செவ்வாழை, (6) நவரைவாழை, (7) நாட்டுவாழை, (8) பசும்வாழை, (9) பேயன்வாழை, (10) மலைவாழை, (11) மொந்தன்வாழை, (12) வெள் வாழை போல்வனவாம். இவற்றுள், அகத்தியர் குணபாடத்தில் எண் வகை வாழைப்பழத்தின் குணம் கூறப்பட்டிருக்கிறது. அதை வாழைக் குணத்தின் கீழ்க் காண்க.

**ப-உ.**—சமூலம்:—இலை, பூ, பிஞ்சு, காய், பழம், பட்டை, கட்டை, தண்டு, நீர்.

சுவை.—

**பூ, பிஞ்சு, காய்.**
துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**நீர், கட்டை, தண்டு.**
துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**
இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**பூ, பிஞ்சு, காய்.**
*துவர்ப்பி - ஸங்கோசனகாரி* - Astringent.

**நீர்.**
*குருதிப்போக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி* - Styptic.

**கட்டை, தண்டு.**
*பித்தமடக்கி - பித்தசாந்தநி* - Anti-pitta.
*சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி* - Diuretic.

**இலை - பட்டை.**
*குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி* - Refrigerant.

**பழம்.**
*உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி* - Demulcent.
*மலமிளக்கி - மலகாரி* - Laxative.
*உடலுரமாக்கி - போஷணகாரி* - Nutritive.

**சமூலம்.**

**குணம்.**—வாழைக் கிழங்கு (கட்டை) சூட்டைத் தரும். தண்டு குடரிற் சிக்கிய மயிர், தோல், விடம் இவைகளை விடுவிக்கும். பூ பிரமேகத்தைப் போக்கும். பிஞ்சால் மூலக்கடுப்பு தீரும். காயால் உடல்முற்றும் வாயுவுண்டாகும்.

நற்கதலிக் கந்தம்அனல் நல்குந்தண் டோகுடலிற்
சிக்கு மயிர்தோல் நஞ்சுந் தீர்த்திடுங்காண்—தொக்குறுபூ
மேகமொழிக் கும்பிஞ்சால் வெங்கடுப்பேகும் காயால்
தேகமுழுக் கக்காலாந் தேர். (அ - கு.)

**எண்வகை வாழைப்பழம் இவை எனலும், அவற்றின் குணமும் :—**

(1) செவ்வாழை, (2) வெள்வாழை, (3) இரசதாளிவாழை, (4) மொந்தன்வாழை, (5) அடுக்குவாழை, (6) மலைவாழை, (7) பச்சைவாழை, (8) கருவாழை என்கிற எண்வகைப் பழங்களுள் முதற்கூறிய 4-ம் நோயினர்க்கு ஆகும். மற்ற 4-ல் கருவாழை நன்மை தரும். இவ்வெட்டு வகைப் பழங்களும் வாதரோகிகட் குதவாது. ஆனால் வாழைக்குச் சத்துருவாகிய பொருள்களோடு சேர்த்துண்ணக் குற்றமுண்டாகாது.

செவ்வாழை வெள்வாழை சேர்ந்தரச தாளிமொந்தன்
ஒவ்வும்இவை நோயோர்க் குலகத்தில்—கவ்வடுக்கு
வாழைமலை வாழைபசும் வாழைகரு வாழைகளில்
ஊழிக்கு வாழைநன்றும் ஓது.

ஓதல்உற்ற வாழைஎட்டில் உற்ற கனிகளெல்லாம்
வாதநோய்க் காகாது வையகத்தோர்—போதஉண்ண
எண்ணம்உண் டாயின் இதற்கியைந்த சத்துருவோ
டுண்ண இடர்இல்லை உரை. (அ - கு.)

### வாழைப்பழத்தின் பொது குணம்.

வாழைப் பழத்தால் உடம்பை வெளுக்கச் செய்கிற சோமரோகம், பித்தப் பிணிகள், மதநோய், மூர்ச்சை ஆகியவை போம்.

சுத்தஅ ருச்சுனஞ்செய் சோமநோய் என்பதுவும்
பித்தநோய் என்னப் பிறந்தவையு—முற்றி
வரம்பைக் கடந்த மதமூர்ச்சை யும்போம்
அரம்பைக் கனியுண் டறி.

(அ - கு.)

### பேயன் வாழைப்பழத்தின் குணம்.

இதற்குப் பயித்தியமும், உட்சூடும் நீங்கும். வாதாதிக்கமும், மிகு குளிர்ச்சியும், மலக்கழிவும் உண்டாகும்.

பேயன் பழம்அருந்தில் பித்தரோ கம்போகும்
வாயுஉண் டாகும் மலங்கழியும்—தீயே
தகத்தில் அதிகுளிர்ச்சி ஆகும் அணங்கே!
சகத்தில் இதையறியச் சாற்று.

(அ - கு.)

### மொந்தன் வாழைப்பழத்தின் குணம்.

இதனால் அக்கினிமந்தம், உடல்வலியுடன் பாரிப்பு, இசிவு, சீதளம், திரிதோடதாகம் இவையுண்டாம். மன உறுதியை விலக்குகிற பித்தம், காமாலை, மேதோதாதுவைப்பற்றிய வறட்சி இவை நீங்கும்.

மந்தமுடன் நோய்கனத்தல் வாதம் வலிசீதம்
தொந்தம்உறு தாகம்இவை தோன்றுங்காண்—புந்திவலி
ஓட்டுபித்தங் காமாலை உள்வறட்சி யுந்தொலையும்
நாட்டுமொந் தன்பழத்தி னல்,

(அ - கு.)

### நவரை வாழைப்பழத்தின் குணம்.

இதனால் மந்தாக்கினி, தினவு, வாதகபதொந்தம், கரப்பான் இவை அதிகரிக்கும்.

மாந்தமொடு நமைச்சல் வாதகப மும்பெருகும்
பாந்தல் உறுகரப்பான் பாவுங்காண்—பூந்தடக்கை
யாழைப் பழித்தமொழி அன்னமே! கேள்நவரை
வாழைப் பழத்தால் மதி.

(அ - கு.)

### குணமும் வழக்கும்.

### வாழையிலை.

வாழை இலையில் உணவுகொண்டால், சரும தாதுவிற் பளபளப்பும், சுகபோகங்களும் பொருந்தும். மந்தாக்கினி, துர்ப்பலம், க்ஷீணவாதம், சிலேத்தும அரோசகம் இவை நீங்கும். பித்த கோபம் சாந்தமாகும்.

தொக்கினுறு மின்னுஞ் சுகபோ கமுமன்னும்
அக்கினி மந்த மபலமொடு—திக்கிடுகால்
பாழை யிலைப்புமறும் பன்னுபித்த முஞ்சமனும்
வாழை யிலைக்குணரு வாய்.

(அ - கு.)

வாழைத் தளிரான இலையை தீ எருவையிட்டு விரணமாக்கினதற்கும், நெருப்பு அல்லது வெந்நீர்ப்பட்டதாலுண்டாகும் விரணம் ஆகியவைகளுக்கும் வைத்துக் கட்டினால் விரணம் சீக்கிரத்தில் உலர்ந்துவிடும். இலையின் மேற் புறத்தை இரண்டுநாள் வைத்துக் கட்டினபிறகு, அடிப்புறத்தை வைத்துக்

கட்டவேண்டும். உலர்ந்து வருகின்ற புண்களுக்கு எண்ணெய்ச்சீலையை மடித்து மேலேபோட்டு வாழையிலையை வைத்துக் கட்டிக்கொண்டு வந்தால் துணி எண்ணெயாகவேயிருக்கும். விரணம் சீக்கிரத்தில் உலர்ந்துவிடும். வாழையிலைக்கு சிற்றாமணக்கு நெய் தடவி விரணங்களுக்கு உபயோகிக்க லாம். இந்த இலையை கண்ணோவுக்குக் கண் மறைவுக்கு வைத்துக் கட்டினால் வெளிச்சத்திற்கு மறைவாயும், குளிர்ச்சியாயுமிருக்கும்.

### பூ.

இது, இரத்தமூலம், பிரமேகம், வெள்ளை, பயித்தியம், கபாதிக்கம், உதரக்கடுப்பு, இருமல், கை-கால் எரிச்சல் இவைகளை நீக்கும். சுக்கில விருத்தியைத் தரும்.

வாழைப்பூ மூலரத்தம் மாபிரமி வெட்டைபித்தம்
கோழைவயிற் றுக்கடுப்பு கொல்காசம்—ஆழியனல்
என்னஎரி கைகால் எரிவுந் தொலைத்துடலில்
மன்னவளர்க் குந்தாது வை. (அ - கு.

மேற்கண்ட குணங்களைப்பெற இதைச் சமைத்துண்ணலாம்.

இதை இடித்து சிற்றாமணக்கெண்ணெய் விட்டு வதக்கி கை-கால் எரிச்சலுக்கு ஒற்றிடமிட்டுப் பிறகு இதையே வைத்துக் கட்டலாம்.

இதன் சாற்றுடன் சிறு பனங்கற்கண்டு கூட்டி உட்கொள்ள, இரத்தப் பிரமேகம், வெள்ளை, உதரக்கடுப்பு சாந்தமாகும்.

இதன் இளம்பூவை புட்டிட்டுச் சுரசமெடுத்து பனங்கற்கண்டு சேர்த்துப் பெரும்பாடுடையவர்கட்கு வழங்கலாம்.

### பிஞ்சு.

இதற்கு, இரத்தக்கடுப்பு, உள்வளைய ரத்தமூலம், அதிமூத்திரம், கீழ் வயிற்று விரணம் போம்.

உதிரம் விழுகடுப்போ டுண்மூல ரத்தம்
எதிரில்விழு நீரிழிவும் ஏகும்—மதிநுதலே
பேழை வயிற்றுப்புண் பேருந் துவர்ஆர்ந்த
வாழைக்கச் சற்கு மருண்டு. (அ - கு.)

இது மேற்கண்ட நோயினர்களுக்குப் பத்திய வுணவாகும்.

### காய்.

இதற்குப் பித்தவாந்தி, பித்தாதிசாரம், பைத்தியம், உமிழ்நீர்ச்சுரப்பு, வயிறூளைதல், உட்டினம், இருமல் இவைபோம். இரத்த விருத்தியும், பலனுமுண்டாகும். உணவு அதிகமாகக் கொள்ளும்.

வாந்திபித் தம்பேதி வாய்நீர் வயிறூளைதல்
ஆர்ந்தஅன லங்காசம் அண்டாதாம்—சூழ்ந்தேறு
செம்புனலுந் தென்பும்உண்டாம் திண்டி மிகப்பெருகும்
அம்புவியுள் வாழைக்காய்க் காய். (அ - கு.)

இதைச் சமைத்துண்ண மேற்கூறிய குணங்களைப் பெறலாம்.

### வாழைக்கிழங்கில் ஊறுகின்ற நீர்.

இந்நீரைக் காலை, மாலை $\frac{1}{2}$—1 ஆழாக்கு வீதம் சாப்பிட்டுவர, பெருவயிறு, இரத்தக்கிரிச்சரம், எரிமூத்திரம், அற்பவிரணம், சோமரோகம், அயர்வு, உழலைநோய், பாண்டு, எலும்புருக்கி ஆகியவை நீங்கும். தேகத்திற்கு வன்மை யுண்டுபண்ணும்.

இந்நீர் சீத குணமுடையது.

வாழைநீர் தான்குளிர்ச்சி வல்லபல முண்டாக்கும்
பேழை வயிறுடைக்கும் பெண்மயிலே !—வீழும்வல்லி
ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே
சிற்றிரணம் போக்குந் தெரி.

சோமரோ கங்க டுலையு மிளைப்புழலை
நாமமுறும் பாண்டுவகை நாடாதே—பூமிதனில்
காழை எனும்புருக்கி காணு வணங்கரசே !
வாழைநீர்க் கென்றுளத்தில் வை. (அ - கு.)

**பட்டை.**

அடிக்கடி கிடைப்பதற்கு அருமையாகிய மூலிகைகளை சிலநாள்மட்டும் பச்சையாகவே வைத்திருக்க, இதன் பச்சைப்பட்டைக்குள் மூடி வைத்து வரலாம்.

பட்டை உலர்ந்தபின் நாரெடுத்துப் பூமாலைகளைக் கட்டலாம். மேலும் வாழைநார் துணிகள் நெய்யவும் பயன்படுகிறது.

**தண்டு - கிழங்கு.**

இதை இடித்துப் பிழிந்த இரசத்திற்கு மூத்திரத்தைப் பெருக்கும் செய்கையிருப்பதாலும், இதில் வெடியுப்பின் சத்தும் சேர்ந்திருப்பதாலும் நீர்க்கட்டு, நீர்எரிவு, இரத்தக்கிரிச்சரம் இவைகளைப் போக்க இதை உபயோகிக்கலாம். நோய் கடினமாயிருந்தால் இதன் இரசத்துடன் வெடியுப்பு, வெங்காரம், படிகாரபற்பம் அல்லது சுண்ணம் சேர்த்துக் கொடுக்கலாம்.

கிழங்கின் இரசத்தினால் வெடியுப்பு மேலான சுத்திபெறும்.

கிழங்கை இடித்து அதிலுள்ள நீரைப் போக்கித் திப்பியை அடிபட்ட வீக்கங்களுக்கு வைத்துக் கட்டலாம்.

கிழங்கில் இரசம் (பாதரசம்) நீறும்.

---

## விடத்தேர்—Vidathèr.

**வே - பெ.—விடத்தேரை, விடதாரி.**

Mimosa cinerea.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** Veturu | వెటురు. | Sans. Virvriksha | वीरवृक्षः |
| **Mal.** Vidatheri | വിടത്തേരി. | **Hind.** Varadari | * وردارى |

இது இந்தியாவில் சாதாரணமாய் தென்பாகத்தில் பயிராகிற சிறு செடி.

**ப - உ.**—சமூலம், பிசின்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**சமூலம்.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பட்டை.**
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**பிசின்.**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**குணம்.**—இதற்கு மூளையை வருவிக்கின்ற மூலம், வயிற்றுப் பிடுங்கலை யுடைய இரத்தக்கிரகணி, அதிதாகம் ஆகியவை போம்.

மூளையைவரு விக்கின்ற மூலரோ கத்தை
யளையுமுதி ரத்தை யடங்கா—துளைதாக
வேகத்தைப் போக்கிவிடும் வெய்யவிடத் தேர்சக்கிர
வாகத்தைக் காய்முலையாய் ! வாழ்த்து. (அ - கு.)

**பிசின்.**

பிசினுக்கு வெண்மேகம், சீழ்ப்பிரமேகம், மேகக்கரப்பான் முதலியன விலகும்.

விடத்தேரின் றன்பிசின்றான் வெண்மேகம் போக்கும்
அடுத்தபிர மேகத்தை யாற்றுந்—தொடுத்த
மேகக் கரப்பானை விட்டோட்டும் என்றுலகில்
நாகரிக மாதே ! நவில். (அ. - கு.)

**வ - கு.**—இதன் கொழுந்தைக் கசக்கிக் கண்களில் பிழியக் கண்ரோகம் சாந்தமாகும்.

இதன் பட்டையைச் சூரணஞ் செய்து தினத்திற்கு 2, 3 முறை $\frac{1}{2}$—$1\frac{1}{2}$ வராகனெடை வீதம் கொடுக்க மூலம், இரத்தக்கிரகணி தீரும்.

இதன் பிசினை $\frac{1}{2}$—1 வராகனெடை வீதம் ஒரு நாளைக்கு இருமுறை உபயோகிக்க வெண்மேகம் முதலிய மற்ற மேகங்களும் மேகக்கரப்பானும் விலகும்.

இதன் பட்டைத்துகளுடன் பாதரசம் சேர்த்தரைக்க இரசத்தின் உரு மாறும்.

---

## விராலி—Viràli.

### Hymenodictyon Excelsum.

| | | |
|---|---|---|
| Tel. | Bandàra (chettu) బండార చెట్టు. <br> Bùrija బూరిజ. <br> Chetippa చేటిప్ప. | Mal. Varàli വരാലി. |

இது இந்தியாவில் மலைப்பிரதேசங்களில் ஏராளமாய்ப் பயிராகிற செடி.

**ப - உ.**—இலை, பட்டை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent. <br> உரமாக்கி - பலகாரி - Tonic. <br> கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.

**குணம்.**—இதன் இலை பெருமைதங்கிய துருசை வெளுப்பாக்கும். அன்றியும் அடிகனத்த கட்டிகளையும் வீக்கத்தையும் போக்கும்.

ஆன்ற துருசுநீ றாகமனத் துன்னில்வே
ரூன்ற வருகட்டி யோடதைப்புத்—தோன்றிற்
சுராலிக் குதலையிளந் தோகாய் ! விரைவாய்
விராலிக் குழையோடு விள். (அ - கு.)

வ - கு.—இதன் இலையைச் சிற்றுமணக்கு நெய்விட்டு வதக்கி வீக்கங்களுக்கும், கட்டிகளுக்கும் வைத்துக் கட்டிவர வெகு துரிதத்தில் அவைகள் குணப்படும்.

இந்த இலையிலிருந்து சாறு எடுப்பது கடினமே. துருசு சுண்ணமிட்டுப் பிழிய சாறுவரும். இதனால் பாதரசம் கட்டுப்படும். மேலும் இதன் இலை துருசைச் சுண்ணஞ் செய்யும் பெருமையுடையது.

இதன் உள்பட்டை மிகக் கைப்புடையது. இதைச் சின்கோன (Cinchona) வுக்குப் பதிலாக உபயோகிக்கலாம்.

---

## விலாமிச்சுவேர்—Vilàmichu-vér.

Mal. Iruveli ഇരുവേലി. | Sans. Hreeberam ह्रीबेरम्

இது இந்தியாவில் பூந்தோட்டங்களில் வைத்துப் பயிராக்கும் ஓர்வகைப் பூண்டு. இதன் வேருக்கு நறுமணமுண்டு. இதை இந்திய மாதர் மிகப் பிரியமாகக் கொண்டையில் அணிவார்கள். இதனால் கூந்தல் மணம் பெறும்.

ப - உ.—வேர்.

சுவை.—கைப்பு, வீரியம் - சீதம், பிரிவு - இனிப்பு.

செய்கை. { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
பித்தமடக்கி - பித்தஹரகாரி - Anti-Pitta.

குணம்.—விலாமிச்சம் வேருக்கு மேகநீர், கண்ணெரிவு, உதிரப்பித்தம், தாகம், மதமூர்ச்சை, பைத்தியம், மயக்கம், சோபம், தலைவலி, தீச்சுரம் போம்.

மேகம் விழியெரிச்சல் வீறிரத்த பித்தமொடு
தாகமத மூர்ச்சைபித்தந் தன்மயக்கம்—சோகஞ்
சிரநோய் இவையேகுஞ் செய்யவிலா மிச்சுக்
கெரிசுரமும் இல்லை யிசை. (அ. - கு.)

வ - கு.—இதன் தைலத்தை வாரத்துக்கொருமுறை முழுக்குத் தைலமாக உபயோகித்துவர மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## வில்வம்—Vilvam.

வே - பெ.—குசாபி, கூவிளம், கூவிளை, சிவத்துருமம், நின்மலி, மலூரம்.

Aegle Marmelos.

Eng. Bael (tree).

| | |
|---|---|
| Tel. Bilvamu బిల్వము. | Sans. Bilva बिल्वः |
| Mal. Kúvalam കൂവളം. | Pers. Shul * شل |
| Kan. Bela ಬೇಲ. | Hind. Bel. * بيل |

இது இந்தியா முற்றும் பயிராகும் மரம்.

ப - உ.—இலை, பூ, பிஞ்சு, காய், பழம், வேர், பிசின்.

**இலை, பூ, பிஞ்சு, காய், வேர்.**

சுவை. — துவர்ப்பு, கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பழம்.**

துவர்ப்புடன் கூடிய இனிப்பு. ,, ,,

செய்கை.

**இலை.**

வியர்வைப்பெருக்கி – ஸ்வேதகாரி – Diaphoretic.
காமம்பெருக்கி – காமவர்த்தநி - Aphrodisiac.
வெப்பகற்றி – ஜ்வரஹரகாரி – Febrifuge.

**பூ, பிஞ்சு, காய்.**

துவர்ப்பி – ஸங்கோசனகாரி – Astringent.
செரிப்புண்டாக்கி –பாசநகாரி – Digestive.
பசித்தீத்தூண்டி – ஜடராக்கினிவர்த்தநி – Stomachic.

**பழம்.**

துவர்ப்பி – ஸங்கோசனகாரி – Astringent.
மலமிளக்கி – மலகாரி – Laxative.
பசித்தீத்தூண்டி – ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

**வேர், பிசின்.**

காமம்பெருக்கி – காமவர்த்தநி – Aphrodisiac.

**குணம்.**—வில்வத் **தளிர்**—சகல மேகத்தையும், **பூ**—மந்தத்தையும், **பிஞ்சு**—குன்மத்தையும், **பழம்**—கண்ணிருளையும், **பிசின்**—க்ஷீணவிந்துவை யும் நீக்கும்.

பல்லவம்பூ பிஞ்சின் பழநிரியம்சம் முறையே
வல்லவம் மேகம்மந்த மாகுன்மம்—செல்லுகின்ற
நோக்கமருள் விந்துநட்ட நூறு மடுத்தவர்கட்
காக்கமருள் வில்லுவத்தி லாம். (அ - கு.)

**வேருக்கு**—வாதகுன்மம், வாயு, கபம், பித்தசோபை, கபதாகசுரம், நீரேற்றம், சந்நி, உடல்வலி, அக்கினி மந்தம், அரோசகம், அதிசாரம், விக்கல், பித்தசுரம், வாந்தி, சுட்கநோய் போம். அழகும், தேகபுஷ்டியு முண்டாகும்.

வில்லுவத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்
சொல்லவொணுப் பித்தந் தொடர்சோபை—வல்லகப
தாகசுரம் நீரேற்றஞ் சந்நியொடு மெய்வலியும்
வேக மொடுநீங்கு மே.

அக்கினி மந்தம் அரோசியதி சாரம்விக்கல்
நிற்கரிய பித்தசுரம் நீள்வாந்தி—சுட்கநோய்
ஆதியநோய் ஏகும் அழகோடு புஷ்டியுண்டாம்
கோதில்வில்வ வேரதனைக் கொள். (அ - கு.)

**இலை.**

**வ - கு.**—இது சிவன் கோயிலில் அர்ச்சனை செய்யும் பத்திரங்களுள் சிறந்தது.

இளந்தளிரை வாட்டித் துல்லிய சீலையில் முடிந்து ஒற்றிடமிட மேகத் தாலுண்டாகும் கண் சிவப்பு நீங்கும்.

இலை 1-க்கு நீர் 4 பங்கு கூட்டி நாலிலொன்ருக வடித்த கஷாயம் வயிற்றுக்கடுப்பு, மேகவாயுவைப் போக்கும். சுரத்திற்கும் உதவும்.

இலைச்சாற்றைப் பிழிந்து உடனே அதில் மிளகுத்தூள் சிறிது சேர்த்துக் கொடுக்க, மலபந்தத்துடன் கூடிய சோபை, காமாலை தீரும். மேற்படி சாற்றுடன் நீர் அல்லது தேன் கூட்டிக் கொடுக்க சலதோஷம், சுரம் குணப்படும்.

பசுவின் மூத்திரம் விட்டு இலையை யிடித்துப் பிழிந்த சாற்றில் $\frac{1}{2}$—1 ஆழாக்கு வீதம் கொடுத்துவரப் பாண்டு, சோபை, வீக்கம் போம். புளி ஆகாது.

### பூ.

இதைக் கஷாய மிட்டேனும், உலர்த்திச் சூரணஞ் செய்தேனும் மந்தத்தைப் போக்க வழங்கலாம் (கஷாயம் $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு ; சூரணம் 4—16 குன்றியளவாகும்).

### பிஞ்சு.

இளம் பிஞ்சை அரைத்து $\frac{1}{2}$—$1\frac{1}{2}$ வராகனெடை வீதம் எருமைத் தயிரில் கலந்து கொடுக்க வயிற்றுக்கடுப்பு, குன்மம், சீதபேதி நிற்கும். இம்முறை சிறு பிள்ளைகளுக்கே பெரும்பாலும் வழங்கப்பட்டு வருகிறது.

### காய்.

இதைப் பசுவின் பால் விட்டரைத்துத் தலைக்குத் தேய்த்து நீராட கபாலச்சூடு, கண்ணெரிச்சல் நீங்கி, கண்கள் குளிர்ச்சியடையும்.

காயை வெட்டி வெயிலில் உலர்த்திப் பொடிசெய்து சிறுவர்கட்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ வராகனெடை வீதமும், முதிர்ந்தவர்கட்கு $\frac{1}{2}$—1 வராகனெடை வீதமும் தினம் இரு முறை கொடுத்துவர சீதபேதி, இரத்தபேதி நிற்கும். சிறுவர்களுக்கு நற்பயனைத்தரும்.

காயுடன் இஞ்சி, சோம்பு சேர்த்து, குடிநீரிட்டு மூலரோகிக்குக் கொடுத்துவரலாம்.

### பழம்.

(வில்வப்பழத் தைலம்).

பழச்சதை, கார்போகி, வெந்தயம் வகைக்குப் பலமொன்றெடுத்து பசுவின் பால் விட்டரைத்து, அரை வீசை எண்ணெயிற் கலக்கிச் சிறுதீயிட்டெரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து, தலை மூழ்கிவர, கண்ணெரிச்சல், கபால வலி, தேக அழல், மூளையைப்பற்றிய ரோகம் நீங்குவதுடன் உடலுக்கு அழகும் வன்மையு முண்டாகும்.

(பழச்சத்து).

பழச் சதையை ஒரு பாத்திரத்திலிட்டு, அது மூழ்கும்படி நீர் விட்டு ஒரு சாமம் வரையில் துடுப்பால் கிளறித் துழாவி கனத்த சீலையில் வடிகட்டி, நீரை மற்ருேர் பாத்திரத்தில் சேர்த்துவிட்டு, வடிகட்டிய திப்பிக்கு அது மூழ்கும்படி மறுபடியும் நீர்விட்டு முன்போலவே செய்து வடிகட்டிய நீரை முன் வைத்துள்ள வடிகட்டிய நீருடன் சேர்த்து இப்படி மொத்தத்தில் 4—5 முறை செய்து, கடைசியில் அந்நீரை ஜலேந்திரத்தில் வைத்துச் சுண்டக் காய்ச்சி மெழுகு பதத்தில் எடுத்து வைத்துக்கொண்டு $\frac{1}{2}$—1 வராகனெடை வீதம் நாள் ஒன்றுக்கு 2—3 முறையாகக் கொடுத்துவர, க்ஷயம், க்ஷயத்தில் காணும் இரத்தபேதி, பேதி, நாட்பட்ட சீதபேதி, அதிசாரம், கிரகணி, கண்ணிருளல், நாட்பட்ட மலபந்தம் தீரும்.

(பாணிதம்).

பைழச்சதை ஒரு பங்கிற்கு இரண்டு பங்கு நீர்விட்டரைத்து வடிகட்டி சருக்கரை ஒரு பங்கு அல்லது இனிப்பு அதிகம் வேண்டின் அதற்குத் தக்கபடி

**வ - கு.**—இலையைக் கஷாயமிட்டு ஆமணக்கு நெய் சேர்த்துக்கொடு வாதநீர், பித்தநீர், மலக்கிருமி முதலியவை பேதியின் மூலமாய் வெ பட்டு மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

இலையை வதக்கிக் கட்டிகளில் வைத்துக் கட்டக் கட்டிகளின் வீக்க வாங்கும்.

இலையை நீரிட்டுக் காய்ச்சி, வாதநோயினர்களின் வீக்கங்களின் ப யாதாமொரு தைலத்தைப் பூசியபின் இந்நீரை விட்டுக் கழுவ வீக் குறையும்.

இலையைச் சமையல் செய்தும், காயை வற்றலிட்டு வறுத்தும் உண்ட நாட்டினர் வழக்கம்.

---

## விளா (மரம்)—Viḷa(maram).

**வே - பெ.—கடிப்பகை, கபித்தம், விளவு, வெள்ளில்.**

**Feronia Elephantum.**

**Eng. Wood-apple (tree).**

**Tel.** Velaga వెలగ.
**Mal.** Vilàv വിളാവു.
**Kan.** Bælada ಬೇಲದ (ಹಣ್ಣು.)

**Sans.** Kapitha कपित्थः
**Hind.** Dharkhth-Kaveet
درخت کویٹ *

இம்மரம் இந்தியா முற்றிலும் பயிராகும். இதன் பழத்திற்காக வீடுகளையடுத்த விடங்களிலும் தோட்டங்களிலும் வைத்து வளர்க்கப்படுகிற

**ப - உ.**—இலை, காய், பழம், பழத்தின்ஓடு, பட்டை, பிசின்.

**சுவை.**

**இலை.**
துவர்ப்பு (வாசனையுடன்) விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்ப **பிரிவு** - கார்ப்பு.

**காய்.**
துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பழம்.**
இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை.**
மணமூட்டி – Aromatic.
அகட்டுவாய்வகற்றி – உதரவாதஹரகாரி – Carminative.
துவர்ப்பி – ஸங்கோசனகாரி – Astringent.

**காய்.**
துவர்ப்பி – ஸங்கோசனகாரி – Astringent.

**பழம்.**
மணமூட்டி – Aromatic.
குளிர்ச்சியுண்டாக்கி – சீதளகாரி – Refrigerant.

**பிசின்.**
உள்ளழலாற்றி – அந்தர்ஸ்நிக்தகாரி – Demulcent.

**இலை.**

**குணம்.**—இலைக்குத் தீபனமுண்டாகும்; அகட்டுவாயு நீங்கும்.

கூட்டி நாள் ஒன்றுக்கு 2—3 தரம் ½—1 ஆழாக்கு வீதம் உட்கொள்ள குடலுக்கு வலிவைக் கொடுத்து பேதியை நிறுத்தும். ஆனால் மலபந்தத்தை உண்டாக்காது, மலத்தை இளக்கித் தள்ளும்.

(சூரணம்).

பழச்சதையை நன்றாய் உலர்த்திப் பொடி செய்து அசீரணபேதி, குடல் வாதம் இவைகளுக்கு ½—1 வராகனெடை வீதம் வழங்கலாம்.

(இலேகியம்)

வில்வ வேரைக்கொண்டு செய்யும் இலேகியம் "**வில்வாதிலேகியம்**" எனவழங்கும். இதன் குணத்தை "சித்தர் உறை விளக்கத்திற்" காண்க.

---

## விழலரிசி—Vizhalarisi.

விழல் இந்தியாவில் எங்கும் பயிராகும் புல்லினத்தைச் சார்ந்தது. இதிலுண்டாகும் தானியத்தின் உமிநீக்க அரிசியாகும்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- தாதுவெப்பகற்றி – ஸமனகாரி – Sedative.
- துவர்ப்பி – ஸங்கோசனகாரி – Astringent.
- பசித்தீத்தூண்டி – ஜடராக்னிவர்த்தநி – Stomachic.

**குணம்.**—விழலரிசியால் பித்தாதிக்கம், சுரம், ஆந்திர பித்தவாதம், வாத பித்த கபதோடம், சீழ்ப்பிரமேகம் ஆகியவை நீங்கும்.

விழலரிசி யென்றான் மிகுபித்த மேகும்
அழல்குடலின் வாத மகலும்—துழவு
திரிதோட மேகமிவை சேராவா நீயுங்
குறியா யிதையறிந்து கொள். (அ - கு.)

**வ - கு.**—இவ்வரிசியை நொய்யாக்கிக் கஞ்சி காய்ச்சியுண்ண மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## விழுதி—Vizhudi.

**Cleomefruticosa.**

இது இந்தியாவில் சாதாரணமாய் பயிராகும் செடி.

**ப - உ.**—இலை, காய்.

**சுவை.**—சிறு கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - **Purgative.**
- வாதமடக்கி – வாதநாசநி – **Anti-vata.**
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - **Deobstruent.**

**குணம்.**—இதன் இலையினால் கரப்பான், வெண்மேகம், வித்திருதிக்கட்டி, சரீரக்குத்தல், அக்கினிமந்தம், மலாசயக்கிருமி, துர்மலம் இவைகள் போம். விரேசனம் உண்டாகும்.

விழுதித் தழைகரப்பான் வெண்மேகம் நீங்கும்
பழுபடுவன் சூலைநோய் பாறும்—எழுபேதி
யாக்கும்அதி மந்தம் அகக்கிருமி துன்மலமும்
போக்கும் அதுவே புகல். (அ - கு.)

வ - கு.—இலையைக் கஷாயமிட்டு ஆமணக்கு நெய் சேர்த்துக்கொடுக்க வாதநீர், பித்தநீர், மலக்கிருமி முதலியவை பேதியின் மூலமாய் வெளிப்பட்டு மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

இலையை வதக்கிக் கட்டிகளில் வைத்துக் கட்டக் கட்டிகளின் வீக்கம் வாங்கும்.

இலையை நீரிட்டுக் காய்ச்சி, வாதநோயினர்களின் வீக்கங்களின் மீது யாதாமொரு தைலத்தைப் பூசியபின் இந்நீரை விட்டுக் கழுவ வீக்கங் குறையும்.

இலையைச் சமையல் செய்தும், காயை வற்றலிட்டு வறுத்தும் உண்பது நாட்டினர் வழக்கம்.

---

## விளா (மரம்)—Viḷa(maram).

**வே - பெ.—கடிப்பகை, கபித்தம், விளவு, வெள்ளில்.**

**Feronia Elephantum.**

**Eng. Wood-apple (tree).**

| | | |
|---|---|---|
| **Tel.** | Velaga | వెలగ. |
| **Mal.** | Vilàv | വിളാവ്. |
| **Kan.** | Bælada | ಬೇಲದ (ಹಣ್ಣು.) |
| **Sans.** | Kapitha | कपित्थः |
| **Hind.** | Dharkhth-Kaveet | * درخت کویت |

இம்மரம் இந்தியா முற்றிலும் பயிராகும். இதன் பழத்திற்காகவே வீடுகளையடுத்த விடங்களிலும் தோட்டங்களிலும் வைத்து வளர்க்கப்படுகிறது.

ப - உ.—இலை, காய், பழம், பழத்தின்ஓடு, பட்டை, பிசின்.

**சுவை.**

**இலை.**
துவர்ப்பு (வாசனையுடன்) விறுவிறுப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**காய்.**
துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பழம்.**
இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை.**
மணமூட்டி - Aromatic.
அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**காய்.**
துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**பழம்.**
மணமூட்டி - Aromatic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

**பிசின்.**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.

**இலை.**

**குணம்.**—இலைக்குத் தீபனமுண்டாகும்; அகட்டுவாயு நீங்கும்.

**மரம்.**

இதற்கு இருமல், இரைப்பு, கதித்த அரோகசம், சொல்லர்கரியதாகம், தபித்தலைச் செய்கின்ற பித்தகபரோகம் ஆகியவைகள் நீங்கும்.

காச சுவாசங் கதித்த அருசிமுதற்
பேசரிய தாகமிவை பேருங்காண்—வீசு
தபித்தலைச்செய் பித்தந் தரிக்குமோ பூவிற்
கபித்த மரமிருக்குங் கால். (அ - கு.)

**காய்,**

பேதி, சீதபேதி இவை போம்.

**பழம்.**

சுவாசகாசம், கபாதிக்கம், பித்ததாகம் இவைகளைப் போக்கும். உடலுக்குச் சுகத்தையும், நல்லபசியையுமுண்டாக்கும்.

எப்போதும் மெய்க்கிதமாம் ஈளையிரு மல்கபமும்
வெப்பாருந் தாகமும்போம் மெய்ப்பசியாம்—இப்புவியில்
என்றாகி லுங்கனிமேல் இச்சைவைத்துத் தின்னவெண்ணித்
தின்றால் விளாங்கனியைத் தின். (அ - கு.)

**பட்டை.**

பித்த சம்பந்தமான அரோசகம், வாந்தி முதலியவற்றைப் போக்கும்.

**பிசின்.**

சுத்திசெய்த விளாம்பிசினைச் சூரணம், மாத்திரை முதலிய மருந்துருபமாகச்செய்து உண்டால், நீடித்த அதிசாரம், புணர்ச்சியால் வந்த வெள்ளை, அசிர்க்குரோகம், வெகு மூத்திரம் ஆகிய இவை நீங்கும்.

நல்ல விளாம்பிசினை நற்பாகஞ் செய்தருந்தத்
தொல்லையதி சாரந் தொலைவதொன்றே—மெல்லியரால்
வந்த வெள்ளை தன்னுடனே மாதர் பெரும்பாடும்
உந்துநீர்ப் போக்கும்போம் உன். (அ - கு.)

**வ - கு.**—கொழுந்திலை ரசத்தை பாலுடனாவது தயிருடனாவது சேர்த்துக் கற்கண்டுப் பொடிகலந்து உட்கொள்ள பித்த சம்பந்தமான நோய்கள் நீங்கும்.

கொழுந்தைக் கஷாயமிட்டுக் கொடுக்க வயிற்றில் வாயு தங்கியுண்டாகும் கோளாறுகள் நீங்கி, தீபனமுண்டாகும்.

கொழுந்தின் ரசத்தை மேலுக்குத் தடவப் பித்தத்தாலுண்டாகும் கொப்புளங்கள், கோடைக்காலத்திலுண்டாகும் வியர்வைக்குரு நீங்கும்.

காயை ஓடு நீக்கி தனித்தேனும், வில்வப்பழத்தோடு சேர்த்தேனும் பேதி, சீதபேதி யுள்ளவர்களுக்குக் கொடுக்க நன்மை யுண்டாகும்.

காயைப் பச்சடி செய்து சாப்பிடுவது இந்தியர்களின் வழக்கம். இதனால் வாய்ப்புண், உள்ளழலை மாறும்.

பட்டைச் சூரணமும், கஷாயமும், அரோசகம், வாந்திகளைப் போக்கும்.

பழத்தின் ஓட்டை நீக்கிப் பழத்தை மாத்திரம் சாப்பிட வாய் நீர்ஊறல், தொண்டைப்புண், பல்லீற்றுப் புண்கள் குணப்படும். பசித்தீபனமுண்டாகும்.

பழச் சதையுடன் திப்பிலிச் சூரணங் கூட்டி கடினசுவாசம், விக்கல் இவைகள் குணப்படக் கொடுக்கலாம்.

இதைப் பித்தத்தாற் பிறந்த பாண்டு, காமாலை, சோபை ரோகங்களுக்குச் செய்யும் இலேகியங்களிற் சேர்க்கலாம். (போகர்—700).

இப்பழத்தின் மணப்பாகு பித்தரோகங்களைப் போக்கும். (சித்தர் உறை விளக்கம்).

ஓட்டுடன் ஒரு பழத்தை யரைத்து அதில் சிறிதும் சேதப்படாமல் கொடுத்துவர இம்மருந்து தோடம் முறியும்.

ஒரு துண்டு பிசினை வாயிலிட்டு அடக்கி அதனினின்று உண்டாகும் ரசத்தை விழுங்கிக் கொண்டிருந்தால் வரட்டிருமல், நெஞ்செரிவு நீங்கும் ; அல்லது பிசின் பங்கு 4 எடுத்து 60 பங்கு நீரிற் சேர்த்து அடிக்கடி கலக்கிக் கொண்டுவந்து பிசின் நன்றாய்க் கரைந்து நீரிற் சேர்ந்த பிறகு, சீலையில் வடிகட்டி ½—1¾ பலம் வீதம் தினம் 2, 3 முறை கொடுக்க, மேற்கண்ட நோய்கள் தீரும்.

பிசினை நன்றாயுலர்த்திச் சூரணஞ்செய்து தேனில் குழைத்து அல்லது எருமைத்தயிரில் கலந்து கொடுக்க, சீதபேதி அசீரணபேதி நீங்கும் .

**விளாம்பிசின்ஒட்டுளருவைக்கு** விரணம் ஆறும். **விளாம்பிசின் மாத்திரைக்கு**, தாகம், மேகசலக்கழிச்சல், உட்காய்ச்சல் விலகும். (சித்தர் உறை விளக்கம்).

---

## விஷமூங்கில்—Visha-múnkil.

**Crinum Asiaticum.**

**Eng. Poison bulbe,**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Kesari chettu** కేసరి చెట్టు. | **Sans.** | **Visha-Mandala** विषमण्डल: |
| **Mal.** | **Visha-mula** വിഷമൂല. | | |
| **Kan.** | **Visha-moonguli** ವಿಷಮೂಂಗುಲಿ. | **Hind.** | **Badakáuvar** * بڑاکوار |

இச்செடி வங்காளம், இலங்கை, கொச்சின்-சைனு, மாலுக்கா, கொங்கணம் முதலிய தேசங்களில் ஈரமான பள்ளத்தாக்குகளிலமைந்த தோட்டங்களிலும், சில நகரங்களிலுள்ள தோட்டங்களிலும் வைத்துப் பயிராக்கப்படுகிறது.

**ப - உ.**—இலை, பச்சைக் கிழங்கு.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**
வாந்தியுண்டாக்கி - வமனகாரி - **Emetic.**

**குணம்.**—விஷமூங்கிலினிலையால் இராசப்பிளவை, நகச்சுற்று, பெரும் படுவன், சோபை, சிலேத்துமகர்ணசூலை முதலிய நோய்கள் போம்.

பிளவையுகிர்ச் சுற்று பெரும்படுவன் வீக்கம்
அளவில்நோய் காதெழுச்சி ஆற்றும்—அளவையுரு
தோங்கி வளர்ந்தமூலை யோவியமே! நீண்டவிஷ
மூங்கில்இலை நன்மூலி முன். (அ.கு.)

**வ - கு.**—இலையின் மீது சிற்றாமணக்கு நெய்தடவி வதக்கி யேனும் அல்லது இலையை இடித்து மேற்படி நெய்விட்டு வதக்கியேனும் நகச்சுற்றின் மீது வைத்துக் கட்ட நோய் குறைந்து சுகமாகும். இதையே கை கால் விரல் நுனிகளில் உண்டாகும் தாபிதங்களுக்கும் வைத்துக் கட்டலாம் ; இதையே மூட்டிலுண்டாகும் வீக்கங்களுக்கும் சுளுக்குகளுக்கும் ஒற்றிடலாம்.

இலையை வதக்கிச் சாறு பிழிந்து கொஞ்சம் உப்பு சேர்த்துக் காது வலிக்கு விடலாம்.

சாறு பிழிந்து சமபாகம் எண்ணெய் கூட்டி தைலமாக்கிக் காது நோய்க்கு விடலாம்.

இலையைச் சிதைத்து மாட்டுத் தொழுவங்களில் வைக்கச் சில புழு, பூச்சிகளால் மாடுகளுக்குண்டாகும் நோயை வரவொட்டாமற்படித் தடுக்கலாம்.

இலையை யுலர்த்திப் புகைக்க கொசுக்கள் அணுகா.

கிழங்கை நசுக்கிக் கீல்வாதங்களுக்குக் கட்டலாம். ஆனால், அவ்விடம் சிவக்கும்.

இதன் கிழங்கை மூகர மயக்கத்தை யுண்டுபண்ணும்.

---

## விஷ்ணுகிராந்தி—Vishnukiranthi.

**வே - பெ.—அபராசி, பராசிதம், விட்டுணுக்கிராந்தி.**

**Evolvulus Alsinoides.**

**Tel.** Vishnukranti విష్ణుక్రాంతి.

**Mal.** Visnukranti വിഷ്ണുക്രാന്തി.

**Kan.** Visnukranti ವಿಷ್ಣು ಕ್ರಾಂತಿ.

**Sans.** Vishnukranta विष्णुक्रान्ता; Vishnugandhi विष्णुगन्धी

**Hind.** Shankapushti

* سانکاپوشتی

இது இந்தியா, இலங்கை முற்றிலும் பயிராகும் பூண்டு.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, சிறுகாரம், **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி – Diaphoretic.
- உரமாக்கி – பலகாரி – Tonic.
- உடற்றேற்றி – வ்யதாபேதகாரி – Alterative.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- புழுக்கொல்லி – க்ருமிநாசநி – Anthelmintic.
- தாபமகற்றி – உக்ரரோகசமநகாரி – Antiphlogistic,
- கோழையகற்றி – கபஹரகாரி – Expectorant.

**குணம்.**—விஷ்ணுகிராந்திக்குச் சந்தத சுரத்தாற் பிறந்த கபம், உட்சூடு, கோழை, இருமல், வாதசம்பவப்பிணி ஆகியவை நீங்கும்.

செய்யமா லின்கிராந்தி தீராத வல்லசுரத்
தைய மறுக்கும் அனல்தணிக்கும்—வெய்யகப
காச இருமலையுங் கட்டறுக்கும் வாதத்தால்
ஊசலா டும்பிணிபோக் கும். (அ.கு.)

**வ - கு.**—இப்பூண்டின் சமூலத்தைக் கஷாயமிட்டுக் கொடுத்துவர மேற்கண்ட நோய்கள் தீருவதுடன் சீதபேதியும் நீங்கும்.

இப்பூண்டுடன் சீரகம் சேர்த்தரைத்துப் பாலில் கலக்கி யுட்கொள்ள சுரம், நரம்புத் தளர்ச்சி, ஞாபகமறதி, மேகம், கண்டமாலை முதலியன நீங்கும்.

இப்பூண்டோடு துளசியும் சேர்த்துக் கஷாயமிட்டு உண்டுவர அசீரணம் அல்லது அசீரணபேதியுடன் கூடிய சுரம் நீங்கும்.

இதற்கு மால்தேவி சிவக்கும்.

## பெரியலவங்கப்பட்டை—Peria-lavangap - pattai.

Cassiá Lignoea

Eng.—Cinnamon bark or Cassiá bark.

| | |
|---|---|
| Tel. Moddhu - Lavangapatta మొద్దులవంగపట్ట. | Kan. Dhodda Darchini ದೊಡ್ಡದಾಲ್ಚಿನ್ನಿ. |
| | Hind. Taj. * تج |
| Dalchina chakka దాల్చినచెక్క. | Duk. Moti - Dar - Chini * موٹی دار چینی. |
| Mal. Elavangappattai എലവംഗപ്പട്ട്. | Sans. Lavunga twak लवङ्गत्वक् |

ப - இ.—இது சீனு தேசத்திலிருந்து வருகிற சரக்கு. தளமாயிருக்கும், வாசனையும் காரமும் குறைந்திருக்கும் சிறிது கைக்கும். திருவாங்கூர், மலையாளம். இத் தேசங்களிலும் உற்பத்தியாவதாகத் தெரிகிறது. இதுவும் ஒரு சாதி லவங்கப்பட்டைதான்.

மேற் கூறிய இடங்களில் உற்பத்தியாகின்ற பட்டைக்கு கருவாப்பட்டைக்கிருக்கின்ற குணங்கள் சற்றேறக்குறைய விருக்கும். ஆகையால் கருவாப் பட்டையை உபயோகிக்கின்ற விதமாகவே இதையும் உபயோகிக்கலாம்.

இப்பட்டை இருமல், அதிசாரம், சீதபேதி, வயிற்றுக்கடுப்பு இவைகட்கு அனுகூலப்படுகிறது.

---

## பேய் அத்தி—Pé-atti.

**வே. - பெ.—பிரமதண்டி.**

Ficus Hispida

| | |
|---|---|
| Tel. Verri - atti వెఱ్ఱిఅత్తి. | Sans. Káko - dumbar काकोदुम्बर |
| Mal. Péyithi - പേയി അത്തി. | |
| Kan. Adavi - atti ಅಡವಿ ಅತ್ತಿ. | Arb. Tine - Bahri * طین بحری. |

இது இந்தியா, மலாக்கா, சிலோன் முதலிய தேசங்களின் மலைப் பிரதேசங்களிலும், காடுகளிலும், நாடுகளிலும் பயிராகும் நடுத்தர வுயரமுடைய ஒருவகை அத்திமரம். இதன் பட்டை கனமும், சாம்பல் நிறமுமுடையது. இன் இலை அத்தியிலையைவிட பெரிதும், வட்டமாயும் அதிக பசுமையுமாயிருப்பதுமன்றி மேற்புறம் சுரசுரப்பாயுமிருக்கும். இலையைக் கிள்ளினால் அதினின்றும் பால் வடியும். இதன் காய் மரத்தோடு பற்றி யிருப்பதுடன் சுனையும் பொருந்தியிருக்கும்.

ப - உ.—பழம், விதை, பால் பட்டை.

**சுவை.**—மேற் கூறிய உறுப்புகள்யாவும், கைப்பு, **வீரியம்** - வெப்பம் **பிரிவு** — கார்ப்பு.

**செய்கை.**

- **பழம்,** பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தநி - Lactagogue.
- **பால்,** நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Germicide.
- **பழம், விதை,** வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
- **பட்டை,** முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Amtiperiodic.

**வ - கு.—பழம்,** இதை மாதர்கள் உட்கொள்ளப் பாலைச் சுரப்பிக்கும். கருவை வளர்ப்பிக்கும்.

**பழத்தை** உலர்த்திச் சூரணஞ் செய்து நீர்விட்டுப் புற்கைசெய்து கட்ட அரையாப்புக்கட்டி அழுந்தியேனும், உடைந்தேனும் சுகத்தைத் தரும்.

**பால்.**—இதைப்பூச பாதவெடிப்பு, மேகப்புடை, குட்டரோகத்தடிப்பு, முளைவிரணம் இவைகள் விலகும்.

வெடிப்பை மேகப்புடையை வீறிவரு குட்டத்
தடிப்பை முளைரணத்தைச் காடும்—படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே ! எங்குஞ் சுணைகணிறை
பன்னமுறு பேயத்திப் பால். (அ.கு.)

**விதை.**—இதை உலர்த்தி, புட்டியில் சேதப்படாமலும், ஓதமில்லாத விடத்திலும் வைத்து வேண்டும்போது ஒரு வராகனெடை கொடுக்க வாந்தியாகும்.

**பட்டை.**—இதை யிடித்துப் பொடியாக்கி $1\frac{1}{4}$ முதல் 2 வராகனெடை கொடுக்கப் பேதியாகும். $\frac{1}{2}$ முதல் 1 வராகனெடை யளவு கொடுக்க முறைக்காய்ச்சலைப் போக்கும்.

---

## வெங்காயம்—Vengayam.

**வே - பெ.—ஈருள்ளி, உள்ளி, ஈரவுள்ளி, ஈரவெங்காயம், காயம், சுக்கிரந்தம், நிச்சியம், பலாண்டு.**

Allium Cepa.

Eng.—Onion.

| | |
|---|---|
| Tal. Erra - Gadda ఎర్రగడ్డ. | Kan. Nirulli ನೀರುಳ್ಳಿ. |
| Ulligadda ఉల్లిగడ్డ. | Sans. Palandu पलाण्डुः |
| Mal. Erulli ഈരുള്ളി. | Hind. Piyaz * پیاز |

இது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகிறது.

இதன் இதழ் தாளெனப் பெயர் பெறும். இத் தாட்களும் கிழங்கும் பதார்த்தவகைகளிலும், கிழங்கும் விதையும் மருந்து வகைகளிலும் பயன்படும்.

**ப - உ.**—பூ. தாள், கிழங்கு, விதை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

### பூ

**குணம்.**—வெங்காயப் பூ சாமானிய வாத முதலிய மூன்று குன்ம ரோகங்களையும், குடலைப்பற்றிய வாதநோயையும் போக்கும்.

வயிற்றுச் சிறுநோயை வாத வலியை
உயித்தியஞ் செய்யாமல் ஓட்டும்—குயிற்றுத
சிங்காரக் கொங்கைச் செழுந்திருவே ! நாட்டிலுறை
வெங்காயப் பூனவே விள். (அ.கு.)

### கிழங்கு.

வெங்காயத்தால் தேக உஷ்ணம், மூலம், சிரங்கு, இரத்தபித்த நோய், பித்தஅக்கரம், விடாதாகம், உஷ்ணபேதி இவை நீங்கும். ஆனால் அக்னிமந்தம், சந்நிபாதம், இருமல், வயிற்றுப்பிசம் விருத்தியாகும்.

வெப்பமூ லங்கிரந்தி வீறுரத்த பித்தமுடன்
செப்புநா அக்கரந்தீ ராத்தாகம்—வெப்புக்
கடுப்பறும்மந் தஞ்சந்நி காசம்வயிற் றுப்பல்
தடிப்பேறும் வெங்காயத் தால். (அ - கு.)

### வித்து.

வெங்காய வித்து குன்மத்தைப் போக்கும். தாதுபுஷ்டியை யுண்டாக்கும்.

"வெங்காய வித்து குன்மம் வீட்டும்." (அ - கு.)

### பூ

வ - கு.—பூவைச் சமைத்தேனும், கஷாயமிட்டேனும், உலர்த்திச் சூரணஞ் செய்தேனும் உபயோகிக்க, பூவின் கீழ்க்கண்ட குணங்களைத் தரும். பூவைக் கசக்கி அதன் இரசத்தைக் கண்களில்விட கண் மங்கல் நீங்கும்.

### கிழங்கு.

பச்சைக் கிழங்கைத் தின்ன பெண்களுக்கு மாதாந்தர ருதுகால உதிரச்சிக்கலை அறுக்கும். நீரைப் பெருக்கும்.

வெங்காயத்துடன் 2—3 மிளகு சேர்த்துண்ண நளிர்ச்சுரம் தணியும்.

வெங்காயத்தை உப்புடன் கூட்டியுண்ண வயிற்றுவலி, இரத்த பித்த ரோகம் சாந்தமாகும். கஷாயமிட்டுக் குடிக்க நீரெரிச்சல், நீர்க்கடுப்பு, நீர்க்கட்டு குணமாகும். நெய்விட்டு வதக்கியுண்ண உடலனல் தணியும். கும்பிச் சாம்பலில் வேகவிட் டரைத்துக் களியாக் கட்டிகள் மீது வைத்துக் கட்ட கட்டியைப் பழுக்கவைத்து உடைக்கும்.

கிழங்கின் சாற்றை முகர மூர்ச்சையும், சூதிகாசந்நியும் சாந்தப்படும். காதில் 2—3 துளிவிட காதுநோயைத் தணிக்கும். மேலில் பூச பூச்சிக் கடிகள், தேள் கொட்டல் இவைகளாலுண்டாகும் வேதனை, சருமப்புடை முதலிய நோய்கள் குணமாகும். காடியுடன் கலந்து உட்கொள்ளத் தொண்டைப்புண் மாறும். காடியுடன் சமபாகங் கூட்டிக் காய்ச்சிக் கொடுக்க காமாலை, அசீரணவயிற்றுவலி, பிலீகவிருத்தி நீங்கும். கடுகெண்ணெயுடன் சமபாகம் கலந்து பூசக் கீல்வாதம் குணப்படும். தனிச் சாற்றை உட்கொள்ளப் புகையிலை நஞ்சு மாறும்.

### விதை.

விதையை யுலர்த்திச் சூரணஞ்செய்து சருக்கரையுடன் கலந்து வேளைக்கு $\frac{1}{2}$—1 விராகனெடை வீதம் தினம் 2—3 தடவைகொள்ள, குன்மநோய் தணியும். தாதுபுஷ்டி யுண்டாகும்.

வித்து தாதுபுஷ்டிலேகியம் பலவற்றில் சேரும்.

### தாள்.

இதை மற்றப் பதார்த்தங்களுடன் சேர்த்துச் சமைப்பார்கள். இதனால் தேக உஷ்ணம் தாகம், மூலச்சூடு, முதலிய வெப்பநோய்கள் குறையும்.

## வெட்சி—Vetchi.

**வே - பெ.—குல்லை, சிந்தூரம், செச்சை, சேதாரம்.**

Ixora Coccinea.

**Eng.—Jungle Geranium.**

| | | | | |
|---|---|---|---|---|
| **Mal.** Thechhi தெச்சி. | **Sans.** | Bindhuka | बिन्दुकः |
| **Kan.** Kepala ಕೆಪಲ. | | Pathalee | पाताळी |
| | **Hind.** | Rajana | * رجنا |
| | | Rangan | * رنگن |

இது சற்றேறக்குறைய இந்தியாவின் பல பாகங்களிலும் பயிராகும். இதில் செம்மை, வெண்மை இனமுண்டு. குணத்தில் பெரும்பாலும் ஒக்கும்.

(The word " Ixora" is derived from "Iswara " Signifying God Siva as the plant is sacred to Siva.)

**ப - உ.**—பூ, வேர்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- குடலழுகலகற்றி - கோஷ்ட க்ஷீணரோதி - Intestinal antiseptic.
- பித்தநீர்ப்பெருக்கி - பித்தகாரி - Cholagogue.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

### பூ.

**குணம்.**—மேகச்சூடு, சுரரோகம், தாகம், சரீரஆயாசம் ஆகிய இவைகளைக் கெடுக்கும். மணமுள்ளது.

வெட்சிப்பூ மேகஅழல் விட்டோட்டும் வாசனையாம்
அட்சிவழி யாயுயிர்கொள் ளாரணங்கே—எச்சுஞ்
சுரமுடனே தாகந் தொலைக்கும் உலகில்
விரைவாய் இளைப்பகற்றும் விள். (அ.கு.)

**வ - கு.**—இதன் பூவை யரைத்து வெள்ளாட்டுப் பால் அல்லது மோருடன் கலந்து வெள்ளை, குசுமரோகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

பூவை நெய்விட்டு வதக்கி இரண்டு தோலா எடை எடுத்துச் சீரகம், சிறுநாகப்பூ வகைக்கு 8 குன்றி கூட்டி யரைத்து வெண்ணெய், கற்கண்டு சேர்த்து வழங்கச் சீதபேதி குணப்படும். தாகம், சரீரஆயாசம், மேகச் சூடு தணியும்.

பூவைக் கஷாயமிட்டு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் தினந் 2—3 முறை கொள்ள, சுரம் தணியும்.

### வேர்.

வேர்ப்பட்டையைச் சிறிது திப்பிலி கூட்டி அரைத்து $\frac{1}{2}$—$\frac{3}{4}$ வராகனெடை வீதம் கொடுக்கப் பேதி, சீதபேதியை நன்றாய்க் கண்டிக்கும். சுரம், வெட்டை இவைகளுக்கு இதை உபயோகிக்கலாம்.

வேர்ப்பட்டையை உலர்த்திச் சூரணஞ் செய்து நீர்விட்டுக் குழப்பி ஒரு துல்லிய சீலைத்துண்டில் தடவிப் புண்கள், நாட்பட்ட விரணங்களின் மீது போட்டுவர அவைகள் எளிதில் ஆறும்.

---

## வெட்பாலை—Vetpàlai.

**வே - பெ.—கிரிமல்லிகை, குடசம், வற்சம்.**

**Wrightia tinctoria.**

**Eng.—Sweet Indrajao.**

இதன் விவரமறிய குடசப்பாலையின் கீழ்க்கண்ட குறிப்பைப் பார்க்க.

**Tel** Kodisha కొడిశ.
**Mal.** Kutakappala കൊടകപ്പാല.
**Sans.** Indrayava इन्द्रयव:

**Hind.** Mitta Indrajava
میٹھا اندر جو *
**Duk.** Inderjow sheereen
اندر جو شیرین *

ப - உ.—இலை, பட்டை, வித்து (அரிசி).

**இலை, பட்டை.**

**சுவை.**— துவர்ப்பு, சிறு கைப்பு. **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**வித்து.**

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**பட்டை.**

**செய்கை.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**வித்து.**
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**மரம்.**

**குணம்.**—அக்கினிக் குணத்தையுடைய வெட்பாலை மரமானது வாத வலியையும், திரிதோட கோபத்தையும் நீக்கும்.

அக்கினியை வைத்திருக்கு மார்ந்தவா தம்போக்குந்
திக்குள்திரி தோடத்தைத் தீர்த்துவிடும்—சொக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே!
வெட்பாலை நன்மருந்தாம் விள். (அ - கு.)

**வெட்பாலை அரிசி,**

இதற்குப் பைத்திய வாத தொந்தம், கடுவன், குடல் விருத்தி ரோகம், வயிற்றுப் பொருமல் இவைகளும் பேதி, சீதபேதிகளும் தீரும்.

வெட்பாலை தன்அரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத—உப்பிசந்தைக்
காணும லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணுர் முலையாய் புகல். (அ - கு.)

**இலை.**

**வ - கு.**—இலையை மென்று சுவைக்கப் பல்வலி நீங்கும்.

**பட்டை.**

பட்டையுடன் சுரத்தைப் போக்கக் கூடிய கைப்புப் பொருள்களைச் சேர்த்துக் குடிநீரிட்டு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் கொடுக்கக் குடற் சம்பந்தமான

நோய்கள் தீருவதுடன், சுர முதலிய பிணிகளுக்குப் பின் காணும் தேக இளைப்பை நீக்கி, ஜடராக்கினியை விருத்திசெய்து உடற்குப் பலத்தைத் தரும்.

**வித்து.**

இதைச் சூரணம் செய்தேனும், கஷாயமிட்டேனும் வழங்க வயிற்றுப் பொருமல் முதலிய நோய்களைப் போக்கும்.

---

## வெண்டைக்காய்—Vendaik-kài.

**வே – பெ.—வெண்டுக்காய்.**

**Hibiscus Esculentus.**

**Eng.—Edible Hibiscus.**

**Tel.** Benda - Chettu బెండ చెట్టు.
**Mal.** Venda വെണ്ട.
**Kan.** Bende ಬೆಂಡೆ.
**Sans.** Goiihwaka गोजिह्वकम्
**Hind.** Bhindi * بھنڈی

இது இந்தியாவின் வெப்பமான பாகங்களில்பயிராகும் சிறு சாதிச் செடி. 2 முதல் 2½ அடி உயரமுள்ளது. இலை அடியில் அகண்டு நுனிப்புறம் குறுகியிருக்கும். இலைக்கும் காய்க்கும் சுனையுண்டு. பூ ஒற்றை அடுக்கு இதழுள்ளது. நிறம் - மஞ்சள். பூவின் மத்தியில் செந்நிறமுண்டு.

**ப - உ.**—இலை, காய், விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—இதன் காய்க்குக் கிரகணி, அதிசாரம், பேதி, சீத ரத்தாதி சாரம், கபவாதம் உண்டாகும். ஆனால், உண்பதற்கு உருசியாயிருக்கும்.

கண்ட கிராணி கடிய அதிசாரம்
விண்டவெண் சீதரத்தம் மேவுங்காண்—ஒண்டொடியே!
வண்டற்காம் வெய்யகப வாதமிகும் வாய்க்குணவாம்
வெண்டுக்காய் உண்பார்க்கு விள்.

ஆயினும் இது இருமல், நீர்க்கடுப்பு, பிரமேகம், விரணங்கள், கட்டிகள், சீதபேதி இவைகட்கு வழங்கப்பட்டு வருகிறது.

**வ - கு.**—வெண்டைப்பிஞ்சைத் துண்டு துண்டாக வெட்டி மூன்று அல்லது நாலு பல மெடுத்து அரைப்படி நீரிற் சேர்த்து உழக்காகக் குறுக்கி வடித்துச் சருக்கரை ஒருவராகனெடை கூட்டிப் பிரமேகம், இருமல், நீர்க்கடுப்பு, சீதபேதி இவைகளுக்கு ½—1 ஆழாக்கு வீதம் 3—4 மணிக்கொருமுறையாகக் கொடுத்துவரலாம்.

இக் கஷாயத்தின் ஆவியைப் பிடித்துவர, இருமல், தொண்டைப்புண், தொண்டைக்கம்மல், தொண்டை எரிச்சல் தீரும்.

இளங்காயையாவது, இலையையாவது நன்றாக நசுக்கி வைத்துக் கட்ட, விரணங்கள், கட்டிகள் சாந்தப்படும்.

காய் கிடைக்காத சமயத்தில் இதன் விதையை உபயோகித்துக் கொள்ள லாம்.

---

## வெந்தயம்—Vendayam.

**வே - பெ.**—மெந்தியம், மேதி, வெந்நை,

Trigonella Foenum.

Eng.—Fœnugreek.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Menthulu | మెంతులు. | Sans. | Methi | मेथी |
| Mal. | Uluva | ഉലുവ. | Hind. | Methi | मेथिका |
| | Venthyam | വെന്തയം. | Arab. | Hulba | *حلبه. |
| | Menthe gida | ಮೆಂತೆಗಿಡ. | Pers. | Shamlita | *شمليته |

இது கீரை வகுப்பிற் சேர்ந்தது. விசேடமாக காஸ்மீரம், பஞ்சாப், பம்பாய், சென்னை இராஜதானிகளில் விளையும். சென்னை மாகாணத்தில் வீட்டுஉபயோகத்திற்காக வீட்டைச் சார்ந்த காலி மனைகளில் உற்பத்தியாக்குவார்கள்.

**ப - உ.**—இலை, வித்து.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - கார்ப்பு.

### இலை.

**செய்கை.**

- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.

**வித்து.**

- சிறுநீர்ப்பெருக்கி - மூத்திரவர்த்தநி - Diuretic.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- வறட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

### இலை (கீரை).

**குணம்.**—வெந்தயக் கீரையால் வயிற்றுப்பிசம், அக்னிமாந்தம், வாத கோபம், சிலேத்தும தோடம், இருமல், அருசி ஆகிய இவை போம்.

பொருமல் மந்தம் வாயுகபம் போராடுகின்ற
இருமல் அருசியிவை ஏகுந்—தரையில்
நீதி லுயர்நமனைச் சீறும் விழியணங்கே!
கோதில்வெந்த யக்கீரை கொள். (அ - கு.)

### வித்து (வெந்தயம்).

பிள்ளை கணக் காய்ச்சல், பேதி, சீதக்கழிச்சல், பிரமேகம், தேக உஷ்ணம், இரத்த பித்தம், கணரோகங்கள், அத்திசுரம், தாகம், கொடிய இருமல், கயம் (க்ஷயம்) இவைகளை விலக்கும். போகத்தை விளைவிக்கும்.

பிள்ளை கணக்காய்ச்சல் பேதிசீ தக்கழிச்சல்
தொள்ளைசெய்யும் மேகம் தொலையுங்காண்—உள்ளபடி
வெச்சென்ற மேனி மிகவுங் குளிர்ச்சியதாம்
அச்சம்இலை வெந்தயத்திற் காய்.

பித்தஉதி ரம்போகும் பேராக் கணங்களும்போம்
அத்திசுரந் தாகம் அகலுங்காண்—தத்தும்அதி
வேக இருமலொடு வீறு கயம்தணியும்
போகமுறும் வெந்தயத்தைப் போற்று. (அ.கு.)

## இலை (கீரை).

**வ - கு.**—இலையை யரைத்துக் கிளறி உபயோகிக்க உள் அல்லது வெளிப் புறத்திற் காணும் **வீக்கமு**ம், சுட்ட புண்களும் குணப்படும்.

இக்கீரையுடன் கோழிமுட்டை, தேங்காய்ப்பால், சேர்த்து நெய்யிற் பாகஞ்செய்து ஆகாரத்துடன் கொள்ள இடுப்புவலி தீரும்.

இதை வேகவைத்து தேன் விட்டுக் கடைந்து உட்கொள்ள மல சுத்தியாகும். குடலைச் சுத்தி செய்யும். மார்புவலி, இருமல், மூலரோகம், உட்புண் இவைகள் போம்.

இத்துடன் சீமைப்புளி, அத்திப்பழம், திராட்சை, சமவெடை சேர்த்துக் கஷாயமிட்டுத் தேன் சிறிது கலந்து சாப்பிட மார்புவலி, மூச்சடைப்பு போம்.

இத்துடன் மயிர்சிக்கிப்பூண்டு சேர்த்துக் கஷாயமிட்டு இடுப்பின்மீது விட்டுக்கழுவ பிரசவ வேதனை சாந்தப்படும். வயிற்றில் மரித்த பிண்டமும் அழுக்கும் சீக்கிரத்தில் வெளிப்படும்.

இத்துடன் சீமை அத்திப்பழம் சேர்த்தரைத்துக் கட்டிகளின்மீது பற்றிட அவைகள் உடையும். புடைகள் மீது பூச அவைகள் மாறும்.

கீரையை வேகவைத்து வெண்ணெயிட்டு வதக்கி உட்கொள்ள பித்த மயக்கந்தீரும்.

இத்துடன் வாதுமைப்பருப்பு, கசகசா, கோதுமைநொய், நெய், பால், சர்க்கரை, சேர்த்து இலேகியங் கிண்டி உட்கொள்ளத் தேக புஷ்டியும் வன்மையு முண்டாகும். இடுப்பு வலி தீரும்.

## வித்து (வெந்தயம்).

இதை வறுத்துப் பொடிசெய்து ஊறல் கஷாயஞ் செய்து உட்கொள்ள வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், அத்திசுரம், உட்சூடு, பிரமேகம், சீதக் கழிச்சல் முதலியவைகள் போகும்.

வெந்தயம் பலம் ½, 2 ஆழாக்கு பச்சையரிசியுடன் சேர்த்துப் பொங்கி உப்பிட்டுச் சாப்பிட இரத்தவிருத்தியுண்டாகும்.

கஞ்சியில் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்கப் பால் சுரக்கும்.

அரைத்துத் தலையிலப்பி ஊறவைத்துத் தலை முழுகிவர மயிர் வளரும். மயிர் உதிர்ந்து போவதைத் தடுக்கும்.

இதை மாவாக்கிக் களி கிண்டிக் கட்ட, சருமப்புண், பூச்சி ரோகங்களைப் போக்கும்.

இதை வறுத்து, இத்துடன் சமபாகம் வறுத்த கோதுமையைக் கூட்டிக் காப்பிக்குப் பதிலாக உபயோகிக்கலாம். இதனால் உடல் வெப்பம் நீங்கும்.

**வெந்தயலேகியம் :**—இதனால் வெந்தயத்தின் கீழ்க்கண்ட பல நோய்கள் போகும். (இதன் செய் முறையைச் சித்தச் உறை விளக்கத்திற் காண்க).

வெந்தயம், கடுகு, பெருங்காயம், கறிமஞ்சள், இவைகளைச் சமபாகம் எடுத்து, நெய்விட்டு வறுத்துப் பொடிசெய்து, சோற்றுடன் கலந்துண்ண, வயிற்றுவலி, பொருமல், உதிரச்சிக்கல், வலப்பாட்டு - இடப்பாட்டீரல் வீக்கங்கள் நாளுக்குநாள் சாந்தப்படும்.

மிளகாய், கடுகு, வெந்தயம், துவரம்பருப்பு, கறிவேப்பிலை, காயம், இவைகளைத் தக்க அளவு எடுத்து நெய் விட்டு வறுத்து, **புளிக்குழம்பை** இதில் கொட்டி உப்புச்சேர்த்துச் சட்டி மூடி, அரைப்பாகம் சுண்டியபின் இறக்கிச் சூட்டுடன் உபயோகிக்க, வெப்பத்தால் நேரிடும் சிற்சிலப் பிணிகள் தணியும்.

**குறிப்பு.**—$\frac{1}{4}$-1 விராகனெடை வீதம் கொள்ளலாம். இதைப் பித்ததேகிகளுக்கு உபயோகிக்கும்போது அளவுமீறின் மந்தம், தலைவலி, மயக்கமுண்டாகும்.

இதை அரைத்துத் திரியாகச்செய்து யோனிவாயில்வைக்க குசுமரோகம் தீரும்.

---

## வெள்ளரிக்காய்—Vellarikkai.

**உருவாரம், ஊர்வாருகம், கற்கடி, மிருந்து**

**Cucumis Sativus,**

**Eng.—Common Cucumber**

| | | |
|---|---|---|
| **Tel.** | Dosakaya | దోసకాయ. |
| **Mal.** | Vellari | വെള്ളരി. |
| **Kan.** | Saute Kayi | ಸೌತೆಕಾಯಿ. |
| **Sans.** | Urvarukam | उर्वारुकम् |
| **Hind.** | Kankri | * ککڑی |

இது ஓர்வகைக்கொடி. இந்தியா முற்றிலும் பயிராகிறது.

**ப - உ.**—இலை, காய், விதை.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Refrigerant.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - **Demulcent.**

**பிஞ்சு, காய், பழம், விதை.**

**குணம்.**—**வெள்ளரிப்பிஞ்சுக்கு** முத்தோடங்களும் நீங்கும். **காயால்** நீர்த்துவாரத்தினவு, நீர்ச்சுருக்கு, கரப்பான் இவை நீங்கும். உண்ணும் மருந்தின் குணம் கெடும். வாதம் விளையும். இதை அன்ன முண்டபின் உண்ணப் பசியுண்டாகும். **பழம்** கபத்தை விருத்தி செய்யும். **வித்தால்** கடுக்கின்ற நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்த்துவார வெடிப்பு, சதையடைப்பு, ^ரமேகம், கிரிச்சரம் இவைகள் போம். நீர்ப்பேதியாகும்.

பிஞ்சுவெள்ள ரிக்காய்க்குப் பேசுதிரி தோடம்போம்
வஞ்சியரே! முற்றியகாய் வாதமுமாம்—நைஞ்சகனி
உண்டாற் சயித்தியமாம் உள்ளிருக்கும் அவ்விதையைக்
கண்டாலும் நீர்இறங்கும் காண்.

**காய்.**

உண்டருந்தத் தீளழும்பும் உண்மருந்தைத் தான்முடுக்கும்
கண்டகரப் பானைக் கடுக்குங்காண்—பண்டிதரே !
உள்ளரிப்பை நீர்க்கடுப்பை ஊரைவிடுத் தோட்டிவிடும்
வெள்ளிரிக்கா யின்குணத்தை விள்.

**வித்து.**

கடுப்பொடுநீர்க் கட்டுவெறுங் கல்லடைப்பு தாரை
வெடிப்பு சதையடைப்பு மேகம்—எடுத்துரைக்கா
உள்ளரிவி என்னும் உறைகிரிச்ச ரம்இவைகள்
வெள்ளரிவி தைக்கேகும் விள். (அ.கு.)

**வ - கு.**—இலையை வேகவைத்து, சீரகத்துடன் கலந்து வறுத்துப் பொடி செய்து வெருகடிப்பிரமாணம் கொள்ளத் தொண்டையிலுண்டாகும் நோய்கள் சாந்தமாகும். சருக்கரையுஞ் சேர்த்துண்ணச் சிறுநீரைப் பெருக்கும்.

ஒரு பலம் விதையை யரைத்து ஆழாக்கு நீரில் கரைத்து வடிகட்டி சருக்கரை சேர்த்துக் கொடுக்க விதையின்கீழ்க்கண்ட நோய்களைப் போக்கும்.

விதை நீரைப்போக்கக்கூடிய—கஷாய சூரணங்களிலும், பலத்தைத் தரக்கூடிய இலேகியங்களிலும் சேரும்.

பிஞ்சு, காய் இவைகளைப் பச்சையாகவே உண்ணலாம். உடல் வெப்ப மாறும். தாகந் தணியும்.

---

## வெள்ளறுகு—Vellarugu.

### Adenema Hissopifolia.

இது உவர்ப்புள்ள விடங்களில் பயிராகும் பூண்டு. இந்தியாவில் வெப்ப முள்ள பாகங்களில் கிடைக்கும்.

**ப - உ.**—சமூலம்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பசித்தீத்தூண்டி - தீபனகாரி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- மலமிளக்கி - மலகாரி - Laxative.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.

**குணம்.**—இதற்குக் குன்மம், வாதப்பிணி, வாதக்குடல்விருத்தி, கீல் பிடிப்பு, நரம்புகளைப்பற்றிய கிரந்தி, தினவு, சிறுசிரங்கு ஆகியவைபோம்.

குன்மமொடு வாய்வு குடல்வாதம் சூலையிவை
சென்மம்விடுத் தோடிச் சிதையுங்காண்—வன்முலையாய் !
உள்ளூறுகி ரந்திசொறி யொட்டியசி ரங்குமறும்
வெள்ளறுகு தன்னை விரும்பு. (அ.கு.)

**வ - கு.**—இதைக் கஷாயமிட்டு மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம் அல்லது இதன் சூரணத்தை வழங்கலாம்.

சமூலத்தையரைத்துத் தினவு, சிறுசிரங்குகளுக்குப் பூசலாம்.

சமூலத்தை எடுத்து சிறிது மிளகும் ஒருதிரிப் பூண்டும் சேர்த்தரைத்துப் பாலில் கலக்கிச் சிழ்ப்பிரமேகத்திற்கு வழங்கலாம்; அல்லது வெண்மிளகுடன் சேர்த்துக் கஷாயமிட்டு வடித்துக் கொஞ்சம் பசுவின் வெண்ணெய் கூட்டி அற்ப வெப்பமிருக்கும் பொழுது உட்கொள்ளலாம்.

**அளவு.**—சூரணம் $\frac{1}{2}$—1 வராகனெடை: கஷயாம் $\frac{1}{4}$—$\frac{1}{2}$ ஆழாக்கு.

---

## வெள்ளிலோத்திரம்—Vellilothram.

**வே - பெ.—காசசங்கை, காயவிலை, தில்லகம், லொத்துகத்தோல், வெள்ளலத்திப்பட்டை.**

**Symplocos Racemosa.**

**Eng.—The Lodh-tree, Lotur-bark.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Lodduga-chettu** లొద్దుగచెట్టు. | **Sans.** | **Lodhram** लोध्रम् : |
| **Mal.** | **Lodhra** ലോധ്ര. | **Hind.** | **Lodhra** लोध्रम् . * لودهرا |
| **Kan.** | **Balaloddugina-mara** ಬಾಲಲೊದ್ದುಗಿನ ಮರ. | **Duk.** | **Lodha Pathane** * لودهے پتھانی |

இது இந்தியாவில் வங்காளத்திலுள்ள தாழ்ந்த மலைப் பிரதேசங்களிலும், மலையாளம், ஆசாம், பர்மா முதலிய இடங்களிலும் பயிராகும் சிறு மரம். வருடமுற்றும் இது பசுமையாகவே யிருக்கும்.

ப - உ.—பட்டை, கட்டை.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- சிறுதுவர்ப்பி - லகுஸங்கோஸனகாரி - Mild Astringent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.
- நச்சரி - விஷநாசநி - Antidote.

**குணம்.**—வெள்ளி லோத்திரத்தினால் விடவிருட்சங்களின் நஞ்சு, எலும்புருக்கி, பெருவயிறு, குறற்கம்மல், வியங்கரோகம், உதாவர்த்தம் இவை தீரும்.

தாவரநஞ் சென்புருக்கி தாழா மகோதரநோய்
கூவவொட் டாத குரற்சாதம்—பூவுலகில்
வெல்லவரி தாய வியங்கமுதா வர்த்தமும்போம்
நல்லவெள்ளி லோத்திரத்தி னால். (அ - கு.)

மேலும், பேதி, சீதபேதி, சோபை, கண்நோய், சுரம், புண்கள், ஈரலைப் பற்றிய பிணிகள், பெரும்பாடு, சூதகத்தடை முதலிவைகளும் நீங்கும்.

**பட்டை.**

**வ - கு.**—இதன் பட்டையைத் தனித்தாகிலும் இதர சரக்குகளுடன் சேர்த்தாகிலும் குடிநீரிட்டுக் கொடுக்க மேற்படி செய்யுளில் கண்ட நோய்களன்றி அசீரணபேதி, கிரகணி, சீதபேதி, அதிசாரம், பெரும்பாடு, சூதகத்தடை இவைகளும் குணப்படும்.

அதிமதுரம், மாதுளைத்தோல், மருதம்பட்டை இவைகளின் சூரணம் வகைக்கு 1 பங்கு, லொத்துகத்தோல் சூரணம் 3 பங்கு கூட்டிச் சீதபேதி, அசீரணபேதி, அதிசாரம், பெரும்பாடு இவைகளுக்கு $\frac{1}{4}$ வராகனெடை வீதம் 2, 3-முறையாக 3—5-நாள்வரை கொடுக்கலாம்,

இதன் பட்டை, அதிமதுரம், பொரித்த படிகாரம், நந்தியாவட்டம்பூ இவைகளைச் சமபாகமெடுத்து நீரிலிட்டரைத்துக் கண்களைச் சுற்றிப் பற்றிட, கண் நோய் விலகும்.

இதன் கட்டையைக் கஷாயமிட்டுக் கொப்புளிக்கப் பல்லீறு பலப்படும்.

---

## வெள்ளுள்ளி—Vellulli.

**வே. பெ.—இலசுனம், காயம், உள்ளி, பூண்டு, வெள்ளைப்பூண்டு, வெள்வங்காயம்.**

**Allium Sativum.**

**Eng.—Garlic**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **Tel.** | Thella-gadda | తెల్లగడ్డ | **Kan.** | Bellulli | ಬೆಳ್ಳುಳ್ಳಿ. |
| | Vellulli | వెల్లుల్లి | **Sans.** | Lasuna | लशुनम् |
| **Mal.** | Vellulli | വെളുള്ളി. | **Hind.** | Lahsan | * لہسن |

இது இந்தியாவில் எல்லா பாகத்திலும் பயிராகும்; ஓர் பூண்டு. இதற்கு வெங்காயத்தைப்பார்க்கிலும் காரமதிகம்.

**ப - உ.**—கிழங்கு.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- பசித்தீத்தூண்டி ஜடராக்னிவாத்தநி Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**குணம்.**—இதைச் சிறிய கட்டிகள், செவிடு, நாட்பட்ட இருமல், சுவாசம், மலக்கிருமி இவைகட்கும், சந்நி, வாதரோகங்கள், சிலேத்துமத்தலைவலி, வாய்நோய், நீரேற்றம், சீதபேதி, மூலம் இவைகட்கும் உபயோகிக்கலாம்.

சந்நியொடு வாதந் தலைநோவு தாளின்வலி
மன்னிவரு நீர்க்கோவை வன்சீதம்—அன்னமே!
உள்ளுள்ளிக் கண்பாய் உளைமூல ரோகமும்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு. (அ.கு.)

**வ - கு.**—இதையரைத்துச் சிறியகட்டிகளுக்குப்போட அவைகள் கரையும்.

இதன் இரசத்தைக் காதில் (1, 2 துளி) பிழிய செவிடு நீங்கும். உள் நாக்கு வீழ்ந்தால் அது படும்படித்தொட குணமாகும். 20—30 துளிவீதம் தினம் 2—3 முறைகொள்ள இருமல், சுவாசம், மலக்கிருமி இவைகள் தீரும். அல்லது இரசத்திற்குப் பதிலாக ½—1 வராகனெடை உள்ளியைக் கஷாயஞ் செய்துக் (1—12 நீர்) கொடுக்கலாம். பாலில் வேகவைத்துக் கொடுப்பதும் வழக்கம்.

கடுகு அல்லது தேங்காய் நெய்யில் பூண்டைச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தைச் சுவாசகாசம், நரம்பு சம்பந்தமான வாதநோய்களில் பூசிப் பிடிக்க அவைகள் தணியும். இதைச் சொறி, சிரங்கு, கர்ணக்கிருமிகளிலும் உபயோகிக்கலாம்.

நல்லெண்ணெயில் பூண்டையிட்டுக் காய்ச்சிக் காது நோய்க்கு விடலாம்.

பூண்டை உப்பிட்டுக் கசக்கிச் சாறெடுத்துத் தடவ, சுளுக்கு, மேற்றோல் சரிவு குணப்படும்.

உள்ளியை வேகவைத்து, நெய், சருக்கரை கூட்டிப் பிசைந்து உண்ணச் சீதபேதி குணமாகும்.

---

## வெற்றிலை—Vertilai.

**வே - பெ.—தாம்பூலம், தாம்பூலவல்லி, திரையல், நாகவல்லி, மெல்லிலை, வெள்ளிலை, மெல்லடகு.**

**Piper Betel.**

**Eng.—Betel Leaf.**

| | | |
|---|---|---|
| **Tel.** | **Tamalapaku** | తమలపాకు. |
| **Mal.** | **Vetila** | വെററില. |
| **Kan.** | **Villayadele** | ವಿಳ್ಳೆಯದೆಲೆ. |
| **Sans.** | **Nagavalli** | नागवल्ली. |
| **Hind.** | **Pan** | * پان |
| **Duk.** | **Thambole** | * تنبول |

இது இந்தியாவில் வெப்ப பாகத்திலும், சதுப்புள்ள இடங்களிலும், பயிர் செய்யப்படும் மரமேறுங் கொடி. இது, அதன் இலையின் பொருட்டே பயிரிடப்படுகிறது. இது இலையின் நிறத்தாலும், மணத்தாலும் கார்ப்புச் சுவையின் பேதத்தாலும் மூவகைப்படும். அவை அதிகமணமும், காரமும், கறுப்பு நிறமுமில்லாதது "வெற்றிலை." கருமையும் காரமும் மிகுந்தது "கம்மாறு வெற்றிலை." கர்ப்பூர மணமும், சிறுகாரமு முடையது "கர்ப்பூர வெற்றிலை".

**ப - உ.**—இலை.

**சுவை.**—விறுவிறுப்பு, கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** -கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - **Astringent.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - **Antiseptic.**
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - **Febrifuge.**
- பசித்தீத்தூண்டி - ஜடாக்னிவர்த்தநி - **Stomachic.**
- பாற்பெருக்கி க்ஷீரவர்த்தநி - **Lactagogue.**
- உமிழ்நீர்ப்பெருக்கி - த்ரவகாரி - **Sialogogue.**

**குணம்.**—வெற்றிலையின் இரசத்தைப் பருகில் கபம், சீதளம், காணுக் கடியின் துர்க்குணம், திரிதோடகோபம் இவைகள் ஒழியும்.

ஐயம் அறுங்காண் அதன்சாரங் கொண்டக்காற்
பையச் சயித்தியம்போம் பைந்தொடியே !—மெய்யின்
கடியின் குணம்போகுங் காரவெற்றி லைக்குப்
படியுமுத் தோடமிதைப் பார். (அ.கு.)

### கம்மாறு வெற்றிலை.

இதற்கு நீரேற்றம், தலைபாரம், சந்திபாதம், மாந்தம், குரற்கம்மல், வயிற்றுவலி, வயிற்றுப்பிசம், ஆகியவைபோம்.

ஏட்டிலொன்று கிட்டினீ ரேற்றஞ் சிரோபார
மாட்டி விடுசந்நி மாந்தமொடு—நாட்டிற்
பரியகுரற் கம்மல்வலி பண்டியுப்பி சம்போ
மரியகம் மாறுவெற்றி லை. (அ.கு)

மேற்கூறிய வெற்றிலைகளை இந்தியர்கள் பெரும்பாலும் தாம்பூலமாக வழங்குவார்கள். இதற்காகவே இது ஏராளமாய்ப் பயிரிடப்பட்டு இந்தியா முற்றிலும் வழங்கப்படுகின்றது. வெற்றிலையைத் தாம்பூலமாக உபயோகிக்கும்போது அத்துடன் முக்கியமாய் பாக்கு, சுண்ணம் சேரும். வெற்றிலையைத் தாம்பூலமாக உபயோகிக்கும்போது வெற்றிலையின் காம்பு, நுனி, நடுநரம்பு, பின்புறத்தில் அமைந்துள்ள தோல், இவைகளை நீக்கியே உபயோகிக்கவேண்டும். அன்றியும் சுண்ணம் வைத்த இலை உதவாது. இவ்வாறு செய்யாமல் தின்றால், தின்பவர்களிடத்தில் இலக்குமி சேராள்.

நீற்றிலையும் மூக்கு நெடிய நரம்புடனே
தீற்றும் புறவுரியும் தின்றக்கால்—மாற்றலரை
வெல்லப்போர் செய்யும் வீறனெடுமா லாயிடினுஞ்
செல்லப்போய் நிற்குந் திரு.

(அ.கு.)

**தாம்பூலந் தின்னுமுறை :**—தாம்பூலந் தரிக்கு மிடத்தில் முதலில், வெற்றிலை யன்றிப் பாக்கை மாத்திரம் போட்டுக்கொண்டால் குற்றமுண்டாகும். பந்துக்களின் உறவுநீங்கும். முன்னர் வெற்றிலையை மென்று தின்று பின்னர் முறைப்படி பாக்கு வெற்றிலைகளைத் தின்னவேண்டும். இவ்வண்ணம் நடத்துகிற விவேகிகளிடத்தில் இலக்குமி நிலைபெற்று வாசஞ் செய்வாள்.

துவர்த்தல், சொக்குதல், மூர்ச்சைப்புழு, உளுத்ததூள், பிசுபிசுப்பு முதலிய குணங்கள் இயற்கையாகப் பாக்கிலிருப்பதால், இதை முதலிற்றின்றால் உடற்கு அபாயம் நேரிடும் என்பதைக் கருதிக் குற்றமுறுமென்றும், பந்துக்களின் கூட்டுறவு நீங்குமென்றும், சுண்ணந்தடவாத புனிதமுள்ள ஒரு வெற்றிலையை முதலில் மென்று அந்தச் சாற்றை விழுங்கில், நெஞ்சுலாநும், கபக்கட்டும், மேற்கூறிய பாக்கின் குற்றங்களும் விலகுவதால் இலக்குமி வாசஞ்செய்வாள் என்றும் கூறினர் பெரியோர்.

வெற்றிலைக்கு முன்னம் வெறும்பாக்கை வாயிலிட்டாற்
குற்றம் உறும்உறவோர் கூட்டம்போம்—வெற்றிலையை
முன்னிட்டுப் பாக்கருந்து மூதறிவோர் தம்மார்பின்
மன்னிட்டு வாழும்பூ மாது.

## தாம்பூலரசம் விழுங்கும் வகை.

பாக்கு, வெற்றிலை, சுண்ணம் இவைகளை ஒன்றுற மெல்லும்போது அதில் நின்றும் ஊறிய முதல்நீர் நஞ்சு ; இரண்டாவது நீர் மிகுபயித்தியம் தரும் ; மூன்றாவது நீர் அமிர்தம் ; நான்காவது நீர் அதி யினிப்பு ; ஐந்து ஆறாவது நீர்கள் பித்ததோடம், அக்கினிமந்தம், பாண்டுரோகம் இவைகளை உண்டாக்கும்.

அடைகாய்தின்பதில்ஊறு முதல்நீர்நஞ்சாம்
அதிபித்தம்இரண்டாவ தூறுநீரே
கடையமிர்தமூன்றாவ தூறுநீர்தான்
கனமதுரநான்காவ தூறுமந்நீர்
மடையெனவேஐந்தாறிற் சுரந்துள்ஊறி
வருநீர்களைச்சுகித்து மனங்கொண்டுண்டால்
தடையுருப்பித்தமொடு மந்தநோயும்
தளர்பாண்டுநோயும்உண்டாந் தரஞ்சொன்னோமே (தே - கு.)

## தாம்பூலந்தின்னும் காலபேதம்.

தாம்பூலந்தின்னுவதில், காலையில் பாக்கை அதிகமாகச் சேர்க்கில் தாராளமாய் மலங்கழியும். மத்தியானத்தில் சுண்ணத்தை அதிகப்படுத்த நல்ல பசியண்டாம். மாலையில் வெற்றிலையை அதிகப்படுத்த வாயில் மணம் வீசும்.

காலை பிளவதிகங் கட்டுச்சி நீறதிகம்
மாலை யிலையதிக மாயருந்தில்—வேல்விழியே!
காலை மலங்கழியுங் கட்டுச்சி தீபனமாம்
மாலை மணங்குலவும் வாய். (அ.கு.)

**தாம்பூலத்தில் காய்ச்சுக்கட்டி-சுக்கு-கிராம்பு இவைகள் சேருதலின் குணம்.**

காய்ச்சுக்கட்டி சேர்ந்த தாம்பூலத்தினுல் அசைவுற்ற பற்கள் இறுகும். மலக்கிருமிகள் கெடும். சுக்கு, கிராம்பு முதலிய மணவருக்கங்கூடிய தாம்பூலத்தினுல் மனக் களிப்புண்டாம். உடலைப்பற்றிய சிலரோகம், அசீரணம் முதலியவை நீங்கும்.

காய்ச்சுக்கட் டிக்கிறுகுங் கட்டவிழ்ந்த தந்தமங்கார்
பூச்சிக் குழாமிப் புனலிற்சா—மாச்சுக்
கிலவங்க மாதிகளா லின்புண்டா மின்னுஞ்
சொலவங்க நோயுமறுஞ் சொல். (அ.கு.)

**மணவருக்கஞ்சேர்ந்த தாம்பூலத்தின் குணம்.**

வாசனை வருக்கஞ்சேர்ந்ததாம்பூல ரசத்தினுல், மலாவர்த்தவாதம், அக்கினிமந்தம், நாசிரோகம், சுவாசகாசம், அரோசகம், வயிற்றைப்பற்றிய துர்க்குணம் ஆகியவை நீங்கும். உடலுக்கு ஒளிவும், அறிவும், விழிக்கு நலமும் உண்டாகும்.

வாயுமந்தம் பீநசஞ்சு வாசகா சம்மருசி
யேயுதர தோட மிவைபோக்குந்—தூயுடற்குக்
காந்திதரும் புத்திக்குங் கட்குநலஞ் செய்யுமணஞ்
சார்ந்தநறுந் தம்பலர சம். (அ.கு.)

**குறிப்பு.**—சுண்ணம், கற்சுண்ணம் அல்லது முத்துச்சுண்ணமாயிருத்தல் வேண்டும். மற்றச்சுண்ணங்களால் பலனில்லை.

தொண்டையடைப்பு, குரற்கம்மலில் வெற்றிலையும் சாம்பிராணிப் பதங்கத்தையும் மென்று சுவைக்கும்படிச் செய்யலாம்.

பாற்சுரக்கவும் பால்கட்டி யுண்டாகும் முலை வீக்கத்தைக்கரைக்கவும் வெற்றிலையைத் தணலில் வாட்டி அடுக்கடுக்காய் வைத்துக் கட்டலாம்.
சிரோபாரத்திற்கு மூக்கிலும், காது குத்தலுக்குக் காதிலும் வெற்றிலைச் சாற்றில் 2—3 துளிவிடலாம்.

வெற்றிலையை எண்ணெயில் நனைத்து விளக்கில் வாட்டி மார்பின் மேல் போட கபஇருமல், மூச்சுமுட்டல், கடினசுவாசம், குழந்தைகளுக்குண்டாகும் கப இருமல் விலகும். இவைகட்கே வெற்றிலைச்சாறுடன் சுண்ணும்பு கூட்டியும் தொண்டைக்குழியில் தடவலாம்.

வெற்றிலைச்சாற்றுடன் இஞ்சிச்சாறும் சேர்த்து நூரையீரல் சம்பந்தமான நோயில் வழங்கலாம்.

தீப்பட்ட புண்ணின்மீது வெற்றிலையைவைத்துக் கட்டலாம்.
இளம் வெற்றிலைக்கொடி வேரும் மிளகுஞ் சேர்த்துச் சாப்பிட்டுவர, மலட்டையுண்டாக்கும்.

வேரைச் சுவைத்துவரப் பாடகர்களின் தொனி சுத்தப்படும்.

சிறுபிள்ளைகளுக்குண்டாகும் வயிற்றுப்பொருமல், மலக்கட்டு இவைகளைப் போக்க வெற்றிலைக்காம்பை ஆமணக்கு நெய்யில் நனைத்து ஆசனவாயில் வைக்கலாம்.

காமப்பெருக்கையுண்டாக்கும் பொருள்களுடன் வெற்றிலையும் சேர்த் துண்ணப் போகத்தில் இச்சை யுண்டாகும்.

பாதரசம் வெற்றிலைச் சாற்றால் சுத்தியாகும்.

வெற்றிலைச்சாற்றில் கொஞ்சம் கோரோசனஞ் சேர்த்துப்புகட்டக் கோழைக் கட்டு, கபஇருமல், மூச்சுத்திணறல் குணமாகும்.

2—3 வெற்றிலையுடன் 4–5 மிளகு சேர்த்துக் கஷாயமிட்டுப் புகட்ட சிறுவர்களுக்குண்டாகும் அசீரணம் விலகும்.

---

## வேங்கை—Vèngai.

**வே - பெ.—அசனம், கணி, திமிசு, பிரசாரம்.**

Pterocarpus Marsupium.

**Eng.—The Indian Kino tree.**

| | |
|---|---|
| Tel. Vegisa వేగిస. | Sans. Asanam असनः |
| Mal. Vénkamaram വേങ്ങമരം | Hind. Bijasar * |
| Kan. Honemara ಹೊನ್ನೆಮರ. | |

**ப - உ.**—இலை, மரப்பட்டை, பிசின்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**பட்டை.**

**செய்கை.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

**இலை.**

வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
புண்ணழுக்ககற்றி - வ்ரணசுத்திகாரி - Detergent.

**பிசின்.**

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Artringent.
குருதிப்போக்கடக்கி - ரக்தஸ் தம்பனகாரி - Haemostatic.
மலமிளக்கி - மலகாரி - Laxative.

**இலை.**

**குணமும் வழக்கும்.**—இலையை அரைத்துக் களிகிளறி, கட்டிகள், புண்கள், சருமநோய் ஆகிய இவைகளுக்கு உபயோகிக்கக் கட்டிகள் கரையும்; அல்லது பழுத்துடையும். புண்கள் ஆறும். சரும நோய் விலகும்.

**பட்டை.**

இதைச் சூரணம் அல்லது குடிநீரிட்டு வழங்க அசீரணபேதி, சீதபேதி முதலியன குணமாகும்.

**பிசின்.**

இம்மரத்தில் வடியும் பால் உறைந்து வாசனையற்ற பிசினுகும். இதற்குக் காய்ச்சுக்கட்டிக்குள்ள செய்கையுண்டு.

இதற்குப் பொடிஇருமல், வெள்ளை, உளைமாந்தை, புண், சீழொழுகல் போம். மலமிறங்கும். கண்கள் ஒளிபெறும்.

குத்திருமல் வெட்டையொடு கூறுமுளை மாந்தையிவை
எத்திசையும் வாரா திடையுங்காண்—சத்தியமாய்ப்
புண்ணிருமல் சீழொழுகல் போகும் மலமிறங்கும்
கண்ணொளிரும் வேங்கைக்குக் காண்.

வேங்கைப்பிசின் சூரணம் 15, அபினி 1, இலவங்கப்பட்டைச் சூரணம் 4 இவைகளைக்கலந்து கல்வத்திட்டு நன்றுயரைத்து புட்டியில் காற்றுப் புகாத படி கல்கார்க்கிட்டு வைத்துக்கொண்டு, வேளைக்கு $2\frac{1}{2}$—10 குன்றிவீதம் தினம் 2, 3 வேளை கொடுக்க, பித்தவாந்தி, அசீரணம், சிதபேதி, நாட்பட்ட அதிசாரம் நீங்கும். புண்களின்மீது தூவிவர அவைகளினின்றுவரும் இரத்தம் நிற்கும். பிறகு அவைகள் ஆறும்.

பிசினை நெய்விட்டு வதக்கிச் சூரணஞ் செய்து மேற்கூறிய இருமல், வெள்ளை முதலிய நோய்களுக்கு $\frac{1}{8}$—$\frac{1}{2}$ வராகனெடை வீதம் கொடுத்து வரலாம். மலமும் இறங்கும். கண்கள் ஒளிபெறும்.

பல் நோய்க்கு இதன் பிசின் பயன்படும்.

---

## வேம்பு—Vèmbu.

**வே - பெ.—அரிட்டம், தித்தை, நிம்பம், பாரிபத்திரம், பிசுமந்தம், வாதாரி.**

**Melia Azadirachta.**

**(Azadirachta Indica).**

**Eng—Margosa-tree.**

| | |
|---|---|
| **Tel. Vépa** వేప. | **Sans. Nimba** निम्ब: |
| **Mal. Véppa** വേപ്പ്. | **Hind. Nim** نيم |
| **Kan. Beviná** ಬೇವಿನ. | |

இது ஓர்வித அலங்காரமான மரம். இந்தியாவிற்கே உரியதாகத் தெரிகிறது. ஆயினும் பர்மாவிலும் பயிரடப்படுகிறது. இந்தியாவில் வடமேற்கு மாகாணத்தில் வரட்சியான பாகங்களில் இது மிகச் செழிப்பாக வளரும்.

சீதத்தால் உண்டாகும் விடசுரங்களைத் தடுக்குந் தன்மை இம்மரத்திற் குண்டென்கிற நம்பிக்கையால், இதுபெரும்பாலும் அநேக கிராமங்களின் எல்லைப் புறங்களிலும், வாசஞ் செய்யும் இடங்களுக்கு அருகிலும், காளி முதலிய கோயில்களிலும், சாலைகளின் இருபுறங்களிலும் வைத்துப் பயிராக் கப்பட்டுவருகிறது. இதில் வேம்பு நீங்க, **கருவேம்பு, சருக்கரைவேம்பு மலைவேம்பு** என்கிற இனமுமுண்டு.

**ப - உ.**—இலை, ஈர்க்கு, பூ, காய், பழம், வித்து, நெய், பிண்ணாக்கு, மரப்பட்டை, வேர்ப்பட்டை, கட்டை, கள், பிசின்.

## இலை.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- வீக்கம்பரப்பி - Discutient.

**குணம்.**—கிருமி, குட்டம், மாந்தம், விடசுரம், அம்மைப்புண், சொறி, சிரங்கு ஆகிய இவைகளை வேப்பிலைப் போக்கும்.

> கிருமிகுட்ட மாந்தங் கெடுவிடஞ்சு ரங்கள்
> பொருமியம சூரிகையின் புண்கள்—ஒருமிக்க
> நிம்பத் திலையிருக்க நீடுலகில் நீங்காமல்
> கம்பத் திலையிருக்கக் காண். (அ.கு.)

மேலும் அதிசாரம், பிரமேகம், விப்புருதி இவைகட்கும் பயன்படும்.

**வ - கு.**—வேப்பங் கொழுந்துடன் ஓமம், மிளகு, பூண்டு, சுக்கு, நொச்சிக் கொழுந்து, கறிவேப்பிலை, சோம்பு, சிற்றரத்தை, உப்பு எடுத்து, இவைகளில் உப்பு நீங்கலாக மற்றவைகளைத் தனித்தனியே நெய்விட்டு வதக்கி, கடைசியில் உப்பைச் சேர்த்து நீர்விடாமற்படி மை போலரைக்க மெழுகுபதமாக வரும். இதில் 1—4 குன்றி எடை குழந்தைகளின் வயதிற்குத் தக்கபடி எடுத்துத் தண்ணீரில் கரைத்துப் புகட்ட, மாந்தம், வயிற்றுப்பொருமல், மலபந்தம், மார்புச்சளி இவைகள் நீங்கும். தீபனமுண்டாகும். குடலிலில் மலக் கிருமிகள் சாகும்.

**குறிப்பு.**—மேற்கண்ட பொருள்களில் நோய்க்குத் தக்கபடி சிலவற்றை நீக்கியும், பேதி, இசிவு, இவைகள் கண்டிருந்தால் வசம்பைக்கூட்டியும், நெய்விட்டு வதக்காமலே நீர்விட்டரைத்துங் கொடுக்கலாம். நோய் பலாபலமறிந்து எடைபாகத்தை எடுக்கவும்.

வேப்பங் கொழுந்துடன் குன்றிமணிவேர்ச் சூரணம் கூட்டியரைத்து (நீர் வேண்டியிருப்பின் 2—3 துளி விட்டுக்கொள்ளலாம்) 2—3 குன்றியளவு தினம் மும்முறை கொடுக்க அசாத்தியமான பெரிய அம்மை ரோகம் தீரும்.

வேப்பிலையைத் தனித்தேனும் சிறிது மஞ்சள் சேர்த்தேனும் வெந்நீர் விட்டேனும், விடாமலேனும் அரைத்துச் சீலையில் தடவி மேலுக்குப் போட கரப்பான், சொறி, சிரங்கு, அம்மை விரணம், இவைகள் நீங்கும். எரிச்சலிருந்தால் அரிசிமா கூட்டிக் கொள்ளலாம்.

வேப்பிலையை நீர்விட்டரைத்துக் களிபோற் கிண்டி மேலுக்குப் போட வீக்கம், சாதாரண விரணம், துட்ட விரணம், சரும ரோகங்கள் தீரும்.

வேப்பிலையை அரைத்துக்கட்ட கட்டிகள் சீக்கிரத்தில் பழுக்கும்.

இலைக்கஷாயம் துட்டப்புண்களைக் கழுவவும், சுடுகையுடனிருக்கும்போது சீலையில் தோய்த்துப் பிழிந்து ஒற்றிடமிடவும் பயன்படும்.

புழு, பூச்சி, செல் முதலியவைகளால் நேரிடும் துன்பங்களை இவ்விலை ஒழிக்கும்.

வேம்பின் தளிரை இடித்துத் தூளாக்கி எடுத்த எடைக்கு ஓமம் அரைபங்கும் உப்பு அரைபங்கும் சேர்த்து மறுபடியுமிடித்து அதில் ½ வராகனெடை வீதம் தினமிருவேளையாக உரோகணி நட்சத்திரம் தொடங்கி 40 நாள் சாப்பிட சகல நோய்களும் வராதொழியும்.

## ஈர்க்கு.

இதைச் சுரக்கஷாயங்களிலும், புழுக்களைக் கொல்லுவதற்குரிய குடிநீரிலும் சேர்க்கலாம்.

### பூ.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—பித்தத்தாலுண்டாகின்ற பெரு மூர்ச்சை. நாத்தோடம், அரோசகம், வாந்தி, நீடித்தவாதம், எப்பம், மலக்கிருமி ஆகியவைகளைப் போக்கும்.

பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடம்
சத்தத் தெழுவமனம் தங்கருசி—முற்றியகால்
எப்பம் மலகீட மிவைவகு நாட்சென்ற
வேப்பமல ருக்கு வெருண்டு. (அ.கு.)

**வ- கு.**—நாட்பட்ட பழைய பூவை நெய் விட்டு வதக்கி உப்பு, சுட்ட பழம்புளி, வறுத்தமிளகாய், கறிவேப்பிலை கூட்டி துவையல் செய்து சோற்றுடன் கலந்துண்ண மேற்குறிப்பிட்ட நோய்கள் விலகும்.

பூவை ஊறல் கஷாயமிட்டுக்கொடுக்க பலவீனத்தைப் போக்கும். குன்ம ரோகத்தைக் கண்டிக்கும்.

துவரம்பருப்பை வேகவைத்து வடித்த நீரில் மிளகுரசம் செய்வது போலச் செய்து, பாகப்படி இறக்கிய ரசத்தில் பூவை வறுத்துப் பொடித்துக் கலந்து உபயோகிக்க நாத்தோடம், அரோசகம், வாந்தி, எப்பம் முதலியன படிப்படியாய்க் குணப்படும்.

புளி, அரைத்தமிளகு இவ்விரண்டையும் தண்ணீரில் கரைத்துப் பிழிந்து வடிகட்டி, அதில் உப்புகூட்டிக் கொதிக்கவைத்து, நெய் விட்டு வெங்காயத்தை வறுத்து அதிற்சேர்த்துக் காய்ச்சி, பக்குவ பாகத்தில் இறக்கி, நெய் விட்டு வறுத்துப் பொடிசெய்த பழைய பூவை அதில் கூட்டிக்கலந்து, குழம்பு போலாக்கிச் சோற்றுடன் கலந்து உட்கொண்டுவர, பித்தத்தால் எழுந்த அரோசகம், வாந்தி, மூர்ச்சை போன்ற நோய்கள் விலகும்.

### காய், பழம்.

**சுவை.**— **காய்** - கைப்பு, **பழம்** - சிறு இனிப்பு, கைப்பு, **வீரியம்-காய்** -வெப்பம், **பழம்** - சீதம், **பிரிவு** - **காய்** - கார்ப்பு, **பழம்** - இனிப்பு.

**செய்கை.**
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம்.**—முறை சுரத்தைப் போக்கும் ; பலத்தைக் கொடுக்கும்.

### காய்.

**வ - கு.**—இது இளம்பிஞ்சாயிருக்கும்போது இடிக்கப் பால் வரும். இப்பால் படி ஒன்று எடுத்து ஒருபலம் சுத்திசெய்த வெண்பாடாணக் கட்டிக்குச் சுருக்கிட பாடாணம் ஒருவகைக் கட்டாகும். இதைத்தக்க அநுபானத்துடன் வழங்க விடசுரம், முறைச்சுரம், குட்டம், மூத்திர நாளரோகம், மலப்புழு, மூலம் தீரும்.

காயை உலர்த்திக் கொட்டையை நீக்கிச் சூரணஞ் செய்து $\frac{1}{2}$—2 வராகனெடை வீதம் தினமிருமுறையாகக் கொடுக்க முறைக்காய்ச்சல் நீங்கும். உடல்பலப்படும்.

பழத்தின் ரசத்தை எடுத்து மணப்பாகு செய்து சரும வியாதியுள்ளவர்களுக்கு வழங்கலாம் (அளவு $\frac{1}{2}$—1 பலம்).

**வித்து.**

**சுவை.**—கைப்பு,, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**குணம்.**—வித்துக்கு விடம், சந்நிபாதம் விலகும்.

"வேம்பின் விதைக்கு விடஞ்சந்நி பாதமுதல்
தேம்பிவிழுந் தோடுமெனத் தேர்." (அ.கு.)

**வ - கு.**—இதன் பருப்பை அரைத்துப் புழுவிரணங்களுக்குப் பூச, விரணத்தினின்றும் புழுக்கள் வெளிப்படும். புண் ஆறும்.

**நெய்.**

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- பூச்சிகொல்லி - Insecticide.

**குணம்.**—வேம்பின் நெய்யைப் பூச மகாவாதம், கிரந்தி, கரப்பான், சிரங்கு, முன்னிசிவு, சுரம், சந்நி இவைகள் போம். ஆனால் பித்த மதிகரிக்கும்.

வாதம் போம் பித்தமிகும் மாருக்கி ரந்தியொடு
மோதுகரப் பான்சிரங்கு முன்னிசிவும்—ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசந்நி யுந்தொலையும்
வேப்பநெய் யென்றுரைக்கால் விள்ளு. (அ.கு.)

**வ - கு.**—வேப்பம் நெய்யுடன் சமபாகம் ஆடுதீண்டாப்பாளைச்சாறு கூட்டி, சாறுவற்றி நெய் பக்குவப்பட்டபின் இறக்கி வடித்துத் தடவிவர தோல்கள் வெடித்துக்காணும் புடைகளும், சிறு சிறு கொப்புளங்கள் கண்டு துர்நீர் பாயும் விரணங்களும், துட்ட விரணங்களும் நீங்கும்.

வேப்பெண்ணெயை இருப்புக்கரண்டியில் விட்டுக் காயவைத்து எருக்கனிலையைக் கற்றையாய்ச் சுருட்டிக்கட்டி ஒரு புறத்தைச் சமமாகக் கத்தரித் தெறிந்து, அதைக் காய்ந்து கொண்டிருக்கும் எண்ணெயில் தோய்த்து ஒற்றிடமிட, பிடரிவலி, நரம்பு, உடல்குத்து, சந்நிபாதத்தில் காணும் வலிகள் தீரும்.

ஐங்கூட்டு நெய்யால் மகாவாதக் கூட்டம், முன்னிசிவு, பின்னிசிவு, சந்நி, சுரம், கபச்சேட்டை, சொறி, சிரங்கு, கரப்பான் தீரும்.

தனித்த நெய்யை, அக்கி, கீல்வாதம், கண்டமாலை, சில சருமப்பிணிகளுக்கு மேற்பூச்சாகப் பயன் படுத்தலாம்.

**பிண்ணாக்கு.**

**செய்கை.** நெய்க்குரிய செய்கையே இதற்குமுண்டு.

**குணம்.**—இதற்குச் சந்நி, வாதநோய், தலைவலி, கபரோகம் போம்.

சந்நியுடன் வாதந் தலைநோய்போம் வாதம்அறும்
முன்னிநின்ற தோடம் முறியுங்காண்—பன்னுதமிழ்
வல்லவரே! வேம்பின்வழி வந்தபிண்ணாக் கென்றுரைக்கால்
சொல்லஐயம் போமே தொலைந்து (அ.கு.)

**வ - கு.**—பிண்ணாக்கை இடித்துப் பொடித்து வறுத்து ஒற்றிடமிட மேற் கண்ட நோய்கள் போம்.

பிண்ணாக்கைச் சுட்டுச் சூரணஞ்செய்து முகர நாசியினின்றும் நீர் வடியும், தும்மலுண்டாகும், தலைவலி, சந்நி, நீங்கும்.

### பட்டை.

**சுவை.**—கைப்பு, சிறு துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி ; Antiperiodic.
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.

**குணம்.**—சீதசுரமுதலியசுரங்கள், சுரவேகத்தாலுண்டாகுமுடல்தளர்ச்சி, மூலகணம், மாந்தம், மலம், வாதகோபம், குன்மம் (வயிற்றுவலி), எரிபூச்சி, இவைகளைப் போக்கும்.

ஓதரிய வேம்பை யுரைக்கிற் சுரமுடனே
வாதமறு மூலகண மாந்தம்போந்—தீதாய்
உதிருமெரி பூச்சிகுன்ம மோதா தொழியுஞ்
சிதறுமலம் போகுமெனத் தேர். (அ.கு.)

**வ - கு.**—சதைத்த வேம்பின் பட்டை உட்பாகம் பலம் 2, நீர்படி ¼, ½ மணி நேரங்காய்ச்சி வடிகட்டி சூடாயிருக்கும் போதே ¼—1/3 ஆழாக்கு வீதம் முறை சுரம் வருவதற்கு முந்தியே கொடுக்க, சுரம் வராது. வந்தாலும் எளிதாயிருக்கும். இதையே சுரவேகத்தாலேற்பட்ட தேகஅயர்ச்சிக்கும் வழங்கலாம்.

### வேறு.

வேப்பம்பட்டை உள்நார் பலம்—1, ஏலரிசித்தூள், தனியா (உருளரிசி)த் தூள், சோம்புத்தூள், சந்தனக்கட்டைத்தூள் வகைக்கு வராகனெடை ½, தண்ணீர் ½ படி ; ஒரு கொதி வருமளவும் காய்ச்சி வடிகட்டிச் சூடாயிருக்கும் போது ¼—½ ஆழாக்களவு மேற்படி நோய்களுக்குக் கொடுக்கலாம்.

நாட் பட்ட வேப்பமரத்தின் பட்டையைச் சூரணஞ் செய்து 1—2 வராக னெடை வீதம் தினம் இருபோது கொள்ள, தாகம், வாந்தி, அரோசகம் தீரும். இதையே சரும வியாதிகளிலும் உபயோகிக்கலாம்.

பட்டை வராகனெடை 1, திப்பிலி வராகனெடை 2 சேர்ந்த கஷாயத்தை இடுப்புவாதம், கீல்வாதத்திலும், பட்டைக்கஷாயத்துடன் சிறிது மிளகுத் தூளும், நிலவேம்புச் சூரணமும் சேர்த்துச் சுரத்திலும், இப்பட்டையும் வேலம்பட்டையும் சமவெடை சேர்த்துக் காய்ச்சிய கஷாயம் குசுமரோகத்தி லும், வேர்ப்பட்டைக் கஷாயம் மலைச்சுரத் (Malaria) திலும் வழங்கிவர நற் பயன் கொடுக்கும்.

### வேப்பம் பட்டைத்தைலம்.

வேப்பம் பட்டை பலம் 2½, விலாமிச்சம் வேர், மிளகு, வெள்ளுள்ளி, சீரகம், கத்தூரிமஞ்சள் வகை ஒன்றுக்கு பலம் ½ ; இவைகளைப் பசுவின் பால் படி ½ விட்டரைத்து நல்லெண்ணெய் படி 1-ல் கலந்து தைலஞ் செய்து தலை முழுகிவரப் பழயசுரம், வாதரோகம், மண்டையிடி, பீநசம், செவி நோய் போம்.

### வேறு.

100 வருடஞ்சென்ற வேப்பம் பட்டை பலம் 12½, நீர் படி 16, எட் டில் ஒன்றுகச் சிறுக்கி, எண்ணெய் படி 2 ல் கலந்து, இலந்தைவேர், பழம் பாசி, அக்கராகாரம் வகைக்கு பலம் 1, பால்விட்டரைத்துச் சேர்த்துக் காய்ச்சி பதத்தில் வடித்து முழுகிவரக் குட்டம், தேகக்கடுப்பு, செங்கரப்பான், புண். புரை, சொறி, சிரங்கு தீரும்.

### கள்.

இதற்குப் பசித்தீயைத் தூண்டவும், உடற்குப் பலந்தரவும் செய்கை யிருப்பதால் மேகரோகம், வாதரோகம், புராணசுரங்களில் இதை உபயோ கிக்கலாம்.

### பிசின்.

இதற்கும் உரமாக்குஞ் செய்கையிருப்பதால், இதை வதக்கிச் சூரணஞ் செய்து ½—1½ வராகனெடை வீதம் மேகரோகத்தில் கொடுக்கலாம்.

## கருவேம்பு.

இது, சாதாரணமான வேம்பிற்குக் கருநிற மேற்றுவதால் உண்டாகக் கூடியது.

### உபயோகமும் குணமும்.

இதன் இலை, பூ, பட்டை, உள்கட்டை, பிசின் என்கிற அங்கங்களின் சூரணம் சமவெடைதூக்கி ஒன்றுபடக் கலந்து 40 நாள் கொண்ட ஒரு மண் டலம் உப்பு, புளி நீக்கி காலை, மாலை இருபொழுதுமுண்டுவர வெளுப் புற்ற தேகம் கருவண்டின் நிறம் பெறும். உடலிலுள்ள மயிர்கள் நிமிர்ந்து நிற்கும். இருட்டறையிலிருந்தாலும் தேகம் இளஞ்சூரியன் போலக்காணப் படும் என்று போகர் 7000-ல் 1-ஆம் காண்டத்திற் கூறப்பட்டிருக்கிறது.

## கருக்கரைவேம்பு *

இது ஓர் அருமையான சாதி. இது எங்கும் கிடைப்பது அரிது. சிற்சில காடுகளிலும், மலைகளிலும், வெகு அருமையாக நாடுகளிலும் கிடைக்கும். இது, சாதாரண வேம்பிற்கு எவ்விதத்திலும் வேறுபடுவதில்லை. ஆனால் இலை முதலிய உறுப்புகளின் சுவை இனிப்பாயிருக்கும்.

**ப - உ.**—இலை, பூ, காய், பழம், விதை, பட்டை, வேர்.

**சுவை.**—**இலை** கரும்பு, **காய்** மாம்பழம், **பட்டை** கற்கண்டு, **விதை** நெல் லிக்கனிச்சுவை **வேர்** கத்தூரி, மணம் **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- உரமாக்கி - பல்காரி - Tonic.
- தூய்மையாக்கி - மலினநிவர்த்தநி - Depurant.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

**குணம் :**—இது, உடலை உறுதிப்படுத்தி நீண்டகாலம் நிலைக்க வைப்பதி லும், நாத - விந்துக்களின் குற்றங்களைப் போக்குவதிலும், கடைநாளில் பாதிக்கும் கபத்தை விலக்குவதிலும் சிறப்புடையது.

காயசித்தி யாகும் கடியசி லேஷ்மமறும்
தூயவிந்து நாதமிவை சுத்தியுமாம்— தூயவருக்
கெத்திக்கும் கிட்டும் இலையருந்தில் வாயெல்லாம்
தித்திக்கும் வேம்பதற்குத் தேர். (அ.கு.)

**வ -கு.**—அதன் சமூலச்சூரணத்தை, பசுவின்பாலை அநுபானமாகக் கொண்டு ஒருமண்டலஞ் சாப்பிடக் கவனசித்தி, யோகசித்தி முதலிய உயர்ந்த சித்திகள் கிட்டுமென்றும் ;

பட்டையில்—உப்பும், வேரில்—சூதமும், இலையில்—நாகமும், விதைத் தயிலத்தில்—தாதுவும் கட்டுமென்றும், காயில்—செம்பு நீறும் என்றும் பிஞ்சின்சாற்றில்—இரும்பைப்பழுக்கக் காய்ச்சித் தோய்க்க பொன்னாகு மென் றும், இரும்பை இவ்வாறே பூச்சாற்றில் தோய்க்கச் செம்பாகு மென்றும்,

* சுமார், 1886-87 ஆம் ஆண்டில் சென்னை, போர்ட்டு செய்ண்டு ஜார்ஜ் கோட்டை வெளி யில் மன்ரோ உருவத்திற்கு மேல்புறச்சாலையில் ஒருமரம் இருந்தது. இம்மரத்தின் இலை இனிப் பாயிருந்ததைக்காண வெகு சனங்கள் அங்கு தினந்தோறும் நாள்முற்றும் கூடுவதைக்கண்ட அதிகாரிகள் அம்மரத்தை வெட்டி விட்டார்கள். (க-ச-மு.)

பழச்சாற்றில் காரீயத்தை உருக்கிச் சாய்க்கப் பொன்னாகு மென்றும் போகர் 7000-த்தின் முதற் காண்டத்தில் காயசித்தி அதிகாரத்தின்கீழ்க் கூறியிருப் பதனாலறிக.

---

## மலைவேம்பு—Malai-Vèmbu.

Melia Azedarach.

Eng.—Common Bead tree. (The Persian Lilac).

**Tel.** Konda-Vépa కొండవేప.

**Mal.** Malai-Véppu മലവേപ്പ്

**Kan.** Chikka-bevu ಚಿಕ್ಕಬೇವು.

Bettadá-bevu ಬೆಟ್ಟದ ಬೇವು.

**Sans.** Maha-Nimba महानिम्ब:

Parvata-Nimba पर्वतनिम्ब:

**Hind.** Bakayan * بکائن

**Duk.** Gouri-nim * گوری نیم

இது இந்தியாவில் பலபாகங்களிலும், பாரசிகம், அமெரிக்காவிலும் பயிரா கும் மரம். கைப்பும் அருவருப்பான சுவையுமுடையது. சாதாரண வேப் பிலையின் ஓரங்களில் காணும் அறுவாய் இம்மரத்து இலையில் இரா. இதன் இலை கரும்பச்சை நிறம். காய் சிறிது கனத்தும் உருட்சியாயுமிருக்கும்.

**ப - உ.**—இலை, வேர்ப்பட்டை, பிசின்.

**சுவை.**—கைப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**

- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- பெருமலம்போக்கி - வ்ரேசனகாரி - Cathartic.
- கற்றுகளாக்கி - பாஷாணபேதி - Antilithic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

**பூ.**

- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.
- வீக்கங்கரைச்சி - Resolvent.

**பட்டை.**

- பெருமலம்போக்கி - வ்ரேசனகாரி - Cathartic.
- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.

**வேர்ப்பட்டை.**

- வாந்தியுண்டாக்கி - வமனகாரி - Emetic.
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

**குணம்.**—மலட்டுப்புழு, சூதகவயிற்றுவலி, உன்மாதம், பாதிக்கின்ற வாதரோகங்கள் நீங்கும்.

மலட்டுப் புழுவும் வயிற்றின் வலியும்
அலட்டுவாய் வும்போம் அடங்கி—கொலட்டும்
உலைவேஞ் சினைவேற்கண் ஒதிமமே கேளாய்!
மலைவேம்பின் பேரை வழுத்து. (அ.கு.)

**வ - கு.**—இலைக்கும் காய்க்கும் விடகுணமுண்டென்பது சிலர் கருத்து. அளவு கடந்து வழங்கினால் யாவும் விடமே. மாதாந்த ருதுகால இரத் தத்தை வெளிப்படுத்தாது பாதிக்கின்ற இரத்தகுன்மம், நிலை

பெற்ற மலட்டுப்புழு, காகமலடு, கதலிமலடு, கருப்பமலடு ஆகிய இவைகளைப் போக்கவல்ல, (தேரையரால் இயற்றப்பட்ட "தைலவர்க்கச் சுருக்கத்தில் கூறிய) "கலிங்காதித் தைலத்தில்" இதன் இலைச்சாறு சேருகின்றது. இத் தைலத்தின் பெருமை இதை உபயோகித்தவர்கட்கே நன்கு விளங்கும்.

இலைச்சாற்றில் தக்க அளவு கொடுத்துவர கிருமிகளைக் கொன்று வெளிப் படுத்தும். இலைக்கஷாயத்தையும் கொடுக்கலாம்.

இலை அல்லது பூவைக் கனிகிளரித் தலைக்குப் பற்றிட வாதத்தலைவலி யும், கிளைக்கின்ற புண்களின்மீது தடவிவர அவைகளும் நீங்கும். பேன் உள்ள தலையில் அப்பிவரப் பேன்கள் செத்துவிழும். மண்டைச்சொறியும் போம்.

வேர்ப்பட்டையை உலர்த்திச் சூரணஞ்செய்து 5—12 வயதுள்ள சிறுவர் களுக்கு $\frac{1}{2}$—$1\frac{1}{4}$ வராகனெடை வீதம் காலை, மாலை கொடுத்துவர மலத்திற் றங்கிய புழுக்களைக் கொன்று வெளிப்படுத்தும். 1 to $1\frac{1}{2}$ வராகனெடை வீதம் கொடுக்க உன்மாதம், சூதகவயிற்றுவலி நீங்கும்.

பச்சை வேர்ப்பட்டை 3 பங்கு, நீர் 24 பங்கு சேர்த்து நீர் அரை பாகஞ் சுண்டும்வரைச் சிறுக்கி $\frac{1}{12}$—$\frac{1}{6}$ ஆழாக்கு வீதம் கொடுத்துவந்தால் கிருமி களைப் போக்கும்.

பிசினைத் தக்க அளவில் பிரயோகஞ்செய்யக் கருங்கரப்பான், மேகக்கட்டி, சலமந்தபேதி, மண்ணீரல் வீக்கம் குணமாகும்.

---

## வேர்க்கடலை—Vérkadalai.

**வே - பெ.—நிலக்கடலை.**

Arachis Hypogœa.

Eng.—Earthnut, Groundnut, Peanut.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Verushangalu | వేరుశనగలు. | Sans. | Buchanaka | भूचणकम् . |
| Mal. | Nilakkadala | നിലക്കടല. | | | |
| Kan. | Kadalaikkai | ಕಡಲೆಕಾಯಿ. | Hind. | Mungphali | * مونگ پھلی |

இது தென்னிந்தியா, பம்பாய், வங்காளத்தின் சில பாகங்களில் வளரும் ஓர்வகைப் பூண்டு. இதன் காய், வேரில் காய்த்து பூமிக்குள்ளிருக்கும். இதனால் இதற்கு வேர்க்கடலை எனப்பெயர் வந்தது.

**ப - உ.**—கடலை, எண்ணெய்.

**சுவை.**—இனிப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Laxative.
- வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.

**குணம்.**—கடலையானது தேகத்தைப் போஷிக்கும். மூத்திரப் பையின் அழற்சியை மாற்றும். ஆனால் பித்தத்தை அதிகரிக்கச் செய்யும்.

**வ - கு.**—கடலையை வேகவைத்தாவது, வறுத்தாவது வெல்லத்துடன் சாப்பிட உடலை வளர்க்கும். தாதுவை உண்டாக்கும்.

பலவகை மிட்டாய் தினுசுகளில் இக்கடலைப் பருப்பைச் சேர்த்து மிக்க சுவையுள்ள தின்பண்டமாக்கித் தின்னலாம்.

இது ஏராளமாய் இந்தியாவினின்றும் ஏற்றுமதியாகிறது. மேனுட்டார் இதை மிக ஆவலாக அருந்துகின்றனர். மேலும் பலவகையான தின்

பண்டங்களாகச் செய்து திரும்பவும் இந்தியாபோன்ற வெளிநாடுகளுக்கு அனுப்பி மிக்க ஊதியம் பெறுகின்றனர்.

இதினின்றும் வெண்ணெய் செய்து உபயோகித்து வருகிறார்கள்.

கடலைத் தோலை நீக்கி இடித்துப் பொடியாக்கி பாலில் வேகவைத்துச் சாப்பிடத் தாதுபுஷ்டியை யுண்டாக்கும்.

எண்ணெய் மலத்தை இளக்கித்தள்ளும். ஒரு தேக்கரண்டி வீதம் பாலுடன் சேர்த்து அருந்திவர மூத்திரப்பை தாபிதத்தைப் போக்கும்.

எண்ணெயை வாதுமை எண்ணெய்க்குப் பதிலாக உபயோகித்துவரலாம்.

---

## வேல்—Vél.

**வே - பெ.—அரிமேதம், உடை, குடை.**

இதில் (1) கருவேல், (2) வெள்வேல், (3) குடைவேல், (4) பீவேல் **என** நான்கு இனமுண்டு.

---

## கருவேல்—Karu-vél.

**வே - பெ.—கண்டாலு.**

**Acacia Arabica.**

Eng.—Indian gum-arabic tree.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Tel. | Nalla-tumma | నల్లతుమ్మ. | Sans. | Kala-barbura | कालबर्बूरः. |
| Mal. | Karuvélum | കരുവേലം. | | | |
| Kan. | Karijali | ಕರಿಜಾಲಿ. | Hind. | Kala-babul | * کالا ببول |

இது மரவகுப்பைச் சேர்ந்தது. இந்தியா முற்றிலும் கிடைக்கும். மரத்தின் பட்டை கருமையாயிருக்கும். அதனால் இதற்குக் கருவேல் எனப் பெயர்.

**ப - உ.**—கொழுந்து (இலை), பட்டை, வேர், பிசின், வித்து.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**

**இலை, பட்டை, வேர், வித்து.**
துவர்ப்பி - ஸங்கோசனகரி - Astringent.

**பிசின்**
உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - Emollient.
உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
நுரைஈரல்நோயாற்றி - Pectoral.
காமம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.

**இலைக்கொழுந்து.**

**குணமும் வழக்கும்.**—இதைத் தயிரிலரைத்துக் குடிக்கில் பாஷாண வேகம் நீங்கும். முலைப்பாலில் அரைத்து அடைதட்டிக் காய்ந்த சட்டியி லிட்டு வெதுப்பி அற்பச்சூடாக ஒற்றிடமிட, கண்சிவப்பு மாறும்.

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத் துத்தயிரில்
உண்டாற்பா ஷாணவெப்ப மோடுங்காண்—கண்டாவி
வந்தசிவப் பேகுமதை மாதர்பா லாலரைத்து
வெந்தவடை கண்ணிலொத்த வே. (அ.கு.)

அன்றியும் தனிப்பட அரைத்துத் துஷ்டவிரணங்களுக்குக் கட்டினால் துர்நீரை மாற்றும்.

கொழுந்தை அரைத்துச் சருக்கரை கூட்டி நீரிற் கலக்கிக் காலையில் மாத்திரம் உட்கொள்ள இருமல் தணியும்.

**பட்டை.**

இதற்கு, பாதரசத்தினாலுண்டாகும் வேக்காடு முதலிய விரணங்களும், சுரமும், பித்தநோயும் ஒழியும். பல்லிறுகும்.

> தந்தம் இறுகுந் தனிச்சூதப் புண்ணாறும்
> வந்தசுரம் பித்தம் மடியுங்காண்—பந்த
> மருவே யகலா மலரளக மாதே!
> கருவேலம் பட்டைக்குக் காண். (அ.கு.)

இதைக் கஷாயமிட்டு ஆசனம் வெளிப்படலுக்குக் கழுவுநீராகவும், பல்லாட்டம், வாய்ப்புண், இரசவேக்காடு இவைகளுக்குக் கொப்புளிக்கும் நீராகவும் உபயோகிக்கலாம். இப்பட்டையின் ஊறல் கஷாயம் (பட்டை 1 பாகம் - தண்ணீர் 14 பாகம்) நாட்பட்ட சீதபேதி, மதுமேகம், சுரம், பித்தநோய்கள் இவைகளுக்கு $\frac{1}{4}$—$\frac{1}{3}$ ஆழாக்கு வீதம் கொடுத்துவாலாம்.

பட்டையை உலர்த்திச் சூரணம் செய்தேனும், சுட்டுக்கரியாக்கியேனும் பற்களைத் தேய்த்துவர, பல்லாட்டம், ஈறில் இரத்தம் வடிதல் நீங்கும்.

பட்டையின் சாற்றுடன் முலைப்பாலுக் கூட்டிக் குழைத்துக் கண்ணிலிட கண் இமையிற்காணும் நோய்கள் தணியும்.

**வேர்.**

இதற்கு இரத்தக்கடுப்பு, அக்னிமந்தம், மகாவாதம், கரப்பான், வாதாதி சாரம் ஆகியவைகள் போம்.

> கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத்தம் மாந்தம்
> பருவாதம் ஊருகரப் பானும்—பெருகு
> பெரும்பேதி யும்போகும் பேசவி னிக்கும்
> கரும்பே! இதனைக் கருது. (அ.கு.)

இதன் குடிநீர் அல்லது ஊறல் கஷாயத்தை மேற்கண்ட நோய்களுக்கு வழங்கலாம்.

**பிசின்.**

இது நீர்த்துப்போன சுக்கிலத்தை இறுகச் செய்யும். எரிச்சலோடு விழுகின்ற சீழ்ப்பிரமேகத்தை நிறுத்தும். அழகையும் பலத்தையு முண்டாக்கும்.

> நீத்தொழுகும் விந்துவை நிலைக்கப் புரியுமெரி
> பூத்தொழுகும் வெள்ளைதனைப் போக்குமிம்—மாத்திரமோ ?
> தேசுதரு முரமுஞ் செய்யும் பெரியோராற்
> பேசுகரு வேலம் பிசின். (அ.கு.)

அன்றியும், இருமல், குடல்தாபிதம், குடல்விரணம், தொண்டைநோய், மூத்திரக்கிரிச்சரம், பேதி, காய்ச்சலோடுகூடிய சில வியாதிகளுக்கும் உதவும்.

$\frac{3}{4}$—$1\frac{1}{4}$ வராகனெடையுள்ள பிசின் துண்டு ஒன்றை வாயிலிட்டுச் சுவைத்து அதினின்றும் ஊறும் இரசத்தை விழுங்கிக்கொண்டிருந்தால், வறட்சி, இருமல், நெஞ்செரிச்சல், தொண்டைநோய் குணப்படும். விந்து இறுகும். அழலை தணியும். அழகையும் பலத்தையுமுண்டாக்கும்.

மதுமேகம், வெகுமூத்திரமுள்ளவர்களுக்குக் கொடுக்கும் மருந்துகளுக்கு இதைத் துணைமருந்தாக உபயோகிக்க மிக்க பயனளிக்கும்.

முக்கியமாய் இது மிசிரமாகாத திரவ (நீர்) மருந்துகளை மிசிரமாக்க உதவும்.

முட்டை வெண்கருவுடன் கூட்டி நன்றாய் உறவாக்கித் தீப்புண்மீது தடவலாம்.

பிசின் சூரணம் இரத்தப்போக்கை நிறுத்தும்.

நெய்விட்டு வறுத்துப் பொடிசெய்து உடல்உரமாவதற்கும், காமம் பெருகவும் உபயோகிக்கலாம்.

**குறிப்பு.**—கருவேலன் குச்சி பல்துலக்க உதவும். இதனால் பல்லிறுகும். " ஆலும் வேலும் பல்லுக்குறுதி " என்பதைக் கவனிக்க.

---

## வெள்வேல்—Veḷ-vél.

**Acacia Leucophloea.**

**Eng.—Babul ( with white bark.)**

| | | |
|---|---|---|
| Tel. | Tella-tumma | తెల్లతుమ్మ. |
| Mal. | Veḷ-vélum | വെൾവേലം. |
| Kan. | Biḷijali | ಬಿಳಿಜಾಲಿ. |
| Sans. | Shweta-babbula | श्वेतबब्बूलः. |
| Hind. | Sufed-Babool | * سفید ببول |

இது கருவேல மரத்தைப் போலவேதானிருக்கும். மரத்தின் பட்டை மாத்திரம் வெண்ணிறம். இந்தியாவில் எங்குமுண்டு.

**ப - உ.**—இலை, பட்டை, வேர், பிசின், வித்து.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**—கருவேலுக்குரிய செய்கைகளே இதற்குமுண்டு.

**குணம்.**—வெள்வேலுக்கு பித்தமயக்கம், வாதசுரம், சந்துக்குடைச்சல், சர்வாங்க வாதரோகம் ஆகிய இவைகள் நீங்கும்.

பித்தம யக்கமறும் பேருலகின் மானிடருக்
குற்ற சுரவாத மோடுங்காண்—குத்துகின்ற
சந்துக்கு டைச்சல்விடும் சர்வாங்க வாதம்போம்
கொந்துலவும் வெள்வேலுக் கு. (அ.கு.)

**வ - கு.**—கருவேலின் உறுப்புகளைப் பயன்படுத்துவது போலவே இதன் உறுப்புகளையும் உபயோகிக்கலாம்.

இதன் பட்டைத் தைலத்தை மூழ்கிவர மேற்கண்ட பிணிகள் விலகும்.

**தைலம்.**

இதன் பட்டை, (கணுநீக்கிய) அறுகன்வேர் வகைக்குப் பலம் 6, நீர் படி ஒன்றில் சேர்த்து $\frac{1}{4}$ படியாகக் குறுக்கி $\frac{1}{4}$ படி எண்ணெய்கூட்டி தைலம் வடிக்கவும்.

---

## குடைவேல்—Kudai-vél.

**வே - பெ.—உடைவேல்.**

**Acacia-Eburnea.**

இவ்வேலமரத்தையும் வெள்வேலைப்போலவே உபயோகித்துக் கொள்ளலாம்.

## பீக்கருவேல்—Píkkaruvél.

Acacia Farnesiana.

Eng.—Cassia flower.

Tel. Núgatumma నూగతుమ్మ.
Mal. Pívelum പീവേലം
Kan. Karijali ಕರಿಜಾಲಿ.

Sans. Arimædah अरिमेदः
Hind. Vilayati-kikar * ولایتی کیکر
Duk. Gu-kikar * گو کیکر

இம்மரம் இந்தியாவில் எங்கும் பயிராகின்றது. இதற்கு நறுமணமுள்ள மஞ்சள் பூக்கள் உண்டு.

**ப - உ.**—இலை, பூ, பட்டை, பிசின்.

**சுவை.**—துவர்ப்பு, **வீரியம்** - சீதம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை.**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- உள்ளழலாற்றி - அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- உடற்றேற்றி - யதாபேதகாரி - Alterative.

**குணம்.**—இதனுல் வெள்ளை, வெட்டை, ஈற்றுப்புண் முதலியன தீரும்.

**வ - கு.**—இளங்கொழுந்தை அரைத்துக் கழற்சிப்பிரமாணம் நீரிற் கரைத்து உட்கொள்ள வெள்ளை மாறும்.

பூவிலிருந்து நறுமணமுள்ள எண்ணெய் எடுக்கலாம். இதில் இரண்டொரு துளி தினமும் சாப்பிட்டுவர தேகத்திலுள்ள வெப்பத்தை மாற்றும்.

பட்டையை முறைப்படிக் கஷாயமிட்டு வாய் கொப்புளித்துவர, பல்லீற்றிலிருந்து வரும் இரத்தம் நிற்கும். பல் உறுதியாகும்.

பிசின் பலவித சூரணங்களிலும், தாதுபுஷ்டி லேகியங்களிலும் சேருகின்றது.

---

## வேளை—Vélai.

## நல்வேளை—Nal-vélai.

Cleome Pentaphylla.

Tel. Vaminta వామింట.
Mal. Karvela കരുവേള.
Kan. Shrikala ಶ್ರೀಕಲ.

Sāns. Ajagandha अजगन्धा.
Hind. Hurhur * حرحر

இது இந்தியாவில் எங்குங்கிடைக்கும் சிறு பூண்டு. இதில் சில சாதிகளுண்டு. அவை **நல்வேளை**, **நாய்வேளை** (cleome viscosa), **தைவேளை** (cleome felina). நல்வேளைக்குப் பெருங்காய மணமுண்டு.

**ப - உ.**—இலை, பூ, விதை, வேர்.

**சுவை.**—கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**

**இலை.**
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி - Rubefacient.

**விதை.**
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி - Antispasmodic.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.

**குணம்.**—இதற்கு, சிரநோய், உடலில்நோவு, குடைச்சல், சீதளம், மார்புவலி, வாததோடம், கபகோபம், சோபை ஆகியவை போம். ஆனால், அக்கரம், அனல், பித்தம், பசி இவையுண்டாகும்.

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்தியம்
உரநோ யிவைக ளொழியும்—உரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய்! பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்.

நல்லவே ளைப்பூண்டை நாடுங்கால் வாதமும்போம்
சொல்லும்ஐ யத்துடனே சோபையறும்—மெல்லமெல்லத்
தக்கவன லும்பித்துந் தானெழும்புஞ் சாந்தமின்றி
அக்கரநோய் மிஞ்சு மறி. (அ.கு.)

**பூ.**

பூவினால் கணமாந்தம், வாதகோபம், நீர்க்கோவை, மார்புச்சளி, மாந்த சுரம் இவை நீங்கும். தீபனம் மிகும்.

கணமாந்தம் வாதங் கபக்கோவை கோழை
அணுமாந்த வெப்பும் அகலும்—மணமாரும்
பானைக் குழலே ! பசிமெத்த உண்டாகும்
வேளைப்பூ என்றுருக்கால் விள். (அ.கு.)

**வ - கு.**—சீதளத்தாலுண்டாகும் கொடிய தலைநோய்க்கு இலையைச் சிதைத்துச் சாற்றைப் பிழிந்து திப்பியை உச்சியில்வைத்து அதற்குமேல் புதுப்பானை ஓட்டைவைத்துச் சீலையால் இறுக்கிக்கட்ட ஒருவித விறுவிறுப் புண்டாகும். 5—10, நிமிஷம் பொறுத்து கட்டையவிழ்த்து இலைத்திப்பியைப் பிழிய நீர் வடியும். தலைபாரம் நீங்கும்.

காதிற் சீவடிதலுக்கு இலைச்சாற்றில் 1—2 துளிகள் காதில் விடலாம். இதனால் காதில் எரிச்சலுண்டாகும். சிறிது நேரங்கழிந்தபின் எரிச்சல் இராது.

கட்டிகளில் சீ பிடிக்காதிருக்க இலையை அரைத்துவைத்துக் கட்டலாம். இலையைச் சாம்பார்செய்து கொடுக்க வாதப்பிணிகள் சாந்தமாகும்.

**பூ.**

பூவை வதக்கிச் சாறுபிழிந்து குழந்தைகளின் வயது - நோய்பலமறிந்து, 5—15 துளிவரையில் முலைப்பாலுடன் கலந்து புகட்ட கணமாந்தம், மார்புச் சளி, மாந்தசுரம், சலதோடம் நீங்கும்.

பூவை நெய்விட்டு வதக்கித் துவையல் செய்து சோற்றுடன் கலந்துண்ண வாதகோபம் முதலியன தீரும்.

**விதை.**

விதைச் சூரணத்தில் ½—1 வராகனெடை எடுத்து, சருக்கரை சேர்த்து நாள் ஒன்றுக்கு இருமுறையாக இரண்டுநாள் கொடுத்தபிறகு மூன்றுநாள் ½—1 பலம் சிற்றாமணக்கெண்ணெய் கொடுக்க நாக்குப்பூச்சிகள் மலத்துடன் வெளிப்படும்.

இதன் விதையை வேகவைத்தாகிலும், வறுத்தாகிலும் அரைமுதல் ஒரு வராகனெடை எடுத்து நெய் கூட்டிக் கலந்து, ஒரு சிட்டிகை உப்பு சேர்த்து, கால்சேர் நீருடன் கொடுக்க சுளுக்கு முதலியவை நீங்கும்.

விதையை வெந்நீர் அல்லது பழ இரசம் அல்லது காடிவிட்டரைத்து புற்கை செய்து வீக்கங்களின் மீது வைத்துக் கட்டலாம்.

விதையைக் கஷாயஞ்செய்து சந்நிபாத சுரங்களிலும் வாதவலிகளிலும் வழங்கலாம்.

### வேர்.

இது வாதநோய்களைக் கண்டிக்கும். தைலமுறைகளில் சேரும்.

**குறிப்பு.**—பாலவாகடத்தில் குறிப்பிட்டுள்ள, 'வேளைக்குடிநீர்,' 'வேளை நெய்,' 'வேளையாதி எண்ணெய்,' 'வேளை எண்ணெய்,' 'வேளை வேர் சுரசம்' இவைகளையும் கவனிக்க.

---

## தைவேளை—Thai-vélai.

**வே - பெ.—அசகண்டர், பாலையம், விவிதம்.**

**Cleome Felina.**

இது வேளையில் ஓர் சாதி.

"வேளை" என்கிற பெயரின்கீழ்—(1) காய்வேளை, (2) முட்காவேளை, (3) நல்வேளை, (4) நாய்வேளை, (5) தைவேளை என்கிற பெயரால் வழங்கும் பூண்டுகளில் 3க்கும் 4க்கும் பொருத்தம் மிகவுண்டு. 3-ன்பூ வெண்மை. 4-ன்பூ மஞ்சள் (இதற்கே காட்டுக்கடுகு என்றும் பெயர்). 5 சிறிது இலையிலும், பூ நிறத்திலும் உருவத்திலும் வேறுபடும். பூ வெண்மை கலந்த நீலநிறமாயும், பெரிதாயுமிருக்கும்.

இதன் சமூலச் சாற்றுடன் பசுவின்பாலும் சருக்கரையுங் கலந்து உட்கொண்டுவர இரத்தபீநசம் நீங்கும்.

---




**குணபாடம்—முதற்பாகம் முற்றிற்று.**

# பிழை திருத்தம்.

| பக்கம் | | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 63 | வரி | 2 | ஆனைக்கற்றாழை | யானைக்கற்றாழை |
| 66 | ,, | 37 | ஈசயுகோல்விதை | ஈசபுகோல்விதை |
| 67 | ,, | 26 | ஆத்திரம் | ஆத்திரகம் |
| 75 | ,, | 41 | ஒற்கடம் | உற்கடம் |
| 140 | செய்யுள் | 6 | திருவிருத்திக்கடுக்காய் | திருவிருததிக்கடுக்காய் |
| 141 | எண் | 6 | திருவிருத்தி | திருவிருததி |
| 348 | வரி | 34 | சிட்டாக்கனிக்கொட்டை | கிட்டாக்கனிக்கொட்டை |
| 589 | ,, | 29 | மலூரம் | மாலூரம் |
| 151 | ,, | 2 | கத்தக்காம்பு | } இவற்றை நீக்குக |
| 153 | ,, | 32 | கத்தூரிமஞ்சள் | |
| 238 | ,, | 12 | புளிச்சிறுகீரை | |
| 8 | ,, | 23 | பிண்டி | இதன்பக்கத்தில் , சேர்க்க |
| 356 | ,, | 10 | இலதை | ,, , ,, |
| 389 | ,, | 2 | தூண் | ,, , ,, |